ஆழ்வார் திருவடிகளே சரணம்.

முதலாழ்வார்களுள் முதல்வரான
பொய்கையாழ்வார் அருளிச்செய்த

# முதல் திருவந்தாதி.

**2220**

பெருமாள் கோயில்
பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர்
இயற்றிய
திவ்யார்த்ததீபிகையென்னும்
உரையுடன் கூடியது.


M.R. கோவிந்தஸாமி நாயுடுவால்,
மதராஸ் மாடல் அச்சுக்கூடத்தில்,
அச்சிடுவிக்கப்பட்டது.



விபவஷு

1928.

ஸ்ரீமான் உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்களும் அவற்றின் விலையும்.

| | | | |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி —தெளிவுரை | 3 | 0 | 0 |
| திருப்பாவையின் விரிவுரை ... | 1 | 4 | 0 |
| ஷை திக் ராப்பர் பயிண்ட் ... | 1 | 0 | 0 |
| நாச்சியார் திருமொழியின் விரிவுரை ... | 2 | 0 | 0 |
| பெருமாள் திருமொழியின் விரிவுரை ... | 1 | 12 | 0 |
| திருச்சந்த விருத்தத்தின் விரிவுரை ... | 1 | 10 | 0 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு—இவற்றின் விரிவுரை | 1 | 6 | |
| முதலாயிரம் முழுமையும் 3 வால்யூம்களாக நல்ல பைண்ட் | 10 | 8 | |
| இராமாநுச நூற்றந்தாதியின் விரிவுரை ... | 0 | 12 | 0 |
| சிறிய திருமடல்—விரிவுரை ... ... | 0 | 10 | 0 |
| பெரிய திருமடல்—விரிவுரை ... ... | 1 | 0 | |
| திருவெழுகூற்றிருக்கை—விரிவுரை ... ... | 0 | 5 | |
| திருவாசிரியம்—விரிவுரை ... ... | 0 | 5 | |
| பெரிய திருவந்தாதி ... ... ... | 1 | 8 | 0 |
| ஸ்ரீவசநபூஷண ஸாரம் ... ... ... | 1 | 0 | 0 |
| கூரத்தாழ்வான் வைபவம் ... ... ... | 0 | 4 | 0 |
| பிரதிவாதி பயங்கரம் அண்ணா வைபவம் ... | 0 | 3 | 0 |
| முகுந்தமாலையின் தெளிவுரை ... ... | 0 | 6 | 0 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் தெளிவுரை ... | 0 | 12 | 0 |
| ஸ்தோத்ரவ்யாக்யாந சோதநம் ... ... | 0 | 3 | 0 |
| நமஸ்காரதத்துவம் ... ... | 0 | 2 | 0 |
| ப்ரணவாதிகாரதத்துவம் ... ... | 0 | 4 | 0 |
| ஸுதர்சந சதகம் தமிழுரை ... ... | 1 | 0 | 0 |
| ஸ்ரீவரதராஜ ஸ்தவத்தின்—விஸ்தாரமான மணிப்ரவாள வியாக்கியானம் (தெலுங்கு) லிபி | 1 | 4 | 0 |
| ஸ்ரீஸ்தவத்தின் ஷை ஷை ... | 0 | 6 | 0 |
| அதிமாநுஷ ஸ்தவத்தின் ஷை ஷை ... | 0 | 12 | 0 |
| திருப்பல்லாண்டு விரிவுரை ஷை ... | 0 | 4 | 0 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் ஷை ... | 0 | 3 | 0 |
| ரஹஸ்ய மூலம் ஷை ... | 0 | 6 | 0 |
| உபந்யாஸரத்நமாலா (க்ரந்தலிபி) ஸம்ஸ்க்ருத பாஷையில் சிறந்த 5 உபந்யாஸங்கள் | 0 | 6 | 0 |
| சேஷாவதாரச் சிறப்பு ... .... | 0 | 2 | 0 |

[இன்னும் பல புத்தகங்களும் உள்ளன.]

"திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை" ஆபீஸ்,
32, பந்தர் தெரு, G. T., மதராஸ்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

  

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத் தனியன்கள்.

(நம்பெருமாள் அருளிச் செய்தது.)

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్।
యతీన్ద్రప్రవణం వన్దే రమ్యజామాతరం మునిమ్॥

[ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்.
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.]

(ஆழ்வான் அருளிச் செய்தவை.)

లక్ష్మీనాథసమారమ్భాం + వన్దే గురుపరమ్పరామ్॥
యోనిత్యమచ్యుతపదామ్బుజ + రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే.

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் + வந்தே குருபரம்பராம்.
யோ நித்யமச்யுத + ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.]

(ஆளவந்தார் அருளிச் செய்தது.)

మాతా పితా యువతయః + ప్రణమామి మూర్ధ్నా॥

[மாதா பிதா யுவதய: + ப்ரணமாமி மூர்த்நா.]

(ஸ்ரீபராசர பட்டர் அருளிச் செய்தது.)

భూతం సరశ్చ + శ్రీమత్పరాఙ్కుశమునింప్రణతోఽస్మి నిత్యమ్.

[பூதம் ஸரச்ச + ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.]



ஸ்ரீ:





முதலாழ்வார்கள் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்களனைவர்க்கும் முன்னே இந்த வுலகிலிருள் நீங்க வந்துதித்து அந்தமிழால் நற்கலைகளாய்ந்துரைத்த போய்கையார் பூதத்தார் பேயார் என்னுமிம்மூவரும் முதலாழ்வார்களென்று பிரஸித்தி பெற்றிருப்பர். "மற்றுள்ளவாழ்வார்களுக்கு முன்னே வந்துதித்து, நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த—பெற்றிமையோரென்று முதலாழ்வார்களென்னும் பெயரிவர்க்கு, நின்றதுலகத்தே நிகழ்ந்து." என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரம் நோக்கத்தக்கது.

விபவத்தில் இம்மூவரும் பகவத்கடாக்ஷம் பெற்ற பின்னர் ஒருவரையொருவர் விட்டுப்பிரியாமல் ஒன்று கூடியே வாழ்ந்தது பற்றி அர்ச்சாவதாரத் திருக்கோயில்களிலெங்கும் இம்மூவரும் ஒன்றுசேர்ந்தே கோயில் கொண்டிருப்பர்கள்; அப்படியே இவர்களின் வைபவமும் ஒன்றுசேர்த்தே அநுஸந்திக்கப்படும். இம்மூவர்க்கும் திருநாள்பாட்டு அருளிச்செய்யாநின்ற ஸ்ரீமணவாள மாமுனிகளும் "ஐப்பசியிலோணமவிட்டம் சதயமிவை, ஒப்பிலவா நாள்களுலகத்தீர்—எப்புவியும், பேசுபுகழ்ப் பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார், தேசுடனே தோன்று சிறப்பால்." என்று ஓரே பாசுரமாகத் தொகுத்து அருளிச்செய்தமையும் நோக்கத்தக்கது.

## பொய்கையாழ்வார்.

"தெண்ணீர்வயல் தொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என்று ஔவையார் பாடியபடி கல்வி கேள்வி அறிவொழுக்கங்களாலான்றவர் பலரையுமுடையதான தொண்டை நன்னாட்டிலே புண்ய க்ஷேத்ரங்களெல்லாவற்றினுள்ளும் மிக்க சீர்மை பெற்று விளங்கும் ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலே, "முத்திதரும் நகரேழில் முக்கியமாங்கச்சி" என்றும் "காசி முதலாகிய நன்னகரி யெல்லாம் கார்மேனியருளாளர் கச்சிக்கு ஒவ்வா" என்றும் சிறப்பித்துக் கூறப்படுவதும் வேகவதியென்னும் புண்ணிய நதியின் தென்பால் விளங்குவதுமான காஞ்சிமாநகரிலே ஸ்ரீயதோக்தகாரி ஸந்நிதியென்று ப்ரஸித்தமான திருவெஃகா வென்னும் திவ்யதலத்தின்வடபுறத்தில் மஹான்களது திருவுள்ளம்போல் ஆழ்ந்து தெளிந்து விளங்கும் பொற்றாமரைப் பொய்கையிலே பூத்ததொரு நற்றாமரைப்பூவிலே ஐப்பசிமாதத்துத் திருவோணத்திலே ஒருவர் திருவவதரித்தார். இவருடைய பிரபாவத்தைப் பார்த்து அனைவரும் இவரைத் தேவிற்சிறந்த திருமாலின் திவ்யாயுதங்களுள் பாஞ்சஜந்யமென்னும் திருச்சங்கின் அம்சமாக அறுதியிட்டிருந்தனர். பொய்கையில் அவதரித்தது காரணமாகப் பொய்கையாழ்வாரென்று திருநாமம் பெற்றாரிவர்.

## பூதத்தாழ்வார்.

நீர்வளம் நிலவளம் முதலிய பல வளங்களும்மலிந்து இப்பூமண்டலத்திற்குத் திலகம் போன்றுள்ள அத்தொண்டை மண்டலத்திலே கீழ்கடற்கரையிலுள்ள திருக்கடல்மல்லை யென்கிற மஹாபலிபுரத்திலே குருக்கத்திப்பந்தரிலே ஒரு குருக்கத்திமலரிலே ஐப்பசி மாதத்து அவிட்ட நக்ஷத்ரத்திலே ஒருவர் திருவவதரித்தார். இவருடைய வைபவத்தை நோக்கி அனைவரும் இவரைக் கௌமோதகி யென்னும் கதாயுதத்தின் அம்சமாக அறுதியிட்டிருந்தனர். இவர்க்குப் பூதத்தாழ்வாரென்று திருநாமமானபடி என்னெனில்;—வடமொழியில் "ஹூ-ஸத்தாயாம்." [பூ—ஸத்தாயாம்.] என்கிற தாதுவடியாகப் பிறந்தது பூதம் என்னுஞ் சொல்.

ஸத்தை பெற்றது என்று பொருள். எம்பெருமானுடைய திருக்குணங்களையநுபவித்தே ஸத்தைப்பெற்றுரென்னுங் காரணம் பற்றிப் பூதத்தாழ்வாரென்று திருநாமமாயிற்றென்றுணர்க. திருவாய்மொழியில் (5-2-1) "கடல்வண்ணன் பூதம்" என்றவிடத்து வியாக்கியானங்களில் இப்பொருள் விளங்கக் காண்க.

## பேயாழ்வார்.

"ஆறேழுடரெட்டுத் தொண்டை" என்றவாறு நாற்றெட்டுத் திருப்பதிகளுள் இருபத்திரண்டு திருப்பதிகளையுடையதான துண்டீரமண்டலமென்கிற அத்தொண்டைவளநாட்டிலே திருவல்லிக்கேணியென்னும் திவ்ய தேசத்துக்குத் தென்திசையிலுள்ள திருமயிலை நகரியில் ஒரு கிணற்றிலேயுண்டான செவ்வல்லிப் பூவிலே ஐப்பசி மாதத்துச் சதயநக்ஷத்ரத்திலே ஒருவர் திருவவதாரஞ் செய்தருளினர். இவருடைய வைபவத்தைக்கண்டு பலரும் இவரை நந்தகமென்னும் வாட்படையின் அம்சமாக அறுதியிட்டனர். இவர் ஒப்புயர்வற்ற பகவத்பக்தியையுடையராய், கண்டவர்களடங்கலும் 'இவர் பேய் பிடித்தவர்' என்னும்படி நெஞ்சழிந்து கண் சுழன்று அழுதும் சிரித்தும் தொழுதுமெழுந்தாடியும் மகிழ்ந்து பாடியும் அலறியுமே அநவரதம் போதுபோக்கிக்கொண்டிருந்தமையால் பேயாழ்வாரென்று திருநாமம் பெற்றனர். பரமபக்தி தலையெடுத்து எம்பெருமானை அநுபவிக்குந்திறம் மற்ற ஆழ்வார்களிற்காட்டில் இவர்க்கு மிகப் பெரிதாயிருந்ததனாலும், இவர்தாம் எம்பிரானுக்கு ஆட்பட்டது மாத்திரமேயன்றித் திருமழிசையாழ்வாரைத் திருத்திப் பணிகொண்ட மஹானுதலாலும் மஹதாஹ்வயர் என்ற மற்றொரு திருநாமமும் இவர்க்கு உண்டு.

---

## இவர்களின் வைபவம்.

ஸ்ரீராம பரதலக்ஷ்மணர்போல அடுத்தடுத்த நாள்களில் அவதரித்தவர்களும் அயோநிஜர்களுமாகிய இம்மூவர்க்கும், ஸ்ரீவைகுண்டநாதனுடைய திருவாணையினால் ஸேனைமுதலியார் இந்நிலத்திற்கெழுந்தருளிப் பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்து திருமந்தி

ரப் பொருள்களையும் உபதேசித்தருளினர். அதனால் இவர்கள் "முக்குணத் திரண்டவையகற்றி, ஒன்றினிலொன்றிநின்று" என்றாற்போல ரஜோகுணமும் தமோகுணமும் சிறிதுமற்று சுத்த ஸாத்விகர்களாய் எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதையே பெரும் பேறாகக்கொண்டு ஞானபக்திவிரக்திகளுக்குப் பிறப்பிடமென்னலாம்படி விளங்கி "உண்ணுஞ்சோறு பருகுநீர்த்தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்" என்றாற்போல பகவத் குணாநுபவத்தையே தாரகமும் போஷகமும் போக்யமுமாகக்கொண்டு அந்நபானாதிகளை யொழித்து, உண்டியே உடையே உகந்தோடுகின்ற இம்மண்டலத்தாரோடு கூடகில்லாமல் ஒருநாளிருந்தவிடத்தில் மற்றொருநாளிராதபடி ஓடித்திரியும் யோகிகளாய், தம்மில் ஒருவரையொருவர் அறியாமல் தனித்தனியே ஸஞ்சரித்துக்கொண்டிருந்தனர்.

இப்படி ஸஞ்சரித்துக் கொண்டிருந்த இம்மூவரையும் ஓரிடத்திலே சேர்த்து ஆட்கொண்டு இவர்கள் முகமாக உலகத்தை வாழ்விக்கவேணுமென்கிற குதூஹலம் எம்பெருமான் திருவுள்ளத்திலுண்டாயிற்று.

ஸத்யகாமனாய் ஸத்யஸங்கல்பனான எம்பெருமானுடைய மநோரதம் பழுதுபடுமோ? அவனுடைய திருவுள்ளம் நிறைவேறுதற்கு வழியுண்டாயிற்று. அதாவது—ஒருநாள் ஸூர்யன் அஸ்தமித்தபின்பு பொய்கையாழ்வார் திருக்கோவலூரையடைந்து அங்கு ம்ருகண்டு மஹர்ஷியின் திருமாளிகையிற் சென்று அதன் இடைகழியிற் பள்ளிகொண்டிருந்தார். பிறகு பூதத்தாழ்வாரும் அங்கே வந்து சேர, "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத் புவி" என்கிற சாஸ்திர முறைப்படி ஒருவரை யொருவர் வந்தனை வழிபாடுகள் செய்தவுடன், "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் உட்கார்ந்திருக்கலாம்" என்று பொய்கையார் விண்ணப்பஞ்செய்ய, அவ்விதமே இருவரும் அங்கு உட்கார்ந்திருந்தனர். அதன் பிறகு பேயாழ்வாரும் அவ்விடத்திற்கே வந்துசேர, ஒருவரையொருவர் தண்டன்ஸமர்ப்பித்து உபசரித்துக் கொண்டபின் "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்" என்று பொய்கை பூதத்தாரிருவரும் சொல்ல, அவ்

விதமே மூவரும் அவ்விடத்திலே நின்றுகொண்டு பரஸ்பரம் பகவத் குணங்களைச் சொல்லுதலும் கேட்டலுஞ்செய்து களித்திருந்தனர்.

அப்பொழுது உலகளந்த மூர்த்தி அவர்கள் திறத்திலே திருவருள் செய்யும் பொருட்டுப் பெருத்த இருளையும் கனத்த மழையையுமுண்டாக்கி, பெரிய வடிவத்தோடு அவர்களிடையே சென்று நின்று பொறுக்க முடியாத மிக்க நெருக்கத்தைச் செய்தருளினன். அதன்மேல் இவர்கள் 'இதுவரையிலும் இல்லாத நெருக்கம் இப்போது உண்டானதற்குக் காரணமென்கொல்!; பிறரெவரேனும் இங்கு வந்து புகுந்தவருண்டோ?' என்று சங்கிக்கையில், பொய்கையாழ்வார் பூமியாகிய தகழியில் கடல் நீரையே நெய்யாகக் கொண்டு ஸூர்யனை விளக்காக ஏற்ற, பூதத்தாழ்வார் அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாகவும் சிந்தையைத் திரியாகவுங் கொண்டு ஞானதீபத்தை ஏற்ற, இவ்விரண்டொளியாலும் இருளற்றதனால், பேயாழ்வார் எம்பெருமானைத் தாம் ஸேவித்தமை கூறியவளவிலே மூவரும் பகவத்ஸ்வரூபத்தை நன்கறிந்து அநுபவித்து ஆநந்தப் பெருவெள்ளமெய்தி அதனுக்குப் போக்குவீடாகப் பிரபந்தங்களருளிச்செய்து உலகத்தாரை உய்விக்கத் திருவுள்ளம்பற்றினர்.

அப்பொழுது, பொய்கையாழ்வார் "வையந் தகளியா" என்று தொடங்கியும், பூதத்தாழ்வார் "அன்பே தகளியா" என்று தொடங்கியும், பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்கியும் மூவரும் மூன்று திருவந்தாதிப் பிரபந்தங்களைத் திருவாய்மலர்ந்தருளினர். இப்பிரபந்தங்கட்கு அடைவே, முதல் திருவந்தாதியென்றும் இரண்டாந் திருவந்தாதியென்றும் மூன்றாந் திருவந்தாதியென்றும் திருநாமம் வழங்கலாயிற்று.

பின்பு இவ்வாழ்வார்கள் மூவரும் தேஹளீசனென்னும் திருக்கோவலூராயனைத் திருவடி தொழுது விடைபெற்று நெடுங்காலம் திருப்பதிகள்தோறும் சென்று மங்களாசாஸநம் செய்து, யோகபலத்தால் ஆயிரக்கணக்கான வருஷங்கள் இம்மண்ணுலகில் வாழ்ந்திருந்து வையகத்தை வாழ்வித்தருளினர்.

முதலாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

# முதல் திருவந்தாதி.

இது—மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களுள் முதல்வரான பொய்கையாழ்வாரருளிச் செய்ததும், நாலாயிரப் பிரபந்தத்தில் மூன்றாவது ஆயிரமாக ஸ்ரீமந்நாதமுனிகளால் வகுக்கப்பட்ட இயற்பாவில் முதற் பிரபந்தமுமாகும்.

அந்தத்தை ஆதியாகவுடையது அந்தாதி. அன்மொழித்தொகை; வடமொழித்தொடர். அந்த ஆதி எனப்பிரிக்க. அந்தாதியாவது—முன்னின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவரும் செய்யுளின் முதலாக அமையும்படி பாடுவது. அந்தாதியென்பது தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்றாம். பதிற்றந்தாதி யென்றும் நூற்றந்தாதியென்றும் வகைகளுண்டு. பத்து வெண்பாவினாலேனும் பத்து கட்டளைக் கலித்துறையினாலேனும் அந்தாதித் தொடையாற் கூறுவது பதிற்றந்தாதி. நூறு வெண்பாவினாலேனும் நூறு கட்டளைக்கலித்துறையினாலேனும் அந்தாதித் தொடையாற் பாடுவது நூற்றந்தாதி. இப்பிரபந்தம் நூறு வெண்பாவினாலமைந்தது. சொற்றொடர் நிலைச் செய்யுள், பொருட்டொடர் நிலைச்செய்யுள் என்றவகையில் இது சொற்றொடர் நிலை; "செய்யுளந்தாதி சொற்றொடர் நிலையே" என்றார் தண்டியலங்காரத்தும். இந்நூலின் பாசுரங்கள் பொருளில் ஒன்றையொன்று தொடர்ந்து நிற்பது தோன்ற அறிவிற் சிறந்த ஆன்றோர் உபந்யஸிக்கக் கூடுமாதலால் இது பொருட்டொடர் நிலையுமாம். "பொருளினுஞ் சொல்லினு மிருவகை தொடர்நிலை" என்னும் தண்டியலங்காரச் சூத்திரத்தின் உரையில் "இரண்டென்னாது வகை என்றமிகையான் மூன்றாவது பொருளினுஞ் சொல்லினுந் தொடர்தலுமுண்டெனக் கொள்க." என்றது காண்க. நெடுக ஒரு கதையாகக் கூறுதலின்றியே ஸ்தோத்ர

ரூபமாக அருளிச் செய்யப்பட்ட பாசுரங்களாதலால் சொற்றொடர் நிலையாகவே கொள்ளலாம்.

தொல்காப்பியத்துச் செய்யுளியலிற் கூறப்பட்ட அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்ற எண்வகை வனப்பினுள் இந்நூல் விருந்தென்னும் வனப்பின் பாற்படும். § "விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" என்ற தொல்காப்பியச் சூத்திர வுரையில் நச்சினார்க்கினியர் "விருந்து தானும் பழங்கதை மேலதன்றிப் புதிதாகத் தாம் வேண்டியவாற்றாற் பல செய்யுளும் தொடர்ந்து வரத் தொடுத்துச் செய்யப்படும் தொடர்நிலை மேலது" என்றும், "அது—முத்தொள்ளாயிரமும் பொய்கையார்முதலாயினோர்செய்தஅந்தாதிச்செய்யுளும் என உணர்க; கலம்பகம் முதலாயினவும் சொல்லுப." என்றும் உரைத்துள்ளமை காண்க.

திரு என்னும் பலபொருளொருசொல் - வடமொழியிலே ஸ்ரீ என்பதுபோலத் தமிழிலே மேன்மையையுடைய எப்பொருள்களுக்கும் விசேஷண பதமாகி அவற்றிற்கு முன்னே மஹிமைப் பொருளைக் காட்டிவரும். இங்கே இது அந்தாதிக்கு [நூலுக்கு] அடைமொழி. மேன்மையாகிய அந்தாதி என்றாவது, மேன்மையையுடைய அந்தாதி என்றாவது விரியும். மற்றைத் திருவந்தாதிப் பிரபந்தங்களுக்கு முன்னே இது திருவவதரித்ததுபற்றி முதல் திருவந்தாதி யென்று இதற்குத் திருநாமமிட்டு வழங்கலாயினர் முன்னோர். ... ... ... ... *

---

§ தொல் காப்பியம்—பொருளதிகாரம். செய்யுளியல்—240.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# முதல் திருவந்தாதி—தனியன் உரை.

## [முதலியாண்டானருளிச் செய்த தனியன்.]

(இருவிகற்ப நேரிசை வெண்பா.)

கைதைசேர் பூம்பொழில்சூழ் கச்சிநகர் வந்துதித்த
பொய்கைப் பிரான்கவிஞர் போரேறு—வையத்
தடியவர்கள் வாழ வருந்தமிழ் நூற்றந்தாதி
படிவிளங்கச் செய்தான் பரிந்து.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| கைதை சேர் | தாழைகள் மிகுதியாகச் சேர்ந் திருக்கப்பெற்ற | வாழ | வாழும்படியாகவும் |
| பூம்பொழில் சூழ் | அழகிய சோலைகளாலே சூழப்பட்ட | படி விளங்க | இப்பூமியானது (இருள்நீங்கி ஞானவொளி பெற்று) விளங்கும்படியாகவும் |
| கச்சி நகர் | காஞ்சீபுரத்தில் [திருவெஃகாவி னருகே] | அரு தமிழ் | அரிய தமிழினாலாகிய |
| வந்து உதித்த | திருவவதரித்த | நூற்றந்தாதி | அந்தாதித் தொடையாலமைந்த நூறு பாசுரங்களையுடைய பிரபந்தத்தை |
| பொய்கைப் பிரான் | பொய்கையாழ்வாரென்கிற | | |
| கவிஞர் போர் ஏறு | கவிச்ரேஷ்டரானவர் | | |
| வையத்து | இப்பூமண்டலத்திலுள்ள | பரிந்து | அன்புகொண்டு |
| அடியவர்கள் | பக்தர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் | செய்தான் | திருவாய் மலர்ந்தருளினர். |

“இன்கவிபாடும் பரமகவிகள்” என்றும் “செஞ்சொற் கவிகள்” என்றும் நம்மாழ்வாராலும், “செந்தமிழ் பாடுவார்” என்று திருமங்கை மன்னனாலும் சிறப்பித்துக் கூறப்பட்டுச் செந் தமிழ்க் கவிகளுள் சிறந்து விளங்குபவரும், திருக்கச்சிமாநகரில் திருவவதரித்தவருமான பொய்கையாழ்வார் தமது திவ்யப்ரபந்த

மாகிற சிறந்த திருவிளக்கையேற்றி அதனால் இந்நிலவுலகம் முழுவதையும் இருள்நீக்கி விளங்கச்செய்து, "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றாற்போல பகவத்பக்தரான ஸ்ரீவைஷ்ணவர்களையும் இப்பிரபந்த முகத்தால் வாழ்வித்தருளினர் என்றதாயிற்று.

கவிஞர்போரேறு=வடநூலார் ச்ரேஷ்டர்களைச் சொல்லும்போது, சிங்கம் புலி எருது முதலிய செருக்குடைய மிருகங்களுக்கு வாசகமான சொற்களைச் சேர்த்து, 'புருஷஸிம்ஹஃ' 'புருஷவ்யாக்ரஃ' 'புருஷபுங்கவஃ—புருஷர்ஷபஃ' என்று பிரயோகிப்பதுபோலவே தமிழரும் பிரயோகிப்பதுண்டாகையாலே "கவிஞர் போரேறு" என்றது கவிகளுட்சிறந்தவரென்றபடி. ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகிய திவ்யப்ரபந்தங்களை அதிகரித்தலையே ஸ்ரீவைஷ்ணவர்கள் உஜ்ஜீவநமாக அத்யவஸித்திருப்பது பற்றி 'அடியவர்கள் வாழ' எனப்பட்டது.

"அருந்தமிழ் நூற்றந்தாதி" என்ற பாடத்தில் வெண்டளை பிறழ்கின்றமையால் "அருந்தமிழந்தாதி" என்று பாடமிருந்திருக்கவேணும். ஆனாலும், தனியன் வியாக்கியானஞ் செய்தருளின பிள்ளைலோகஞ்சீயர் "அருந்தமிழ் நூற்றந்தாதி" யென்றே ஸ்பஷ்டமாக ப்ரதீக மெடுத்து வியாக்கியானமருளியிருப்பதாலும் இப்பாடமே நாடெங்கும் வழங்கிவரக் காண்கையாலும் இதுவே கொள்ளப்பட்டது.

படிவிளங்க என்பதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர்; படி—பூமியிலே, விளங்க—இப்பிரபந்தம் நெடுங்காலம் விளங்கும்படியாக என்றும்; படி என்று உபமானத்துக்கும் வாசகமாகையாலே, தமிழ்ப் பிரபந்தங்கட்கெல்லாம் உபமானமாக விளங்கும்படியாக என்றும்; படி என்று திருமேனிக்கும் பெயராகையாலே, "திருக்கண்டேன் பொன் மேனிகண்டேன்" என்று பேயாழ்வார் அநுஸந்திக்குமாறு எம்பெருமானுடைய திருமேனி விளங்கும்படி "வருத்தும் புறவிருள் மாற்ற எம் பொய்கைப்பிரான் மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையுங்கூட்டி ஒன்றத் திரித்தன் றெரித்த திருவிளக்கு" என்று இராமாநுசநூற்றந்தா

தியில் அமுதனார் அருளிச்செய்தபடியே திருவிளக்கேற்றியது போன்ற பாமாலையை அருளிச் செய்தாரென்றும் கூறுவர்.

பரிந்து — எம்பெருமான்மேற் காதல்கொண்டு என்கை.

கேதகீ என்னும் வடசொல் 'கைதை' எனவும், காஞ்சீநகரம் என்னும் வடசொல் தொடர் 'கச்சி நகர்' எனவும் திரிந்தன.

## கச்சி நகர்வந்துதித்த பொய்கைப்பிரான்.

இத்திருவந்தாதிக்குப் பெரிய வாச்சான்பிள்ளை யருளிச்செய்த வியாக்கியான அவதாரிகைத் தொடக்கத்தில்—

"இன்கவிபாடும் பரமகவிகளென்றும் செந்தமிழ் பாடுவாரென்றும் இவர்கள் அவதரித்தது ஓரோ தேசங்களிலேயாகிலும் காலப் பழமையாலே இன்னவிடமென்று நிச்சயிக்கப் போகாது."

என்றருளிச் செய்திருக்கும் வாக்கியத்தை நோக்குங்கால், பொய்கையாழ்வாரைக் கச்சிநகரில் அவதரித்தவராகவும் பூதத்தாழ்வாரைத் திருக்கடல் மல்லையில் அவதரித்தவராகவும் பேயாழ்வாரைத் திருமயிலையில் அவதரித்தவராகவும் நாம் சொல்லிக்கொண்டிருப்பது அஸங்கதமென்னவேண்டியதாகிறது. மேற்குறித்த வியாக்கியான வாக்கியம் அச்சுப்பிரதிகளிற் காண்கிறபடியே உண்மையாயின், முதலாழ்வார்கள் அவதரித்தது யுகாந்தரத்திலாகையாலே இன்னவிடத்தில் அவதரித்தனர்என்பது நிச்சயிக்கமுடியாத விஷயமென்று பெரியவாச்சான்பிள்ளையின் திருவுள்ளமாக விளங்காநின்றது. இப்படியாகில் முதலாழ்வார்களின் அவதார ஸ்தலங்களை விவரித்துக் கூறுகின்ற திவ்யஸூரிசரிதம், திருவந்தாதித் தனியன்கள், குருபரம்பராப்ரபாவம், பிரபந்தசாரம், உபதேசரத்தினமாலை முதலிய பிரபந்தங்களின் ப்ராமாண்யத்தில் ஸந்தேஹம் ஜநிக்க இடமுண்டாகின்றது. இவ்விஷயத்தை நாம் நன்கு ஆராய்தல் வேண்டும்.

மேலெடுத்துக் காட்டிய வியாக்யான ஸ்ரீ ஸூக்தியின் அரும்பதவுரையில்— "இவையிரண்டு ஸங்கதியும் ஸ்வரஸமன்று; பிழையும் தெரியாது; வந்தவிடங்களிலே கண்டுகொள்வது" என்றிருக்

கக்கண்டு பிராசீநதாளகோசங்களைப் பரிசீலனம் செய்ய நாம் தொடங்கினபோது மேற்குறித்த வியாக்கியான வாக்கியத்தின் பிழையற்றபாடம் இங்ஙனே கிடைத்தது:— "இன்கவிபாடும் பரமகவிகள்—சேந்தமிழ்பாடுவோர்—என்னுமிவர்கள் அவதரித்தது ஓரோதேசங்களிலேயாகிலும் ஞானப்பெருமையாலே இன்னவிடத்தவரேன்று நிச்சயிக்கப் போகாதிறே." என்று.

இவ்வாக்கியம் - "ஆழ்வார்களிற் காட்டில் பகவத் விஷயத்தில் உண்டான அவகாஹனத்தாலே முதலாழ்வார்கள் மூவரையும் நித்யஸூரிகளோபாதியாக நினைத்திருப்பர்கள்" என்கிற அடுத்த கீழ்வாக்கியத்திற்கு விவரணமாயிருக்கின்றது. இதன் கருத்தாவது:—இவ்வாழ்வார்கள் வந்து திருவவதரித்தது இந்நிலத்திலே ஓரோ விடங்களிலே யாகிலும் இவர்களது ஞான மஹிமையை நோக்குங்கால், "அடியார் நிலாகின்ற வைகுந்தமோ வையமோ நும் நிலையிடமே" என்றாற்போலச் சங்கிக்கவேண்டும்படியான நிலைமையாயிருக்கின்றதென்றவாறு. "அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸுநந்த ஸூநுவானவனுடைய யுகவர்ணக்ரமாவதாரமோ? வ்யாஸாதிவத் ஆவேசமோ? மூதுவர் கரைகண்டோர் சீரியரிலே ஒருவரோ? முன்னம் நோற்ற அனந்தன்மேற் புண்ணியங்கள் பலித்தவரோ வென்று சங்கிப்பர்கள்" (ஆசார்யஹ்ருதயம்.) என்று நம்மாழ்வார் திறத்திலருளிச் செய்தவாற்றை இங்கே நினைப்பது.

முதலாழ்வார்களுடைய திவ்ய ப்ரபந்தங்களுக்குப் போலவே மற்றுள்ள ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்கட்கும் வியாக்கியான முரைத்தருளின பெரியவாச்சான்பிள்ளை, அவதாரிகைகளிலே அந்தந்த ஆழ்வார்களின் திருவவதார ஸ்தலங்களை அருளிச் செய்திருப்பாராயின், இவ்விடத்திலே 'முதலாழ்வார்களின் அவதார ஸ்தலம் காலப்பழமையாலே தெரியாது' என்றெழுதிவைக்க ப்ரஸக்தியாகிலுமுண்டு; மற்ற ஆழ்வார்களின் அவதாரஸ்தலங்களைப்பற்றி ஒன்றுமருளிச் செய்யாதவர் முதலாழ்வார்களின் அவதாரஸ்தலங்களைப்பற்றி மாத்திரம் பேசத் தொடங்குவதும் காலப்பழமையாலே இன்னவிடமென்று தெரியாதென்பதும் அப்ரஸக்தமாகையாலே அச்சுப்பிழை அங்கீகரிக்கத்தக்கதே. யாமெடுத்துக் காட்

டிய ஏட்டுப்பிரதிகளிற்பாடமே சாலவும் பொருந்தும். முதலாழ்வார்களின் திருவவதாரம் உண்மையில் யுகாந்தரத்திலே யாகிலும் இவர்களது சரிதமும், மற்றும் திருமழிசைப்பிரான் முதலான ஆழ்வார்களின் சரிதமும் வெளிப்பட்ட விதமாகவே இவர்களது திருவவதாரஸ்தலமும் ஸ்ரீமந்நாதமுனிகள் வழியாக வெளிப்பட்டன வென்று கண்டு கொள்க.

காலப்பழமையாலே இவர்களவதரித்த விடம் இன்னதென்று தெரியாதென்றுரைப்பதே பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளமாயிடின் உபதேசரத்தினமாலையிலே "எண்ணருஞ்சீர்ப் பொய்கை முன்னோர் இவ்வுலகில் தோன்றியவூர், வண்மைமிகு கச்சி மல்லை மாமயிலை" என்று * பொய்யிலாத மணவாள மாமுனிகள் அருளிச்செய்தேயிருக்கமாட்டார்; இதனாலும் அச்சுப்பிழை அறுதியிடத்தக்கதாம். ... ... ... ... *

தனியன் உரை முற்றிற்று.



ஸ்ரீ:
ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பொய்கையாழ்வார் அருளிச்செய்த

# முதல் திருவந்தாதி.

[பெருமாள்கோயில் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்ததீபிகையுடன் கூடியது.]

வையம் தகளியா வார்கடலே நெய்யாக *
வெய்ய கதிரோன் விளக்காக *—செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை *
இடராழி நீங்குகவே யென்று. (க)

பதவுரை.

| | |
|---|---|
| வையம் தகளி ஆ | பூமி அகலாகவும் |
| வார் கடலே நெய் ஆக | அந்தப் பூமியைச் சுற்றியிருக்கிற கடலே நெய்யாகவும் |
| வெய்ய கதிரோன் விளக்கு ஆக | உஷ்ணகிரணனை ஸூர்யன் விளக்காகவும், |
| செய்ய சுடர் ஆழியான் அடிக்கே | செஞ்சுடர்ச் சக்கரக் கையனை எம்பெருமானது திருவடிகளில் |
| சொல் மாலை | இப்பாமாலையாகிற பூ மாலையை |
| சூட்டினேன் | சாத்தினேன்; |
| | (எதுக்காகவென்னில்;) |
| இடர் ஆழி நீங்குக என்று | (பகவத் கைங்கரியத்திற்கு இடையூறாக வுள்ள) துன்பக்கடல் நீங்குகைக்காக. |

* * *—[வையம்தகளியா.] தகளியாவது—நெய்க்கும் திரிக்கும் ஆதாரமாயிருக்கிற அகல். (தாளி என்று உலகவழக்கு.) பூமியானது கடிந வஸ்துவாயிருப்பதால் அதைத் தகளியாகவும், கடலானது த்ரவ வஸ்துவாயிருப்பதால் அதை நெய்யாகவும், ஸூர்யன் ப்ரகாசஸ்வரூபனாயிருப்பதால் அவனை விளக்காகவும் ரூபித்து அருளிச்செய்கிறார். இங்கு இங்ஙனே ரூபணம் செய்வதன் கருத்துயாதெனில்; சூந்யமே தத்துவமென்றும், உலகம் ஒரு ஈச்வரனையுடையதல்ல என்றும் பலபடியாகப் பகரும் மதாந்தரங்களை மறுத்து விசித்திரமான பிரபஞ்சத்தை நிருமிக்கவல்ல ஞானசக்தி

முதலிய குணங்களையுடைய திவ்விய மங்கள விக்ரஹத்தோடு கூடிய ஸர்வேச்வரன் உளனென்றும் அவனுக்கு அடிமை செய்கையே புருஷார்த்தமென்றும் இப்பாசுரத்தால் விளக்கப்பட்டதாகும்.

ஸூர்யன் சிறிதும் தவறுமல் உதிப்பதும் அஸ்தமிப்பதுமாக நீடூழியாய் நடந்து வருவதானது—விசித்ரசக்தி வாய்ந்த ஸர்வேச்வரனொருவனுளன் என்பதை நமக்கு நன்றாக விளக்குகின்றதன்றோ. வார்கடலின் நிலைமையும் வையத்தின் நிலைமையும் இவ்வுண்மையையே வற்புறுத்துகின்றன. கடலானது தன்னிடத்தில் பலபல ஆற்றுப் பெருக்குகள் வந்து விழுதலால் நிறைந்து வழிதலாவது, அவை வந்து விழாதகாலத்தில் வடிந்து குறைபடுதலாவது ஒன்றுமின்றியே எப்போதும் ஸமநிலைமையாகவே யிருந்துகொண்டு எல்லையை மீறுதிருப்பதும், ஐம்பதுகோடி யோஜனை தூரத்தளவும் பரந்து கடினமாயிராநின்ற இப்பூமியானது பெரிய வெள்ளத்தில் ஒரு கழற்காய் மிதப்பதுபோல மஹார்ணவ ஜலத்தில் மிதந்து கொண்டிருப்பதும் இவை தம்மைப் படைத்தவொரு முழு முதற் கடவுளின் அற்புதமான சக்திவிசேஷத்தைப் புலப்படுத்துகின்றனவன்றோ. அப்படிப்பட்ட அபாரசக்தி யுக்தனை ஒரு ஜகத்காரணபூதன் ஸித்திக்கும்போது அப்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யவேண்டுதல் முக்கியம்; கைங்கரியம் மாநஸிக மென்றும் வாசிகமென்றும் காயிகமென்றும் மூன்று வகைப்படும்; அவற்றுள் வாசிக கைங்கரியமான பாசுரம் பாடுதலை அடியேன் செய்கின்றேன்; இக்கைங்கரியத்தை இதுவரையில் நான் செய்யக் கூடாதபடி இடையூறுகவிருந்த ஸம்ஸாரத் துன்பத்திரள்கள் இன்றோடு ஒழிந்திடுக—என்றதாயிற்று.

முன்னடிகளின் கருத்தை ஊன்றி நோக்குமிடத்தில் இவ்வாழ்வார் அநுமாநத்தினால் ஈச்வரனை ஸாதிப்பதாக ஏற்படுகின்றது; சராசரரூபமான இந்த பிரபஞ்சம் முழுவதையும் படைத்து நடத்திக்கொண்டு போவதற்குப் பாங்கான வல்லமை வாய்ந்த ஸர்வேச்வரனொருவனுண்டு என்பதை வையம் கடல் ஸூர்யன் என்ற மூன்று பொருள்களின் நிலைமையைச் சொல்லுகிற முகத்தினால் ஸமர்த்தித்தபடியால் அநுமாநத்தாலே ஈச்வரனை ஸாதிக்கிற

தார்க்கிகர்களின் படியை அடியொற்றினராகிறார்; இதுகூடுமோ? சாரீரகமீமாம்ஸையில் சாஸ்த்ரயோநித்வாதிகரணத்தில் அநுமாநத்தால் ஈச்வரனை ஸாதிக்கலாகாதென்று மறுத்து வேதப்ரமாணமொன்றினாலேயே ஈச்வரனுடைய உண்மையை உணரவேணுமென்று ஸ்தாபித்திருப்பதற்கு மாறாக இஃது இருக்கின்றதே! என்று சிலர் சங்கிக்கக்கூடும்; வேதத்துக்கு விருத்தமாக அநுமாநங்கொண்டு ஸாதிப்பதை அங்கு மறுத்துரைத்த மாத்திரத்தினால் வேதத்துக்கு விருத்தமல்லாத அநுமாநங் கொள்வதில் பிசகுள்ளதாக நினைக்கலாகாது. இது ஸ்ரீபாஷ்யாதி ஸம்மதமுமாம். விரிப்பிற் பெருகும்.

இடராழி நீங்குகவேயென்று = இதுவரையில் எம்பெருமானைத் துதியாதிருந்ததனாலுண்டான வருத்தம் நீங்குவதற்காக என்றும், துதிக்க வொட்டாமல் பிரதிபந்தகமாயிருந்த பாவங்கள் தொலைவதற்காக என்றும், இப்பிரபந்தத்தைக் கற்று ஸம்ஸாரிகளும் துயர்தீர்ந்து வாழ்வதற்காக என்றும் மூன்றுபடியாக உரைக்கலாம். ... ... ... ... ... (க)

என்று கடல்கடைந்த தெவ்வுலகம் நீரேற்றது*
ஒன்று மதனை யுணரேன்நான் *—அன்ற
தடைத்துடைத்துக் கண்படுத்த வாழி * இதுநீ
படைத்திடந் துண்டுமிழ்ந்த பார். (உ)

| | |
|---|---|
| கடல் கடைந்தது | (தேவர்களுக்காகக்) கடலைக் கடைந்தது |
| என்று | எந்த நாள்? |
| நீர் ஏற்றது | (மாவலி) தாரை வார்த்துத் தத்தஞ் செய்யப்பெற்றது |
| எ உலகம் | எந்த வுலகம்? |
| அதனை | அவற்றை |
| நான் ஒன்றும் உணரேன் | நான் அடியோடு அறிகின்றிலேன்; |
| அது | அந்தக் கடலானது |
| அன்று | ஸ்ரீராமாவதார காலத்தில் |
| அடைத்து | மலைகளைக்கொண்டு திருவணைகட்டித் தூர்த்து |
| உடைத்து | (இராவணனை முடித்துத் திரும்புங்கால் அந்தத் திருவணையை) உடைத்து |

| | |
|---|---|
| கண்படுத்த | எப்போதும் பள்ளிகொள்ளு மிடமாகக் கொண்டிருக்கப் பெற்ற |
| ஆழி | ஸமுத்ரமாம்; |
| இது | (நீரேற்றுப்பெற்ற) இவ்வுலகமானது |
| நீ | ஸர்வேச்வரனை உன்னாலே |
| படைத்து | ஸ்ருஷ்டிக்கப்பட்டும் |
| இடந்து | (வராஹாவதார காலத்தில் அண்ட பித்தியில் நின்று) ஒட்டுவிடுவித் தெடுக்கப்பட்டும் |
| உண்டு | (பிரளய வெள்ளம் கோத்தபோது) திருவயிற்றிலே வைத்துப் பாது காக்கப்பட்டும் |
| உமிழ்ந்த | பின்பு வெளிப்படுத்தப் பட்டதுமான |
| பார் | பூமியாகும். |

* * *—[என்றுகடல்கடைந்தது.] ஸர்வேச்வரனை அநுமானத்தால் ஸாதிப்பது தோன்றக் கீழ்ப்பாட்டு அருளிச் செய்யப்பட்டது; அவனை அநுமானங்கொண்டு ஸாதிக்கவேண்டிய வருத்தமில்லை; அவன் செய்தருளியிருக்கும் எல்லையற்ற அதிமாநுஷங்களான செயல்களே அவனுடைய உண்மையை ஸாதித்துக் கொடுக்கக்கூடியவை என்று வெளியிடக்கருதி, கடல் கடைந்தது உலகளந்தது முதலிய சில சேஷ்டிதங்களை அருளிச்செய்யும் முகத்தால் அவனுடைய உண்மையை மூதலிக்கின்றார்.

ஆளவந்தார் எம்பெருமானுடைய உண்மையை உணர்வதற்கு உரிய ஸாதநங்களை அருளிச் செய்யுமிடத்து "த்வாம் சீல ரூப சரிதை:" (ஸ்தோத்ரரத்நம்.) இத்யாதிகள் அருளிச் செய்ததும், அப்படியே ஆழ்வானும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில்—"சித்ரைச்ச கைச்சிதுசிதை: பவதச் சரித்ரை:" என்றருளிச் செய்ததும் ஸ்மரிக்கத்தக்கன.

கடல்கடைந்து தேவர்களுக்குச் சாவாமருந்து எடுத்துத்தந்து அவர்களை ரக்ஷித்ததும், மாவலி பக்கல் மாணுருவாய்ச்சென்று மூவடி நீரேற்றுப்பெற்று உலகளந்து இந்திரனது துன்பத்தைத் தீர்த்தொழித்ததும் ஸ்ரீமந் நாராயணனுடைய உண்மையை விளக்க வல்லன காண்மின் என்கிறார்.

என்றுகடல்கடைந்தது? என்கிற கேள்வியும் எவ்வுலகம் நீரேற்றது? என்கிற கேள்வியும் கேள்வி கேட்பதில் நோக்குடை

யனவல்ல; கடல் கடைந்தபோது தோன்றிய திரையும் நுரையும் மாறாமல் இப்போதுதான் கடல் கடைந்ததுபோலத் தோன்றுகின்றதே!; உலகளக்கும்போது வைத்த அடிச்சுவடு மாறாமல் "வாமனன் மண்ணிது" என்னும்படி இதோ தோன்றுகின்றதே! என்று ப்ரத்யக்ஷஸமமாகக் காட்டுபவர்போலச் சொல்லுகிறபடி. கடல் கடைந்ததும் உலகளந்ததும் என்றைக்கோ நிகழ்ந்ததாயினும் மயர்வற மதிநலமருளப்பெற்ற இவ்வாழ்வாரது அகக்கண்ணுக்கு அச்சரிதைகளெல்லாம் ஸ்பஷ்டமாகத் தோற்றி விளங்குதலால் இங்ஙனே அருளிச்செய்யக் குறையில்லையென்க.

நெடுநாளைக்கு முன்னே நடந்த செயல்கள் ஆழ்வார்க்கு இன்று ப்ரத்யக்ஷம்போல் தோற்றினாலும், 'ஐயோ! கடல்கடைந்த வக்காலத்து நாம் நேரில்கண்டு மங்களாசாஸனம் செய்யப் பெறவில்லையே!, உலகளந்த அக்காலத்திலே காடும் மேடும் தாவின திருவடிகளின் கீழே நம்முடைய தலையை மடுக்கப் பெற்றிலோமே!' என்கிற வருத்தம் தோன்றி அவ்விழவு விளங்க ஒன்றுமதனையுணரேன்நான் என்கிறார்; அச்செயல்கள் நடந்தகாலத்திலே அவற்றை நான் அநுபவியா தொழிந்தேனே! என்றவாறு. நம்மாழ்வார் * மத்துறுகடை வெண்ணெய்களவினிலுரலிடையாப்புண்ட சரிதையை அநுஸந்தித்ததும் 1. "எத்திறம்!" என்று மோஹித்துக் கிடந்ததுபோல் இவரும் முதலடியில் அநுஸந்தித்த செயல்களிலே மோஹித்து "ஒன்றுமதனையுணரேன் நான்" என்கிறார் என்றுமுரைப்பர்.

முதலடியிலே கடல் கடைந்ததும் உலகளந்ததும் அநுஸந்திக்கவே அக்கடலிலும் அவ்வுலகத்திலும் எம்பெருமானுக்குள்ள ஸம்பந்தங்கள் திருவுள்ளத்திலே ஞாபகத்திற்குவர, அவற்றைப் பின்னடிகளிற் பேசி அநுபவிக்கிறார். கடலில் எம்பெருமான் செய்த காரியங்களை மூன்றாமடியிலும் உலகுக்காக அவன் செய்த காரியங்களை நான்காமடியிலும் அருளிச் செய்கிறார்.

இராவண ஸம்ஹாரம் செய்து பிராட்டியை மீட்டுக் கொணர்வதற்காக இலங்கைக்கெழுந்தருளும்போது 2. "மறிகடல் நெறிபட மலையால் அரிகுலம் பணிகொண்டு அலைகடலடைத்தான்"

1. திருவாய்மொழி 1-3-1. 2. பெரிய திருமொழி 5—7—7.

என்றபடி ஸேதுபந்தனம் பண்ணினதும், பிராட்டியைக் கைக்கொண்டு மீண்டெழுந்தருளும்போது அதனை உடைத்ததும், 1. "வெள்ளை வெள்ளத்தின்மேலொரு பாம்பை மெத்தையாக விரித்து அதன்மேலே கள்ள நித்திரை கொள்கின்ற" என்றபடி * தன்தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பல பரப்பிப் பள்ளி கொண்டிருத்தலுமாகிய கடலிலே செய்த காரியங்கள் அநுஸந்திக்கப்பட்டன.

ஆதியில் படைத்ததும், வராஹாவதாரத்தில் ஹிரண்யாக்ஷனைக் கொன்று இடந்ததும், பிரளயம் வந்தபோது திருவயிற்றினுள்ளே வைத்திட்டதும், பிறகு வெளிப்படுத்தியதுமாகிய இவை உலகுக்காகச் செய்த செயல்களாக அநுஸந்திக்கப்பட்டன.

இப்படிப்பட்ட அதிமாநுஷ சேஷ்டிதங்களைச் செய்தருளின ஸ்ரீமந்நாராயணனே பரம்பொருளென்றும், அவனுடைய உண்மையை இச்செயல்களே ஸாதித்துத் தரவல்லன என்றும் இப்பாசுரத்தால் அறிவிக்கப்பட்டதாயிற்று. ... ... (உ)

பாரளவு மோரடிவைத் தோரடியும் பாருடுத்த *
நீரளவும் செல்ல நிமிர்ந்ததே *—சூருருவின்
பேயளவு கண்ட பெருமான் ! அறிகிலேன் *
நீயளவு கண்ட நெறி. (ரு)

| | | | |
|---|---|---|---|
| ஓர் அடி | ஒரு திருவடியை | செல்ல | செல்லும்படி |
| பார் அளவும் வைத்து | பூமிப்பரப்பு உள்ள வரையிலும் போரும்படி வைக்க | நிமிர்ந்தது | ஓங்கிற்று ; |
| ஓர் அடியும் | மற்றொரு திருவடியும் | சூர் உருவின் பேய் | தெய்வமகளான யசோதையின் வடிவுகொண்டு வந்த பூதனையை |
| பார் உடுத்த | இந்த அண்டகடாஹத்தைச் சூழ்ந்து கொண்டிருக்கிற | அளவுகண்ட | முடித்த |
| நீர் அளவும் | ஆவரண ஜலம் வரையில் | பெருமான் | ஸ்வாமியே! |
| | | நீ அளவு கண்ட நெறி | நீ உலகளந்த விதத்தை |
| | | அறிகிலேன் | அளவிட்டுக் காணவல்ல அறிவுடையேனல்லேன். |

1. பெரியாழ்வார் திருமொழி 5—1—7.

* * *—[பாரளவும்.] எம்பெருமானுடைய திவ்ய சேஷ்டிதங்கள் பலவற்றினுள்ளும் உலகளந்த சரிதையிலே நம் ஆழ்வார்கள் அதிகமாக ஈடுபடுவர்கள்; விசேஷித்து முதலாழ்வார்கள் மிகவுமதிகமாக ஈடுபடுவர்கள். கீழ்ப்பாட்டில் "எவ்வுலகம் நீரேற்றது" என்று அந்தச் செயலைச் சிறிது ப்ரஸ்தாவித்த மாத்திரத்திலே அதிலே திருவுள்ளம் மிகவும் அவகாஹிக்கப்பெற்று அந்த வரலாற்றைப்பேசி அநுபவிக்கத் தொடங்கி நிலைகொள்ள மாட்டாமல் நின்று தளும்புகின்றார்.

சூருருவிற்பேயளவுகண்டபெருமான் என்பது ஸம்போதநம் (விளி); தமது வல்லமையால் எம்பெருமானை அளவிட்டுக் காணவேணுமென்று நினைப்பவர்கள் பூதனை பட்டபாடு படுவர்கள் என்பது தோன்ற இந்த ஸம்போதநமிடுகின்றார். உன்னை முடிப்பதாகவந்த பூதனையை முடித்த பிரானே! நீ மாவலிபக்கல் மூவடிமண் நீரேற்றுப் பெற்று ஒரு திருவடியைப் பூமிப்பரப்படங்கலும் மலரவைத்து, மற்றொரு திருவடியை மேலில் அண்டத்தைச் சூழ்ந்த ஆவரணஜலத்தளவும் செல்லவைத்து உலகளந்த விதத்தை யானறிகின்றிலேனென்கிறார்.

அளப்பதாவது—அளக்கிறவன் தான் நின்றவிடந்தவிர மற்றோரிடத்தில் மாறிக்காலிடுதல் என்று உலகத்திலே நாம் காண்கிறோம். ஓரிடத்திலேயே நின்றுகொண்டிருப்பதை அளப்பதாக யாரும் சொல்லமாட்டார்கள்; ஆகவே, எம்பெருமான் உலகளந்தான் என்று பலரும் சொல்லுகிறார்களே இது எப்படி பொருந்தும்? ஒரு திருவடிக்குக் கீழுலகமும் மற்றொரு திருவடிக்கு மேலுலகமும் சரிசமமாக இடமாகப் போந்துவிட்டபடியால் மாறி மாறி அடியிடுவதற்கு அவகாசமேயில்லையாதலால் அளந்தானென்பது எங்ஙனே சேரும்? என்று ஒரு சமத்காரமாகப் பேசுவார்போல "நீஅளவுகண்ட நெறி அறிகிலேன்" என்கிறார். இதனையே நம்மாழ்வார் திருவிருத்தத்தில்—"கழல்தல மொன்றே நிலமுழுதாயிற்று ஒருகழல் போய், நிழல்தர எல்லா விசும்பும் நிறைந்தது,......அழறலர்தாமரைக் கண்ணன் என்னோ விங்களக்கின்றதே?" (58.) என்ற பாசுரத்தினால் விரித்துரைத்தாரென்க. அவ்விடத்து வியாக்கியானத்திலே—"அளக்கைக்கு ஒரு அவகா

சம் காண்கிறிலோம்; நின்ற நிலையிலே நின்றுரை அளந்தாரென்ன வொண்ணுதிறே; அடிமாறியிடிலிறே அளந்ததாவது; இவனிங்கு அளந்தானாக ஒன்றும் காண்கிறிலோமீ!" என்றுள்ள பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளும் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

"நீ அளவுகண்ட நெறி அறிகிலேன்" என்பதற்கு மற்றும் சிலவகையாகவும் பொருள் கூறுவர். அளவுகாண்கையாவது அளக்கை.

[சூருருவிற்பேயளவுகண்ட] "சூருமணங்கும் தெய்வப் பெண் பெயர்" என்பது நிகண்டு. பூதனை யென்னும் பேய்மகள் தெய்வப் பெண்ணுருவாக வந்தாளோ வென்னில்; கண்ணபிரானுக்குத் தாயாகிய யசோதைபோல வடிவெடுத்து வந்தாளாகையாலும், அவ் யசோதை 1. "தெய்வநங்கை" என்று குலசேகரப் பெருமாளால் கூறப்பட்டிருக்கையாலும் சூருருவின்பேய் என்னக் குறையில்லை யென்க. அன்றி, பதினெண் தேவகணத்தில் பேயும் ஒன்றாகக் கூறப் பட்டிருத்தல் பற்றியும் "சூருருவின் பேய்" என்றாராகவுமாம். பேயளவு காண்கையாவது—அவளுடைய ஆயுளின் அளவைக் கண்டுவிடுதல்; கொல்லுதலைக் கூறியவாறு. கண்ணபிரானைக் கொல்லுமாறு கம்ஸனாலேவப்பட்ட பூதனை யென்னும் பேய்ச்சி தன் முலையிலே விஷத்தைத் தடவிக்கொண்டு யசோதைபோல வடிவெடுத்துத் திருவாய்ப்பாடிக்கு வந்து, தொட்டிலில் தூங்கிக்கொண்டிருந்த ஸ்ரீ கிருஷ்ண சிசுவையெடுத்து நஞ்சுதீற்றிய முலையை உண்ணக்கொடுக்க, பேயென்றறிந்த பெருமான் முலைப்பாலோடு அவளுயிரையும் உறிஞ்சி உண்டிட்டனனென்ற வரலாறு ப்ரஸித்தம். .. ... ... ... ... (௩)

நெறிவாசல் தானேயாய் நின்றானை * ஐந்து
பொறிவாசல் போர்க்கதவம் சாத்தி *—அறிவானும்
ஆலமர நீழ லறம்நால்வர்க் கன்றுரைத்த *
ஆலமமர் கண்டத் தரன். (௪)

1. பெருமாள் திருமொழி. 7—5.

| | |
|---|---|
| அன்று | முன்பொரு காலத்தில், |
| ஆலமரம் நீழல் | ஆலமரத்தின் நிழலிலே |
| | (இருந்துகொண்டு) |
| நால்வர்க்கு | அகஸ்தியர், புலஸ்தியர், தக்ஷர், மார்க்கண்டேயர் என்கிற நான்கு சிஷ்யர்களுக்கு |
| அறம் உரைத்த | தருமோபதேசம் செய்தவனும் |
| ஆலம் அமர் கண்டத்து | விஷத்தைக் கழுத்தளவிலே அடக்கிக்கொண் டுள்ளவனுமான |
| அரன் | சிவன் |
| ஐந்து பொறி வாசல் | செவி வாய் கண் மூக்கு உடல் என்கிற ஐந்து இந்திரியங்கள் செல்லும் வழியில் |
| போர் கதவம் சார்த்தி | வலிய கதவுகளை யிட்டு அடைத்து [இந்திரியங்கள் பட்டிமேய வொண்ணுதபடி அவற்றை வென்று] |
| நெறி வாசல் தானே ஆய் நின்றானை | உபாயமும் உபேயமும் தானேயா யிருக்கிற எம்பெருமானை |
| அறிவான் ஆம் | அறிந்து விட்டதாகச் செருக்குற் றிருக்கிறானே ! (இஃது என்ன அறிவுகேடு !.) |

* * *—[நெறிவாசல்.] எம்பெருமானுடைய இன்னருளால் ஞான விகாஸம் பெற்ற நானே அவனுடைய ஸ்வரூபம் ரூபம் குணம் சேஷ்டிதம் முதலியவற்றை நன்கு அறியமாட்டாமல், கடலிலே நீஞ்சிக் கரையேறமாட்டாதே கிடந்து அலைவாரைப்போலே அலையா நிற்க, தன் முயற்சியால் சிறிது ஞானம்பெற்ற சிவன் அவற்றை எங்ஙனே அறியவல்லான் ? எனக்குத் தெரிந்தவற்றில் ஏகதேசமும் அறியமாட்டாத அவன் தன்னை ஸர்வஜ்ஞனாக நினைத்துக்கொண்டு பகவத் விஷயத்தைத் தான் உபதேசிக்கவல்லவன் போலச் சில சிஷ்யர்களைச் சேர்த்துக்கொண்டு ஆலமரத்தடியிலே உட்கார்ந்துகொண்டு ஆசார்யபதம் வஹித்து எம்பெருமானது தன்மைகளை உபதேசிப்பதாக இழிந்துவிட்டானே! இஃது என்ன அறிவுகேடு! என்று ருத்ரனைப் பரிஹஸித்துப் பேசுகிறார். "அரன் அறிவானும்" என்ற சொல்லின் காம்பீர்யத்தை நோக்குமின். நானே அறியமாட்டாதிருக்க அவனோ அறியப்போகிறான்; தான்

தெரிந்துகொள்ளவும் ப்ரஸக்தியில்லாதிருக்கப் பிறர்க்குப் போதகாசிரியனுக வீற்றிருந்தானே! என்று கர்ஹிக்கிறபடி.

"அரன், நெறிவாசல் தானேயாய் நின்ருனை அறிவானும்" என்று அந்வயிக்க. நெறி என்று வழிக்குப்பேராகையாலே பலனைப் பெறுவிக்கும் வழியாகிய உபாயத்தைச் சொன்னபடி. வாசல் என்று புகுமிடத்துக்குப் பேராகையாலே இறுதியில் அடையத் தக்க பலனைச் சொல்லுகிறது; ஆகவே, உபாயமும் உபேயமும் தானேயாயிருக்கிற எம்பெருமானை என்றதாயிற்று. அன்றி, நெறி—ஸ்வரூபத்துக்கு ஏற்ற, வாசல்—உபாயம், தானேயாய் நிற்பவனை என்று முரைக்கலாம்.

சிவன் ஒரு காலத்திலே அகஸ்தியர் புலஸ்தியர் தக்ஷர் மார்க்கண்டேயர் என்கிற நான்கு முனிவர்களைச் சிஷ்யர்களாக அமைத்துக் கொண்டு ஆலமரத்தடியிலே ஸ்ரீமந்நாராயண தத்வோபதேசம் செய்தனனென்று நூல்கள் கூறும்; திருமழிசையாழ்வாரும் நான்முகன் திருவந்தாதியிலே—"ஆலநிழற்கீழ் அறநெறியை நால்வர்க்கு, மேலையுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன்—ஞால, மளந்தானை ஆழிக்கிடந்தானை ஆல்மேல், வளர்ந்தானைத் தான் வணங்குமாறு" (17.) என்ற பாசுரத்தினுல் இக்கதையை அநுஸந்தித்தமை காண்க.

$ப்ரஹ்மஜ்ஞாநமில்லாத பாலாகி யென்பவன் ப்ரஹ்மஜ்ஞாநமுடையனுன அஜாதசத்ரு வென்பவனுக்கு ப்ரஹ்மஜ்ஞாநத்தை உபதேசிக்கத் தொடங்கியதுபோலும் சிவனது உபதேசமும் என்ற இழிவுதோன்ற "அறிவானும்" என்று பழித்துக் கூறுகின்ருர்.

["ஐந்து பொறிவாசல் போர்க்கதவம் சார்த்தி."] ஒரு வாசலை அடைக்கத் தொடங்கினுல் மற்ருெரு வாசற் கதவு திறந்து கொள்ளும்படியாயுள்ள பஞ்சேந்திரியங்களாகிற யந்த்ரம்போன்ற ஐந்து வாசல்களையும் அடைத்தாலன்றி பகவத்தத்துவத்தை உபதேசிக்கவொண்ணுதென்பதும், அந்த வாசற் கதவுகளை அடைப்பது மிகவும் அருமை என்பதும் இவ்வாக்கியத்தில் தோன்றும். ஐந்து பொறி வாசற்கதவுகளை அடைக்கமாட்டாத ருத்ரன் எங்ஙனே

$ இக்கதை ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் நான்காம் அத்யாயத்திலும், கௌஷீதகி உபநிஷத்தில் மூன்ரும் அத்யாயத்திலும் காணத்தகும்.

அறிவான்? என்றவாறு. போர்க்கதவம் என்றது—அடைக்கத் தொடங்குகிறவர்களின் முகத்திலே அறைகிற கதவு என்றபடியாய், எப்படிப்பட்டவர்களையும் விஷயப்ரவணராக்கவல்ல இந்திரியங்களின் வன்மையைக் கூறியவாறு.

எம்பெருமான் திருப்பாற்கடலைக் கடையும்போது அதனின்றும் தோன்றிய விஷத்தை ஸ்ரீமந்நாராயணனுடைய கட்டளையாலே சிவன் தான் வாங்கி உண்ண அதனை யறிந்த பார்வதி அஞ்சி அவ்விஷம் கழுத்துக்குக்கீழே இறங்காதபடி அவனது கழுத்தை இறுகப்பிடித்துக்கொள்ள விஷம் கழுத்தளவிலே நின்றுவிட்டது; அதனால் சிவன் கறுத்த கழுத்தை யுடையனாய் காலகண்டனென்று பேர் பெற்றனன் என்ற வரலாறு தோன்ற "ஆலமமர்கண்டத்தரன்" என்றார். ஆலம்—விஷம்; ஹாலாஹலமென்ற வடசொற்சிதைவு என்பர். சிவன் தனது தமோகுணத்துக்குத் தக்க செயலைச் செய்யவல்லவனேயன்றி ஸாத்விகர் செய்யும் செயல் அவனால் செய்யமுடியாதென்பதும் இவ்விசேஷணத்தின் கருத்தாம்.

ஹரः என்ற வடசொல் அரனெனத் திரிந்தது; ஸம்ஹார கர்த்தா என்கை. ... ... ... (௪)

அரன் நாரணன்நாமம் ஆன்விடை புள்ளூர்தி *
உரைநூல் மறையுறையுங் கோயில் *—வரைநீர்
கருமம் அழிப்பளிப்புக் கையதுவேல் நேமி *
உருவமெரி கார்மேனி யொன்று. (௫)

நாமம் — ஒருவனுடைய பெயர்

அரன் — எல்லாவற்றையும் அழிப்பதையே தொழிலாக வுடையவனென்று காட்டுகிற ஹரனென்பது;

(மற்றொரு மூர்த்தியின் திருநாமமோ வென்னில்)

நாரணன் — (ஸர்வவ்யாபகனென்றும் ஸர்வரக்ஷகனென்றும் காட்டுகிற) நாராயணனென்பது;

ஊர்தி — ஒருவனுடைய வாஹனம்

ஆன்விடை — (மூடத்தனத்துக்கு உதாரணமாகக் காட்டப்படுகிற) எருதாம்;

(மற்றொரு மூர்த்தியின் வாஹனமோ வென்னில்)

புள் — (வேதமூர்த்தியான) கருடப் பறவையாகும்;

உரை — ஒருவனைப்பற்றிச் சொல்லுகிற பிரமாணம்

நூல் — மனிசரால் ஆக்கப்பட்ட ஆகமம்;

(மற்றொரு மூர்த்தியைப் பற்றிச் சொல்லுகிற பிரமாணமோ வென்னில்)

மறை — (ஸ்வயம் வ்யக்தமான) வேதமாகும்;

உறையும் கோயில் — ஒருவனுடைய வாஸஸ்தானம்

வரை — (கடினத்தன்மை யுள்ள) கைலாஸ மலையாம்;

(மற்றொரு மூர்த்தியின் இருப்பிடமோ வென்னில்)

(அவனுடைய நீர்மைக்குத் தகுதியான) திருப்பாற் கடலாம்;

கருமம் — ஒருவனுடைய தொழில்

அழிப்பு — (கல்நெஞ்சனென்று சொல்லும் படியான) ஸம்ஹாரத் தொழிலாம்;

(மற்றொரு மூர்த்தியின் காரியமோ வென்னில்)

அளிப்பு — (இன்னருளுக் குரிய) ரக்ஷணத் தொழிலாம்;

கையது — ஒருவனுடைய கையிலுள்ள ஆயுதம்

வேல் — (கொலைத் தொழிலுக்கு ஏற்ற) சூலாயுதம்;

(மற்றொரு மூர்த்தியின் ஆயுதமோ வென்னில்)

நேமி — அருளார் திருச்சக்கரம்;

உருவம் — ஒருவனுடைய வடிவம்

எரி — (கண்கொண்டு காண வொண்ணாதபடி) காலாக்நி போன்றதாம்;

(மற்றொரு மூர்த்தியின் திருமேனியோ வென்னில்)

கார் — (கண்டபோதே தாபங்களெல்லாம் தீரும்படியான) காளமேக வுருவாம்;

ஒன்று — சிவனாகிய ஒருவன்

மேனி — (ஸ்ரீமந் நாராயணனுக்கு) சரீர பூதன்;

[ஸ்ரீமந் நாராயணமூர்த்தியோ அந்த சிவனுமுட்பட எல்லாவற்றையும் சரீரமாக வுடையவனென்பது ஸித்தம்.]

* * *—[அரன்நாரணன்நாமம்.] கீழ்ப்பாட்டில் சிவனுடைய ஒரு செய்தியை எடுத்துப்பேசின ஆழ்வார் "அரன் அறிவானும்" [சிவனுக்கு என்ன தெரியும்?] என்று இழித்துப் பேசவே அதனைக்கேட்ட சிலர் "நாடடங்கலும் ஈச்வரனென்று கொண்டாடப் படுகிற அச்சிவபெருமானை இப்படி நீர் ஏசிப் பேசலாமோ? அவன் காற்கீழே பலரும் தலையை மடுத்து ஏத்தியிறைஞ்சக் காண்கிறோமே, அவன் பரதெய்வமன்றோ?" என்று சொல்ல, அது கேட்ட ஆழ்வார்—ஸ்ரீமந்நாராயணனே பரதேவதை யென்பதும் ருத்ரன் அங்ஙனல்லன் என்பதும் இருவருடையவும் நாமம் ரூபம் வாஹனம் தொழில் முதலியவற்றால் நன்குவிளங்கக் காணலாமென்று அவற்றை யெடுத்துரைத்துக் காட்டுகிறாரிதில்.

இருவருடைய பெயரையும் நோக்குமிடத்து. சிவன் பெயர் அரனென்றும் விஷ்ணுவின் பெயர் நாராயணனென்றும் ப்ரஸித்தமாகவுள்ளன; அரனென்றால் ஹரிப்பவன்—எல்லாவற்றையும் ஒழிப்பவன் என்று பொருள்படும்; நாராயணனென்றால், நாரங்களாகிய நித்யவஸ்துக்களெல்லாவற்றிலும் உறைந்திருந்து அவற்றை நோக்குமவன் என்று பொருள்படும்; ஆகவே, ஸர்வரக்ஷகன் பரதேவதையாயிருக்கத் தகுமோ அன்றி ஸர்வபக்ஷகன் பரதேவதையாயிருக்கத் தகுமோ என்பதை நீங்களே ஆராயலாம் என்றாராயிற்று.

இப்படியே இருவருடைய வாஹனங்களையும் நோக்குங்கால், 'அடா மாடே!' என்று மூர்க்கரை நிந்திப்பதற்கு த்ருஷ்டாந்தமாகக் கொள்ளப்படுகிற எருதை வாஹனமாகவுடையவன் அரன்; 1. ஸுபர்ணோஸி கருத்மாந்" என்ற வேதவாக்கியத்தாலும் 2. "வேதாத்மா விஹகேச்வரః" என்ற ஆளவந்தார் ஸ்ரீ ஸூக்தியாலும், 3. "சிரஞ்சேதனன் விழிதேகம் சிறைபின் சினைபதம் கந், தரம் தோள்களுரு வடிவம் பெயரெசுர்சாமமுமாம்......அரங்கர்த மூர்திச் சுவணனுக்கே." என்ற ஐயங்கார் பாசுரத்தாலும் வேதஸ்வரூபியாகப் பிரதிபாதிக்கப்பட்ட பெரிய திருவடி யென்னும் கருடாழ்வானை வாஹனமாகவுடையவன் ஸ்ரீமந்நாராயணன்.

1. கிருஷ்ணயஜுர்வேதம் 4வது காண்டம், முதல் ப்ரச்நம்–43.
2. சதுச் ச்லோகீ (காந்தா ஸ்தோத்ரம்)–1. 3. திருவரங்கத்துமாலை–88.

இனி இருவரையும்பற்றிச் சொல்லுகிற பிரமாணங்களை ஆராய்ந்தால், வேதவிருத்தமான பொருள்களைச் சொல்லுமதாயும் ராஜஸதாமஸ புருஷர்களால் செய்யப்பட்டதாயுமுள்ள சைவாகமம் அரனைப்பற்றிச் சொல்லுவது; ஒருவராலும் செய்யப்படாமல் அநாதியாய் எவ்வகையான தோஷமுமற்று உண்மைப் பொருளையே உரைக்கின்ற வேதம் ஸ்ரீமந்நாராயணனைப் பிரதிபாதிக்கும் பிரமாணம். இனி இருவருடைய இருப்பிடங்களையும் நோக்குங்கால், தனது நெஞ்சின் கடினத் தன்மைக்கு ஏற்றவாறு கடினமான கைலாசமலை அரனுக்கு உறைவிடம்; தனது திருவுள்ள நீர்மைக்குத் தக்கபடி நீர்மையே வடிவான திருப்பாற்கடல் ஸ்ரீமந் நாராயணனுக்கு உறைவிடம். இதற்குத் தக்கபடி அழித்தல் தொழில் அரனது; காத்தல் தொழில் நாராயணனது. அதற்குத் தக்கபடி கொலைத் தொழிலுக்கு ஏற்ற முத்தலைச் சூலம் அரனது, * அருளார் திருச்சக்கர மென்றே புகழ்பெற்று உலகங்களையெல்லாம் பாதுகாக்குமாறுள்ள சக்கரப்படை நாராயணனது.

இவை யெல்லாம் ஒரு புறமிருக்கட்டும்; "ரூபமேவாஸ்ய ஏதந்மஹிமாநம் வ்யாசஷ்டே" [உருவமே வ்யக்தியின் பெருமையைத் தெரிவிக்கும்] என்ற வேத வாக்கியத்தின்படி இருவருடையவும் உருவத்தை நோக்குவோமாயின், கண்ணெடுத்துப் பார்க்க முடியாதபடி காலாக்நிபோலேயிருக்கும் அரனுருவம்; கண்டார் கண்குளிரும்படியான காளமேகம்போலே யிருக்கும் செல்வநாரணன் திருவுருவம். "ஒன்று செந்தீ ஒன்று மா கடலுருவம்" என்றார் திருமங்கையாழ்வாரும் திருநெடுந்தாண்டகத்திலே.

இப்படி ஒன்றுக்கொன்று மாறுபட்டுக் கிடக்கிற இரண்டு பொருள்களில் "அங்காந்யந்யா தேவதா:" இத்யாதி உபநிஷத் வாக்கியங்களின்படி அரன் நாராயணனுக்கு அங்கமாயும் நாராயணன் அங்கியாயு மிருப்பர்கள். சரீரி தலைமையானதோ? சரீரம் தலைமையானதோ? ஆராய்ந்து சொல்லுங்கள் என்றவாறு.

"மேனி ஒன்று" என்று அரனுடைய சரீரத் தன்மை சொன்னதுபோல நாராயணனுடைய சரீரித் தன்மை மூலத்தில் சொல்லப்படவில்லையாயினும், ஒன்று சரீர மென்றால் மற்றொன்று சரீரி யென்பது தன்னடையே விளங்குமிறே. அந்தர்யாமிப்ராஹ்மண

மென்னும் வேதப்பகுதியில் ஸ்ரீமந்நாராயணனே ஸர்வ சரீரி யென்பது பன்னியுரைக்கப்பட்டுள்ளமை காண்க.

"உருவமேரி கார்மேனியொன்று" என்பதை இரண்டு வாக்கியமாகக் கொள்ளுத லின்றியே ஏகவாக்கியமாகவே கொண்டு, இருவருடையவும் உருவத்தைப் பார்த்தால், ஒன்று எரிமேனி, மற்றொன்று கார்மேனி என்பதாக உரைத்தலும் ஒக்கும் ... (ரு)

ஒன்று மறந்தறியே னோதநீர்வண்ணனைநான் *
இன்று மறப்பனோ வேழைகாள் *—அன்று
கருவரங்கத் துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன் *
திருவரங்க மேயான் திசை. (சு)

அன்று — அறிவு நடையாடுகைக்கு யோக்யதை யில்லாத காலத்திலே
கரு அரங்கத்துள் கிடந்து — கர்ப்பப்பையாகிற ஸ்தானத்திலே இருந்துகொண்டு,
திருஅரங்கம் மேயான் — ஸ்ரீரங்கத்திலே வந்து பள்ளி கொண்டிராநின்ற பெரிய பெருமாளுடைய
திசை — ஸ்வபாவங்களை யெல்லாம்
கண்டேன் — ஸாக்ஷாத் கரித்தவனாய்
கை தொழுதேன் — அஞ்ஜலியும் செய்தவனாகிய நான்
ஓதம் நீர் வண்ணனை — வெள்ளம்பரந்த ஸமுத்ரஜலம் போலே குளிர்ந்த வடிவழகுள்ள அப்பெருமானை
ஒன்றும் மறந்து அறியேன் — க்ஷணகாலமும் மறந்தறிய மாட்டேன்;
ஏழைகாள் — (விஷயாந்தரங்களை விரும்பித் திரிகிற) அறிவு கேடர்களே!
நான் — (அவனை மறக்கக்கூடிய கர்ப்பஸ்தானத்தி லிருக்கச் செய்தேயும் மறவாதிருந்த) நான்.
இன்று — (மறக்கமுடியாதபடி ஞானவிகாஸம் பெற்ற) இக்காலத்திலே
மறப்பனோ — எப்படி மறப்பேன் [மறக்கவே மாட்டேன்.]

* * * [ஒன்றுமறந்தறியேன்.] கீழ் நான்காம் பாட்டில் "அரன் அறிவானும்" என்று சிவபிரானை மாத்திரம் இழித்துக் கூறி விட்டீரே; அவனுக்கு பகவத் விஷயமே தெரியாதென்றும், தெரிந்தவன்போலப் பாவித்து சிஷ்யர்களுக்கு உபதேசிக்கவும் தொடங்கி விட்டானே யென்று ஏசியும் பேசினீரே; அவனைக் காட்டிலும் நீர் பகவத் விஷயஜ்ஞானத்தில் சிறந்தவரோ? நீர் தாம் எம்பெருமானை யறிந்து பிறர்க்கு உபதேசிக்க வல்லீரோ? பிரபந்த முகத்தால் உணர்த்தத் தொடங்கிவிட்டீரே, இஃது எங்ஙனே? என்று ஆழ்வாரை நோக்கி ஒரு கேள்வி பிறக்க, ஆழ்வார் அதற்கு உத்தரம் அருளிச் செய்கிறதுபோலே யிருக்கிறது இப்பாட்டு. அந்த அரனுக்கும் எனக்கும் எவ்வளவோ வாசியுண்டு; அவன் ஸத்வ குணம் தலையெடுத்தபோது எம்பெருமானது திருவருளாலன்றி ஸ்வப்ரயத்நத்தாலே அப்பெருமானது ஸ்வரூபஸ்வபாவங்களைச் சிறிது அறிந்து பரமஸாத்விகன்போல இருப்பன்; அடுத்த க்ஷணத்திலேயே ரஜோ குணமும் தமோ குணமும் தலையெடுக்கப் பெற்று 'என்னைக் காட்டிலும் வேறொரு ஈச்வரன் உண்டோ? நானே ஸர்வேச்வரன்' என்று செருக்குக் கொள்வன்; அவனைப் போலவோ நான்?; நான் கர்ப்பவாஸம் செய்யும்போதே பிடித்து அப்பெருமானால் நிர்ஹேதுகமாகக் கடாக்ஷிக்கப் பெற்று, தன்னுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை யெல்லாம் அவன்தானே காட்டக் கண்டு, "ஜாயமாநம் ஹி புருஷம்யம் பச்யேத் மதுஸூதநः- ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயः ஸ வை மோக்ஷார்த்த சிந்தகः" =[கர்ப்பத்திலேயே எம்பெருமான் எவனைக் கடாக்ஷித்தருள்வனோ அவனே ஸாத்விகன்; அவனே முமுக்ஷுவாவான்] என்கிறபடியே சுத்த ஸாத்விகனாய் அப்பெருமானுடைய திருக்கல்யாண குணம் முதலியவற்றை ஸ்வயம் அநுபவிப்பதும் பிறர்க்கு எடுத்து உபதேசிப்பதுமாக இவற்றையே காலக்ஷேபமாகக் கொண்டிருந்தவன்; பெரும்பாலோர் பகவானை மறந்திருக்கும்படியான கர்ப்பவாஸ காலத்திலுங்கூட அவனை மறவாது வாழ்த்திக் கொண்டிருந்த நான் இனி ஒருகாலாகிலும் மறக்க வழியுண்டோ? அரனுக்குப்போலே எனக்கும் முக்குணங்களும் மாறி மாறி வருமோ? ஸத்வ குணகார்யமே நிலை நின்றிருக்கப் பெற்ற வெனக்கு அவனை உணர்தலும் உணர்ந்த

வற்றைப் பிறர்க்கு உபதேசித்தலும் உசிதமே யன்றோ என்றுராயிற்று.

ஓதநீர்வண்ணனை என்ற சொல்லாற்றலால்—அவனுடைய வடிவழகு நெஞ்சிலே ஊன்றப் பெற்றவர்கட்கு அவனை மறப்பது ஒருநாளும் ஸம்பாவிதமல்ல என்பது பெறப்படும். கர்ப்பவாஸ காலத்தில் வந்து ஸேவை ஸாதித்தது மாத்திரமே யல்லாமல் எப்போதும் கடாக்ஷித்து விஷயீகரிப்பதற்காகவே திருவரங்கம் முதலான திருப்பதிகளிலே ஸந்நிஹிதனுயிரா நின்று னென்பது தோன்றத் திருவரங்கமேயான் என்கிறுர். மேயான்—மேவியிருப்பவன், திருவுள்ளமுவந்து எழுந்தருளி யிருப்பவன்.

இப்பாட்டின் முடிவிலுள்ள திசை என்னும் பதத்திற்கு திக்கு' என்று பொருளாயினும் 'தன்மை' என்னும் பொருளிலே அஃது இங்குப் பிரயோகிக்கப்பட்டது. இப்பிரயோகம் வட நூற்களிலே விசேஷமாக வுண்டு.

இதில் மூன்று மடியில் ஒரு சங்கை பிறக்கும்; அதாவது—பொய்கையிலே ஒரு செங்கமலப் பூவிலே திருவவதரித்ததனுல் அயோநிஜராகிய இவ்வாழ்வார்க்கு கர்ப்பவாஸ மென்பது கிடையாதே; அப்படி யிருக்க, "கருவரங்கத்துள் கிடந்து" என்று இவர்தாம் எங்ஙனே அருளிச் செய்கிறுர் என்று; இதற்கு உத்தரமாவது—"கருவரங்கத்துள் கிடந்து" என்ற விதனுல், * தீண்டா வழும்பும் செந்நீரும் சீயும் நரம்பும் செறி தசையுமாய் வேண்டா நாற்றம்மிக்கிருக்கிற கர்ப்பத்தும்பையில் நின்றும் ஆழ்வார் பிறந்தாரென்று கொள்ளவேண்டிய அவசியம் யாதுமில்லை; எவ்விடத்தில் நின்று அவதரித்தாரோ அவ்விடமே கர்ப்பஸ்தாநமாகும்; இவ்வாழ்வாருடைய வாழித் திருநாமத்தில் "வனசமலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே" என்றிருப்பதும் இவ்வர்த்தத்தை வற்புறுத்தும். 'நான் இவ்விருள் தருமா ஞாலத்தில் வந்து தோன்றுவதற்கு முன்னமே எம்பெருமானுடைய கடாக்ஷம் பெற்றவன்' என்று சொல்லுவதே இங்கு விவக்ஷிதம். "அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன்" என்றுற்போலுமாம்.

"கருவரங்கத்துள்" என்ற விடத்து அரங்கம் என்னுஞ் சொல் ரங்கம் என்ற வடசொல்லின் விகாரம்; அச்சொல்—நட

ணம் செய்யுமிடம், போர் செய்யுமிடம் என்று சிறப்பிடப் பொருளதாயினும் இங்கே 'இடம்' என்னும் பொதுப் பொருளிலே நிற்கிறது. ... ... ... ... (௬)

**திசையும் திசையுறு தெய்வமும் * தெய்வத்**
**திசையும் கருமங்க ளெல்லாம் *—அசைவில்சீர்க்**
**கண்ணன் நெடுமால், கடல்கடைந்த * காரோத**
**வண்ணன் படைத்த மயக்கு.** (௭)

| | |
|---|---|
| திசையும் | திக்குக்களோடு கூடிய உலகங்களும் |
| திசை உறு தெய்வமும் | அந்தந்த திசைகளிலே வாழும் தேவதைகளும் |
| தெய்வத்து இசையும் கருமங்கள் | அந்தந்த தேவதைகளுக்கு ஏற்ற (ஸ்ருஷ்டி முதலிய) வியாபாரங்களும் |
| எல்லாம் | ஆகிய இவையெல்லாம், |
| அசைவு இல் சீர் | கேடில்லாத [நித்யமான] குணங்களை யுடைய |
| கண்ணன் | ஸ்ரீகிருஷ்ணனா யவதரித்த |
| நெடு மால் | மிகப் பெருமையை யுடையவனாய் |
| கடல் கடைந்த | (தன் பெருமையைப் பாராது சரணாகதர்களுக்காக உடம்புநோவக்) கடல் கடைந்தவனாய் |
| கார் ஓதம் வண்ணன் | மேகம் போலவும் கடல் போலவும் குளிர்ந்த வடிவை யுடையவனான எம்பெருமான் |
| படைத்த | (தன்னிடம் வந்து பணியமாட்டாதவர்களை அகற்றுகைக்காக) உண்டாக்கிவைத்த |
| மயக்கு | அறிவை மயக்கும் பொருள்களாம். |

*** [**திசையும்.**] ஸ்ரீமந்நாராயணனே பரதேவதையாகில், பலரும் பரதேவதை யென்று மயங்கும்படியான பல பல தேவதைகள் ஏற்படுவானேன்? அந்தத் தெய்வங்கள் தாம் விசித்திரமான செயல்களைச் செய்ய வல்லமை பெற்றிருப்பானேன்? என்றொரு கேள்வி உண்டாக, எம்பெருமான் தானே, தன்னை உகவாதவர்கள் தன்னை வந்து கிட்டாமல் தேவதாந்தரங்களைப் பணிந்து க்ஷுத்ர பலன்களைப் பெற்று அகன்று போவதற்காகச் செய்து வைத்த மயக்குக்கள் காண்மின் இவை — என்று மறுமொழி கூறுகின்றார். சர்க்

கரை, கற்கண்டு, திராக்ஷை முதலிய சிறந்த வஸ்துக்களை வாங்கி உண்டு களிக்க இயற்றியில்லாத ஜனங்களுக்காக உப்பு புளி முதலிய சிறு பொருள்களைக் கடை பரப்பி வைத்த மாத்திரத்தினால் எல்லாப் பொருள்களுக்கும் கடைகள் ஏற்பட்டிருக்கின்றன வென்று எல்லாம் சிறந்த பொருள்களாய் விடுமோ? செல்வம் மிகுந்தவர்களுக்காக விலையுயர்ந்த உண்மையான ரத்னங்கள் ஏற்பட்டிருப்பது போல ஏழைகளுக்காக அற்ப விலையுள்ள க்ருத்ரிமங்களான ரத்னங்களும் ஏற்பட்டிருக்கின்றன; இவை தம்மில் வாசியின்றிக்கே யொழியுமோ? சிறந்த வஸ்துக்களை அநுபவிக்க யோக்யதை யில்லாதவர்களை மயக்குவதற்கு ஸாமாந்ய வஸ்துக்கள் எப்படி ஏற்பட்டனவோ, அப்படியே பரமவிலக்ஷணனான திருமாலை அநுபவித்து வாழமாட்டாத க்ஷுத்ர ஜநங்களை மயக்குதற்காகத் திசையும் திசையுறு தெய்வமும் தெய்வத் திசையுங் கருமங்களு மெல்லாம் ஏற்படுத்தப்பட்டன வென்று கொள்ள வேணுமென்கிறார்.

“திசையும்” என்றது பல பல வுலகங்களைச் சொன்னபடி; எம்பெருமானொருவனையே தொழுது இறைஞ்சுதற்கு உரிய உலகமொன்றே யிருக்கலாமாயினும், ‘இது சிவஸாலோக்யம் பெறும் உலகம்’ ‘இது இந்த்ரஸாலோக்யம் பெறும் உலகம்’ என்றிப்படி பல பல ஸ்தானங்களைக் கற்பித்தது காரோதவண்ணன் படைத்த மயக்கு என்றபடி.

திசையுறுதெய்வமும் = இன்ன ஸ்தானத்திற்கு இன்னான் கடவன், இன்ன ஸ்தானத்திற்கு இன்னான் கடவன் என்று ஒவ்வொரு ஸ்தானத்திலும் நிர்வாஹகமாக ஒவ்வொரு தேவதையை ஏற்படுத்தினதும் காரோதவண்ணன் படைத்த மயக்கு.

தெய்வத்து இசையும் கருமங்கள் = நான்முகன் படைப்புத் தொழிலை நிர்வஹிக்கக் கடவன்; சிவபிரான் ஸம்ஹாரத் தொழிலை நிர்வஹிக்கக் கடவன்; இந்திரன் தேவதைகளை மெய்காட்டுக்கொள்ளுந் தொழிலை நோக்கக் கடவன்; யமன் உயிர் நீத்துந் தொழிலை நடத்தக் கடவன் என்றிப்படி அவ்வத் தெய்வங்கட்கு இசைந்தவாறாகத் தொழில்களை வகுத்திருப்பதும் காரோதவண்ணன் படைத்த மயக்கு. திரிபுர மூன்றெரித்தல், காமதஹநம், வ்ருத்ரா

ஸுர வதம் முதலிய அரிய பெரிய செயல்களை இங்குக் கொள்ளவு மாம்.

கடல் கடைந்து அமுதங் கொண்ட காலத்திலே தேவாஸுர விவாதம் ப்ரஸங்கிக்க, எம்பெருமான் மோஹினி யுருவம் பூண்டு உகவாதாரை மயக்கினது போலவே இவையும் மயக்காக உண்டு பண்ணி வைக்கப்பட்டவை என்கிற உட்பொருளுந் தோன்றக் "கடல் கடைந்த காரோதவண்ணன் படைத்த மயக்கு" என்றருளிச் செய்தாரென்க. கடைந்த கடலிலே அமுதம் விஷம் யானை குதிரை சந்திரன் கல்பவ்ருக்ஷம் அப்ஸரஸ் முதலிய பலவிசித்திரப் பொருள்களைப் படைத்தருளின பெருமான் இவை யித்தனையும் செய்ய வல்லவனே யென்பதும் மூதலிக்கப்பட்டதாம்.

மயக்கு என்றது—மயங்கச் செய்யும் பொருள் என்றபடி. 'விளக்கு' என்றால் விளங்கச் செய்யும் பொருள் என்று பொருள் படுதல்போல ... ... ... ... (எ)

மயங்க வலம்புரி வாய்வைத்து * வானத்
தியங்கு மெறிகதிரோன்றன்னை *—முயங்கமருள்
தேராழியால் மறைத்த தென்நீ, திருமாலே *
போராழிக் கையால் பொருது. (அ)

| | | | |
|---|---|---|---|
| திரு மாலே | லக்ஷ்மீநாதனே!, | போர் ஆழி கையால் | போர் செய்வதற்கு<br>உபகரணமான<br>திருவாழியை<br>ஏந்தின<br>கையாலே |
| | நீ, | பொருது | (பீஷ்மர் முதலான<br>வர்களைத்<br>துரத்தி) யுத்தம்<br>செய்து, |
| முயங்கு அமருள் | (எண்ணிறந்த<br>மன்னர்கள்)<br>நெருங்கிக்<br>கிடந்த பாரதப்<br>போர்க்களத்திலே | வானத்து இயங்கும் எறி கதிரோன் தன்னை | ஆகாயத்தில்<br>ஸஞ்சரித்துக்<br>கொண்டே<br>யிருக்கிற<br>ஸூர்யனை |
| மயங்க | (எதிரிகள் அஞ்சி)<br>அறிவு<br>கலங்கும்படியாக | தேர் ஆழியால் | சக்கராயுதத்தினால் |
| வலம்புரி | ஸ்ரீபாஞ்சஜந்ய<br>மென்னும்<br>திருச்சங்கை | மறைத்தது என் | மறைத்தது<br>எதுக்காக? |
| வாய் வைத்து | தனது திருப்<br>பவளத்திலே<br>வைத்து ஊதி, | | |

* * *—[மயங்கவலம்புரி.] எம்பெருமான் தன்னையுகவாதாரை அகற்றுகைக்காகச் சில மயக்குப்பொருள்களை ஏற்படுத்தினனென்றார் கீழ்ப்பாட்டில். ஸர்வரக்ஷகனான எம்பெருமானுக்கு இது தகுதியோ? என்று ஒரு சங்கை தோன்ற, ஆச்ரிதர்களை எவ்விதத்திலும் பரிந்து பாதுகாப்பதும் தன்னை மதியாத ஆஸுரப்ரக்ருதிகளை விலக்கி விடுதலும் அப்பெருமானுடைய காரியம்; துஷ்டநிக்ரஹமும் சிஷ்ட பரிபாலநமும் செய்வதே ஸர்வரக்ஷகத்வமாதலால் அங்ஙனே செய்தருள்கின்ற எம்பெருமானுடைய ஸர்வரக்ஷகத்வ குணத்திற்கு யாதொரு கேடுமில்லை, மேன்மேலும் விளக்கமேயுள்ளது என்று ஸமாதான முரைப்பவர்போல இப்பாட்டு அருளிச் செய்கிறார்.

பாரதப் போர்க்களத்திலே துர்யோதநாதிகள் அஞ்சி நடுங்கும்படியாக பாஞ்சஜந்ய மென்னும் தனது சங்கைத் திருப்பவளத்திலே வைத்தூதி அதன் பேரொலியாலே ஆச்ரிதர்களை வாழ்வித்தும் எதிரிகளை இடிவிழுந்தவர்போல அச்சமுறுத்தியும், சக்கராயுதத்தினாலே ஸூர்யனை மறைத்துப் பகலை இரவாக்கியும், அவ்வாயுதத்தை யெடுத்துக்கொண்டு பீஷ்மரைத் தொடர்ந்தோடியும் செய்த காரியங்கள் ஆச்ரித பக்ஷபாதத்தைத் தெரிவிப்பவையாதலால் அவற்றை யெடுத்துக் கூறுகின்றார்.

மயங்கவலம்புரிவாய்வைத்தது பகவத்கீதையின் முதலத்யாயத்திற் சொல்லிற்று. எறிகதிரோன் தன்னைத் தேராழியால் மறைத்த வரலாறு:—பாரதப்போரில் பதின்மூன்றாநாளிலே அர்ஜுநனது மைந்தனான அபிமந்யுவைத் துரியோதநனது உடன் பிறந்தாளின் கணவனான ஸைந்தவன் கொன்றுவிட, அங்ஙனம் தன் மகனைக் கொன்ற ஜயத்ரதனை மற்றைநாள் ஸூர்யாஸ்தமனத்திற்குள் தான் கொல்லாவிடில் தீயில்குதித்து உயிர் துறப்பதாக அர்ஜுநன் சபதஞ்செய்ய, அதனையறிந்த பகைவர்கள் பதினாலாநாள் பகல் முழுவதும் ஜயத்ரதனை வெளிப்படுத்தாமல் சேனையின் நடுவே நிலவறையில் மறைத்துவைத்திருக்க, அர்ஜுநனுடைய சபதம் பழுதாய் விடுமே என்று சிந்தித்துக் கண்ணபிரான் ஸூர்யனை அஸ்தமிப்பதற்குச் சில நாழிகைக்கு முன்னமே தனது திருவாழியினால் மறைத்துவிட, அப்பொழுது எங்கும் இருள் பரவியதனால் அர்

ஜுநன் தன் உறுதியின்படி அக்நிப்ரவேசம் செய்யப்புக, அதனைக் களிப்போடு காண்பதற்குத் துரியோதனாதிகளுடனே ஸைந்தவன் வந்து எதிர்நிற்க, அப்போது கண்ணபிரான் திருவாழியை வாங்கி விடவே பகலாயிருந்ததனால் உடனே அர்ஜுநன் ஜயத்ரதனைத் தலை துணித்தனன் என்பதாம். 1. "நாழிகை கூறிட்டுக் காத்து நின்ற அரசர்கள்தம் முகப்பே, நாழிகை போகப் படை பொருத வன் தேவகிதன் சிறுவன்" என்றார் பெரியாழ்வாரும்.

இவ்வரலாற்றில் ஒரு சங்கை பிறப்பதுண்டு;—திருமாலின் சக்கராயுதத்தின் ஒளியானது ஸூர்யனுடைய ஒளியிற் காட்டிலும் பலகோடி நூறாயிரம் மடங்கு மேம்பட்டதென்று சொல்லியிருக்க, கோடி ஸூர்யப்ரகாசனான அத்திருவாழியினாலே இருளை உண்டாக்கினதாக வுரைப்பது எங்ஙனே? என்று. இதற்குப் பலர் பலவகையான ஸமாதானங்கள் கூறுவர்; ஒரு ஸமயவிசேஷத்தில் திருவாழியின் பிரகாசம் சிறிதுபோது மழுங்கிப் போகக் கடவதென்று ஒரு சாபம் ஏற்பட்டிருந்ததென்றும் அதனால்தான் இங்ஙனே செய்யலாயிற்றென்றும் முக்கிய ஸமாதானமாகக் கூறுவதுண்டு.

"போராழிக்கையால் பொருது" என்ற நான்காமடியில்—பாரதப்போரில் கண்ணபிரான் பீஷ்மரைக் கொல்வதாகத் திருவாழியைக் கையிலேகொண்டு தேரில் நின்றும் கீழிறங்கித் துரத்திக் கொண்டு சென்ற கதை அநுஸந்திக்கத்தக்கது. [மஹாபாரதம்—பீஷ்மபர்வம்—ஐம்பத்தொன்பதாமத்தியாயத்தில் விரிவு காண்க.]

மயங்கவலம்புரி வாய்வைத்ததும் எறிகதிரோன்தன்னை ஆழியால் மறைத்ததும் போராழிக்கையால் பொருததும் ஏதுக்காக? என்று ஆழ்வார் எம்பெருமானைக் கேள்வி கேட்கிறார் இப்பாட்டால். 'போரில் நான் ஆயுதமெடுப்பதில்லை' என்று பிரதிஜ்ஞை செய்துவைத்து அதற்குமாறாக் காரியஞ் செய்தது எல்லாரோடும் ஒரு நிகராகவுள்ள உனது உறவுக்குத்தகுமோ? ஸத்யஸங்கல்பனான உன் இருப்புக்குத் தகுமோ? உன் பெருமைக்குத் தகுமோ? இவை யொன்றையும் பாராமல் நீ செய்த செயல்கள் எதற்காக? என்ற இக்கேள்வியானது—ஆச்ரிதர்களான பாண்டவர்களிடத்

1. பெரியாழ்வார் திருமொழி 4—1—9.

திலே நீ கொண்டிருந்த பக்ஷபாதமேயன்றே இத்தனையும் செய்வித்தது என்று வெளியிடுகிறமுகத்தால் அவனுடைய ஸௌஹார்த்த குணத்தை வெளியிடுவதில் நோக்குடைத்தென்க.

முயங்குஅமர் என்றது பல பேர்கள் திரண்டு நெருங்கியிருக்கும் போர்க்களமென்றபடி. போர்புரிய வந்தவர்களும் போர்காண வந்தவர்களுமாகத் திரண்ட திரளுக்கு எல்லையில்லையிறே.

'தேராழியால் மறைத்தது' என்கிறாரே, தேர்ச்சக்கரத்தையெடுத்தோ ஸூர்யனை மறைத்தது? என்று சிலர் சங்கிப்பர்; அன்று; தன் திவ்யாயுதமான சக்கரத்தைக் கொண்டே மறைத்தது; சக்கரம் தேருக்கு உறுப்பாயிருக்குந் தன்மையுடையதாதலால் வடநூலார் 'ரதாங்கம்' என வழங்குதல் போலத் தேராழியெனப்பட்டதென்க. போராழிக்கையால் — கையிற்கொண்ட போராழியினால் என்று கொள்ளலாம். ... ... (அ)

பொருகோட்டோ ரேனமாய்ப் புக்கிடந்தாய்க்கு - * அன்றுன்
ஒருகோட்டின் மேல்கிடந்த தன்றே *—விரிதோட்ட
சேவடியை நீட்டித் திசைநடுங்க விண்துளங்க *
மாவடிவில் நீயளந்த மண்.

(கூ)

| | |
|---|---|
| விரி தோட்ட | ஒளி விரிகின்ற திருக்குண்டலங்களை அணிந்துள்ளவனே! |
| சே அடியை நீட்டி | செந்தாமரை போன்ற திருவடிகளை வளரச் செய்து |
| திசை நடுங்க | பூதலத்திலுள்ளவர்கள் நடுங்கும்படியாகவும் |
| விண் துளங்க | மேலுலகங்களிலுள்ளவர்கள் நடுங்கும்படியாகவும் |
| மா வடிவின் | (திரிவிக்கிரமனாக வளர்ந்த) பெரிய வடிவத்தோடு |
| நீ அளந்த | நீ அளந்து திருவடிக்கீழ் இட்டுக்கொண்ட |
| மண் | பூமியானது, |
| பொரு கோடு ஓர் ஏனம் ஆய் | நிலத்தைக் குத்தியெடுத்துக் கொண்டு திரிகிற கோரப்பற்களையுடைய விலக்ஷணமான வராஹ மூர்த்தியாய் |
| புக்கு | (பிரளயஜலத்திலே) முழுகி |

| | |
|---|---|
| இடந்தாய்க்கு அன்று | அண்டபித்தியில் நின்றும் இந்தப் பூமியைக் குத்தி யெடுத்துக் கொண்டுவந்த அக்காலத்தில் |
| உன் | உன்னுடைய |
| ஒரு கோட்டின் மேல் | ஒரு கோரப்பல்லின் ஏகதேசத்திலே |
| கிடந்தது அன்றே | அடங்கிக்கிடந்ததல்லவோ? |

* * *—[பொருகோட்டோர்.] எம்பெருமான் தான்செய்த பிரதிஜ்ஞையைப் பங்கப்படுத்திக் கொண்டாகிலும் ஆச்ரிதருடைய காரியமே கண்ணுயிருப்ப னென்றார் கீழ்ப்பாட்டில்; அவ்வளவே யல்ல; தன் வடிவத்தை மாறுபடுத்திக்கொண்டும் இழிபிறப்பை ஏற்றுக்கொண்டும் காரியம் செய்பவன்காண்மின் என்றருளிச் செய்வதாக வராஹாவதாரத்தை ப்ரஸங்கிக்கிறாரிதில்.

பொருகோட்டோரேனமாய்ப்புக்கிடந்த வரலாறு :—ஹிரண்ய கசிபுவின் உடன்பிறந்தவனை ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அசுரன் தன் வலிமையாற் பூமியைப் பாயாகச்சுருட்டி எடுத்துக் கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹாவராஹரூபியாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக்கண்டு பொருது கோட்டினாற் குத்திக் கொன்று பாதாளலோகத்திற் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற்குத்தி அங்கு நின்று மெடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்பதாம். இப்பொழுது நடக்கிற ச்வேதவராஹகல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளயஜலத்தில் மூழ்கியிருந்த பூமியை மேலே யெடுக்க நினைத்து மஹாவராஹரூபியாகிக் கோட்டு நுனியாற் பூமியை எடுத்து வந்தனனென்ற வரலாறும் உண்டு. 1. "பாராருலகம் முது முந்நீர் பரந்தகாலம் வளை மருப்பில், ஏராருருவத்தேனமா யெடுத்த வாற்றலம்மான்" என்ற திருமங்கையாழ்வாரருளிச்செயலை நோக்குக.

இவ்வரலாற்றினாலும் பின்னடிகளிற் குறித்த திரிவிக்கிரமாவதார சரிதையினாலும்—எம்பெருமான் ரக்ஷ்யவர்க்கங்களை இன்ன

1. பெரியதிருமொழி 8-8-3.

படிதான் ரக்ஷிப்பனென்கிற ஒரு நியதியில்லை யென்பது வெளியிடப்பட்டதாம்.—“ ஆபத்துவந்தால் தலையாலே சுமந்து நோக்குதல், தலையிலே காலைவைத்து நோக்குதல் செய்யுமவனன்றோ நீ; ரக்ஷ்யவர்க்கத்தை நோக்குமளவில் உனக்கொரு நியதியுண்டோ வென்று உகந்தனுபவிக்கிறார்” என்றும்; “உதாரனாயிருப்பானொருவன் நாலுபேருக்குச் சோறிட நினைத்து நாற்பது பேருக்கு இட்டுமிகும்படி சோறுண்டாக்குமா போலே ரக்ஷ்யத்தினளவன்றிறே ரக்ஷகன் பாரிப்பு” என்றுமுள்ள வியாக்கியான வாக்கியங்கள் அநுஸந்திக்கத் தக்கன.

மிகப்பெரிய வடிவுகொண்டு உலகளந்தபோது எங்கும்பரந்த திருவடிக்குச் சரிசமமாகப் போந்திருந்த பூமியானது வராஹாவதாரகாலத்தில் உனது திருஎயிற்றிலே ஒரு நீலமணிபோலே சிறுகிக் கிடந்ததே! இஃது என்ன ஆச்சரியம் என வியக்கின்றார். இப்பிரபந்தத்தில் மேலே “பிரானுன் பெருமை பிறாரறிவார், உராயுலகளந்த நான்று—வராகத், தெயிற்றளவு போதாவாறென்கொலோ? எந்தை அடிக்கு அளவு போந்தபடி.” என்றருளிச் செய்துள்ள எண்பத்துநாலாம் பாசுரமும் இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

‘விரிதோட்ட’ என்பதை விளியாகக்கொண்டு ஒளிவிரிகின்ற தோடுகளையணிந்தவனே!—மகர நெடுங்குழைக்காதனே! என்று பொருள் கொள்ளும் பக்ஷத்தில் ‘விரிதோட’ என்றிருக்க வேண்டுவது விரித்தல் விகாரம் பெற்று ‘விரிதோட்ட’ என்றாயிற்றென்று கொள்ளவேண்டும்; இஃது அருமையெனின்; வேறுவகையாகவே பொருள் கொள்ளலாம்—மலர்ந்த இதழ்களையுடைய தாமரை போலேயிருக்கிற என்று. இப்போது இது சேவடிக்கு விசேஷணம். (௯)

மண்ணும் மலையும் மறிகடலும் மாருதமும் *
விண்ணும் விழுங்கியது மெய்யென்பர் *—எண்ணில்
அலகளவு கண்ட சீராழியாய்க்கு - *அன்றிவ்
வுலகளவு முண்டோ வுன்வாய். (௰)

| | |
|---|---|
| மண்ணும் | பூமியும் |
| மலையும் | குலபர்வதங்களும் |
| மறி கடலும் | அலையெறிகிற ஸமுத்ரங்களும் |
| மாருதமும் | காற்றும் |
| விண்ணும் | ஆகாசமும் ஆகிய இவற்றை யெல்லாம் |
| விழுங்கியது | (உனது திருவயிற்றின் ஒரு மூலையிலே அடங்கும்படி) அமுதுசெய்ததை |
| மெய் என்பர் | ஸத்யமாகச் சொல்லுவர்கள் (வைதிகர்கள்); |
| எண்ணில் | இதனை ஆராயுமளவில், |

| | |
|---|---|
| அலகு அளவு கண்ட சீர் ஆழியாய்க்கு உன் வாய் | அளவிடுதற்கு உறுப்பான எண்ணிக்கைகளை யெல்லாம் எல்லை கண்டிருக்கிற [—எண்ணிறந்த] கல்யாண குணங்களுக்குக் கடல் போன்றவனான வுன்னுடைய வாயானது |
| அன்று | இவற்றை யெல்லாம் விழுங்கின வக்காலத்தில் |
| இ உலகு அளவும் உண்டோ | இந்த ஜகத்தளவு விசாலமாகவும் இருந் திருக்குமோ ? |

* * *—[மண்ணும் மலையும்.] ஏனமாய் நிலங்கீண்டபோது மிகப்பெரிதான பூமி ஒருகோட்டின் மேலே அடங்கிக்கிடந்த விசித்திரத்தைக் கீழ்ப்பாட்டில் பேசியநுபவித்த ஆழ்வார்க்கு மற்றொரு அற்புதச் செயலும் நினைவுக்கு வந்தது ; பிரளயகாலத்தில் சிறியபாலகனாய் எழுலகையும் அமுதுசெய்தாயென்று ப்ராமாணிகர்களான வைதிக புருஷர்கள் சொல்லுகின்றனர் ; இது ஸத்யமான விஷயமேயன்றி ஈஷத்தும் அஸத்யமல்ல ; சிறியவாயினாலே பெரிய வுலகங்களை அமுதுசெய்யக் கூடாமையாலே உலகுண்ட அக்காலத்தில் உனது வாயும் உலகங்களின் பெருமைக்குத் தகுதியாகப் பெருத்திருந்ததோ என்று வினவுகின்றார். இங்ஙனே கேள்வி கேட்கிற முகத்தால் எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற சக்தி விசேஷத்தை வெளிப்படுத்துகின்றாராழ்வார் என்றுணர்க. சிறிய வாயினாலே பெரிய வுலகங்களை யெல்லாம் எளிதில் விழுங்கவல்ல அபாரசக்தியுக்தனன்றோ நீ என்றவாறு.

[அலகளவுகண்டசீர்.] நூறு ஆயிரம் பதினாயிரம் லக்ஷம் கோடி சங்கம் மஹாசங்கம் பத்மம் என்றாற்போன்ற எண்கள்

அலகு எனப்படும்; அவற்றை அளவுகாண்கையாவது—அந்த எண்களின் எல்லைக்குத் தான் மேற்பட்டுப்போதல்; அளவுகடந்து போவதைச் சொன்னபடி. "அஸங்க்யேய கல்யாணகுணகணௌக மஹார்ணவ!" என்பர் ஸ்ரீபாஷ்யகாரரும். சீராழியாய்க்கு = ஆழி யென்று ஸமுத்ரத்துக்குப் பெயர்; ஆழியான்—ஸமுத்ரமா யிருப்பவன்; முன்னிலைப்பெயர் நான்காம் வேற்றுமையுருபு பெற்று "ஆழியாய்க்கு" என்றாயிற்று. அன்றி, ஆழியையுடையவன் ஆழியான் என்றாகி, எல்லை கடந்த திருக்குணங்களையும் சக்கரா யுதத்தையும் உடைய உனக்கு என்று பொருளாகவுமாம்; இதுவே வியாக்கியானத்திற்கும் பொருந்தியதென்க. (கo)

வாயவனை யல்லது வாழ்த்தாது * கையுலகம்
தாயவனை யல்லது தான்தொழா *—பேய்முலைநஞ்
சூணாக வுண்டா னுருவோடு பேரல்லால் *
காணாகண் கேளா செவி. (கக)

| | | | |
|---|---|---|---|
| வாய் | எனது வாயானது | பேய் முலை நஞ்சு | பேயான பூதனையின் முலைகளில் தடவியிருந்த விஷத்தை |
| அவனை அல்லது | ஸர்வேச்வரனைத் தவிர | ஊண் ஆக | உணவாக |
| வாழ்த்தாது | (மற்றொன்றைப்) புகழாது; | உண்டான் | அமுது செய்த கண்ணபிரானுடைய |
| கை தாம | கைகளானவை | உருவொடு பேர் அல்லால் | திருமேனியையும் திருநாமத்தையு மல்லது (மற்றெதையும்) |
| உலகம் தாயவனை அல்லது தொழா | உலகங்களைத் தாவி யளந்துகொண்ட திரிவிக்கிரமனை யல்லது வேறொருவனைத் தொழமாட்டா; | கண் காணா செவி கேளா | கண்கள் காணமாட்டா; காதுகள் கேட்கமாட்டா; |

* * * [வாயவனையல்லது.] எம்பெருமான் ஆச்ரிதரை ரக்ஷிப் பதிலும் கொடியவர்களைத் தண்டிப்பதிலும் தீக்ஷிதனாயிருக்கின்றா

னென்கிற திருக்குணங்களிலே யீடுபட்டுத் தம்முடைய இந்திரியங்கள் அவன்திறத்தே அவகாஹிக்கும்படியைப் பேசுகிறாரிதில்.

உலகம் தாயவன் என்றதனால் ஆச்ரிதரை ரக்ஷிப்பதில் தீக்ஷிதனென்பதும், பேய் முலை நஞ்சு ஊணாகவுண்டா னென்றதனால் கொடியவர்களைத் தண்டிப்பதில் தீக்ஷிதனென்பதும் தெரிவிக்கப் பட்டனவென்க.

மூன்றாமடியில், உருவோடு—உருவையும் என்றபடி. உருவை யல்லால் கண்காணா, பேரையல்லால் செவிகேளா என்று அடைவே அந்வயிப்பது–முறைநிரனிறைப் பொருள்கோள்.

முகுந்தமாலையில் "ஜிஹ்வே! கீர்த்தய கேசவம் முராரிம்" என்றச்லோகம் இப்பாட்டுக்குச் சேர அநுஸந்திக்கவுரியது. (கக)

செவிவாய் கண்மூக் குடலென் றைம்புலனும் * செந்தீ
புவிகால் நீர்விண் பூதமைந்தும் *—அவியாத
ஞானமும் வேள்வியும் நல்லறமு மென்பரே *
ஏனமாய் நின்றாற் கியல்வு. (கஉ)

| | | | |
|---|---|---|---|
| ஏனம் ஆய் நின்றாற்கு | வராஹாவதாரம் செய்தருளித் தானே காரியங்களை நடத்துகிற பெருமானைப் பெறுவதற்கு | அவியாத ஞானமும் | (இந்தக் காரணகளே பரங்களாலே ஸாதிக்கப்படுவதாய்) இடைவிடாது எம்பெருமானைச் சிந்திப்பதான பக்தியும் |
| (இயல்வு | ஏற்ற ஸாதனமாவது–,) | வேள்வியும் | (அந்த பக்தி உண்டாகி வளர்வதற்குக் காரணமான) அக்நிஹோத்ரம் முதலிய சடங்கும் |
| செவி வாய் கண் மூக்கு உடல் என்று ஐம்புலனும் | செவிதொடக்கமாகச் சொல்லப்படுகிற ஞானேந்திரியங்கள் ஐந்தும் | நல் அறமும் | (நாடோறும் பக்தியை வளர்க்கக் கடவதான) விவேகம் முதலிய நற்குணங்களும் |
| செம் தீ புவி கால் நீர் விண் பூதம் ஐந்தும் | தேஜஸ் முதலான பஞ்ச பூதங்களினாலியன்ற தேஹமும் | இயல்வு என்பரே | ஸாதனங்கள் என்று சொல்லுகிறார்களே! (இது தகுதியோ? என்றவாறு.) |

* * *—[சேவி வாய் கண்.] 'நமக்கு உபாயமும் உபேயமும் எம்பெருமானேயாவன்' என்கிற சாஸ்த்ரார்த்தம் பலர்க்கும் தெரியுமாயினும், பக்தி முதலானவற்றையும் எம்பெருமானைப் பெறுகைக்கு உபாயமாகச் சிலர் ப்ரமித்திருப்பர்கள். அந்தோ! இப்படியும் சில மஹான்களுங்கூட மயங்கியிருக்கிறார்களே! என்று ஆழ்வாரிரங்குகிறாரிப்பாட்டில்.

ஆபத்து நேரிடும்போது, தானே வந்து பாதுகாப்பவனன்றோ எம்பெருமான் என்னவேண்டி ஏனமாய் நின்றாற்கு என்கிறார். * மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாய்த் திருவவதரித்து அரியன செய்ததெல்லாம் தன்னுடைய நிர்ஹேதுக கிருபையாலே யன்றி வேறொரு உபாயத்தை எதிர்பார்த்தன்றே என்று குறிப்பித்தவாறு.

எம்பெருமான் எப்போதும் நமக்கு நன்மை செய்வதற்கே ஸமயம் பார்த்துக்கொண்டிருப்பன்; அவனது முயற்சியை நாம் விலக்கித்தள்ளுகிறவரையில் 'ஐயோ! நம்முடைய க்ருஷி பலிக்கவில்லையே!' என்று திருவுள்ளம் நொந்துகிடப்பன்; எப்போது நாம் விலக்காமல் "அவன் செய்வன செய்து கொள்க" என்கிற ஆதரமுமில்லாமல் வாளா இருந்திடுவோமோ, அப்படிப்பட்ட ஸமயத்தையே பற்றாசாகக்கொண்டு "என் ஊரைச்சொன்னாய், என்பேரைச் சொன்னாய், என் அடியாரை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கு ஒதுங்க நிழலைக்கொடுத்தாய்" என்றாற்போலே சிலவற்றை ஏறிட்டு மடிமாங்காயிட்டு, பொன் வாணியன் பொன்னை உரைகல்லிலே உரைத்து மெழுகாலே யெடுத்து 'கால் பொன்னாயிற்று, கழஞ்சு பொன்னாயிற்று' என்று நாள்வட்டத்திலே திரட்டுவதுபோல, யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகம் என்கிற ஸுக்ருதவிசேஷங்களைத் தானே கற்பித்துக்கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போந்து நன்மைகளைப் பயக்குமவன்; இப்படிப்பட்ட எம்பெருமான் தானே தன்னையடையுமாறு தந்தால் அவனை நாம் பெறலாமேயன்றி, நாம் ஒருபாயஞ்செய்து அவனைப் பெற்று விடுவோமென்பது ஒருகாலும் நம்மால் இயலாது. அவனுக்கு சேஷப்பட்டிருக்கிற நாம் ஸர்வ சேஷியான அவனது திருவருளை

உபாயாநுஷ்டாநங்களாலே வலியக்கொணர்வோமென்பது நம் ஸ்வரூபத்துக்குத் தகாது; ஆதலால் ஆழ்வார்கள் வேறொரு உபேயத்தை அறியாதவாறுபோல வேறொரு உபாயத்தையும் அறியாதேயிருப்பர்கள்; $. "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்பர்கள். இக்கொள்கைக்கு மாறாகக் "கரும ஞானங்களினால் நிர்மலமான மநஸ்ஸையுடையவனால் செய்யப்படுவதும் தைலதாரைபோல இடைவிடாத த்யாநபரம்பரா ரூபமுமான பக்தியே உபாயம்" என்று வைதிகர்களும் சொல்லுகிறார்களே! இஃது என்ன அறியாமையோ! என்னும் முகத்தால் எம்பெருமானுடைய உபாயத்வத்தை வற்புறுத்துகின்றார்.

நாம் செய்யும் நற்காரியங்கள் எம்பெருமானைப் பெறுதற்கு உபாயமல்ல என்று சொல்லிவிட்டால், நாம் ஒன்றையும் செய்யாமலே இருந்துவிடலாமன்றோ என்றும், சாஸ்த்ரங்கள் நற்கருமங்களை ஸாதநமாகச் சொல்லியிருக்கின்றனவே என்றும் சிலர் கேட்பதுண்டு. அவர்களுக்குச் சொல்லுகிறோம்;—கடலிலே வலைவீசி மீன் முதலியன பிடித்து ஜீவிப்பானொரு செம்படவன் ஒருநாள் விலையுயர்ந்த ரத்னமொன்று மீன்களிடையே கடலிலே கிடைக்கப் பெற்றான்; அதனுடைய மதிப்பை அவன் அறியமாட்டாதவனாகையாலே ¶. "மாமதியம் திளைக்கும் கொடிமாளிகை சூழ்தெருவிற் செழுமுத்து வெண்ணெற்கெனச் சென்று முன்னில் வளைக்கை நுளைப்பாவையர்மாறு" மாபோலே அந்த ரத்னத்தைக் கொண்டு போய் ஒரு வ்யாபாரியிடத்திலே ஸ்வல்ப விலைகூறி விற்றுவிட்டான்; அந்தவ்யாபாரி ரத்னத்தின் மதிப்பை நன்குணர்ந்தவனாகையாலும் வர்த்தகமே தொழிலாக ஜீவிப்பவனாகையாலும் அந்த ரத்னத்தைக் கொண்டுபோய் ஒரு மஹாராஜனிடத்திலே அதற்குண்டான விலைகூறி ஆயிரம் வராஹனுக்கு விற்றான்; பிறகு அந்த மஹாராஜன் அந்த ரத்னத்தைத்தான் விற்பனைசெய்ய நினையாதே அதனைப் பெரியதொரு ஹாரத்திலே இணைத்து ஸ்வயம் போக்யமாகப் பூண்டுகொண்டான். ஆக இந்நடவடிக்கையில் ஒரு ரத்னத்துக்கே மூன்று தன்மைகள் உண்டாயின; (1) ஸ்வல்ப விலைக்கு மாறுதல்; (2) உள்ள விலைக்கு மாறுதல்; (3) விலைக்கு ஆட்படா

$. திருவாய்மொழி 5-7-10. ¶. பெரிய திருமொழி 3-8-7.

மல் ஸ்வயம் போக்யமாகக் கொள்ளப்படுதல்—என மூன்றுவகைகள் ஒரு வஸ்துவுக்கே அமைந்தாற்போல, "அவியாத ஞானமும் வேள்வியும் நல்லறமும்" என்று இப்பாட்டிற் சொன்ன பக்தி முதலியவற்றுக்கும் இங்ஙனே மூன்று தன்மைகள் கூடும்; ரத்னத்தின் மதிப்பை அறியமாட்டாத செம்படவன்போலே பக்தியின் சீர்மையை அறியமாட்டாத நீசர் அந்த பக்தியைக்கொண்டு ஐச்வரியம் கைவல்யம் முதலிய அற்பபலன்களைக் கொள்வர்; ரத்னத்தைக் குறைந்த விலைக்குக்கொடாதே தகுந்த விலைக்குக்கொடுத்த வ்யாபாரியைப்போன்ற அதிகாரிகள் பக்தியை மோக்ஷஸாதநமாக அபிமானித்து அற்பபலன்களைக் கொள்ளாமல் சிறந்ததான மோக்ஷபலனைக் கொள்வர்கள்; ரத்னத்தை ஒன்றுக்கும் ஸாதநமாக்காதே ஸ்வயம் போக்யமாகக் கொள்ளும் மஹாராஜனைப் போன்ற விலக்ஷணாதிகாரிகள் பக்தியை ஒன்றுக்கும் ஸாதநமாகக் கோலாமல் ஸ்வயம் புருஷார்த்தமாகக் கொண்டு வர்த்திப்பர்கள். மஹாராஜ பதவியை விரும்பாதே வ்யாபாரியின் நிலைமையை விரும்பி பக்தியை ஸாதநமாகக் கொள்ளுமவர்கள் அப்படியே கொள்க.

தோட்டம் சமைத்து மாம்பழம் பயிர் செய்வார்களில் அப்பழங்களை அரைகுறை விலைக்கும் அதிக விலைக்கும் விற்பாருமுண்டு; விற்காதே ஸ்வயம் போக்யமாகப் புஜிப்பாருமுண்டு. ஒரு மாம்பழந்தானே ஒருத்தனுக்கு உபாயமாயும் ஒருத்தனுக்கு உபேயமாயும் ஆகாநின்றது. விற்று உபாயமாகக் கொள்ளுமவன் அதமனாகவும் தரித்ரனாகவும், விற்காதே உபேயமாகக் கொள்ளுமவன் உத்தமனாகவும் உயர் செல்வனாகவும் பெயர் பெறுவான். அதுபோலே பக்திக்கு உபாயத்தன்மையும் உபேயத்தன்மையும் உண்டாயிருக்கச்செய்தே உபேயத்தன்மையைக் கொண்டு [அதாவது—அதனையே பலனாகக்கொண்டு] உத்தமாதிகாரிகளின் திரளில் புகாதே உபாயத்வாகாரத்தைக்கொண்டு கீழ்வகுப்பில் புக நினைப்பாரை ஆர்கொல் விலக்குவார்?

"வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்று மிதுவல்லால், மாரி யார் பெய்கிற்பார் மற்று" என்ற இரண்டாந் திருவந்தாதிப் பாசுரமும் நோக்கத் தக்கது. மேட்டு நிலங்களை நாம் பள்ளமாக

வெட்டி வைப்பது மழை பொழிவதற்கு ஸாதந மன்றாகிலும், எப்போதேனும் மழை பெய்தால் அந்த நீரைத் தாங்கிக்கொள்வதற்கு உறுப்பாவது போல, நாம் செய்யும் நற்கிரிசைகள் பகவத் ப்ராப்திக்கு ஸாதனமல்லவாகிலும் எப்போதேனும் பகவானுடைய அருள் வெள்ளம் நம்மேல் பெருகப்புக்கால் அதைத் தாங்கிக் கொள்ள நமது நற்கிரிசைகள் உறுப்பா யிருக்குமத்தனை.

இப்பாட்டின் முதலடியில் இந்திரியங்கள் ஐந்தையும், இரண்டா மடியில் பஞ்ச பூதங்களையும் சொல்லி யிருப்பதன் கருத்தாவது — இந்திரியங்களோடு கூடினதாய்ப் பஞ்ச பூதங்களால் இயன்றதான சரீரத்தைச் சொன்னபடி. சரீரத்தை மோக்ஷ ஸாதநமாக ஆரும் சொல்லவில்லையே யெனில்; அவியாத ஞானம் என்பதனால் சொல்லப்பட்ட பக்திரூபாபந்ந ஜ்ஞானமானது கரண களேபர ஸாத்யமாகையாலே கரணகளேபரங்களுக்கும் பரம்பரயா மோக்ஷ ஸாதநத்வம் சொல்லக்கூடு மென்றுணர்க.

அக்நிஹோத்ரம் முதலிய வேள்விகளும் விவேகம் தயை ஸத்யம் முதலிய நற்குணங்களாகிற நல்லறமும் ஸாக்ஷாத் மோக்ஷ ஸாதனமாகக் கொள்ளப்படுகின்றனவோ வென்னில்; அவையும் பக்தி உண்டாகி வளர்வதற்குக் காரணங்களாக சாஸ்த்ரங்களில் சொல்லப்படுகையாலே அவற்றுக்கும் பரம்பரயா மோக்ஷ ஸாதநத்வமே சொல்லக்கூடும்.

ஆகவே, இப்பாட்டில் அவியாத ஞான மென்று சொல்லப்பட்ட பக்தி யொன்றே மோக்ஷோபாயமாக வழங்கக் கூடியது. எம்பெருமானுக்கே நிரபேக்ஷ உபாயத்வம் கொள்ளுகிற ஆழ்வார் திருவுள்ளத்தாலே அந்த பக்தி யுபாயத்வமும் கழிக்கப்படுகின்றது. என்பரே! என்ற ஏகாரம் இதனைக் காட்டும்.

இனி, என்பரே என்றவிடத்து ஏகாரத்தை அசையாகக் கொண்டு 'பகவத் ப்ராப்திக்கு பக்தியை உபாய மென்பர்' என்று சொல்லிவிடுவதாக உரைப்பாரு முண்டு. இயல்வு—உபாயம். (கஉ)

இயல்வாக வீன்துழா யானடிக்கே செல்ல *
முயல்வா ரியலமரர் முன்னம் *—இயல்வாக
நீதியா லோதிநியமங்க ளாற்பரவ *
ஆதியாய் நின்றா ரவர். (கங)

| | |
|---|---|
| ஈன் துழாயான் அடிக்கே செல்ல இயல்வு ஆக | அழகிய திருத் துழாய் மாலையை அணிந்துள்ள எம்பெருமானது திருவடிகளில் கிட்டுதற்குத் தகுதியாக |
| முன்னம் | அநாதிகாலமாக |
| முயல்வார் | முயற்சிசெய்பவர்கள் |
| (யாரென்றால்) | |
| இயல் அமரர் | யோக்யதையுள்ள நித்யஸூரிகளே யாவர்; |
| (நம்போன்றவர்களும் அவனை இழக்க வேண்டாதபடி) | |
| இயல்வு ஆக | பொருத்தமாக |
| நீதியால் ஓதி | முறைமை தவறாமல் வேதத்தை அத்யயனம் செய்து |
| நியமங்களால் பரவ | (அந்தவேதத்தின் பொருளை உணர்ந்து அதிற் சொன்ன) நியமங்களோடே தன்னைத் துதி செய்யுமாறு |
| அவர் | அந்த எம்பெருமான் |
| ஆதி ஆய் நின்றார் | முற்பட்டு ஸித்தராக இருக்கின்றார். |

*** [இயல்வாக.] எம்பெருமான் திருவடிகளிலே நித்ய கைங்கர்யம் செய்வதற்குத் தக்க யோக்யதை யுடையவர்கள் நித்யஸூரிகளேயன்றோ, ஸம்ஸாரிகளான நமக்கெல்லாம் அப்பெருமானைப் பணிந்து உய்தற்கு உரிய விரகு உண்டோ? என்று ஒரு சங்கை உதிக்கக்கூடுமே; அதற்கு உத்தரமாக அவதரித்த பாசுரம் இது. நித்யஸூரிகள் தாம் எம்பெருமான் திருவடிகளிலே ஆழ்ந்திருப்பவர்; இருக்கட்டும்; ஸம்ஸாரிகளுக்கு பகவத் ஸமாச்ரயண யோக்யதையே கிடையாதென்று கொள்ள இடமில்லை. ஸம்ஸாரிகளும் வேதங்களையோதி அவற்றின் பொருள்களைத் தெரிந்துகொண்டு படிப்படியாகத் திருந்தி எம்பெருமானை வந்து கிட்டும்படியாக அப்பெருமான்தானே மூல ஸுக்ருதமாக அமைந்திரா நின்றானென்கிறார். இப்படி யருளிச்செய்வதன் கருத்து யாதெனில்; எம்பெருமானை யடைவதாகிற காரியம் சேதநருடைய தலையிலே கிடப்பதன்று; 1. "எதிர் சூழல்புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள் செய்ய, விதி சூழ்ந்ததாலெனக்கேலம்மான் திரிவிக்கிரமனையே" என்கிறபடியே நெடுநாளே பிடித்து ஸம்ஸாரியைப் பெறுவதற்கு அப்பெருமான்தானே பலவகையான

1. திருவாய்மொழி 2-7-6.

க்ருஷிகளைப் பண்ணிக்கொண்டிருக்கிறான் என்றவாறு. "ஆதியாய் நின்றாரவர்" என்றதன் கருத்து இதுவே. ஸ்ரீ வேதாந்த தேசிகனும் இதனையே திருவுள்ளம்பற்றி ஸ்ரீ ரஹஸ்யத்ரய ஸாரத்திலே "நிதாநம் தத்ராபி ஸ்வயமகிலநிர்மாணநிபுண: = நிதாநம் தத்ராபி ஸ்வய மகில நிர்மாண நிபுண:" என்றருளிச் செய்தாரென்றுணர்க. ... ... ... ... (கங)

அவரவர் தாந்தா மறிந்தவா றேத்தி *
இவரிவ ரெம்பெருமா னென்று *—சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர் * உலகளந்த
மூர்த்தி யுருவே முதல். (கச)

| | |
|---|---|
| அவர் அவர் | ராஜஸரும் தாமஸருமாகிய சில அதிகாரிகள் |
| தாம் தாம் அறிந்தஆறு ஏத்தி | (தங்களுடைய ரஜஸ்தமோ குணங்களுக்குத் தக்கபடி) தாங்கள் எப்படி அறிந்திருக்கிறார்களோ அப்படி வாய்விட்டுப் புகழ்ந்து |
| இவர் இவர் எம்பெருமான் என்று | தாங்களறிந்த சில தேவதாந்தரங்களையே கடவுளாகச் சொல்லிக்கொண்டு |
| சுவர்மிசை சார்த்தியும் | சுவரிலே சித்திர ரூபமாக எழுதியும் |
| வைத்தும் | பிரதிமையாக ஆங்காங்கு ஸ்தாபித்தும் |
| தொழுவர் | தொழுகின்றார்க (எவர் என்ன செய்தாலும்) |
| உலகு அளந்த மூர்த்தி | (எல்லாத் தெய்வங்களும் தன் காலின்கீழே அடங்கும்படி) உலகங்களை யளந்த ஸ்வாமியினுடைய |
| உருவே | திருமேனி யொன்றே |
| முதல் | முக்கியமானது. |

* * *—[அவரவர்தாந்தாம்.] கீழ்ப்பாட்டில் "ஆதியாய் நின்றாரவர்" என்றதை விவரித்துப்பேசுகிறது இப்பாட்டு. உலகத்திலுள்ள ஜனங்கள் ஒவ்வொரு தெய்வங்களைப் பரதேவதையாகக்கொண்டு தாம்தாம் கற்ற சொற்களைக்கொண்டு அத்தெய்வங்களைத்துதித்து விக்ரஹாராதநம் விசேஷமென்றறிந்து சுவர்

களிலே சித்திரரூபமாக அத்தெய்வங்களை யெழுதியும் லோஹமய பிம்பங்களாக ஆலயங்களில் பிரதிஷ்டைசெய்தும் தொழா நின்றார்களாகிலும், அம்மன் பிடாரி முதற்கொண்டு சிவன் முடிவாகவுள்ள தெய்வங்களுக்கெல்லாம் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே பிரதான தேவதையாம் என்றாராயிற்று. கீழ்ப்பட்ட தெய்வங்களெல்லாம் எம்பெருமானை ஆச்ரயித்தே ஸத்தை பெறவேண்டும்படி அவனே முழுமுதற் கடவுள் என்கை.

அவரவர் என்ற சுட்டு—அவர்களின் குணக்குறைவைக்காட்டும். ஸத்வகுண பூர்த்தியில்லாத ஜனங்களெல்லாம் என்றபடி. தாந்தாமறிந்தவாறாவது—சாஸ்த்ரங்களையும் சிஷ்டாசாரங்களையுங் கொண்டு அறியகில்லாமல் தங்களுடைய ராஜஸ தாமஸபுத்திகளுக்கு எட்டியவாறு.

இப்பாட்டில் ஸ்ரீமந் நாராயணனை ‘உலகளந்தமூர்த்தி’ என்ற திருநாமத்தால் குறிப்பிட்டது கருத்தோடுகூடியதாம்; புருஷோத்தமனான எம்பெருமானைவிட்டு க்ஷுத்ர தெய்வங்களைப்பணிகின்ற ஸம்ஸாரிகளோடு அத்தெய்வங்களோடு வாசியின்றியே எல்லாரும் தன்னுடைய திருவடியின் கீழே துகையுண்ணுமாறு உலகங்களை வியாபித்தவனென்று சொல்லுமாற்றால் இவனே முழுமுதற் கடவுளென்று மூதலித்தாராய்த்து. மூர்த்தி—ஸ்வாமி. ... (கச)

முதலாவார் மூவரே அம்மூவ ருள்ளும் *
முதலாவான் மூரிநீர் வண்ணன் *—முதலாய
நல்லா னருளல்லால் நாமநீர் வையகத்துப் *
பல்லா ரருளும் பழுது. (கரு)

(உலகத்தில் பலபல தெய்வங்கள் வழங்கப்பட்டாலும்)

மூவரே — (ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு உரியவரான) பிரமன் விஷ்ணு ருத்ரன் என்கிற மூவருமே

முதல் ஆவார் — முக்கியரான தேவர்களாவர்;

அம்மூவர் உள்ளும் — அந்த த்ரிமூர்த்திகளுக்குள்ளே

மூரி நீர் வண்ணன் — கடல் வண்ணனாகிய திருமாலே

முதல் ஆவான் — தலைவனாயிருப்பவன்;

| | | | |
|---|---|---|---|
| முதல் ஆய | உலகுக்கெல்லாம் காரண பூதனும் | நாமம்நீர் வையகத்து | கடல்சூழ்ந்த இப்பூமியில் |
| நல்லான் | நற்குணங்களமைந்தவனுமான அப்பெருமானுடைய | பல்லார் | (அத்திருமால் தவிர மற்றும்) பலருடைய |
| அருள் அல்லால் | கிருபையானது நன்மையை விளைக்குமே யொழிய | அருளும் | தயையும் |
| | | பழுது | பயனற்றதாம். |

* * *—[முதலாவார்.] கீழ்ப்பாட்டில் "உலகளந்தமூர்த்தி யுருவேமுதல்" என்றருளிச்செய்த ஆழ்வாரை நோக்கிச் சிலர் 'கீழ்ப்பட்ட தெய்வங்களென்று உம்மால் கூறப்படுகின்ற தெய்வங்களும் தம்மைத் தொழுகின்றவர்களுக்குப் பலன்களையளிக்கக் காண்கிறோமே; அவர்களது அருளைப் பலரும் பெற்று வாழ்கின்றனரன்றோ' என்றுகூற, அவர்களுக்கு விடையளிக்கிறாரிப்பாட்டில். தெய்வம் தெய்வமென்று நாட்டிலே பலர் வழங்கப்படினும், படைத்தல் காத்தல் அழித்தல் என்கிற மூன்று தொழில்களுக்கும் கர்த்தாக்களாக ஏற்பட்ட ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரன் என்ற மூவருமே முதன்மைபெற்ற தேவர்களாவார்; அந்த த்ரிமூர்த்திகளுக்குள்ளே கடல் வண்ணனாகிய ஸ்ரீமந்நாராயணனே தலைமை பெற்றிருப்பவன். ஸகல ஜகத்காரண பூதனாய் எல்லாரிடத்திலும் வாத்ஸல்யம் நிறைந்தவனான அந்தத் திருமாலின் திருவருள் நன்மையைத்தருமேயொழிய வேறு எந்த தெய்வத்தினருளும் சாச்வதமான நன்மையை நல்கமாட்டாது; அவ்வருளைப்பெற நினைப்பது வீணேயாகும் என்றாராயிற்று. க்ஷுத்ர தெய்வங்களின் அருள் க்ஷுத்ர பலன்களுக்கே காரணமாவதனாலும் பரமபுருஷனுடைய பேரருள் ஒப்புயர்வற்ற அழிவில்லாத பேரின்பத்தைப் பெறுவிக்கக் காரணமாவதனாலும் 'முதலாய நல்லானருளே நன்று, பல்லாரருளும் பழுது' என்னத்தட்டில்லையென்க.

"முதலாவார் மூவர்" என்றே பெரும்பான்மையாகப் பாடம் வழங்கிவருமாயினும், அதில் தளைதட்டுதலாலும் பெரியோர்களின் பாடமன்றாகையாலும் 'மூவரே' என்ற பாடமே கொள்ளப்பட்டது. சிலர், 'மூவர்' என்றே பாடங்கொண்டு "அம்மூவருள்ளும்"

என்றவிடத்து "அம்மூவரினுள்ளும்" என்று கொண்டால் வெண்டளைக்குச் சேர்ந்துவிடுகிறதென்பர்; ஆன்றோரருளிச் செயல்களில் நம்முடைய ஸ்வாதந்திரியத்தை உபயோகித்தல் உரியதன்றென்றுணர்க.

மூரிநீர் = மூரியென்று பெருமையும் வலிமையுமாம். நாமநீர் = 'நாமம்' என்ற வட சொல் பேர் என்று பொருள்படும்; பேர் என்றால் பெரியது என்றபடியாம்; ஆகவே இங்கு இச்சொல் லக்ஷித லக்ஷணையால் பெரிய நீர் என்று பொருள்படும். வில்லிபுத்தூரார் பாரதத்தில் புத்திசேனனைக் குறிக்கவேண்டுமிடத்து, "திங்கள் சேர் பெயரினான்" என்றதுபோல. (திங்கள்—சந்திரன்; சந்திரனுக்குத் தமிழிலே மதியென்று பெயர்; மதியென்ற வடசொல் புத்தியென்று பொருள்படுமாதலால் புத்திசேனனையுணர்த்திற்றும்.) இனி வேறு வகையாகவும் பொருள் கூறுவர். ... (கரு)

பழுதே பலபகலும் போயினவென்று * அஞ்சி
அழுதேன் அரவணைமேற் கண்டு—தொழுதேன் *
கடலோதம் காலலைப்பக் கண்வளரும் * செங்கண்
அடலோத வண்ண ரடி. (கசு)

| | |
|---|---|
| கடல் ஓதம் | கடலலையானது |
| கால் | தன் திருவடி வாரத்திலே |
| அலைப்ப | (துடைதட்டி உறங்கச்செய்வது போல) வீச |
| கண்வளரும் | யோகநித்திரை செய்கின்ற |
| செம் கண் | செந்தாமரை போன்ற திருக் கண்களையுடைய வரும் |
| அடல் ஓதம் வண்ணர் | அநுபவிக்க இழிந்தவர்களை அநுபவிக்க வொட்டாமல் அடர்க்கின்ற ஸௌந்தரிய மாகிற அலைகளோடு கூடிய வடிவை யுடையவருமான பெருமானுடைய |
| அடி | திருவடிகளை |
| அரவு அணை மேல் | சேஷசயனத்தின் மீது |
| கண்டு தொழுதேன் | கண்ணாரக்கண்டு (இன்று) ஸேவிக்கப்பெற்ற அடியேன் |
| பல பகலும் | "கீழ்க்கழிந்த கால மெல்லாம் |
| பழுதே போயின என்று | (இவ்விதமாகக் கழியாமல்) வீணாகக் கழிந்தனவே!" என்று |
| அஞ்சி அழுதேன் | மிகவும் சோகமுற்றுக் கிடக்கின்றேன். |

* * *—[பழுதேபலபகலும்.] கீழ்ப்பாட்டில் "முதலாய நல்லானருளல்லால்...பல்லாரருளும் பழுது" என்றருளிச்செய்த ஆழ்வார் அவ்வெம்பெருமானுடைய அருள் தம்மிடத்தில் நெடுங்காலம் பயன்படாதிருந்ததை நினைத்து, 'அந்தோ! நெடுங்காலம் பாழாய்ப் போய்விட்டதே!' என்று அநுதாபப்படுகிறாரிதில்.

இப்பாட்டில், இறந்தகாலத்தைப்பற்றி வருத்தமும் நிகழ்காலத்தைப்பற்றி மகிழ்ச்சியும் எதிர்காலத்தைப்பற்றி அச்சமும் ஆக மூன்றுகாலங்களைப்பற்றின மூன்று விஷயங்கள் கூறப்பட்டுள்ளன. (எங்ஙனே யெனின்?) "கடலோதம் காலலைப்பக் கண்வளரும் செங்கணடலோத வண்ணரடியை அரவணை மேல் கண்டு (இன்று) தொழுதேன்" என்றமையால் நிகழ்காலத்தில் பகவத்ஸேவை வாய்க்கப்பெற்ற ஆநந்தம் வெளியிடப்பட்டதாயிற்று; "பழுதே பலபகலும் போயினவென்று அழுதேன்" என்றமையால், கீழ்க்கழிந்த அநாதிகாலமெல்லாம் இவ்விதமாக ஆநந்தமயமாய்க் கழியவில்லையே யென்கிற வருத்தம் காட்டப்பட்டது; "அஞ்சியழுதேன்" என்றமையால்— இனிமேல் வரப்போகிற காலமும் கீழ்க்கழிந்த காலம்போலே வீணாகக்கழிந்து விடுமோ வென்கிற அச்சம் காட்டப்பட்டது.

"கண்டு தொழுதேன்" என்னப்பெற்ற பின்பு எதிர்கால நிலைமைக்கு அஞ்ச வேண்டுவானேன்? என்னில்; தாம் இருப்பது இருள் தருமாஞாலத்திலாகையாலே 1. "விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறுமைம்புலனிவை, மண்ணுளென்னைப் பெற்றால் என் செய்யா?" என்கிறபடியே இந்த லீலா விபூதியின் ஸ்வபாவத்தை நினைத்து அஞ்சாதிருக்க முடியாதிறே. பரமபக்தனுயிருந்த ப்ரஹ்லாதாழ்வானையுமன்றோ ஒருகால் எதிரியாக்கிற்று இம்மண்ணுலகம். 2. "ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன்" என்றாரே திருமங்கையாழ்வாரும்.

கீழ் ஆறும்பாட்டில் "ஒன்று மறந்தறியேன் ஓதநீர்வண்ணனை நான்" என்றும் "அன்று கருவரங்கத்துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்" என்றும் கர்ப்பவாஸகாலம் முதற்கொண்டே

1. திருவாய்மொழி 7—1—6.
2. பெரிய திருமொழி 11—8—1.

தாம் பகவத் விஷயப்ரவணராயிருப்பதாகச் சொல்லிக்கொண்ட இவ்வாழ்வார் இங்கே * பழுதே பலபகலும் போயினவென்று அழுவதாகச் சொல்லிக்கொள்வதேன் என்னில்; இப்பிறவிக்கு முன்னே * மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து போந்த காலங்களில் நாள்கள் பலவும் பழுதாயினவேயென்று வருந்துகிறபடி. இப்பிறவியிலும் ஆதியேபிடித்து இங்ஙனே பாசுரம்பேசி அநுபவிக்க ப்ராப்தியிருந்தும் கீழே பலநாள்கள் பாழாயினவேயென்று வருந்துவதாகக் கொள்ளவுமாம்.

பேயாழ்வார் "1. சென்றநாள் செல்லாத செங்கண்மா லெங்கண்மாலென்றநாள் எந்நாளும் நாளாகும்" என்கிறார்; (அதாவது) நிகழ்கால நிலைமை நன்றாயிருக்கப்பெற்ற ஆநந்த மிகுதியினால் இறந்தகால எதிர்கால நிலைமைகளிற் கவலையற்று எல்லாக்காலமும் எனக்கு நல்லகாலமே யென்றார்; அஃதொரு சொற்சமத்கார விசேஷமென்க.

அடலோத வண்ணர் = ஓதம் என்று கடலுக்கும் அலைக்கும் பெயர்; இவ்விடத்தில் அலை என்னும் பொருள் விவக்ஷிதம்; அதாவது திருமேனியிலே பரவுகின்றலாவண்ய தரங்கங்களைச் சொன்னபடி. அநுபவிக்க வருமவர்களை அடர்த்துத்தள்ளுகிற லாவண்ய தரங்கங்களோடு கூடிய திருமேனியையுடையவர் என்றதாயிற்று. ... ... ... ... (கசு)

அடியும் படிகடப்பத் தோள்திசைமேற் செல்ல *
முடியும் விசும்பளந்த தென்பர் *—வடியுகிரால்
ஈர்ந்தா னிரணியன தாகம் * இருஞ்சிறைப்புள்
ஊர்ந்தா னுலகளந்த நான்று. (கஎ)

| | | | |
|---|---|---|---|
| இரணியனது | ஹிரண்யாஸுரனுடைய | இரு சிறை புள் ஊர்ந்தான் | பெரிய சிறகையுடைய கருடனை ஏறிநடத்துபவனுமாகிய எம்பெருமான் |
| ஆகம் | மார்வை | | |
| வடி உகிரால் | கூர்மையான நகங்களாலே | உலகு அளந்த நான்று | உலகளந்த காலத்திலே |
| ஈர்ந்தான் | கிழித்தெறிந்தவனும் | அடியும் | திருவடி |

1. மூன்றாந்திருவந்தாதி—17.

| | | | |
|---|---|---|---|
| படி கடப்ப | பூமியை அளந்துகொள்ள | அளந்தது | அளவு படுத்திக் கொண்டது |
| தோள் | திருத்தோள்கள் | | |
| திசைமேல் செல்ல | திக்குகளிலே வியாபிக்க | என்பர் | என்று சொல்லுவர்கள். |
| முடியும் | கிரீடம் | (ஐயோ! நான் நேரில் ஸேவிக்கப் பெறவில்லையே. !!) | |
| விசும்பு | மேலுலகத்தை | | |

* * *—[அடியும்படிகடப்ப.] கீழ்ப்பாட்டில் "பழுதே பல பகலும் போயின" என்றருளிச் செய்ததையே விவரிக்கிறது இப்பாட்டு. இப்போது ஒரு மனிதனாகப் பிறந்திருக்கிற நான் திடீரென்று பிறந்துவிடவில்லை; ஜீவாத்மாவுக்குப் புதிதாக ஸ்ருஷ்டியென்பது இல்லையாகையால் "மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து" என்கிறபடியே அநாதிகாலமாகவே பலபல பிறவிகள்பெற்று ஸம்ஸாரியாய் வந்துகொண்டிருக்கிறேன்; எம்பெருமான் உலகளந்தருளின காலத்திலும் நான் ஏதோ ஒரு ஜந்துவாகப் பிறந்திருந்தவனேயொழிய அன்று நான் இல்லாமலிருக்கவில்லை; அப்போது நான் விவேகியாயிருந்து அந்த திவ்யசரிதையிலே ஈடுபட்டிருந்தேனாகில் அப்போதே இந்த ஸம்ஸாரத்தில் நின்றும் விடுபட்டு முக்தனாய்ப் போயிருப்பேன்; அன்று நான் அறிவிலியாய்க்கிடந்து வாணாளை வீணாளாகப் போக்கிவிட்டேன்; ஆகவே பழுதே பலபகலும் போயினவென்று கதறியழவேண்டியதாயிற்று—என்பதே இப்பாட்டின் உட்கருத்தாகும். "முடியும் விசும்பளந்தது என்பர்" என்ற சப்தஸ்வாரஸ்யம் நோக்கத்தக்கது. என்பர் என்கையாலே—உலகளந்தவாற்றை நான் இன்று பிறர்சொல்லக் கேட்கவேண்டியதாயிற்றேயொழிய நேரிலிருந்து ஸேவிக்கப் பெறவில்லையே யென்கிற அநுதாபம் நன்கு விளங்குமிறே.

கீழ் இரண்டாம்பாட்டில் "என்று கடல் கடைந்தது எவ்வுலகம் நீரேற்றது" என்று புராதன சரிதங்களெல்லாம் ப்ரத்யக்ஷம் போலப் பேசப்பட்டிருந்தாலும், க்ரமமாக அவை நடந்தகாலத்திலே அவற்றைத் தாம் ஸேவிக்கப்பெறவில்லையே என்கிற வருத்தம் ஸம்பாவிதமேயன்றோ.

அடியும்படிகடப்ப=1. "கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே" என்றாற்போல அடியவர்களுக்கு சிரோ பூஷணமாக அமையவேண்டிய திருவடிகளைக்கொண்டு கல்லும் கரடுமான உலகங்களையளப்பதே! என்கிற வருத்தமும், [தோள் திசைமேல் செல்ல] பிராட்டியை அணைக்கவேண்டிய திருத்தோள் களைக்கொண்டு திசைகளின்மேல் வியாபரிப்பதே! என்கிற வருத்த மும், [முடியும் விசும்பளந்தது] எங்கள் கண்முன்னே விளங்கி 2. "முடிச்சோதியாய் உனது முகச்சோதிமலர்ந்ததுவோ?" என்று நாங்கள் பாசுரம் பேசவேண்டும்படியான திருமுடியை அஹங்காரி களும் பகவத்விஷயச்சுவடறியாதவர்களுமான தேவதைகளுள்ள விடங்களிலே நிமிர்ப்பதே! என்கிற வருத்தமும் உள்ளுறையும்.

பின்னடிகளின் கருத்தையும் ஆழ்ந்து நோக்கினால், இரணிய னைப்பிளந்து ப்ரஹ்லாதனுக்கு அருள்செய்தகாலத்திலும், ஸ்ரீ கஜேந்திராழ்வானைக் காத்தருளப் பெரியதிருவடியின்மீதேறி அரைகுலையத் தலைகுலைய விரைந்தோடி வந்தகாலத்திலும் நேரில் ஸேவித்து வாழா தொழிந்தேனே! என அநுதாபப்படுவதும் தோன்றும். ... ... .... (கள)

நான்ற முலைத்தலை நஞ்சுண்டு * உறிவெண்ணெய்
தோன்றவுண் டான்வென்றி சூழ்களிற்றை —ஊன்றிப் *
பொருதுடைவு கண்டானும் புள்வாய் கீண்டானும் *
மருதிடைபோய் மண்ணளந்த மால். (கஅ)

| | | | |
|---|---|---|---|
| | (பேய்ச்சியான பூதனையினுடைய) | வெண்ணெய் | வெண்ணெயை(க் களவு செய்து) |
| நான்ற முலைத் தலை | சரிந்து தொங்குகின்ற முலையிலுள்ள | தோன்ற | இச்செயல் எங்கும் ப்ரஸித்தமாம்படி |
| நஞ்சு | விஷத்தை | உண்டான் | அமுது செய்தவனாகி |
| உண்டு | (அவள் பிணமாய் விழும்படி) அமுதுசெய்து | வென்றி | ஜயத்தையுடைய |
| உறி | உறிகளிலே வைத்த | சூழ் | எதிர்ப்பவர்களைத் தப்பாமல் தன் கையில் அகப்படுத்திக் கொள்ளவல்ல |

1. திருவாய்மொழி 4—3—6. 2. திருவாய்மொழி 3—1—1.

| | |
|---|---|
| களிற்றை | (கம்ஸனுடைய) யானையை |
| ஊன்றி பொருது | எதிர்நின்று யுத்தம் செய்து |
| உடைவு கண்டானும் | அழித்தொழித்தவனும் |
| புள் வாய் கீண்டானும் | பகாசுரனுடைய வாயைக் கிழித்துப் போகட்டவனும் (யாவனெனில் ?) |
| மருது இடை போய் | இரட்டை மருத மரங்களின் நடுவே தவழ்ந்து சென்றவனாய் |
| மண் அளந்த | உலகங்களை அளந்து கொண்டவனை |
| மால் | எம்பெருமானே யாவன். |

* * *—[நான்றுமூலைத்தலை.] இப்பாசுரமும் கீழ்ப்பாசுரம் போலே இழந்தநாளைச் சொல்லி அநுதாபப்படுவதாம். ஸ்ரீ கிருஷ்ணனாய்த் திருவவதரித்துப் பேய்ச்சியை முலையுண்கிற வியாஜத்தாலே முடித்தும், நவநீதம் முதலியவற்றைக்களவாடி அமுது செய்தும் குவலயாபீடமென்கிற கம்ஸனது மதயானையை முடித்தும் பகாஸுரனை வாய்பிளந்தும் இரட்டை மருதமரங்களை முறித்துத்தள்ளியும் இப்படி பல்வகையான சிறுச்சேவகங்களைச் செய்தருளின காலத்திலும் ஸேவிக்கப்பெறுதே இழந்தேனே! என்கிறார்போலும். இழந்ததற்கு அநுதாபப்படுவதாகப் பாசுரத்தில் வாய்ச்சொல் இல்லையாயினும் கீழ்ப்பாசுரங்களின் ஸந்தர்ப்பத்தை நோக்குங்கால் இழந்தநாளைக்கு அநுதாபம்தோன்றவே இப்பாசுரமருளிச்செய்வதாகக் கொள்ளலாம். “இடக்கை வலக்கை அறியாதாரும் வாழும்படி இடைக்குலத்திலே வந்து பிறந்தவிடத்திலும் இழந்தேனிறே என்று சோகிக்கிறார்” என்றார் முன்னோர்களும். இனி, கிருஷ்ணாவதார சரித்திரங்கள் சிலவற்றைச்சொல்லி ஆநந்தமாகப் போதுபோக்குகிறார் எனினும் குற்றமில்லை.

**களிற்றையூன்றிப்பொருத** வரலாறு :— வில்விழாவென்கிற வியாஜம் வைத்துக் கம்ஸனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீ கிருஷ்ண பலராமர்கள் கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில், அவனது அரண்மனைவாயில் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை பாகனால் தூண்டப்பட்டுச் சீறிவர, அந்த யாதவவீரர் அதனை யெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பது

போல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து அந்த யானையை உயிர்தொலைத்துவிட்டு உள்ளேபோயின ரென்பதாம்

புள்வாய்கீண்ட வரலாறு:—கண்ணபிரானைக் கொல்லுமாறு கம்ஸனால் ஏவப்பட்ட ஓரஸுரன் கொக்கின் உருவங்கொண்டு சென்று யமுனைக்கரையில் கண்ணபிரானை விழுங்கிவிட, அவனது நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போல எரிக்கவே அவன் பொறுக்க மாட்டாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கால் குத்த நினைக்கையில் கண்ணன் அவன் வாயலகுகளைத் தனது இருகைகளினாலும் பற்றிக் கிழித்திட்டனனென்பதாம்.

மருதிடைபோன வரலாறு:—கண்ணன் குழந்தையாயிருக்குங் காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச்செய்யக் கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிட கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே சென்றபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப் பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில் முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேர புத்திரர் இருவரும் சாபம்தீர்ந்து சென்றனர். இந்தக் குபேரபுத்திரர்கள் முன்பு ஒருகாலத்தில் பல அப்ஸரஸ் ஸ்த்ரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்துகொண்டிருக்கையில் நாரதமுனிவர் அங்கு எழுந்தருள மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடையெடுத்து உடுத்து நீங்க, இந்த குபேரபுத்திரர்கள் மாத்திரம் மதுபான மயக்கத்தினால் வஸ்திரமில்லாமலேயிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வணங்கி வேண்டிக்கொண்டதற்கு இரங்கி 'நெடுங்காலஞ் சென்றபின்பு திருமால் உங்களருகே நெருங்குங் காலத்தில் இவ்வடிவமொழிந்து முன்னையவடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடைகூறிப் போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான இவற்றில் கம்ஸனாலேவப்பட்ட இரண்டு அஸுரர்களும் ஆவேசித்துக்கிடந்தனரென்று சில புராணங்கள் கூறும்;

1. "ஒருங்கொத்த விணைமருத முன்னிய வந்தவரை" என்றும் 2. "பொய்ம்மாயமருதானவசுரரை" என்றும் பெரியாழ்வாரு மருளிச்செய்தார்.

"மருதிடைபோய் மண்ணளந்த" = உலகளப்பதற்கு முன்னே மருதிடைபோனான் என்று பொருளன்று; மருதிடைபோனது ஒருகாலத்திலும் மண்ணளந்தது ஒருகாலத்திலுமாகிலும் ஆழ்வாருடைய ஜ்ஞாநவைசத்யத்தாலே அநுஸந்தாந தோரணியில் முன்னது பின்னதென்கிற வாசியின்றியே எல்லாம் ஒன்றுசேர விளங்குகிறபடி.

"புள்ளின் வாய் கீண்டானும்" என்ற பாடமே பெரும்பாலும் வழங்கிவருகின்றது; இப்பாடத்தில் வெண்டளை பிறழ்வதால் "புள்வாய் கீண்டானும்" என்ற மேலையார்பாடத்தைப் பேணுதல் தகும். ... ... ... (கஅ)

மாலுங் கருங்கடலே! என்நோற்றாய்? * வையகமுண்
டாலி னிலைத்துயின்ற வாழியான் *—கோலக்
கருமேனிச் செங்கண்மால் கண்படையுள் * என்றும்
திருமேனி நீதீண்டப் பெற்று. (க௯)

| | | | |
|---|---|---|---|
| வையகம் | இவ்வுலகத்தை யெல்லாம் | மால் | எம்பெருமான் |
| உண்டு | (பிரளயம் கொள்ளாதபடி) திருவயிற்றி னுள்ளே வைத்து | கண்படையுள் | உறங்குகையில் |
| ஆலின் இலை | ஆலந்தளிரிலே | என்றும் | எப்போதும் |
| துயின்ற | சயனித்துக் கொண்டவனும் | திருமேனி | அவனுடைய திருமேனியை |
| ஆழியான் | திருவாழியை யுடையவனும் | தீண்ட பெற்று | ஸ்பர்சிக்கப்பெற்று |
| கோலம் கரு மேனி | அழகிய கறுத்த திருமேனியை யுடையவனும் | மாலும் | (அந்த ஸ்பர்ச ஸுகத்தினால்) மயங்கிக் கிடக்கிற |
| செம் கண் | செந்தாமரைக் கண்ணனுமான | கரு கடலே | கரிய ஸமுத்ரமே! |
| | | நீ என் நோற்றாய் | (இந்தப் பாக்கியம் உனக்குக் கிடைக்குமாறு) நீ என்ன நோன்பு நோற்றாயோ? |

1. பெரியாழ்வார் திருமொழி 1-5-5. 2. பெரியாழ்வார் திருமொழி 3-1-3

* * *—[மாலுங்கருங்கடலே.] * பழுதே பலபகலும் போயின வென்று அழுத ஆழ்வார், 'நம்மைப்போலே எல்லாரும் ஏமாந்தவர்கள்தானோ, அன்றி யாராவது எம்பெருமானை ஒரு நொடிப்பொழுதும் விடாது அநுபவிக்கப்பெற்றவர்களுண்டோ' என்று ஆராய்ந்துபார்த்தார்; 1. "மாகடல் நீருள்ளான்" என்கிறபடியே ஸமுத்ரத்தில் ஸர்வகாலமும் எம்பெருமான் திருக்கண் வளர்ந்தருளும் செய்தி நினைவுக்கு வந்தது; ஹா! ஹா!! ஸமுத்ர ராஜனுடைய பாக்கியமே பாக்கியம்; ஒரு நொடிப்பொழுதும் விடாமல் எம்பெருமானது திருமேனியைத் தீண்டப்பெற்றிருக்கிறானன்றோவென்றநுஸந்தித்து அக்கடல்தன்னையே நோக்கி 'இப்படி உனக்குப் பகவதநுபவம் நித்யமாய்ச் செல்லும்படி நீ என்ன நோன்பு நோற்றாய் கொல்?' என வினவுகின்றார். நீ நோற்ற நோன்பைச் சொல்லுவாயாகில் நானும் அந்த நோன்பை நோற்று இப்பேறுபெறுவேன்காண்-என்பது உள்ளுறை.

அஃறிணைப் பொருளான கடலை நோக்கிக் கேள்விகேட்பதாகப்பேசின இப்பாசுரத்தின் கருத்தாவது-எம்பெருமான் இடைவிடாது திருப்பாற்கடலில் சயனித்துக்கொண்டு * உறங்குவான் போல் யோகுசெய்யும் பெருமானாயிருக்கின்றானென்பதைக் காட்டுவதேயாமென்க.

**கருங்கடலே !**= திருப்பாற்கடல் வெண்ணிறமுள்ளதாயினும் கார்முகில் வண்ணனான எம்பெருமானுடைய நிழலீட்டாலே கருங்கடலாயிற்று. பட்டர் ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்திலே ஸ்ரீரங்க விமானத்தைப்பற்றிப் பேசும்போது "𑌅𑌪𑌿 𑌫𑌣𑌿𑌪𑌤𑌿𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌶𑍁𑌭𑍍𑌰𑌂, 𑌅𑌨𑍍𑌤𑌃𑌶𑌯𑌾𑌨𑍋𑌃 𑌮𑌰𑌕𑌤𑌸𑍁𑌕𑍁𑌮𑌾𑌰𑍈𑌃 𑌰𑌙𑍍𑌗𑌭𑌰𑍍𑌤𑍁𑌰𑍍𑌮𑌯𑍂𑌖𑍈𑌃। 𑌸𑌕𑌲𑌜𑌲𑌧𑌿𑌪𑌾𑌨𑌶𑍍𑌯𑌾𑌮𑌜𑍀𑌮𑍂𑌤𑌜𑍈𑌤𑍍𑌰𑌂 𑌪𑍁𑌲𑌕𑌯𑌤𑌿 𑌵𑌿𑌮𑌾𑌨𑌂 𑌪𑌾𑌵𑌨𑌂 𑌲𑍋𑌚𑌨𑍇 𑌨𑌃"= அபி பணிபதிபாவாத் சுப்ரம், அந்தச் சயானோ: மரகதஸுகுமாரை: ரங்கபர்த்துர் மயூகை:—ஸகல ஜலதிபாநச்யாமஜீமூதஜைத்ரம் புளகயதி விமாநம் பாவநம் லோசநே ந:" என்றருளிச் செய்தச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தகும். இதன் கருத்தாவது — திருவனந்தாழ்வானே ஸ்ரீரங்கவிமானமாக எழுந்தருளியிருக்கையாலே இவ்விமானம்

---

1. மூன்றாந்திருவந்தாதி—3.

வெண்ணிறமுள்ளதாயினும், உள்ளே சயனித்திருக்கின்ற ஸ்ரீரங்க நாதனுடைய மைவண்ணத்திருமேனி நிறத்தின் நிழலீட்டாலே கடலைப்பருகிக் கிளர்ந்த காளமேகத்தைவென்று விளங்குகின்றது .........என்பதாம்.

“கருங்கடலே!” என்றவிளியில்—பகவத் விரஹ வ்யஸநத்தாலே நான்மாத்திரம் உடம்பு வெளுத்திருக்க, நீ நித்யஸந்தோஷச் செருக்குத்தோன்ற மாமைபெற்று விளங்குகிறாயே! என்பதாகக் கருத்துத்தொனிக்கும்.

1. “உவர்க்குங் கருங்கடல் நீருள்ளான்” என்று உப்புக்கடலிலும் எம்பெருமான் உளனாகக்கூறுகையாலே இங்கு ‘மாலுங் கருங்கடலே!’ என்று உப்புக்கடலையே விளித்ததாகக்கொள்ளுதலும் கூடும்.

கண்படை—கண்வளர்ந்தருளுகிற நிலை; யோகத்துயில்நிலையெனக்கொள்க. ... ... ... (௧௯)

பெற்றார்தளை கழலப் பேர்ந்தோர் குறளுருவாய்ச் ✻
செற்றார் படிகடந்த செங்கண்மால் ✻—நற்றா
மரைமலர்ச் சேவடியை வானவர்கை கூப்பி ✻
நிரை மலர்கொண் டேத்துவரால் நின்று. (௨௦)

| | |
|---|---|
| பெற்றார் | மாதா பிதாக்களான வஸுதேவ தேவகிகளுடைய |
| தளை கழல | கால் விலங்கு அற்றுப்போம் படியாக |
| பேர்ந்து | திருப்பாற்கடலில் நின்றும்) பெயர்ந்து (க்ருஷ்ணனாக வந்து பிறந்தவனும்,) |
| ஓர் குறள் உரு ஆய் | விலக்ஷண வாமந வேஷத்தை யுடையனாய் |
| செற்றார் படி | ஆச்ரித விரோதியான மாவலி தன்னதென்று நினைத்திருந்த பூமியை |
| கடந்த | அளந்து தன்னுடைய தாக்கிக்கொண்ட |
| செம் கண் மால் | புண்டரீகாக்ஷனுடைய |
| நல் தாமரை மலர் சே அடியை | அழகிய தாமரை போற் சிவந்த திருவடிகளை |
| வானவர் | இந்திராதி தேவர்கள் |
| கைகூப்பி | அஞ்ஜலி செய்துகொண்டு |

1. மூன்றாந்திருவந்தாதி—37.

| | | | |
|---|---|---|---|
| நிரை மலர் கொண்டு நின்று | தொடைவாய்த் திருந்துள்ள பூக்களை ஸமர்ப்பித்துக்கொண்டு பணிந்து | ஆல் | ஐயோ! (அப்போது அவர்களைப் போலே தாமும் துதிக்கப்பெறவில்லையே யென்கிற துக்கத்தைக் காட்டுகிறது.) |
| ஏத்துவர் | துதிப்பர்கள்; | | |

* * *[—பெற்றார்தளைகழல.] கிருஷ்ணாவதார காலத்திலும் த்ரிவிக்ரமாவதார காலத்திலும் எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளை ஏத்தியிறைஞ்சப்பெற்ற பாக்கியசாலிகள் பலரிருந்தனரன்றோ; அப்பாக்கியம் அடியேனுக்கு வாய்க்கவில்லையே! என்று நோவுபடுகிறார்.

பெற்றார்தளைகழலப்போர்ந்து=ஸ்ரீகிருஷ்ணனாய்ப் பிறந்தபடியைச் சொல்லுகிறது. பெற்றார் என்று கண்ணபிரானுடைய மாதாபிதாக்களான வஸுதேவ தேவகிகளைச் சொல்லுகிறது; அவர்களுடைய தளை—விலங்கு; அது நேர்ந்தவிதமும் கழன்ற விதமும் யாதெனில்;—மதுராநகரத்தில் யதுவம்சத்தில் உக்ரஸேநன் என்றொரு தார்மிகன் அரசனாயிருந்தான்; அவனது மகன் கம்ஸனென்பான். இக்கஞ்சன் துஷ்டர்களில் தலைவனாயிருந்து கொண்டு பெரியோர்கட்குத் தீமையும் புல்லியர்கட்கு நன்மையும் செய்துகொண்டு தன்பலத்தினால் தனது தந்தையாகிய உக்ரஸேநனைச் சிங்காதனத்தினின்று தள்ளிவிட்டுத் தானே அரசாண்டுவருங் காலத்து, கம்ஸன் தனது உடன்பிறந்தவளாகிய தேவகியை யுக்த வயதில் வஸுதேவர்க்கு விவாஹம் செய்வித்து அவ்விவாஹம் முடிந்தபின் அவளை வஸுதேவர் மாளிகையிற் கொண்டு விடுகைக்காகத் தேரேற்றிக்கொண்டு தான் தேவகியிடத்தில் மிக்க அன்பு ஆதரத்துடன் ஸாரதியாயிருந்து தேரை நடத்திக்கொண்டு வரும் போது, ஆகாயத்தில், 'அறிவுகேடனே! நீ யாரிடத்தில் அன்பு பூண்டிருக்கின்றனையோ அந்தத் தேவகியின் எட்டாவது கர்ப்பம் உன்னைக் கொல்லப்போகிறது' என்றொரு அசரீரிவாக்குப் பிறக்க, அதனைக் கேட்ட கம்ஸன் மிகவும் திடுக்கிட்டு 'இனி நாம் தப்ப வழியாது?' என்று யோசித்து, 'இவள் பிழைத்திருந்தாலன்றோ இவளது எட்டாவது பிள்ளை நம்மைக் கொல்லப்போகிறது; இப்போதே இவளைக்கொன்றுவிடுவோம்' என்றுநிச்சயித்துக் கத்தியை

உருவிக்கொண்டு தேவகியைக் கொலை செய்யப்புக, வஸுதேவர் அவனுக்குப்பல தருமங்களையும் காலகதியையும் பரக்க உபதேசிக்கவும் அவன் அதை மதியாமல் ஒரே பிடிவாதமாய் நிற்க, பின் வஸுதேவர் 'அப்பா! உனக்கு இவள் கையால் சாவு இல்லை; இவளுடைய பிள்ளை கையினாலல்லவோ சாவு நேரிடப்போகிறது; இவளுக்குப் பிள்ளை பிறந்தவுடன் அப்பிள்ளைகளை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன், நீ அவற்றைக் கொன்றுவிடு' என்று சொல்ல; கம்ஸன் அதை யுக்தமென்று கொண்டு இத்தம்பதிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்திட்டான். சிலநாள் கழிந்தபின்பு தேவகி கர்ப்பந்தரித்துப் பிள்ளை பெற்றாள்; வஸுதேவர் அப்பொழுதே அப்பிள்ளையைக் கம்ஸனிடம் கொண்டுபோய்க்கொடுத்துவிட, அவன் அதைக்காலைப்பிடித்துக் கல்மேலறைந்து கொன்றுவிட்டான்; "மக்களறுவரைக் கல்லிடைமோத" என்றபடி இவ்வாறு ஆறுபிள்ளைகளைக் கொன்றான். எம்பெருமானால் நியமிக்கப்பட்ட யோகநித்திரை யென்னும் மாயை, நந்தகோபருடைய கோகுலத்திலிருந்த வஸுதேவ பத்தினியான ரோஹிணியின் வயிற்றிலிருந்த வாயுரூபமான ஆறுமாதத்துக் கர்ப்பத்தைக் கலைத்துவிட்டு வஸுதேவருடைய மற்றொரு பத்தினியான தேவகியின் வயிற்றிலிருந்த ஆதி சேஷாம்சமான கர்ப்பத்தைக் கொண்டுபோய் அந்த ரோஹிணியின் வயிற்றில் சேர்த்திட, இங்ஙனம் வஸுதேவ பத்தினிகளுள் தேவகியின் கர்ப்பத்தில் (ஏழாவது கருவாக) ஆறுமாஸமும், ரோஹிணியின் கர்ப்பத்தில் மற்றோர் ஆறுமாஸமுமிருந்து பலராமன் பிறந்தனன். பிறகு திருமால் தேவகியிடம் எட்டாவது கர்ப்பத்தில் ஸ்ரீ கிருஷ்ணனாயவதரிக்க அப்போதே வஸுதேவ தேவகிகளின் கால்விலங்கு இற்று முறிந்து விழுந்தது. "தந்தைகாலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட்கண் வந்த வெந்தை பெருமானார்" என்றும் "தந்தைகாலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல்" என்றும் திருமங்கையாழ்வாரு மருளிச்செய்தார்.

"பெற்றார் தளைகழலப் பேர்ந்தோர்குறளுருவாய்" என்றிருப்பதுகொண்டு கிருஷ்ணனாய்ப் பிறந்தபின் வாமநனாய்ப் பிறந்தானென்று கருதவேண்டா; ஒருகாலத்தில் கிருஷ்ணனாய்ப் பிறந்தவ

னும் மற்றொருகாலத்தில் வாமநனாய்ப் பிறந்தவனுமான ஸர்வேச்வரன் என்றபடி. அன்றி, "பெற்றார் தளைகழலப் பேர்ந்து" என்பதும் வாமநாவதாரச் செயலையே கூறுவதெனவும் கொள்வர்; அப்போது, பெற்றார் என்றது—தன்னை ஆச்ரயிக்கப் பெற்றவர்களென்றபடி; அவர்களுடைய தளையாவது—கருமபந்தம்; அது நீங்கும் படியாகப் பரமபதத்தில் நின்றும் வந்து ஓர் குறளுருவான படியைச் சொல்லிற்றாகக் கொள்க.

செற்றார்படி = செற்றாரென்று சத்ருக்களுக்குப் பெயர்; படி யென்று பூமிக்குப் பெயர்; ஆச்ரிதவிரோதிகளான மஹாபலி போல்வார் தங்களுடையதென்று அபிமாநித்திருந்த பூமியை என்றதாயிற்று.

ஈற்றடியில் "ஏத்துவராம் நின்று" "ஏத்துவரால் நின்று" என்பன பாடபேதங்கள். தங்கள் காரியத்தையே பார்ப்பவரான தேவர்களும் எம்பெருமானது திருவடிகளை ஏத்தியிறைஞ்சப் பெற்றார்களே! என்கிற ஆச்சரியமும் தொனிக்கும். ... (உ0)

நின்று நிலமங்கை நீரேற்று மூவடியால் *
சென்று திசையளந்த செங்கண்மாற்கு *—என்றும்
படையாழி புள்ளூர்தி பாம்பணையான் பாதம் *
அடையாழி நெஞ்சே! யறி. (உக)

| | |
|---|---|
| சென்று நின்று | (மஹாபலியின் யாகபூமியிற்) போய் நின்று |
| அம் கை | (தனது) அழகிய திருக்கையினால் |
| நீலம் நீரேற்று | பூமிதானம்வாங்கி |
| மூ அடியால் | மூன்றடிகளாலே |
| திசை அளந்த | எல்லாவிடங்களையும் ஸ்வாதீனப் படுத்திக்கொண்ட |
| செம் கண் மாற்கு | செந்தாமரைக் கண்ணனான எம்பெருமானுக்கு |
| என்றும் | எப்போதும் |
| ஆழி | சக்கரமானது |
| படை | ஆயுதமாயிருக்கும்; |
| புள் | கருடன் |
| ஊர்தி | வாஹனமாயிருப்பன்; |
| ஆழி நெஞ்சே | கம்பீரமான மனமே! |
| அறி | நான் சொல்வதை ஆராய்ந்து கொள்; |
| பாம்பு அணையான் பாதம் அடை | சேஷசயனனான அப்பெருமானுடைய திருவடிகளை அடைந்திடு. |

* * *—[நின்றுநிலமங்கை.] தம்முடைய திருவுள்ளத்தை நோக்கி எம்பெருமானுடைய ஸௌசீல்யகுணத்தை உரைக்கின்றார். முன்னடிகளில் உலகளந்த வரலாற்றை எடுத்துரைத்ததன் கருத்து—இப்படிப்பட்ட அவனது மேன்மையைப் பார்த்து நெஞ்சே! நீ பின்வாங்கவேண்டா என்றவாறு. நம்முடைய விரோதிகளைத் தலைதுணிப்பதற்கு அப்பெருமான் கையுந்திருவாழியுமாயிருப்பவன்; நாம் இடர்பட்டால் நம்முடைய கூக்குரல் கேட்டவுடனே சடக்கென ஓடிவந்து நம்மைக் காப்பதற்குப் பாங்காகப் பெரிய திருவடியை வாஹனமாகவுடையவன் என்கிறார் என்றும் படையாழி புள்ளூர்தி என்பதனால். ... ... .... (உக)

அறியு முலகெல்லாம் யானேயு மல்லேன் *
பொறிகொள் சிறையுவண மூர்ந்தாய் *—வெறிகமழும்
காம்பேய் மென்தோளி கடைவெண்ணெ யுண்டாயை *
தாம்பேகொண் டார்த்த தழும்பு. (உஉ)

| | | | |
|---|---|---|---|
| பொறி கொள் சிறை | பல நிறங்களையுங் கொண்ட சிறகுகளையுடைய | உண்டாயை | (களவிலே) அமுது செய்த வுன்னை |
| உவணம் | கருடாழ்வானை | தாம்பே கொண்டு | (கையில் கிடைத்ததொரு) தாம்பைக் கொண்டு |
| ஊர்ந்தாய் | ஏறி நடத்தும் பெருமானே! | ஆர்த்த | கட்டியதனாலுண்டான |
| காம்பு ஏய் மென் தோளி | மூங்கிலையொத்த மெல்லிய தோள்களையுடைய யசோதையினாலே | தழும்பு | காய்ப்பை (அறிபவன்) |
| கடை | கடையப்பட்டு | யானேயும் அல்லேன் | நானொருவனேயன்று; |
| வெறி கமழும் | பரிமளம்வீசப்பெற்ற | உலகு எல்லாம் அறியும் | உலகத்திலுள்ளாரெல்லாரும் அறிவர்கள். |
| வெண்ணெய் | வெண்ணெயை | | |

* * *—[அறியுமுலகெல்லாம்.] எம்பெருமானுடைய ஸௌலப்ய குணத்தையறியாதார் ஆருமில்லை யென்கிறார். "ஆங்கொரு

நாள் ஆய்ப்பாடி, சீரார்கலையல்குல் சீரடிச்செந்துவர்வாய், வாரார் வனமுலையாள் மத்தாரப்பற்றிக்கொண்டு, ஏராரிடைநோவ எத்தனையோர்போதுமாய்ச், சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை, வேரார் நுதல்மடவாள் வேறோர்கலத்திட்டு, நாராருறியேற்றி நன்கமைய வைத்ததனைப், போரார்வேற்கண் மடவாள் போந்தனையும் பொய்யுறக்கம், ஓராதவன்போல் உறங்கியறிவுற்றுத், தாரார் தடந்தோள்களுள்ளளவுங் கைநீட்டி, ஆராத வெண்ணெய் விழுங்கி அருகிருந்த, மோராருடமுருட்டி முன்கிடந்ததானத்தே, ஓராதவன்போல் கிடந்தானைக்கண்டவளும், வாராத் தான்வைத்தது காணாள் வயிறடித்திங்கு, ஆரார் புகுதுவார் ஐயரிவரல்லால், நீராமிது செய்தீரென்றோர் நெடுங்கயிற்றால், ஊரார்களெல்லாருங் காணவுரலோடே, தீராவெகுளியளாய்ச்சிக்கன ஆர்த்து அடிப்ப" (சிறிய திருமடல்) என்ற திருமங்கையாழ்வா ரருளிச்செயல் இங்கே பரமபோக்கியமாக அநுஸந்திக்கத்தக்கது.

வெண்ணெயுண்ட குற்றத்திற்காக யசோதைப்பிராட்டி உன்னைக்கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டிவைத்திருந்ததனால் உன்னுடம்பு தழும்பேறிக்கிடக்குஞ் செய்தியை நானொருவன் மாத்திரமேயோ அறிவேன், உலகமெல்லாமறியாதோ என்கிறார்.

ஸௌலப்யகுணம் பாராட்டத்தகுந்ததாயினும் பரத்வமுள்ள விடத்தில் அஃது இருந்தால்தான் பாராட்டத்தகும்; காஷ்டம், லோஷ்டம் முதலிய குழைச்சரக்குகள் ஸுலபமாயிருந்தாலும் அந்த ஸௌலப்யம் மெச்சத்தக்கதன்று, அங்குப் பரத்வமில்லாமையால். இப்படியே ஸௌலப்யத்தோடு கூடியிராத பரத்வமும் புகழத்தக்கதன்று; மேருமலையில் பரத்வமுள்ளதெனினும் அங்கே ஸௌலப்யமில்லாமையால் அப்பரத்வத்தைப் பாராட்டுவாரில்லை. ஆகையால், ஸௌலப்யத்தோடுகூடின பரத்வமும், பரத்வத்தோடுகூடின ஸௌலப்யமுமே போற்றத்தக்கனவாம்; இவையிரண்டுங்கூடி எம்பெருமானிடத்திலுள்ளன என்று காட்டவேண்டி, "பொறிகோள் சிறையுவணமூர்ந்தாய்!" என்கிறார். கருடனை வாஹனமாகக்கொண்டிருத்தல் பரத்வலக்ஷணமென்றுணர்க. வடமொழியில் கருடனுக்கு 'ஸுபர்ணஃ' என்றுபெயர்: அதுவே தமிழில் **உவணம்** எனச் சிதைந்துகிடக்கின்றது.

வெறிகமழும் என்பது வெண்ணெய்க்கு விசேஷணமாகவுமாம், காம்பேய்மென்தோளி [யசோதை]க்கு விசேஷணமாகவுமாம். காம்பு என்ற பலபொருளொருசொல் இங்கு மூங்கிலெனப் பொருள்படும்; பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் மூங்கிலைத் தோளுக்கு உவமைகூறுவர். உண்டாயை—'உண்டான்' என்பதன் முன்னிலையின்மேல் இரண்டனுருபு ஏறியிருக்கிறதென்க.

தழும்பு—வடமொழியில் கிணம் எனப்படும். ... (உஉ)

தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவா மங்கை *
தழும்பிருந்த தாள்சகடம் சாடித் *—தழும்பிருந்த
பூங்கோதை யாள்வெருவப் பொன்பெயரோன் மார்பிடந்த *
வீங்கோத வண்ணர் விரல். (உங)

| | |
|---|---|
| வீங்கு ஓதம் வண்ணர் | பொங்கி அலையெறியுங்கடல் போன்ற வடிவையுடைய எம்பெருமானது |
| அம் கை | அழகிய திருக்கைகளில் |
| சார்ங்கம் | சார்ங்க வில்லினுடைய |
| நாண் | நாணி |
| தோய்ந்த | உராய்ந்ததனாலுண்டான |
| தழும்பு | காய்ப்பானது |
| இருந்த ஆம் | இருக்கின்றதுகாண்; |
| தாள் | திருவடிகளிலே |
| சகடம் சாடி | சகடத்தையுதைத்து (அதனாலுண்டான) |
| தழும்பு இருந்த | காய்ப்பு இருக்கின்றது; |
| பூங் கோதையாள் | அழகிய மயிர்முடியையுடைய பிராட்டி |
| வெருவ | (என்ன நேரிடுமோ என்று) அஞ்சும்படியாக (மிக்க சீற்றத்துடனே) |
| பொன் பெயரோன் | இரணியாசுரனுடைய |
| மார்பு இடந்த தழும்பு | மார்பைக் கிழித்தெறிந்ததனாலுண்டான காய்ப்பு |
| விரல் | விரல்களிலே |
| இருந்த | இருக்கின்றது. |

* * *—[தழும்பிருந்த.] "தாம்பேகொண்டார்த்த தழும்பு—அறியுமுலகெல்லாம்" என்று கீழ்ப்பாட்டிலருளிச்செய்ததைக்

கேட்ட எம்பெருமான் 'நான் வெண்ணெய் திருடினதாகவும் அதற்காகத் தாம்பினால் கட்டுண்டிருந்ததாகவும் அதனால் தழும்பு உண்டாயிருப்பதாகவும் அதனை உலகெல்லாம் அறிவதாகவும் நீர் சொல்லுவது முழுப்பொய்' என்று சொல்ல; அதுகேட்ட ஆழ்வார் 'பிரானே! ஒரு தழும்பாயிருந்தால் உன்னால் மறைக்கமுடியும்; உனது கையிலும் காலிலும் விரலிலுமாக உன்னுடம்பு முழுதும் ஆச்ரிதர்க்காகச்செய்த ஒவ்வொரு காரியத்தினால் தழும்பேறிக்கிடக்கிறதே!' என்று ஸ்ரீ ராமாவதாரத்திலும் கிருஷ்ணாவதாரத்திலும் நரஸிம்ஹாவதாரத்திலுமாக நேர்ந்த தழும்புகளையெடுத்துரைக்கின்றாரிப்பாட்டில்.

இப்பாட்டின் முதலடியைத் திருவுள்ளம்பற்றியே ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் "ஸகாஸதம் ஜ்யாகிணகர்கசைஃ ஸுபைஃ சதுர்பிராஜாநுவிலம்பிபிர் புஜைஃ = சகாஸதம் ஜ்யாகிணகர்க்கசைச் சுபைச் சதுர்ப்பிராஜாநுவிலம்பிபிர்ப் புஜை:" என்றருளிச்செய்தாரென்க. ஸ்ரீ தேசிகன் தசாவதாரஸ்தோத்ரத்தில் இராமபிரானைப்பற்றிப்பேசும் ச்லோகத்தில் "யஸ்ய விக்ரஹவாந் அதர்மவிரதிம் தந்வீ ஸ தந்வீத நஃ = தர்மோ விக்ரஹவாந் அதர்மவிரதிம் தந்வீ ஸ தந்வீத ந:" என்று இராமனை [தந்வீ] வில்லாளியென்ற சொல்லால் கூறினமையாலும், 1. "புணராநின்ற மரமேழன்றெய்த ஒரு வில்வலவா!" என்று ஆழ்வார்களருளிச்செய்வதாலும் இங்கு நாணித் தழும்புள்ளமை கூறினது ராமாவதாரத்துக்குப் பொருந்துமென்க.

சகடஞ்சாடினது கிருஷ்ணாவதாரத்தில்;—திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப்போனாள். கம்ஸனாலேவப்பட்ட அஸுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீ கிருஷ்ண சிசுவின் மேலே விழுந்து கொல்லமுயன்றதை அறிந்த அப்பகவான், பாலுக்கு அழுகிற பாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்டமாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழ்மேலாவிழுந்து அசுரனுட்பட அழிந்ததென்று வரலாறறிக. சகடம்—வடசொல்.

மூன்றாமடியில், பூங்கோதையாள் என்று பெரிய பிராட்டியாரைச் சொல்லுகிறது. அவள் எம்பெருமானுடைய திருமார்பிலே இறையுமகல கில்லாது உறையுமவளாகையாலே, அப்பெருமான் பெரிய சீற்றத்துடனே உக்ரமான நரசிங்கவுருவைக்கொண்டபோது 'ஜகத்துக்கே பிரளயம் விளைந்திடுமோ!' என்று அஞ்சி நடுங்கினளென்க.

கடை நிலைத்தீவகமாக நின்ற வீங்கோதவண்ணர் என்றது—கை தாள் விரல் என்ற மூன்றினோடும் அந்வயிக்கத்தக்கது; கடல்வண்ணனுடைய கை, கடல்வண்ணனுடைய தாள், கடல்வண்ணனுடைய விரல் என்று.

கை, தாள், விரல் என்பவற்றையே எழுவாயாகக்கொண்டு, கைகளும் கால்களும் விரல்களும் தழும்பைச் சுமந்திருக்கின்றன என்று பொருள்கொள்ளவுமாம். ... ... (உங)

விரலோடு வாய்தோய்ந்த வெண்ணெய்கண்டு * ஆய்ச்சி
உரலோ டுறப்பிணித்த நான்று *—குரலோவா
தேங்கி நினைந்தயலார் காண விருந்திலையே? *
ஓங்கோத வண்ணா! வுரை. (உச)

| | |
|---|---|
| ஓங்கு ஓதம் வண்ணா | தேங்கிக் கிளர்ந்த கடல்போன்ற வடிவை யுடையவனே! |
| (நீ வெண்ணெய் திருடி உண்ணும்போது) | |
| விரலோடு வாய் தோய்ந்த | உன் விரலிலும் வாயிலும் படிந்திருந்த |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| ஆய்ச்சி | யசோதையானவள் |
| கண்டு | பார்த்து |
| (உன்னைத் தண்டிக்கவேண்டி) | |
| உரலோடு உற பிணித்த நான்று | உரலோடு சேர்த்துக் கட்டிவைத்த போது |
| குரல் ஓவாது | நீ கதறுகிற கதறல் நீங்காமல் |
| ஏங்கி | ஏங்கிக்கொண்டு |
| நினைந்து | (அப்போதும் வெண்ணெய் திருடுவதையே) சிந்தித்துக் கொண்டு |
| அயலார் காண | அயலாரெல்லாரும் வேடிக்கை பார்க்கும்படி |
| இருந்திலையே | இருந்தாயல்லவோ? |
| உரை | உண்மையாகச் சொல்லு. |

* * *—[விரலோடு வாய்தோய்ந்த.] 'தாம்பால் ஆப்புண்ட தழும்பு எனக்கு உண்டோ?' என்ற எம்பெருமானை நோக்கி ஆழ்வார் 'அஃது ஒரு தழும்புதானு? உடம்பெல்லாம் தழும்பு மயமே காண்' என்றுர் கீழ்ப்பாட்டில். சார்ங்கநாண் தோய்ந்த தழும்பும், சகடம் சாடின தழும்பும், இரணியன் மார்பிடந்த தழும்பும் வீரச் செயல்களை விளக்குவன வாதலால் அம்மூன்று தழும்புகளையும் எம்பெருமான் இசைந்துகொண்டு, * தாம்பாலாப் புண்ட தழும்பு மாத்திரம் பரிஹாஸாஸ்பதமாயிருக்குமே யென்றெண்ணி அதனை இல்லை செய்யத் தொடங்கினுன்; 'நான் வெண்ணெய் திருடினது மில்லை, ஆய்ச்சி யென்னைப் பிடித்ததுமில்லை; உரலோடு சேர்த்து என்னைக் கட்டினதுமில்லை; தழும்பு உண்டானது மில்லை' என்று எல்லாவற்றையும் மறைத்துப் பேசினுன். அதற்குமேல் ஆழ்வார் என்ன செய்யக்கூடும்? பிரானே! முழுப்பூசினியைச் சோற்றில் மறைக்க நினைப்பாரைப்போலே செய்த காரியங்களையெல்லாம் இப்படி மறைத்துப் பொய் சொல்லுவது தகுதியோ? "ஸத்யம் வத" என்று மெய்யே சொல்லுமாறு பிறர்க்கு விதிக்கிற நீ பொய் சொல்லலாகுமோ? வெண்ணெயை விரல்களால் அள்ளியெடுத்து நீ வாயிலே யிட்டுக்கொண்டபோது யசோதை கண்டு உன்னைப் பிடித்துக் கொள்ளவில்லையா? வெறுமனே கயிற்றினுல் உன்னைக் கட்டிவைத்தால் அறுத்துக்கொண்டு போய்விடுவாய் என்று பெரியவொரு உரலோடே இணைத்துப் பிணைத்துவைக்கவில்லையா? அதனுல் நீ நெடும்போது ஏங்கியேங்கி அழவில்லையா? அந்த நிலைமையை எத்தனையோபேர்கள் வந்து காணவில்லையா? இவை யொன்றும் நடந்ததேயில்லை யென்று உன்னுல் மறைக்கமுடியுமா? நீயேசொல் நாயனே!' என்கிறுர்.

அவாப்த ஸமஸ்தகாமனுய் ஸர்வஜ்ஞனுய் ஸர்வசக்தியுக்தனை நீ ஒரு குறையுள்ளவன் போலவும், அந்தக் குறையை நீக்கிக் கொள்ளக் களவு செய்தவன் போலவும், அதற்காகக் கயிற்றினுல் கட்டித் தண்டிக்கப்பட்டவன் போலவும், அந்தக் கட்டில் நின்று தப்புவதற்கு சக்தியற்றவன் போலவும் கட்டை யவிழ்க்கும் உபாயத்தை உணராதவன் போலவும், இருந்தாயே! இது என்ன ஆச்சரியம்! என்று ஈடுபட்டவாறு.

முதலடியிலும் இரண்டாமடியிலும் "விரலோடு" "உரலோடு" என்றே பாடமிருந்தும் "விரலோடு—உரலோடு" என்றே பலரும் ஓதுவது ஒவ்வாது; இரண்டாமடியின் தனிச்சீர் "குரலோவாது" என்றிருத்தல் காண்க.

"ஓங்கோதவண்ணா!" என்ற விளியின் ஆழ்பொருளைப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்கிறார்காண்மின்—"இவனைக் கட்டிவைத்தது ஒருகடலைத் தேக்கிவைத்தாற்போலே காணும்" என்று. ... ... ... ... (உச)

உரைமேற் கொண் டென்னுள்ள மோவாது * எப்போதும்
வரைமேல் மரகதமே போலத் *—திரைமேல்
கிடந்தானைக் கீண்டானைக் * கேழலாய்ப் பூமி
யிடந்தானை யேத்தி யெழும். (உரு)

| | | | |
|---|---|---|---|
| வரை மேல் | ஒரு மலையின்மேலே | என் உள்ளம் | எனது மனமானது |
| மரகதமே போல | மரகதப்பச்சை படிந்தாற்போல | உரை மேற்கொண்டு | உரைப்பதில் ஊற்றங்கொண்டு |
| திரை மேல் | திருப்பாற்கடலிலே | ஓவாது எப்போதும் | இடைவிடாமல் எப்போதும் |
| கிடந்தானை | சயனித்திருப்பவனும் | ஏத்தி | (அப்பெருமானது சரிதைகளைப்) புகழ்ந்து |
| கீண்டானை | இரணியனுடலைப் பிளந்தவனும் | எழும் | உஜ்ஜீவிக்கும். |
| கேழல் ஆய் | வராஹமூர்த்தியாகி | | |
| பூமி இடந்தானை | பூமியை உத்தரிப்பித்தவனுமான எம்பெருமானை | | |

* * *—[உரைமேற்கொண்டு.] கீழ்ப்பாட்டில், கண்ணபிரான் ஓயாமல் ஏங்கியழுத சீலகுணத்தை அநுஸந்தித்த ஆழ்வார், அவன் ஓயாமல் ஏங்கினதுபோலவே தாமும் ஓயாமல் அவனுடைய சீலகுணத்தைப் பேசுவதில் உத்ஸாஹங் கொண்டிருப்பதை இப்பாட்டிலருளிச் செய்கிறார்.

"என்னுள்ளம் உரைமேற்கொண்டு ஏத்தியெழும்" என்றதனால்—நெஞ்சு தன்தொழிலாகிய சிந்தனையோடு நில்லாமல் வாக்

கின் தொழிலையும் ஏன்றுகொண்டமை கூறப்பட்டது. திருவாய் மொழியில் "முடியானே! மூவுலகுந் தொழுதேத்தும்" [3-8-1.] என்ற பாசுரத்தை இங்கே நினைப்பது. "உரைமேற்கொண்டு" என்பதை 'மேல் உரைகொண்டு' என்று மாற்றி—மேலான சொற்களைக் கொண்டு என்று முரைக்கலாம்.

[வரைமேல் மரகதமேபோலத் திரைமேற்கிடந்தானை.] திருப் பாற்கடலிலே எம்பெருமான் பள்ளிகொண்டிருப்பது—வெண் ணிறமானதொரு மலையில் மரகதக்கல்லைப் பதித்தாற் போன்றிருப் பதாக அபூதோபமை கூறப்பட்டதென்க.

[கீண்டானை.] 'இரணியன் மார்வை' என்பது மூலத்தி லில்லையாயினும் கீண்டா னென்னும்போதே 'இரணியன் மார்வு' ஞாபகத்திற்கு வந்து விடும். இரணியனுடலைக் கீண்டதுபோலவே, குதிரை வடிவங்கொண்டுவந்த கேசியென்னுமஸுரனது வாயைக் கீண்டதும் பகாஸுரனுடைய வாயைக் கீண்டது முண்டாதலால் அவையும் நினைவுக்குவரின் அவற்றையும் கொள்ளத் தட்டில்லை. அன்றியே, "கேழலாய்க் கீண்டானை இடந்தானை" என்று சேர்த்து, வராஹரூபியாய் அண்டபித்தியிலே ஒட்டின பூமியை அதனின்று ஒட்டு விடுவித்துப் பிறகு கோட்டாற் குத்தியெடுத்தவனை என்று பொருள் கூறுவதும் பொருந்தும். "திரைமேற்கிடந்தானைக் கீண் டானை" என்ற சேர்த்தியால்—எம்பெருமான் 'நம் அடியார்க்கு எப்போது என்ன தீங்கு வருமோ' என்ற சிந்தனையுடனே சயனித்திருப்ப, துன்புற்ற அடியாரின் கூக்குரல் செவிப்பட்ட வுடனே பதறி அத்துன்பத்தைத் தீர்க்க ஏற்றதொரு திருக்கோலங் கொண்டு இங்குத்தோன்றி ரக்ஷித்தருள்கிறானென்பது விளங் கும். இப்படிப்பட்ட எம்பெருமானை எனது நெஞ்சு இடை விடாது துதித்து உஜ்ஜீவிக்கின்றது என்றாராயிற்று. ... (உரு)

எழுவார் விடை கொள்வா ரீன்துழா யானை *
வழுவா வகைநினைந்து வைகல்—தொழுவார் *
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே * வானோர்
மனச்சுடரைத் தூண்டும் மலை. (உசு)

| | |
|---|---|
| எழுவார் | (தாங்கள் விரும்பின ஐச்வரியம் கிடைத்தவுடனே எம்பெருமானைக்) கைவிட்டுப் போகின்ற ஐச்வர்யார்த்திகளும் |
| விடை கொள்வார் | (தாங்கள் விரும்பின கைவல்யமோக்ஷம் கைப்பட்டபின் எம்பெருமானைத் திரும்பிப் பாராமல்) விடை பெற்றுக்கொண்டு போமவர்களான கைவல்யார்த்திகளும் |
| ஈன் துழாயானை வழுவா வகை நினைந்து வைகல் தொழுவார் | இனிய திருத்துழாயை அணிந்தவனான திருமாலை ஒரு நாளும்விட்டு நீங்காதபடி சிந்தித்து எப்போதும் அநுபவிப்பவர்களான முமுக்ஷுக்களுமாகிய இம் மூவகை அதிகாரிகளுடைய |
| வினை சுடரை | (அவரவர் வேண்டுகின்ற பலன்களுக்குத் தடையான) தீவினையாகிய நெருப்பை |
| நந்துவிக்கும் | அணைக்கின்ற |
| வேங்கடமே | திருவேங்கடமலையே |
| வானோர் | நித்ய ஸூரிகளுடைய |
| மனம் சுடரை | ஹ்ருதயமாகிற விளக்கை |
| தூண்டும் | தூண்டி ஜ்வலிப்பிக்கின்ற |
| மலை | மலையாகும். |

* * *—[எழுவார்விடைகோள்வார்.] கீழ்ப் பல பாசுரங்களில் விபவாவதார சேஷ்டிதங்களைப் பேசி அநுபவித்த ஆழ்வார், என்றைக்கோ கழிந்த அவ்வவதாரங்களின் திருக்குணங்கள் இன்றைக்கும் நன்கு விளங்குமாறு * பின்னானார் வணங்குஞ் சோதியாக ஸேவை ஸாதித்தருள்கின்ற அர்ச்சாவதாரங்களையும் அநுபவிக்க ஆசைகொண்டு, "1. தென்னனுயர் பொருப்பும் தெய்வவடமலையும் என்னுமிவையே முலையாவடிவமைந்த" என்கிறபடியே பூமிப்பிராட்டிக்குத் திருமுலைத்தடங்களாகச் சொல்லப்பட்டுள்ள

1. பெரிய திருமடல்.

‡ இரண்டு திருமலைகளுள் திருவேங்கடமலையிலே திருவுள்ளஞ் சென்று அவ்விடத்தைப் பேசி அநுபவிக்கிறாரிப்பாட்டில். எம்பெருமானிலுங்காட்டில் எம்பெருமானோடு ஸம்பந்தம்பெற்ற பொருள்களே பரமஉத்தேச்யமென்று கொள்ளுகிறவர்களாகையாலே திருவேங்கடமுடையான் வரையில் போகாமல் அவனுடைய ஸம்பந்தம் பெற்றதான திருமலையோடே நின்று அநுபவிக்கிறார்.

திருமலை எப்படிப்பட்டதென்றால் ப்ரயோஜநாந்தரங்களை விரும்புமவர்களோடு அநந்யப்ரயோஜநரோடு வாசியற எல்லாருடைய வினைகளையும் போக்கிப் பலனைப் பெறுவிக்குமது; இதனையே மூன்றடிகளில் அருளிச்செய்கிறார்

எழுவார் என்றால் எழுந்துபோகிறவர்களையும் சொல்லும்; மேன்மேலும் ஆசைப் பெருக்கமுடையவர்களையும் சொல்லும். இரண்டு படியாலும், ஐச்வர்யார்த்திகளைச் சொல்லுகிறது இங்கு; 'எங்களுக்கு ஐச்வர்யத்தைத்தரவேணும்' என்று பிரார்த்தித்து அது கைப்பட்டதும் எம்பெருமானைவிட்டு எழுந்துபோகிறவர்கள் என்றாவது, ஐச்வரியம் வேணுமென்று மேலே மேலே பிரார்த்திக்குமவர்கள் என்றாவது கொள்க. இவர்களுடைய வினைச்சுடரை நந்துவிக்கையாவது—ஐச்வர்ய ப்ராப்திக்கு விரோதியான பாவங்களைத்தொலைத்து ஐச்வர்யவிருப்பத்தை நிறைவேற்றுகை.

விடை கோள்வார் என்றால் விட்டு நீங்குகிறவர்கள் என்கை; ஸந்தர்ப்பம் நோக்கி இங்கே கைவல்யார்த்திகளைச்சொல்லுகிறது. அவர்களுடைய வினைச்சுடரை நந்துவிக்கையாவது—ஆத்மாநுபவத்திற்கு விரோதியான பாவங்களைத் தொலைத்துக் கைவல்யாநுபவத்தை நிறைவேற்றுகை.

ஈன்துழாயானை வழுவாவகை நினைந்து வைகல் தொழுகிறவர்கள்—பரமைகாந்திகளான பகவத்பக்தர்கள்; அவர்களுடைய வினைச்சுடரை நந்துவிக்கையாவது—மாறிமாறிப் பலபிறப்பும் பிறக்கும்படியான தீவினைகளைத்தொலைத்து முத்தியளிக்கை. ஆக, வேண்டுவார் வேண்டினபடியே அநிஷ்ட நிவ்ருத்தியையும் இஷ்ட ப்ராப்தியையும் செய்விக்கவல்லது திருவேங்கடம் என்றதாயிற்று.

‡ திருமாலிருஞ்சோலை, திருவேங்கடம்.

[வினைச்சுடரை நந்துவிக்கும்]—பாவங்களை நெருப்பாக ரூபித்துக்கூறினமைக்கு இணங்க "நந்துவிக்கும்" எனப்பட்டது; நந்துவித்தல்—(நெருப்பை) அணைத்தல்.

[வானோர்மனச்சுடரைத் தூண்டும்மலை.] ஒரு நெருப்பை அணைக்கும்; ஒரு நெருப்பை அபிவிருத்திசெய்யும் என்று சமத்காரமாக அருளிச்செய்கிறார். வானோர் மனச்சுடரைத் தூண்டுகையாவது—பரமபதத்திலே பரத்வகுணத்தை அநுபவித்துக்கொண்டிருக்கிற நித்யஸூரிகளை, இங்குவந்து ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணங்களை அநுபவிக்குமாறு உத்ஸாஹ மூட்டுதலாம். திருவேங்கடமலையின் தன்மை இப்படிப்பட்டதென்று அநுஸந்தித்தாராயிற்று. ... ... ... (உ௬)

மலையால் குடைகவித்து மாவாய் பிளந்து
சிலையால் மராமரமேழ் செற்று *—கொலையானைப்
போர்க்கோ டொசித்தனவும் பூங்குருந்தஞ் சாய்த்தனவும் *
கார்க்கோடு பற்றியான் கை. (உ௭)

| | | | |
|---|---|---|---|
| மலையால் | கோவர்த்தன கிரியைக்கொண்டு | போர் கோடு | சண்டைசெய்ய உதவியாயிருந்த தந்தங்களை |
| குடை கவித்து | குடையாகப் பிடித்தும், | ஒசித்தனவும் | பிடுங்கினவையும் |
| மா வாய் பிளந்து | குதிரை வடிவங் கொண்டுவந்த கேசியென்னும் அஸுரனுடைய வாயைப்பிளந்தும், | பூ குருந்தம் | பூவோடுகூடிய குருந்தமரத்தை |
| சிலையால் | வில்லைக்கொண்டு | சாய்த்தனவும் | வேரோடே பறித்துத் தள்ளினவையும் (எவையென்றால்) |
| மராமரம் ஏழ் செற்று | ஸப்த ஸாலவ்ருக்ஷங்களை அழித்தும், | கார் | (கம்பீரமாக முழங்குவதில்) மேகத்தையொத்த |
| (இச்செயல்களோடு நிற்காமல்) | | கோடு | சங்கை |
| கொலை யானை | கொலைசெய்வதாக வந்த குவலயாபீடமென்னும் யானையினுடைய | பற்றியான் | ஏந்தியிருக்கின்ற பெருமானுடைய |
| | | கை | திருக்கைகளேயாகும். |

* * *—[மலையால்குடைகவித்து.] கீழ்ப்பாட்டில் திருவேங்கட மலையை அநுபவித்துப்பேசின ஆழ்வார் பிறகு திருவேங்கடமுடையானையும் ஸேவித்து அவனது திருக்கைகளினழகிலே ஆழங்காற்பட்டார்; அவை மிகவும் ஸுகுமாரமாக இருந்தும் ராமக்ருஷ்ணாதியவதாரங்களில் பெரிய வீரச்செயல்களையெல்லாம் சிறிதும் வருத்தமின்றிச் செய்தனவே! என்று ஈடுபட்டு, அத்திருக்கைகள் இன்றைக்கும் அந்த வீரப்பாடு தோன்ற விளங்கும்படியை யாவரும் காணலாமென்கிறார்.

ஆயர்கள் வழக்கப்படி இந்திரனுக்கு இடும் சோற்றை விலக்கிக் கோவர்த்தனமலைக்கு இடுவித்துத் தானே அமுதுசெய்தபோது இந்திரன் பசிக்கோபத்தால் ஏழுநாள் விடாமழை பெய்வித்துத் துன்பம் விளைக்க நினைத்தபோது இடையர்க்கும் பசுக்களுக்கும் ஒரு தீங்கு நேரிடாதபடி அந்த மலையையே குடையாகத் தூக்கிப்பிடித்து நின்று காத்தருளின கதை மலையால்குடைகவித்து என்பதனால் அநுஸந்திக்கப்பட்டது.

மாவாய்பிளந்த வரலாறு:—கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஒருவனான கேசியென்பவன் குதிரையுருவங்கொண்டு ஆயர்களுக்கெல்லாம் மிக்க பயங்கரனாய்க் கனைத்துக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப்பெருக்கி நீட்டி அதன் வாயிற்கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப்பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினன் என்பதாம்.

சிலையால் மராமரமேழ் செற்றது ஸ்ரீராமாவதாரத்தில் ஸுக்ரீவமஹாராஜனுக்குத் தன் வலிமையில் நம்பிக்கையுண்டாவதற்காகச் செய்த ஸப்த ஸாலவ்ருக்ஷங்களைத் துளைத்தது.

பூங்குருந்தம்சாய்த்த வரலாறு:—கண்ணபிரான் மலர் கொய்வதற்காக நித்தியம் ஒரு குருந்தமரத்தின்மேலேறுவது வழக்கம்; கம்ஸனால் ஏவப்பட்ட ஓரசுரன் அம்மரத்தில் ஆவேசித்திருந்து கண்ணன் வந்து மலர்கொய்ய ஏறும்போது தான் முறிந்துவீழ்ந்து அவனை வீழ்த்திக் கொல்லக்கருதி நின்றபோது, மாயவனான கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற்பிடித்துத் தன் வலிமைகொண்டு முறித்து அழித்தனன் என்பதாம்.

ஆக, மலையால் குடைகவித்ததும் மாவாய்பிளந்ததும் மராமர மேழ் செற்றதும், யானைக்கொம்புபறித்ததும் பூங்குருந்தம் சாய்த்ததும் இத்திருக்கைகளே காண்மின் என்று பழைய வீரச்செயல்களை ஸ்மரித்து அநுஸந்தித்தாராயிற்று. ... ... (உஎ)

கைய வலம்புரியும் நேமியும் * கார்வண்ணத்து
ஐய! மலர்மகள் நின்னாகத்தாள் *—செய்ய
மறையான் நின்னுந்தியான் மாமதிள்மூன்றெய்த *
இறையான் நின்னாகத் திறை (உஅ)

| | |
|---|---|
| கார் வண்ணத்து ஐய | மேகம்போன்ற வடிவையுடைய பெருமானே! |
| வலம்புரியும் | வலம்புரிச்சங்கமும் |
| நேமியும் | சக்கரமும் |
| கைய | உன் கையிலுள்ளன; |
| மலர் மகள் | பெரியபிராட்டியார் |
| நின் ஆகத்தாள் | உனது திருமார்பை விட்டுப் பிரியாதிருப்பவள்; |
| செய்ய மறையான் | சிறந்த வேதத்தை நிரூபகமாகவுடைய பிரமன் |
| நின் உந்தியான் | உனது உந்திக்கமலத்திலுள்ளான்; |
| மா மதிள் மூன்று எய்த இறையான் | பெரிய மதிளையுடைய மூன்று பட்டணங்களை முடித்த சிவபெருமான் |
| நின் ஆகத்து இறை | உனது திருமேனியின் ஏகதேசம். |

* * *—[கையவலம்புரியும்.] திருவேங்கடமுடையானை நோக்கி உனது திருமேனியிலே அழகும் ஐச்வரியமும் சீலம்முதலிய குணங்களும் நிழலிட்டுத் தோற்றுகின்றனவே! என்று ஈடுபடுகிறார். சங்கும் சக்கரமும் திருக்கைகளிலே உள்ளன என்றதனாலும் மலர்மகள் நின்னாகத்தாள் என்றதனாலும் ஈச்வரத்வம் சொல்லப்பட்டது; 'கார்வண்ணத்துஐய!' என்ற விளியினால் அழகு அறிவிக்கப்பட்டது. பிரமனுக்கும் சிவனுக்கும் முதன்மையுண்டாகுமாறு திருநாபியிலும் திருமேனியின் வலப்பக்கத்திலும் இடம் கொடுத்திருப்பதைக் கூறுகின்ற பின்னடிகளால் சீலகுணம் தெரிவிக்கப்பட்டது.

கைய = கைகளிலேயுள்ளன; 'கையது' என்பதன் பன்மை. வலம்புரி—வலப்பக்கத்தால் சுழிந்திருப்பது. (இதற்கு எதிர்-

இடம்புரி.) இப்பியாயிரஞ் சூழ்ந்தது இடம்புரியென்றும் இடம்புரியாயிரஞ் சூழ்ந்தது வலம்புரியென்றும் நூல்கள் கூறும்; அதாவது—இப்பியைவிட ஆயிரம்மடங்கு சிறந்தது இடம்புரியென்றும், அவ்விடம்புரியினும் ஆயிரம்மடங்கு சிறந்தது வலம்புரியென்றும் சொன்னபடி.

சக்கரத்தின் விளிம்பைச்சொல்லுகிற நேமி என்னும் வடசொல் தமிழில் சக்கரத்துக்கும் பெயராக வழங்கும். ஐய!—ஆண்மைவிளி. மலர்மகள்நின்ஆகத்தாள் = "அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பன்" திருவேங்கடமுடையானிறே. பிரமன் நான்கு முகங்களாலும் நான்கு வேதங்களையும் எப்போதும் ஓதிக்கொண்டிருப்பதனாலும், "வெதா ெஉ வாரஂ வக்ஷுஃ வெதா ெஉ வாரஂ யநஂ = வேதங்களே எனக்குச் சிறந்த கண்; வேதங்களே எனக்குச் சிறந்த செல்வம்" என்று சொல்லுபவனதலாலும் செய்ய மறையானெனப்பட்டான்.

[மாமதிள்மூன்றெய்தஇறையான்.] சிவன் திரிபுரமெரித்தவனெனப்படுவான்;—தாரகாஸுரனுடைய புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து பிரமனிடம் பெருவரம்பெற்று வானத்துப் பறந்து செல்லுந்தன்மைவாய்ந்த மூன்று பட்டணங்களையடைந்து மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்தவிடங்களிற் பறந்து சென்று பலவிடங்களின்மேலும் இருந்து அவ்வவ்விடங்களைப் பாழாக்கிவருகையில் அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும் சந்த்ர ஸூர்யர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும் நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை வில் நாணியாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்நியை முனையாகவுடைய அம்பாகவும் அமைத்துக்கொண்டு யுத்தஸந்நத்தனுய்ச்சென்று போர் தொடங்கும்போது சிரித்து அச்சிரிப்பில் நின்று உண்டான நெருப்பினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டனன்.

இறையான் = ஈச்வரனாகத் தன்னை அபிமானித்திருக்கிற ருத்ரன் என்கை. நின்ஆகத்துஇறை = 'இறை' என்பதற்குப் பல பொருள்களுண்டு ; அற்பம் என்னும் பொருள் இங்குக் கொள்ளத்தக்கது ; உனது திருமேனியிலே சிவன் அற்பபாகமாக அமைந்திருக்கிறானென்றவாறு. திருவாய்மொழியில் "ஏறாளு மிறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறாளுந்தனியுடம்பன்" [4—8—1.] என்ற பாட்டின் இருபத்தினாலாயிரப்படி வியாக்கியானத்தில்—"தபஸா தோஷிதஸ்தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா। ஸ்வபார்ச்வே தக்ஷிணே ஶம்போ: நிவாஸ: பரிகல்பித: = தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா—ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போ: நிவாஸ: பரிகல்பித:." என்றெடுத்துக் காட்டப்பட்டுள்ள பிரமாண வசனம் இங்கு அநுஸந்திக்கத்தகும். [இதன்பொருள்:-பரமசிவன் தவம்புரிந்ததனால் திருவுள்ளமுவந்த ஸ்ரீமஹாவிஷ்ணு தனது வலப்பக்கத்திலே அவனுக்கு இடம் கற்பித்துத் தந்தருளினனென்பதாம்.] .... .... (உஅ)

இறையும் நிலனு மிருவிசும்புங் காற்றும் *
அறைபுனலுஞ் செந்தீயு மாவான் *—பிறைமருப்பின்
பைங்கண்மால் யானைப் படுந்துயரங் காத்தளித்த *
செங்கண்மால் கண்டாய் தெளி. (உகூ)

| | | | |
|---|---|---|---|
| இறையும் | ஸ்ரீவைகுண்ட நாதனும் | பிறை மருப்பின் | பிறைபோன்ற தந்தத்தையுடையதும் |
| நிலனும் இருவிசும்பும் காற்றும் அறைபுனலும் செம்தீயும் ஆவான் | பூமியென்ன பரவிய ஆகாசமென்ன வாயுவென்ன அலையெறிகிற ஜலமென்ன சிவந்த நிறமுள்ள அக்நியென்ன ஆகிய பஞ்சபூதங்களினாலாகிய லீலா விபூதியை யுடையவனுமிருக்கிற எம்பெருமான், | பைங்கண் | பசுமைதங்கிய கண்களையுடையதுமான |
| | | மால் யானை | பெரியகஜேந்திரனை |
| | | படு துயரம் | (முதலையின் வாயிலே அகப்பட்டுப்) பட்ட துக்கத்தில் நின்றும் |

| | | | |
|---|---|---|---|
| காத்து அளித்த | ரக்ஷித்தருளின | தெளி | (நெஞ்சே ! நீ இதனைத்) தெரிந்துகொள். |
| செம் கண் மால் கண்டாய் | புண்டரீகாக்ஷனை பெருமான்காண் ; | | |

* * *—[இறையும்நிலனும்.] நித்யவிபூதி யென்னப்படுகிற பரமபதத்திற்கும் லீலாவிபூதியென்னப்படுகிற ஸம்ஸாரமண்டலத்திற்கும் நாதனுய்க்கொண்டு உபயவிபூதி நாதனென்று பேர் பெற்றிருக்கு மெம்பெருமான் தன்பெருமையை நினைத்து மேனுணித்திருப்பவனல்லன் ; அடியவர்கள் துன்புறுங்காலத்து நேரில் ஓடிவந்து காத்தருளும்படியான வாத்ஸல்யகுணமு முடையவன்காண் என்று தம் திருவுள்ளத்துக்கு உபதேசிக்கிற முகத்தால் எம்பெருமானது மேன்மையையும் நீர்மையையும் வெளியிடுகிறுர்.

இறை என்று ஸ்வாமிக்குப் பெயர் ; 1. "வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்லவீவில்சீர், ஆற்றல் மிக்காளுமம்மான்" என்றபடி பரமபதத்தில் ஸர்வஸ்வாமித்வம் தோன்றுமாறு எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைகுண்ட நாதத்வம் இங்கே விவக்ஷிதம். ஆகவே, இறை யென்றது இங்கே நித்யவிபூதிநாதனைச் சொன்னபடி. நிலனும் என்று தொடங்கிச் சேந்தீயுமாவான் என்ற வளவால் லீலாவிபூதி நாயகத்வம் சொல்லப்படுகிறது ; பஞ்சபூதங்களினுலாகிய பதார்த்தங்கள் நிறைந்தவிடமே லீலாவிபூதியாதலால் பஞ்சபூதங்களையிட்டு அருளிச்செய்தாரென்க.

"இறையும்" என்ற உம்மைக்குச்சேர (இரண்டாமடியில்) "ஆவான்" என்ற விடத்திலும் உம்மை கூட்டிக்கொள்ளவேணும் ; ஆவானும் என்க. ஆகஇவ்வளவால்—உபயவிபூதி நாதனுயிருக்கும் பெருமையையுடையவனு யிருந்தாலும் என்றதாயிற்று. இதற்குப் பிரதிகோடியான நீர்மையைப் பின்னடிகளில் அருளிச்செய்கிறுர். முதலைவாய்க் கோட்பட்ட கஜேந்திராழ்வான்துயரை அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து காத்தருளினது பிரசித்தம்.

[பிறைமருப்பின் பைங்கண்மால்யானை.] யானைக்கு வெளுத்த தந்தமிருப்பதும் பசுமைதங்கிய கண்களிருப்பதும் அதிசயமான விஷயமன்றே ; இதைச்சொல்லி வருணிப்பதற்குப் பிரயோஜன

1. திருவாய்மொழி. 4—5—1.

மென்னெனில் ;—ஒரு குழந்தை கிணற்றில் விழுந்துபோக, அதனையெடுத்துக் கரையிலே போட்டவர்கள் 'அந்தோ! இதொரு காலழகும் இதொரு கையழகும் இதொரு தலையழகும் இதொரு முகவழகும் என்னே!' என்று சொல்லிச் சொல்லி மாய்ந்து போவர்களன்றே ; அப்படியே எம்பெருமானும் யானையின் காலை முதலைவாயினின்றும் விடுவித்தபின் அதனுடைய தந்தத்தினழகிலும் கண்ணினழகிலும் ஆழ்ந்து கரைந்தமை தோற்ற அந்தபகவத் ஸமாதியாலே ஆழ்வார் யானையை வருணிக்கின்றாரென்க.

பசுமை + கண், பைங்கண். கண்டாய்—முன்னிலையசைச் சொல். இப்பாட்டில் 'நெஞ்சமே!' என்கிறவிளி வருவித்துக் கொள்ளவேண்டும். ... ... .... (௨௯)

தெளிதாக வுள்ளத்தைச் செந்நிறீஇ * ஞானத்
தெளிதாக நன்குணர்வார் சிந்தை *—எளிதாகத்
தாய்நாடு கன்றேபோல் தண்டுழா யானடிக்கே *
போய்நாடிக் கொள்ளும் புரிந்து. (௩௦)

| | | | |
|---|---|---|---|
| உள்ளத்தை | மனத்தை | உணர்வார் | அறிபவர்களுடைய |
| தெளிது ஆக | (ஐம்புலன்களில் மேய்வதனாலுண்டான கலக்கம் நீங்கித்) தெளிவையுடையதாம்படி | சிந்தை | மனமானது, |
| செம் நிறீஇ | செவ்வனே நிறுத்தி [எம்பெருமானிடத்தில் மனத்தைமூட்டி] | எளிது ஆக | வருத்தமில்லாமல் |
| ஞானம் | பகவத்விஷய பக்தியாலே | தாய் நாடு கன்றேபோல் | (பெரிய பசுக்கூட்டத்தினிடையே) தன் தாயைத் தேடிக்கொண்டு கிட்டுகிற கன்றைப்போல, |
| தெளிது ஆக | 'அவன் தலைவன், நாம் அடிமை' என்கிற தெளிவு உண்டாகும்படி | தண் துழாயான் அடிக்கே | குளிர்ந்த திருத்துழாய்மாலையையணிந்த எம்பெருமானது திருவடிகளையே |
| | | புரிந்து | விரும்பி |
| நன்கு | நன்றாக | போய் நாடிக் கொள்ளும் | தானேசென்று தேடிச்சேரும். |

* * *—[தெளிதாக.] ஆழ்வாரை நோக்கிச் சிலர் 'உம்முடைய நெஞ்சுபோலே எங்களுடைய நெஞ்சு பகவத்விஷயத்திலே ஊன்றப்

பெறவில்லையே, இதற்கு என்னகாரணம்?' என்று கேட்க; அவர்கட்கு உத்தரமாக அருளிச்செய்வது போலும் இப்பாட்டு. பட்டிமேயவொண்ணாதபடி மனத்தையடக்கி எம்பெருமானோடு தமக்குள்ள உறவை அறிந்திருப்பவர்களின் மனமானது மற்றெவரையும் பற்றாமலும் ஐம்புலன்களிலும் செல்லாமலும் அவ்வெம்பெருமானையே பதறிக்கொண்டு மிக்க ஆவலுடன் சென்று கிட்டும்; ஒரு கன்றுக்குட்டியானது பல்லாயிரம் பசுக்களின் திரளினுள்ளே தனது தாயைக் கண்டுபிடித்துக்கொள்வது எப்படியோ அப்படியே இதுவும். இதற்கு ஸம்பந்தவுணர்ச்சியேகாரணம். ஸம்பந்தஜ்ஞானமில்லாதவர்களுக்கு ஒருநாளும் எம்பெருமானைக் கிட்டுதல் ஸாத்யமன்று; அஃது உள்ளவர்களுக்கு அது மிகவும் ஸுலபம் என்றாராயிற்று.

மூன்றாமடியில் "அடிக்கே" என்றும் "அடியே" என்றும் பாடபேதங்கள். ... ... ... (௫௦)

புரியொரு கைபற்றி யோர்பொன்னாழி யேந்தி *
அரியுருவு மாளுருவு மாகி *—எரியுருவ
வண்ணத்தான் மார்பிடந்த மாலடியையல்லால் * மற்று
எண்ணத்தா னாமோ விமை. (௫க)

| | | | |
|---|---|---|---|
| ஒரு கை புரி பற்றி | ஒரு திருக்கையிலே வலம்புரிச் சங்கத்தை ஏந்தி (மற்றொரு திருக்கையிலே) | மார்பு | மார்பை |
| ஓர் பொன் ஆழி ஏந்தி | ஒப்பற்ற அழகிய திருவாழியை ஏந்தி, | இடந்த | நகத்தால் குத்திப் பிளந்துபோட்ட |
| ஆள் உருவும் அரி உருவும் ஆகி | நரமும் சிங்கமும் கலந்த வடிவை யுடையனாய்க் கொண்டு | மால் | திருமாலினுடைய |
| எரி உருவம் வண்ணத்தான் | அக்கியின் வடிவம் போலே (கண்ணெடுத்துக் காண முடியாத) வடிவத்தையுடையனான இரணியனுடைய | அடியை அல்லால் | திருவடிகளைத்தவிர |
| | | மற்று | வேறொரு விஷயத்தை |
| | | இமை | க்ஷணகாலமேனும் |
| | | எண்ண தான் ஆமோ | நினைப்பதற்கேனும் முடியுமோ? (முடியாது.) |

* * *—[புரியோருகைபற்றி.] அடியவர்கள் திறத்தில் எம்பெருமானுக்குண்டான பாரதந்திரியத்தையும் வாத்ஸல்யத்தையும் அநுஸந்தித்தால் அப்பெருமானைத் தவிர்ந்து வேறொருவிஷயத்தை ஒரு நொடிப்பொழுதாகிலும் நினைக்க வழியுண்டோ? என்ன வேண்டி, அப்பெருமான் பரமபக்தனாகிய ப்ரஹ்லாதனிடத்துள்ள வாத்ஸல்யத்தாலே செய்தருளின செயலையெடுத்துப் பேசுகிறார்.

புரியோருகைபற்றி=‘வலம்புரி’ என்னும் பதத்தில் ‘வலம்’ என்பதை நீக்கி, புரியென்பதை மாத்திரம் இங்குப் பிரயோகித்திருப்பது நாமைகதேசத்தைக்கொண்டு நாமத்தை க்ரஹிக்கும் முறையாலென்க: ஸத்யபாமையைப் பாமையென்பதுபோல. எம்பெருமானுடைய அவதாரங்களெல்லாவற்றிலும் திவ்யாயுதங்களின் சேர்த்திக்குக் குறையில்லாமையாலே “புரியொருகைபற்றியோர் பொன்னாழியேந்தி” எனப்பட்டது. இத்திவ்யாயுதங்கள் சில அவதாரங்களில் மறைந்திருப்பதும் சில அவதாரங்களில் வெளித்தோன்றியேயிருப்பதும் காரணார்த்தமாகவாம்.

அசுரர்களுடைய உடல் நெருப்புநிறமா யிருக்குமாதலால் எரியுருவவண்ணத்தான் என்ற சொல்லால் இரணியனைக்கூறினர். பாசுரத்தினிறுதியிலுள்ள இமை என்பதை வினைமுற்றாக்கொண்டு உரைக்கவுமாம்; இதை ஆராய்ந்துபார் என்கை: ‘நெஞ்சே!’ என்று வருவித்துக்கொள்க. ... ... (௬௧)

இமையாத கண்ணா லிருளகல நோக்கி *
அமையாப் பொறிபுலன்க ளைந்தும்—நமையாமல் *
ஆகத் தணைப்பா ரணைவரே * ஆயிரவாய்
நாகத் தணையான் நகர். (௬௨)

| | | | |
|---|---|---|---|
| இமையாத கண்ணால் | (ஞானத்தில்) குறைவில்லாத (நெஞ்சுஎன்னும்) உட்கண்ணாலே | நோக்கி | (தன் ஸ்வரூபத்தையும் பரப்ரஹ்ம ஸ்வரூபத்தையும், உள்ளபடி) கண்டு |
| இருள் அகல | (அஜ்ஞாநமாகிய) அந்தகாரம் நீங்கும்படியாக | அமையா | த்ருப்திபெற்று அடங்கியிராத |

| | | | |
|---|---|---|---|
| பொறி புலன்கள் ஐந்தும் | பஞ்சேந்திரியங்களையும் (அவற்றிற்கு உரிய சப்தாதி) பஞ்சவிஷயங்களையும் | ஆயிரம் வாய் நாகத்து அணையான் | ஆயிரம் வாய்களைக் கொண்ட ஆதிக் சேஷனைப் படுக்கையாகவுடைய எம்பெருமானது |
| நமையாமல் | அடக்காமலே | நகர் | நகரமாகிய ஸ்ரீவைகுண்டத்தை |
| ஆகத்து அணைப்பார் | (மாதர்களின்) தேஹத்தை அணைத்துக் கொண்டு கண்டபடி திரிபவர்கள் | அணைவரே | கிட்டப்பெறுவர்களோ?. |

[இமையாதகண்ணால்.] இப்பாட்டுக்கு இரண்டு வகையாகக் கருத்துரைக்க இடமுண்டு. மூன்றுமடியில், அணைவரே என்றவிடத்து ஏகாரத்தைத் தேற்றப்பொருளதாகக் கொண்டால், அணைவர்—கிட்டப்பெறுவர்கள் என்று பொருளாய்விடும். அன்றி, ஏகாரத்தை எதிர்மறைப் பொருளதாகக் கொண்டால், அணைவரே?—சேருவர்களோ?, சேரமாட்டார்கள் என்றதாகும். ஒன்றோடொன்று முரண்படுகின்ற இரண்டு பொருள்களும் பொருந்துமோ எனின்; கேண்மின்: இந்திரியங்களைப் பட்டிமேயவொட்டாமல் அடக்கி ஆளாதே ஸ்த்ரீகளின் உடம்போடே அணைந்து மனம் போனபடியே திரியுமவர்கள் பரமபதத்தைக் கிட்டமாட்டார்கள்; இவ்வுலகத்துக்கும் நரகத்துக்குமே போக்குவரத்தாயிருப்பர்கள் என்பது ஒரு கருத்து. இந்திரியங்களை அடக்கி ஆளாவிட்டாலும் எம்பெருமான் தானாகவே கடாக்ஷிக்கும்போது அவனை விலக்காதவர்களுக்கு உஜ்ஜீவிக்க வழியுண்டு என்கை மற்றொரு கருத்து. இதில், "ஆகத்து அணைப்பார்" என்பதற்கு—எம்பெருமானாலே அந்தரங்கத்தில் விஷயீகரிக்கப் பெறுமவர்கள் என்று பொருள் கொள்ளுதல் நன்று. இவ்விரண்டு கருத்துகளில் முந்தின கருத்து சேதநஸ்வரூபத்துக்குப் பொருந்தினது; பிந்தின கருத்து பகவந்நிர்ஹேதுக க்ருபாவைபவோக்திக்குப் பொருந்தினது: இதுவே ஆழ்வார்க்கும் ஆசாரியர்கட்கும் அபிமதமாயிருக்கும்.

இமையாதகண் என்றது-ஞானக்கண். அது திறந்தால் அஜ்ஞானவிருள் அகலுமாதலால் இருளகலநோக்கி என்றார்.

போறிபுலன்களைந்தும்—பொறியைந்தும் புலனைந்தும் என்றபடி: சப்தாதிவிஷயங்களைக் கவர்கின்ற செவி வாய் கண் மூக்கு உடலென்னும் பஞ்சேந்திரியங்களும், இவ்விந்திரியங்களுக்கு இலக்காகின்ற சப்தம் ரூபம் ரஸம் கந்தம் ஸ்பர்சம் என்னும் பஞ்ச விஷயங்களும்.

இந்திரியங்களுக்கு 'அமையா' என்றிட்ட விசேஷணம்—பெற்றவற்றைக்கொண்டு த்ருப்திபெற்று அடங்கியிராமையைக் காட்டும். ... .... .. (௩௨)

நகர மருள்புரிந்து நான்முகற்குப் பூமேல் *
பகர மறைப்பயந்த பண்பன்—பெயரினையே *
புந்தியால் சிந்தியா தோதியுரு வெண்ணும் *
அந்தியாலாம் பயனங் கேன். (௩௩)

| | |
|---|---|
| பூமேல் | திருநாபிக் கமலத்திலே |
| நான்முகற்கு | பிரமனுக்கு |
| நகரம் அருள் புரிந்து | இருப்பிடத்தை ஏற்படுத்தியருளியும் |
| பகர | (யோக்யர்களெல்லாரும்) ஓதும்படியாக |
| மறை | வேதத்தை |
| பயந்த | உபகரித்த |
| பண்பன் | குணசாலியான எம்பெருமானுடைய |
| பெயரினை | திருநாமங்களை |
| புந்தியால் | மனத்தினால் |
| சிந்தியாது | எண்ணாமல் |
| ஓதி உரு எண்ணும் அந்தியால் | ஜபம் செய்வதும் உருச்சொல்வதுமான ஸந்த்யாவந்தனம் முதலிய கர்மாநுஷ்டாநங்களால் |
| அங்கு ஆம் பயன் என் | உண்டாகப்போகிற பிரயோஜனம் என்ன? (ஒன்றுமில்லை.) |

[நகரமருள்புரிந்து.] உலகில் பலர் இரவும்பகலும் வேதங்களை உருச்சொல்லிக்கொண்டும் ஜபங்கள் செய்துகொண்டும் ஸந்தியாவந்தனம் முதலிய கருமங்களை அநுஷ்டித்துக்கொண்டும் போது போக்குகிறார்களே, இது நல்ல போதுபோக்குத்தானே, இப்படிப் பட்டவர்களுக்குப் புருஷார்த்த ஸித்தியில் ஸந்தேஹமில்லையே என்று சிலர் கேட்டனர்போலும்; அவர்கட்கு உத்தரமுரைக்கின்றார்—எம்பெருமானை உள்ளீடாகக் கொள்ளாதே செய்கிற ஜபம்

தவம் முதலியவை யாவும் பயனற்றனவாமென்கிறார். அந்தரங்கத்தில் பகவத்பக்தி முக்கியமாக இருக்கவேண்டும்; அஃது இன்றியே கையை மூடிக்கொண்டும் வாயை மொணமொணத்துக்கொண்டும் செய்யுமவை பிறரை ப்ரமிக்கச் செய்வதற்கு உபயோகப்படுமத்தனையேயொழிய புருஷார்த்த ஸித்திக்குப் பயன்படாதென்றாயிற்று.

பண்பன்பெயரினைப் புந்தியால்சிந்தியாது = பகவந்நாமங்களின் பொருளாகிய திவ்யகுண சேஷ்டிதங்களைச் சிந்திப்பதைவிட்டு என்றபடி. ஸந்த்யா என்ற வடசொல் அந்தியென விகாரப்பட்டது; ஸந்த்யாவந்தனத்தைச் சொன்னபடி. மனப்பூர்வமாகவல்லாமல் செய்யும் ஆபாஸரூபமான கருமங்களால் எம்பெருமானை அகன்று விடுகை பலிக்குமேயொழிய அணுகுகை பலிக்கமாட்டாது என்றாயிற்று.

அந்தரங்கர்க்கு அருகிலே மாளிகை அமைக்குமாபோலே, திருமால் தனது நாபிக்கமலத்திலே நான்முகனுக்கு இருப்பை அருளினன் என்கிறார் முதலடியில். மத்ஸ்யாவதாரம் ஹம்ஸாவதாரம் முதலியவற்றால் வேதோபதேசம் செய்தருளினமையை இரண்டாமடியி லருளிச்செய்தாரென்க.

நகரம்—வடசொல். புந்தி—புத்தி. ... ... (௩௩)

என்னொருவர் மெய்யென்ப ரேழுலகுண்டு * ஆலிலையில்
முன்னொருவ னாய முகில்வண்ணா ! *—நின்னுருகிப்
பேய்த்தாய் முலைதந்தாள் பேர்ந்திலளால் * பேரமர்க்கண்
ஆய்த்தாய் முலைதந்த வாறு. (௩௪)

| | | | |
|---|---|---|---|
| முன் | முற்காலத்தில் | முகில்வண்ணா | காளமேகத் திருவுருவனான பெருமானே! |
| ஏழ் உலகு உண்டு | ஏழுலகங்களையும் (பிரளயத்திலழியாதபடி) அமுது செய்து | நின் உருகி | உன்விஷயத்தில் உருக்கம் கொண்டவள் போல மேலுக்குக் காட்டி |
| ஆல் இலையில் | ஓர் ஆலந்தளிரிலே | | |
| ஒருவன் ஆய | துணையற்றவனாய்க் கண்வளர்ந்தருளின | முலை தந்தாள் | முலை கொடுத்தவளான |

| | | | |
|---|---|---|---|
| பேய் தாய் | பேய்த் தாயாகிய பூதனையானவள் | முலை தந்த ஆறு | முலைகொடுத்த விதத்தை |
| பேர்ந்திலள் | அவ்விடத்தில் நின்றும் பேர மாட்டாமல் (பிணமாய்) விழுந்தாள் ; | ஒருவர் | ஞானத்தில் ஒப்பற்றவர்களான வ்யாஸ பராசராதி ரிஷிகள் |
| பேர் அமர் கண் | பெரிய அந்த யுத்த பூமியில் | மெய் என்பர் | மெய்யென்று சொல்லாநிற்பர்கள் ; |
| ஆய் தாய் | இடைத்தாயாகிய யசோதை யானவள் | என் | இது என்ன ஆச்சரியம்? |

[என்னொருவர்மெய்யென்பர்] எம்பெருமானிடத்தில் அநந்தரங்கமான அன்பு பூண்டவர்களுள் தலையானவள் யசோதைப் பிராட்டி யொருத்திதான் என்று வெளியிடக்கருதிய ஆழ்வார் அதனை ஒரு சமத்காரச் சொல்லாலே வெளியிடுகிறார். கண்ணபிரான் இளங்குழவியாய் நந்தகோபர் திருமாளிகையில் சயனித்திருக்கும்போது வஞ்சகக் கஞ்சனாலேவப்பட்டுக் கொல்லவந்த பூதனையென்னும் பேய்த்தாய் மிக்கபரிவுள்ளவள்போலத் தெய்வக் குழவியையெடுத்துத் தனது விஷந்தடவின முலையைக்கொடுக்க, பேதைக்குழவி பிடித்துச் சுவைத்துண்டவாறே அப்பேய்ச்சி உயிர் மாண்டுபிணமாய் விழுந்தாள்; உடனே யசோதைப் பிராட்டி ஓடிவந்து குழந்தையை வாரியெடுத்தணைத்து முலைகொடுத்தாள்— என்பாதக இதிஹாஸம் சொல்லப்படுகின்றதே; இது மெய்யாயிருக்குமா? என்கிறார். ஒருத்தி வந்து முலைகொடுத்துப் பட்ட பாடு கண்ணெதிரே காணாநிற்கச் செய்தே இன்னொருத்தி கிட்ட வரத்தான்முடியுமா? அஞ்சாமல் கிட்டவந்து எடுத்து முலை கொடுத்தாளென்பது ஸம்பாவிதமாகுமோ? என்கிறார். நாட்டில் இவ்வாறு வேறு எவர்களிடத்திலேனும் நாம் கண்டிருந்தால் இதை மெய்யெனக் கொள்ளலாம்; இப்படி எங்குங்காணாமையாலே இதனை எங்ஙனே மெய்யெனக் கொள்ளலாம்? என்றாலும், பூதனை கொடுத்தவிஷத்திற்கு மாற்றான அம்ருதமாகத் தனது ஸ்தந்யத்தைக் கொடுக்கவேணுமென்னும் அன்புமிகுதியினால் யசோதைசெய்த இக்காரியம் அவளுடைய பக்திபோன்ற பக்தியை

யுடைய மெய்யன்பர்க்கு நம்பத்தகுந்ததாயிருக்குமே யொழிய மற்றையோர்க்கு இதில் விச்வாஸம் பிறப்பது அரிதே என்ற தாய்த்து.

பேரமர்க்கண்—கண்ணபிரானைக் கொல்லக்கருதி அதற்காக முயன்று பேய்ச்சி இறந்த இடமாதல்பற்றி அதனைப்போர்க்கள மென்றார். "பேரமர்க்கண்" என்றதை யசோதைக்கு விசேஷண மாக்கி, அமர்—ஒன்றோடொன்று சண்டைசெய்வன போன்றிருக் கிற, பேர்—பெரிய, கண்—கண்களையுடையளான, ஆய்த்தாய்—, என்று உரைத்தலுமொன்று. .... .... (௩௪)

ஆறிய வன்பி லடியார்த மார்வத்தால் *
கூறிய குற்றமாக் கோள்ளல்நீ—தேறி *
நெடியோய் ! அடியடைதற் கன்றே * ஈரைந்து
முடியான் படைத்த முரண். (௩௫)

| | | | |
|---|---|---|---|
| ஆறிய அன்பு இல் | நிரம்பின பக்தி யில்லாதவர்களாய் | படைத்த | புத்திபூர்வகமாகப் பண்ணின |
| அடியார் | சேஷத்வஜ்ஞாந மாத்திரத்தை யுடையராயிருப் பவர்கள் | முரண் | தப்புக்காரியமானது |
| தம் ஆர்வத்தால் | தங்களுடைய ஸ்நேஹத்தாலே | நெடியோய் | பெருமை பொருந்திய உன்னுடைய |
| கூறிய | சொல்லும் வார்த்தைகளை | அடி | திருவடிகளை |
| குற்றம் ஆ | குற்றமாக | தேறி அடைதற்கு அன்றே | தெளிந்துவந்து (காலக்ரமத்திலே சிசுபாலனுகிக்) கிட்டுகைக்குக் காரணமாகி விட்டதன்றோ ?. |
| நீ கொள்ளல் | நீ கொள்ளாதே ; (அது எனெனில் ;) | | |
| ஈர் ஐந்து முடியான் | பத்துத்தலைகளை யுடையனான ராவணன் | | |

[ஆறியவன்பில்.] கீழ்ப்பாட்டில் யசோதைப்பிராட்டியி னுடைய ஒப்புயர்வற்ற அன்பை அநுஸந்தித்த ஆழ்வார்க்குத் தாம் போல்வாருடைய அன்பு ஒரு அன்பாகவே தோற்றவில்லை; கம் ஸன் முதலானுருடைய பிராதிகூல்யத்தோடு ஸமமாகவே தம்

முடைய அன்பை நினைக்கலாயினர்; அதனால் சிறிது கலக்கமுற்ற ஆழ்வார் "மிகக் கொடியனான இராவணனிடத்திலிருந்த பிராதிகூல்யமே, அவன்றானே சிசுபாலனாகப் பிறந்த பிறவியில் உன்னடிச் சேர்வதற்கு அநுகூலமாகப் பலித்ததே!; அப்படியிருக்க, என் போல்வாரிடத்துள்ள போலியான ஆநுகூல்யம் [அன்பு] அநுகூலமாவதற்குத் தடையுண்டோ? என்று தமக்குத்தாமே தேறிக் கூறுகின்ற பாசுரம் இது.

ஸ்ரீவைகுண்டத்தில் ஜய விஜயரென்னும் த்வாரபாலகர் மஹர்ஷிகளின் சீற்றத்துக்கு இலக்காகி எம்பெருமானால் சபிக்கப்பட்டு இந்நிலத்தில் வந்து ஹிரண்ய ஹிரண்யாக்ஷர்களாகவும் இராவணனாகவும் சிசுபாலனாகவும் பிறந்து கடைசி ஜன்மமாகிய சிசுபால ஜன்மத்தில் "1. சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன், திருவடி தாட்பாலடைந்த" என்கிறபடியே திருவடிகளை யடைந்த வரலாறு இங்கு அறியத்தக்கது. 2. "சுரிகுழற்கனிவாய்த் திருவினைப்பிரித்த கொடுமையிற் கடுவிசையரக்கன்" என்கிறபடியே சொல்லவொண்ணாத தீச்செயல் புரிந்தவனான இராவணனுடைய பிரதிகூலகாரியங்களே (சிசுபாலனான பிறப்பில்) அநுகூலகாரியங்களின் பலனைப் பெறுவித்தன வென்றால், நம்முடைய ஆநுகூல்யாபாஸம் அநுகூலமாகவே தலைக்கட்டுமென்பதில் தட்டுண்டோ? என்ற கருத்துக்காண்க. பின்னடிகளிற் காட்டிய த்ருஷ்டாந்தத்தைக்கொண்டு இங்கு ஆழ்வார் பிரார்த்திப்பதாவது—பரிபூர்ணமான அன்பு இல்லாமல் மேலுக்கு அடியாரென்று பேர்சுமக்கிற நாங்கள் ஏதாவது குற்றமாகச் சொல்லிவிட்டால் அதைக்கொண்டு திருவுள்ளம் சீறவேண்டா; ப்ரத்யக்ஷமாக விரோதியென்றே வெளிவந்த இராவணனுடைய தீயசெயல்களே நன்மைக்கு உறுப்பாம்போது, மேலுக்காவது அன்பரென்று காட்டிக்கொள்ளுகிற எங்களுடைய உக்திகள் பொறுக்கக் கூடியவையன்றோ? என்றவாறு.

"ஆறியவன்பிலடியார்" என்று தம்மையே சொல்லிக்கொள்ளுகிறார்போலும்; தன்மையில் வந்த படர்க்கை. கூறிய=பலவின்பால் வினையாலணையும் பெயர்; கூறியவற்றை யென்று பொருள். கோள்ளல்—எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. நெடியோய்=

1. திருவாய்மொழி 7—5—3. 2. பெரியதிருமொழி 5—7—7.

முன்னிலையொருமை வினையாலணையும் பெயர்; ஆறும்வேற்றுமைத் தொகை. முரண்—கோணலான காரியங்கள். தேறி என்னும் வினையெச்சத்தை முன்னடிகளிற் கூட்டியுமுரைக்கலாம், பின்னடிகளிற் கூட்டியுமுரைக்கலாம். .... .... (௫௫)

$ முரணை வலிதொலைதற் காமென்றே * முன்னம்
தரணி தனதாகத் தானே *—இரணியனைப்
புண்ணிரந்த வள்ளுகிரார் பொன்னாழிக் கையால் * நீ
மண்ணிரந்து கொண்ட வகை. (௫௬)

| | |
|---|---|
| முன்னம் | முற்காலத்தில், |
| தரணி தனது ஆக தானே | பூமியெல்லாம் தன்னுடைய தென்று அஹங்காரங் கொண்டிருந்த |
| இரணியனை | ஹிரண்யாஸுரனை |
| புண் இரந்த | புண்படுத்திப் பிளந்த |
| வள் உகிர் ஆர் | கூர்மையான நகங்கள் பொருந்திய |
| பொன் ஆழி கையால் | அழகிய திருவாழியைக் கொண்ட திருக்கையினால் |
| நீ | நீ |
| மண் இரந்து கொண்ட வகை | (மாவலியிடத்தில்) பூமியை யாசித்துப் பெற்றதானது |
| முரணை வலி தொலைதற்கு ஆம் என்றே | (ஸம்ஸாரிகளின்) முரட்டுத்தனத் தின் மிடுக்கைத் தொலைக்கலா மென்றல்லவோ?. |

[முரணைவலி.] ஆச்ரிதவிரோதியான இரணியனைக் கிழித்தெறிந்ததுபோல மஹாபலியையும் கொன்றொழிக்கலாமாயிருக்கச் செய்தேயும் அங்ஙனஞ் செய்யாது, அழகிய வடிவெடுத்து யாசகனாய் நிற்கும் வகையாலே உலகங்கொண்டது ஏதுக்காக? "எம்பெருமான் இவ்வளவு ஸௌலப்யகுணமுடையவன்" என்று எல்லாரும் தெரிந்துகொண்டு இக்குணத்தில் ஈடுபட்டுத் தங்களுடைய அஹங்காரத்தை விட்டொழிந்து ஆட்படக்கூடுமென்கிற திருவுள்ளத்தாலோ? என்கிறார்.

"இரணியனைப் புண்ணிரந்த வள்ளுகிரார் பொன்னாழிக்கையால்" என்ற சொல்லாற்றலால், மாவலியையும் இரணியனைப் போலவே பங்கப்படுத்தவேண்டியது ப்ராப்தமாயிருக்கவும் அங்ஙனஞ் செய்யாதது மேற்குறித்த கருத்தினாலாம்—என்பது விளங்கும்.

தரணி—வடசொல். .... .... (௫௬)

$ "முரணைவலி" "முரணவலி" என்பன பாடபேதங்கள்.

வகையறு நுண்கேள்வி வாய்வார்கள் * நாளும்
புகைவிளக்கும் பூம்புனலு மேந்தி *—திசைதிசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கடமே * வெண்சங்கம்
ஊதியவாய் மாலுகந்த வூர். (௩௭)

| | | | |
|---|---|---|---|
| வகை அறு | அற்பபலன்களையும் பரமபுருஷார்த்தத்தையும் உட்புகுந்து இன்னவகை இன்னவகை என்று அறுதியிடுவதற்குறுப்பான | ஏந்தி | தரித்துக்கொண்டு |
| | | திசை திசையின் | பலதிக்குக்களில் நின்றும் |
| | | சென்று | வந்து சேர்ந்து |
| | | இறைஞ்சும் | வணங்குமிடமான |
| | | வேங்கடம் | திருவேங்கடமலையானது, |
| நுண் கேள்வி வாய்வார்கள் | ஸூக்ஷ்மார்த்த ச்ரவணமுடையவர்களான | வெண் சங்கம் ஊதிய வாய் மால் | வெளுத்த சங்கைத் திருப்பவளத்திலே வைத்து ஊதின எம்பெருமான் |
| வேதியர்கள் | வைதிகர்கள் | | |
| நாளும் | நித்தியமும் | | |
| புகை விளக்கும் | தூபதீபங்களையும் | உகந்த | திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கப்பெற்ற |
| பூ புனலும் | புஷ்பங்களையும் தீர்த்தத்தையும் | ஊர் | திவ்யதேசமாம். |

[வகையறுநுண்கேள்வி.] மூன்று பாசுரங்களாலே திருமலையை அநுபவிக்கிறார். எம்பெருமான் திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்குமிடம் திருவேங்கடமலை யென்கிறார். அத்திருமலை எப்படிப்பட்டதென்னில்; தினந்தோறும் பலபல திசைகளினின்றும் வைதிகர்கள்வந்து தூபதீபம் முதலிய திருவாராதநஸாமக்ரிகளைக் கொண்டு ஆச்ரயிக்கப்பெற்றது—என்கிறார். அந்த வைதிகர்கட்கு விசேஷணமிடுகிறார் வகையறுநுண்கேள்விவாய்வார்கள் என்று. ஸூக்ஷ்மமான சாஸ்த்ரார்த்தங்களையும் அலகலகாக நிச்சயித்தறியக்கூடிய கேள்வி வாய்ந்தவர்கள்—பஹுச்ருதர்கள் என்றபடி.

வெண்சங்க மூதியது பாரதப்போரில். .... (௩௭)

ஊரும் வரியரவ மோண்குறவர் மால்யானை *
பேர வெறிந்த பெருமணியை *—காருடைய
மின்னென்று புற்றடையும் வேங்கடமே * மேலசுரர்
எம்மென்னு மால திடம். (௩௯)

| | |
|---|---|
| ஊரும் | திரிகின்ற |
| வரி அரவம் | (உடம்பில்) கோடுகளையுடைய ஸர்ப்பமானது,— |
| ஒண் குறவர் | அழகிய குறவர்கள் |
| மால் யானை பேர | (பட்டி மேய்கின்ற) பெரிய யானைகள் (தங்களுடைய புனத்தில் நின்றும்) அப்பால் போவதற்காக |
| எறிந்த | (அவ்யானைகளின் மேல்) வீசியெறிந்த |
| பெரு மணியை | பெரியதொரு மாணிக்கத்தை (கண்டு) |
| கார் உடைய மின் என்று | மேகத்தினிடையே தோன்றுகிற மின்னலென்று பிரமித்து (இடிக்கு அஞ்சி) |
| புற்று அடையும் வேங்கடம் | புற்றினுள்ளே நுழையுமிடமான திருமலை, |
| மேல சுரர் | மேற்பட்டவர்களான நித்யஸூரிகள் |
| எம் என்னும் மாலது | 'எங்களுடையவன்' என்று அபிமானிக்கும் படியாகவுள்ள எம்பெருமான |
| இடம் | திவ்யதேசமாம். |

[ஊரும்வரியரவம்.] திருவேங்கடமலையே நித்யஸூரி நிர்வாஹகனான எம்பெருமான் திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்குமிடமென்கிறார். திவ்யதேசங்களிலுள்ள சராசரங்கள் முற்றும் மெய்யன்பர்கட்கு உத்தேச்யமாயிருக்கும். ஸ்ரீகுலசேகராழ்வார் தம்முடைய பிரபந்தத்திலே $ நான்காந்திருமொழியிலே "வேங்கடத்துக்கோனேரிவாழுங் குருகாய்ப் பிறப்பேனே" "திருவேங்கடச்சுனையில் மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே" "வேங்கடக்கோன் தான் உமிழும் பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவேனாவேனே" "வேங்கடத்துச் செண்பகமாய்நிற்குந் திருவுடையேனாவேனே" "வேங்கடமலைமேல் தம்பகமாய்நிற்குந் தவமுடையேனாவேனே" "வேங்கடத்துள் அன்னனைய பொற்குவடா மருந்தவத்தனாவேனே" "திருவேங்கடமலைமேல் கானாறாய்ப் பாயுங்

$ "ஊனேறு செல்வத்து" இத்யாதி.

கருத்துடையேனாவேனே" "திருவேங்கடமலைமேல் நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேனாவேனே" "வேங்கடவா! நின்கோயிலின் வாசல்.......படியாய்க்கிடந்துன் பவளவாய் காண்பேனே" என்று திருமலையிற் பலவகைப் பிறவிபிறக்கக் குதூஹலித்து, கடைசியாக "எழில் வேங்கடமென்னு மெம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமாவேனே" என்று தலைக்கட்டியிருப்பதற்கேற்ப, இக் குலசேகராழ்வாரைப்போன்ற அத்யவஸாயமுடைய மஹான்களே திருமலையில் பாம்பாகவும் குறவராகவும் யானையாகவும் புற்றாகவும் வந்து பிறந்திருப்பர்களாகையாலே அப்பொருள்களையும் எம்பெருமானைப்போலவே உத்தேச்யமாகக்கொண்ட இவ்வாழ்வார் இப் பாசுரத்தாலே தம்முடைய ப்ரதிபத்தியை வெளியிடுகின்றாரென்க.

குறவர்களுக்குப் புனங்காப்பது தொழில்; புனங்களிலே யானை முதலிய ஜந்துக்கள் பட்டிமேயப்புகும்; அவற்றைத் துரத்திப் புனத்தைக் காவல்செய்து கொள்ளவேண்டிய குறவர் தாங்கள் பரண்களிலேயிருந்தபடியே தங்கள் கையிலுள்ள பெரிய மாணிக்கக் கட்டியை யானையின்மீது எறிவர்கள்—யானை புனத்தைவிட்டு அப்பால்போவதற்காக. அப்போது அங்குத்திரியாநின்ற மலைப்பாம்புகளானவை யானையின்மேற்பட்ட ரத்னத்தைக்கண்டு, யானையை மேகமாகவும் ரத்னத்தை மின்னலாகவும் பிரமித்து மேகத்தில் மின்னலுண்டானவுடனே இடி உண்டாகுமாகையாலும், பாம்புகள் இடிக்கு அஞ்சி ஒளிக்கு மியல்வுடையனவாகையாலும் அப்பாம்புகள் புற்றினுள்ளே புகாநிற்கும்: இப்படிப்பட்ட தன்மைவாய்ந்த திருமலை எம்பெருமானது திருப்பதியாம் என்றாராயிற்று.

ஊரும்வரியரவம்—இயற்கையாகத்திரிகின்ற பாம்பு என்றாவது, யானையை விழுங்குவதற்காகத் திரிகின்ற பாம்பு என்றாவது பொருள்கொள்ளலாம். பாம்புகள் யானையை விழுங்கவல்லனவோ? எனின்; கேண்மின்;—சில மலைப்பாம்புகள் யானையைப்பார்த்து அஞ்சி நடுங்கி ஓடிப்போய்விடுமென்றும், பல மலைப்பாம்புகள் யானையை அணுகி விழுங்கிவிடுமென்றும் தமிழ் நூல்களால் தெரிகின்றது; 'திரையன் பாட்டு' என்ற ஓர் பழைய நூலில்—"கடுங்கண்யானை நெடுங்கை சேர்த்தி, திடங்கொண்டறைதல் திண்ணமென்றஞ்சிப், படங்கொள்பாம்பும் விடரகம்புகூஉம், தடங்கொள்

உச்சித்தாழ்வரையடுக்கத்து" என்றதனால் பாம்பு யானையைக் கண்டு 'இது துதிக்கையினால் நம்மைத் தொலைத்திடும்' என்று நிச்சயித்து அஞ்சி யொளிக்குமென்பது தெரிகின்றது. இனி, சங்கநூல்களுள் ஒன்றான நற்றிணையில் "ஞால்வாய்க்களிறு பாந் தட்பட்டெனத், துஞ்சாத்துயரத் தஞ்சுபிடிப்பூசல், நெடுவரை விடரகத்தியம்பும், கடுமான் புல்லிய காடிறந்தோரே" (14) என்றும், தேவாரம் திருக்கயிலாயம் முதல் திருமுறை இரண்டாம் பாட்டில் "பரியகளிற்றை அரவுவிழுங்கி மழுங்கவிருள் கூர்ந்த, கரியமிடற்றர் செய்யமேனிக் கயிலைமலையாரே" என்றும், கம்ப ராமாயணம் சித்திரகூடப்படலத்தில் (34) "இடிகொள் வேழத்தை எயிற்றொடு மெடுத்துடன் விழுங்கும், கடியமாசுணம் கற்றறிந்தவ ரென வடங்கிச், சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாமிதித் தேறப், படிகடாமெனத் தாழ்வரைகிடப்பன பாராய்" என்றும் சொல்லியிருக்கையாலே, பாம்பு யானையை விழுங்குமென்பது தெரிகின்றது ஆகவே, பாம்பு யானையைக்கண்டு அஞ்சி யொளித் தல் சிறுபான்மையும், விழுங்குதல் பெரும்பான்மையுமாயிருக்கு மென்று கொள்ளக்கடவது. 1. "கரியமாமுகிற்படலங்கள் கிடந்து அவை முழங்கிடக், களிறென்று பெரிய மாசுணம் வரை யெனப் பெயர்தரு பிரிதி" என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில், நஞ்சீயர்க்கும் நம் பிள்ளைக்கும் விளைந்ததாக அருளிச்செய்யப்பட்டுள்ள ஸம்வாத மொன்று இங்கே அநுஸந்திக்கத்தக்கது.

வரி அரவம்=பாம்பின் உடலில் இயற்கையாகவுள்ள கோடு களைச்சொன்னபடி. ஒண் குறவர்=சிறந்த குறவர் என்றபடி. குறவர்க்குச் சிறப்பு யாதெனில்;—"இவர்களுடைய பாட்டன் பாட்டனிலே யொருத்தன் பூமியிலே இறங்கினான் என்னும் பழியின்றிக்கேயிருக்கை" என்று பெரியவாச்சான்பிள்ளை வியாக் கியானமாதலால், வம்ச பரம்பரையாகத் திருமலையைவிட்டுக் கீழிறங்காமல் அவ்விடத்தே நித்யவாஸம் பண்ணியிருக்கையே சிறப்பாமென்க.

"மால் யானை பேர ஒண்குறவர் எறிந்த பெருமணியை ஊரும

1. பெரியதிருமொழி 1—2—10.

வரிபரவம் (கண்டு) காருடைய மின்னென்று புற்றடையும் வேங்கடம்" என்று அந்வயக்ரமம் காண்க. மலைகளிலே நவமணிகள் நிரம்பிக்கிடக்குமாதலாலும், நமக்கெல்லாம் ஸாதாரணமான கல்லுகள்போலே குறவர்க்கு மணி மாணிக்கங்கள் எளியன வாதலாலும் யானையைத் துரத்தவேண்டிய குறவர் பெருமணியை விட்டெறிந்தனரென்க.

காருடைய மின்னென்று புற்றடையும்வேங்கடம்=பாம்புகள் மேகத்தைக்கண்டு யானையாக ப்ரமிப்பதும் உண்டு; யானையைக் கண்டு மேகமாக ப்ரமிப்பதும் உண்டு. "கரியமாமுகிற் படலங்கள்" என்ற கீழுதாஹரித்த பெரியதிருமொழிப் பாசுரத்தில், மேகத்தைக்கண்டு யானையாக ப்ரமித்தபடி சொல்லிற்று; இப்பாட்டில் யானையைக்கண்டு மேகமாக ப்ரமித்தபடி சொல்லுகிறது.

மேல சுரர் எம்மேன்னும் மாலதிடம்=மேலான சுரர் என்று நித்யஸூரிகளைச் சொன்னபடி. 'ஸுர' என்ற வடசொல் தேவதைக்குப் பெயர். "எம்மேன்னும்" என்றது—'எம்முடையது, எம்முடையது' என்று மேல்விழும்படியான என்றபடி. அப்படி மேல்விழுந்து ஆச்ரயிக்கத்தக்க பெருமைபொருந்திய இடம் என்றாவது, மேல்விழுந்து ஆச்ரயிக்கத்தக்க பெருமானுடைய இடம் என்றாவது பொருள்கொள்ளலாம். ... (௩௮)

இடந்தது பூமி யெடுத்தது குன்றம் *
கடந்தது கஞ்சனை முன்னஞ்ச *—கிடந்ததுவும்
நீரோத மாகடலே நின்றதுவும் வேங்கடமே *
பேரோத வண்ணர் பேரிது. (௩௯)

| | | | |
|---|---|---|---|
| பேர் ஓதம் வண்ணர் | பெரிய கடலின் நிறம்போன்ற நிறமுடைய பெருமான் | எடுத்தது | குடையாக வெடுத்துப் பிடித்தது |
| முன் | முற்காலத்தில் | குன்றம் | கோவர்த்தன மலையாம்; |
| இடந்தது | (மஹாவராஹமாகிக்) கோட்டாற் குத்தி யெடுத்தது | அஞ்ச கடந்தது | அஞ்சி முடிந்து போம்படி செய்தது |
| பூமி | பூமியாம்; | கஞ்சனை | கம்ஸனையாம்; |

| | | | |
|---|---|---|---|
| கிடந்ததுவும் | திருக்கண் வளர்ந்தருளினது | பெரிது நின்றதுவும் | பெருமை யெல்லாம் தோற்ற நின்றது |
| ஓதம் நீர் மா கடல் | பெருவெள்ள முடைய திருப்பாற்கடலிலாம்; | வேங்கடம் | திருமலையிலாம். |

[இடந்தபூமி.] எம்பெருமானுடைய பல செயல்களை அநுஸந்தித்து இனியராகிறார். முன்பு மஹாப்ரளயத்தில் அண்டபித்தியில் ஒட்டிக்கிடந்த பூமியை மஹாவராஹமாகி உத்தரித்தான்; இந்திரன் பசிக்கோபத்தால் ஏழுநாள் விடாமழை பெய்வித்தவன்று திருவாய்ப்பாடியைக் காத்தருள்வதற்காகக் கோவர்த்தன மலையைக் குடையாகவெடுத்துப் பிடித்தான்; சாதுசனங்களை நலிந்துகொண்டிருந்த கம்ஸனைக் கொன்றொழித்தான்; அவதாரங்களுக்கு மூலகந்தமாகத் திருப்பாற்கடலிலே திருக்கண்வளர்ந்தருளாநின்றான்; வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பாகத் திருவேங்கடமலையிலே தன்பெருமையெல்லாம் பொலிய நின்றருள்கின்றான்—என்று இப்பாட்டில் அநுஸந்திப்பதன் கருத்தாவது—இப்படி ஓயாமல் பிறர் காரியமே போதுபோக்காயிருக்கின்ற எம்பெருமானுடைய நீர்மை வருணிக்கமுடியாதது என்றதாம்.

இப்பாசுரத்தின் வியாக்கியானத்திலே பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்கிறார்—"நாம் பெருமாளை யுகந்தோமென்று சோற்றை யுகப்புதோம்; சோற்றையுகந்தோமென்று நாலும் பத்தும் பட்டினி விடுவுதோம்; ஸ்த்ரீகளையுகந்தோமென்று சூது சதுரங்கம் பொருதல் உறங்குதல் செய்வுதோம்; ஒன்றிலும் ஸ்நேஹமில்லை." என்று. அற்புதமான இந்த ஸ்ரீஸூக்திகளின் உட்கருத்து யாதெனில்;—ஸம்ஸாரிகளான நம்முடைய போதுபோக்குக்கும் மெய்யடியார்களான ஆழ்வார்களுடைய போதுபோக்குக்கும் நெடுவாசியுண்டு; நாம் ஒரு விஷயத்திலும் பிடிமானமில்லாமலிருக்கிறோம்; ஆழ்வார்களோ தாம் பிடித்த பகவத்விஷயத்தை ஒரு நொடிப்பொழுதும் விடாமல் அதுதன்னிலே தோள் மாறுகின்றனர்; இடந்தது பூமி, எடுத்தது குன்றம் என்றிப்படி எம்பெருமானுடைய சேஷ்டிதங்களை மாறிமாறி அநுபவிக்கிறாரேயொழிய வேறொன்றில் நெஞ்சு செல்லப் பெறுகின்றிலர்; நாமெல்லாரும் இப்படி பகவத்விஷயத்தில் பற்றுதலில்லாமல்

கெட்ட விஷயத்தைப்பற்றி யிருக்கிறோம்; இருந்தாலும் அதிலாவது ஏதேனுமொன்றைப்பற்றிப் பிடித்தபிடி விடாமல் திண்ணியோமா யிருக்கிறோமோவெனில்; இல்லை; நாம் பெருமாளை ஸேவிக்க ஆசையுள்ளவர்கள்போலக் காட்டிக்கொண்டு கோவில்களுக்குப் போகிறோம்; போனாலும் அங்குப்போய்ச் செய்வது புளியோரை பொங்கல் தோசை வடை முதலியவற்றையிட்டு வயிற்றை நிரப்புவதேயன்றிப் பெருமாளை அன்பார ஸேவித்த பாடில்லை; சோற்றை உகக்கிற நாம் அதிலாவது ஒரு பிடிவாதங்கொண்டிருக்கிறோமோ வென்னில்; அதுவுமில்லை; ஏகாதசி முதலிய சில விரதங்கள் அனுட்டிப்பதுபோலக் காட்டி வயிற்றையடக்கிப் பட்டினிகிடக்கின்றோம். இஃது இருக்கட்டும்; வேசிகளை யநுபவிக்க விரும்பி அவர்களின் வீட்டுக்குப்போகிறோம்; அதையாவது பிடிமானமாகச் செய்கிறோமோ வென்னில், இல்லை; அங்குப்போய்ச் சூதாடியும் சதுரங்கமாடியும் உறங்கியும் போதைப்போக்கி வருகிறோம்; இப்படி நாம் கெட்டகாரியங்களைச் செய்தாலும் அதிலும் ஒரு பிடிவாதமில்லாமல் பலபல காரியங்களிலே நெஞ்சு செலுத்திக்கிடக்கிறோம்; ஆழ்வார்களோ, பகவத்விஷயத்தைப் பிடித்து அதில் ஓய்வு இல்லாமல் 'கொக்குக்கு ஒன்றேமதி' என்னுமாபோலே ஓரேபிடிவாதமாயிருந்து அநுபவிக்கிறார்கள்; இவர்களுடைய படி எங்கே!, நம்முடைய படி எங்கே!, என்று ஆழ்வார்களின் நிலைமையைப் பாராட்டியும் ஸம்ஸாரிகளின் நிலைமையைப் பழித்தும் பேசினபடி. .... (௩௯)

பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ *
வெருவிப் புனந்துறந்த வேழம் *—இருவிசும்பில்
மீன்வீழக் கண்டஞ்சும் வேங்கடமே * மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று. (௪௦)

| | | | |
|---|---|---|---|
| பெரு வில் | பெரிய வில்லையும் | செம் தீ | சிவந்த நெருப்புக்கு |
| பகழி | அம்புகளையுமுடையரான | வெருவி | பயப்பட்டு |
| குறவர் | குறவர்களினுடைய | புனம் துறந்த | கொல்லையை விட்டு நீங்கின |
| கை | கையிற்பிடித்திருந்த | வேழம் | யானையானது, |

| | |
|---|---|
| இரு விசும்பில் | பரந்த ஆகாசத்தில் நின்றும் |
| மீன் வீழ | நக்ஷத்திரம் விழ |
| கண்டு | அதனைப்பார்த்து (நாம் அப்பால் போக முடியாத படி குறவர்கள் கைக்கொள்ளியைப் பூமியிலே எறிந்தார்கள் என்று ப்ரமித்து) |
| அஞ்சும் | பயப்படுமிடமான |
| வேங்கடம் | திருவேங்கடமானது |
| மேல் | முன்பொருகால் |
| அசுரர் கோன் வீழ கண்டு | இரணியாசுரனை முடித்து |
| உகந்தான் | (ப்ரஹ்லாதனுடைய விரோதி தொலைந்தது என்று) மகிழ்ந்த பெருமானுடைய |
| குன்று | திருமலையாம். |

[பெருவிற்பகழி.] "வேங்கடமே அசுரர்கோன் வீழக்கண்டு உகந்தான் குன்று"—பாகவத விரோதியான இரணியனைத் தொலைத்துப் பரமபாகவதனான ப்ரஹ்லாதனைக் காத்தருளின பெருமான் அந்த ஆச்ரிதபக்ஷபாத மஹாகுணத்தை வெளியிட்டுக்கொண்டு இன்றைக்கும் ஸேவைஸாதிக்குமிடம் திருமலையென்கிறார். அத்திருவேங்கடம் எப்படிப்பட்டதென்ன, அவ்விடத்துச் செய்திகளில் ஒன்றை யெடுத்துரைக்கிறாரிதில். திருமலையிற் கொல்லைகளில் (இராக்காலங்களில்) யானை பட்டி மேய, அதனைத் துரத்துவதற்காக அம்புதொடுத்தவில்லை ஒரு கையிலேகொண்ட குறவர்கள் மற்றொரு கையிலே தீவட்டியைக்கொளுத்திப் பிடித்துக்கொண்டு அதட்டிச்செல்ல, அத்தீவட்டியையும் அம்புகோத்த வில்லையும் கண்ட அக்களிறு அஞ்சி ஓடிப்போக, அகஸ்மாத்தாக ஆகாசத்தில் நின்றும் நக்ஷத்திரம் அவ்யானை பதறிச்செல்லும் வழியிடையே வந்து பெருஞ்சோதியுடனே விழ, அதைக்கண்டு இது நக்ஷத்ரமென்றுணராது 'குறவர்கள் கைத்தீவட்டியையே கீழெறிந்தார்கள்' என்று ப்ரமித்து 'இவ்வழியை நாம் எப்படி கடந்து செல்ல வல்லோம்?' என்றஞ்சித் திகைத்து நிற்குமிடமாம் அத்திருமலை.

அஸ்தானே பயசங்கை பண்ணுகிற யானையின் செய்தியைக் கூறினவிதனால்—அஸ்தானே பயசங்கைபண்ணி எம்பெருமானுக்கு மங்களாசாஸநம் பண்ணுகிற மஹான்களின் இருப்பை நினைப்பூட்டினராகக் கொள்ளலாமென்ப. ... ... (௪0)

குன்றனைய குற்றஞ் செய்யினும் குணங்கொள்ளும் *
இன்று முதலாக வென்னெஞ்சே *—என்றும்
புறனுரையே யாயினும் பொன்னாழிக் கையான் *
திறனுரையே சிந்தித் திரு. (சுக)

என் நெஞ்சே — எனது மனமே!,
என்றும் — எப்போதும்
புறன் உரையே ஆயினும் — (உள்ளூர இல்லாமல்) மேலுக்குச் சொல்லுகிற வார்த்தையாயிருந்தாலும்
பொன் ஆழி கையான் திறன் உரையே — சக்ரபாணியான எம்பெருமான் விஷயமாகப் பேசும் பேச்சையே
சிந்தித்து இரு — அநுஸந்தித்துக் கொண்டிரு;
(அப்படியிருந்தால்)
இன்று முதலாக — இன்று தொடங்கி
குன்று அனைய குற்றம் செய்யினும் — மலைபோல் (பெருப்பெருத்த) குற்றங்களைச் செய்தாலும்
குணம் கொள்ளும் — (அவற்றையெல்லாம் எம்பெருமான்) குணமாகவே திருவுள்ளம் பற்றுவன்.

[குன்றனையகுற்றம்.] எம்பெருமானுடைய வாத்ஸல்யகுணத்தி லீடுபட்டுப் பேசுகிறார். நெஞ்சே!, ஆந்தரிகமான அன்பின் மிகுதியினாலே சொற்களைத்தொடுத்து எம்பெருமானைத் துதிப்பார் பலருண்டு; அப்படிப்பட்ட அன்பு நமக்கு இல்லாமையினால் கழுத்துக்கு மேற்படவே சில சொற்களை நாம் கபடமாகச் சொல்ல வல்லோம்; அப்படி மேலுக்குச்சொல்லுகிற வார்த்தையாயிருந்தாலும் அது பகவானைப்பற்றின வார்த்தையாக இருந்துவிடுமாயின் பயன்படும். எம்பெருமான் "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ் சந" [ப்ரீதியை பாவனைசெய்து வருபவனையும் கைவிடமாட்டேன்] என்று சொன்னவனாகையாலே நாம் மேலுக்குச் சொல்லுகிற வார்த்தையையும் அவன் கனத்ததாகத் திருவுள்ளம்பற்றித் தன்னுடைய வாத்ஸல்ய குணத்தை நம்மேல் ஏறிப்பாயவிடுவன்; நாம் மலைமலையாகக் குற்றங்கள் செய்தாலும் 1. "என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்னுமவனுடைய

1. பெரியாழ்வார் திருமொழி 4—9—2.

திருவுள்ளத்தில் அவையெல்லாம் நற்றமாகவே படும்; அவன் நமது ஆபிமுக்கியத்தை மாத்திரமே எதிர்பார்ப்பவனுதலால் நாம் மேனுக்குச்சொல்லும் வார்த்தையும் அவனுக்குக் கார்யோபயோகியாக ஆய்விடுங்காண்—என்றுராயிற்று.

ஸ்ரீவைகுண்டத்திலே எம்பெருமான் நித்யர்களோடும் முக்தர்களோடும்கூடிப் பரிபூர்ணநுபவம் பெறுநிற்கச்செய்தேயும், அதனுல் அப்பெருமான் சிறிதும் மகிழாது, பல பிள்ளைகளைப் பெற்ற ஒரு தகப்பனுர் ஒரு மகன்மாத்திரம் தேசாந்தரத்திலிருக்க மற்ற எல்லாப்புத்திரர்களோடும் கூடி வாழாநின்றுலும் அதனுல் மகிழ்ச்சியடையாமல் தேசாந்தரத்திலுள்ள புத்திரனது பிரிவையே நினைத்துப் பரிதபித்திருக்குமாபோலே எம்பெருமானும் ஸம்ஸாரிகளான அஸ்மதாதிகளின் பிரிவையே நினைத்துப் பரிதாபமுற்று, நம்மோடே கலந்து பரிமாறுவதற்காகக் கரணகளேபரங்களை நமக்குத்தந்தருளி அவற்றைக்கொண்டு நாம் காரியஞ் செய்யும்படியான சக்தி விசேஷங்களையும் நமக்குக்கொடுத்து, மிகவும் அஹங்காரிகளான நம்மெதிரில் தான் ப்ரத்யக்ஷமாக வந்து நின்றுல் நாம் பொறுமைகொண்டு ஆணையிட்டாகிலும் தன்னைத் துரத்திவிடுவோமென்றெண்ணி ஒருவர்கண்ணுக்குந் தோற்றுதபடி, உறங்குகிற குழந்தையைத் தாயானவள் முதுகிலே அணைத்துக் கொண்டு கிடக்குமாபோலே எம்பெருமான்றுனும் தானறிந்த ஸம்பந்தமே காரணமாக நம்மை விடமாட்டாமல் அந்தர்யாமியாயிருந்து தொடர்ந்துகொண்டு நம்மையொருகாலும் கைவிடாமல் ஸத்தையை நோக்கிக்கொண்டு நமக்குத் துணையாய்ப் போருமளவில், நாம் கெட்ட காரியங்களிலே கைவைத்தோமாகில் நம்மைத் திருப்பமாட்டாமல் அநுமதிபண்ணி உதாஸீநரைப்போலேயிருந்து திருப்புகைக்கு இடம்பார்த்துக்கொண்டேயிருந்து, நாம் செய்கிற தீமைகளிலே ஏதேனுமொரு தீமையாவது $ நன்மையென்று பேரி

$ விஷய ப்ரவணனுய் வேசிகளைப்பின்தொடர்ந்து அடிக்கடி கோவில்களிலே நுழைந்து புறப்படுகை; வயலில் பட்டிமேய்ந்த பசுவை அடிப்பதாகத் துரத்திக்கொண்டு போம்போது அது ஒரு கோவிலைப் பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டு ஓடுகிறவளவிலே அதை விடமாட்டாத ஆக்ரஹத்தாலே தானும் அக்கோவிலை வலஞ்செய்கை; (சிசுபாலாதிகளைப்போலே) நிந்தை செய்வதற்காகத் திருநாமங்களைச்சொல்லுகை முதலியன.

டக்கூடியதாயிருக்குமோவென்று பார்த்துவந்து, அப்படிப்பட்ட தீமைகளைக் கண்டுபிடித்து "என் ஊரைச்சொன்னாய், என் பேரைச்சொன்னாய்" என்றிப்படி சில ஸுக்ருதங்களை ஏறிட்டு மடிமாங்காயிட்டுக் காரியம் செய்கிறானென்று இதிஹாஸ புராணங்களிலே காணநின்றோமாகையாலே, இப்படி அநுக்ரஹிப்பதற்குச் சிறிது வ்யாஜமாத்திரத்தை எதிர்பார்த்துத்திரிகின்ற எம்பெருமானுடைய திருவுள்ளத்துக்கு இசைய "புறனுரையேயாயினும் பொன்னுழிக்கையான்திறனுரையே சிந்தித்திரு" என்றருளிச் செய்தாரிங்கு.

"குன்றனைய குற்றஞ்செய்யினுங் குணங்கொள்ளும்" என்ற முதலடிக்கு இரண்டுவகையாகப் பொருள்பணிப்பர். (1) நாம் மலைமலையாகக் குற்றங்கள்செய்தாலும் எம்பெருமான் அவற்றில் திருக்கண் செலுத்தாமல் குணமாகவுள்ளவற்றையே கண்டுகொள்வன்—என்பதாக ஒரு பொருள்: (2) நாம் மலைமலையாகக் குற்றங்கள் செய்தாலும் அவற்றையெல்லாம் தான் குணமாகக்கொள்வன் (அதாவது) போக்யமாகக் கொள்வன்—என்பதாக மற்றொரு பொருள்: இவற்றுள், முதற்பொருளைவிட இரண்டாம் பொருள் சிறக்கும். குற்றங்களிற் கண்செலுத்தாமல் குணமாகவுள்ளதையே கொள்ளுகிறானென்னும் பொருளில், நம்மிடத்தில் குணங்களுஞ் சில உண்டென்று வெளியிட்டபடியாகும்: 1. "அக்ருதஸுக்ருதக: ஸுதுஷ்க்ருதாத்மா சுபகுணலவலேசதேசிக: | அசுபகுணஸஹஸ்ராவ்ருத: வரத உபாயம் கதிம் த்வாம் வ்ருணே = அக்ருதஸுக்ருதகஸ் ஸுதுஷ்க்ருத்தர: சுபகுணலவலேசதேசாதிக:—அசுப குணபரஸ்ஸஹஸ்ராவ்ருத: வரதமுருதயம் கதிம்த்வாம் வ்ருணே." என்றாற்போலே, குற்றங்களே கூடுபூரித்திருப்பதாகவும் குணமென்பது லவலேசமுமில்லையாகவும் அநுஸந்தித்துக்கொள்ளும் பெரியோர்களின் கருத்துக்கிணங்க, 'குற்றங்களையெல்லாம் குணமாகக் கொள்வன்' என்னும் பொருள் மிகச் சிறக்கும்.

குற்றங்களை நற்றமாகக் கொள்வனென்னு மிப்பொருளின் ஸாரஸ்யத்தைப்பற்றிச் சில சொல்லவேண்டிற்றுண்டு; கேண்

1. கூரத்தாழ்வானது வரதராஜஸ்தவம்—92.

மின் ;—இவ்வுலகின்கண் மதிவிகற்பால் பிணங்கும் சமயங்கள் பலபலவுண்டு ; 'எம்பெருமானே இல்லை' என்கிற பாஹ்யஸமயி களும், எம்பெருமானொருவ னுண்டென்றிசைந்து 'அவனுக்குக் குணமில்லை' என்கிற [நிர்க்குண ப்ரஹ்மவாதிகளான] குத்ருஷ்டி களும் ஏற்பட்டிருப்பதுபோலவே, எம்பெருமானையும் அவனுக்குக் குணங்களையும் இசைந்துவைத்து 'ஆனால் அக்குணங்கள் ஓர் எல்லையுடையன' என்னும் கொள்கையுடையாரும் சிலருண்டு. "உயர்வற வுயர்நலமுடையவன்" என்றருளிச்செய்த ஆழ்வாரை யும், "அநவதிகாதிஶயாஸங்க்யேய கல்யாணகுணகணௌக மஹார்ணவ!= அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகணௌக மஹார்ணவ!" என்றருளிச்செய்த எம்பெருமானாரையும் வழிபடு கின்ற ஸாத்விகர்களின் ஸித்தாந்தம் 'எம்பெருமானுடைய திருக் குணங்களின் அதிசயத்திற்கு எல்லையில்லை' என்பதேயாம். எம் பெருமானது எண்ணிறந்த குணங்களுள் வாத்ஸல்யம் என்பது ஒன்று. (அடியார்களின்) குற்றங்களைக் காணாதிருக்கையே வாத் ஸல்யமென்று சிலரது கொள்கை. அங்ஙனன்றியே, 'தோஷங்களை யும் போக்யமாகக் கொள்ளுதலே வாத்ஸல்யம்' என்பது ஸத்ஸம் ப்ரதாயஸித்தாந்தம். இங்ஙனே பொருளாகில் சாஸ்த்ரார்த்தங்கள் வ்யாகுலங்களாய் விடுமென்று பிரதிபக்ஷிகள் பகர்வதுண்டு; அஃது எம்பெருமானுடைய குணத்திற்குக் குறை கூறினபடியாமத்தனை. அடியார்களுடைய தோஷங்களைக்கண்டு வெறுப்புக் கொள்ளாதே அவர்களைக் கைக்கொள்வதற்கு அந்த தோஷங்களையே $ பச்சை யாக்குகை—வாத்ஸல்யம், என்னும் ஸத்ஸம்ப்ரதாயப் பொருளில் குறை இறையுமில்லை. 'தோஷங்களை போக்யமாகக் கொள்வதென் பது குணமா? அன்றா?' என்று பொதுவாகக் கேட்கிறோம். எம் பெருமான் விஷயத்திலே இக்கேள்வி கேட்கிறோமென்று கொள் ளாமல் ஸாமாந்யமாகக் கேட்கிறோமென்று கொண்டு விடையளிக்க வேணும்; "ஸம்பந்தவிஶேஷநிபத்தா ப்ரீதி: ஸ்நேஹ:; யஸ்ய விபாகா: ஸ்வஸ்தாநபயஶங்கித்வம், தோஷாநவஹாஸ:, தோஷேऽபி குணத்வபுத்திரித்யாதய:." [உறவினர்களிடத்து வைக்கும் அன்புக்குப் பல பரிபாகங்களுண்டு; அவையாவன:

$ பச்சை—உபஹாரம்,

காரணமின்றியே பயத்தை சங்கிப்பது, தோஷம் தோற்றாதிருக்கை, தோஷத்தையும் குணமாகக்கொள்ளுகை முதலியன.] என்று ச்ருதப்ரகாசிகையிலே அருளிச்செய்திருக்கையாலே, குற்றங்களை யும் நற்றமாகக் கொள்ளுகையென்பது சிறந்த குணமேயாம் என்ன வேணுமேயன்றி, குணமன்றென்னவொண்ணாது. "வாத்ஸல்யம் நாம தோஷேஷ்வபி கு³ணத்வபு³த்³தி:" என்று ஸமந்வயாதிகரண ச்ருதப்ரகாசிகையிலுமுள்ளது. ஆகவே, குணமென்று ஏற்படுகிற விது எம்பெருமானுக்கு இல்லையென்றால் அவனுக்கு ஒரு குணம் குன்றியதாகிறது. அப்போது, பகவத்குணங்களுக்கு இட்ட 'உயர் வறவுயர்' என்ற விசேஷணமும் 'அநவதிகாதிசய' என்ற விசே ஷணமும் பழுதேயாம்.

உண்மையில் தோஷமானவற்றை குணமென்று க்ரஹித்தால் இது ப்ராந்திஜ்ஞாநமாகையாலே எம்பெருமானை ப்ராந்தனென்று சொன்னபடி யாகாதோவென்னில்; ப்ரேமத்தின் கனத்தாலே வரும் ப்ரமமெல்லாம் $ அடிக்கழஞ்சுபெறுமே. 'உலகமடங்கலும் எனக்கு சரீரம், நானொருவனே சரீரி' என்றுரைத்த பெருமான் தானே அதற்கு முரணாக "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" என்று கீதையிலருளிச் செய்தானே: இதனையும் ப்ரமமென்ன வேண் டாவோ? தூப்புலம்மானருளிச்செய்த விரோதபரிஹார ரஹஸ்யத் திலே—"ஸர்வசேஷியான ஸர்வேச்வரன் ஆச்ரிதர்களைப்பற்ற சேஷமாயிருக்குமிருப்பு குணக்ருதமாய் ப்ரீத்யதிசயஹேதுவாகை யாலே தோஷமன்று" என்றுள்ளது கண்டீர்களோ? 1. "உன்ன தென்னதாவியும் என்னதுன்னதாவியும்" என்றவிடத்துக்கு ஆள வந்தாரருளிச் செய்யுமது அறிவீர்களோ? ஸர்வரக்ஷகனை எம் பெருமானை ரக்ஷ்யகோடியிலேயாக்கி மங்களாசாஸநம் பண்ணுவ தும் ப்ராந்திகார்யமென்றிட்டு தூஷிக்கப்படவேணுமே. நோன்பு நோற்கை, காமன்காலிலே விழுகை, மடலூர்வேனென்கை முதலிய ப்ரபந்நஸந்தாநப்ரவ்ருத்திகளையும் ப்ராந்திகார்யமென்றுகொண்டு ஆழ்வார்களையும் இகழவேணுமே. 2. "ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு" 3. "ஸஹஸா நரக்ஷா வ்யவஸி

---

$ அடிக்கழஞ்சுபெறுமென்றது—உத்தமோத்தமம் என்றபடி.

1. திருவய்மொழி 5-3-8. 2. நான்முகன் திருவந்தாதி—10.

3. ஸ்ரீகுணரத்நகோசம்.

ஸிரஸ்யம் ஸாத்விகரநாவஸிஷ்டவைர்ய:” இத்யாதிப்படியே * நல மந்தமில்லதோர் நாட்டிலுங்கூட இருள்தருமாஞாலத்திற்போல பய சங்கைபண்ணிக் கலங்குகின்ற அயர்வறுமமரர்களையும் அறிவிலா மனிசரோடொக்க நினைக்கவேணுமே.

“ஸௌசீல்யம் நாம மஹதோ மந்தைஸ்ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷஸ்வபாவ: ஸ்வமஹத்த்வாபிமானராஹித்யம்” [ஸௌசீல்ய குணமாவது—மந்தஜனங்களோடு தான் கலந்து பரிமாறும்போது, தான் மிகப் பெரியவன் என்கிற எண்ணத்தைத் தவிர்த்துக்கொள்ளுகை] என்று ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் அருளிச்செய்கிறார்; எம்பெருமான் ‘மஹதோ மஹீயாந்” என்னப்பட்ட தன்னை மந்தனிலும் கடைகெட்ட மந்தனாக நினைத்துக்கொள்வது எங்ஙனே கொல் பொருந்துவது?

“ஜ்ஞாநவிபாககார்யமான அஜ்ஞாநத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சுபெறும்” என்ற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்திக்கு இசைந்து, கீழ்ச்சொன்ன விஷயங்களையெல்லாம் உபபந்நமென்னும்போது இக்கணக்கிலேதானே ‘தோஷேஷு குணத்வபுத்தி:’ என்கிற ப்ரக்ருத விஷயத்தையும் பொருந்தவிட ப்ராப்தம்.

அமரஸிம்ஹன் தான் இயற்றிய கோசத்திலே “ஸ்நிக்தஸ்து வத்ஸல: = வத்ஸலனென்றால் ஸ்நேஹமுடையவன்” என்றானே யன்றி “தோஷஜ்ஞஸ்து வத்ஸல: = ப்ரமமுள்ளவன் வத்ஸலன்” என்றானில்லை—என்றொருசோடி சொன்னார் சிலர்; குற்றத்தை நற்றமாகக் கொள்ளுகையென்கிற குணத்வஜ்ஞாநம் ஸ்நேஹவிபாகம்—(அதாவது) அன்பு முற்றின அவஸ்தை என்று ச்ருதப்ரகாசிகையில் அருளிச்செய்திருக்கையாலே, பரமகாஷ்டாபந்ந [—முதிர்ந்த எல்லையில் நின்ற] ஸ்நேஹமேயிறே வாத்ஸல்யமாவது. ஆகையாலே அமரஸிம்ஹன் சொன்னது பொருத்தமுடைத்தே. ச்லோ॥ ஸ்நேஹோ ஹ்யயம் ஸஹவாஸாவயிதயா தோஷே குணத்வம் ஹி வ்யாஜஹேஹி ஸாத்விகைர்நாயகைர்கீ: ஸ்ரீபாஷ்யடீகாக்ருத: । ஸவஸநாவஸிம்ஹகோசபடிதம் ஸ்நிக்தஸ்து வத்ஸல இதி வ்யாக்யாதவத்பிரநவிஷம் ஸஞ்ஜாவதீதி ஸ்புடம்” என்று ஸம்ப்ரதாயஸித்தாஞ்ஜநத்திலும் சொன்னோம்.

தோஷத்தில் தோஷத்வமென்கிற தன்மை எப்போதும் தோற்றிக்கொண்டேயிருக்க, தோஷத்தைக்கண்டு குணமென்று க்ரஹிப்பது எம்பெருமானுடைய ஸர்வஜ்ஞதைக்கும் தத்வஜ்ஞதைக்கும் கொத்தையாம்—என்றும் ஒரு கோடி சொல்லுவர்கள் ; அந்தோ !, 'தோஷத்தைக் காணுதிருக்கை வாத்ஸல்யம்' என்னுங் கொள்கையுடையார் தாமும் இந்த தூஷணத்திற்குப் பரிஹாரம் பண்ணித் தீரவேணுமே. ஸர்வஜ்ஞனுக்கு அஜ்ஞானத்தை அங்கீகரிப்பதோடு அந்யதாஜ்ஞாநத்தை அங்கீகரிப்பதோடு வாசியில்லை கிடீர். ஒரு வஸ்துவை உள்ளபடி அறியாதவளவில், அடியோடு அறியாமையும், ஸம்சயாத்மாவாய்த் திகைத்து நிற்பதும், விபரீதமாக அறிவதும் ஆகிய எல்லாம் துல்ய யோக க்ஷேமமென்பது விவாதமற்ற விஷயமாதலால், எம்பெருமானை இவர்கள் அஜ்ஞனுகச் சொல்லுவதோடு நாம் அந்யதாஜ்ஞாநியாகச் சொல்லுவதோடு ஒரு வாசியில்லையே. [தோஷங்களைக் காணுனென்பது அஜ்ஞனென்றபடி ; தோஷங்களை குணமாகக் கொள்வனென்பது அந்யதாஜ்ஞாநியென்றபடி.]

ஸஹஸ்ரநாமத்திலே "பக்தவத்ஸலः" என்ற திருநாமத்திற்கு பகவத்குண ஊர்ப்பணத்திலே பாஷ்ய மருளிச்செய்யா நின்ற பட்டர் "தல்லாபஸம்ஹ்ருஷ்டத்வாத் அந்யேஷ்வகாமத்வம்—பக்தவாத்ஸல்யம்" [ஓரடியான் கிடைக்கப்பெற்ற பெருமையினால் மற்றதொன்றிலும் ஆசைகொள்ளாது எல்லாவற்றையும் மறந்திருக்கை—பக்தவாத்ஸல்யம்] என்றார் : இந்த ஸ்ரீஸூக்தியின் சுவையை ஆழ்ந்து அறிந்து அநுபவிப்பாரார்? ஸஹஸ்ரநாமத்திலே "ஸஹஸ்ராம்சுः" என்னச்செய்தேயிறே "அவிஜ்ஞாதா" என்கிறது. [ஸஹஸ்ராம்சுः—ஸர்வதோமுகமான ஞானத்தையுடையவன் ; அவிஜ்ஞாதா—(அடியார் செய்யுங் குற்றங்களை) அறியாதவன்.] அஜ்ஞத்வ—ஸர்வஜ்ஞத்வங்களுக்கு ஸாமாநாதிகரண்யத்தை இவர்கள் நிர்வஹிக்கும்போது அந்யதாஜ்ஞாத்ருத்வத்தை நிர்வஹிப்பது தானே அருமைப்படும் ?.

இங்கே ஸூக்ஷ்மமாக ஒன்று ஆராயவேணும் ; எம்பெருமான் அடியார்களின் தோஷங்களைக் காண்பதில்லை என்கிற அர்த்தமும் தோஷங்களை போக்யமாகக் கொள்ளுகிறுனென்கிற அர்த்தமும்

ஆக இரண்டும் நூல்களிலுண்டு; "ஸஹஸ்ராம்சு:" என்ற திருநாமத்தின் பாஷ்யத்திலும் ஸஹாயிகா ச்ருதப்ரகாசிகையிலும் மற்றும் பல விடங்களிலும் $ தோஷாதர்சித்வோக்தி காணலாம். ஆகையாலே எம்பெருமானுக்கு தோஷ போக்யத்வமொழிய $ தோஷாதர்சித்வமே கிடையாதென்று ஸித்தாந்திகள் கூறுமவரல்லர். பூர்வபக்ஷிகளோவென்னில், தோஷாதர்சித்வமாத்திரமிசைந்து தோஷபோக்யத்வத்தை மறுக்கின்றனர்; இரண்டுக்கும் குறையில்லையென்பர் ஸித்தாந்திகள். தோஷாதர்சித்வமும் தோஷபோக்யத்வமும் விருத்த தர்மங்களல்ல; தோஷாதர்சித்வமென்பது ப்ரீதியின் ப்ரதம பர்வமென்றும், தோஷ போக்யத்வமென்பது ப்ரீதியின் சரம பர்வமென்றும் ஆசார்யர்கள் தெளியவைத்தார்கள். எம்பெருமான் சிலர் பக்கல் சிலகாலங்களில் தோஷங்களைக் காணாதவனாகவும், மற்றொருகால் அவர்கள் பக்கலிலேயோ வேறொருவர் பக்கலிலோ தோஷங்களை போக்யமாகக் கொள்பவனாகவுமுளன்—என்றிறே ஸத்ஸம்ப்ரதாயம். இதிலே விப்ரதிபத்திபண்ணில் க்ஷமாகுணமும் தோஷாதர்சித்வத்தோடு விரோதிக்குமென்னவேணும். தோஷங்களைக் காண்பதே யில்லாவிடில் க்ஷமிக்க ப்ரஸக்திதானுமில்லையிறே. "க்ஷமாகாங்க்ஷாஹ்ருத வாத்ஸல்யஸ்யைந க்ஷமாவ்யக்தா பவதி" என்கிறாரே கத்ய பாஷ்யத்தில் தேசிகன்.

ஒரு குணத்தைக்கொண்டு மற்றொருகுணத்தைக் கண்ணழிக்கப்பார்க்கில் பரத்வமொன்றுமே ஓங்கி நின்று மற்ற குணங்களடங்கலும் கடல்புக்கொளிக்கும்படி தர்க்க கௌசலம் காட்டலாகும். * பிணங்கி அமரர் பிதற்றுங் குணங்கெழு கொள்கையினானாகிய எம்பெருமானுடைய குணப்ரஸரத்துக்கு க்ஷுத்ர யுக்திகளாலே கண்ணழிவு சொல்லப்பார்ப்பது வக்தாக்களுக்கே தோஷமாம். எம்பெருமானுடைய ப்ரணயரஸம் இருகரையுமழியப் பெருகப்புக்கால் ஆணையிட்டும் ஆணையிட்டும் தடுக்கவல்லாரில்லைகிடீர். "சாஸ்த்ரங்களெல்லாம் ஒரு தட்டும் அவனுடைய கல்யாண குணப்ரஸரம் ஒரு தட்டுமாயிருக்கும்" என்றிறே பிள்ளானருளிச்செய்வது.

---

$ குற்றங்களைக் காணக்கண்ணிட்டிருக்கிறானென்பது.

எம்பெருமான் தோஷ போக்யனாகில் சேதநன் அச்சங்கெட்டு தோஷங்களைச் செய்யவேண்டி வருமென்று கூறும் தூஷணம் தோஷாதர்சித்வபக்ஷத்திலும் ஸமாநம். எம்பெருமானுடைய க்ஷமாகுணத்தை யறிந்தவர்களும் அஞ்சாதே தோஷங்களைச் செய்யவேண்டி வருமன்றோ? நாம் தோஷம் செய்யாவிடில் எம்பெருமானுடைய க்ஷமாகுணம் புகர்பெறாதென்று நினைத்துக் குற்றம் செய்யப்புகுமவர்களை எங்ஙனே விலக்கவல்லீர்? நாம் அநர்த்தங்களை விளைத்துக்கொள்ளா தொழியில் எம்பெருமானுடைய ஆபத்ஸகத்வ குணம் நிறம்பெறாதென்று நினைத்துத் தன்னைத்தானே நலிந்துகொள்ளப் புகுமவனையும் எங்ஙனே மறுக்கக்கடவீர்?. ஆக இவற்றால், குயுக்திகளைக்கொண்டு பகவத்குணத்தைக் கண்ணழிக்கலாகா தென்றதாயிற்று.

எம்பெருமானுக்கு அளவற்ற குணங்கள் உள்ளன; அவற்றுள் எந்த குணம் எந்த ஸமயத்தில் எந்த வ்யக்தியின்மேல் எந்த விதமாக ப்ரஸரிக்குமென்று நிலையிட வல்லாராருமில்லை. ‘அவனுடைய வாத்ஸல்யகுணத்திற்கு நாமே இலக்கு’ என்கிற நிச்சயவுணர்ச்சி நமக்கிருக்குமாகில், தோஷங்களை புத்திபூர்வகமாகவே செய்யவேண்டி வருமென்கிற தூஷணத்திற்கு இடமுண்டாகலாம். “கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந” [எனக்கே விருப்பமுண்டாம் போது நான் ஏதோவொரு ஸமயத்தில் ஏதோவொரு வ்யக்தியைக் கடாக்ஷிப்பேன்] என்றருளிச் செய்கிற எம்பெருமானை யறிந்துவைத்து ஒருவன் புத்திபூர்வகமாகக் குற்றம்செய்ய முயலக்கூடுமோ? கதாசித்கமாகவும் அபுத்திபூர்வகமாகவும் ஆச்ரிதர்களிடத்தில் ஏதேனும் குற்றங்கள் நேர்ந்திருந்தால் அவற்றை எம்பெருமான் காணுக்கண்ணிட்டிருப்பன்—கண்டாலும் பொறுப்பன்—போக்யமாகவுங் கொள்வன் என்ற தித்தனை.

கடோபநிஷத்தில் [2—4—12.] “அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி। ஈஶாநோ பூதபவ்யஸ்ய நததோ விஜுகுப்ஸதே” என்ற விடத்திற்கு பாஷ்யமுரையாநின்ற ரங்கராமாநுஜஸ்வாமி “பூதபவ்யேஶாநா

[illegible] என்றுரைத்தார். ஸ்ரீதேசிகன் வரதராஜ பஞ்சாசத்திலே "[illegible] ॥" [பரமபதம் முதலிய சிறந்த ஸ்தாநங்களையெல்லாம் இகழ்ந்திட்டுப் பரம ஹேயமான பாவியேனுடலை போக்யமாகக் கொண்டு வர்த்திக்கிறாயே!] என்றார். இப்படிப்பட்ட தோஷ போக்யத்வமே வாத்ஸல்யமென்று இந்த ச்லோகத்தின் வியாக்கியானத்திலும் விசிதமாக வரைந்தார்கள். இந்த தோஷபோக்யத்வத்தை 1. "மங்கவொட்டுன் மாமாயை" என்ற பாட்டிலே ஆழ்வாரும் விளங்க வுரைத்தருளினர்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரபாவ வ்யவஸ்தாதிகாரத்திலே—"என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும் என்றவிடத்தில் போலு மென்று சொல்லுகையாலே இது வஸ்து வ்ருத்தியில் நன்றன்றென்னுமிடம் ஸூசிதம்" என்றருளிச்செய்திருக்கிறாரே யென்னில்;—"பின்தொடர்ந்தோடியோர் பாம்பைப்பிடித்துக் கொண்டாட்டினாய் போலும்" "விளங்காயெறிந்தாய் போலும்" "வாரிவளைத்துண்டிருந்தான் போலும்" "மரமேறியிருந்தாய் போலும்" "நாகத்தினோடு பிணங்கி நீ வந்தாய் போலும்" "எந்தை பெருமானார் மருவி நின்றவூர் போலும்" இத்யாதிகளான பல்லாயிரமிடங்களிலே போலு மென்றதை இசைநிறையாகக் கண்டுவைத்தும், வடமொழியில் "[illegible]" "[illegible]" இத்யாதிகளில் இவ சப்தம்போல இதுவும் தமிழில் ஒருவகை வாக்யாலங்கார மென்றறிந்து வைத்தும் விபரீதார்த்த வர்ணநம் பண்ணினது அபிநிவேச வசத்தாலென்று அடியவர்க்குமெய்யனார் பணிக்கும்படி.

தயாசதகத்திலே "[illegible] ॥" என்றும் "[illegible]

1. திருவாய்மொழி 10—7—10.

"இப்படி எம்பெருமானுக்குள்ள தோஷபோக்யத்வ குணத்தை ஸாக்ரஹமாக இல்லைசெய்யுமவர்கள் நிர்க்குணப்ரஹ்மவாதி கோடியிலே அந்தர்ப்பவிக்கை அழகிது" என்று எண்ணுவாரிடரைக் களைவான்பிள்ளை பணிக்கும்.

முடிவில் ஸாரமாகவொன்று சொல்லித் தலைக்கட்டுகிறோம். எம்பெருமானுக்குப் பல்லாயிரம் குணங்களிருந்தாலும், ஆச்ரிதர்கள் பக்கலிலே அவன் அளவுகடந்த அன்புடையவன் என்னுமிடத்தை நன்கு விளக்கவல்ல குணங்களே ப்ரதாநங்கள். உலகத்திலே அன்பின்மிகுதியை நாம் எங்ஙனே காண்கிறோமென்றால், 'ஹா ஹா! தேவதத்தனுக்கு யஜ்ஞதத்தனிடத்திலே என்ன அன்பு! என்ன அன்பு!!, இவன் எத்தனையபராதங்கள் செய்தாலும் அத்தனையும் அவனுக்கு போக்யமாகிறதேயொழிய ஒன்றுவது இகழ்வுக்கு உறுப்பாகிறதில்லையே; இவன்காலில் முள்தைத்திலும் அவன் கண்ணில் நீர் பெருகுகின்றதே; இப்படியும் ஒருவென்பு இருக்குமோ!" என்று சொற்போக்குகளிருக்கும்படியைப் பாமேலே இக்காணுகின்றோம். ஆகவே, தோஷபோக்யத்வமும் பரதுஃ என்றருளிச்செய்மமாகிற இரண்டு குணங்களே அன்பின்மிகுதியை யோர் பாம்பைம். இவ்விரண்டு குணங்களுக்கும் பூர்வபக்ஷிகள் யெறிந்தாய் போறத்திலே அவத்யம் சொல்லித் தீர்ந்தார்களான "மரமேறியிருந்தாய்ங்களினுண்மையை இசைந்துவைத்தும் பயன் போலும்" "எந்தைமாதாவைப் புகழப்புகுந்தாரொருவன் "நப் இத்யாதிகளான பலத்திரண்டு குணங்களில் இரண்டு குணங்கள் இசைநிறையாகக் கண்டுன்மை தீமைகளைத் தானுமறியான், பிற ஜயாராணாம்" "கயஜிவற்றெல்லாக் குணங்களும் குறைவற்றன' சப்தம்போல இதுவும் தமிழ்வர்கள் பண்ணும் பகவத்குண ப றறிந்து வைத்தும் விபரீதார்த்ரிதர்களிடத்தில் எம்பெருமானுக்கு வசத்தாலென்று அடியவர்க்குமுடைய ப்ரேமகுணத்தை இசைந்த்தை ஸஹிக்கின்றிலராகையாலே

தயாசதகத்திலே "ஜயி [illegible] ஷிகெலொ: காவஸாரவஸதர் ஜிதஜொஷானிதாராநுவிஹிநதீதம் ஸ ஆழ்வான் ஸ்ரீஸூக்திக்கு கூகூஷி: கஜிவாகாஜுஉயெ! கயஂ ஷவிதீ ஆயிரந்தான் சொல்லிலுட

1. திருவாய்மொழி 10—7—10. ஜ்ஞாநமேயாம் என்று

மீண்டுமீண்டும் கலங்கிப்பேசுமவர்களைப்பற்ற ' அந்தோ! கருவிலே திருவிலாமையே !!' என்று இரங்கக்கடவதத்தனை.

இன்னமுமிங்கு விரித்துரைக்கவேண்டுமவற்றை பகவத்குண ரத்நபாண்டாகாரத்திலே விரித்துரைத்தோம், கண்டுகொள்க. (சக)

திருமகளும் மண்மகளு மாய்மகளும் சேர்ந்தால் *
திருமகட்கே தீர்ந்தவா றென்கொல் *—திருமகள்மேல்
பாலோதம் சிந்தப் படநா கணைக்கிடந்த *
மாலோத வண்ணர் மனம். (சஉ)

| | | | |
|---|---|---|---|
| பால் ஓதம் சிந்த | திருப்பாற்கடலில் சிறு திவலைக ளானவை சிதறி விழுந்து ஸுகப்படுத்த, | திரு மகள் மேல் மனம் | பெரிய பிராட்டியார் மேல் (காதல் கொண்ட) திரு வுள்ளமானது, |
| படம் நாக அணை கிடந்த | படமெடுத்த பாம்பினணையிற் பள்ளிகொண்ட | திருமகளும் மண்மகளும் ஆய்மகளும் சேர்ந்தால் | ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி மூவ ரோடும் கலந்து பரிமாறும்போது |
| மால் ஓதம் வண்ணர் | பெரிய கடல் போன்றவடிவை யுடையனான எம்பெருமானது | திருமகட்கே தீர்ந்த ஆறு என்கொல் | பெரிய பிராட்டி யொருத்தியின் மேலே அற்றுத் தீர்ந்திருக்கிற விதம் என்னோ?. |

[திருமகளும்மண்மகளும்.] நாம் மலைபோன்ற குற்றங்களைச் செய்தாலும் எம்பெருமான் அவற்றைக் குணமாகத் திருவுள்ளம் பற்றுவன் என்றார் கீழ்ப்பாட்டில். அப்படி குற்றத்தையும் குண மாகத் திருவுள்ளம் பற்றவேண்டிய காரணம் ஏதென்ன, பிர மார் மூவரும் கூடவே குடியிருக்கை தான் காரணமென்கி ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்னும் மூன்று ளும் கூடியிருக்கும்படியை முதலடியி லருளி

பாலோதம் சிந்தப் படநாகணைக்

திருமகள் மேல் (வைத்த) மனமா என்கொல்? என்கிறார். இடம் அ றங்களுண்டு; தீர்ந்தவாறேல தே ரிடத்திலும் [illegible]ல் உபக.

மகட்கே தீர்ந்தவாறென்கொல்; ஆய்மகட்கே தீர்ந்தவாறென்கொல்' என்று திருமலைஅனந்தாழ்வான் நிர்வஹிப்பராம். இதன் கருத்தை விரித்துரைப்போம் கேண்மின் ;—

ஸௌபரி என்கிற ஒரு மாமுனிவன் நீர் நிலையிலிருந்து கொண்டு தவம்புரியா நின்றவளவில் அங்கு மீன்களெல்லாம் கூடிக்களித்து விளையாடா நின்றமையைக் கண்ணுற்று 'நாமும் இப்படி குடும்பவாழ்க்கையிற் கூடி நின்று சிற்றின்பம் நுகர்ந்து களிக்கவேணும்' என்று ஆவல்கொண்டு மாந்தாதா என்னும் அரசனுக்குப் பல பெண்கள் இருப்பதாக உணர்ந்து அவனிடஞ்சென்று தனக்குக் கன்னிகாதானஞ் செய்யுமாறு வேண்ட, அரசன் இவருடைய கிழத்தனத்தையும் குரூபத்தையுங்கண்டு இசையகில்லாமல் 'பெண்கொடுக்க முடியாதென்று நம் வாயாற் சொன்னால் முனிவர் முனிந்து சபித்துவிடக்கூடும்; பெண்களிருக்குமிடத்திற்கு இவரை யனுப்புவோம்; இவரைக்கண்டு பெண்கள் காமுற்றார்களாகில் விவாஹம் செய்துகொள்ளட்டும். இல்லையாகில் அவர்களே மறுத்துவிடட்டும்; நம் தலையில் பழிவேண்டா' என்றெண்ணி முனிவரைப் பெண்களிருக்குமிடத்திற்குப் போகவிட, முனிவர் அங்குச் செல்லும்போதே தமது தவவலிமையால் திவ்ய ஸௌந்தரமான ரூபத்தை ஏன்று கொண்டுபோய் அவர்கள் முன்னே நின்றவளவில் அங்கிருந்த ஐம்பது பெண்களும் 'நானே இவரை மணந்துகொள்வேன், நானே இவரை மணந்துகொள்வேன்' என்று போட்டி போட்டுக்கொண்டு மேல்விழுந்தவாறே, முனிவர் அத்தனை பெண்களையும் விவாஹஞ்செய்துகொண்டு
[illegible]ந்தனியே அதிமநோஹரமான ஐம்பது மாளிகைகளை நிரு
[illegible]வ்வொரு மாளிகையிலும் ஒவ்வொரு மனைவியைக் குடி
[illegible]த் தமது தவவலிமையால் ஐம்பது வடிவமெடுத்து
[illegible]ந்திலும் இரவும் பகலும் பிரியாதிருந்து
[illegible]ண்களை விசாரித்து வருவோமென்று
[illegible]வ்வொருத்தியின் மாளிகையிலும்
[illegible]சாரித்துவருகையில் தனித்
[illegible]கொண்டதாவது—எனக்

ஐயா[illegible]
சப்தம்போ[illegible]
றறிந்து வைத்[illegible]
வசத்தாலென்று அடிய[illegible]
தயாசதகத்திலே "ஐயி[illegible]
ஸ்ரீதஶோஷாநிதாராநுவிவிநதீதஸ்[illegible]
கூக்ஷி: கலிஹாகாஹுலெ! கயம் ஹவித்[illegible]

1. திருவாய்மொழி 10—7—10.

[illegible]போமவர் என்னை

விட்டுப் பிரியாதிருக்கிறார்; இப்படி என்னொருத்தியிடமே இருந்து விட்டு மற்றவர்களை மறந்திருக்கிறாரே என்னும் துக்கமொன்றே யுள்ளது; என்னுடன் பிறந்தவர்களும் என்னைப்போலே ஆநந்தித்திருக்கவேணுமன்றோ? அப்படியிருக்கப்பெறாத குறையைத் தீர்க்குமாறு நீர் ஜாமாதாவுக்குச் சொல்லிப் போகவேணும்-என்று; இவ்வாறே ஒவ்வொருத்தியும் சொல்லுமாறு அம்முனிவர் எப்படி ஒவ்வொருத்திக்கே அற்றுத் தீர்ந்து பரிமாறினரோ, அப்படி எம்பெருமான் திருமகளிடத்தும் மண்மகளிடத்தும் ஆய்மகளிடத்தும் பரிமாறும்போது, 'நம்மையொழிய மண்மகளைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை' என்று திருமகள் நினைக்கும்படியாகவும், 'நம்மையொழியத் திருமகளைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை' என்று மண்மகள் நினைக்கும்படியாகவும், இப்படியே ஆய்மகளும் நினைக்கும்படியாகவும் ஒவ்வொருதேவிக்கும் விலக்ஷணஸம்ச்லேஷரஸத்தைத் தந்து பரிமாறுகிறபடியைச் சொல்வதாக அனந்தாழ்வானுடைய நிர்வாஹம்.

இங்ஙனன்றிக்கே பட்டருடைய நிர்வாஹம்—திருமகட்கே தீர்ந்தவாறென்கொல்?=திருமகளோடு கலந்து பரிமாறும்போது மண்மகள் முதலிய மற்ற பிராட்டிமார்கள் போகத்திற்கு உபகரணமாயிருப்பர்கள்; திருமகளோடு ஸம்ச்லேஷிப்பதைத் தங்கள் முலையோடும் தோளோடும் ஸம்ச்லேஷிப்பதுபோலவே நினைத்திருப்பர்கள். ஆகையாலே மற்ற தேவிமார்களை உபகரண கோடியிலேயாக்கித் திருமகள் பக்கலிலேயே பிரதான போகம் கொள்வது என்கொல்?—என்று. பட்டருளிச்செய்த ஸ்ரீகுணரத்நகோசத்தில் "ஸாம்யா ஸாரஸி நாத²ரீயகதயா வக்ஷஸ்தலம் ஸ்ரீபதே: ஸௌஹார்த³ம் நிவ்ருத்தபூணயாதிஸாஹஸிகய நீதா: ஸகீர் ஸாஹதா:। தேவி! த்வாஸந் நீலயாலஹ ஸஹீ தேவ்யுஸ்ஸஹஸ்ரம் தயா யாஹிஸ்த²ம் ஸ்நவாஹாதூஷிணிரிவ ஸ்வாஹி: ப்ரியம் ஸ்ராவயெ ॥" [வாரீர் பெரிய பிராட்டியாரே! தேவரீரும் பெரிய பெருமாளும் ஸம்ச்லேஷரஸம் அநுபவிக்கும்போது மண்மகளும் ஆய்மகளும் மற்றுள்ள பல தேவிமார்களும் புஷ்பம் சந்தனம் முதலிய ஸாமக்ரிகள்போல உபகரண கோடியிலே நிற்பர்கள்;

அத்தேவிமார்களை நீர் திருமுலை திருத்தோள் முதலிய அவயவங்களாகக்கொண்டு பெருமாளை ரமிப்பிக்கின்றீர்.] என்ற ச்லோகமும் இங்கு அநுஸந்திக்கத்தகும்.

தீர்ந்தவாறு—தீருகையாவது—ஒரு வஸ்துவைவிட்டு மற்றொரு வஸ்துவில் சிறிதும் நெஞ்சு செல்லாமல் அந்த ஒரு வஸ்துவிலேயே ஆழங்காற்பட்டிருக்கை. 1. "தாமரைக்கண்களுக்கு அற்றுத் தீர்ந்தும்" என்ற திருவாய்மொழிப் பிரயோகமுங் காண்க. (௬௨)

மனமாசு தீரு மருவினையுஞ் சாரா *
தனமாய தானே கைகூடும் *—புனமேய
பூந்துழா யானடிக்கே போதொடு நீரேந்தி *
தாந்தொழா நிற்பார் தமர். (௬௩)

| | |
|---|---|
| புனம் மேய பூ துழாயான் அடிக்கே | தன்னிலத்தி லிருப்பதுபோலவே செவ்வி குன்றாதிருக்கிற திருத்துழாயை அணிந்துள்ள எம்பெருமான் திருவடிகளில் |
| போதொடு நீர் ஏந்தி | (திருவாராதநத்துக்கு உபகரணமான) புஷ்பங்களையும் தீர்த்தத்தையும் எடுத்துக்கொண்டு |
| தொழா நிற்பார் தமர் தாம் | வணங்குமவர்களான பாகவதர்களுக்கு |
| மனம் மாசு தீரும் | மனக்குற்றங்கள் விட்டு நீங்கும்; |
| அரு வினையும் சாரா | (ஸ்வப்ரயத்நத்தால்) நீக்கமுடியாத தீவினைகளும் அணுகமாட்டா; |
| தனம் ஆய | (பக்திமான்களுக்கு) செல்வமாகிய பரமபக்தி முதலியவைகளும் |
| தானே கைகூடும் | தனக்குத்தானே வந்து கைபுகுரும். |

[மனமாசுதீரும்.] கீழ்ப்பாசுரத்திலருளிச்செய்தபடி பிராட்டிமார்கள் இடைவிடாது கூடியிருக்கையாலே ஒருவரும் தங்கள் குற்றங்களை நினைத்துப் பின்வாங்கவேண்டுவதில்லை; ஸ்வரூபத்துக்குச் சேர்ந்த கிஞ்சித்காரங்களிலே அந்வயிக்கலாம்; அப்படி அந்வயிக்கவே தீமைகளெல்லாம் தொலைந்து நன்மைகள் கைகூடுமென்கிறார். ஸர்வரக்ஷகன் என்பது விளங்கத் தனிமாலையிட்டிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளில் திருவாராதன உபகரணங்க

1. திருவாய்மொழி 7—3—3.

ளான புஷ்பம் தீர்த்தம் முதலியவற்றை யேந்திக்கொண்டு வந்து பணிமாறி வழிபடுமவர்களுக்கு—மநஸ்ஸைப் பற்றிக்கிடக்கிற அஜ்ஞாநம் விஷயராகம் முதலான தோஷங்களடங்கலும் தன்னடையே விட்டுக்கழலும்; இவற்றுக்கு மூலகாரணமான துஷ்கருமங்களும் கிட்டவராதபடி தொலைந்துபோம்; ஸ்வரூபாநுரூபமான செல்வமாகிய பரமபக்தி முதலியவைகளும் தனக்குத்தானே வந்து கைபுகுரும் என்றதாயிற்று.

மனம், தனம்—வடசொல்விகாரம். பாகவதர்களுக்கு பகவத்பக்தியே பெருஞ்செல்வமாதலால் 'தனமாய' என்றார். 1. "நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்" என்னும்படியிருப்பர்கள் பாகவதர்கள். ... ... (சங)

தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவம் தானே *
தமருகந்த தெப்பேர் மற்றப்பேர் *—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே *
அவ்வண்ண மாழியா னும். (சச)

ஆழியான் — திருவாழியாழ்வான் முதலிய நித்ய ஸூரிகளைப் பரிஜநமாகவுடைய எம்பெருமான்,
தமர் உகந்தது எவ்வுருவம் — ஆச்ரிதர்களால் உகக்கப்பட்ட உருவம் எதுவோ,
அவ்வுருவம் தானே ஆம் — அவ்வுருவமாகத் தான் பரிணமமடைவன்;
தமர் உகந்தது எப்பேர் — ஆச்ரிதர்களால் உகக்கப்பட்ட திருநாமம் எதுவோ
அப்பேர் ஆம் — அந்தத் திருநாமமே தனக்காம்படியிருப்பன்;
தமர் — ஆச்ரிதர்கள்
உகந்து — உகப்புடனே
எவ்வண்ணம் சிந்தித்து — குணம் சேஷ்டிதம் முதலியவற்றில் யாதொரு விதத்தை அநுஸந்தித்து
இமையாது இருப்பர் — ஓயாமல் பாவனை பண்ணிக்கொண்டிருப்பர்களோ
அவ்வண்ணம் ஆம் — அவ்வண்ணமே யாவன்.

[தமருகந்ததெவ்வுருவம்.] கீழ்ப்பாசுரத்தி லருளிச்செய்தபடி ஆச்ரிதர்கள் அடிமை செய்யுமளவில், எந்த ரூபத்தையும் எந்த

1. பெருமாள் திருமொழி 5—9.

நாமத்தையும் இவர்கள் உகந்திருப்பர்களோ அந்த ரூப நாமங்களையே யுடையனாகத் தன்னை அமைத்துக்கொண்டு அர்ச்சாவதார ரூபியாய் இங்கே அடிமைகொள்வனென்கிறார். தமர்கள் கல்லையோ மண்ணையோ லோஹங்களையோ எதை உருவமாக்கினாலும் அதையே தனக்கு அஸாதாரண விக்ரஹமாகப் பரிக்ரஹித்து அதிலே ஸந்நிதாநம்பண்ணி யெழுந்தருளியிருப்பன். அந்த விக்ரஹத்தில் தமர்கள் எந்த திருநாமத்தையிட்டு வழங்குவர்களோ அந்தத் திருநாமத்தையே நாராயணாதி நாமங்கள்போல விரும்பிக் கொண்டிருப்பன். மற்றும், குணம் சேஷ்டிதம் முதலியவற்றில் எந்த குணசேஷ்டிதங்களை அநுஸந்தித்து அநவரதபாவனை பண்ணுவர்களோ, அவற்றையே கொண்டிருப்பன்—என்று அர்ச்சாவதார ஸௌலப்யத்தை யருளிச்செய்தாராயிற்று.

இப்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் சில ஐதிஹ்யங்கள் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றன:—"எம்பெருமானார் மாதுகரத்துக்கு எழுந்தருளாநிற்க, சில பிள்ளைகள் காலாலேகீறி 'உம்முடைய எம்பெருமான் திருமேனி' என்று காட்ட, பாத்ரத்தை வைத்துத் தண்டனிட்டருளினார்." [எம்பெருமானார் பிக்ஷைக்காகத் திருவீதியில் எழுந்தருளா நிற்கையில் தெருப் புழுதியில் விளையாடிக்கொண்டிருந்த சிறுபிள்ளைகள் திருவாழிதிருச்சங்கு முதலியவற்றோடே ஒரு உருவத்தைத் தரையிலே கீறி 'உடையவரே! உம்முடைய பெருமாள் பார்த்தீரா?' என்றழைத்துக்காட்ட, உடையவரும் "தமருகந்த தெவ்வுருவமவ்வுருவந்தானே" என்ற இப்பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றி அந்தக் கீறலை மெய்யே பகவத்விக்ரஹமாகப் பிரதிபத்திபண்ணி தண்டனிட்டருளினார்.]

"கோயிலிலே சில பிள்ளைகள் விளையாடுகிறவர்கள் திருவீதியிலேயிருந்து பெருமாளும் நாய்ச்சிமாரும் பெரிய திருமண்டபமும் கற்பித்துப் பெருந் திருப்பாவாடையும் அமுதுசெய்வித்து 'எம்பெருமானார்! ப்ரஸாதப்படும்' என்று மணலைக் கையாலே முகந்தெடுக்க, தத்காலத்திலே மாதுகரத்துக் கெழுந்தருளுகிறவுடையவர், அவ்விடத்திலே அது கேட்டருளித் தெண்டனிட்டு அவர்க

ளெடுத்த ப்ரஸாதத்தைப் பாத்ரத்திலே ஏற்ருர் என்று ஜீயரருளிச்செய்தார்." [=நம்பெருமாள் ஸந்நிதியில் நடக்கிற ரீதிகளை அப்படியே அபிநயித்துத் தெருப்புழுதியில் ஒருநாள் விளையாடிக் கொண்டிருந்த சிறுபிள்ளைகள் ஒரு கொட்டாங்குச்சியில் மண்ணை வாரியெடுத்துக்கொண்டு, ஸந்நிதியில் அருளிப்பாடுகள் சொல்லுகிற க்ரமத்திலே சொல்லிக்கொண்டு வரும்போது "ஜீயோ!" என்று அருளிப்பாடு சொல்லிக்கூவ, அந்த ஸமயத்தில் யாத்ருச்சிகமாக பிக்ஷைக்கெழுந்தருளிக் கொண்டிருந்த உடையவர் இவ் விளையாட்டொலியைக் கேட்டு மெய்யே ப்ரதிபத்தி பண்ணி 'நாயிந்தே!' என்று சொல்லிக்கொண்டேபோய் ஸேவித்து அந்த மண்ணைச் சிக்கத்தில் ஏற்றுக்கொண்டார்.]

"எங்களாழ்வார் பாடே ஆயர்தேவு சென்று நாவற்பழம் வேண்ட, 'நீயார்?' என்று அவர்கேட்க, ஜீயர்மகனை ஆயர்தேவு, என்ன, ஜீயரைக்கண்டு உம்முடைய பிள்ளை எங்களைக் குடியிருக்க வொட்டுகிறிலன் என்ருர்." [=நஞ்சீயருடைய திருவாராதனப் பெருமாளுக்கு ஆயர்தேவு என்று திருநாமம். அப்பெருமாள், திருக்குருகைப்பிரான்பிள்ளானுடைய சிஷ்யரான எங்களாழ்வானுக்கு ஸ்வப்நத்திலே ஸேவைஸாதித்து, தான் இன்னுனென்று தெரிவித்து நாவற்பழம்யாசிக்க, மறுநாள் எங்களாழ்வான் நஞ்சீயரைக் கண்டு 'உங்கள் பெருமாள் நாவற்பழத்துக்காக என்பிராணனை வாங்குகிருரே' என்று விநோதமாக ஸாதித்தாராம். கண்ணபிரானை விபவத்தில் உகந்திருந்த நாவற்பழத்தை அர்ச்சையிலும் உகந்தபடி சொல்லிற்றென்க.]

"தமருகந்ததெவ்வண்ணம்" என்று பலரும் அஸம்பத்தமாக ஓதுவர்கள்; அது பாடமன்று; பொருளுக்கும் சேராது; "தமருகந்தெவ்வண்ணம்" என்றே ஓதுக. ... ... (சச)

ஆமே யமரர்க் கறிய வதுநிற்க *
நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே *—பூமேய
மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியை *
பாதமத்தா லெண்ணினன் பண்பு. (சரு)

நல் நெஞ்சே — நல்ல மனமே!,

பூ மேய மா தவத்தோன் தாள் பணிந்த — திருநாபிக் கமலத்திற்பொருந்திய மஹாதபஸ்வியான பிரமனுடைய பாதத்திலே வந்து ஆச்ரயித்த

வாள் அரக்கன் — கொடிய இராவணனுடைய

நீள் முடியை — நீண்ட பத்துத் தலைகளையும்

பாதம் அத்தால் எண்ணினான் பண்பு — அந்தத் திருவடிகளாலே கீறி எண்ணிக் காட்டின எம்பெருமானுடைய குணம்

அமரர்க்கு அறிய ஆமே — பிரமன் முதலிய தேவர்கட்கு அறியக் கூடியதோ?

அது நிற்க — அவர்கள் அறிய வல்லரல்லர் என்பது கிடக்கட்டும்;

நாமே அறிகிற்போம் — (எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபாகடாக்ஷத்திற்குப் பாத்திரமாகிய) நாம் அறியக் கடவோம்.

[ஆமேயமரர்க்கறிய.] இப்பாட்டின் பின்னடிகளில் அநுஸந்திக்கப்பட்டிருக்கும் பகவத்கதை மூன்றாந்திருவந்தாதியில்—"ஆய்ந்தவருமறையோன் நான்முகத்தோன் நன்குறங்கில், வாய்ந்த குழவியாய் வாளரக்கன்—ஏய்ந்த, முடிப்போது மூன்றேழென்றெண்ணினான், ஆர்ந்த அடிப்போது நங்கட்கரண்." என்ற எழுபத்தேழாம் பாட்டிலும், நான்முகன் திருவந்தாதியில்—"கொண்டு குடங்கால் மேல்வைத்த குழவியாய், தண்டவரக்கன் தலைதாளாற் பண்டெண்ணிப்—போங்குமரன்........" என்ற நாற்பத்துநாலாம் பாட்டிலும் பேயாழ்வாராலும் திருமழிசைப்பிரானாலும் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. முன்பு இராவணன் தனது பத்துத்தலைகளை மறைத்துக்கொண்டு நான்முகனிடஞ் சென்று வரம் வேண்டிக்கொள்ளுமளவில் எம்பெருமான் ஒரு சிறுகுழந்தை வடிவாய் அப்பிரமனுடைய மடியிலே உறங்குவான்போலே கிடந்து 'இவன் பத்துத்தலைகளையுடைய இராவணன்; ஸ்வஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டு உன்னை வஞ்சித்து வரம் வேண்டிக்கொள்ள வந்திருக்கிறான்; இவனுக்கு நீ வரமளித்தால் பெருந்தீங்காக முடியும்' என்று தெரிவிப்பவன்போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத்தலைகளையும் எண்ணிக்காட்டினன்—என்பதாக

இவ்வரலாறு விளங்குகின்றது. இக்கதை இதிஹாஸ புராணங்களில் உள்ளவிடம் தெரியவில்லை; பெரியாழ்வார் திருமொழியில் 1. "சீமாலிக னவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்" என்றும் 2. "எல்லியம் போதினிதிருத்தலிருந்ததோரிடவகையில், மல்லிகைமாமாலை கொண்டங்கார்த்ததுமோரடையாளம்" என்றும் அருளிச்செய்த கதைகள் வ்யாஸர் வால்மீகி முதலிய முனிவர்களால் ஸாக்ஷாத்கரிக்கப்படாமல் ஆழ்வாரால் மாத்திரம் $ நிர்ஹேதுக கடாக்ஷமடியாக ஸாக்ஷாத்கரிக்கப்பட்டவை என்று நம் பூருவாசாரியர்கள் நிர்வஹித்திருப்பதுபோலவே இக்கதையும் ஆழ்வார்களால் மாத்திரம் ஸாக்ஷாத் கரிக்கப்பட்டதென்று பெரியோர் கூறுவர். இனி, இதற்கு இதிஹாஸ புராணங்களில் ஆகரமுண்டேல் கண்டுகொள்க. விரிவும் வல்லார் வாய்க் கேட்டுணர்க.

பூமேய மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியைப் பாதமத்தா லெண்ணினானை எம்பெருமானுடைய குணங்களைத் தேவர்களால் அறியமுடியாது; எம்பெருமானுடைய திருவருளாலேதெளியக் காணவல்ல நாமே அறியவல்லோம்—என்பது ஒரு பொருள்; தேவர்களை அறியமாட்டாதபோது நாமோ அறியக் கடவோம் என்று நைச்சியமாகச் சொல்லிக் கொள்வதாக மற்றொரு பொருள்.

பாதமத்தால—பாததததால ... ... ... (சரு)

பண்புரிந்த நான்மறையோன் சென்னிப் பலியேற்ற *
வெண்புரிநூல் மார்பன் வினைதீர *—புண்புரிந்த
வாகத்தான் தாள்பணிவார் கண்டீர் * அமரர்தம்
போகத்தால் பூமியாள் வார். (சசு)

| | | | |
|---|---|---|---|
| பண் புரிந்த நான்மறையோன் | ஸ்வரங்களோடு கூடின நால் வேதங்களை நிரூபகமாக வுடையனான பிரமனுடைய | சென்னி | தலையில் [கிள்ளி யெறிந்ததனால் கையிலொட்டிக்கொண்ட கபாலத்தில்] |
| | | பலி ஏற்ற | பிச்சை யெடுத்துத் திரிந்தவனும் |

(1) 2—7—8. (2) 3-10—2.

$ பெரியாழ்வார் திருமொழி 5—4—6 பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் காண்க.

| | | | |
|---|---|---|---|
| வெண் புரி நூல் மார்பன் | வெளுத்த யஜ்ஞோபவீதத்தை மார்பிலே அணிந்தவனுமான ருத்ரனுடைய | தாள் | திருவடிகளை |
| | | பணிவார் | ஆச்ரயிக்குமவர்கள் |
| வினை | ப்ரஹ்மஹத்தி பாபமானது | அமரர்தம் போகத்தால் | நித்யஸூரிகளின் போகமாகிய பரமபதாநுபவத்தோடு |
| தீர | நீங்கும்படியாக (ரக்த ஜலத்தை எடுத்துக் கொடுப்பதற்காக) | | |
| புண் புரிந்த ஆகத்தான் | தன்னுடைய திருமார்பைப் புண்படுத்திக் கொண்டவனான எம்பெருமானுடைய | பூமி | இந்தலீலா விபூதியை |
| | | ஆள்வார் | ஆட்சிபுரிவர்கள். |

* * *—[பண்புரிந்தநான்மறையோன்.] பிரமனுக்கு அருள் செய்தமையைக் கீழ்ப்பாட்டிற்சொன்னர்; சிவனுக்கு அருள்செய்தமையைச் சொல்லுகிறுரிதில். ஒரு காலத்திலே பரமசிவன், தன்னைப்போலவே பிரமனும் ஐந்துதலையுடையனுயிருப்பது பலரும் பார்த்து ப்ரமிப்பதற்கு இடமாயிருக்கிறதென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக்கொள்ளவே, அவன் 'இதற்கு என்ன செய்வது' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவம் தொலையப் பிச்சையெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு நீங்கும்' என்றுகூற, சிவபிரான் பலகாலம் பல தலங்களிலுஞ் சென்று பிச்சையேற்றுக் கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நிறையாமையாலே நீங்காதிருக்க, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தை யடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கிப் பிரார்த்தித்தவளவில் எம்பெருமான் தனது திருமார்பை நகத்தாலேகீறி அதில் நின்றும் பெருகின ரத்தநீரை யெடுத்து 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது என்பது பண்புரிந்த நான்மறையோன்சென்னிப் பலியேற்ற வண்புரிநூல் மார்பன்வினைதீர்த்த வரலாறு. சிவனுடைய வினையைத் தீர்ப்பதற்காகத் தனது திருமார்பை நகத்தால்கீறிப் புண்படுத்திக்கொண்டது

பற்றிப் புண்புரிந்தஆகத்தான் என்றார். இப்படி பரோபகார சீலனான பெருமானுடைய திருவடிகளைப் பணியுமவர்களே உபய விபூதியையும் ஆளவல்ல பாக்யசாலிகள்—என்றாராயிற்று. 1. "வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்ற திருவாய்மொழிப் பாசுரம் இங்கு நினைக்கத்தகும்.

போகம், பூமி—வடசொற்கள். ... ... (௪௬)

வாரிசுருக்கி மதக்களி றைந்தினையும் *
சேரி திரியாமல் செந்நிறீஇ *—கூரிய
மெய்ஞ்ஞானத் தாலுணர்வார் காண்பரே * மேலொருநாள்
கைந்நாகங் காத்தான் கழல். (௪௭)

| | | | |
|---|---|---|---|
| மதம் களிறு ஐந்தினையும் | மதம்பிடித்த ஐந்து யானைகள் போன்ற பஞ்சேந்திரியங்களையும் | மெய் ஞானத்தால் | உண்மையான பக்திரூபாபந்ந ஞானத்தாலே |
| வாரி சுருக்கி | ஜலம்போன்ற சப்தாதி விஷயங்களில் நின்றும் இழுத்துப் பிடித்து | உணர்வார் | (அவனை) உள்ளபடி உணரவல்லவர்கள் |
| சேரி திரியாமல் செம் நீறீஇ | கண்டவிடங்களிலும் திரியவொட்டாமல் செவ்வையாக நிலைநிறுத்தி | மேல் ஒரு நாள் | முன்பொரு காலத்திலே |
| கூரிய | மிகவும் ஸூக்ஷ்மமான | கை நாகம் காத்தான் | கஜேந்திராழ்வானை ரக்ஷித்தவனான அப்பெருமானுடைய |
| | | கழல் | திருவடிகளை |
| | | காண்பர் | கண்டு அநுபவிக்கப் பெறுவர்கள். |

* * *—[வாரிசுருக்கி.] கீழ்ப்பாட்டில் "புண்புரிந்த வாகத்தான் தாள்பணிவார் கண்டீர் அமரர்தம் போகத்தால் பூமியாள்வார்" என்றார்; எம்பெருமானது தாள்களைப்பணிதல் யார்க்குக் கைகூடும்? என்று கேள்வியுண்டாக, இந்திரியங்களை அடக்கி ஆள்பவர்களே எம்பெருமான் திருவடியைப் பணிதற்குப் பாங்குடையார் என்கிறாரிதில்.

இந்திரியங்களை அடக்கியாளுதல் மிகவும் அரிது என்பது தோன்ற, அவ்விந்திரியங்களை மதம்பிடித்தயானையாக உபசரித்துக்

கூறுகின்றார். யானைகள் நீர்நிலையில் புகுந்தால் முதலை முதலிய ஜலஜந்துக்களால் துன்பம் நேரிடுவது ஸம்பாவிதமாதலால் அங்குப்போகாதபடி சுருக்கவேணும் யானையை; அப்படியே, பிரகிருதத்தில் நீர்நிலையாவது—விஷயாந்தரங்கள்; இந்திரியங்களாகிற மதயானைகள் சப்தாதி விஷயங்களினருகிற் சென்றால் துன்பம் நேரிடுவது திண்ணமாதலால் அவற்றில் நின்றும் சுருக்கவேணும் இவற்றை; இதுவே "வாரிசுருக்கி" என்பதன் கருத்து. வாரி என்னும் வடசொல்லுக்கு 'நீர்' என்று பொருள்; நீரானது எப்படி விடாயைப் பிறப்பிக்குமோ அப்படி விஷயங்களும் விடாயைப் பிறப்பிக்கின்றன வென்பதுபற்றி விஷயங்களை 'வாரி' என்ற சொல்லாற் குறித்தன ரென்க. "வாரி சுருக்கி" என்றதே போதுமாயிருக்க, மறுபடியும் "சேரிதிரியாமல் செந்நிறீஇ" என்றது—பலாத்கரித்தாகிலும் இந்திரிய மதயானைகளை விஷய வீதிகளில் நின்றும் மடக்கியடக்கி ஆளவேண்டுவது அவசியம் என்பதற்காக வென்க. நிறீஇ—சொல்லிசையளபெடை.

ஆகவிப்படி இந்திரியங்களை வென்று பாரமார்த்திகமான பக்திரூபாபந்நஜ்ஞாநத்தாலே அவனை உள்ளபடி உணரக்கூடியவர்கள் யாரோ, அவர்கள் அவனுடையதிருவடிகளை ஸேவிக்கப்பெறுவர்கள்—என்றாராயிற்று. "கைந்நாகங்காத்தான் கழல்" என்ற சொல்லாற்றலால் ஸ்ரீகஜேந்திராழ்வான் போல்வார் இப்படிப்பட்ட வதிகாரிகள் என்பது ஸூசிப்பிக்கப் பட்டதாம். ... (சஎ)

கழலொன் றெடுத்தொருகை சுற்றியோர் கைமேல்
சுழலும் சுராசுரர்க ளஞ்ச *—அழலும்
செருவாழி யேந்தினான் சேவடிக்கே செல்ல *
மருவாழி நெஞ்சே மகிழ். (சஅ)

| | | | |
|---|---|---|---|
| ஆழி நெஞ்சே | கம்பீரமான மனமே!, | ஒரு கை | ஒரு திருக்கையாலே |
| (முன்பு திரிவிக்ரமாவதார காலத்தில்) | | சுற்றி | (பிரதிகூலரான நமுசி முதலானவர்களைச்) சுழற்றி யெறிந்து |
| ஒரு கழல் | ஒரு திருவடியை | | |
| எடுத்து | மேலுலகங்களிலே செல்ல நீட்டி, | ஓர் கை மேல் | மற்றொரு திருக்கையிலே, |

| | |
|---|---|
| சுழலும் சுராசுரர்கள் அஞ்ச அழலும் செரு ஆழி ஏந்தினன் | (இவனுக்கு என்ன நேரிடுமோ வென்று) தவிக்கிற (அநுகூலரான) தேவர்களும் (பிரதிகூலரான) அசுரர்களும் அஞ்சும்படியாக (எதிரிகளின் மேல்) அழலையுமிழ்கிற யுத்தஸாதநமான சக்கரத்தை ஏந்தின எம்பெருமானுடைய |
| சே அடிக்கே செல்ல | திருவடிகளிலே சென்று கிட்டும்படி |
| மருவு | பொருந்துவாயாக; |
| மகிழ் | இதை ஆநந்தரூபமாக ஏற்றுக்கொள். |

* * *—[கழலோன்றேடுத்து.] உலகளந்த பெருமானுடைய திருவடிகளைப் பணிந்து மகிழ்ந்திரு என்று திருவுள்ளத்தைத் தேற்றுகின்றார். ஸ்ரீவாமநமூர்த்தி மஹாபலியினிடத்தினின்றும் தானம் வாங்கினவுடனே திரிவிக்கிரமனாய் மூன்றடி மண்ணையளக்கப்புக, அதைக்கண்ட மஹாபலிபுத்திரனான நமுசி யென்பவன் ஓடிவந்து ‘ இது என்ன அநியாயம்!’ என்றுசொல்லி வளருகின்ற திருவடியைத்தகைய, ஸ்ரீவிஷ்ணு ‘நீ ஏன் தகைகிறாய்? நான் தானம் பெற்றதை அளந்துகொள்ள வேண்டாவோ’ என்ன; நமுசி ‘நீ செய்கிறது கபடமன்றோ’ என்ன; ஸ்ரீவிஷ்ணு ‘உன்னுடைய தகப்பன் எனக்குத் தாரைவார்த்து தத்தம் பண்ணினது பொய்யோ? என்ன; நமுசி ‘என்னுடைய பிதா உன்னுடைய மோசவகை தெரியாமல் உன்வஞ்சனத்தில் அகப்பட்டுக்கொண்டான்’ என்ன; ஸ்ரீவிஷ்ணு ‘நான் செய்வதை வஞ்சகமென்று எதனாற்சொல்லுகிறாய்?’ என்ன; நமுசி ‘நீ செய்வது வஞ்சனமன்றாகில் நீ முன்பு யாசித்தபோதிருந்த வடிவத்தைக்கொண்டு அளந்துகொண்டுபோ’ என்ன, ஸ்ரீவிஷ்ணு, ‘சரீரமென்பது எப்போதும் ஒரே தன்மையாக இருக்கமாட்டாதே; விகாரப்படுந் தன்மையுடையதுகாண்; முன்னைய வடிவத்தைக்கொண்டு எப்படி அளக்க முடியும்?’ என்ன, இப்படி ஸமாதானஞ் சொல்லவுங் கேளாமல் தான் பிடித்த திருவடியின் பிடியை விடாமல்

உறுதியாயிருந்த நமுசியை வளர்ந்த திருவடியினால் ஆகாயத்திலே கொண்டுபோய்ச் சுழன்று விழும்படி செய்தானென்ற கதை "என்னிதுமாயம் என்னப்பனறிந்திலன், முன்னைய வண்ணமே கொண்டு அளவாயென்ன, மன்னு நமுசியை வானில் சுழற்றிய, மின்னுமுடியனே!" என்ற பெரியாழ்வார் திருமொழிப் பாசுரத்தில் விரிய அநுஸந்திக்கப்பட்டுள்ளது; அஃது இப்பாட்டில் "ஒருகை சுற்றி" என்றதனால் சுருங்க அநுஸந்திக்கப்பட்டதென்க.

"ஓர்கைமேல் அழலும் செருவாழியேந்தினான்" என்று அந்வயம். [சுழலும் சுராசுரர்கள் அஞ்ச.] 'சுழலும்' என்ற விசேஷணம் 'சுராசுரர்கள்' என்ற பதத்தின் ஏகதேசமான சுரர்களிடத்தில் அந்வயிக்கும். முதலே பிடித்து சுக்கிரன் நமுசி முதலானவர்கள் தடை செய்துகொண்டே வருவதைக்கண்ட தேவர்கள் 'இக்காரியம் இடையூறொன்றுமின்றிப் பூர்த்திபெற வேணுமே; இடையில் என்ன தீங்கு நேரிடுமோ!' என்று குடல் குழம்பியிருந்தமையைச் "சுழலும்" என்ற விசேஷணம் தெரிவிக்கும் இந்த விசேஷணத்தை அசுரர்களிடத்திலும்கூட அந்வயிக்கலாம்; 'நமக்கு எவ்வளவு தீங்கு நேரிடுமோ!' என்று அசுரர்கள் கவலைகொண்டிருக்கின்றமையைக் கூறியவாறு. ஆகவிப்படி த்ரிவிக்ரமாவதாரம் செய்தருளின பெருமானுடைய திருவடிகளிலே சென்று கிட்டும்படி நெஞ்சே! நிரந்தரமாகப் பொருந்தியிருக்கப்பார்; இதை வருத்தமாகக் கொள்ளாமல் ஆநந்த ரூபமாகவும் கொள்—என்று தம் திருவுள்ளத்திற்கு உபதேசித்தாராயிற்று. .... ... (சஅ)

மகிழலகு ஒன்றேபோல் மாறும் பல்யாக்கை *
நெகிழ முயல்கிற்பார்க் கல்லால்*—முகிழ்விரிந்த
சோதிபோல் தோன்றும் சுடர்போன் நெடுமுடி * எம்
ஆதிகாண் பார்க்கு மரிது.

(சகூ)

| | | | |
|---|---|---|---|
| மகிழ் அலகு ஒன்றே போல் | (கணக்கில் நிபுணனை ஒருவனால் வைக்கப்பட்ட) ஒரு மகிழம் விதையே காணிஸ்தாநத்திலும் கோடிஸ்தாநத்திலும் மாறிமாறி நிற்பதுபோல | மாறும் பல் யாக்கை | மாறிமாறிப் பல வகையாக வருகின்ற சரீரங்கள் |
| | | நெகிழ | தன்னைடையேவிட்டு நீங்கும்படியாக |

| | |
|---|---|
| முயல்கிற்பார்க்கு அல்லால் | முயற்சிசெய்யக் கூடியவர்களுக்குத்தவிர, |
| ஆர்க்கும் | மற்ற எவர்க்கும் |
| முகிழ் விரிந்த சோதி போல் தோன்றும் சுடர் பொன் நெடு முடி எம் ஆதி காண்பு | விண்டு விரிந்த தேஜஸ்ஸைப் போல் தோன்றுகிற தேஜஸ்ஸையுடைய அழகிய பெரிய திருவபிஷேகத்தையுடையனான எம்பெருமானைக் காண்பது |
| அரிது | கூடாதகாரியம். |

* * *—[மகிழலகு.] தேவயோநிகளென்றும் மநுஷ்யயோநிகளென்றும் திர்யக்யோநிகளென்றும் பலவகைப்பட்ட யோநிகளில் பிறப்பதும் இறப்பதுமாகிற ஸம்ஸாரத்தைத் தொலைத்துக் கொள்ள விருப்பமுடையவர்களுக்கே எம்பெருமானைக் காணுதல் கைகூடு மென்கிறார். பலகறை, மகிழம்விதை முதலியவற்றைக் கொண்டு கணிதம் பார்க்கிற முறைகள் சிலவுண்டு; அந்த கணிதத்தில் காணிஸ்தாநமென்றும் கோடிஸ்தாநமென்றும் பாகுபாடுகளுமுண்டு; காணிஸ்தானமென்பது மிகத்தாழ்ந்த ஸ்தாநம்; கோடிஸ்தானமென்பது மிகவுயர்ந்தஸ்தாநம். கணிதம்பார்க்கிற வகையில் ஒரு மகிழம் விதையே சற்றுப்போது காணிஸ்தாநத்திலும் சற்றுப்போது கோடிஸ்தாநத்திலுமாக மாறிமாறி வந்து கொண்டிருக்கும்; (இது கணிதஸாமர்த்தியத்தைப் பொறுத்ததுமாம்.) அதுபோல பகவத் ஸங்கல்பத்தாலே கர்மாநுகுணமாக (உத்க்ருஷ்டமாகவும் அபக்ருஷ்டமாகவும்) பலவகைப்பட்டு மாறிமாறி வரக்கூடிய (பிரமன் முதற்கொண்டு எறும்பு ஈறாகவுள்ள) சரீரங்கள் தொலைந்து நித்யாநந்தமநுபவிக்க வேணுமென்று ஆசை கிளர்ந்து அதற்குரிய முயற்சியைச் செய்யுமவர்களுக்குத்தவிர மற்று யார்க்கும் எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பது அரிதாகும்.

நான்காமடியை "ஆதிகாண்பு ஆர்க்கும் அரிது" எனப்பிரித்து உரைக்கப்பட்டது காண்பு—காணுதல். இனி, "காண்பார்க்கும்" என்று ஒரு சொல்லாகவே கொண்டு உரைக்கவுமாம்; காணவேணுமென்னும் விருப்பமுடையவர்களுக்கும் எம் ஆதி அரிது (அருமைப்படுவன்) என்க.

இப்பாட்டில் முதலடிக்குச் சார்பாக ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்திலுள்ள "வடநைகவராடிகேவ க்லுப்தா ஸ்தலயோ: காகணிகாஸுவர்ணகோட்யோ: = படுநைகவராடிகேவ க்லப்தா ஸ்தலயோ: காகணிகாஸுவர்ண கோட்யோ:." என்றச்லோகம் ஒருபுடை ஒப்புமையாக ஸ்மரிக்கத்தக்கது. .... ... (சகூ)

அரியபுல னைந்தடக்கி யாய்மலர்கொண்டு—* ஆர்வம்
புரிய பரிசினல் புல்கில் *—பெரியனாய்
மாற்றாது வீற்றிருந்த மாவலிபால் * வண்கைநீர்
ஏற்றானைக் காண்ப தெளிது. (௫௦)

| | |
|---|---|
| அரிய | அடக்கமுடியாத |
| புலன் ஐந்து | பஞ்சேந்திரியங்களையும் |
| அடக்கி | கட்டுப்படுத்தி, |
| ஆய் | ஆராய்ந்தெடுக்கப்பட்ட |
| மலர் | புஷ்பங்களை |
| கொண்டு | கையில் ஏந்திக்கொண்டு |
| ஆர்வம் புரிய பரிசினல் | அன்பு மிகுந்த விதத்தினாலே |
| புல்கில் | கிட்டப்பார்த்தால்,— |
| பெரியன் ஆய் மாற்றாது வீற்றிருந்த மாவலி பால் | 'நாமே பெரியோம்' என்னு மஹங்காரத்தையுடையனாய் தானஞ் செய்வது தவறாதவனாய் இருந்த மஹாபலியிடத்தில் |
| வண் கை | உதாரமான தனது திருக்கையாலே |
| நீர் ஏற்றானை | உதகதானம் வாங்கின பெருமானை |
| காண்பது | ஸேவிப்பது |
| எளிது | ஸுலபமாகும். |

* * *—[அரியபுலன்.] விஷயாந்தரங்களில் பற்றற்று அன்புடன் அவனை ஆச்ரயிக்குமவர்களுக்கு அவனைக் காண்பதில் அருமையேயில்லை யென்கிறார். செவி வாய் கண் மூக்கு உடலென்கிற ஜ்ஞாநேந்திரியங்களைந்தையும் விஷயாந்தரங்களில் போகவொண்ணாதபடி அடக்கி, பகவதாராதனைக்கு உரிய நன்மலர்களைச் சேகரித்துக்கொண்டு மெய்யன்பு நன்கு விளங்கும்படி சென்று பணிந்தால், மாவலியின் மதமொழித்த பெருமானைக் கண்டநுபவிப்பது மிகவும் எளிதாகும். .... .... .... (௫௦)

எளிதி லிரண்டடியுங் காண்பதற்கு—* என்னுள்ளம்
தெளியத் தெளிந்தொழியும் செவ்வே *—களியில்
பொருந்தா தவனைப் பொரலுற்று—* அரியா
யிருந்தான் திருநாம மெண். (ருக)

| | | | |
|---|---|---|---|
| என் உள்ளம் | எனது நெஞ்சே!,(நீ) | பொரல் உற்று | போர்செய்யத் தொடங்கி |
| தெளிய | கலக்கம்தீர்ந்து தெளிவுபெற்றால் | அரி ஆய் இருந்தான் | நரசிங்கமாக அவதரித்த பெருமானுடைய |
| (அந்த எம்பெருமானும்) | | திரு நாமம் | திருநாமங்களை, |
| செவ்வே தெளிந்தொழியும் | மிகவும் நன்றாக ப்ரஸந்நனுவன் ; | இரண்டு அடியும் எளிதில் காண்பதற்கு | (அவனுடைய) உபய பாதங்களையும் சுலபமாகக் காணும்பொருட்டு |
| (ஆகையினுல்) | | | |
| களியில் | அஹங்காரத்தாலே | | |
| பொருந்ாத வனை | அடிபணியாதிருந்த ஹிரண்யா ஸுரனோடு | எண் | சிந்திப்பாயாக. |

* * *—[எளிதிலிரண்டடியும்.] எம்பெருமானுடைய திருநாமங்களைப் பரமபோக்யமாக நாம் வாயாரச்சொல்லவே, அப்பெருமான் ப்ரஹ்லாதாழ்வானுடைய விரோதியைத்தொலைத்துத் தன்னைக் கொடுத்தாப்போலே நமக்கும் விரோதியைப் போக்கித் தன்னைத் தந்தருள்வனென்கிறார்.

என்னுள்ளம் என்றது அண்மைவிளி ; என்னுள்ளமே! என்றபடி. நீ எம்பெருமானுடைய திருவடியிணையை ஸேவித்து அநுபவிப்பதற்குத் தெளிவுகொண்டிருந்தால் அவன் ப்ரஸந்நனுய் அருள்புரிவன் ; நீ தெளிவுற்றிருக்கிறுயென்பது நன்குவிளங்குமாறு ஸ்ரீ நரஸிம்ஹமூர்த்தியின் திருநாமங்களை எண்ணிக் கொண்டிரு. .... .... .... .... (ருக)

எண்மர் பதினொருவ ரீரறுவ ரோரிருவர் *
வண்ண மலரேந்தி வைகலும் *—நண்ணி
ஒருமாலை யால்பரவி யோவாது *—எப்போதும்
திருமாலைக் கைதொழுவர் சென்று. (ருஉ)

| | |
|---|---|
| எண்மர் | அஷ்டவஸுக்களும் |
| பதிநொருவர் | ஏகாதச ருத்ரர்களும் |
| ஈர் அறுவர் | த்வாதசாதித்யர்களும் |
| ஓர் இருவர் | இரட்டையரான அச்விநீ தேவதைகளும் |
| | (ஆகிய முப்பத்து மூவரான தேவர்களும்) |
| வைகலும் | நாள்தோறும் |
| வண்ணம் மலர் ஏந்தி | நாநாவர்ணங்களையுடைய புஷ்பங்களை யெடுத்துக்கொண்டு |
| நண்ணி | (எம்பெருமானைக்) கிட்டி |
| ஒரு மாலையால் | ஒப்பற்ற புருஷஸூக்தமாகிற சொல்மாலையைக் கொண்டு |
| ஓவாது | இடைவிடாமல் |
| எப்போதும் | எல்லா வேளைகளிலும் |
| பரவி | துதிசெய்து |
| திருமாலை சென்று | திருமகள் கொழுநனைக் கிட்டி |
| கை தொழுவர் | வணங்குவர்கள். |

* * *—[எண்மர்பதிநொருவர்.] அஹங்காரிகளான முப்பத்து மூவரமரர்களும் எம்பெருமானை யடிபணிந்தே சிறப்புற்றிருக்கின்றனரென்கிறார். முதலடியில் முப்பத்துமூன்றுதேவர்களை எடுத்துக் காட்டினது முப்பத்து முக்கோடி தேவர்களெனப்படுகிற அனைவரையும் எடுத்துக்காட்டினமைக்குப் பர்யாய மென்க. நம்மாழ்வாரும் பெரிய திருவந்தாதியில் "இருநால்வர் ஈரைந்தின் மேலொருவர், எட்டோடொரு நால்வர் ஓரிருவர்" என்றருளிச் செய்தது காண்க. .... .... .... (௫௨)

சென்றால் குடையா மிருந்தால்சிங் காசனமாம் *
நின்றால் மரவடியாம் நீள்கடலுள் *—என்றும்
புணையா மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கு
மணையாம் * திருமாற் கரவு. (௫௩)

| | |
|---|---|
| திருமாற்கு | பிராட்டியோடு (எப்போதும்) கூடியிருக்கிற பெருமானுக்கு |
| அரவு | திருவனந்தாழ்வான், |
| சென்றால் குடை ஆம் | (அப்பெருமான்) உலாவினால் (அப்போது மழை வெயில் படாதபடி) குடையாக உருவெடுப்பன்; |
| இருந்தால் | எழுந்தருளியிருந்தால் |

(அப்போது)

சிங்காசனம் ஆம் — ஸிம்ஹாஸநமாயிருப்பன் ;

நின்றால் — நின்று கொண்டிருந்தால்

(அப்போது)

மரவடி ஆம் — பாதுகையாவன் ;

நீள் கடலுள் — பரம்பின கடலிலே

(சயனிக்கும்போது)

என்றும் — எப்போதும்

புணை ஆம் — திருப்பள்ளி மெத்தையாவன் ;

அணி விளக்கு ஆம் — மங்களதீபமாவன் ;

பூம்பட்டு ஆம் — அழகிய திருப்பரிவட்டமாவன்;

புல்கும் அணை ஆம் — தழுவிக்கொள்வதற்கு உரிய அணையுமாவன்.

* * *—[சென்றாற் குடையாம்.] திருவனந்தாழ்வானைப்போல எம்பெருமானுக்கு எல்லாக்காலங்களிலும் எல்லாவிதமான அடிமைகளையும் செய்யப்பெற வேணுமென்று திருவுள்ளங்கொண்ட ஆழ்வார் அத்திருவனந்தாழ்வான் செய்யுமடிமைகளை யெடுத்தருளிச் செய்கிறார். எம்பெருமான் உலாவியருளும்போது மழை வெயில் படாதபடி குடையாகவடிவெடுப்பன் ; எழுந்தருளியிருந்தகாலத்தில் திவ்யஸிம்ஹாஸநஸ்வரூபியாயிருப்பன் ; நின்றுகொண்டிருந்தால் பாதுகையாயிருப்பன் ; திருப்பாற்கடலில் திருக்கண்வளர்ந்தருளும்போது திருப்பள்ளி மெத்தையாயிருப்பன் ; ஏதேனுமொன்றை விளக்குக்கொண்டுகாண அவன் விரும்பினபோது திருவிளக்குமாவன் ; சாத்திக்கொள்ளும்படி திருப்பரியட்டத்தை அவன் விரும்பினபோது அதுவுமாவன் ; சாய்ந்தருளும்போது தழுவிக்கொள்வதற்குரிய உபதாநமுமாவன்.

ஆகவிப்படி பலவகைவடிவுகொண்டு அடிமைத் தொழிலைச் செய்வதனால்தான் திருவனந்தாழ்வானுக்கு சேஷன் என்று திருநாமமாயிற்றென்பதை ஸ்தோத்ர ரத்நத்தில் “𑌨𑌿𑌵𑌾𑌸𑌶𑌯𑍍𑌯𑌾𑌸𑌨𑌪𑌾𑌦𑍁𑌕𑌾𑌂𑌶𑍁𑌕𑍋𑌪𑌧𑌾𑌨𑌵𑌰𑍍𑌷𑌾𑌤𑌪 𑌵𑌾𑌰𑌣𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 । 𑌶𑌰𑍀𑌰𑌭𑍇𑌦𑍈𑌸𑍍𑌤𑌵 𑌶𑍇𑌷𑌤𑌾𑌂𑌗𑌤𑍈𑌃 𑌯𑌥𑍋𑌚𑌿𑌤𑌂 𑌶𑍇𑌷𑌇𑌤𑍀𑌰𑌿𑌤𑍇 𑌜𑌨𑍈𑌃 ॥” என்றச்ச்லோகத்தால் ஆளவந்தாருமருளிச் செய்தார். பிள்ளைப்பெருமாளையங்காரது திருவரங்கத்துமாலையில் “சென்றாற்குடையாம் கடற்புணையாம் திருத்தீவிகையாம், நின்றாலிரு திருப்பாதுகையாம் நித்திரைக்கணையாம், குன்றாமணி

யொளியாசனமாம் புணைகோசிகையாம், அன்றுலிலையில் துயிலரங் கேசர்க்கரவரசே." என்ற பாசுரமும் இப்பாட்டை யடியொற் றியதே.

நீள்கடலுள் புணையாம்—திருப்பாற்கடலில் அழுந்தாதபடி தெப்பமாவன் என்று முரைக்கலாம். புல்கும் அணையாம்=எம் பெருமான் பிரணயகலஹத்தினல் பிராட்டிமாரைப் பிரியநேர்ந் தால் அப்போது விரஹதுக்கம் தோன்றுதபடிக்குத் திருவனந்தாழ் வானைத் தழுவிக்கொள்வனும்.

மூன்றுமடியில் "மணி விளக்காம்" என்றும் பிரிக்கலாம். (ருங)

அரவ மடல்வேழ மான்குருந்தம் புள்வாய் *
குரவை குடமுலைமற் குன்றம் *—கரவின்றி
விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டு கோத்தாடி * உண் டட்டெடுத்த செங்க ணவன். (ருச)

| | | | |
|---|---|---|---|
| செம் கண் அவன் | செந்தாமரைக் கண்ணனுகிய அப்பெருமான் | ஒசித்து | ஒடித்துப் பொகட்டும் |
| கரவு இன்றி | மறைவு இல்லாமல் [ஸர்வலோக ப்ர ஸித்தமாம்படி] | புள் வாய் | பகாசுரனுடைய வாயை |
| | | கீண்டு | கிழித்தும் |
| அரவம் | காளிய நாகத்தை | குரவை | ராஸக்ரீடையை |
| விட்டு | விட்டடித்தும் | கோத்து | (இடைப்பெண்க ளோடு) கை கோத்து ஆடியும |
| அடல் வேழம் | பொருவதாக வந்த (குவலயாபீட மென்னும்) யானையை | குடம் | குடங்களைக்கொண்டு |
| | | ஆடி | கூத்தாடியும் |
| இறுத்து | (தந்தத்தை) முறித்து உயிர் தொலைத்தும் | முலை | பூதனையின் முலையை |
| ஆன் | பசுக்களை | | |
| மேய்த்து | (வயிறு நிரம்ப) மேய்த்தும் | உண்டு | (அவளுடைய உயி ரோடு) உறிஞ்சி யுண்டும் |
| குருந்தம் | (அஸுரா வேசமுடைய) குருந்தமரத்தை | மல் | (கம்ஸனுல் ஏவப்பட்ட) மல்லர்களை |

| | | | |
|---|---|---|---|
| அட்டு | கொன்றும் | எடுத்த | (குடையாக) எடுத்துப்பிடித்த இச்செயல்கள் |
| குன்றம் | கோவர்த்தன மலையை | | (என்ன ஆச்சரியம்!.) |

* * *—[அரவமடல்வேழம்.] ஆச்ரிதவிரோதிகளைப் போக்க வேண்டில், கீழ்ப்பாட்டிலருளிச் செய்தபடி தன்நினைவுக்குத் தகுதியாக எல்லாவடிமைகளையுஞ் செய்கிற திருவனந்தாழ்வானுகிற படுக்கையிலும் பொருந்தமாட்டாமல் இந்த லீலாவிபூதியில் வந்து பிறந்து களைபிடுங்கித் தன்விபூதியைப் பாதுகாப்பவன் என்று அவனது திருக்குணத்தை அநுஸந்தித்து அதற்கேற்ற சில திவ்ய சேஷ்டிதங்களை யநுபவிக்கிறாரிப்பாட்டில்.

கண்ணபிரானது காளியமர்த்தநம் முதலிய அரிய செயல்களை அநுஸந்தித்த ஆழ்வார் அவற்றில் உள்குழைந்து ஈடுபட்டு மேலொன்றும் சொல்லமாட்டாமையால் ஒரு வினைமுற்றுச் சொல்லவும்மாட்டாது விட்டனர்; ஆச்சர்யகரமான விஷயங்களைக் கூறும்போது அவற்றுக்கு வினைமுற்றுத்தந்து முடியாது நிறுத்துவதைப் பல கவிகளின் வாக்குகளிலும் காணலாம்.

ஈற்றடியில் எடுத்த என்றது—'அன்' சாரியை பெறுத பலவின்பாற்பெயர்; சாரியைபெறின் 'எடுத்தன' எனநிற்கும். இப்பாட்டில், அரவுமுதலிய பெயர்ச்சொற்கள் 'விட்டு' முதலிய வினைச்சொற்களை முறையே சென்று இயைதலால் முறை நிரனிறையாம்; இது வடமொழியில் 'யதாஸங்க்யாலங்காரம்' என்றும், தென்மொழியில் 'நிரனிறையணி' என்றும் அலங்காரசாஸ்திரிகள் கூறுவர்.

காளியநாகத்தை வலியடக்கி உயிரோடு விட்டதும், குவலயாபீடமென்னும் கம்ஸனதுயானையைக் கொம்புமுறித்து முடித்ததும், தன்மேன்மையைப் பாராமல் தாழநின்று பசுக்களை மேய்த்ததும், அஸுரன் ஆவேசித்திருந்ததொரு குருந்தமரத்தை முறித்து வீழ்த்தியதும், பகாஸுரன் வாயைக் கீண்டொழித்ததும், இடைப்பெண்களோடே குரவைக்கூத்தாடியதும், குடங்களெடுத்தேற வெறிந்தாடியதும், தன்னைக்கொல்லுமாறு தாய்வடிவு கொண்டு வந்த பூதனையின் ஸ்தனங்களை உறிஞ்சியுண்டதும், மல்லர்களைக்

கொன்றதும், கோவர்த்தனமலையைக் குடையாகவெடுத்தேந்தி நின்றதுமாகிய இச்செயல்கள் என்ன ஆச்சரியம்! என்று ஈடுபட்டுப்பேசினாராயிற்று. ... ... ... (ருச)

அவன்தம ரெவ்வினைய ராகிலும் * எங்கோ
னவன்தமரே யென்றொழிவ தல்லால் *—நமன்தமரா
லாராயப் பட்டறியார் கண்டீர் * அரவணைமேல்
பேராயர்க் காட்பட்டார் பேர். (ருரு)

அரவு அணை மேல் — சேஷசயனத்தின் மீது வாழ்கிற

பேர் ஆயற்கு — இடைத்தனத்தில் குறைவின்றிப் பூர்ணமாயிருக்கிற ஸ்ரீகிருஷ்ணனுக்கு

ஆட்பட்டார் பேர் — அடிமைப்பட்டவர்களின் திருநாமத்தை வஹிக்குமவர்களும்

நமன் தமரால் — யமபடர்களாலே,

"அவன் தமர் எவ் வினையர் ஆகிலும் — "அந்த ஸர்வேச்வரனுடைய பக்தர்கள் எவ்வகையான செயலையுடையவராயிருந்தாலும்

எங்கோ னவன் தமரே" — எம்பெருமானுடைய பக்தர்களன்றோ"

என்று — என்று கொண்டாடிச் சொல்லி

ஒழிவது அல்லால் — (தாங்கள்) விலகிப் போவது தவிர,

ஆராயப்பட்டு அறியார் — ஆராயப்பட்டிருக்க அறியமாட்டார்கள்.

* * *—[அவன்தமர்.] யமபடர்கள் பாகவதர்திறத்திலே அஞ்சியிருக்கும்படியை அருளிச்செய்கிறார். யமன் நாட்டிலுள்ளாருடைய பாவங்களையெல்லாம் ஆராய்வதற்கு அந்த ஸர்வேச்வரனால் நியமிக்கப்பட்டவனே; ஆனாலும் தனக்கும் நியாமகனான அந்த ஸர்வேச்வரனுடைய பக்தர்கள் நற்காரியங்களைத் தவிர்ந்து தீயகாரியங்களையே செய்துவந்த போதிலும் அவர்களை யமகிங்கரர்கள் "நமது யஜமானனை யமனையும் நியமிக்கும் வல்லமை யுடையவர்களன்றோ இந்த பாகவதர்கள்" என்று கொண்டாடி வணங்கி அப்பால் போய்விடுவர்களே தவிர, அவர்களுடைய குணதோஷங்களை ஒருபோதும் ஆராய்ச்சி செய்யமாட்டார்கள்: ஏனெனில்; அப்படிப்பட்டவர்களை ஸம்ரக்ஷிப்பதில் புருஷகாரபூதையான

பிராட்டியும் ஒருகால் ஏதேனும் குறை சொல்லினும் அதையும் லக்ஷியஞ் செய்யாமல் 1. "என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்று சொல்லிக்கொண்டு ஸர்வேச்வரன் பரிந்து ரக்ஷிப்பவனன்றோ? இப்படிப் பெரிய பிராட்டியாராலும் குறை கூறக்கூடாதவர்கள் விஷயத்தில் நம்மால் அணுகவும் முடியுமோ? என்கிற பயத்தினாலென்க. அன்றியும், யமன் தன்படர்களை நோக்கி 'நீங்கள் வைஷ்ணவர்கள் திறத்தில் அபசாரப்படவேண்டா; அவர்களைக்கண்டால் அநுவர்த்தித்திருங்கள்' என்று கட்டளையிட்டிருக்கின்றானென்பதை, "திறம்பேன்மின் கண்டீர், திருவடி தன் நாமம், மறந்தும் புறந்தொழா மாந்தர்—இறைஞ்சியும், சாதுவராய்ப் போதுமின்களென்றான் நமனும் தன், தூதுவரைக் கூவிச் செவிக்கு." என்ற நான்முகன் திருவந்தாதிப் பாசுரத்தாலும், "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே । பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம் = ஸ்வபுருஷ மபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே—பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்." என்ற ஸ்ரீவிஷ்ணுபுராணவசநத்தாலும் அறிக. "கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன, நாளுங் கொடுவினைசெய்யுங் கூற்றின் தமர்களுங் குறுககில்லார்" என்ற திருவாய்மொழியும், "வென்றி கொண்ட வீரனார், வேறு செய்து தம்முளென்னை வைத்திடாமையால் நமன், கூறுசெய்துகொண்டு இறந்த குற்றமெண்ணவல்லனே" என்ற திருச்சந்தவிருத்தமும் இங்கு அநுஸந்திக்கத் தக்கன.

இப்பாட்டில் "பேராயற்கு ஆட்பட்டார்பேர்" என்ற ஈற்றடிக்கு வேறுவகையாகவும் பொருளுரைக்க இடமுண்டாயினும், அழகியமணவாளப்பெருமாள் நாயனாருளிச்செய்த திருப்பாவை ஆறாயிரப்படி வியாக்கியானத்தில் ஆழிமழைக்கண்ணா வென்னும் நாலாம்பாட்டின் அவதாரிகையில், "அவன்தமரேவ்வினையராகிலும் இத்யாதி." என்று இப்பாசுரத்தையெடுத்து ["அரவணைமேல் பேராயற்கு ஆட்பட்டார் பேர் ஆராயப்பட்டு அறியார் கண்டீர்=

1. பெரியாழ்வார் திருமொழி 4—9—2.

ஒரு பாகவதன் பேரை ஒரு அபாகவதன் தரிப்பது, அவனையும் யமன் கோஷ்டியில் பட்டோலைபார்க்கப் பெறாது."] என்று வியாக்கியானித்தருளியிருக்கக் காண்கையாலே 'பேராயற்காட்பட்டார் பேர்' என்னுமளவை ஒருசொல்லாகக்கொண்டு (அன்மொழித் தொகையாகப் பாவித்து) எம்பெருமானுக்கு ஆட்பட்டவர்களுடைய பேரையுடையவர்கள் எனப் பொருள்கொள்ளுதல் சிறக்கும். .... .... .... (௫௫)

பேரே வரப்பிதற்ற லல்லாலெம் பெம்மானை *
ஆரே யறிவா ரதுநிற்க *—நேரே
கடிக்கமலத் துள்ளிருந்தும் காண்கிலான் * கண்ண
னடிக்கமலந் தன்னை யயன். (௫௬)

(நாம் வாயினால் ஏதேனுமொன்றைச் சொன்னாலும், அது)

| | |
|---|---|
| பேரே | எம்பெருமானது திருநாமமாகவே |
| வர | வரும்படியாக |
| பிதற்றல் அல்லால் | பிதற்றுவதைத் தவிர |
| எம் பெம்மானை | (அந்த) எம்பெருமானை |
| ஆரே | ஆர்தான் |
| அறிவார் | (உள்ளபடி) அறிய வல்லவர்கள்? |
| அது நிற்க | அந்த விஷயம் இருக்கட்டும்; |
| அயன் | பிரமனானவன் |
| கடி | பரிமளம் மிகுந்த |
| கமலத்துள் | (அவ்வெம்பெருமானது) நாபிக்கமலத்திலே (பிறந்து) |
| நேரே இருந்தும் | (அங்கே) நிரந்தரவாஸம்பண்ணிக் கொண்டிருந்தும் |
| கண்ணன் அடி கமலம் தன்னை | அந்த ஸர்வேச்வரனுடைய திருவடிகளை |
| காண்கிலான் | ஸேவிக்கப் பெற்றானில்லை. |

* * *—[பேரேவரப்பிதற்றலல்லால்.] எம்பெருமானுடைய பிரபாவம் ஆர்க்கும் அளவிட்டறிய முடியாதது; கடற்கரையில் குடிசை கட்டிக்கொண்டிருப்பவர்க்கும் அந்தக் கடலினுடைய ஆழம் அறியமுடியாமற் போவதுபோலவே அவனுடைய திருநாபிக்கமலத்தில் தோன்றின நான்முகக்கடவுள் எப்போதும் அவ்விடத்தே வாஸஞ்செய்து கொண்டிருந்தும் அவனுக்கும் அப்பெருமானுடைய பெருமை அளவிட்டறியக் கூடாததாயிராநின்ற

தன்றே; ஆகையினால் 'எம்பெருமான் உணர்வதற்கு முடியாத வன்' என்று நாம் உணர்ந்து அவனது திருநாமங்களை வாயில் வந்தபடியெல்லாஞ் சொல்லிக் கூப்பிடுவது செய்யலாமத்தனை யொழிய, அவனது மஹிமையை உள்ளபடியறிந்து எவராலும் சொல்லப்போகாது என்றவாறு. சாஸ்திரங்களில் பலபேர்களைக் குறித்து 'ப்ரஹ்மஜ்ஞாநி' என்றும் 'ப்ரஹ்மவித்' என்றும் சொல்லியிருப்பதெல்லாம்—பரப்ரஹ்மத்தை உள்ளபடி அளவிட் டறிந்தமையைச் சொன்னதன்று; 'எம்பெருமான் அளவிட முடி யாதவன்' என்ற இவ்வுண்மையை அறிந்தவர்களே ப்ரஹ்ம வித்துக்களெனப்படுவார் என்றறிக.

கன்றுக்குட்டியானது ஓரிடத்திலிருந்துகொண்டு தன் தாயைக் காணாமல் அம்மே! என்று கத்தினால் அக்கத்துதல் தன் செவிப்பட்ட மாத்திரத்தில் தாய்ப்பசு இரங்கிக் கன்றின் பக்கத் தில் வந்து நிற்பதுபோலவே, எம்பெருமானை உள்ளபடி அறியா விட்டாலும் அவனது திருநாமத்தை வாய்வந்தபடி பிதற்றினால் அவன் வந்து அருள்புரிவான் என்ற கருத்து முதலடியில் உய்த் துணரத்தக்கது.

பெம்மான்—'பெருமான்' என்பதன் மரூஉ. நிற்க—வியங் கோள்முற்று. இப்பாட்டில் "நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் அயன் கண்ணனடிக்கமலந்தன்னைக் காண்கிலான்; (ஆதலால்) எம் பெம்மானை ஆரேயறிவார்?" என்று கைமுதிகநியாயம்படக் கூறி யிருத்தலால் தொடர்நிலைச் செய்யுட் பொருட்பேறணியாம். (ருசு)

**அயனின்ற வல்வினையை யஞ்சினே னஞ்சி ***
**உயநின் திருவடியே சேர்வான் *—நயநின்ற**
**நன்மாலை கொண்டு நமோநாரணா வென்னும் ***
**சொன்மாலை கற்றேன் தொழுது.** (ருஎ)

| | | | |
|---|---|---|---|
| அயல் நின்ற | (என்) அருகிலேயே இருந்துகொண்டு (என்னை இடைவிடாமல் ஹிம்ஸித்துக் கொண்டே) இருக்கிற | வல் வினையை | மிகக் கடினமான பாவங்களைக் குறித்து |
| | | அஞ்சினேன் | பயப்பட்டேன்; |
| | | அஞ்சி | (இப்படி) பயப்பட்டு |

| | | | |
|---|---|---|---|
| உய | (இந்தப் பாபஸம்பந்தம் நீங்கி) உஜ்ஜீவிக்கும்பொருட்டு | நல் மாலை கொண்டு | சிறந்த இந்தப் பிரபந்தத்தைக் கொண்டு |
| நின் | உன்னுடைய | தொழுது | (உன்னை) ஆச்ரயித்து |
| திரு அடியே | திருவடிகளில்தானே | நமோ நாரணா என்னும் சொல் மாலை | திருமந்திரத்தின் பொருளை |
| சேர்வான் | வந்து கிட்டுகைக்காக | | |
| நயம் நின்ற | இன்பம் பொருந்திய | கற்றேன் | அப்யஸித்தேன். |

* * *—[அயனின்ற வல்வினையை.] பலவகைக் கொடியபாவங்கள் என்னிடத்தில் நெருங்கிக் கிடப்பதைக்கண்டு 'இப்பாவங்கள் இன்னமும் முன்புபோலவே மேல்விழுந்து நலிந்தால் நாம் என்னசெய்வது!' என்று பயப்பட்டேன்; 'எம்பெருமானது திருவடிகளிற்சென்று சேர்ந்துவிட்டால் பாவங்கள் அடியோடு நீங்கப்பெற்று நாம் உஜ்ஜீவிக்கப்பெறலாம்' என்று துணிந்து, உன் திருவடிகளில் வந்துசேரும் விதம்யாது? என்று ஆராய்ந்துபார்த்தேன்; நமது வாய்மொழிகளை உன்விஷயத்தில் உபயோகிப்பதே அதற்குச் சிறந்தவழி என்று நிச்சயித்து, திருமந்திரத்தின் பொருளை விவரிப்பதான இப்பிரபந்தத்தைப்பாடினேன்; இதனால், பாவங்களுக்கு அஞ்சின அச்சம்தீர்ந்து உஜ்ஜீவநமும் பெற்றேன் என்றாராயிற்று.

சேர்வான்=வான் விகுதி பெற்ற எதிர்கால வினையெச்சம். "நயம்நின்ற" என்பதற்கு—'திருமந்த்ரார்த்தத்தை நயப்பித்தலில் நோக்கமாயுள்ள' என்று பொருள்கூறுதலும் பிரகரணத்திற்குப் பொருந்தும்: எம்பெருமானுடைய ஸ்வரூபம், அவனை அடைதற்குரிய ஜீவாத்மாவின் ஸ்வரூபம், அடைவதற்கான உபாயம், அடைந்து பெறவேண்டியபேறு, அடைவதற்கு இடையூறாகவுள்ள விரோதிஸ்வரூபம் ஆகிய இவ்வைந்துவிஷயங்களை திருமந்திரத்தின் அர்த்தமாதலாலும், இவையே இப்பிரபந்தத்திலும் விவரிக்கப்படுகின்றனவாதலாலும் இதுகூடும். ... (ருள)

தொழுது மலர்கொண்டு தூபம் கையேந்தி *
எழுது மெழுவாழி நெஞ்சே *—பழுதின்றி
மந்திரங்கள் கற்பனவும் மாலடியே கைதொழுவான்
அந்தரமொன் றில்லை யடை. (ருஅ)

| | |
|---|---|
| நெஞ்சே | மனமே!, |
| மலர் கொண்டு | புஷ்பங்களை சம்பாதித்துக்கொண்டும் |
| தூபம் | தூபத்தை |
| கை ஏந்தி | கையிலே ஏந்திக்கொண்டும் |
| தொழுது | (எம்பெருமானை) வணங்கி |
| எழுதும் | உஜ்ஜீவிப்போம் ; |
| எழு | நீ புறப்படு ; |
| வாழி | (உனக்கு இந்த ஸ்வபாவம்) நித்யமாயிடுக : |

(நான் இப்படிச் சொல்வதற்குக் காரண மென்னவென்றால்)

| | |
|---|---|
| மந்திரங்கள் | பகவந் மந்த்ரங்களை |
| பழுது இன்றி கற்பனவும் | முறைப்படியே நாம் அப்யஸிக்கின்றனவும் |
| மால் அடி கை தொழுவான்எ | ஸர்வேச்வரன் திருவடிகளைத் தொழுவதற்காகவேயாம்: |

(ஆனபின்பு)

| | |
|---|---|
| அந்தரம் ஒன்று இல்லை | (நாம் ஆறியிருப்பதற்கு) அவகாசம் சிறிதுமில்லை ; |
| அடை | (அப்பெருமானை) விரைவில் சென்றுகிட்டு. |

* * *—[தொழுதுமலர்கொண்டு.] நெஞ்சே! நாம் பகவத்விஷயத்தை விட்டு ஒரு நொடிப்பொழுதும் ஆறியிருக்க வழியில்லை ; நாம் குருகுலவாஸம் பண்ணி மந்த்ரங்களை அப்யஸிப்பதெல்லாம் எம்பெருமானை அடிபணிவதற்கேயன்றி வேறொரு பிரயோஜனத்திற்காகவன்றே ; ஆனபின்பு, தூபதீபபுஷ்பாதிகளான உபகரணங்களைக் கையிற்கொண்டு அப்பெருமானை ஆராதிக்கச் செல்வோம், எழுந்திரு; இனிநாம் தாமஸித்திருப்பதற்கு அவகாசமேயில்லை— என்று தம் திருவுள்ளத்தை த்வரைப்படுத்துகிறார்.

"மலர் கொண்டு தூபம்கையேந்தி—தொழுது—எழுதும் எழு" என்று ஆழ்வார் சொன்னவுடனே நெஞ்சு மிகவும் அதற்கு அநுகூலப்பட்டிருக்கவே "வாழிநேஞ்சே" என்று உவப்பினால் மங்களாசாஸநம் செய்தாரென்க: இந்த ஆநுகூல்யம் உனக்கு ஒருநாளும் மாறாதிருக்கவேணு மென்றவாறு.

பழுது இன்றி=குருகுலவாஸம் செய்யாமல் மந்த்ரங்களைக் கற்பது பழுது ; அப்படிப்பட்ட பழுது இல்லாமல் [குருகுலவாஸம் பண்ணி] என்றபடி. அந்தரம் ஒன்று இல்லை—'பிறகு பார்த்துக்கொள்வோம்' என்று ஆறியிருக்க அவகாசம் சிறிதுமில்லை. ... ... ... ... (ருஅ)

அடைந்த வருவினையோ டல்லல்நோய் பாவம் *
மிடைந்தவை மீண்டொழிய வேண்டில் *—நுடங்கிடையை
முன்னிலங்கை வைத்தான் முரணழிய * முன்னொருநாள்
தன்விலங்கை வைத்தான் சரண். (ருக)

| | |
|---|---|
| அடைந்த | அடியேபிடித்துப் பற்றிக்கிடக்கிற |
| அரு | போக்குவதற்கு அருமையான |
| வினையோடு | பழவினைகளும் |
| அல்லல் | (அந்தப் பழவினையின் பயனாகவருகின்ற) மனத்துன்பங்களும் |
| நோய் | சரீரவியாதிகளும் |
| பாவம் | (இப்போது செய்கிற) பாவங்களும் |
| மிடைந்தவை | (இப்படிப் பலவகையாக, ஆத்மாவைத் தெரியாதபடி) மூடிக்கிடக்கின்றவை |
| மீண்டு ஒழிய வேண்டில் | வாஸனையோடு விட்டு நீங்க வேணுமானால், |
| முன் | முன்பொருகால், |
| நுடங்கு இடையை | மெல்லிய இடையையுடையளான பிராட்டியை |
| இலங்கை வைத்தான் | லங்காபுரியில் சிறை வைத்தவனான இராவணனுடைய |
| முரண் அழிய | மிடுக்கு அழியும்படி |
| முன் ஒரு நாள் | ஸ்ரீராமனாய்ப்பிறந்த வொருகாலத்து, |
| தன் வில் | தன்னுடையவில்லை |
| அம் கை | அழகிய திருக்கையிலே |
| வைத்தான் | எடுத்துப் பிடித்தவனான பெருமானே |
| சரண் | உபாயமாவான். |

* * *—[அடைந்தவருவினையோடு.] நாம் நல்ல வழியிற் போதுபோக்கவேணுமானால் பகவானை ஆச்ரயிப்போம்; அப்படி அவனை ஆச்ரயிக்குமிடத்து ஆச்ரயிக்க வொட்டாமல் இடையூறாக அருவினை அல்லல் நோய் பாவம் முதலியவை குறுக்கே நிற்கின்றனவே! அவற்றைப் போக்கும்வழி யாது? என்று சங்கை பிறக்க, நமது பிரதிபந்தகங்களை இருதுண்டமாக்குவதற்கு உபாயமாக ஸ்ரீராமபிரானைச் சரணம்புகுதல் நன்று என்கிறார். இத்தால், எம்பெருமானுக்கு போக்யமாயிருந்துள்ள ஆத்மவஸ்துவை என்னுடையதென்று செருக்குற்றிருக்குமவர்கள் ராவணாதிகள் பட்டது படுவாரென்னுமிட்டும், 'இவ்வாத்மவஸ்து அவனுடையது'

என்று அநுகூலித்திருக்குமவர்களுக்கு வரும் விரோதிகளை அப் பெருமான் பிராட்டியின் துயரத்தைப் பரிஹரித்ததுபோலே பரிஹரித்தருள்வனென்னுமிடமும் தெரிவிக்கப்பட்டனவாம். (௯௯)

சரணு மறைபயந்த தாமரை யானோடு *
மரணாய மன்னுயிர்கட் கெல்லாம் *—அரணாய
பேராழி கொண்டபிரா னன்றி மற்றறியாது—*
ஓராழி சூழ்ந்த வுலகு. (௱)

| | | | |
|---|---|---|---|
| சரண் ஆம் மறை | (எல்லார்க்கும்) ஹிதத்தை உரைக்குமதான வேதத்தை | மன் உயிர்கட்கு எல்லாம் | நித்யமான ஸ்வரூபத்தையுடைய ஆத்மாக்களெல்லவற்றுக்கும் |
| பயந்த | (எம்பெருமானிடத்தில் தானடைந்து நாட்டிலுள்ளவர்கட்காக) வெளிப்படுத்தின | அரண் ஆய | ரக்ஷகமான விதங்களை |
| தாமரையானோடு | பிரமனோடுகூட | பேர் ஆழி கொண்ட பிரான் அன்றி | பெரிய திருவாழியாழ்வானைக் கையிற்கொண்ட எம்பெருமான் அறிவனே யல்லது |
| மரண் ஆய | மரணமடையுந் தன்மையுடைய | மற்று | அவனிலும் வேறான |
| | | ஓர் ஆழி சூழ்ந்த உலகு | கடல்சூழ்ந்த இவ்வுலகத்திலுள்ளார் |
| | | அறியாது | அறியமாட்டார்கள். |

* * *—[சரணுமறைபயந்த.] உலகத்தில் பொதுவாக ஒரு நியாயமுண்டு; எவன் பலனை அநுபவிக்கிறானோ அவன் அதற்கு உரிய உபாயத்தை அநுஷ்டிக்கவேணுமென்று. அந்தநியாயத்தைக் கொண்டு பார்க்கும்போது, எம்பெருமானைப் பெறுதலாகிற பயனை அநுபவிப்பவன் சேதநனாயிருக்க அதற்குரிய உபாயமும் இவனிடத்திலன்றோ இருக்கவேண்டும்; 'எம்பெருமானே உபாயம்' என்று முறையிடுவது எங்ஙனே பொருந்தும்? என்று ஒருசங்கைதோன்ற, அஜ்ஞனாய் அசக்தனான இவனால் செய்யக்கூடியதொன்று மில்லாமையினால், ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனான அவனே உபாயமாயிருக்கவேண்டியது ஆவச்யகமாயிற்றென்கிறார். பலனை அநுபவிப்

பவனும் எம்பெருமானே, அதற்கு உபாயாநுஷ்டாநம் செய்பவனும் எம்பெருமானே என்கிற ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. கைதவறிப்போன பொருளைத் தேடிப்பிடித்து அநுபவிப்பதும் அதனால் ஆநந்தமடைவதும் சொத்தையுடைய ஸ்வாமியின் காரியமேயொழிய சொத்தின் காரியமல்லவே; அது போல அப்பரமபுருஷனுடைய சொத்தாகிய நாம் அவனை விட்டுத் தப்பித்தவறியிருக்கிறோமாயின், நம்மைத் தேடிப்பிடித்து ஆட்கொள்ளப் பெறுதலும் பெற்றுமகிழ்தலும் அவனுக்கே உரியனவாதலால் பலனை அநுபவிக்குமவனான தானே உபாயாநுஷ்டாநம் செய்கிறானென்க. ஸ்ரீபாஷ்யத்தில் முடிவான ஸூத்ரத்தின் பாஷ்யத்தில்—"பரமபுருஷ: ஸ்வயமேவ ... ஜ்ஞாநிநம் லப்த்வா ..." என்று ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திரத்நத்தில் "பரமபுருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்ற ஸ்வாரஸ்யமுணர்க.

இப்பாட்டில் சொல்லுகிற அர்த்தம் வேதங்களில் ஸித்தமானது என்பதைத் தெரிவிக்கவே "சரணமறைபயந்த" என்ற விசேஷணம் தாமரையானுக்கு இடப்பட்டது. "... ..." இத்யாதி வேதவாக்கியங்கள் குறிக்கொள்ளத்தக்கன.

'அரணாய' என்பதை பேராழிகொண்டபிரானுக்கு விசேஷணமாகப் பலர் மயங்கியொழிவர்; அது விசேஷணமன்று; இரண்டாம் வேற்றுமைத்தொகை: 'அரணானவற்றை' எனப் பொருள்படுதலால் பயனிலே. பிரமன்முதல் எறும்பு ஈறாகவுள்ள ஸகலஜந்துக்களுக்கும் உபாயமானவற்றை எம்பெருமான் அறிவனேயல்லது அற்பஞானிகளான உலகத்தவர்கள் அறியமாட்டார்கள் என்றவாறு.

ஆழிசூழ்ந்த வுலகமானது மன்னுயிர்க்கெல்லாம் அரணாயிருக்கிற பேராழிகொண்ட பிரானையன்றி மற்றதொன்றையும் அறியாது—என்றும் பொருள் சொல்லலாமே என்று முற்காலத்தில் ஒருவர் சொன்னாராம்; உலகமானது எம்பெருமானை மறந்து மற்றவற்றையே அறிந்திருப்பதால் 'உலகானது பிரானையன்றி மற்றறியாது' என்கிற விப்பொருள் இணங்காது என்று கொண்டு நஞ்சீயர், "உலகமென்பது உயர்ந்தோர்மாட்டே" என்றிருப்

பதால் இவ்விடத்தில் உலகு என்பதற்கு ‘சிறந்த மாஞானிகள்’ என்று பொருள்கொண்டால், ‘மஹான்கள் பேராழிகொண்ட பிரானையன்றி மற்றறியார்கள்’ என்னும் பொருள் இணங்கி விடலாம் என்று அபிப்ராயம் கொண்டாராம்; இதை பட்டர் கேட்டருளி, “இவ்விடத்தில் ‘ஓராழி சூழ்ந்த வுலகு’ என்றிருப்பதை நோக்கவேணும்; ‘ஆழிசூழ்ந்த’ என்கிற விசேஷணம் இல்லாதிருந்தால் நீர் சொல்லும் பொருள் ஏற்கும்; ‘கடலால் சூழப்பட்ட மஹான்கள்’ என்று பொருள் சொல்லப்போகாமையாலே, ‘கடல் சூழ்ந்த இவ்வுலகமானது தனக்கு அரணானவற்றை அறியமாட்டாது, பேராழிகொண்ட பிரானே அறிவான்’ என்றே பொருள் கொள்ளவேணும்” என்று உபபாதித்து உரைத்தருளினராம். இங்ஙனே நிர்வஹித்து பட்டரருளிச் செய்தபோது நஞ்சீயரும் நம்பிள்ளையும் கேட்டிருந்தார்கள்; ஆனாலும் இதனை ஒருகால் நஞ்சீயர் மறந்திட, நம்பிள்ளை ஞாபகப்படுத்தினர் என்றும் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்துளர்.

இப்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான அச்சுப் பிரதிகளில் சில பதங்களும் வாக்கியங்களும் விடுபட்டிருப்பதை ஓலை ஸ்ரீகோசங்களைக்கொண்டு பரிஷ்கரித்துக்கொள்க. .... (௬௦)

உலகு முலகிறந்த வூழியும் * ஒண்கேழ்
விலகு கருங்கடலும் வெற்பும் *—உலகினில்
செந்தீயும் மாருதமும் வானும் * திருமால்தன்
புந்தியி லாய புணர்ப்பு. (௬௧)

| | |
|---|---|
| உலகும் | பூமி முதலிய லோகங்களும் |
| உலகு இறந்த ஊழியும் | இவ்வுலகம் யாவும் அழிந்துகிடக்கிற பிரளயகாலமும் |
| ஒண் கேழ் விலகு | அழகிய நிறத்தோடு அலையெறிகிற |
| கரு கடலும் | கருநிறத்ததான ஸமுத்ரமும் |
| வெற்பும் | மலைகளும் |
| உலகினில் செம் தீயும் | இவ்வுலகத்திலுள்ள செந்நிறமான தேஜஸ் பதார்த்தங்களும் |
| மாருதமும் | காற்றும் |
| வானும் | ஆகாயமும் |

(ஆகிய இவை யாவும்)

| | |
|---|---|
| திருமால் தன் { லக்ஷ்மீபதியான எம்பெருமானுடைய | புந்தியில் { ஸங்கல்ப ஞானத்தினால் |
| | ஆய படைக்கப்பட்ட |
| | புணர்ப்பு படைப்புக்களாம். |

* * *—[உலகும்.] கீழ்ப்பாட்டில், அவ்வெம்பெருமானைத் தவிர்த்து உயிர்களெல்லாம் தாமே தமக்குவேண்டிய நன்மையைத் தேடவறியாது என்றருளிச்செய்த ஆழ்வார், இப்பாட்டில்—அவை தமக்குவேண்டிய நன்மையைத்தேட அறியாதிருக்கையிலும் எம்பெருமானே நன்மையைத் தேடுகிறதற்குக் காரணம்—இச்சராசரங்களையெல்லாம் அப்பெருமான் பேரருள்கொண்டு தன் ஸங்கல்பத்தினால் படைத்த ரக்தஸம்பந்தமேயாகு மென்கிறார். பெற்றவனையொழிய வளர்ப்பவரில்லை யென்றதாயிற்று. சேதநங்கள் இறகொடிந்த பக்ஷிபோல மூலப்ரக்ருதியிலேயே லயித்துக் கிடவாமல் தன்னையடைந்து உஜ்ஜீவிக்குமாறு நிர்ஹேதுக க்ருபாகடாக்ஷத்தினால் அப்பரமன் கரசரணாதி அவயவங்களையும், தன்னை யுணருமாறு சாஸ்த்ரங்களையும் கொடுத்தருளினனென்பது நூற்கொள்கை. இவையறியாத காலத்திலும் அவனே ஸ்ருஷ்டிக்கையாலே இப்போது உபாயமறிவானும் அவனே என்று கீழ்ப்பாட்டோடே சேர்த்துப் பொருள் பெறுத்திக்கொள்க. ... (௬௧)

புணர்மருதி னூடேபோய்ப் பூங்குருந்தம் சாய்த்து *
மணமருவ மால்விடையேழ் செற்று *—கணம்வெருவ
ஏழுலகுந் தாயினவு மெண்டிசையும் போயினவும் *
சூழரவப் பொங்கணையான் தோள். (௬௨)

| | |
|---|---|
| புணர் மருதின் ஊடு போய் { ஒன்றோடொன்று இணைந்திருந்த (இரட்டை) மருதமரத்தின் நடுவே தவழ்ந்து சென்று | பூங்குருந்தம் சாய்த்து { (இலையும் கொம்புந் தெரியாதபடி) பூக்கள் நிரம்பியிருந்த குருந்த மரத்தைத் தள்ளிப்போட்டு |
| (பின்பொருகாலத்தில்) | (மற்றுமொரு காலத்தில்) |

மணம் மருவ — (நப்பின்னைப் பிராட்டியோடு) விவாஹம் நிறைவேறுதற்காக
மால் விடை ஏழ் செற்று — பெரிய வடிவை யுடைய ஏழு ரிஷபங்களையும் முடித்து
(இன்ன மொருகாலத்தில்)
கணம் வெருவ — எல்லாப் பிராணிகளும் நடுங்கும்படி
ஏழ் உலகும் தாயினவும் — மேலேழுலகங்களில் தாவிச் சென்றவையும்
எண் திசையும் போயினவும் — எட்டுத்திக்குகளிலும் போய்ப் பரவியவையும்
(எவையென்றால்)
சூழ் அரவம் பொங்கு அணையான் தோள் — (பரிமளம் குளிர்த்தி மென்மை என்னும் குணங்கள்) நிரம்பிய திருவனந்தாழ்வானை சிறந்த படுக்கையாக வுடையனான ஸர்வேச்வரனது திருத்தோள்களேயாம்.

* * *—[புணர்மருதினூடேபோய்.] கீழ்ப்பாட்டில், சராசரங்கள் யாவும் எம்பெருமானுடைய படைப்பு என்றார்; இப்படி உலகங்களை யெல்லாம் உண்டாக்கின பின்பு தான் தூரஸ்தனாய் நின்றுவிடாமல் உலகுக்கு உண்டாகின்ற களைகளைப் பிடுங்கிப் பாதுகாப்பதும் செய்கிறானென்பதை இப்பாட்டில் வெளியிடுகின்றார். இதில் தோள் என்றது திருக்கைகளை. இரட்டை மருதமரத்தினிடையே தவழ்ந்து சென்றபோது கைகளைத் தரையிலே ஊன்றித் தவழ்ந்ததனால் மருதம் முறித்ததைக் கைகளின்மேலேற்றிக் கூறினரென்க. மருதினூடேபோய் என்றது மருதமரங்களை முறித்துத் தள்ளினமையைச் சொன்னபடி. கூட்டமென்னும் பொருளதான 'கணம்' என்னும் வடசொல் கணமெனத் திரிந்தது: அநுகூலர் பிரதிகூலர் என்கிற வேறுபாடின்றி எல்லாப்பிராணிகளும் என்கை.

"சூழரவப்பொங்கணையான் தோள்" என்ற சொல்லாற்றலால், பரிமளம் குளிர்த்தி முதலிய குணங்களுக்கெல்லாம் எல்லைநிலமாயிருக்கிற திருவனந்தாழ்வானாகிற படுக்கையையும் பொருந்த ஸௌகுமார்யத்தையுடைய அப்பெருமான் அப்படுக்கையில் கண்வளரப்பெறாமல் இப்படி அல்லாடித் திரிவதுபற்றி வயிறெரிகின்ற இவ்வாழ்வாரது பொங்கும்பரிவு விளங்கும். பிரஜைகளைப் பாதுகாப்பதில் கருத்தூன்றியவர்கள் ஓரிடத்தில் தங்கியிருக்கப்

பெருமல் அலைந்து திரிவர்களன்றோ. இப்பாட்டில் அநுஸந்திக்கப் பட்டுள்ள சரித்திரங்க ளெல்லாவற்றிலும் எம்பெருமானுடைய தோள்வலிமையே தெற்றென விளங்குமென்றுகொண்டு தோளின் மேலேயே எல்லாச் செயலையும் ஏற்றிக் கூறினரென்க. ... (சுஉ)

தோளவனை யல்லால் தொழா * என்செவி யிரண்டும்
கேளவன தின்மொழியே கேட்டிருக்கும் *—நாநாளும்
கோணா கணையான் குரைகழலே கூறுவதே *
நாணாமை நள்ளேன் நயம்.

(சுங)

| | |
|---|---|
| தோள் | (எனது) கைகளானவை |
| அவனை அல்லால் தொழா | (வேறு சிலரைத் தொழு என்று நான் சொன்னாலும்) அப்பெருமானையல்லது வேறு எவரையும் வணங்கமாட்டா; |
| என் செவி இரண்டும் | எனது காதுகளிரண்டும் |
| கேள் அவனது | ஸகலவித பந்துவுமாகிய அப்பெருமான்விஷயமான |
| இன் மொழியே | இனிய பேச்சுக்களையே |
| கேட்டு இருக்கும் | கேட்டுக்கொண்டு (அதனாலே) ஸத்தை பெற்றிருக்கும்; |
| என் நா | என்னுடைய நாவானது |
| நாளும் | நாள்தோறும் |
| கோள் நாக அணையான் | மிடுக்கையுடையனான திருவனந்தாழ்வானைப் படுக்கையாக வுடைய அப்பெருமானது |
| குரை கழலே | ஒலிக்கின்ற வீரக் கழலையணிந்த திருவடிகளையே |
| கூறுவது | சொல்லா நிற்கிறது; |
| | (இப்படியான பின்பு) |
| நயம் | சப்தாதி விஷயங்களை |
| நாணாமை நள்ளேன் | வெட்கப்படாமல் விரும்புவாரைப் போலே நான் விரும்ப மாட்டேன். |

[தோளவனை.] தம்முடைய எல்லா இந்திரியங்களும் எம்பெருமான் பக்கலிலேயே ஊன்றப்பெற்றபடியை அருளிச்செய்கிறார். எம்பெருமானைத் தவிர்த்து வேறொருவரைத் தொழும்படி நான் சொன்னாலும் என் கைகள் தொழமாட்டோமென்கின்றன; இதர சப்தங்களைக் கேட்போமென்று நான் பாரித்தாலும் எனது காதுகளானவை பகவத் கதைகளைத் தவிர்த்து வேறு எதையும்

ஏற்றுக்கொள்ள மாட்டோமென்கின்றன; நாவினால் விஷயாந்தரங்களைப் பேசுவோமென்று நான் பார்த்தாலும் பகவத் பாதாரவிந்தத்தையன்றி மற்று எதையும் பேச நா எழுகின்றதில்லை; இப்படி எனது இந்திரியங்களெல்லாம் ஓரே உறுதியாயிருக்கவே, நானும் நாணங்கொண்டு இதர விஷயங்களைக் காறியுமிழ்ந்தேன் என்றாராயிற்று.

இரண்டாமடியில், கேள்—உறவு; "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய் தந்தையுமவரே யினியாவாரே" என்கிறபடியே ஸகலவித பந்துவுமான எம்பெருமானுடைய என்றபடி. இன்மொழி—கீர்த்தி. 'நாக+அணை, நாகவணை' என வரவேண்டியது நாகணையென வந்தது தொகுத்தல் விகாரம். குரைகழல்—வினைத்தொகையன்மொழி என்னலாம். நாணுமை—எதிர்மறை வினையெச்சம். நயம்—நயக்கப்படுவது நயம்; ஆசைப் படத்தக்க விஷயாந்தரங்கள். "நயந்தரு பேரின்பமெல்லாம்" என்ற இராமாநுச நூற்றந்தாதித் தனியன் பிரயோகமுங் காண்க. ... ... .... .... (சுரு)

நயவேன் பிறர்பொருளை நள்ளேன் கீழாரோடு—*
உயவே னுயர்ந்தவரோ டல்லால் *—வியவேன்
திருமாலையல்லது தெய்வமென் றேத்தேன் *
வருமாறென் னென்மேல் வினை. (சுச)

| | |
|---|---|
| பிறர் பொருளை | பரமபுருஷனுடைய பொருளான ஆத்மவஸ்துவை |
| நயவேன் | (என்னுடையதென்று) விரும்ப மாட்டேன்; |
| கீழாரோடு | ஸம்ஸாரிகளோடு |
| நள்ளேன் | ஸ்நேஹம் கொள்ள மாட்டேன்; |
| உயர்ந்தவரோடு அல்லால் | சிறந்த ஸ்ரீவைஷ்ணவர்களோடு தவிர (மற்றவர்களோடு) |
| உயவேன் | காலக்ஷேபம் பண்ண மாட்டேன்; |
| திருமாலை அல்லது | எம்பெருமானையன்றி (தேவதாந்தரங்களை) |
| தெய்வம் என்று ஏத்தேன் | தெய்வமாகக் கொண்டு துதிக்க மாட்டேன்; |

| | | | |
|---|---|---|---|
| வியவேன் | (இப்படியிருப்பதற்கு ஹேதுவான ஸத்வ குண[illegible] எனக்குத் தானு[illegible]தனாறு அஹங்கரித்து என்னைப்பற்றி நானே) ஆச்சரியப்படவும் மாட்டேன்; | என் மேல் | (எம்பெருமானுடைய அநுக்ரஹத்திற்கு இலக்கான) என் மேலே |
| (இப்படியான பின்பு) | | வினை | (அவனது நிக்ரஹ ரூபமான) பாபம் |
| | | வரும் ஆறு என் | வரும்விதம் ஏது? [வரமாட்டாது.] |

[நயவேன்பிறர்பொருளை.] கீழ்ப்பாட்டில், ஆழ்வார் தமக்கும் தம்முடைய இந்திரியங்கட்கும் விஷயாந்தரங்களைக் கண்ணெடுத்துப் பாராதபடி எம்பெருமானிடத்தில் ஊற்றமுண்டானபடியை அருளிச்செய்யவே, 'விஷயாந்தரங்கள் துர்வாஸனையால் வந்து மேல்விழுந்து உம்மை இழுத்துக்கொண்டு சென்றால் என்ன செய்வீர்?' என்று ஒரு கேள்விபிறக்க, எம்பெருமானுடைய அநுக்ரஹத்தைப் பூர்ணமாகப் பெற்றிருக்கிறேனாதலால் அப்படி நிகழ ஹேதுவில்லையென்கிறார்.

பிறர்பொருளை—"உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:" என்னும் பிரமாணத்தை அடியொற்றி இங்கு எம்பெருமானை 'பிறர்' என்ற சொல்லால் குறித்தனர். சேதநாசேதநங்களிற்காட்டில் விலக்ஷணன் என்றபடி. அவனுடைய பொருள்—ஆத்மவஸ்து. (கண்ணிநுண் சிறுத்தாம்பில் "நம்பினேன் பிறர் நன்பொருள் தன்னையும்" என்ற விடத்திற்கு வியாக்கியானமுங் காண்க.) ஸர்வேச்வரனுக்குக் கௌஸ்துபஸ்தாநீயமாகி அப்பெருமான் 'தன்னது' என்று அபிமாநித்திருக்கும் இவ்வாத்மவஸ்துவை 'என்னது' என்று நினைத்தல் இராவணனது செயலோடொக்குமாதலால் "நயவேன் பிறர்பொருளை" என்றார். இராவணனுடைய செய்கைக்குத் துணையாயிருந்த மாரீசன் போல்வாரோடு நட்புக்கொள்ளமாட்டேனென்பது 'நள்ளேன் கீழாரோடு' என்றதன் கருத்து.

"திருமாலையல்லது வியவேன்" என்று கூட்டி—திருமாலைக் கண்டாலன்றி (தேவதாந்தரங்களைக்கண்டால் அதனால்) மநஸ்ஸில் சிறிதும் மகிழ்ச்சிகொள்ளமாட்டேன் என்பதாக உரைக்கவுமாம்.

வருமாறேன் என்மேல் வினை?—"அவஶ்யமநுபோக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபாஶுபம்—அவச்யமநுபோக்தவ்யம் க்ருதம் கர்ம சுபாசுபம்" [அவரவர்கள் செய்த நல்வினை தீவினைகளின் பலன்களை அவரவர் அநுபவித்தே தீரவேணும்] என்கிற சாஸ்த்ரம் பகவத் பக்தர்கள் விஷயத்தில் விலைச்செல்ல மாட்டாதென்று காட்டுகிறபடி. "வருமாறென் நம் மேல்வினை" என்ற பாடமுமுண்டு; அப்போது, கீழெல்லாம் நயவேன், நள்ளேன், உயவேன், வியவேன், ஏத்தேன், என்று ஒருமையாகவந்து இங்கே நம் என்று பன்மையாக வந்தது—ஒருமையிற் பன்மைவந்த வழுவமைதியென்னவேண்டும். தம்மோடு ஸம்பந்தம் பெற்றவர்களையுங் கூட்டிக்கொண்டு நம்மேலென்கிறாரென்றலும் பொருந்தும்.

இரண்டாமடியில், உயவேன் என்றது—உசாவேன் என்றபடி: உசாவுதலாவது ஒருவர்க்கொருவர் வார்த்தையாடிப் போதுபோக்குதல்: "உசாத்துணை" என்ற ஆன்றோர்களின் ஸ்ரீ ஸூக்தியுங் காண்க. .... ... .... (௯௪)

வினையா லடர்ப்படார் வெந்நரகில் சேரார் *
தினையேனும் தீக்கதிக்கட் செல்லார் *—நினைதற்
கரியானைச் சேயானை, ஆயிரம்பேர் * செங்கட்
கரியானைக் கைதொழுதக் கால். (௯௫)

| | | | |
|---|---|---|---|
| நினைதற்கு அரியானை | (ஸ்வப்ரயத்நத்தாலே) நினைப்பதற்குக் கூடாதவனும் | கை தொழுதக்கால் | அஞ்ஜலி பண்ணினால் |
| | | (அப்படி அஞ்ஜலி பண்ணினவர்கள்) | |
| | | வினையால் | நல்வினை தீவினைகளால் |
| சேயானை | (நெஞ்சுக்கு விஷயமாகாதபடி) மிக்க தூரத்திலிருப்பவனும் | அடர்ப்படார் | நெருக்குப்பட மாட்டார்கள்; |
| ஆயிரம் பேர் | ஆயிரம் திருநாமங்களையுடையவனும் | வெம் நரகில் | கொடிய ஸம்ஸார மாகிற நரகத்தில் |
| செம் கண் கரியானை | சிவந்த திருக்கண்களையும் கறுத்த வடிவையு முடையனுமான பெருமானைக் குறித்து | சேரார் | (மீண்டும்) சென்று கிட்டமாட்டார்கள்; |
| | | தினையேனும் | சிறிதளவும் |
| | | தீ கதிக்கண் | கெட்டவழிகளில் |
| | | செல்லார் | போகமாட்டார்கள். |

[வினையாலடர்ப்படார்.] கீழ்ப்பாட்டில் ஆழ்வார் தாம் ஒழுங்குபட நிற்கும் நிலைமையை யருளிச்செய்தார். இப்படிப் பட்ட நிலைமை மற்று எல்லார்க்கும் உண்டாகவில்லையே, அஃது ஏன்? என்று ஒரு கேள்வி பிறக்க; இந்த நிலைமை எல்லார்க்கும் உண்டாகக்கூடியதே; எம்பெருமானைக் கைதொழுதால் இஃது எல்லார்க்கும் தன்னடையே உண்டாகும் என்கிறார் இப்பாட்டில்.

வினையால்அடர்ப்படார்='வினை' என்னும் பொதுச்சொல்லானது நல்வினை தீவினை என்ற இருவினைகளையும் இங்குக் குறிக்கும்; உபநிஷத்தில் "தஹா விஷாநு வுணு)வாவெ வியூ நிரஜநஃ வரஜஂ ஸாஜூஜுவெகி" [முமுக்ஷு மோக்ஷத்துக்குப் போம்போது புண்யம் பாபம் என்ற இருவினைகளையும் உதறிவிட்டுக் கல்மஷமற்றவனுய்ப் பரமஸாம்யத்தை அடைகின்றான்] என்று ஓதிவைத்திருக்கையாலே மோக்ஷமார்க்கத்திற்குப் பாபம் எப்படி இடையூறே அப்படி புண்யமும் இடையூறென்பது நூற்கொள்கை. பாபம் நரகத்திலேகொண்டு தள்ளும்; புண்யம் ஸ்வர்க்காதி லோகங்களில் கொண்டுதள்ளும்; ஆகவே, பாபம் இரும்பு விலங்கு போன்றதென்றும், புண்யம் பொன்விலங்கு போன்றதென்றும் சமத்காரமாகச் சொல்லுவதுமுண்டு. இனி, "வினையாலடர்ப்படார்" என்றவிதற்கு—இங்கே யநுபவிக்கநேரும் பாபபலன்களினல் துன்பப்படமாட்டார்கள் என்று பொருள்கொள்வதும் பொருந்தும்.

வெம் நரகில் சேரார்="யஸ்வயாஸஹ ஸஸ்வர்கோ நிரயோ யஸ்வயாவிநா" [எம்பெருமானேடு கூடியிருத்தல் ஸ்வர்க்கம்; அவனை விட்டுப் பிரிந்திருத்தல் நரகம்] என்று ஸ்ரீராமாயணத்திற் சொன்னபடியே எம்பெருமானைப் பிரிந்து வருந்துகையாகிற நரகாநுபவம் பண்ணமாட்டார்களென்கை.

தீனையேனும் தீக்கதிக்கண் செல்லார் = இவ்விடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான வருளிச்செயல்—"தர்மபுத்ரன் நரகதர்சநம் பண்ணினவோபாதியும் கூடாது இவர்களுக்கு." என்று. அதாவது—பாரதப்போரில் த்ரோணுசார்யனை வஞ்சிப்பதற்காக "அச்வத்தாமா ஹதஃ (குஞ்ஜரஃ)" என்று தர்மபுத்திரர்

வாயினால் சொல்லும்படி செய்வித்தார்களென்பது ப்ரஸித்தமாதலால், தர்மபுத்ரர் மநஸ்கரித்து அப்படி பொய் சொன்னதன் பயனாகப் பரலோக ப்ரயாணஸமயத்தில் சற்று நரகலோகத்தைப் பார்வையிட்டுப்போக நேர்ந்ததாம்; அதுபோலவுங்கூட நேரிடாதாம் செங்கட்கரியானைக் கைதொழுதார்க்கு என்க. 'தினை' என்பது ஸூக்ஷ்மமான ஒரு தாந்யவிசேஷம்; ஸ்வல்பமென்னும் பொருளில் இச்சொல்லை உபயோகிப்பது வழக்கம். ... (சுரு)

காலை யெழுந்துலகம் கற்பனவும் கற்றுணர்ந்த *
மேலைத் தலைமறையோர் வேட்பனவும் *—வேலைக்கண்
ஓராழி யானடியே யோதுவது மோர்ப்பனவும் *
பேராழி கொண்டான் பெயர். (சுசு)

உலகம் — உயர்ந்தவர்களான முமுக்ஷுக்கள்

காலை எழுந்து — (ஸத்வகுணம் வளரக்கூடிய) விடியற்காலையில் துயில் விட்டெழுந்து

கற்பனவும் — அப்யஸிப்பனவும்,

கற்று உணர்ந்த மேலை தலை மறையோர் — படித்து அறிவு நிரம்பிய வைதிகோத்தமர்கள்

வேட்பனவும் — (ஸாக்ஷாத்கரிக்க) ஆசைப்படுவனவும்

(எவை யென்றால்)

வேலைக்கண் ஓர் ஆழியான் — திருப்பாற்கடலில் ஒப்பற்ற திருவாழியை யுடையனாய்ப் பள்ளி கொண்டிருக்கும் பெருமானுடைய

அடியே — திருவடிகளேயாம்;

ஓதுவதும் — (மஹான்களால்) ச்ரவணம் பண்ணப் பெறுவனவும்

ஓர்ப்பனவும் — மநநம் பண்ணப் பெறுவனவும்

(எவை யென்றால்)

பேர் ஆழி கொண்டான் — பெரிய கடல் போன்ற திருமேனியைக் கொண்ட அப்பெருமானுடைய

பெயர் — திருநாமங்களேயாம்.

* * *—[காலையெழுந்து.] "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" [உலகம் என்னுஞ்சொல் மிகப்பெரிய மஹான்களைக்

குறிக்கும்] என்று தொல்காப்பியத்திற் கூறியிருப்பதனால், இப்பாட்டின் முதலடியிலுள்ள உலகம் என்னுஞ்சொல் 'உயர்ந்தவர்களான முமுக்ஷுக்கள்' என்னும் பொருளிலே பிரயோகிக்கப்பட்டது. அறிவு நிரம்பிய பெரியோர்கள் எம்பெருமானது திருவடிகளையும் அவனது திருநாமங்களையுமே காண்பதுங் கேட்பதுமாயிருப்பர்களென்கிறாரிப்பாட்டில்.

மேலைத்தலைமறையோர் = கீழ்வேதமென்றும் மேல்வேதமென்றும் வேதம் இருவகைப்படும்: கீழ்வேதமென்பது கர்மகாண்டம்; மேல்வேதமென்பது ப்ரஹ்மகாண்டம் (உபநிஷத்பாகம்); ஆகவே, மேலைத்தலைமறையோரென்றது வேதாந்திகளென்றபடி. ... (கசு)

பெயருங் கருங்கடலே நோக்குமாறு * ஒண்பூ
உயருங் கதிரவனே நோக்கும் * — உயிரும்
தருமனையே நோக்குமோண் டாமரையாள் கேள்வன் *
ஒருவனையே நோக்கு முணர்வு. (கஎ)

| | | | |
|---|---|---|---|
| ஆறு | ஆறுகளானவை | உயிரும் | பிராணனும் |
| பெயரும் கருகடலே நோக்கும் | பொங்கிக்கிளர்கின்ற மஹாஸமுத்ரத்தையே நோக்கிச் செல்லும்; | தருமனையே நோக்கும் | யமதர்மராஜனையே சென்று சேரும்; |
| | | | (இவை போலவே) |
| ஒண் பூ | அழகிய தாமரைப் பூவானது | உணர்வு | ஞானமானது |
| உயரும் | உந்நதஸ்தானத்திலே [ஆகாசத்திலே] இருக்கிற | ஒண் தாமரையாள் கேள்வன் ஒருவனையே | அழகியதாமரைப் பூவிற்பிறந்த பிராட்டிக்கு வல்லபனான பெருமானொருவனையே |
| கதிரவனே | ஸூர்யனையே | | |
| நோக்கும் | கண்டுமலரும்; | நோக்கும் | சென்று பற்றும். |

[பெயருங்கருங்கடலே.] ஞானமென்பது உலகிற் பலவிதம்; தர்க்கசாஸ்திரம் படித்து வாதங்கள்செய்யத் தேர்ச்சிபெற்றவனும் தன்னை ஞானியென நினைக்கிறான்; ஆயுர்வேதம் சோதிடம் மந்த்ரம் தந்த்ரம் முதலியவற்றில் கைதேர்ந்தவனும் தன்னை ஞானியென நினைக்கிறான்; இப்படி ஒவ்வொரு யோக்யதை பெற்றவனும் தன்னை ஞானியென நினைத்துக்கொண்டால் உண்மையான ஞானம்

எது? வாஸ்தவத்தில் ஞானியென்பான் எவன்? என்கிற கேள்விக்கு சாஸ்த்ரங்கள் சொல்லும் உத்தரமாவது—எம்பெருமானை அறிகிற அறிவு ஒன்றுதான் ஞானமெனப்படும் என்பதே. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ஹிரணியனை நோக்கி ப்ரஹ்லாதன் சொல்லும்போது "தத்கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே। ஆயாஸாயாபரம் கர்ம வித்யாந்யா சில்பநைபுணம்॥" [1—19—41.] (ஸம்ஸாரத்தில் சிக்குவதற்குக் காரணமாகாத கருமம் எதுவோ அதுதான் கருமம்; முக்திபெறுவதற் குறுப்பான ஞானம் எதுவோ அதுதான் ஞானம்; கீழ்ச்சொன்னபடியில்லாத கருமம் வீணான ஆயாஸரூபமாகவே தேறும்; பகவத் விஷயகமல்லாத ஞானம் செருப்புக்குத்தக் கற்றது போலவேயாம்.) என்று சொல்லப்பட்டிருக்கிறது. தவிரவும், அந்த ஸ்ரீவிஷ்ணு புராணத்திலேயே (6—5—87.) மைத்ரேயரை நோக்கிப் பராசரர் சொல்லும்போது, "ஸம்ஜ்ஞாயதே யேந ததஸ்ததோஷம் ஶுத்தம் பரம் நிர்மலமேகரூபம்। ஸம்த்ருஶ்யதே வாப்யதிகம்யதே வா தஜ்ஜ்ஞாநம் அஜ்ஞாநமதோந்யதுக்தம்॥" [பரப்ரஹ்மத்தை யறிவதற்கு உறுப்பான ஞானமொன்றே ஞானமெனப்படும்; மற்றவிதமான ஞானங்கள் அஜ்ஞானமேயாம்] என்றும் சொல்லப்பட்டுள்ளது. இந்த சாஸ்த்ரார்த்தமே இப்பாட்டிலருளிச் செய்யப்படுகிறது. "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிற வாக்யமே இப்பாட்டின் முக்கிய விஷயம். மற்றவை த்ருஷ்டாந்தகோடியிலே அருளிச் செய்யப்பட்டவை. ஆறுகளானவை ஸமுத்ரத்தையே நோக்கிச் செல்வதும், தாமரைப்பூ ஸூர்யனை நோக்கியே மலர்வதும், பிராணன்கள் யமதர்மராஜனையே சென்று கிட்டுவதும் எப்படி நியதமாக நிகழ்கின்றனவோ அப்படியே ஜ்ஞானமென்பதும் திருமாலைப்பற்றியல்லது வேறு விஷயங்களைப்பற்றி நில்லாது என்றது—எம்பெருமானைத் தவிர்த்து இதர விஷயங்களைப்பற்றியுண்டாகும் அறிவு அறிவல்ல; அது அஜ்ஞானபர்யாயமே என்றவாறு. "நெறிக்கலங்கியாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே, புக்கன்றிப் புறம்நிற்க மாட்டாத மற்றவைபோல், மிக்கிலங்குமுகில் நிறத்தாய் வித்துவக் கோட்டம்மா, உன்புக்கிலங்கு சீரல்லால் புக்கிலன்காண் புண்ணி

யனே!" என்ற பெருமாள் திருமொழிப்பாசுரம் ஒருபுடை ஒப்பு நோக்கத்தக்கது.

பிள்ளைலோகாசார்யரருளிச்செய்த முமுக்ஷுப்படியில் திருமந்த்ரப்ரகரணத்தில் (73) "இத்தால்-* தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு என்றதாயிற்று" என்னும் ஸூத்ரத்திற்கு ஸ்ரீமணவாளமாமுனிகளருளிச்செய்துள்ள வியாக்கியான சைலியை நோக்குங்கால், இப்பாட்டில் உணர்வு என்பது 'ஜ்ஞாநமயனான ஆத்மா' என்று பொருள்படுகிறதென்று கொண்டு, ஜ்ஞாநைக நிரூபணீயனான ஆத்மா திருமாலுக்கு அநந்யார்ஹ சேஷபூதனென்பதை இப்பாட்டு உணர்த்துவதாகக் கருத்துக் கொள்ளவும் இடமேற்படுகின்றது: அதுவும் ஒரு நிர்வாஹமாகும்.

இப்பாட்டால் மூன்றுவகையான சாஸ்த்ரார்த்தங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன;—1. எம்பெருமானைப்பற்றி யுண்டாகிற ஞானமே ஞானம். 2. ஆத்மா எம்பெருமானுக்கே உரியவன் (தாமரையாள் கேள்வனென்று பிராட்டி ஸம்பந்தம் தோற்றச் சொல்லியிருக்கையாலே) மிதுநசேஷத்வமே ஜீவாத்மலக்ஷணம்— என்னுமிப்பொருள்கள் மூன்றுமாம்.

"உயிரும் தருமனையே நோக்கும்" என்றவிடத்தில் ஒரு விசாரமுண்டு: அவைஷ்ணவர்களுடைய பிராணன் யமதர்மராஜனுக்கு வசப்படுமேயன்றி ஸ்ரீவைஷ்ணவர்களின் பிராணன் அப்படி யமனைச்சென்று கிட்டமாட்டாதே; அப்படியிருக்க, "உயிரும் தருமனையே நோக்கும்" என்று பொதுவாக எப்படி அருளிச்செய்யலாம்? என்று. இதற்கு அப்பிள்ளையுரையில் "உயிரும்—பகவத்பரரல்லாத நாட்டிற் பிராணிகளடங்கலும்" என்றுரைத்திருக்கக் காண்கையாலே இந்த சங்கை வேண்டா என்பர் சிலர். வைஷ்ணவர்களானாலும் சரி, அவைஷ்ணவர்களானாலும் சரி; எல்லாருடைய பிராணனும் பகவதாஜ்ஞையின்படி யமதர்மராஜனிடத்திலேயே சென்று சேரும்; ஸித்தாந்தத்தில் ஆத்மா வேறு, பிராணன் வேறு; வைஷ்ணவாத்மா எம்பெருமானைச்சென்று சேர்ந்தாலும் அவனுடைய பிராணன் யமனைத்

தான் சென்று சேரும் என்பர் சிலர். மற்றுஞ் சிலர் 1. "யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதி ஸ்தித:" என்றும் "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" என்றும் எம்பெருமானையே யமனாகவும் தருமனாகவுஞ் சொல்லியிருக்கையாலே "உயிரும் தருமனையே நோக்கு" மென்கிற இவ்விடத்திற்கும் அவ்வெம் பெருமானே பொருள் என்பர். நிற்க. .... .... (கூஎ)

உணர்வாரா ருன்பெருமை யூழிதோ றூழி *
உணர்வாரா ருன்னுருவந் தன்னை *—உணர்வாரார்
விண்ணகத்தாய் மண்ணகத்தாய் வேங்கடத்தாய் * நால்வேதப்
பண்ணகத்தாய் நீகிடந்த பால். (கூஅ)

| | |
|---|---|
| விண்ணகத்தாய் | பரமபதத்திலெழுந்தருளியிருப்பவனே! |
| மண்ணகத்தாய் | இந்த மண்ணுலகில் திருவவதரிப்பவனே! |
| வேங்கடத்தாய் | திருமலையில் நின்றருள்பவனே! |
| பண் நால் வேதம் அகத்தாய் | ஸ்வரப்ரதாநமான நான்கு வேதங்களாலும் அறியப்படுபவனே! |
| உன்பெருமை | (இப்படிப்பட்ட) உன்னுடைய பெருமையை |
| ஊழி தோறு ஊழி | காலமுள்ளதனையும் |
| | (இருந்து ஆராய்ந்தாலும்) |
| உணர்வார் ஆர் | அறியக்கூடியவர் யாவர்? |
| உன் உருவம் தன்னை | உனது திவ்யத்ம ஸ்வரூபத்தைத்தான் |
| உணர்வார் ஆர் | அறியக்கூடியவர் யாவர்? |
| நீ கிடந்த பால் | (ஆர்த்த ரக்ஷணத்துக்காக) நீ பள்ளி கொண்டிருக்கப்பெற்ற திருப்பாற்கடலைத்தான் |
| உணர்வார் ஆர் | அறிய வல்லாரார்? [எவருமில்லை.] |

[உணர்வாரார்.] திருமாலை யறிவதே அறிவு என்று கீழ்ப்பாட்டில் அருளிச்செய்த ஆழ்வார், அறிவுக்கு எல்லைநிலம் எம்பெருமானல்லது இல்லை என்னும்படியிருந்தாலும் அவன்தன்மை அறிவார்தான் இல்லை என்று இப்பாட்டிலருளிச் செய்கிறார். இவ்வாறிருப்பது வஸ்துவின்ஸ்வபாவமே யொழிய அறிவின் குறைவன்றென்பதும் அறியத்தக்கது. 'உணர்வாரார்?' என்ற வினாவினால் ஸர்வஜ்ஞனை உன்னாலும் உன்தன்மை அறியமுடியாதென்பதும் ஸூசிப்பிக்கப்படும். "தனக்கும் தன்தன்மையறிவரியான்" என்றார் நம்மாழ்வாரும். ... ... ... (கூஅ)

1. மநுஸ்மிருதி—எட்டாமத்யாயம் 92.

பாலன் றனதுருவா யேழுலகுண்டு * ஆலிலையின்
மேலன்று நீவளர்ந்த மெய்யென்பர்—* ஆலன்று
வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ *
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு. (சுக)

| | |
|---|---|
| சோலை சூழ் குன்று எடுத்தாய் | சோலைகளால் சூழப்பட்ட கோவர்த்தனமலையைக் குடையாக வெடுத்துப் பிடித்தவனே !, |
| நீ பாலன் தனது உரு ஆய் | நீ சிறுகுழந்தை வடிவுகொண்டு |
| ஏழ் உலகு | எல்லா வுலகங்களையும் |
| உண்டு | திருவயிற்றிலே வைத்து |
| ஆல் இலையின் மேல் | ஓர் ஆலந்தளிரின் மேல் |
| அன்று | பிரளயகாலத்தில் |
| வளர்ந்த | கண்வளர்ந்த செயலை |
| மெய் என்பர் | (வைதிகர்கள் யாவரும்) ஸத்யமென்கிறார்கள் : |

| | |
|---|---|
| அன்று | (எல்லாம் அழிந்துகிடந்த) அக்காலத்தில் |
| ஆல் | அந்த ஆலானது |
| வேலை நீர் உள்ளதோ | வெள்ளங் கோத்துக் கிடக்கிற பிரளய ஸமுத்ரத்தின் ஜலத்தி லுள்ளதோ ? (அல்லது) |
| விண்ணதோ | (நிராலம்பமான) ஆகாசத்தி லுள்ளதோ ? (அல்லது) |
| மண்ணதோ | (பிரளய ஜலத்திலே கரைந்துபோன) பூமியி லுள்ளதோ ? |
| சொல்லு | இவ்வாச்சரியத்தை நீயே சொல்ல வேணும். |

[பாலன்றனதுருவாய்.] இப்பாட்டு ஒரு சமத்காரமான கேள்வியாயிருக்கிறது. மஹாப்ரளயத்திலே இந்த விபூதி அழியாதபடி திருவயிற்றிலே இதனை வைத்துக்கொண்டு அப்ராக்ருதமான உனது திருமேனியைச் சிறுக்கி ஒரு சிறுகுழந்தை வடிவத்தைக் கொண்டவனாகி, சயனிப்பதற்குச் சிறிதும்பற்றாத ஒரு ஆலந்தளிரில் நீ பிரளயகாலத்திலே சயனித்தருளினையென்று பரம ஆப்தர்களான முனிவர் மொழிகின்றனர் ; 'எத்திறம் !' என்று நினைந்து நினைந்து ஈடுபடும்படியான இச்செயலானது—முன்பு கிருஷ்ணாவதாரத்தில் ஏழுபிராயத்தில் ஏழுநாள் ஒருசேரக் கோவர்த்தந

மலையையெடுத்துக் குடையாகப்பிடித்த அருஞ்செயலைக்காட்டிலும் அதிக ஆச்சரியமாயிருக்கின்றது; நீ கண்வளர்ந்த அந்த ஆல் பிரளயஸமுத்ரத்தில் தோன்றியதோ? அன்றி, பிடிப்பொன்றுமில்லாத ஆகாசத்தில் தோன்றியதோ? அன்றி, பிரளயத்தில் கரைந்துபோன மண்ணிலிருந்துதான் தோன்றியதோ? இதன் வரலாற்றை விளங்கச்சொல்லவேணுமென்று கேட்கிறார். இவ்வதிசயம் ஸர்வஜ்ஞனென்னும் கண்டுபிடித்துச்சொல்லமுடியாததென்றும், அகடிதகடநாஸாமர்த்தியத்தினால் நேரும் அதிமாநுஷ சேஷ்டிதங்களில் குதர்க்கங்கள்பண்ணுவது தகாதென்றும் வெளியிடுதலே இப்பாட்டின் முக்கிய நோக்கமாகும். ஆழ்வான் அருளிச்செய்த அதிமாநுஷஸ்தவத்தில் "உாஹ்ஸிஶாவ-டீ-உமெ ஶயிதொதிதநுா தநுா ஜமஷி ஸிஹ்யெஷெ ஸவிகாஸலெவ। வெஶிஜிஜாம் தா தவ ஶக்திஉதகிஃதவ்யா உவ்யாஜதஃவ்ருயயெஸ கிஜிஹாவதீணஃ." என்னும் ச்லோகத்தில் வடதளசாயிவ்ருத்தாந்தம் அகடிதகடநா ஸாமர்த்தியத்தினாலாயதென்று வெளியிடப்பட்டமைகாண்க. தத்வதர்சிகளான மஹான்களால் ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட சாஸ்திரங்களிற் கூறியுள்ள சிலவிஷயங்கள் அற்பபுத்திக்கு அஸம்பாவிதம்போல் தோன்றினாலும் விசித்ரசக்தி வாய்ந்த எம்பெருமானது செயல்களில் துராக்ஷேபங்கள் பண்ணுவதற்கு யாரும் அதிகாரிகளல்ல என்பது ஆழ்வானருளிச்செய்த ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தில் "கிம்ஸாயநஃ க்ஷிவஸநு கிஉாவாஊஊாநஃ கமெஷெஷாயஸ்யஜதீஶ ஐஊம் ஸஷ்ஹம்। ஐத்யாஊ்யநிஷிதகாதகஃஉதகஃயஹஃ த்வெஷைவம் ஶ்யாதிவிஷொ விஊாயூத கஃ்யம்॥" என்ற ச்லோகத்தால் நன்கு காட்டப்பட்டது. (கூக)

சொல்லுந் தனையும் தொழுமின், விழுமுடம்பு *
செல்லுந் தனையும் திருமாலை *—நல்லிதழ்த்
தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால் *
நாமத்தா லேத்துதிரேல் நன்று. (எ௰)

| | | | |
|---|---|---|---|
| திருமாலை | பிராட்டியோடு கூடின பெருமானை | விழும் உடம்பு செல்லும் தனையும் | அஸ்திரமான இந்த சரீரம் உள்ள வரையில் |

| | | | |
|---|---|---|---|
| நல் இதழ் தாமத்தால் | அழகிய மலர்களைக் கொண்டு தொடுத்த மாலைகளாலும் | தொழுமின் | தொழுங்கள்; (இவற்றைச் செய்ய சக்தியில்லாவிட்டால்) |
| வேள்வியால் | யாகம் முதலிய ஸத்கருமங்களாலும் | சொல்லும் தனையும் | (உங்களுக்குச்) சொல்லக்கூடிய சக்தியுள்ளவரையிலும் |
| தந்திரத்தால் | (மந்த்ரமில்லாத) வெறும் க்ரியைகளாலும் | நாமத்தால் | திருநாமங்களைக் கொண்டு |
| மந்திரத்தால் | (க்ரியாகலாபமில்லாத) வெறும் மந்திரங்களாலும் | ஏத்துதிர் எல் | புகழ்ந்தீர்களாகில் |
| | | நன்று | அது மிகவும் நல்லது. |

* * *—[சொல்லுந்தனையும்.] எம்பெருமான் விசித்ரசக்தி வாய்ந்தவனென்பதைக் கீழ்ப்பாட்டில் தெரிவித்து, இப்படிப்பட்ட பெருமானை உலகத்திலுள்ளீரெல்லீரும் பணிந்து வாழுங்கோளென்று பரோபதேசத்தில் மூளுகிறாரிப்பாட்டில். "விழுமுடம்பு செல்லுந்தனையும் நல்லிதழ்த்தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால் திருமாலைத்தொழுமின் ; சொல்லுந்தனையும் நாமத்தால் ஏத்திதிரேல் நன்று" என்று அந்வயிப்பது. இந்த சரீரம் என்றைக்காவதொருநாள் சரிந்தேபோகப்போகிறது; 1. "இதம் ஶரீரம் பரிணாமபேஶலம் பதத்யவஶ்யம் ஶ்லதஸந்திஜர்ஜரம் = இதம் சரீரம் பரிணமபேசலம் பதத்யவச்யம் ச்லதஸந்தி ஜர்ஜரம்" என்கிறபடியே தவறுடல் நசித்தேபோகக்கடவதான இவ்வுடல் உள்ளவரையில் சிறந்த புஷ்பங்களைக் கொண்டும் யாகம் முதலிய வைதிககருமங்களைக்கொண்டும் மந்த்ரதந்த்ரங்களைக்கொண்டும் எம்பெருமானைப் பணியுங்கள் ; சரீரத்தால் சிரமப்பட்டுச் செய்யக்கூடிய அக்காரியங்களில் கைவைப்பது கஷ்டமாயிருந்தால், வெறும் வாயினால் எவ்வளவு சொல்லக்கூடுமோ அவ்வளவு திருநாமங்களைச்சொல்லி ஏத்தினாலும் போதுமானது—என்றாராயிற்று.

தாமம், தந்திரம், மந்திரம், நாமம்—வடசொற்கள். .... (௭௦)

1. முகுந்தமாலை.

நன்று பிணிமூப்புக் கையகற்றி நான்கூழி *
நின்று நிலமுழுது மாண்டாலும் *—என்றும்
விடலாழி நெஞ்சமே வேண்டினேன் கண்டாய் *
அடலாழி கொண்டான்மாட் டன்பு. (எக)

| | |
|---|---|
| ஆழி நெஞ்சமே | (எம்பெருமானிடத்தில் ஆழ்ந்திருக்கிற நெஞ்சே! |
| பிணி | வியாதியையும் |
| மூப்பு | கிழத்தனத்தையும் |
| நன்று கைஅகற்றி | நன்றாக [அடியோடு தொலைந்தொழியும்படி] விட்டும் [கைவல்ய மோக்ஷத்தைப் பெற்றாலும்] |
| நான்கு ஊழி | நான்கு யுகங்களிலும் [காலமுள்ள வரையிலும்] |
| நின்று | ஸ்திரமாக இருந்து |
| நிலம் முழுதும் ஆண்டாலும் | பூமி தொடங்கிப் பிரமலோகம் வரையிலுள்ள இந்த அண்டைச் வரியங்கள் முழுவதையும் ஸ்வாதீனமாய் நிர்வஹிக்கப் பெற்றாலும் |
| அடல் ஆழி கொண்டான் மாட்டு அன்பு | தீக்ஷ்ணமான திருவாழியைக் கையிலேந்திய பெருமானிடத்தில் ப்ரீதியை |
| விடல் | விடாமலிரு; |
| வேண்டினேன் கண்டாய் | உன்னைப் பிரார்த்திக்கின்றேன்காண். |

* * *—[நன்றுபிணிமூப்பு.]—பகவத்விஷய வாஸனையேயறியாத நாட்டார்க்கு உபதேசித்தார் கீழ்ப்பாட்டில்; அரஸிகர்களான உலகத்தவர்க்கு உபதேசிப்பதைவிட பகவத்விஷய ரஸமறிந்த நமது நெஞ்சுக்கு உபதேசிப்பது நன்று என்று கொண்ட ஆழ்வார் இப்பாட்டில் தமது திருவுள்ளத்திற்கு உபதேசிக்கிறார். பரமைச்வர்யமாயினும் கைவல்ய மோக்ஷமாயினும் அல்லது அவ்விரண்டுமேயாயினும் உனக்குக் கிடைப்பதாயிருந்தாலும் அவற்றை நீ உதறித்தள்ளிவிட்டு நம்முடைய விரோதிகளைப் போக்கி நம்மைப் பாதுகாப்பதற்காகவே எப்போதும் கையுந் திருவாழியுமாயிருக்கிற எம்பெருமானை மறவாமல் அவனிடத்தில் அன்பை உறுதியாகக்கொள் என்று பால்குடிக்கக் கால்பிடிப்பாரைப்போலே தமது நெஞ்சை வேண்டுகின்றார்.

**பிணிமூப்புக்கையகற்றி**=பிணியையும் மூப்பையுஞ் சொன்னது மரணத்துக்கும் உபலக்ஷணம்; "ஜராமரண மோக்ஷாய

மாமாச்ரித்ய யதந்தி யே" என்று பகவத்கீதையில் சொல்லியிருப்பதுகாண்க. பிறப்பதும் பிணிகளால் வருந்துவதும் கிழத்தனமடைவதும் இறப்பதுமாகிய ஸம்ஸார ஸ்வபாவங்கள் கைவல்யநிஷ்டனுக்குக் கழிந்துபோகிறபடியால் இப்பாட்டின் முதலடியில் கைவல்ய மோக்ஷம் விவக்ஷிதம். அந்த மோக்ஷம் உனக்குக்கிடைத்தாலும் அது பகவதநுபவ ஆநந்தத்தில் மிகச் சிறிதென்றுகொண்டு அதனை விட்டுத்தொலை என்றபடி. பரமைச்வரியம் கிடைத்தாலும் அது அஸ்திரமென்று அதனையும் விட்டுத்தொலை என்கிறார் இரண்டாமடியில். இவ்விரண்டும் பகவானை மறப்பதற்குக் காரணமாதலால் அவற்றை வெறுக்கச்சொல்லுகிறாரென்க. 'ஆண்டாலும்' என்ற உம்மையில், அவற்றில் தமக்கு விருப்பமில்லையென்பதும் தொனிக்கும். விடல்—எதிர்மறை வினைமுற்று. ஆழி நெஞ்சமே!— இந்தப் பிரார்த்தனையை உனக்கு நான் பண்ணவேண்டியதில்லை; நீயே பகவதநுபவத்தில் ஆழ்ந்தவன்; ஆனாலும் ஏதோ சொல்லிவைத்தேன் என்பது கருத்து.

கண்டாய்—முன்னிலை யசைச்சொல். .... .... (எக)

அன்பாழி யானை யணுகென்னும் நாவவன்றன் *
பண்பாழித் தோள்பரவி யேத்தென்னும் *—முன்பூழி
காணானைக் காணென்னும் கண்சேவி கேளென்னும் *
பூணாரம் பூண்டான் புகழ். (எஉ)

| | |
|---|---|
| அன்பு | பகவத்பக்தியே வடிவெடுத்தது போன்றிருக்கிற எனது நெஞ்சானது |
| ஆழியானை | 'ஸர்வேச்வரனை |
| அணுகு என்னும் | கிட்டி அநுபவி' என்று எனக்கு உபதேசிக்கின்றது; |
| நா | வாக்கானது |
| அவன் தன் பண்பு ஆழி தோள் பரவி ஏத்து என்னும் | 'அப்பெருமானது ஸௌந்தர்ய ஸாகரமான திருத்தோள்களைப் பேசித் துதி' என்று உபதேசிக்கின்றது; |
| கண் | கண்களானவை |

| | | செவி | காதுகள் |
|---|---|---|---|
| முன்பு ஊழி காணனை காண் என்னும் | 'நாம் தன்னை வந்து ஆச்ரயிப்பதற்கு முன்பிருந்த காலத்திலுள்ள வைமுக்கிய நிலைமையை நெஞ்சாலு மெண்ணுத பெருமானை ஸேவி' என்று உபதேசிக் கின்றன; | பூண் ஆரம் பூண்டான் புகழ் கேள் என்னும் | 'ஆபரணமான ஹாரம் முதலிய வற்றை அணிந்து கொண்டிருக்கிற அப்பெருமா னுடைய திருக் குணங்களைக் கேள்' என்று தூண்டுகின்றன. |

* * *—[அன்பாழியானை.] ஆசார்ய சிஷ்யக்ரமம் மாறுடு கிறது இப்பாட்டில். கீழ்ப்பாட்டில் 'நெஞ்சமே! வேண்டினேன் கண்டாய்' என்று ஆழ்வார் தாம் நெஞ்சுக்கு ஆசார்யராய் நின்று உபதேசித்தார்; இவர் உபதேசிப்பதற்கு முன்னமே இவருடைய ஸகல கரணங்களும் பகவத்விஷயத்தில் ஈடுபட்டிருந்தமையால் அவை தாமே தனித்தனி ஆசார்யபதம் நிர்வஹிக்கக்கடவனவாய் இவர்தமக்கு உபதேசிக்க முற்பட்டபடியைப் பேசுகிறாரிதில்.

அன்பு ஆழியானையணுகென்னும்=இங்கு 'அன்பு' என்ற சொல்லால் நெஞ்சைக்குறித்தனர்; அன்பு என்பது வேறொரு வஸ்துவாகவும் அதனையுடைய நெஞ்சு என்பது வேறொரு வஸ்து வாகவும் தோன்றாமல் அன்பு தானே நெஞ்சாக வடிவெடுத்து வந்திருக்கின்றதென்னலாம்படி யிருத்தலால் நெஞ்சுக்கு 'அன்பு' என்றே வாசகமிடுகிறார். "தத்³கு³ணஸாரத்வாத்து தத்³வ்யபதே³ஶ: ப்ராஜ்ஞவத்" என்ற ப்ரஹ்ம ஸூத்ரம் இங்கு ஸ்மரிக்கத்தகும். "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" என்ற உபநிஷத்வாக்யத்தில், அறிவுக்கு ஆச்ரயமான ஆத்மாவை விஜ்ஞாந சப்தத்தையிட்டே சொல்லியிருப்பதும் நினைக்கத்தக்கது.

பண்பாழித்தோள்=பண்பு ஆழி என்றும், பண் பாழி என்றும் பிரிக்கலாம். பண்பு என்று அழகுக்குப் பெயர்; அழகுக்குக் கடல்போன்ற தோள் என்றும், பண்—அழகையும், பாழி—வலிமையையுமுடைய, தோள் என்றும் உரைக்க.

முன்பூழிகாணனை=ஊழி என்று காலத்துக்குப்பெயர்; முன்புள்ள காலத்தைக் காணுதவனென்றால் என்ன தாற்பரியம்?....

மஹாபராதியான ஒரு சேதநன் வந்து தன்னை ஆச்ரயித்தால், நேற்றுவரையில் அவன் எப்படியிருந்தான், என்னென்ன பாபங்கள் பண்ணினான் என்று முற்கால நிலைமைகளைச் சிறிதும் ஆராயாதவன் எம்பெருமான்—என்று தாற்பரியம். .... (எஉ)

புகழ்வாய் பழிப்பாய்நீ பூந்துழா யானை *
இகழ்வாய் கருதுவாய் $ நெஞ்சே *—திகழ்நீர்க்
கடலு மலையு மிருவிசும்புங் காற்றும் *
உடலு முயிரு மேற்றான். (எ௩.)

| | |
|---|---|
| நெஞ்சே | (நல்லது கெட்டதுகளை ஆராயக்கூடிய) மனமே!, |
| நீ | நீ |
| பூந்துழாயானை | அழகிய திருத்துழாய் மாலையணிந்த பெருமானை |
| புகழ்வாய் | ஸ்தோத்ரம் பண்ணினாலும் பண்ணு; |
| | (அன்றியே) |
| பழிப்பாய் | நிந்திப்பதானாலும் நிந்தி; |
| | (அன்றியே) |
| இகழ்வாய் | அநாதரித்தாலும் அநாதரி; |
| | (அன்றியே) |
| கருதுவாய் | ஆதரித்தாலும் ஆதரி; (நீ உனக்கு இஷ்டமானபடி செய்;) |
| திகழ் நீர் கடலும் | விளங்குகின்ற ஜலபூர்த்தியையுடைய ஸமுத்ரமும் |
| மலையும் | பர்வதங்களும் |
| இரு விசும்பும் | பரம்பிய ஆகாசமும் |
| காற்றும் | வாயுவும் |
| உடலும் | (தேவாதி) சரீரங்களும் |
| உயிரும் | (அந்தந்த சரீரங்களிலுள்ள) பிராணிகளும் (ஆகிய இவற்றையெல்லாம்) |
| ஏற்றான் | தரித்துக்கொண்டிருப்பவன் அவ்வெம்பெருமானே காண். |

* * *—[புகழ்வாய்பழிப்பாய்.] 1. "சஞ்சலம் ஹிமந: க்ருஷ்ண!" என்றும் 2. "நின்றவா நில்லாநெஞ்சு" என்றுஞ் சொல்லுகிறபடியே நெஞ்சின் நிலைமை மாறிமாறிக்கொண்டேயிருக்குமென்பதை நினைத்த ஆழ்வார், 'நெஞ்சே! நீ எப்போதும்

$. "என்னெஞ்சே" என்ற பாடமுமுண்டு; வெண்டளை பிறழாது.

1. பகவத்கீதை. 2. பெரியதிருமொழி 1—1—4.

ஓரே நிலையாயிருந்து எம்பெருமானைப் புகழ்வதும் ஆதரிப்பதுமாயிருந்தாலும் சரி; நிலைமாறி சிசுபாலாதிகளைப்போலே அவனைப் பழிப்பதும் அநாதரிப்பதுமாயிருந்தாலும் சரி; நீ எது செய்தாலும் அவனுடைய பெருமேன்மைக்குக் குறைவு நிறைவுகள் வாராதுகாண்' என்று தம்முடைய உறுதியைத் தெரிவிக்கிறார். பின்னடிகளில், எம்பெருமான் கார்ய காரணரூபங்களான ஸகல பதார்த்தங்களையும் தரித்துக்கொண்டிருப்பவன் என்று அவனுடைய ஸர்வதாரகத்வத்தைச் சொன்னதானது நம்முடைய புகழ்வு மிகழ்வுமெல்லாம் அவனுக்கு அப்ரயோஜகம் என்கைக்காகவென்க. ஏற்றான்—எல்லாம் தானென்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி எல்லாவற்றையும் தனக்கு விசேஷணமாகக் கொண்டுள்ளான் என்றுரைப்பதுமுண்டு.

இரண்டாமடியில் "கருதுவாய் என் நெஞ்சே!" என்றும் பாடமோதுவர்; தளைபிறழாது. .... .... (எங)

ஏற்றான் புள்ளூர்ந்தா னெயிலெரித்தான் மார்விடந்தான் *
நீற்றான் நிழல்மணி வண்ணத்தான் *—கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான் * நீண்முடியான்
கங்கையான் நீள்கழலான் காப்பு. (எச)

| | | | |
|---|---|---|---|
| ஏற்றான் | ரிஷபத்தை வாஹநமாகவுடையவனும் | கங்கையான் | (அச்சடைமுடியில்) கங்கையைத்தாங்கிக்கொண்டிருப்பவனுமான ருத்ரன், |
| எயில் எரித்தான் | த்ரிபுரஸம்ஹாரம் பண்ணினவனும் | | |
| நீற்றான் | சாம்பலைப் பூசிக்கொண்டிருப்பவனும் | புள் ஊர்ந்தான் | கருடனை வாஹநமாகவுடையவனும் |
| கூறு ஒருபால் மங்கையான் | தனது உடம்பின் ஒருபக்கத்திலே பார்வதியைத் தரித்துக்கொண்டிருப்பவனும் | மார்வு இடந்தான் | இரணியனது மார்வைப் பிளந்தொழித்தவனும் |
| | | நிழல் மணி வண்ணத் தான் | நீலரத்நம்போலே குளிர்ந்த வடிவையுடையவனும் |
| வார் சடையான் | நீண்ட ஜடையைத் தரித்துள்ளவனும் | | |

| | | | |
|---|---|---|---|
| பூமகளான் | பெரிய பிராட்டியைத் திவ்ய மஹிஷியாக வுடையவனும் | நீள் கழலான் | நீண்ட திருவடிகளையுடையவனுமான ஸர்வேச்வரனுடைய |
| முடியான் | நீண்ட கிரீடத்தை அணிந்துள்ளவனும் | காப்பு | ரக்ஷணத்தில் அடங்கினவன். |

* * *—[ஏற்றான்புள்ளூர்ந்தான்.] எல்லாப் பதார்த்தங்களையும் தரிப்பவன் ஸ்ரீமந்நாராயணனென்றார் கீழ்ப்பாட்டில்: ருத்ரனை அப்படிப்பட்டவனாகச் சிலர் சொல்லுகின்றார்களே! அஃது என்ன? என்று கேள்விபிறக்க, ஸ்ரீமந்நாராயணனுடைய பரத்வத்தையும் சிவனுடைய அபரத்வத்தையுஞ் சொல்லி, சிவனும் எம்பெருமானுடைய ஆளுகையிலே அடங்கினவனே யென்கிறார்.

ஏற்றானையும் எயிலெரித்தானையும் நீற்றானையும் கூற்றொருபால் மங்கையானையும் வார்சடையானையும் கங்கையானையு மிருக்கிற ருத்ரன்—புள்ளூர்ந்தானையும் மார்விடந்தானையும் நிழல்மணி வண்ணத்தானையும் பூமகளானையும் நீண்முடியானையும் நீள்கழலானையு மிருக்கிற எம்பெருமானுடைய, காப்பு என்று அந்வயிப்பது. காப்பு—ரக்ஷ்யவர்க்கத்திற் சேர்ந்தவன் என்றபடி.

சிவனுடைய விசேஷணங்களை வரிசையாக இட்டு, பிறகு எம்பெருமானுடைய விசேஷணங்களை வரிசையாக இட்டு, இன்னான் இன்னானுடைய காப்பு—என்று அடைவுபடச் சொல்லலாமாயிருக்க, அப்படிச் சொல்லாமல் விஷ்ணு ருத்ரர்களை மாறிமாறித் தொடுத்திருப்பது இருவர்க்குமுள்ள வாசி உடனுக்குடனே தெரியவேணுமென்பதற்காக. தமோகுணமே வடிவெடுத்ததாயும் மூடர்களுக்கு உவமையாக எடுக்கக்கூடியதாயு முள்ள ரிஷபத்தை வாஹநமாக வுடையவன் அவன்; வேதஸ்வரூபியான பெரிய திருவடியை வாஹநமாகவுடையவன் இவன்; தன்னை ஆச்ரயித்தவர்களின் குடியிருப்பான திரிபுரத்தைச் சுட்டெரித்தவன் அவன்; ஆச்ரிதனான ப்ரஹ்லாதனுக்கு விரோதியான இரணியனது மார்வைப் பிளந்தொழித்தவனிவன்; தான் ப்ராயச்சித்தியென்று தோற்றும்படி நீறுபூசின ஸர்வாங்கத்தையு முடையவன் அவன்; ச்ரமஹரமான நீலரத்நம்போலே குளிர்ந்த வடிவை யுடையவன்

இவன். தன்உடலின் பாதிபாகத்தை ஸ்த்ரீரூபமாக ஆக்கிக்கொண்டவன் அவன்; உலகுக்கெல்லாம் ஈச்வரியான கமலச்செல்வியை திவ்ய மஹிஷியாகவுடையவன் இவன்; தன்குறையைத் தீர்த்துக் கொள்ளும் வண்ணம் ஸாதநாநுஷ்டாநம் பண்ணுவது எல்லார்க்குந் தெரியும்படி சடை புனைந்தவன் அவன்; ஸர்வேச்வரத்வ ஸூசகமான திருவபிஷேகத்தையுடையவன் இவன்; தான் பரிசுத்தனாவதற்குக் கங்கையைத்தரிப்பவன் அவன்; அந்த கங்கைக்கு உத்பத்தி ஸ்தாநமான திருவடியை யுடையவன் இவன்—என்று சொல்லுமழகு காண்மின்.

எயிலெரித்த வரலாறு கீழ் இருபத்தெட்டாம் பாட்டினுரையில் விரித்துரைக்கப்பட்டது காண்க. எயில்—மதிள்; த்ரிபுரத்துக்கு இலக்கணை. ... ... ... (எச)

காப்புன்னை யுன்னக் கழியு மருவினைகள் *
ஆப்புன்னை யுன்ன வவிழ்ந்தொழியும்*—மூப்புன்னைச்
சிந்திப்பார்க் கில்லை திருமாலே * நின்னடியை
வந்திப்பார் காண்பர் வழி. (எரு)

திருமாலே — லக்ஷ்மீநாதனே!,
உன்னை — (பரமபுருஷனை) உன்னை
உன்ன — ரக்ஷகனாக அநுஸந்திக்குமளவில்
காப்பு — பிரதிபந்தகங்கள்
கழியும் — விட்டு நீங்கும்;
உன்னை உன்ன — உன்னை நினைக்குமளவில்,
அரு வினைகள் ஆப்பு — போக்கமுடியாத கருமங்களின் பந்தமும்
அவிழ்ந்து ஒழியும் — அவிழ்ந்துபோம்;
உன்னை சிந்திப்பார்க்கு — உன்னை த்யானிப்பவர்களுக்கு
மூப்பு இல்லை — கிழத்தனம் முதலிய ஷட்பாவ விகாரங்களும் இல்லையாம்;
நின் அடியை வந்திப்பார் — உன் திருவடிகளை ஆச்ரயிக்குமவர்கள்
வழி — அர்ச்சிராதி மார்க்கத்தை
காண்பர் — கண்டு அநுபவிக்கப் பெறுவர்கள்.

* * *—[காப்புன்னையுன்...] திருமாலே! ஸர்வரக்ஷகனை வுன்னை அநுஸந்திப்பவர்களுக்கு எல்லாப்பிரதிபந்தகங்களும் நீங்கி

பிரகிருதி ஸம்பந்தமும் நீங்கி திவ்யலோகப்ராப்தியும் வாய்க்கு மென்கிறார். பகவத் ஸம்பந்தத்தை யுணர்ந்தவர்கள் கர்மவச்ய ராகாரென்பதை முன்னடிகளாலும், பரமஸாம்யாபத்தியை அடைவார்களென்பதைப் பின்னடிகளாலும் அருளிச்செய்கிறார்.

முதலடியில், காப்பு என்பதற்குப் 'பிரதிபந்தகம்' என்று பொருள் கூறப்பட்டது; காவல் என்பதற்குத் 'தடை' என்று பொருளாதலால். அன்றியே, பாபஸாக்ஷியாக எம்பெருமானால் நியமிக்கப்பட்டுள்ள பதினால்வர் என்று கொள்ளவுமாம். அவராவார்—ஸூர்யன் சந்திரன் வாயு அக்நி த்யுலோகம் பூமி ஜலம் ஹ்ருதயம் யமன் அஹஸ் ராத்ரி இரண்டு ஸந்த்யைகள் தர்மதேவதை என்ற இவராவர். "ஆதித்ய சந்த்ராவநிலோநலச்ச த்யௌர் பூமிராபோ ஹ்ருதயம் யமச்ச। அஹச்ச ராத்ரிச்ச உபே ச ஸந்த்யே தர்மச்ச ஜாநாதி நரஸ்ய வ்ருத்தம்॥ = ஆதித்ய சந்த்ராவநிலோநலச்ச த்யௌர ப் பூமிராபோ ஹ்ருதயம் யமச்ச—அஹச்ச ராத்ரிச்ச உபே ச ஸந்த்யே தர்மச்ச ஜாநாதி நரஸ்ய வ்ருத்தம்." என்ற மஹாபாரத ச்லோகமுங் காண்க. உன்னை யநுஸந்திப்பவர்கள் செய்யுங் கருமங்களை எம்பெருமானு லேற்படுத்தப்பட்டுள்ள கர்மஸாக்ஷிகளும் ஆராயக்கடவரல்லர் என்றவாறு.

ஆப்பு—யாப்பு; கட்டு: கருமபந்தம். மூப்பு என்று கிழத்தனத்தை மாத்திரம் சொன்னது ஷட்பாவ விகாரங்களுக்கும் உபலக்ஷணம். அவையாவன—உளதாகை பிறக்கை மாறுகை வளர்கை மூப்பு [குறைகை] அழிகை என்பன. இவை வடமொழியில் "அஸ்தி, ஜாயதே, விபரிணமதே, வர்த்ததே, அபக்ஷீயதே, விநச்யதி" என்று வ்யவஹரிக்கப்படும். இவை சரீரமெடுத்த ஜந்துக்களுக்கெல்லாம் வருமவை.

வழி காண்பர்—நரகத்தைப்போலே பொல்லாததான வழியைக்காணுதலின்றியே நித்ய விபூதிக்குப் போம்வழியைக் காண்பரென்றவாறு. ... .... ... ... (எ௩)

வழிநின்று நின்னைத் தொழுவார் * வழுவா
மொழிநின்ற மூர்த்தியரே யாவர் *—பழுதொன்றும்
வாராத வண்ணமே விண்கொடுக்கும் * மண்ணளந்த
சீரான் திருவேங் கடம். (எ௪)

| | | | |
|---|---|---|---|
| வழி நின்று | பக்திமார்க்கத்திலே நிலைத்து நின்று | மண் அளந்த சீரான் திரு வேங்கடம் | உலகளந்த மஹாநு பாவன் எழுந் தருளியிருக்கிற திருமலையே |
| நின்னை தொழுவார் | உன்னை ஆச்ரயிக்கு மவர்கள் | பழுது ஒன்றும் வாராத வண்ணமே | ஒரு குறையு மில்லாதபடி |
| வழுவா மொழி நின்ற மூர்த்தியரே ஆவர் | உபநிஷத்துக்களில் சொல்லப் பட்டிருக்கிற ஸ்வரூப ஆவிர்ப் பாவத்தை உடையவராகவே ஆவர்கள்; | விண் கொடுக்கும் | (ஆச்ரிதர்களுக்கு) மோக்ஷமளிக்கக் காண்கிறு மன்றே. |
| (இதைப்பற்றிச் சொல்லவேணுமோ?) | | | |

* * *—[வழிநின்று.] எம்பெருமானோடு ஸம்பந்தமுடைய திருமலை தானே தன்னைப்பற்றினார்க்கு நற்கதியைத்தரும் வல்லமையுடையதாயிருக்கையில், எம்பெருமானைத் தொழுமவர்கள் நற்கதி பெறுவாரென்று நாம் பெரிதாக எடுத்துச் சொல்ல வேணுமோ? என்கிறார். கைமுதிக நியாயம் தோற்றப் பேசின பாசுரம் இது. மண்ணளந்த சீரானுடைய திருவேங்கடமே பழுதொன்றும் வாராதவண்ணமே விண்கொடுக்குமதாயிருக்க, நின்னை வழிநின்று தொழுமவர்கள் வழுவாமொழிநின்ற மூர்த்தியராவரென்பது விசேஷித்துச் சொல்லவேண்டிய விஷயமோ என்றவாறு.

வழுவாமொழியாவது வேதம்; அதில் சொல்லப்பட்ட மூர்த்தியாவது ஸ்வஸ்வரூபாவிர்ப்பாவம்; "பரஂஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே" [பரஞ்சோதியான பரமபுருஷனைக்கிட்டி. ஸ்வஸ்வரூப ஆவிர்ப்பாவத்தை (ஜ்ஞாநாநந்த விகாஸத்தை) ப்பெறுகிறான்] என்று சுருதியில் சொல்லப்பட்டது காண்க. இதனையே திருமங்கையாழ்வார் 1. "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத், தம்மையே யொக்க அருள்செய்வர்" என்ற பாசுரத்தினால் பேசினர்.

எம்பார் இப்பாசுரத்தை நாடோறும் சிற்றஞ் சிறுகாலையில் அநுஸந்திப்பது வழக்கமாம். "எம்பார் விடிவோறே அநுஸந்

1. பெரிய திருமொழி 11—3—5.

திக்கும் பாட்டு" என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான வருளிச்செயல். ... .... .... (எசு)

வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் * அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் *—நான்கிடத்தும்
நின்று னிருந்தான் கிடந்தான் நடந்தானே *
என்றால் கெடுமா மிடர். (எஎ)

| | |
|---|---|
| வேங்கடமும் | திருமலையும் |
| விண்ணகரும் | வைகுந்தமாநகரும் |
| வெஃகாவும் | திருவெஃகாவும் |
| அஃகாத பூ கிடங்கின் நீள் கோவல் பொன் நகரும் | பூ மாறாத நீர் நிலைகளையுடைய சிறந்த திருக்கோவலூ ரென்கிற திவ்யதேசமும் (ஆகிய) |
| நான்கு இடத்தும் | நான்கு திருப் பதிகளிலும் (வரிசைக்கிரமமாக) |
| நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தான் என்றால் | (எம்பெருமான்) நிற்பதும் வீற்றிருப்பதும் பள்ளிகொண் டிருப்பதும் நடப்பதுமாயிருக் கிறானென்று அநுஸந்தித்தால் |
| இடர் | துக்கங்களெல்லாம் |
| கெடும் ஆம் | விட்டோடிப் போய்விடும். |

* * *—[வேங்கடமும்.] எம்பெருமான் ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் எழுந்தருளியிருக்கிறபடிகளை நாம் அநுஸந்தித்தால் நமது இடரெல்லாம் நீங்கிவிடுமென்கிறார். அவன் திருப்பதிகளில் நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் நடப்பதுமானபடிகளை நாம் சொல்ல, நாம் நின்றுமிருந்தும் கிடந்தும் நடந்தும் செய்த பாபங்க ளெல்லாம் தன்னடையே போகுமென்றபடி. நூற்றெட்டுத் திருப்பதிகளுள் பரமபதமும் ஒன்றாதலால் இங்கு 'விண்ணகரும்' என்று அத்திருநாடு கூறப்பட்டது. உப்பிலியப்பன் ஸந்நிதி யென்கிற திருவிண்ணகரைச் சொல்லுவதாகக் கொண்டால் அங்கு வீற்றிருந்த திருக்கோலமில்லையாதலால் மிடிபடும். கச்சிமாநகரி லுள்ள பரமேச்சுர விண்ணகரைச் சொல்லுவதாகக் கொள்ளினும் குறையில்லை. உலகளந்த திருக்கோலமாக ஸேவை ஸாதிக்கு மிடத்தை நடந்தகோலத்திருப்பதியாக அநுஸந்திப்பதுண்டாத லால் 'பூங்கோவல் நடந்தான்' என்றார். ... ... (எஎ)

இடரார் படுவா ரெழுநெஞ்சே * வேழம்
தொடர்வான் கொடுமுதலை சூழ்ந்த *— படமுடைய
பைந்நாகப் பள்ளியான் பாதமே கைதொழுதும் *
கொய்ந்நாகப் பூம்போது கொண்டு. (எ௭)

| | |
|---|---|
| நெஞ்சே | மனமே !. |
| வேழம் தொடர் | கஜேந்திராழ்வானை (விழுங்குவதாகத்) தொடர்ந்துவந்த |
| வான் | பெரிய |
| கொடு | (நெஞ்சில் இரக்கமின்றியே) கொடுமைபூண்ட |
| முதலை | முதலையை |
| சூழ்ந்த | (தப்பிப்போகாதபடி) எண்ணிக் கொன்றவனும் |
| படம் உடைய பை நாகம் பள்ளியான் | படத்தையும் பசுமைநிறத்தையு முடைய திருவனந்தாழ்வானைத் திருப்பள்ளிமெத்தையாக வுடையனுமான எம்பெருமானது |
| பாதம் | திருவடிகளை |
| கொய் நாகம் பூ போது கொண்டு | கொய்யப்பட்ட புன்னையின் அழகிய மலர்களைக்கொண்டு |
| கைதொழுதும் | தொழுவோம் ; |
| எழு | எழுந்திரு ; (அவனுக்கு இவ்வாறு அடிமை செய்யாமல்) |
| இடர் | துக்கத்தை |
| படுவார் ஆர் | அநுபவிக்க யாரால் முடியும் ? (என்னால் முடியாது.) |

* * *—[இடரார்படுவார்.] எம்பெருமான் நமக்காகச்செய்த செயல்களை நாம் அநுஸந்திப்போமாகில் அவனது திருவடிகளில் அடிமைசெய்தே நிற்கவேண்டியதாகுமேயன்றி ஒரு நொடிப்பொழுதும் வெறுமனிருக்க முடியாது; நாம் அப்பெருமானை ஆச்ரயிக்கவே துக்கங்களெல்லாம் தொலைந்துபோம்; துக்கப்படுகைக்கு ஆளில்லை; ஒருகால் நமக்கு துக்கம் வந்தாலும் அது கஜேந்திராழ்வானைத் தொடர்ந்த முதலை பட்டது படும் என்றுராயிற்று.

இரண்டாமடியில், சூழ்ந்த என்ற பெயரெச்சம் பள்ளியானென்பதைக்கொண்டு முடியும். முதலையை முடித்து கஜேந்திரனைக்காத்த கதை ப்ரஸித்தம்.

ஈற்றடியில், நாகம்—'புந்நாகம்' என்ற வடசொற்சிதைவு. (எஅ)

கொண்டானை யல்லால் கொடுத்தாரை யார்பழிப்பார் *
மண்டா வெனவிரந்து மாவலியை*—ஒண்டாரை
நீரங்கை தோய நிமிர்ந்திலையே * நீள்விசும்பி
லாரங்கை தோய வடுத்து. (எகூ)

மண் தா என மாவலியை இரந்து — '(மூவடி) நிலத்தை எனக்குத் தா' என்று மாவலியிடத்தில் யாசித்து
(அவனும் மறுக்கமாட்டாமல் அப்படியே உனக்குத் தந்தேனென்று தாரை வார்க்க)
ஒண் தாரைநீர் — அழகிய அந்த நீர்த்தாரை
அம் கை — (தனது) அழகிய திருக்கையிலே
தோய — வந்து விழுந்ததும்
நீள் விசும்பிலார் — பரம்பின மேலுலகத்தில் வாழ்கின்ற ப்ரஹ்மாதிகளுடைய
அம் கை — அழகிய கைகள்
தோய — ஸ்பர்சித்துத் திருவடி விளக்கும்படி
அடுத்து நிமிர்ந்திலையே — கடுக ஓங்கி வளரவில்லையோ?
(இப்படி தன்னதான வஸ்துவைக் கொள்வதற்கும் தன்னை அழிய மாறிவந்து)
கொண்டானை — தன்னதாக்கிக் கொண்ட எம் பெருமானை
அல்லால் — பழிக்கிறார்களே யன்றி
கொடுத்தாரை யார் பழிப்பார் — (தன்னதல்லாததைத் தன்னதாக அபிமானித்துக்) கொடுத்த அந்த மாவலியைப் பழிப்பவர்கள் யாருமில்லையே! (இஃது என்ன அநியாயம்!.)

* * *—[கொண்டானையல்லால்.] எம்பெருமான் ஆச்ரித ரக்ஷணத்திற்காகத் தன் ஸ்வரூபத்தை மாறுடிக்கொண்டும் காரியம் செய்பவன் என்பதை மூதலிக்கவேண்டி, மஹாபலியினிடத்தில் வாமநனுய்ச்சென்று மூவடிமண் வேண்டிப் பெற்றுத் திரிவிக்கிரமனுகித் தன் விபூதியை அப்பெருமான் மீட்டுக்கொண்டதை உதாஹரணமாகக்காட்டி, இப்படி ஆச்ரிதர் பொருட்டாக அப்பரமன் அரும்பாடுபட்டும் அதனை யறியவல்லார் ஸம்ஸாரத்தில் ஒருவருமில்லாததுபற்றிக் கவலைப்படுகிறுரிப்பாட்டால்.

மாவலியானவன் தன்னதல்லாததைத் தன்னதென்று அபிமானித்துக்கொண்டு செருக்குற்றிருந்ததற்காக இராவணனைப்

போலவே அவனையுங் கொல்லவேண்டியிருந்தும் அவனிடத்தில் ஔதார்யமென்ற ஒரு சிறந்தகுண மிருந்ததனால் தன்னதான விபூதியை அவனதுபோலவே பாவித்துச் சென்று யாசித்து நீரேற்று வாங்கிக்கொண்ட மஹாகுணம்பொருந்தியவன் எம்பெருமான்; இப்படிப்பட்ட மஹாகுணத்தில் யாராவது ஈடுபடுவாருண்டோ? வஞ்சகனென்றும், ஸர்வஸ்வாபஹாரியென்றும், தனக்கு தானஞ்செய்தவனைப் பாதாளத்திலே தள்ளினவனென்றும் சில பழிச்சொற்களைச்சொல்லி அப்பெருமானை உலக மடங்கலும் பழிக்கின்றதேயன்றி, தன்னதல்லாததைத் தான் தந்ததாக நினைக்கிற மாவலியை பகவத்விபூதியைக் கொள்ளைகொண்டவனென்றும் அஹங்காரியென்றும் ஆஸுர ப்ரகிருதியென்றும் அவனுடைய குற்றங்களையிட்டுச் சொல்லுவார் இந்த ஸம்ஸாரத்தில் யாருமில்லையே!; குற்றத்தைக் குணமாக்கியும், குணத்தைக் குற்றமாக்கியுஞ் சொல்லும்படியன்றோ ஸம்ஸாரிகளின் ஸ்வபாவ மிருப்பதென்பது 'கோண்டானையல்லால் கோடுத்தாரை யார்பழிப்பார்?' என்பதன் கருத்து.

தோய—செயவெனெச்சம் உடனிகழ்ச்சிப் பொருளது. நீர் கைதோய நீள்விசும்பிலார் அங்கை தோய அடுத்து நிமிர்ந்திலையே—மாவலி தாரைவார்த்த உதகமும் ப்ரஹ்மாதிகள் திருவடி விளக்கின உதகமும் ஏகோதகமென்னலாம்படி அத்தனை விரைவாக நீ வளரவில்லையோ? என்றபடி.

"நீள்விசும்பிலார் அங்கை தோய" என்பதற்கு—விசும்பிலுள்ள தேவர்கள் (உனது) திருத்தோளிலே வந்து அணையும்படியாக என்றும், "நீள்விசும்பில் ஆரம் கைதோய" என்றெடுத்து, பரந்த விசும்பிலே (உனது திருமார்பிலணிந்திருந்த) முத்தாஹாரமும் திருக்கையும் பொருந்தும்படி (ஓங்கி) என்றும் பொருள் கொள்ளலாம். ... ... ... (எசு)

அடுத்த கடும்பகைஞற் காற்றேனென் றோடி *
படுத்த பெரும்பாழி சூழ்ந்த—விடத்தரவை *
வல்லாளன் கைக்கோடுத்த மாமேனி மாயவனுக்கு *
அல்லாது மாவரோ ஆள். (அய)

| | | | |
|---|---|---|---|
| அடுத்த கடு பகைஞற்கு | 'நெருங்கிய கொடிய சத்துருவான கருடனுக்கு | சூழ்ந்த | சுற்றிக்கொண்ட |
| | | விடத்து அரவை | விஷத்தையுடைய ஸுமுகனென்கிற ஸர்ப்பத்தை |
| ஆற்றேன் என்று | (நேரேநின்று பிழைத்திருக்கத் தக்க) வல்லமையுடையே னல்லேன்' என்று சொல்லிக் கொண்டு | வல்லாளன் கை கொடுத்த | வலிமையுடைய கருடனது கையிலே (அடைக்கலப் பொருளாகத்) தந்து ரக்ஷித்த |
| ஓடி | விரைந்து ஓடிப்போய், | மா மேனி மாயவனுக்கு அல்லாதும் | சிறந்த திருமேனியையுடைய எம்பெருமானுக்குத்தவிர |
| படுத்த பெரு பாழி | (எம்பெருமான் பள்ளிகொள்ளுமாறு) விரித்த பெருமைபெற்ற படுக்கையாகிய சேஷனை | | (மற்றுத் தேவதாந்தரங்கட்கு) |
| | | ஆள் ஆவரோ | அடிமையாவர்களோ. |

* * *—[அடுத்த கடும்பகைஞற்கு.] தேவேந்திரனுக்குப் பரம ஆப்தனும் ஸாரதியுமான மாதலி யென்பவன் தனது புத்திரியான குணகேசி யென்னுங் கன்னிகைக்குத் தகுந்த வரனைத்தேட நாரத மஹர்ஷியோடு புறப்பட்டுப் பல வுலகங்களிலுஞ் சென்று கடைசியாகப் பாதாள லோகத்தில் 'போகவதி' என்னுஞ்சிறந்த நகரத்தை யடைந்து, (ஐராவத குலத்திற் பிறந்தவனும் ஆர்யகனது பௌத்திரனும் வாமனது தௌஹித்ரனும் சிகுரனது புத்திரனுமான) ஸுமுகனென்னும் நாககுமாரனைக்கண்டு அவனது அழகு குணம் முதலியவற்றி லீடுபட்டு அவனுக்குத் தன் மகளைக் கொடுக்க வுத்தேசித்து அவனது பிதாமஹனான ஆர்யகனைக் கண்டு தன் உத்தேசத்தைத் தெரிவிக்க, ஆர்யகன் ஆநந்தத்தையும் ஸங்கடத்தையும் ஏககாலத்தில் கொண்டவனாகி 'இவனது தந்தையைக் கருடன் பக்ஷித்து இவனையும் ஒரு மாதத்திற்குள் பக்ஷிப்பேனென்று சொல்லி யிருக்கிறானாதலால் இவனுக்கு இப்போது விவாஹம் நடத்துவது உசிதமன்று' என்று தெரிவித்தான். அதற்கு மாதலி, 'இவன் என்னோடுவந்து தேவேந்திரனைக் காணட்டும்; இவனுக்கு ஆயுளைத்தந்து கருடனால் கேடுவராமல் தடுக்க முயல்வேன்' என்று சொல்லி அச்சுமுகனை உடனழைத்துக் கொண்டு சென்று உபேந்

திர மூர்த்தியோடிருந்த தேவேந்திரனைக் கண்டு நாரதர் மூலமாகச் செய்தியைத் தெரிவிக்க, அதுகேட்ட உபேந்திரனான ஸ்ரீமஹாவிஷ்ணு 'இவனுக்கு அம்ருதத்தைத் தரலாம்; அதனால் இஷ்டஸித்தி உண்டாகும்' என்று சொல்ல, இந்திரன் கருடனுடைய பராக்ரமத்தை நினைந்து சிறிது அச்சத்துடனே அம்ருதமுண்பியாமல் அந்த ஸுமுகனுக்கு நீண்ட ஆயுளை மாத்திரம் வரமாக அளிக்க, உடனே மாதலி அச்சுமுகனுக்குத் தன்மகளை மணஞ் செய்வித்தான்: இச்செய்தியைக் கேள்வியுற்ற கருடன் இந்திரனோடு மாறுபட்டு, தன் இரையைத் தடுத்ததற்காக நிஷ்டுரமாகப் பேசுகையில், சுமுகன் பாம்பு வடிவமாய்த் திருமாலையடைந்து, அப்பெருமான் பள்ளி கொள்ளுதற்கு ஏற்றவாறு அமைப்பவனான ஆதிசேஷனாகிய கட்டிலின் காலைக் கட்டிக்கொண்டு சரணம் புக, பின்பு கருடன் திருமாலை நோக்கி 'ஸகல தேவர்களுள்ளும் பலசாலியான வும்மைச் சிறிதும் சிரமமின்றி இறகுமுனையால் சுமக்கின்ற என்னைவிட வலிமையுடையார் யார்? இதனைச் சற்று ஆலோசியும்' என்று கருவங்கொண்டுபேச, கடூரமான அந்த வார்த்தையைக் கேட்ட எம்பெருமான் கருடனைநோக்கி 'மிகவும் துர்ப்பலனான நீ தன்னை மஹாபலசாலியாக எண்ணி என்முன்னே ஆத்மஸ்துதி செய்துகொண்டது போதும்; மூன்று லோகமும் எனது உடம்பை வஹிக்க முடியாதே; யானே எனது சக்தியால் என்னையும் வஹித்துக்கொண்டு உன்னையுமல்லவோ வஹிக்கிறேன்; எனது இந்த வலக்கை யொன்றை மாத்திரமாவது நீ தாங்குவையா?' என்று சொல்லித் தமது வலக்கையைக் கருடனது தோளில் வைத்தமாத்திரத்தில் அவன் அந்தத் திருக்கையின் அதிபாரத்தைத் தாங்கமாட்டாமல் வருந்தி வலியழிந்து மூர்ச்சித்து விழுந்து, பின்பு அரிதில் தெளிந்து எம்பெருமானை வணங்கி ஸ்துதித்து அபராதக்ஷாமணஞ் செய்துகொள்ள, திருமால் திருவுள்ளமிரங்கி அவனுக்கு ஸமாதானஞ் சொல்லித் தனது திருவடியின் பெருவிரலால் ஸுமுகனென்ற நாகத்தை யெடுத்துக் கருடன் தோளிலிட்டு 'இவனை நீ உனது அடைக்கலமாகக் கொண்டு பாதுகாக்கக் கடவை' என்று குறிப்பிக்க, அது முதலாக ஸுமுகனோடு கருடன் ஸ்நேஹங்கொண்டு அவனைத் தோளில் தரிக்க, அவனும்

அச்சமின்றி 'கருடா! ஸுகமா?' என்று குசலப்ரச்நம் பண்ணுவானாயினன்—என்ற உபாக்கியானத்தைத் திருவுள்ளம்பற்றி இப்பாசுரமருளிச் செய்யப்பட்டதென்க. (அ0)

ஆளமர் வென்றி யடுகளத்து ளஞ்ஞான்று *
வாளமர் வேண்டி வரைநட்டு *—நீளரவைச்
சுற்றிக் கடைந்தான் பெயரன்றே * தொல்நரகைப்
பற்றிக் கடத்தும் படை. (அக)

| | |
|---|---|
| ஆள் அமர் | யுத்தவீரர்கள் நெருங்கியிருக்கப்பெற்றதும் |
| வென்றி | ஜயத்தையுடையதுமான |
| அடு களத்துள் | (எதிர்த்தவரைக்) கொல்லுகின்ற யுத்தகளத்திலே |
| அஞ்ஞான்று | (அசுரர்களை தேவர்கள் மேல்விழுந்து நலிந்த) அக்காலத்திலே |
| வாள் அமர் வேண்டி | (அநுகூலரான தேவர்கட்கு வெற்றியுண்டாகும்படி) மதிப்புடைய யுத்தத்தைவிரும்பி |
| (அதற்கு ஏற்ப) | |
| வரை நட்டு | (தண்ணீரில் அமிழக்கூடிய, மந்த்ர) பர்வதத்தை மத்தாகநாட்டி |
| நீள் அரவை சுற்றி | உடல்நீண்ட வாஸுகி நாகத்தைக் கடைகயிறாகச்சுற்றி |
| கடைந்தான் | (அம்ருதமுண்டாகும்படி) திருப்பாற்கடலைக்கடைந்தவனுடைய |
| பெயர் | திருநாமம் (எப்படிப்பட்டதென்றால்) |
| பற்றி | (ஸம்ஸாரிகளை) வாரிப்பிடியாகப் பிடித்துக் கொண்டுபோய் |
| தொல்நரகை | பழமையாயிருக்கிற (ஸம்ஸாரமென்னும் நரகத்தை) |
| கடத்தும் | தாண்டுவிக்கின்ற |
| படை | ஸாதனம். |

* * *—[ஆளமர்வென்றி.] ப்ரயோஜநாந்தர பரர்கட்கும் கூடத் தன் திருமேனிநோவக் கடல்கடைந்து அம்ருதத்தை யெடுத்துக்கொடுத்து அத்தேவர்கட்கு அஸுரஜாதியால் யாதொரு தீங்கும் நேரிடாதபடி ரக்ஷித்தருளு மெம்பெருமானுடைய திருநாமமே ஸம்ஸாரிகளான நமக்கெல்லார்க்கும் உத்தாரகம் என்கிறார். கடல்

கடையுங்காலம் தேவாஸுரர்கள் பரஸ்பரம் பெரிய போர்புரியுங் காலமா யிருந்ததனால் "ஆளமர் வென்றியடுகளத்துள்" எனப்பட்டது; "ஆராத போரி லசுரர்களுந் தானுமாய்க், காரார் வரைநட்டு நாகங்கயிறாகப், பேராமல் தாங்கிக் கடைந்தான்" என்று சிறிய திருமடலிலுமருளிச் செய்யப்பட்டுளது

நரகு என்றது ஸம்ஸாரத்தை. .... .... .... (௮௧)

படையாரும் வாள்கண்ணார் பாரசிநாள் * பைம்பூந்
தொடையலோ டேந்திய தூபம் *— இடையிடையின்
மீன்மாய மாசூணும் வேங்கடமே * மேலொருநாள்
மான்மாய வெய்தான் வரை. (௮௨)

| | | | |
|---|---|---|---|
| மேல் ஒரு நாள் | முன்னொருகாலத்திலே [ஸ்ரீராமாவதாரத்தில்] | பை பூ தொடையலோடு | பசிய (வாடாத) மலர்களைக் கொண்டு தொடுத்த மாலையோடுகூட |
| மான் | மாரீசனாகிற மாயமான் | ஏந்திய | (திருவேங்கடமுடையானுக்கு ஸமர்ப்பிக்கும்படி) ஏந்தியுள்ள |
| மாய | இறந்துவிடும்படி | தூபம் | தூபமானது |
| எய்தான் | அம்பு தொடுத்து விட்ட இராமபிரான் (நித்யவாஸஞ்செய்கின்ற) | இடை இடையில் மீன் | (ஆகாசத்தில்) நடுவே நடுவே தோன்றுகின்ற நக்ஷத்ரங்கள் |
| வரை | மலையாவது, | மாய | மறையும்படி |
| படை ஆரும் வாள் கண்ணார் | வேலாயுதம் போன்று ஒளி பொருந்திய கண்களையுடைய பெண்கள் | மாசூணும் | மாசு ஏறும்படி பண்ணுகிற |
| பாரசி நாள் | த்வாதசியன்று | வேங்கடமே | திருமலையேயாகும். |

* * *—[படையாரும்.] பெண் பிறந்தாரும் அநாயாஸமாக ஆச்ரயிக்கும்படி எம்பெருமான் திருமலையிலே நித்யவாஸம் பண்ணுகிறபடியை அநுஸந்திக்கிறார். திருமலையில் நாள்தோறும் நானாவகை யடியவர்கள் வந்து ஆச்ரயியா நிற்க, 'படையாரும் வாள் கண்ணார்' என்று ஸ்த்ரீகளை மாத்திரமும் 'பாரசிநாள்' என்று த்வாதசீ தினத்தை மாத்திரமும் விசேஷித்து எடுத்துச் சொன்ன

தன் கருத்து யாதெனில்; அறிவொன்றுமில்லாத பெண்களுங் கூட வந்து பணியுமாறு ஸர்வ ஸமாச்ரயணீயனாக இருக்குமிருப்பு விளங்குதற்காகப் ‘படையாரும் வாள் கண்ணார்’ என்றார்; சிறந்த சிறுகாலையில் தானே பாரணை செய்யும்படி விடிவதற்கு முன்னே வைஷ்ணவர் யாவரும் தொழுவதற்கு ஏற்ற நாளாதல் பற்றி ஸத்வோத்தரமான த்வாதசிநாளை யெடுத்தருளிச் செய்தனர்.

‘த்வாதசீ’ என்னும் வடசொல் பாரசியெனச் சிதைந்தது. தூபம்—வடசொல். திருவாராதந உபகரணமான தூபத்தின் கமழ்ச்சியே திருமலையெங்கும் பரவிக் கிடக்கின்றதென்பது மூன்றாமடியின் கருத்து. .... .... .... .... (அஉ)

வரைகுடைதோள் காம்பாக ஆநிரைகாத்து * ஆயர்
நிரைவிடையேழ் செற்றவா றென்னே*—உரவுடைய
நீராழி யுள்கிடந்து நேரா நிசாசரர்மேல் *
பேராழி கொண்ட பிரான். (அக)

உரவு உடைய { மிடுக்கை யுடைத்தான

நீர் ஆழியுள் { நீரையுடைய திருப்பாற் கடலிலே

கிடந்து திருக்கண்வளர்ந்து,

நேர் ஆ (ன) எதிரியாகவந்த

நிசாசரர் மேல் { மதுகைடபர் முதலிய ராக்ஷஸர்களின் மீது

(அவர்கள் நீறுகும்படி)

பேர் ஆழி { பெரிய சக்ராயுதத்தை

கொண்ட { கையிற் கொண்டிருக்கிற

பிரான் உபகாரகனே !,

(இப்படி கருதுமிடத்துச் சென்று பொருது கைநிற்கவல்ல திருவாழி யாழ்வானிருக்கவும் அவனைக்கொண்டு காரியங்கொள்ளாமல்)

வரை குடை ஆக { (ஒருவராலும் அசைக்கவும் முடியாத கோவர்த்தன) மலையே குடையாகவும்

தோள் காம்பு ஆக { தனது திருத்தோளை (அந்தக் குடைக்குக்) காம்பாகவும் (ஆக்கி)

ஆ நிரை காத்து { பசுக்களின் கூட்டங்களைப் பாதுகாத்து,

(நப்பின்னைப் பிராட்டிக்காக)

ஆயர் நிரை விடை ஏழ் { இடையர்கள் வைத்திருந்த திரண்ட ரிஷபங்களேழையும்

செற்ற ஆறு முடித்தவிதம்

என்னே எங்ஙனே ?

* * *—[வரைகுடைதோள்.] எம்பெருமானே!, ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதும் ஆச்ரித விரோதிகளை சிக்ஷிப்பதுமாகிய இரண்டு காரியங்கள் உனக்கு உண்டு; ஆச்ரித விரோதிகளை சிக்ஷிப்பது தானே ஆச்ரித ரக்ஷணமாகத் தேறுமாதலால் விரோதிகளைத் தொலைப்ப தென்கிற ஒரு காரியமே போதுமா யிருக்கின்றது; அக்காரியஞ் செய்ய உனக்கு முக்கியமான ஸாதநம் திருவாழி; அத்திருவாழியைக் கொண்டே ஆச்ரித விரோதிகளைப் பொடி படுத்துகின்றாய்; மதுகைடபர் முதலிய துஷ்ட வர்க்கங்களைப் பொடிபடுத்தின அவ்வாயுதம் கையிலேயிருக்கவும், ஆநிரையைக் காக்க மலையையெடுப்பதும் நப்பின்னையைக் காக்க விடையேழடர்ப்பதும் முதலியனவாக உடம்புநோவக் காரியஞ்செய்தது என்னோ? திருவாழியை ஏவினால் இந்திரனது தலை அறுபடுமே; கல்மழை ஓயுமே; ஆயர்களும் ஆநிரைகளும் இனிது வாழ்ந்து போமே; மலையை யெடுத்துப் பரிச்ரமப்பட்டிருக்க வேண்டாவே; இங்ஙனமே, நப்பின்னைப் பிராட்டியை மணம் புணர்வதற்கு விரோதியாயிருந்த எருதுகளின் மேலும் திருவாழியைப் பிரயோகித்திருந்தால் உனக்கொரு சிரமமின்றியே காரியம் இனிது நிறைவேறியிருக்குமே; இப்படி அநாயாஸமாக ஆச்ரிதவிரோதிகளை நிரஸிக்கும் முகத்தாலேயே ஆச்ரித ரக்ஷணத்தை மிக எளிதாகச் செய்யலாமாயிருக்கவும் நீ உடம்புநோவக் காரியஞ் செய்தது வெறுமனேயோ? ஆச்ரித பாரதந்திரியத்தால் அவர்கள் காரியத்தைச் செய்வதைப் பெறும்பேறாக நினைப்பதனாலன்றோ?—என்று ஆழ்வார் எம்பெருமானது ஆச்ரித பாரதந்திரியத்திலீடுபட்டுப் பேசினரென்க.

திருவாழியைக்கூட ஏவாமல் ஸங்கல்ப மாத்திரத்தாலே காரியஞ் செய்ய வல்லமை எம்பெருமானுக்கிருந்தாலும் ஆச்ரிதர்களுக்காகத் தான் உடம்புநோவக் காரியஞ் செய்தாலன்றித் தனக்கு த்ருப்தி பிறவாதாகையால் தானே கைதொட்டுக் காரியஞ் செய்தருள்கின்றனனென்பது உணரத்தக்கது. “மழுங்காதவைநுதிய சக்கர நல்வலத்தையாய், தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்களித்தாலுன் சுடர்ச்சோதி மறையாதே!”

(3—1—9) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் பரமரஸமான பொருளையும் இங்கு அநுஸந்திக்க.

மூன்றாமடியில் 'நேரான' என்றிருக்க வேண்டிய பெயரெச்சம் 'நேரா' என்றிருக்கிறது.

நிசாசரர்—வடசொல்; இரவில் திரிகின்றவர்கள் என்று காரணக்குறி. (அ௩)

பிரானுன் பெருமை பிறரா ரறிவார் *
ஊரா யுலகளந்த நான்று*—வராகத்
தெயிற்றளவு போதாவா றென்கொலோ * எந்தை
அடிக்களவு போந்த படி. (அ௪)

| | | | |
|---|---|---|---|
| பிரான் | உபகாரகனே! (நீ) | வராகத்து | வராஹரூபியான உன்னுடைய |
| உலகு | லோகத்தை | எயிறு | திருவெயிற்றின் |
| ஊராய் அளந்த நான்று | எங்கும் ஸஞ்சரித்தபடி அளந்தகாலத்தில் | அளவு | ஏகதேசத்தளவும் |
| எந்தை | எனது ஸ்வாமியான வுன்னுடைய | போதா | போதாதாக இருந்த |
| அடிக்கு | திருவடிகட்கு | ஆறு | விதம் |
| அளவு போந்த | அளப்பதற்குப் போந்திருந்த | என் கொல் | எங்ஙனேயோ? |
| படி | பூமியானது | உன் பெருமை பிறர் ஆர் அறிவார் | உனது பெருமையை யறிவார் யாருமில்லை. |

* * *—[பிரானுன் பெருமை.] எம்பெருமானே! நீ பெரிய வடிவுகொண்டு உலகளந்தகாலத்து மிகவிசாலமான அத்திருவடிக்குப் பர்யாப்தமாயிருந்த பூமியானது வராஹாவதாரகாலத்தில் எயிற்றின் ஏகதேசத்திலும் அடங்காதிருந்ததென்று புராணம் வல்லார்வாய்க் கேள்விப்படுகின்றோம்; இப்படியிருத்தற்கு ஹேதுவான உனது பெருமை ஸர்வஜ்ஞனான உன்னால்தான் அறியமுடியுமோ முடியாதோவென்று ஸந்தேஹிக்கும்படியாயிராநின்றதேயன்றி உன்பெருமை ஒருவராலு மறியக்கூடியதாயில்லைகாண்—என்றாராயிற்று. உன்னால் மயர்வற மதிநலமருளப்பெற்ற என்போல்வார் உன் பெருமையை ஒருகால் கண்டறியக் கூடுமேயல்லாமல் ஸ்வயத்நத்தாலுணர விரும்புவார்க்கு ஒருகாலும் காணமுடியாதென்று கூறுதலும் உள்ளுறையுமென்ப.

இரண்டாமடியில், உராய்-உலாய் [உலாவி] என்றபடி: ரகர லகரங்கட்கு அபேதங்கொள்ளும் மரபினால் இவ்வாறு பொருள் கூறுதல் பொருந்தும். சிறிதும் சிரமமின்றி என்று கருத்து இது பட்டருடைய நிர்வாஹம். இனி, 'உரையாய்' என்னும் முன்னிலை யேவலொருமை வினைமுற்று 'உராய்' எனத் திரிந்திருப்பதாகக் கொள்ளலாமென்றான் ஒரு தமிழன்: 'சொல்லு' என்று பொருளாம்; அது வேண்டா. உராய்-உரோசிக் கொண்டு; எல்லாரோடும் தீண்டிக்கொண்டு என்றுமாம். (அச)

படிகண் டறிதியே பாம்பணையினான் * புட்
கொடிகண் டறிதியே கூறாய் *—வடிவில்
பொறியைந்து முள்ளடக்கிப் போதோடு நீரேந்தி
நெறிநின்ற நெஞ்சமே நீ. (அரு)

| | | | |
|---|---|---|---|
| பொறி ஐந்தும் | பஞ்சேந்திரியங்களையும் (வெளியில் மேயவொட்டாதபடி) | பாம்பு அணையினான் | சேஷசாயியான பெருமானுடைய |
| வடிவில் உள் அடக்கி | சரீரத்திற்குள்ளே அடங்கியிருக்கச் செய்து | புள் கொடி | கருடப்பறவையாகிற த்வஜத்தை |
| | | கண்டு | ஸேவித்து |
| போதொடு நீர் ஏந்தி | (திருவாராதன ஸாமக்ரியான) புஷ்பங்களையும் தீர்த்தத்தையும் தரித்துக்கொண்டு | அறிதியே | அநுபவித்து அறிந்திருக்கிறாயோ? (அன்றி) |
| | | படி | அவனது திருமேனியை |
| நெறி | ஆச்ரயிக்கும் மார்க்கத்திலே | கண்டு அறிதியே | ஸேவித்து அநுபவித்து அறிந்திருக்கிறாயோ? |
| நின்ற | நிலைத்து நின்ற | | |
| நெஞ்சமே | மனமே!, | கூறாய் | சொல்லு. |

* * *—[படிகண்டறிதியே.] கீழ்ப்பாட்டில் "பிரானுன் பெருமை பிறராரறிவார்" என்று ஆழ்வாரருளிச்செய்யவே, அவரது நெஞ்சானது "பிறராரறிவாரென்று சொல்லுவானேன்? நானறிந்திருக்கிறேனே" யென்று அபிப்ராயங்காட்ட; நெஞ்சே! நீயும் இந்திரியங்களை வென்று ஆச்ரயணத்திலே இழிந்தாயத்தனையல்லது இன்னமும் அவன் படிகளை ஸாக்ஷாத்கரிக்கப் பெற்று

யில்லையே; அப்படி ஸாக்ஷாத்கரித்திருப்பாயேல், அப்பெருமான் பெரிய திருவடியாகிற த்வஜத்தை யெடுத்துப் பிடித்துக்கொண்டு ஆச்ரித ரக்ஷணார்த்தமாக எழுந்தருளும்படியை ஸேவிக்கப் பெற்றாயோ? அன்றி, அவன் திருவனந்தாழ்வா னநுபவிக்கும்படி தனது திருமேனியைத் தந்தவண்ணமாக யோகநித்திரை செய்தருளும்படியை ஸேவிக்கப்பெற்றாயோ? எதேனும் ஸேவிக்கப்பெற்ற துண்டாகில் சொல்லிக்காண் என்கிறார்.

இதனால், எம்பெருமான் கருடாரூடனாய் ஸேவை ஸாதிக்கும் நிலைமையில் ஸேவிக்கப் பெறுதலிலும் சேஷசாயியாய் ஸேவை ஸாதிக்கும் நிலைமையில் ஸேவிக்கப் பெறுதலிலும் தமக்கு ஆசை கரைபுரண்டிருக்கும்படியை வெளியிட்டாராகிறார். (அ௫)

நீயும் திருமகளும் நின்றாயால் * குன்றெடுத்துப்
பாயும் பனிமறுத்த பண்பாளா *—வாசல்
கடைகழியா வுள்புகாக் காமர்பூங் கோவல் *
இடைகழியே பற்றி யினி. (அ௬)

| | |
|---|---|
| குன்று | கோவர்த்தனமலையை |
| எடுத்து | வேரோடு பிடுங்கி யெடுத்து |
| பாயும் பனி மறுத்த | மேலேவந்துசொரி கிற மழையை மேலேவிழாமல் தடுத்த |
| பண்பாளா | குணசாலியே! |
| காமர் பூகோவல் | விரும்பத்தக்க அழகிய திருக்கோவலூரில், |
| வாசல் கடை | திருவாசலுக்கு வெளியே |
| கழியா | வெளிப்பட்டுப் போகாமலும் |
| உள் புகா | உள்ளேபுகாமலும் |
| இடைகழியே | நெருக்கமான இடைகழியிடத்தையே (பொய்கை பூதம் பேய் என்ற நாங்கள் மூவரும் தங்கியிருந்ததனால்) |
| பற்றி | விரும்பிய இடமாகக்கொண்டு |
| நீயும் திருமகளும் | நீயும்பிராட்டியுமாக |
| இனி | இப்போது |
| நின்றாய் | நின்றருளினாய்; |
| ஆல் | ஆச்சரியம்!. |

* * *—[நீயுந் திருமகளும்.] "பாவருந்தமிழாற் பேர்பெறு பனுவற் பாவலர் பாதிநாளிரவின், மூவருநெருக்கி மொழிவிளக் கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்று புகழ்ந்து கூறும்படி முதலாழ்வார் [பொய்கையார், பூதத்தார், பேயார்] மூவரும்

ஒருவரை யொருவர் சந்தித்து அந்தாதிபாடின தலம் திருக்கோவலூர் என்பது ப்ரஸித்தம். இவ்வரலாற்றுக்கு மூலமாயிருக்கும் இப்பாட்டு.

பிரானே!, நானும் மற்றையாழ்வார்களிருவரும் ஓடித்திரியும் யோகிகளாய் க்ராமைகராத்ரமாய் ஸஞ்சரித்துப் போருகையில் உனது ஸங்கல்பத்தாலே திருக்கோவலூரில் நெருக்கமானதொரு இடைகழியிலேவந்துசேர, அங்கே நீ திருமகளோடுவந்து புகுந்து நெருக்கினாயே, இஃது என்ன திருவருள்! என்று ஈடுபடுகின்றார்.

திருக்கோவலிடைகழியில் நெருக்குண்ட முதலாழ்வார்கள் மூவரும் ஸ்ரீமந்நாராயணனுடைய நீலமேக ச்யாமளமான திருமேனியையும் காளமேகத்தில் மின்னற்கொடி படர்ந்தாற்போன்ற திருமகளாரையும் நெஞ்சென்னும் முட்கண்ணாலே கண்டு அநுபவித்தபடியை இவ்வாழ்வார் இங்கு வெளியிட்டருளினராயிற்று. [இவ்வரலாற்றின் விரிவு இவரது சரித்திரத்திற் காணத்தக்கது.]

குன்றெடுத்துப் பாயும்பனிமறுத்த பண்பாளா! = கல்மழை காக்கக் கோவர்த்தனமெடுத்து நின்றவக்காலத்து இடையரிடைச்சிகளோடும் பசுக்கூட்டங்களோடும் நெருக்குண்டு நின்றாற்போலேயன்றோ எம்மோடு நெருக்குண்டிருந்தாயென்ற குறிப்பு. "பனிமறைத்த" என்றும் சிலர் பாடமோதுவர்.

வடமொழியில் 'தேஹளீ' என்னப்படும், உலகவழக்கில் 'ரேழி' என்னப்படும் வருகிற ஸ்தானமே இடைகழியாம். இடைகழிக்கு வெளியிலே ஸம்ஸாரிகளும், உள்ளே உபாஸகனுரிஷியுமா யிருக்கையாலே அநந்யப்ரயோஜநரான இவ்வாழ்வார்கள் மூவரும் நின்றவிடமே எம்பெருமான் தான் உவந்து சாருமிடமாகப் பற்றினனென்ப.

கீழ்ப்பாட்டில் ஆழ்வார் தமது திருவுள்ளத்தைக் குறித்து நீ அவனை ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கப் பெற்றாயில்லை' என்று சொன்னது பொறுக்கமாட்டாமல் இவரிருந்த விடத்திலே எம்பெருமான் பிராட்டியுந் தானுமாகவந்து நெருக்க, அதைக் கண்டு அநுபவிக்கிறார் என்று இப்பாட்டுக்கு அவதாரிகை கூறுதல் பரமரஸம், "இவர் தம்முடைய திருவுள்ளத்தைக் குறித்து 'ஸாக்ஷாத்

கரித்திலையிறே' என்னத் தரியாணிறே அவன்" என்ற பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் போக்யதையும் அநுபவிக்கத்தக்கது. முன்னேநடந்த திருக்கோவலிடைகழிநெருக்கத்தை எம்பெருமான் மீண்டும் அநுபவிப்பித் தருளினன் போலும். ... ... ... ... (அசு)

இனியார் புகுவா ரெழுநரக வாசல் *
முனியாது மூரித்தாள் கோமின் *—கனிசாயக்
கன்றெறிந்த தோளான் கனைகழலே காண்பதற்கு
நன்கறிந்த நாவலஞ்சூழ் நாடு. (அஎ)

கனி சாய — விளாம்பழம் உதிர்ந்துவிழும்படி

கன்று — வத்ஸாஸுரனை

எறிந்த — எறிதடியாக எடுத்தெறிந்து இரண்டசுரரையும் முடித்த

தோளான் — திருத்தோள்களையுடையவனான ஸர்வேச்வரனுடைய

கனை கழலே — ஆபரணத்வனியையுடைய திருவடிகளை

காண்பதற்கு — ஸேவிப்பதற்கு ஸாதநம்

(அவன் உகந்து வாழ்கிற திருக்கோவலூர்க்கு ஸமீபமான இடத்தில் வஸிப்பதுதானென்று)

நன்கு — நன்றாக

அம் நாவல் சூழ் நாடு — அழகிய 'ஜம்பூ' என்று பேர் படைத்த பாரத த்வீபத்திலுள்ள பிராணிகள்

அறிந்த — அறிந்துவிட்டன;

(இப்படியானபின்)

எழு நரகம் வாசல் — எழுவகைப்பட்ட நரகங்களின் வாசல்களிலே

இனி — இனிமேல்

புகுவார் ஆர் — பிரவேசிப்பவர் யாவர்?

(ஒருவருமில்லை)

(ஓ யமகிங்கரர்களே!,)

முனியாது — (உங்கள் ஸ்தானத்துக்கு அழிவுண்டாவதாகச் சொல்லுகிற என்மேல்) கோபங் கொள்ளாமல்

மூரி தாள் கோமின் — (இனி ஒருகாலும் திறக்கமுடியாதபடி) பெரிய தாழ்ப்பாளைப் போட்டுப் பூட்டுங்கோள்.

* * *—[இனியார் புகுவார்.] கீழ்ப்பாட்டில் ஆழ்வாருடைய திருவுள்ளம் ஆநந்தத்தின் எல்லையிலே நின்றது; திருக்கோவலூரிடைகழியிலே பெருமானோடும் பிராட்டியோடும் நெருக்குண்டிருக்கும் நிலைமையிலேயே இருப்பதாகத் தம்மை யநுஸந்தித்தார்; இனித் தாம் உலகத்தாரை யெல்லாம் உபதேசங்களாலே நன்கு திருத்திப் பணிகொள்ளலாமென நிச்சயித்தார். அப்படியே எல்லாரும் திருந்தி எம்பெருமான் திருவடிகட்கு ஆட்பட்டுவிட்டதாகவும் பாவநாப்ரகர்ஷத்தாலே அநுஸந்தித்தார்; இனி எல்லாரும் ஈடேறி விட்டதாகவும் நரகத்துக்குச் செல்ல ஆள் கிடையாதாகவுங் கருதி "நமன்தமர்காள்! நீங்கள் நரகவாசலை யடைத்துவிட்டு ஓடிப்போகலாம்; இனி உங்கள் நாட்டுக்கு அதிதிகளாக வருவாராருமில்லை; உங்கட்கும் காரிய மொன்றுமில்லை; இங்ஙனே உண்மையை எடுத்துரைக்கின்ற என்மேல் நீங்கள் கோபங் கொள்ள வேண்டா" என்று யமபடர்களைநோக்கி கம்பீரமாக அருளிச்செய்கிறார்.

ஆழ்வாரருளிச்செயல்கள் நடமாடும் இந்த ஜம்பூத்வீபமே நாடு; மற்ற இடம் காடு என்ற பொருள் இதில் தொனிக்கும்.

"பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச்சாபம், நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கி யாதொன்றுமில்லை" என்ற திருவாய்மொழிப் பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தகும்.

ஈற்றடியில், அறிந்த—அன்சாரியை பெறாத வினைமுற்று; அறிந்தன என்றபடி. நாட்டிலுள்ளவர்கட் கெல்லாம் இனி விரைவில் பகவத் விஷயஜ்ஞாநம் உண்டாகியேவிடும் என்ற நம்பிக்கையினால் எதிர்காலச் செய்தியை இறந்தகாலச் செய்தியாகவே கூறிவிட்டாரென்க.

எழுநரகம்—நரகங்கள் பல பல கிடக்கின்றனவே; ஏழுதானோ வுள்ளது என்னில்; கொடிய நரக வகைகளைப்பற்றி எழுநரகமென்றது; அவை "பெருங்களிற்று வட்டம் பெருமணல் வட்டம், எரியின் வட்டம் புகையின் வட்டம், இருளின் வட்டம் பெருங்கீழ் வட்டம், அரிபடை வட்டமென எழுவகை நரகம்" என ஓரிடத்திலும், "கூட சாலங் கும்பீபாகம், அள்ளலதோகதி யார்வம்பூ, செந்துவென்றேழுந் தீநரகப்பெயர்" என வேறோரிடத்திலும் இன்

னும் வரிவகையாகவும் தமிழ் நூல்களிற் கூறப்பட்டுள்ளன. இனி, ரௌரவம், மஹாரௌரவம், தமஸ், நிக்ருந்தநம், அப்ரதிஷ்டம், அஸிபத்ரம், தப்தகும்பம் என்று கூறுவாரும் வேறுவகையாகக் கூறுவாருமுளர். இனி, "எழுநரகம்" என்ற இத்தொடர்க்கு—எழுகிற நரகம்=ஸம்ஸாரிக ளடங்கலும் சென்று புகுகிற நரகம் என்றும், கிளர்த்தியையுடைய நரகமென்றும் பொருள் கூறுதலுமுண்டு.

முனியாது—நரகவாசலில் எப்போதும் கதவைத் திறந்து வைத்துக்கொண்டு தாங்கள் கைசலிக்க நலிபுமாறு எந்தப்பாவி வரப்போகிறானென்று எதிர்பார்த்தவண்ணமா யிருக்கின்ற யமபடர்களை நோக்கி "மூரித்தாள் கோமின்=கதவுகளைக் கெட்டியாகப் பூட்டிக்கொண்டு ஒழிந்து போங்கள்" என்றால் அவர்களுக்குக் கோபம் உண்டாவதற்கு ப்ரஸக்தியுள்ளதனால் 'முனியாது' என்கிறார். உண்மை யுரைப்பவன்மீது கோபங்கொள்ளலாகா தென்கை. மூரித்தாள்—மிக்க வலிமையுள்ள தாழ்ப்பாள். கோமின் என்ற வினைமுற்றில், கோ—வினைப்பகுதி ;-தொடுத்தல்.

கனிசாயக்கன்றெறிந்த வரலாறு:—கம்ஸனேவப்பட்ட அசுரர்களில் கபித்தாசுரன் விளாமரத்தின் வடிவமாய், கண்ணன் தன்கீழ் வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணி வந்துநிற்க, அதனையறிந்து க்ருஷ்ணபகவான் அவ்வாறே தன்னை முட்டிக் கொல்லும் பொருட்டுக் கன்றின்வடிவங் கொண்டுவந்த வத்ஸாஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்துத் தூக்கிச் சுழற்றி விளாமரத்தின்மேல் எறிய, இருவருஞ் சிதைந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்து இறந்தனர். (இது முள்ளைக் கொண்டே முள்ளைக் களைவது போலாம்.)

கனியாகிற இலக்கைக் கன்றுகொண்டு எறிந்து வீழ்த்தச் சென்றபோது உண்டான ஆயாஸத்தினின்றும் விடுபட்டுக் கனைகழலென்றார்.

நாவல் நாடு—ஜம்பூத்வீபம் ; அதிலுள்ள பிராணிகட்கு இடவாகு பெயர். .... .... .... .... ... (அ௭)

நாடிலும் நின்னடியே நாடுவேன் * நாடோறும்
பாடிலும் நின்புகழே பாடுவேன் *— சூடிலும்
பொன்னாழி யேந்தினான் பொன்னடியே சூடுவேற்கு *
என்னாகி லென்னே யெனக்கு. (அஅ)

| | | | |
|---|---|---|---|
| நாடிலும் | (மனத்தினால்) தேடும்போது | சூடிலும் | (ஏதாவ தொன்றைத் தலையில்) அணிவதாயிருந்தாலும் |
| நின் அடியே | உனது திருவடிகளையே | பொன் ஆழி ஏந்தினான் | அழகிய திருவாழியைத்தரித்துக் கொண்டிருக்கின்ற உன்னுடைய |
| நாடுவேன் | தேடுவேன் ; | | |
| நாள் தோறும் | எப்போதும் | பொன் அடியே | அழகிய திருவடிகளையே |
| பாடிலும் | வாய்விட்டு ஏதாவது சொல்லும்போதும் | சூடுவேற்கு எனக்கு | சிரோபூஷணமாகக் கொள்பவனான எனக்கு |
| நின் புகழே | உனது புகழ்களையே | | |
| பாடுவேன் | பாடுவேன் ; | என் ஆகில் என் | ஏது எப்படியானாலென்ன ?. |

* * *—[நாடிலும்.] கீழ்ப்பாட்டில் "இனியார் புகுவாரெழு நரகவாசல்" என்று கம்பீரமாக அருளிச் செய்துவிட்டாலும், உண்டியே உடையே உகந்தோடுமிம் மண்டலத்தவர்கள் திருந்தி உய்வதென்பது எளிதன்றே; அநாதி தூர்வாஸனையை அற்ப காலத்தில் அகற்றப்போமோ? நரகத்துக்கு ஆளில்லாமற் போகும்படி எம்பெருமான் அருகேயுள்ள திருக்கோவலூரி லெழுந்தருளியிருக்கவும் அவனைப்பற்றாமல் நரகத்துக்கு ஆளாகும்படி ஸம்ஸாரிகள் சப்தாதி விஷயங்களிலேயே மண்டித் திரிகிறபடியைக் கண்டாராழ்வார்; தாமும் அவர்களைப்போல ஆகாதபடி தமது மநோவாக் காயமென்னும் த்ரிகரணங்களும் அவ்வெம்பெருமான் விஷயத்திலேயே ஊன்றி யிருக்குமாற்றை உவந்து நினைந்து 'நாட்டிலுள்ளார் இவனைப் பெற்றால்தான் எனக்கு என்ன? இழந்தால்தான் எனக்கு என்ன? நான் நல்லபடியே ஈடேறலானேனே!' என்று சொல்லித் தம் நிலைமைக்குத் தாம் மகிழ்கிறார். "நாடிலும் நின்னடியே நாடுவேன்" என்றதனால் மநோவ்ருத்தியும், "பாடிலும் நின் புகழே பாடுவேன்" என்றதனால் வாக்வ்ருத்தியும் "சூடிலும் பொன்னாழியேந்தினான் பொன்னடியே சூடுவேற்கு" என்றதனால் சரீர

வ்ருத்தியும் சொல்லப்பட்டனவாதலால், தமது மனமொழி மெய்கள் மூன்றும் பகவத் விஷயத்திலே அவகாஹித்தபடியை அருளிச்செய்தாராயிற்று.

ஈற்றடியில் 'என் ஆகில்' என்பதற்கு—எனது கரணத்ரயமும் எம்பெருமானைப் பற்றினபின்பு நான் இங்கு இருந்தால்தான் என்ன? பரமபதத்திற்குப் போனால்தா னென்ன? எல்லாம் எனக்கு ஒன்றே—என்பதாகக் கருத்துரைத்தலுமாம்.

'சூடுவேற்கு' என்பதே 'சூடுகின்ற எனக்கு' என்று பொருள் பட விருந்தாலும், ஈற்றடியில் 'எனக்கு' என்று தனியே பிரயோகித்துள்ளதனால் சூடுவேற்கென்பது விசேஷணமாக மாத்திரம் பொருள்பட்டு நிற்கக்கடவது: சூடுகின்ற என்று பொருள். இங்ஙனமே பலகவிகளும் பிரயோகிப்பதுண்டு ... (அஅ)

எனக்காவா ராரொருவரே * எம் பெருமான்
தனக்காவான் தானே மற்றல்லால் *—புனக்காயாம்
பூமேனி காணப் பொதியவிழும் பூவைப்பூ *
மாமேனி காட்டும் வரம்.

(அகூ)

| | |
|---|---|
| எனக்கு | (எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்திற்குப் பாத்ரபூதனான) எனக்கு |
| ஆவார் ஆர் ஒருவரே | ஒப்பாகுபவர் எவரொருவ ரிருக்கின்றனர்? |
| | [எவருமில்லை ;] |
| எம்பெருமான் | அந்த ஸர்வேச்வரனும் |
| தானே தனக்கு ஆவான் அல்லால் | தானே தனக்கு ஒப்பாவானே யல்லாமல் |
| மற்று | அவன்தானும் எனக்கு ஒப்பாக வல்லனோ? |
| | (இப்படி நீர் சொல்லும்படி உமக்கு வந்த ஏற்றமென்ன? என்னில்) |
| புனம் காயா பூமேனி | தனக்கு உரிய நிலத்தில் தோன்றிய காயாம் பூவின் நிறமும் |
| காண பொதி அவிழும் பூவைப்பூ | காணக்காணக் கட்டவிழாநிற்கும் பூவைப்பூவின் நிறமும் |
| வரம் | சிறந்ததான |
| மா மேனி | (அவனது) கரிய திருமேனியை |
| காட்டும் | எனக்குக் காட்டாநிற்கும். [ஆகையாலே, போலியான பொருள்களைக் கண்டும் அவனைக் கண்டதாகவே நினைந்து மகிழ்கிற எனக்கு ஒருவரும் ஒப்பாகார் என்றது.] |

* * *—[எனக்காவார்.] இப்பாட்டும் கீழ்ப்பாட்டுக்கு சேஷபூதம். கீழ்ப்பாட்டில் ஓடின மகிழ்ச்சிப்பெருக்கே இதனிலும் பொலியும். த்ரிகரணங்களும் எம்பெருமான்திறத்தி லீடுபட்டு அடிமைச் சுவையைப் பூர்ணமாக அறிந்த தமக்கு ஒப்பாவார் ஒருவருமில்லை யென்கிறார். தமக்குண்டான ஏற்றத்தைப் பின்னடிகளிற் பேசுகிறார் ;—காயாம்பூ, பூவைப்பூ முதலியவற்றைக் கண்டால் ஸாமாந்ய ஜனங்கள் ' இவை சில காட்டுப்பூக்கள் ' என்று எண்ணியொழிகின்றனர் ; அப்புஷ்பங்களை நான் கண்டாலோ அப்படி எண்ணுவதில்லை ; ' இவை ஸாக்ஷாத் எம்பெருமானது திருவுருவம் ' என்றே நினைக்கின்றேன் ; ஆகவே, இப்படி போலியான பொருள்களைக் கண்டவளவிலும் அப் பெருமானையே கண்டதாக நினைந்து களிக்கின்ற எனக்கு இவ்விபூதியில் நிகராவார் ஆருமில்லையே ; எம்பெருமானும் தனக்குத்தான் நிகரானவனேயன்றி எனக்கு நிகரல்லன்—என்றாராயிற்று.

இப்படி எம்பெருமானது அடிமையி லீடுபட்டு அதன் மூலமான செருக்கைக் கொள்ளுதல் அடிக்கழஞ்சு பெறுதலால்தான் "எனக்கினியார் நிகர் நீணிலத்தே" என்றும் "எனக்காரும் நிகரில்லையே" என்றும் மற்றையோரு மருளிச்செய்வது. இவ்வஹங்காரம் ஹேயமன்று ; உபாதேயமேயாம்.

"பூவையுங் காயாவும் நீலமும் பூக்கின்ற, காவிமலரென்றுங் காண்டோறும், பாவியேன் மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும், அவ்வவையெல்லாம் பிரானுருவே யென்று." என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரம் இங்கு ஸ்மரிக்கத்தகும். ... ... (௮௯)

வரத்தால் வலிநினைந்து மாதவ நின்பாதம் *
சிரத்தால் வணங்கானு மென்றே *—உரத்தினல்
ஈரரியாய் நேர்வலியோ னய விரணியனை *
ஓரரியாய் நீயிடந்த தூன். (௯௰)

மாதவ — திருமாலே !,

ஈர் அரி ஆய் — (இரண்டுகூறாகக்) கிழித்துப் போடவேண்டிய சத்துருவாகி

நேர் வலியோன் ஆய — எதிர்த்து நின்று போர்செய்யும் வலிவையுடைய னாகிய

இரணியனை — ஹிரண்யாஸுரனை

| | | | |
|---|---|---|---|
| ஊன் | சரீரத்தை, | வலி | பலத்தை |
| ஓர் அரி ஆய் | ஒப்பற்ற நரசிங்க மூர்த்தியாகி | நினைந்து | பெரிதாக மதித்து |
| உரத்தினால் | உனதுமிடுக்கினாலே | நின் பாதம் | உனது திருவடிகளை |
| நீ இடந்தது | நீ உன் நகங்களினால் குத்திக் கீண்டதானது, | சிரத்தால் | தனது தலையினால் |
| வரத்தால் | (பிரமன் முதலானவர்கள் கொடுத்த) வரத்தினால் (தனக்கு உண்டான) | வணங்கானும் என்றே | வணங்காமலிருந்தானென்ற காரணத்தினாலோ? (அன்று பக்தனான ப்ரஹ்லாதனை நலிந்தானென்ற காரணத்தினாலே.) |

* * *—[வரத்தால் வலி நினைந்து.] எம்பெருமான் தன்னளவிலே ஆஸுரப்ரக்ருதிகள் எத்தனை அபசாரப்பட்டாலும் அதனால் சிறிதும் திருவுள்ளம் சீறமாட்டான்; தன்னடியவர்பக்கல் அபசாரப்படுமளவில் அவ்வபராதிகளைப் பங்கப்படுத்தியே தீருவன்—என்கிற அர்த்தம் இப்பாட்டிலருளிச் செய்யப்படுகிறது. "மாதவனே!, நீ இரணியனை ஊனிடந்ததானது (அவன்) நின் பாதம் சிரத்தால்வணங்கானுமென்றே?" என்றவினாவினால்—இரணியன் உன் பக்கலிலே விமுகனாய்க் கிடந்தானென்னுங் காரணத்தினால் அவனை நீ கொன்றொழித்தாயல்லை; பரம பாகவதனான ப்ரஹ்லாதன் திறத்திலே அவன் பொறுக்கொணாக் கொடுமைகளைப்புரிந்தானென்பது பற்றியே அவனை யொழித்தாய் என்ற ஸமாதாநம் வெளியிடப்பட்டதாகும்.

"ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமை யென்று ஜீயரருளிச் செய்வர்" என்று ஸ்ரீவசநபூஷணத்திற் பாசுரம். அதாவது—ஸங்கல்ப மாத்திரத்தாலே எல்லாவற்றையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வ சக்தியான ஸர்வேச்வரன் தன்னையழியமாறி இதர ஸஜாதீயனாயவதரித்துக் கைதொடனாய் நின்று செய்த ஹிரண்ய ராவணாதி நிரஸநரூபமான அதிமாநுஷ க்ருத்யங்களெல்லாம் ப்ரஹ்லாதன் மஹர்ஷிகள் முதலான பாகவதர் திறத்தில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே என்று நஞ்சீயரருளிச்செய்வராம். இவ்வர்த்தமே இப்

பாட்டி லருளிச்செய்யப்படுகிறது. எம்பெருமான் தன்னளவிலே தீரக்கழிய அபராதப் படுமவர்களைப்பற்றி ஒன்றும் கணிசியான்; ஆச்ரிதர் விஷயத்தில் ஸ்வல்பாபராதம் பண்ணுவானுண்டாகிலும் அவனை அப்போதே தலையறுத்துப் போகடுவானென்பது இதிஹாஸ புராண ப்ரஸித்தம். [“ த்வயி கிஂசித் ஸமாபந்நே கிஂ கார்யம் ஸீதயா மம ? = த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம.] இராமபிரான் எழுந்தருளி நிற்கச்செய்தே இராவணன் கோபுரசிகரத்திலே வந்து தோற்றினவாறே ‘ராஜத்ரோஹியான இப்பயல் பெருமாள்திருமுன்பே நிற்கையாவதென்?’ என்று ஸுக்ரீவமஹாராஜர் அவன்மேலே பாய்ந்து வென்று வந்தபோது அவரைநோக்கிப் பெருமாள் இங்ஙனே அருளிச்செய்கிறார்;— ‘நீர் மஹாராஜரான தரம்குலைய [உம்மைத் திரஸ்கரித்து] அந்த ராக்ஷஸப்பயல் ஒருவார்த்தை சொன்னானாகில் பிறகு ஸீதை தானும் எனக்கு எதுக்கு?’ என்றார். ஆச்ரித விஷயத்திலே எம்பெருமானுடைய பக்ஷபாதம் இப்படியன்றோ இருப்பது. தன் உயிர்நிலையான பாகவதர்களுக்கு ஒரு தீங்கு நேர்ந்தால், தனக்குத் தீங்குநேரும்போது பிறக்கும் சீற்றம் அற்பமென்னும்படி சீற்றம் பெருகிச்செல்லும். தான் ஸமுத்ரராஜனை சரணம் புகச்செய்தேயும் அவன் முகங்காட்டிற்றிலனாக, “கோபமாஹாரயத்தீவ்ரம்” என்னும்படி சீற்றத்தை வரவழைத்துக் கொண்டார் பெருமாள்; பின்பு இராவணனாலே அனுமான் நோவுபட்டபோது “ததோ ராமோ மஹாதேஜாः ராவணேந க்ருதவ்ரணம்—த்ருஷ்ட்வா ப்லவக சார்தூலம் கோபஸ்ய வசமேயிவாந்.” என்னும்படி கோபமிட்ட வழக்கானார். இங்ஙனேயிறே பாகவதவிஷயத்திலே எம்பெருமானுக்குள்ள பரிவின் மிகுதியிருப்பது.

இரணியன் எம்பெருமான் திறத்திலே நேராக அபசாரப்பட்டுத் திரிந்தநாள்கள் எண்ணிறந்தவையுண்டு; அந்நாட்களிலே எம்பெருமானுடைய திருவுள்ளம் அவ்வரக்கனளவிலே சிறிதும் விகாரப்படவில்லை; பள்ளியிலோதிவந்த தன்சிறுவன் வாயிலோராயிரநாமம் ஒள்ளியவாகிப்போத ஆங்கதனுக்கு ஒன்றுமோர் பொறுப்பிலனாகிப் பிள்ளையைச் சீறிவெகுண்டு நலிந்தானென்று அறிந்தவாறே “நம்மளவிலே எத்தனை தீம்பனாயி வழும்புஞ்

பொறுத்திருப்போம்; நம்முடையனை சிறக்கணை நலிந்தபின்பும் பொறுத்திருக்கவோ" என்று ஆறியிருக்கமாட்டாதே அப்போதே வந்துதோன்றிப் புடைத்தானாயிற்று.

இப்பாட்டில் வினாமாத்திரமே யுள்ளது; விடை இல்லை; அதனை வரதராஜஸ்தவத்தில் கூரத்தாழ்வான் வெளியிட்டருளினர். "யதுவராயஸஹஸ்ரஜஸ்ரஜம் த்வயி ஶரண்ய! ஹிரண்ய உவாவஹுகஶ। வாஉ தெந விரம் த்வவிக்ரியஃ விக்ரு திஹேகநிஹேஜ நாஉஹர்." என்ற அறுபத்தெட்டாம் ச்லோகம் இப்பாசுரத்திற்கே விவரணமாக அவரித்ததென்க. ஆழ்வார்கள் எம்பெருமானுடைய சில அபதானங்களைப் பற்றிப் பேசியருளும்போது உத்தரம் இன்னதென்பதை வெளியிடாமல்தானே கேள்விமாத்திரங் கேட்டு ஸமுத்ரம்போலே நிறுத்துவர்கள்; அவர்களுக்கு விவக்ஷித மான விடையை ஆழ்வான் தமது ஸ்தவங்களில் வெளியிட்டருள்வது வழக்கம். பெரிய திருவந்தாதியில் "சீராற்பிறந்து சிறப்பால் வளராது, பேர்வாமனாகாக்கால் பேராளா!—மார்பாரப், புல்கி நீயுண்டுமிழ்ந்த பூமி நீரேற்பரிதே, சொல்லுநீ யாமறியச் சூழ்ந்து" என்று கேள்விமாத்திரமாய் ஸமுத்ரம்போலே அருளிச்செய்ததை இவ்வாழ்வான்தாம் அதிமாநுஷ ஸ்தவத்திலே "த்வந்நிர்மிதா ஜடரகாச தவ த்ரிலோகீ கிம் பிக்ஷணுதியம்ருதே பவதா துராபா?" என்று அநுவதித்து, "மத்யே கதாது ந விசக்ரமிஷே ஜகச்சேத் த்வத் விக்ரமைஃ கதமிவ ச்ருதிரஞ்சிதா ஸ்யாத்." என்று உத்தரார்த்தத்தாலே ஆழ்வாருடைய திருவுள்ளத்தை வெளியிட்டருளினர். ஆழ்வார் வெளிப்படையாக அருளிச் செய்துள்ளவற்றுக்கு ஆழ்வான் ஸமுத்ர மியற்றுமிடமு முண்டு: திருவாய்மொழியிலே "மழுங்காத வைநுதிய சக்கரநல் வலத்தையாய், தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்துதோன்றினையே, மழுங்காதஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க் களித்தால் உன்சுடர்ச்சோதி மறையாதே." என்று வெளிப்படையாக அருளிச் செய்ததற்கு இவர் ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்திலே "விஶ்வம் யிெயெவ விரவயு நிவாயு ஹஂரிபஃ ஸஂஜஹ்ருஷஸ்தி ஸஜாஶ்ரி தவஸ்துஷுத்வை। க்ஷஜஹுஷஸ்தவ ஹஜொத்திவ்யுஂஹிதைந வாஉம் வாரஜஜ்யுஶஷொவி வ கா

உந்ஷா. !" என்று ஸூத்ரமிபற்றி யருளினார். இங்ஙனே கண்டு கொள்க.

"வரத்தால் வலிநினைந்து" என்ற தொடரில்—இரணியன் தனக்கு வரங்கிடைத்ததைப் பெரிதாக நினைத்தானேயல்லாமல் வரங் கொடுத்தவர்களின் சக்தி ஸ்ரீமந்நாராயணனுடைய அதீநம் என்பதை நினைத்தானில்லை—என்ற கருத்துத் தோன்றும். ஈர் அரி—பெரிய சத்ரு என்றுமாம். ஓர் அரி=ஓர்தல்—தியானித்தல்; (பக்தர்களால்) தியானிக்கப்படுகின்ற நரசிங்கம் என்னவுமாம். (௯௰)

ஊனக் குரம்பையி னுள்புக் கிருள்நீக்கி *
ஞானச்சுடர் கொளீஇ நாடோறும் *—ஏனத்
துருவா யுலகிடந்த வூழியான் பாதம் *
மருவாதார்க் குண்டாமோ வான். (௯௧)

| | |
|---|---|
| ஊனக் குரம்பையின் | மாம்ஸத்தினாலாகிய (சரீரமாகிற) குடிசையிலே |
| உள் புக்கு | உள்ளேபிரவேசித்து [அதாவது—சரீரத்தின் தோஷமெல்லாம் மனத்திற் படியும்படி அதை நன்றாக ஆராய்ந்து] |
| இருள் நீக்கி | (சரீரம் போக்யமென்று நினைக்கிற அஜ்ஞாநமாகிற) இருட்டைப்போக்கி |
| ஞானம் | தத்வஜ்ஞாநமாகிற |
| சுடர் | விளக்கை |
| கொளீஇ | ஏற்றி, |
| ஏனத்து உரு ஆய் | வராஹரூபியாகி |
| உலகு இடந்த | (பிரளயங்கொண்ட) பூமியைக்குத்தியெடுத்துக் கொணர்ந்த |
| ஊழியான் | எம்பெருமானுடைய |
| பாதம் | திருவடிகளை |
| நாள்தோறும் | எப்போதும் |
| மருவாதார்க்கு | ஸேவியாதவர்களுக்கு |
| வான் உண்டாமோ | பரமபதம் கிடைக்குமோ? [கிடைக்கமாட்டாது.] |

* * *—[ஊனக்குரம்பையின்.] இப்பாட்டில் நரஸிம்ஹாவதார ப்ரஸ்தாவத்தினால் அவ்வவதாரத்திற்கு முந்தின வராஹாவதாரம் ஸ்மரிக்கப் பட்டதாக அதனைப்பேசி யநுபவிக்கிறார். "ஊனக்குரம்பையினுள்புக்கு" என்றது—"நீண்டா வழும்புஞ்

செந்நீருஞ் சீயு நரம்புஞ் செறிதசையும், வேண்டா நாற்றமிகு முடல்" என்று பரமஹேயமாகச் சொல்லப்பட்டும் காணப்பட்டு மிருக்கின்ற சரீரத்தின் தோஷங்களை யெல்லாம் செவ்வையாக ஆராய்ந்து என்றபடி. இருள் நீக்கி—சரீரமே போக்யமென்று நினைக்கிற அஜ்ஞாநத்தை இங்கு இருளென்றார்; சரீரத்தின் தோஷமெல்லாம் மனத்திற்படியவே இந்த அஜ்ஞாநம் நீங்கு மென்க. அஜ்ஞாநவிருள் நீங்கிற்றென்றால் ஞானச்சுடர் தன்னடையே கொழுந்துவிட் டோங்குமாதலால் அதனை இரண்டா மடியி லருளிச்செய்தார். ஆக, சரீரத்தைப்பற்றின அஜ்ஞாநம் தொலைந்து ஆத்மாவைப்பற்றின ஸத்ஜ்ஞாநம் திகழ்ந்து ஞானப் பிரானது திருவடிகளையடைந்து வாழுமவர்கட்கே வானுலகம் எய்தலாகும்; மற்றையோர்க்கு அஃதில்லை என்றதாயிற்று. சுடர் கொளீஇ—சுடர் கொளுவி; சொல்லிசையளபெடை. உலகமெல்லா மழிந்த யுகாந்த காலத்திலும் தான் இவற்றை ஸத்தையழியாமல் பாதுகாத்துக் கொண்டிருந்தவன் என்னுங் காரணத்தினால் எம்பெருமானுக்கு ஊழியானென்று பெயராயிற்று. (கக)

வானாகித் தீயாய் மறிகடலாய் மாருதமாய்
தேனாகிப் பாலாம் திருமாலே ※—ஆனாய்ச்சி
வெண்ணெய் விழுங்க நிறையுமே ※ முன்னொருநாள்
மண்ணை யுமிழ்ந்த வயிறு. (கஉ)

| | |
|---|---|
| வான் ஆகி | ஆகாசமாகியும் |
| தீ ஆய் | அக்நியாகியும் |
| மறி கடல் ஆய் | அலையெறிகிற கடலாகியும் |
| மாருதம் ஆய் | காற்றாகியும் |
| தேன் ஆகி | தேன்போன்றும் |
| பால் ஆம் | பால்போன்றும் பரம போக்யனான |
| திரு மாலே | எம்பெருமானே! |
| முன் ஒருநாள் | பிரளயம் நீங்கின காலத்திலே |
| மண்ணை | (பிரளயகாலத்தில் உட்கொண்டிருந்த) இவ்வண்டத்தை |
| உமிழ்ந்த | (உள்ளேயே கிடந்து தீர்ந்துபோகாதபடி) வெளிவிட்ட |
| | உன் வயிறானது |

| | | | |
|---|---|---|---|
| ஆன் ஆய்ச்சி வெண்ணெய் | இடைக்குலத்திற் பிறந்தவளான யசோதையென்னும் இடைச்சி கடைந்துவைத்த வெண்ணெயை | விழுங்க | அள்ளி அமுது செய்ததனால் |
| | | நிறையுமே | நிறைந்துவிடுமோ? [நிறைய மாட்டாது.] |

* * *—[வாஞகித்தீயாய்.] உலகமுண்ட பெருவாயனுன வுனக்கு ஓரிடைச்சி கடைந்துவைத்திருந்த வெண்ணெயைவாரி விழுங்கியுண்டவளவால் பசி தீர்ந்ததாகுமோ? என்றவிதன் கருத்து யாதெனில்; அவாப்தஸமஸ்தகாமனுனவுனக்குப் பசி என்பதில்லை; வெண்ணெய் முதலியவற்றைக் களவுசெய்து உண்டதெல்லாம் பசிநீங்கி வயிறுநிறைவதற்காகவன்று; ஆச்ரிதருடைய ஹஸ்த ஸ்பர்சம்பெற்ற வஸ்துவை உட்கொண்டாலன்றித் தரிக்க முடியாமையினுல் உண்டாயத்தனை—என வெளியிட்டபடியாம்.

நம்மாழ்வாரும் திருவாய்மொழியில், "உண்டாயுலகேழ் முன்னமே உமிழ்ந்துமாயையால் புக்கு, உண்டாய் வெண்ணெய் சிறுமனிசருவலையாக்கை நிலையெய்தி, மண்டான் சோர்ந்த துண்டேனும் மனிசர்க்காகும் பீர்சிறிதும், அண்டாவண்ணம் மண்கரைய நெய்யூண் மருந்தோ மாயோனே!" என்ற பாசுரத்தில் இங்ஙனே யருளிச்செய்தது காண்க.

"ஆச்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரிக்கமாட்டாத படியான வ்யாமோஹத்தாலே அமுதுசெய்தாயத்தனையன்றே" என்பது அவ்விடத்து வியாக்கியானம் 1. "தாழ்குழலார் வைத்த தயிருண்ட பொன்வயிறு, இவ்வேழுலகு முண்டும் இடமுடைத்தால் சாழலே" என்றும் 2. "உறியார் நறுவெண்ணெ யுண்டுகந்த பொன்வயிற்றுக்கு எறிநீருலகனைத்தும் எய்தாதால் சாழலே" என்றும் திருமங்கையாழ்வாரருளிச் செய்தவையும் அறியத் தக்கன.

"வாஞகி...மாருதமாய்" என்று இங்கே நான்கு பூதங்களைச் சொன்னது ஐந்தாவது பூதத்துக்கும் உபலக்ஷணம்; இத்தால், பஞ்ச பூதங்களாற் சமைந்த இவ்வண்டத்திற்குள் ளிருக்கும் பதார்த்தங்கட்கு நிர்வாஹகனுனவனே! என்றதாயிற்று.

---

1. பெரியதிருமொழி 11—5—3, 2. ஷை 11—5—4.

தேனுகிப்பாலாந்திருமாலே! என்றது—பரம போக்யனை உன்னை ஞானிகள் உட்கொள்ளக் கருதாநிற்க நீ வேறொரு வஸ்துவை போக்யமாக நினைத்து உட்கொள்ளுவது என்னோ? என்ற குறிப்பு. .... .... ... (கூஉ)

வயிறழல வாளுருவி வந்தானை யஞ்ச *
எயிறிலக வாய்மடுத்த தென்னீ *—பொறியுகிரால்
பூவடிவை யீடழித்த பொன்னாழிக் கையா * நின்
சேவடிமே லீடழியச் செற்று. (கூங)

| | |
|---|---|
| பூ வடிவை ஈடுஅழித்த | புஷ்பத்தின் ஸௌகுமாரத் தன்மையை அடியோடு போக்கிய [மிகவும் ஸௌகுமாரமான] |
| பொன் ஆழி கையா | அழகிய திருவாழியைக்கொண்ட திருக்கையையுடையவனே! |
| வயிறு அழல | (என்ன தீங்கு நேருமோவென்று அநுகூலர்) வயிறெரியும்படி |
| வாள் உருவி வந்தானை | வாளை உருவிக் கொண்டு வந்தவனை ஹிரண்யனை |
| அஞ்ச | (அவன் உன் வடிவத்தைக்கண்டு) நடுங்கும்படி |
| நின் சேவடி மேல் | உனது திருவடிகளின்மேலே (போட்டுக்கொண்டு) |
| பொறி உகிரால் | நாநாவர்ணமான நகங்களினால் |
| ஈடு அழிய செற்று | கட்டுக்குலைந்து போம்படிகொன்று (பின்னையும் சீற்றம் மாறாமையால்) |
| எயிறு இலக | பற்கள் வெளித் தெரியும்படி |
| நீ வாய் மடித்தது | நீவாயை மடித்துக் கொண்டிருந்தது |
| என் | ஏதுக்காக?. |

* * *—[வயிறழல.] புஷ்பத்தைக்காட்டிலும் மிகவும் ஸௌகுமாரமான திருக்கையினால் முரட்டுடம்பனை இரணியனைத்தொட்டுப் பிடித்திழுத்து ஆச்ரிதர்கட்கு ப்ராப்யமான திருவடிகளின் மேலே போட்டுக்கொண்டு மார்வைப் பிளந்தொழித்த பின்பும் பிரானே! நீ உனது பற்கள் வெளித்தெரியும்படி நாவை மடித்துக் கொண்டிருந்தது ஏதுக்காக? ஆச்ரிதவிரோதி முடிந்துபோனபின்பும் வெகு நாழிகைவரையில் சீற்றம் மாறாதேயிருந்தது ஏன்! என்று கேட்கிறவிதன் கருத்துயாதெனில்; எம்பெருமான் ஆச்ரித

விரோதிகளின்மீது கொள்ளும்கோபமே சரணாகதர்க்குத் தஞ்சமாவது என்ற அர்த்தத்தைக் காட்டினபடியாம். திருமங்கையாழ்வாரும் 1. "கொடியவாய் விலங்கினுயிர் மலங்கக் கொண்ட சீற்றமொன்றுண்டுளதறிந்து உன்னடியனேனும் வந்தடியிணையடைந்தேனணி பொழில் திருவரங்கத் தம்மானே!" என்றருளிச் செய்ததுகாண்க: அவ்விடத்து வியாக்கியானத்திலே "தரித்ரனானவன் தநிகனையடையுமாபோலே 'சீற்றமுண்டு' என்றாய்த்து இவர் பற்றுகிறது; .... விரோதி நிரஸநத்துக்குப் பரிகரமிறே சீற்றம்" என்று பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்துள்ளதும் குறிக்கொள்ளத்தக்கது.

எயிறிலகவாய்மடித்ததேன்? என்ற இக்கேள்விக்கு வாய்த்த உத்தரம்:—ஆச்ரித விரோதி விஷயத்திலுண்டான இப்படிப்பட்ட அளவுகடந்த சீற்றமே உங்கட்கெல்லாம் தஞ்சமென்று மற்றும்பல பக்தர்களுக்குக் காட்டுதற்காகவாம் என்பது.

"பொன்னாழிக் கையால்" என்றும் பாடமாம். ... (கூக)

செற்றெழுந்து தீவிழித்துச் சென்றவிந்த வேழுலகும் *
மற்றிவையா வென்று வாயங்காந்து *—முற்றும்
மறையவற்குக் காட்டிய மாயவனை யல்லால் *
இறையேனு மேத்தா தென்நா. (கூச)

| | | | |
|---|---|---|---|
| எழுந்து | (அநியாயம் மேலிட்டபடியால் லௌகிக பதார்த்தங்களையெல்லாம் அடியோடு அழிக்கப் பெருமுயற்சியோடு) கிளம்பி | இந்த ஏழ் உலகும் | இவ்வுலகங்களையெல்லாம் |
| | | செற்று | அழித்து |
| | | மற்று | பின்பு |
| | | இவை | "பிரளயத்தில் அழிந்த இப்பதார்த்தங்கள் |
| தீ விழித்து | (உள்ளே கொண்ட கோபம் வெளிக்குத்தெரியும்படி) நெருப்பெழ விழித்துப்பார்த்து | சென்ற | (என்னிடத்து) அடங்கிக் கிடக்கின்றன" (என்று சொல்லி) |

1. பெரிய திருமொழி 5—8—3

| | | | |
|---|---|---|---|
| ஆவென்று வாய் அங்காந்து | ஆவென்று வாயைத்திறந்து | மாயவனை அல்லால் | ஆச்சர்ய சக்தியுக்தனான எம்பெருமானைத் தவிர்த்து (வேறொருவனை) |
| முற்றும் | ஸகல ஜகத்தையும் | என் நா | எனது நாவானது |
| மறையவற்கு | வைதிகனான மார்க்கண்டேய மஹர்ஷிக்கு | இறையேனும் | சிறிதும் |
| காட்டிய | (முன்போலவே யிருப்பதைக்) காட்டியருளிய | ஏத்தாது | துதிக்கமாட்டாது. |

* * *—[சேற்றெழுந்து.] காலகதியைக் கடந்து என்றும்பதினாறாக நீடூழி வாழும்படி நீண்டஆயுள்பெற்ற மார்க்கண்டேயமுனிவன் பத்திர நதிக்கரையில் தவம்புரிந்து நரநாராயணரது ஸேவையைப்பெற்று 'யான் பிரளயக் காட்சியைக் காணுமாறு அருள் புரியவேண்டும்' என்று பிரார்த்திக்க, அவ்வாறே அவர்கள் அநுக்ரஹித்துச் சென்றபின்பு, மாயவன் மாயையால் மஹாப்ரளயந் தோன்ற, அப்பிரளயப் பெருங்கடலிற் பலவாறு அலைப்புண்டு வருந்திய மார்க்கண்டேயன் அவ்வெள்ளத்தில் ஆலிலையின்மீது ஒரு குழந்தைவடிவமாய் அறிதுயிலமர்கிற ஸ்ரீமந் நாராயணனைக் கண்டு அப்பெருமானது திருவயிற்றினுட்புகுந்து அங்கிருந்த உலகங்களையும் ஸகல சராசரங்களையும் கண்டு பெருவியப்புக் கொண்டனன் என்ற இதிஹாஸம் அறியத்தக்கது. பிள்ளைப்பெருமாளையங்கார் திருவரங்கத்தந்தாதியிலும் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியிலும் "எய்த்த மார்க்கண்டன் கண்டிடவமலைக்கு முலகழியாதுள்ளிருந்த தென்னே" என்றும் "ஆலத்திலை சேர்ந்தழியுலகை யுட்புகுந்த காலத்திலெவ்வகை நீ காட்டினாய்...வேதியற்கு மீண்டு" என்றும் பேசினவை காண்க.

யுகாந்த காலத்திலே உலகத்தில் அக்ரமம்விஞ்சி அதனால் எம்பெருமான் உக்கிரங்கொண்டு இவ்வுலகங்களை யெல்லாம் அழித்துத் தன்னிடத்திலே யடக்கிக் கொள்வனென்னும் நூற்கொள்கை முதலடியில் காட்டப்பட்டது.

முதலடியில், சென்ற—சென்றன என்றபடி: அன்சாரியை பெறாத வினைமுற்று. .... ... ... .... (௨௪)

நாவாயிலுண்டே நமோ நாரணாய வென்று *
ஓவா துரைக்கு முரையுண்டே *—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே * என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லும் திறம் (கூ௫)

(ஸ்தோத்ரம் பண்ணுவதற்குக் கருவியான) நாக்கானது
(ச்ரமப்பட்டுத் தேடவேண்டாதபடி)
வாயில் உண்டே — ஒவ்வொருவருடைய வாயிலும் படைக்கப்பட்டிருக்கின்றதே;
ஓவாது — (ஸஹஸ்ராக்ஷரீமாலா மந்த்ரம்போலே இடையிடையே) விட்டு விட்டுச் சொல்லாமல்
உரைக்கும் — (எளிதாக ஒரு மூச்சிலே) சொல்லக்கூடிய
நமோ நாரணாய என்று உரை — திருவஷ்டாக்ஷர மந்த்ரம்
உண்டே — ஸித்தமாயிருக்கின்றதே;
மூவாத — கிழத்தன்மையற்ற [திரும்பிவருதலில்லாத]
மா கதிக்கண் — பரமப்ராப்யமான மோக்ஷத்திலே
செல்லும் வகை உண்டே — சென்று சேர்வதற்கேற்ற உபாயம் உண்டே;
(இப்படியிருக்கவும் உஜ்ஜீவிக்காமல்)
தீ கதிக்கண் — விநாசத்துக்குக் காரணமான கெட்ட வழிகளிலே
ஒருவர் — சிலர்
செல்லும் திறம் என் — போய்விழுகிறபடி என்னோ!.

* * *—[நாவாயிலுண்டே.] இவ்வுலகில் எல்லாருமே நற்கதி பெறுதற்கு யாதொரு தடையுமில்லை; எளிதில் அநுஸந்திக்கக்கூடிய திருவஷ்டாக்ஷரம் ஸித்தமாயிருக்கின்றது; அதைச் சொல்லுவதற்குக் கருவியான நாவும் கடவுளால் படைக்கப்பட்டிருக்கின்றது; இப்படி எம்பெருமானை ஏத்துகைக்கென்று ஏற்பட்ட நாவைக்கொண்டு எம்பெருமானை ஏத்தாதே உபயோகமற்ற விஷயங்களைச் சொல்லுகைக்கு இதைக் கருவியாகக்கொண்டு உலகத்தார் அநர்த்தப் படுகின்றார்களே! இஃது என்ன ஆச்சரியம்!— என்று ஆழ்வார் வியக்கின்றார். "நாராயணேதி ஶப்தோஸ்தி வாகஸ்தி வஶவர்த்திநீ। ததாபி நரகே கோரே பதந்தீதி கிமத்புதம் = நாராயணேதி சப்தோஸ்தி வாகஸ்தி வசவர்த்நீதி,

ததாபி நரகே கோரே பதந்தீதி கிமத்புதம்." என்ற புராண ச்லோகத்தின் பொருளை இப்பாட்டால் அநுஸந்தித்தாராயிற்று.

முதலடியில் "நமோ நாரணு வென்று" என்றே பெரும்பான்மையான நவீந பாடம் வழங்கிவரக் காண்கிறது; இப்பாடத்தில் வெண்டளை பிறழ்தலால் "நமோ நாரணய வென்று" என்ற ப்ராசீந பாடமே கொள்ளத்தகும். இனி நவீநபாடத்தையும் பொருந்தவிடலாம்; 'நாரணு வேன்றேவாதுரைக்கும்' என்று ஸந்தியாக்காமல் "நாரணுவென்று ஓவாதுரைக்கும்" என்று ஸந்தியாக்குக: குற்றியலுகரத்துக்கு முன் உடம்படுமெய் வந்ததாகக் கொள்க.

இரண்டாந்திருவந்தாதியில் "தாமுளரே தம்முள்ள முள்ளுளதே, தாமரையின் பூவுளதே ஏத்தும் பொழுதுண்டே-வாமன், திருமருவு தாள்மருவு சென்னியரே செவ்வே, அருநரகஞ் சேர்வதரிது" என்ற பாசுரமும் பெரும்பாலும் இப்பாட்டின் கருத்தைத் தழுவியதே யென்க.

ஓவாதுஉரைக்கும் உரை = ஸஹஸ்ராக்ஷரீமாலா மந்த்ரத்தைச் சொல்லவேணுமானால் இடையில் மூச்சுவிடவும் முடியாதே நெடுமுயற்சிகொண்டும் ஓய்ந்து ஓய்ந்து சொல்லவேண்டிய அருமையுண்டு; திருவஷ்டாக்ஷரம் அப்படியன்று; இடையில் ஓய்வை அபேக்ஷியாமல் ஒருகாலே சொல்லி இளைப்பாறலாம் படியான மந்த்ரமிது. இவ்வளவு ஸுலபமான மந்த்ரம் கைப்பட்டிருக்கவும் அந்தோ! சிலர் இழக்கிறார்களே! என்ன கொடுமை!. ... (கூரு)

திறம்பாதேன் னெஞ்சமே செங்கண்மால் கண்டாய்—*
அறம்பாவ மென்றிரண்டு மாவான் *—புறந்தானிம்
மண்தான் மறிகடல்தான் மாருதந்தான் * வான்தானே
கண்டாய் கடைக்கட் பிடி. (கூசா)

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சமே | எனது மனமே!, | செம் கண் மால் கண்டாய் | புண்டரீகாக்ஷனை எம்பெருமானே யாவன்; |
| அறம் பாவம் என்ற இரண்டும் ஆவான் | புண்யம் பாபம் எனப்படுகின்ற இருவகைக் கருமங்களுக்கும் நிர்வாஹகன் | இம்மண் தான் | இந்தப்பூமியும் |
| | | மறி கடல் தான் | அலையெறிகிற கடலும் |

| | |
|---|---|
| மாருதம் தான் | வாயுவும் |
| வான் | ஆகாசமும் |
| புறம் தான் | இவை தவிரவுள்ள மஹாந் முதலிய தத்துவங்களும் |
| (ஆகிய எல்லாவற்றுக்கும் நிர்வாஹகன்) | |
| தானே கண்டாய் | அந்தத் திருமாலேயாவன் |
| கடைக்கண் | முடிவாக ஆராய்ந்து பார்க்குமளவில் |
| (இதுவே உண்மையென்பதை) | |
| திறம்பாது | தவறாமல் |
| பிடி | உறுதியாகக்கொள். |

* * *—[திறம்பாதென்னெஞ்சமே.] 'அந்தோ! சிலர் அநியாயமாக நரகவழி நோக்குகின்றனரே!' என்று கீழ்ப்பாட்டில் உலகத்தாரைப்பற்றிக் கவலையுற்ற ஆழ்வார், இப்பாட்டில், அவர்கள் எங்ஙனே கெட்டொழிந்தாலும் ஒழிக; நெஞ்சே! நீ மாத்திரம் ஸர்வ நிர்வாஹகன் அப்பெருமானொருவனேயென்று நான் சொல்லுவதில் ஒருபோதும் விப்ரதிபத்தி கொள்ளாமல் இதுவே பரமார்த்தமென்று உறுதிகொண்டிரு—என்று தமது திருவுள்ளத்தை நோக்கி உபதேசிக்கின்றனர்.

"ஏஷஹ்யேவ ஸாது கர்ம காரயதி யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதி; ஏஷஹ்யேவ அஸாது கர்ம காரயதி யமதோ நிநீஷதி" [இந்த எம்பெருமானே எந்த ஆத்மாவை நற்கதி நண்ணுவிக்கக் கருதுகின்றானோ அவனைக் கொண்டு நல்வினையைச்செய்விக்கின்றான்; எந்த ஆத்மாவை அதோகதியடைவிக்கக் கருதுகின்றானோ அவனைக்கொண்டு தீவினையைச் செய்விக்கின்றான்] என்ற வேதவாக்கை யடியொற்றி "அறம்பாவ மென்றிரண்டு மாவான்" எனப்பட்டது. ... ... .... .... .... (கூகூ)

பிடிசேர் களிறளித்த பேராளா * உன்றன்
அடிசேர்ந் தருள்பெற்றா ளன்றே *—பொடிசேர்
அனற்கங்கை யேற்றா னவிர்சடைமேல் பாய்ந்த *
புனற்கங்கை யென்னும் பேர்ப்போன். (கூஎ)

| | |
|---|---|
| பிடி சேர் களிறு | பேடையோடு சேர்ந்து விஷய போகபரனான (கஜேந்த்ராழ்வானாகிற) ஆண் யானையை |
| அளித்த | காத்தருளின |
| பேராளா | மஹாநுபாவனே!, |
| பொடி சேர் | (தான் பண்ணின பாபத்துக்கு ப்ராயச்சித்தமாக) பஸ்மத்திலே சாயுமவனாகி |

| | | | |
|---|---|---|---|
| அனற்கு அம் கை ஏற்றான் | அக்நிக்கு (த் தனது) அழகிய கையை ஏற்ற பாதகியான ருத்ரனுடைய | கங்கை என்னும் பேர் | கங்கையென்னும் பெயர்பூண்டுள்ள |
| அவிர் சடை மேல் | ஒளிபொருந்திய ஜடையின் மேலே | பொன் | சிறந்த பெண் |
| பாய்ந்த | (அவனுடைய சுத்தியின்பொருட்டு) வந்து குதித்த | உன்தன் அடி சேர்ந்து | உன்னுடைய திருவடிகளைக் கிட்டி |
| புனல் | ஜலமயமான | அருள் பெற்றாள் அன்றே | (பாபிகளைப் பரிசுத்தமாக்கும் படி) உனது திருவருளைப் பெற்றாளன்றோ. |

* * *—[பிடிசேர்களிறளித்த.] கீழ்ப்பாட்டில் "அறம்பாவ மென்றிரண்டு மாவான்" என்றருளிச் செய்ததற்கு விவரணம் போலும் இப்பாட்டு. புண்யமும் பாபமும் அவனிட்ட வழக்கா யிருக்குமென்றிறே கீழ்ப்பாட்டிற் சொல்லிற்று; அப்படி எங்கே கண்டோமென்ன, இரண்டுக்கும் இரண்டு வ்ருத்தாந்தங்கள் காட்டு கிறாரிதில். ஸ்ரீ கஜேந்திராழ்வானை முதலை வாயினின்றும் விடு வித்துக் காத்தருளினமை ப்ரஸித்தம். அக்களிறு பூர்வஜந்மவாஸ னையினால் பகவத்பக்தி மாறாதிருக்கப் பெற்றாலும் மற்றுள்ள காட் டானைகள் போலே விஷயப்ரவணமுமாய்த் திரிந்துகொண்டிருந் தமைபற்றிப் பிடிசேர்களிறு என்றார். [பிடி—யானையின்பேடை.] சாபத்தின் பலனாகப் பாபயோநியிற் பிறவிபெற்ற அவ்யானைக்கும் அருள்செய்யக் காண்கையாலே பாபம் அவனிட்ட வழக்காயிருக் குமென்பது பெறப்பட்டது. பாபிஷ்டர்களையும் பரிசுத்தராக்குந் தன்மை கங்கைக்கு எம்பெருமானருளாலே வந்த தென்கையாலே புண்யம் அவனிட்ட வழக்காயிருக்குமென்பது பெறப்பட்டது. 1. "ஆனின் மேயவைந்தும் நீ அவற்றுள் நின்ற தூய்மை நீ" [சுத் தியை விளைக்கக்கூடிய பதார்த்தங்களுள் முதன்மையாகக் கூறப்படு கிற பஞ்சகவ்யமும் அவற்றிலுண்டான பரிசுத்தியும் உனது ஸங் கல்பத்தினாலாயது] என்றார் திருமழிசைப்பிரான்; 'பஞ்சகவ்யம் பரிசுத்திகரமாகக் கடவது' என்று ஸங்கல்பித்தது போலே 'கங்கை பரிசுத்திகரமாகக் கடவது' என்றும் ஸங்கல்பித்து வைத்திருக்கை யாலே புண்யம் நீயிட்ட வழக்கென்கிறது.

1. திருச்சந்த விருத்தம் 94.

ஈற்றடியில் "பெயர்ப்பொன்" என்பது சிலருடைய பாடம்; "பேர்ப்பொன்" என்பதே ப்ராசீநபாடம். 'பெயர்ப்பொன்' என்ற பாடத்தில் தளைதட்டுதல் இல்லையாயினும் மோனையின்பம் குறையுறுகின்றதென்க. .... ... .... .... (கூஎ)

பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும் *
நின்றுலகம் தாய நெடுமாலும் *—என்றும்
இருவரங்கத்தால் திரிவ ரேலும் * ஒருவன்
ஒருவனங்கத் தென்று முளன். (கூஅ)

| | |
|---|---|
| பொன் திகழும் மேனி | பொன்போல விளங்குகின்ற உடலையும் |
| புரி சடை | பின்னின சடைமுடியையுமுடையனாய் |
| அம் | அழகிய |
| புண்ணியனும் | (ஸாதநாநுஷ்டாநமாகிற) புண்ணியத்தையுடையனான ருத்ரனும் |
| நின்று உலகம் தாய நெடுமாலும் | நின்று உலகங்களையெல்லாம் அளந்துகொண்ட ஸர்வேச்வரனும் |
| என்றும் | எக்காலத்திலும் |
| இருவர் அங்கத்தால் திரிவர் ஏலும் | இருவராகி வெவ்வேறு வடிவத்தைக்கொண்டு இருந்தார்களேயானாலும் |
| ஒருவன் | சடைபுனைந்து ஸாதநாநுஷ்டாநம் பண்ணுமொருவனாகிய சிவன் |
| ஒருவன் அங்கத்து | நெடுமாலான மற்றொருவனுடைய சரீரத்திலே |
| என்றும் | எப்போதும் |
| உளன் | ஸத்தை பெற்றிருப்பன். |

* * *—[பொன்திகழுமேனி.] கீழ்ப்பாட்டில், எம்பெருமானது திருவடியில் தோன்றிய கங்கையைச் சடைமேலே தரித்துக் கொண்டதனாலே ருத்ரன் பாதகம்நீங்கிப் பரிசுத்தனாயினனென்றது; இப்படி ஏன் சொல்லவேண்டும்? இதனால் ருத்ரனுக்கொரு குறை சொல்லலாமோ? அவனும் ஒரு ஸம்ஹாரக் கடவுளென்று பேர்பெற்று ஈச்வரனென்று நாட்டில் கௌரவிக்கப் படவில்லையா? என்றொரு கேள்வி பிறக்க, அவனுடைய ஈச்வரத்வம் எம்பெருமானுக்கு சரீரபூதனாகையாலே வந்ததித்தனை யொழிய இயற்கையாக இல்லையென்பதை ஸ்தாபிக்கக்கருதி இப்பாட்டருளிச் செய்கிறார்.

அரியும் அரனும் தனித்தனி இரண்டு சரீரங்களை யுடையவு

ராய்த் திரியாநின்றாலும் அரனானவன் அரியினது திருமேனியின ஒருபுறத்திலே யொதுங்கி ஒரு வஸ்துவாக ஸத்தை பெறுகிறான் என்றதாயிற்று. 1. "பரன் திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம் மற்றில்லை பேசுமினே" என்றார் நம்மாழ்வாரும்.

"புரிசடையம்புண்ணியன்" என்ற தொடரில், இவனுடைய வேஷமே இவன் ஈச்வரனல்ல னென்பதைக் காட்டுமென்ற கருத்தும், "நின்றுலகம் தாய நெடுமாலும்" என்ற தொடரில், ருத்ரன் தலையோடு மற்றவர் தலையோடு வாசியற எல்லார் தலையிலுமாகத் தனது தாளை நீட்டியவ னென்பதால் அவனே ஸர்வேச்வரனென்ற கருத்தும் ஸ்பஷ்டமாக விளங்குதல் காண்க.

ஒருவன்ஒருவனங்கத்துஎன்றுமுளன்—"வலத்தனன் திரிபுரமெரித்தவன்" என்ற திருவாய்மொழியுங் காண்க. "ஒருவனங்கத்து" என்பதற்கு—ஸ்ரீமந் நாராயணனாகிய ஒருவனுடைய சரீரத்தின் ஏகதேசத்திலே என்றும், சரீர பூதனாகி என்றும் பொருள் கொள்வர். .... ... ... ... ... ... (௯௮)

உளன்கண்டாய் நன்னெஞ்சே உத்தம னென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவா ருள்ளத்—துளன் கண்டாய்*
வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும் *
உள்ளத்தி னுள்ளானென் றோர். (௯௯)

| | | | |
|---|---|---|---|
| நல் நெஞ்சே | எனக்குப் பாங்கான மனமே!, | உளன் கண்டாய் | நித்யவாஸம் பண்ணுமவன்காண்; |
| உத்தமன் | புருஷோத்தமனான எம்பெருமான் | வெள்ளத்தின் உள்ளானும் | திருப்பாற்கடலிலே கண்வளர்ந் தருள்பவனும் |
| உளன் கண்டாய் | (நம்மை ரக்ஷிப்பதனாலே) ஸத்தை பெற்றிருப்பவன் காண்; | வேங்கடத்து மேயானும் | திருமலையிலே நிற்பவனும் |
| என்றும் உளன் கண்டாய் | எக்காலத்திலும் (நம்மை ரக்ஷிப்பதிலே தீக்ஷை கொண்டு) இருக்கிறான் காண்; | உள்ளத்தின் உள்ளான் என்று | இப்போது நம்முடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்து நித்யவாஸம் பண்ணுகிறானென்று |
| உள்ளுவார் உள்ளத்து | ஆஸ்திகர்களுடைய மனத்திலே | ஓர் | தெரிந்துகொள். |

1. திருவாய் மொழி 4—10—3.

* * *—[உளன்கண்டாய்.] இப்பாட்டும் மேற்பாட்டும் சாற்றுப்பாசுரங்கள். தமது திருவுள்ளத்தை நோக்கிக் கூறுகின்றார். திருப்பாற்கடல் திருவேங்கடம் முதலிய இடங்கள் எம்பெருமானுக்கு வாஸஸ்தலங்களாயினும் அவ்விடங்களில் எம்பெருமான் வஸிப்பதானது ஸமயம்பார்த்து ஞானிகளின் மனத்திலே புகுவதற் காகவேயாம். ஸ்ரீவசநபூஷணத்தில்—' திருமாலிருஞ் சோலைமலையே' என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணும் விருப்பத்தை இவனுடைய சரீரைக தேசத்திலே பண்ணும்; அங்குத்தை வாஸம் ஸாதநம்; இங்குத்தைவாஸம் ஸாத்யம். 'கல்லுங் கனைகடலும்' என்கிறபடியே இது ஸித்தித்தால் அவற்றிலாதரம் மட்டமாயிருக்கும் " என்ற ஸ்ரீஸூக்திகள் காண்க. நெஞ்சே! ஸர்வரக்ஷகனை ஸர்வேச்வரன் திருப்பாற்கடல் திருமலைமுதலிய இடங்களில் வந்து தங்கினது விலக்காதார் நெஞ்சில் வந்து புகுவதற்காகவேயாதலால் அவன் இப்போது நம்முடைய நெஞ்சில் ஆதரவோடு நித்யவாஸம் பண்ணலானான், இதனை நீஅறிந்து உவந்திரு என்கிறார்.

இதில், நன்னெஞ்சே! என்று நெஞ்சை விளித்து 'உள்ளத்தினுள்ளானென்றோர்' என்றது எங்ஙனே பொருந்தும்? நெஞ்சமும் உள்ளமும் ஒன்றுதானே; நெஞ்சுக்கும் ஒரு உள்ளமிருப்பது போலச் சொல்லியிருக்கிறதே, இஃதுஎன்? என்னில்; இதுமிகச் சிறியகேள்வி; தம்மிற்காட்டில் நெஞ்சை வேறுபடுத்தி விளிப்பது அதைத் தனிப்பட்ட வொரு வ்யக்தியாக ஆரோபணம் செய்து கொண்டேயாதலால் இதுவும் ஒரு ஆரோபணமேயாம். நெஞ்சு தவிர உசாத்துணையாவார் வேறொருவரு மில்லாமையால் நெஞ்சை விளித்துச் சொல்லுகிறதித்தனை. ... ... (கூகூ)

ஓரடியும் சாடுதைத்த வொண்மலர் சேவடியும் *
ஈரடியும் காணலா மென்னெஞ்சே *—ஓரடியில்
தாயவனைக் கேசவனைத் தண்டுழாய் மாலைசேர் *
ஓ மாயவனையே மனத்து வை. (கoo)

| | |
|---|---|
| என் நெஞ்சே | எனது மனமே!, |
| ஓர் அடியின் | (தனது) ஒப்பற்ற அடிவைப்பினாலே |
| தாயவனை | லோகங்களை யெல்லாம் அளந்து கொண்டவனும் |
| கேசவனை | கேசியென்னு மஸுரனைக் கொன்றவனும் |
| தண் துழாய் மாலை சேர் | குளிர்ந்த திருத்துழாய் மாலையோடு சேர்ந்தவனுமான |
| மாயவனையே | எம்பெருமானையே |
| மனத்து வை | மனத்தில் உறுதியாகக் கொள்வாயாக: |
| | (இப்படி அவனே உபாயமென்று உறுதிகொண்டால்) |
| ஓர் அடியும் | உலகங்களை யெல்லாமளந்துகொண்ட ஒரு திருவடியும் |
| சாடு உதைத்த ஒண் மலர் சே அடியும் | சகடம் முறிந்து விழும்படி உதைத்த அழகிய பூப்போன்ற திருவடியும் ஆகிய |
| ஈர் அடியும் | இரண்டு திருவடிகளையும் |
| காணலாம் | ஸேவிக்கப் பெறலாங்காண். |

* * *—[ஓரடியும்.] எம்பெருமானுடைய திருவடிகளை நாம் ஸாக்ஷாத்கரிக்கப் பெறவேண்டில் அதற்கு அவனையே உபாயமாகக் கொள்ளவேணுமென்கிறது. "மாயவனையே மனத்துவை" என்றது எம்பெருமானொருவனையே உபாயமாகக் குறிக்கொள் என்றபடி. அப்படி அவனையே உபாயமாகக்கொண்டால் அவனுடைய உபயபாதங்களையும் ஸேவிக்கப் பெறுகை நமக்கு எளிதாம் என்றாயிற்று.

இப்பாட்டின் முதலிலுள்ள 'ஓரடியும்' என்பதற்கு 'உலக ளந்த ஒரு திருவடியும்' என்று பொருளுரைத்தது—மேலே "ஓரடியின் தாயவனை" என்பதற்கேற்ப. கீழும் மேலும் பரவி இரண்டு திருவடிகளுமே உலகளந்தன வாதலால் அத்திருவடி யிணையை யெடுத்துக்கூறாது சகடாஸுரனை யுதைத்துத் தள்ளின திருவடியைக் கூட்டிக்கொண்டதென் னென்னில்; விரோதிநி ஸநஞ் செய்யும் வல்லமையுடைமை தோற்றுதற்காக வென்க. உலகளந்த திருவடியானது எல்லார்தலையிலும் ஏறி வீற்றிருந்து இஷ்டப்ராப்தி செய்வித்தது; சாடுதைத்த திருவடியானது சகடா ஸுரனுடைய வஞ்சனையில் நின்றும் (கண்ணபிரானாகிய) தன்னைத் தப்புவித்த முகத்தால் அநிஷ்ட நிவ்ருத்தி செய்வித்தது; ஆகவே

இஷ்டத்தை நிறைவேற்றுவித்து அநிஷ்டத்தை ஒழித்திடவல்ல திருவடிகளையுடையன் எம்பெருமான் என்று காட்டினாராயிற்று.

சாடுதைத்த வரலாறு:—நந்தகோப க்ருஹத்தில் ஒருவண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யசோதை யமுனை நீராடப்போயிருக்கையில், கம்ஸனாலேவப்பட்ட அசுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீக்ருஷ்ண சிசுவின்மேலே விழுந்து கொல்லமுயன்றதை யறிந்த அப்பகவான் பாலுக்கு அழுகிற பாவனையிலே தன்சிறிய திருவடிகளை மேலே தூக்கி உதைத்தருள, அவ்வுதை பட்டமாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுட்பட அழிந்தது என்பதாம்.

எம்பெருமானுடைய அவதாரங்கள் பலவற்றினுள்ளும் த்ரிவிக்ரமாவதாரமும் க்ருஷ்ணாவதாரமுமே இவ்வாழ்வார்தாம் மிகவும் ஈடுபட்ட துறைகள் என்பதை விளக்குதற்கே உலகளந்த திருவடியையும் சாடுதைத்த திருவடியையும் பேசிப் பிரபந்தத்தை முடித்தருளினாரென்று பெரியோர் நிர்வஹிக்கும்படி. பின்னடியிலும் தாயவனைக் கேசவனை " என்றது காண்க.

உபாயமும் உபேயமும் எம்பெருமானே; சைதந்ய கார்யமான இந்த அத்யவஸாயமொன்றே நமக்கு வேண்டியது—என்று அருளிச்செய்து தலைக்கட்டினாராயிற்று. ... ....

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
முதல் திருவந்தாதி உரை
முற்றுப்பெற்றது.

# முதல் திருவந்தாதி.

அடிவரவு:—

1. வைய மென்று பார் நெறி அர னென்றுந் திசை,
மயங்கவலம் பொரு மண்ணும் வாய் செவி.

2. செவி யிய லவரவர் முதல் பழு தடியும்,
நான்றமுலை மாலும் பெற்றார் நின் றறியும்.

3. அறியுந் தழும்பிரு விரலொடு உரை யெழு,
மலையால் கையவல மிறையுந் தெளிது புரி.

4. புரி யிமை நகர மென்னொரு ஆறிய,
முரண் வகைய ராரு மிடந்த பெருவில் குன்றனை.

5. குன்று திருமகளும் மனமாசு தமருகந்து,
ஆமே பண்புரி வாரிசுருக்கி, கழலொன்று
மகிழலகு அரியபுல னெளிதில்.

6. எளி தெண்மர் சென்று லரவ மவன்றமர்,
பேரே அயனின்ற தொழுதுமல ரடைந்த
சரணு வுலகும்.

7. உலகும் புணர்மரு தோளவனை நயவேன்,
வினையாலடர் காலை பெயரு முணர்வாரார்,
பாலன் சொல்லுந்தனை நன்றுபிணி.

8. நன் றன்பாழி புகழ்வா யேற்றான், காப்புன்னை
வழிநின்று வேங்கடமு மிடரார், கொண்டானை
யடுத்த ஆளமர்வென்றி.

9. ஆள் படையாரும் வரைகுடை பிரானும்,
படிகண்டு நீயு மினியார் நாடினும், எனக்காவார்
வரத்தால்வலி ஊனக்குரம்பை.

10. ஊன வாளுகி வயிறழல செற்றெழு, நாவாயில்
திறம்பாது பிடி பொன் உள னோர் வை.

ஸ்ரீ:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

முதலாழ்வார்களுள்

பூதத்தாழ்வார் அருளிச்செய்த

# இரண்டாந்திருவந்தாதி.

பெருமாள்கோயில்

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

அருளிய

"திவ்யார்த்த தீபிகை" யென்னும்

உரையுடன்,


சென்னை M. R. கோவிந்தஸாமி நாயுடுவால்,

மாடல் அச்சுக்கூடத்தில்,

அச்சிடுவிக்கப்பட்டது.

விபவ௵

1929.

## ஸ்ரீமான் உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்கள்.

---

| | | | | |
|---|---|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி விரிவுரை | ... | 3 | 0 | 0 |
| திருப்பாவையின் விரிவுரை | ... | 1 | 0 | 0 |
| ௸ காலிகோ பைண்ட் | ... | 1 | 4 | 0 |
| நாச்சியார் திருமொழி விரிவுரை | ... | 1 | 8 | 0 |
| ௸ காலிகோ பைண்ட் | ... | 1 | 12 | 0 |
| பெருமாள் திருமொழி விரிவுரை | ... | 1 | 4 | 0 |
| ௸ காலிகோ பைண்ட் | ... | 1 | 8 | 0 |
| திருச்சந்த விருத்தத்தின் ௸ | ... | 1 | 10 | 0 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு—இவற்றின் விரிவுரை | ... | 1 | 0 | 0 |
| ௸ காலிகோ பைண்ட் | ... | 1 | 4 | 0 |
| பெரிய திருமொழி விரிவுரை 1,2 பத்துக்கள் | ... | 3 | 0 | 0 |
| முதல் திருவந்தாதி விரிவுரை | ... | 1 | 8 | 0 |
| திருவெழுகூற்றிருக்கையும், திருமடல்களும் விரிவுரை | ... | 2 | 4 | 0 |
| திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ௸ | ... | 2 | 0 | 0 |
| இராமாநுச நூற்றந்தாதி ௸ | ... | 0 | 12 | 0 |
| கூரத்தாழ்வான் வைபவம் | ... | 0 | 4 | 0 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் | ... | 1 | 0 | 0 |
| முகுந்தமாலையின் தெளிவுரை | ... | 0 | 6 | 0 |
| ஆளவந்தார் ஸ்தோத்திரத்தின் தெளிவுரை | ... | 0 | 12 | 0 |
| ஸுதர்சநசதகம் மிகத்தெளிவான தமிழுரை | ... | 1 | 0 | 0 |
| சேஷாவதாரச் சிறப்பு | ... | 0 | 2 | 0 |
| நமஸ்காரதத்துவம் | ... | 0 | 2 | 0 |
| ஸ்தோத்ரவ்யாக்யான சோதநம் | ... | 0 | 3 | 0 |
| ப்ரணவாதிகாரதத்துவம் | ... | 0 | 4 | 0 |
| வாத்ஸல்யார்த்த விவரணம் | ... | 0 | 2 | 0 |
| விதவாவபந வித்வம்ஸநம் | ... | 0 | 4 | 0 |
| உபந்யாஸரத்நமாலா (க்ரந்த லிபி) ஸம்ஸ்க்ருத பாஷை | ... | 0 | 6 | 0 |
| பாதுகாஸஹஸ்ராவதார தத்துவம் | ... | 0 | 4 | 0 |

### தெலுங்குலிபிப் பிரசுரங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஸ்ரீவரதராஜஸ்தவம் ஸ்ரீஸ்தவம் இவற்றின் விஸ்தாரமான மணிப்ரவாள வியாக்கியானம் | ... | 1 | 8 | 0 |
| அதிமாநுஷ ஸ்தவத்தின் ௸ | ... | 0 | 12 | 0 |
| திருப்பல்லாண்டு விரிவுரை | ... | 0 | 4 | 0 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் | ... | 0 | 3 | 0 |
| ரஹஸ்ய மூலம் | ... | 0 | 6 | 0 |

இன்னும் பல புஸ்தகங்களும் உள்ளன.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத் தனியன்கள்.

(நம்பெருமாள் அருளிச்செய்தது.)

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్ ।
యతీన్ద్రప్రవణం వన్దే రమ్యజామాతరం మునిమ్॥

[ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்.
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.]

(ஆழ்வான் அருளிச்செய்தவை.)

లక్ష్మీనాథసమారమ్భాం + వన్దే గురుపరమ్పరామ్॥
యోనిత్యమచ్యుతపదామ్బుజ + రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే.

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் + வந்தே குருபரம்பராம்.
யோ நித்யமச்யுத + ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.]

(ஆளவந்தார் அருளிச்செய்தது.)

మాతా పితా యువతయః + ప్రణమామి మూర్ధ్నా॥

[மாதா பிதா யுவதய: + ப்ரணமாமி மூர்த்நா.]

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

భూతం సరశ్చ + శ్రీమత్పరాఙ్కుశమునింప్రణతోఽస్మినిత్యమ్.

[பூதம் ஸரச்ச + ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.]



பூதத்தாழ்வார் அருளிச்செய்த

# இரண்டாந்திருவந்தாதி.

---

இது—மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களுள் இரண்டாமவரான பூதத்தாழ்வாரருளிச் செய்ததும், நாலாயிரப் பிரபந்தத்தில் மூன்றாவது ஆயிரமாக ஸ்ரீமந் நாதமுனிகளால் வகுக்கப்பட்ட இயற்பாவில் இரண்டாவது பிரபந்தமுமாகும். பொய்கையாழ்வாருடைய திருவந்தாதிப் பிரபந்தத்திற்கு அடுத்தபடியாக இத்திருவந்தாதி அவதரித்ததுபற்றி இரண்டாந்திருவந்தாதி யென்று இதற்குத் திருநாமமிட்டு வழங்கலாயினர் முன்னோர்.

இப்பிரபந்த மருளிச்செய்த பூதத்தாழ்வாருடைய திருவவதார வரலாறு முதலியன முதற்றிருவந்தாதியுரைத் தொடக்கத்தில் விவரிக்கப்பட்டுள்ளன ; அங்கே கண்டுகொள்க.

எம்பெருமானை அநுபவிப்பதற்கு இன்றியமையாத ஸாமக்ரிகள்—பரபக்தி, பரஜ்ஞாநம், பரமபக்தி என்கிற ப்ரேமதசா விசேஷங்கள் மூன்றும். இவற்றுள், எம்பெருமானை ஸாக்ஷாத்கரிக்க வேணுமென்கிற ஆவல் பரபக்தி ; அவனை ஸாக்ஷாத்கரித்தல் பரஜ்ஞாநம் ; பின்பு மேன்மேலும் இடைவிடாது அநுபவிக்கவேணு

மென்னும் ஆவல் பரமபக்தி. (அன்றியே,) எம்பெருமானோடு கூடினபோது ஸுகிக்கும்படியாகவும் பிரிந்தபோது துக்கிக்கும்படியாகவுமிருக்கை பரபக்தி; பகவானுடைய பூர்ண ஸாக்ஷாத்காரம் பரஜ்ஞாநம்; அவனுடைய அநுபவம் பெறுவிடில் நீரைவிட்டுப் பிரிந்த மீன்போலே மூச்சு அடங்கும்படியிருக்கை பரமபக்தி என்றும் நம் பூருவாசாரியர்கள் நிர்வஹிப்பர். "உபாஸநம் பரபக்திஃ ஸ்யாத் பரஜ்ஞாநந்து ஸங்கமஃ। புநர்விச்லேஷபீருத்வம் பரமா பக்திருச்யதே = தர்சநம் பரபக்திஸ்ஸ்யாத் பரஜ்ஞாநம்து ஸங்கமஃ—புநர்விச்லேஷபீருத்வம் பரமா பக்திருச்யதே." என்றொரு காரிகையுமுண்டு.

இப்படிப்பட்ட பரபக்தி முதலியன மூன்றும் முதலாழ்வார்கள் மூவர்க்கும் தனித்தனியே குறைவின்றி உண்டாயிருக்குமாறும் ஒரொருவர்க்கு ஒவ்வொன்றே தலையெடுத்து மற்றவை அதற்குள்ளே யடங்கியிருக்கும். பொய்கை யாழ்வார்க்குப் பரஜ்ஞாந பரமபக்திகள் சாயை மாத்திரம் தோன்றிப் பரபக்தியே விஞ்சியிருக்கும். பூதத்தாழ்வார்க்குப் பரபக்தி முற்றிப் பரிபக்குவமாகி மேலே பரமபக்தி தோன்றக் காரணமான பரஜ்ஞாநமே விஞ்சியிருக்கும். பேயாழ்வார்க்குப் பரமபக்தியே விஞ்சிப் பரபக்தி பரஜ்ஞாநங்களிரண்டும் அதற்குள்ளே மறைந்து கிடக்கும். இம்மூவருடைய அருளிச்செயல்களினின்றும் இந்த நிலைமைகளை நம் பூருவர்கள் கண்டறிந்து இங்ஙனே வகுத்தருளினர். இங்ஙனே ஒவ்வொருவர்க்கு ஒவ்வொன்றின் ப்ரகாசமும் மற்றவற்றின் அப்ரகாசமும் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தினாலாயது. ஆகவே இதில் எவ்வகையான ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை. இப்பரபக்தி முதலியவை மூன்றும் முக்தியிலே உண்டாகக் கூடியவையாயினும் மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்கட்கு மாத்திரம் இங்கிருக்கும்போதே எம்பெருமானுடைய திருவருளால் விளைந்தனவாம். இனி, இவற்றை எம்பெருமானிடத்துப் பிரார்த்தித்துப் பெறுதலும் உண்டு. "பரபக்தி பரஜ்ஞாந பரமபக்த்யேகஸ்வபாவம் மாம் குருஷ்வ" இத்யாதி சரணாகதி கத்ய ஸ்ரீஸூக்தி காண்க.

பொய்கையாழ்வார் முதற்றிருவந்தாதியிலே ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளை நிர்ஹேதுகமான எம்பெரு

மானருளாலே தோன்றிய பரபக்தி தசையை அடைந்துள்ள ஜ்ஞாநவிசேஷத்தாலே ஸாக்ஷாத்கரித்தநுபவித்து, அத்திருமாலுக்கு சேஷமான விபூதியை ஸ்வதந்த்ரமென்றும் அந்யசேஷமென்றும் பிரமிக்கிற அஜ்ஞாநவிருள் நீங்கும்படி பூமி முதலிய பதார்த்தங்களைத் தகளி முதலியனவாக உருவகப்படுத்திக்காட்டி, உபய விபூதியுக்தனான எம்பெருமானே சேஷியென்றும், அவனுக்கு சேஷமாயிருப்பதே ஆத்ம ஸ்வரூபமென்றும் அவனது திருவடிகளிற் செய்யும் கைங்கரியமே புருஷார்த்தமென்றும், அதனைக் கைப்படுத்தித் தரும் உபாயமும் அவன் திருவடிகளே யென்றும் நிஷ்கர்ஷித்துப் பேசினார்;

இத்திருவந்தாதியில் பூதத்தாழ்வார்—கீழே பொய்கையாழ்வாரோடுகூட விருந்து எம்பெருமானுடைய குணங்களை யநுபவித்ததனால் அவனது அருளாலேவந்த தமது பரபக்தியானது பரஜ்ஞாந தசையை அடையும்படி பரிபக்குவமாகி வளர, பரஜ்ஞாநதசையை யடைந்த அந்த ப்ரேம விசேஷத்தாலே எம்பெருமானது தன்மைகளை முழுவதும் ஸாக்ஷாத்கரித்தநுபவித்தார். தம்முடைய அந்த அநுபவத்தை நாட்டிலுள்ளாரும் அறிந்து அநுஸந்தித்து வாழுமாறு இப்பிரபந்த ரூபமாக வெளியிட்டருளுகிறார். ...

---

[பிரபந்த சாரம்.]

"கடன்மல்லைக் காவலனே பூதவேந்தே
காசினிமேலைப்பசியி லவிட்டநாள்வந்
திடர்கடியுந் தண்கோவ லிடைகழிச்சென்
றிணையில்லா மூவருமாயிசைந்தேநிற்க
நடுவிலும்மிலொருவருமன் றறியாவண்ணம்
நள்ளிருளில் மால்நெருக்க நந்தாஞானச்
சுடர்விளக்கேற்றிய வன்பேதகளியான
தொடைநூறுமெனக்கருள்செய் துலங்கநீயே."

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# இரண்டாந்திருவந்தாதி

# தனியன் உரை.

[திருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச்செய்த தனியன்.]

(இருவிகற்ப நேரிசை வெண்பா.)

என்பிறவி தீர விறைஞ்சினே னின்னமுதா
அன்பே தகளி யளித்தானை—நன்புகழ்சேர்
சீதத்தார் முத்துக்கள் சேருங் கடன்மல்லைப்
பூதத்தார் பொன்னங் கழல்.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| இன் அமுது ஆ | மதுரமான அம்ருதமாக | கடல்மல்லை | திருக்கடன் மல்லைத் தலத்தில் திருவவதரித்த |
| அன்பே தகளி அளித்தான் | "அன்பே தகளியா" என்று தொடங்கும் திவ்ய ப்ரபந்தத்தை யருளிச் செய்தவரும் | பூதத்தாரை | பூதத்தாழ்வாருடைய |
| | | பொன் அம் கழல் | பொன்போலழகிய திருவடிகளை |
| நன் புகழ் சேர் | நல்ல கீர்த்தி சேரப்பெற்று | என் பிறவி தீர | எனது பிறவித்துயர் நீங்கும்படி |
| சீதத்து ஆர் முத்துக்கள் சேரும் | குளிர்ச்சி பொருந்திய முத்துக்கள் சேர்ந்துள்ள | இறைஞ்சினேன் | வணங்கினேன். |

* * *—பூதத்தாழ்வாரை வணங்கினால் பிறப்பது மிறப்பதுமாகிற ஸம்ஸாரம் தொலைந்து மோக்ஷம் ஸித்தமாமாகையால் அவரை வணங்கினேனென்கிறார். 1. "தொண்டர்க் கமுதுண்ணச் சொன்

1. திருவாய்மொழி—9—4—9.

மாலைகள் சொன்னேன்" என்னுமாபோலே பக்தாம்ருதமாகத் திருவந்தாதிப் பிரபந்தத்தை அருளிச்செய்தவரும் விலக்ஷணமான திருக்கடல்மல்லைத் திருப்பதியில் திருவவதரித்தவருமான பூதத்தாழ்வாரை வணங்கினேனென்றாராயிற்று. 1. "அமுதன்ன சொன்மாலையேத்தித் தொழுதேன்" என்று இவ்வாழ்வார்தாமே அருளிச்செய்தலால் "இன்னமுதா அன்பே தகளியளித்தான்" என்றது நன்கு பொருந்தும். "அளித்தானை" என்றவிடத்துள்ள இரண்டனுருபு [ஐ] பிரித்து பூதத்தார் என்றவிடத்துக் கூட்டப்பட்டது; அளித்தானாகிய பூதத்தாரை என்றபடி. பூதத்தாரை— உருபுமயக்கம்; பூதத்தாருடைய என்று பொருள்.

நன்புகழ்சேர் என்பதும் முத்துக்கள்சேரும் என்பதும் கடன் மல்லைக்கு விசேஷணங்கள். தலசயனத்துறைவாரையும் பூதத்தாழ்வாரையும் தன்னிடத்துக் கொண்டிருப்பதே கடல்மல்லைக்கு நன்புகழாவது. சீதம்—வடசொல்; குளிர்ச்சி. முத்துக்குக் குளிர்ச்சி இயல்பு. முத்துக்கள் என்ற பன்மைக்குச் சேர ஸ்வாரஸ்யமாக ஒரு பொருள் கூறலாம்; மூன்றுவகை முத்துக்கள் இத்தலத்திலுண்டு; கடலில் தோன்றும் முத்து, 2. "வானவரால் வணங்கப்படும் முத்து" என்னப்பட்ட எம்பெருமானாகிற முத்து, இவ்விபூதியிலிருந்துகொண்டே முக்தர் என்னும்படியாகவுள்ள [கரை கடந்த முத்தான] பூதத்தாழ்வாராகிற முத்து—ஆக மூன்று வகை முத்துக்கள் சேருங் கடன்மல்லையாம்.

பூதத்தார்—வடமொழியில் "ஃ—டு—ஸ தாயாம்." [பூ—ஸ்த்தாயாம்] என்கிற தாதுவடியாகப் பிறந்தது பூதம் என்னுஞ் சொல். ஸத்தைபெற்றது என்று பொருள். எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுபவித்தே ஸத்தைபெற்றாரென்னுங் காரணம்பற்றிப் பூதத்தாழ்வாரென்று திருநாமமாயிற்றென்றுணர்க. திருவாய்மொழியில் (5—2—1) "கடல்வண்ணன் பூதம்" என்றவிடத்து வியாக்கியானங்களில் இப்பொருள் விளங்கக் காண்க. ... *

தனியன் உரை முற்றிற்று.

---

1. இரண்டாந்திருவந்தாதி—85. 2. பெரிய திருமொழி 7-3-8.

ஸ்ரீ

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பூதத்தாழ்வார் அருளிச்செய்த

# இரண்டாந்திருவந்தாதி.

[பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர்
இயற்றிய திவ்யார்த்ததீபிகையுடன் கூடியது.]

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா *—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான். (க)

ஞானம் தமிழ் புரிந்த நான் — பகவத்விஷய ஜ்ஞானத்தைத் தருமதாய் த்ராவிட பாஷா ரூபமான திருவந்தாதிப் பிரபந்தத்தை (உலகத்தார்க்கு) விரும்பி வெளியிட்ட அடியேன்,

அன்பே தகளி ஆ — (பரபக்தியின் ஆரம்பதசையான) ஸ்நேஹம் தகளியாகவும்

ஆர்வமே நெய் ஆக — (அந்த ஸ்நேஹம் மூலமாகப்பிறந்த) அபிநிவேசம் நெய்யாகவும்

இன்பு உருகு சிந்தை இடு திரி ஆ — (பகவத் விஷயத்தின்) இனிமையாலே நீர்ப்பண்டமாக உருகுகின்ற மனமானது (விளக்குக்கு) இடப்படுகிற திரியாகவுங் கொண்டு

நன்பு உருகி — ஆத்மாவும் உருகப்பெற்று

நாரணற்கு — ஸ்ரீமந் நாராயணனுக்கு

ஞானம் சுடர் விளக்கு ஏற்றினேன் — பரஜ்ஞானமாகிற பிரகாசமான தீபத்தை ஏற்றினேன்.

* *—தகளியாவது—நெய்க்கும் திரிக்கும் ஆதாரமாயிருக்கிற அகல். (தாளி என்று உலகவழக்கு.) அன்பைத் தகளியாகவும்

ஆர்வத்தை நெய்யாகவும் இன்புருகு சிந்தையைத் திரியாகவும் கொண்டு எம்பெருமானுக்கு ஞானச்சுடர்விளக்கு ஏற்றினேனென்கிறார். அன்பு ஆர்வம் இன்பு என்றவையெல்லாம் பகவத்விஷயத்தில் தமக்குண்டான அநுராக விசேஷங்களேயாம். அநுராகத்தில் கணுக்கணுவான அவஸ்தாபேதங்கள் உண்டாகையால் அவற்றைத் திருவுள்ளம்பற்றி அன்பு என்றும் ஆர்வம் என்றும் இன்பு என்றும் சப்தபேதங்களையிட்டுச் சொன்னபடி. ஆகவே, எம்பெருமானது திருவருளால் தமக்கு அப்பெருமான் விஷயமாகத்தோன்றியுள்ள ப்ரீதியின் நிலைமைகளைத் தகளியும் நெய்யும் திரியுமாக உருவகப்படுத்தி, ஸர்வசேஷியான நாராயணனுக்குப் பரஜ்ஞானமாகிற சுடர் விளக்கையேற்றி அடிமைசெய்யப் பெற்றேனென்று மகிழ்ந்து கூறினாராயிற்று.

எம்பெருமானிடத்தில் எனக்கு அநுராகமானது கணுக்கணுவாக ஏறி வளர்ந்துசெல்லப் பெற்றதனால், அவ்வநுராகம் உள்ளடங்காமல் இத்தமிழ்ப்பாசுரங்களை வெளியிடத் தொடங்குகின்றேனென்பது பரமதாற்பரியம்.

உலகத்தில் ஒரு விளக்கு ஏற்றவேணுமானால் தகளியும் நெய்யும் திரியும் இன்றியமையாதனவாம்; இவ்வாழ்வார் ஏற்றுகிற ஞானவிளக்கானது லோகவிலக்ஷணமானதால் லோகவிலக்ஷணமான தகளியையும் நெய்யையும் திரியையுங்கொண்டு ஜ்வலிக்கின்றதுபோலும். பகவத்விஷய அநுராகத்தின் வெவ்வேறு நிலைமைகளே இவையாயின. உலகில் பதார்த்தங்கள் பிரகாசிப்பதற்காக விளக்கேற்றுவர் ; இவரும் ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்கள் பிரகாசிப்பதற்காக விளக்கேற்றினர்.

“நன்புருகி” என்றவிடத்து, நன்பு என்று ஆத்மாவைச் சொல்லுகிறது. ஜ்ஞாநாநந்தங்களையுடையதாகையாலும் எம்பெருமானுக்கு அநந்யார்ஹ சேஷபூதமாகையாலும் ஆத்மா நல்ல வஸ்து என்ற காரணத்தினால் நன்பென்று இவர் ஆத்மாவுக்குப் பெயரிட்டனர்போலும். நன்பு என்பது குணப்பெயராயினும் “ தத்³கு³ணஸாரத்வாத்து தத்³வ்யபதே³ஶ: ப்ராஜ்ஞவத்” [ப்ரஹ்ம ஸூத்ரம்.] என்ற ஸ்ரீபாஷ்ய ப்ரக்ரியையாலே ஆத்மவாசகமாகக்

குறையில்லையென்க. தமிழர் பண்பாகுபெயர் என்பர். நாரணன்—நாராயணன் என்பதன் சிதைவு.

இவ்வாழ்வார் ஞானத்தமிழ்புரியத் தொடங்கும்போதே 'ஞானத் தமிழ்புரிந்த' என்று இறந்தகாலத்தாற் கூறினது-தம்மைக் கொண்டு கவிபாடுவிக்க விரும்பிய எம்பெருமான் ஸத்யஸங்கல்பனுகையாலும், எம்பெருமானது திருக்குணங்களைப்பற்றிப் பாசுரங்கள் பேசித் தலைக்கட்டியே தீரும்படியான தம் உறுதியினாலும் இப்பிரபந்தத்தைத் தலைக்கட்டியாய்விட்டதாக நினைத்தென்க. இதனைத் தமிழர், தெளிவினால் எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி யென்பர். ... (க)

ஞானத்தால் நன்குணர்ந்து நாரணன்றன் நாமங்கள் *
தானத்தால் மற்றவன்பேர் சாற்றினால் *—வானத்
தணியமர ராக்குவிக்கு மஃதன்றே * நங்கள்
பணியமரர் கோமான் பரிசு. (உ)

| | |
|---|---|
| நாரணன் தன் | ஸ்ரீமந் நாராயணனுடைய |
| நாமங்கள் | (திருமேனி முதலியவற்றிற்கு வாசகமான) திருநாமங்களையும் |
| மற்று | மற்றும் |
| அவன் பேர் | அப்பெருமானுடைய (விபூதி விஸ்தாரங்களுக்கு வாசகமான) திருநாமங்களையும் |
| ஞானத்தால் | (ப்ரேமரூபமான) ஜ்ஞானத்தாலே |
| நன்கு உணர்ந்து | உள்ளபடியறிந்து |
| தானத்தால் | (ப்ரேமத்தின் முடிவெல்லையான) ஸ்தானத்திலே நின்று |
| சாற்றினால் | அநுஸந்தித்தால், |
| நங்கள் பணி அமரர் கோமான் பரிசு | நமக்கு பந்துக்களாயும் எப்போதும் கைங்கர்யபரர்களாயுமுள்ள நித்யஸூரிகளுக்குத்தலைவனான எம்பெருமானுடைய தன்மையாவது, |
| வானத்து அணி அமரர் ஆக்குவிக்கும் அஃது அன்றே | பரமபதத்திற்கு அலங்காரமான நித்யஸூரிகளாக (நம்மை)ச் செய்துவைக்குமதுவேயாம். |

* * *—நான் இப்பிரபந்தமுகத்தால் பகவந்நாமங்களை அநுஸந்தித்து அவனருளால் நித்யஸூரிகள் பெறும் பேற்றைப் பெறப்போகிறேனென்பதைப் பொதுப்படையான சொல்லாலே வெளியிடுகிறார். பகவந்நாமங்களை நன்றாக அறிந்து அன்புடன் யாவர் சொல்லுகின்றனரோ, அன்னவர்களை அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகளான நித்யஸூரிகளோடொப்பப் பணிகொள்ளுதலன்றோ எம்பெருமானுடைய தொழில் என்கிறார்.

எம்பெருமானுக்குப் பல்லாயிரந் திருநாமங்களுண்டு; அவற்றில், திருமேனி முதலியவற்றுக்கு வாசகமான திருநாமங்கள் என்று ஒரு வகுப்பும், விபூதிவிஸ்தாரங்களுக்கு வாசகமான திருநாமங்கள் என்று மற்றொரு வகுப்பும் கொள்ளத்தக்கன. ஸ்ரீவத்ஸவக்ஷா:, புண்டரீகாக்ஷ:, பீதாம்பர:, சார்ங்கீ, சக்ரபாணி இத்யாதி திருநாமங்கள் முந்தின வகுப்பைச்சேர்ந்தவை; லோகாத்யக்ஷ:, ஸுராத்யக்ஷ:, ஜகத்பதி: இத்யாதி திருநாமங்கள் பிந்தினவகுப்பைச் சேர்ந்தவை. ஆக இவ்விருவகுப்புகளையுந் திருவுள்ளம்பற்றி, முதலடியில் "நாரணன்றன் நாமங்கள்" என்றும், இரண்டாமடியில் "மற்றவன் பேர்" என்றும் அருளிச்செய்யப்பட்டுள்ளது. அன்றியே, நாரணனுடைய நாமங்களை நன்றாகவுணர்ந்து அவனுடைய அந்தப் பெயர்களை அன்பு முற்றி வாய்விட்டுச்சொன்னால்—என்று பொருள் கொள்ளவுங்கூடும்; அப்போது, கீழ்விவரித்தபடி வகுப்புபேதங் கொள்ளவேண்டா.

தானத்தால்—'ஸ்தாநம்' என்னும் வடசொல் தானமெனத் திரிந்தது எல்லை நிலத்தைச்சொன்னபடி. அன்பினுடைய எல்லை நிலத்திலே நின்று என்க. சாற்றுதல்—சொல்லுதல். ஈற்றடியில், நங்கள் என்பதும் பணி என்பதும் தனித்தனியே அமரரிடத்து அந்வயிப்பன. பணியமரர்—எப்போதும் பணிவதையே இயல்வாகவுடைய அமரர். பரிசு—வெகுமதியுமாம்; நித்யஸூரி ஸாம்யத்தை வெகுமதியாக அளிப்பன் என்றவாறு. ... ... (உ)

பரிசு நறுமலரால் பாற்கடலான் பாதம் *
புரிவார் புகப்பெறுவர் போலாம் *—புரிவார்கள்
தொல்லமரர் கேள்வித் துலங்கொளிசேர் தோற்றத்து *
நல்லமரர் கோமான் நகர் (௩)

| | | | |
|---|---|---|---|
| பால் கடலான் பாதம் | க்ஷீராப்தி நாதனுடைய திருவடிகளை | கேள்வி | (கண்ணால்காண முடியாமல்) காதால்மாத்திரம் கேட்டுக்கொண் டிருக்கக்கூடிய தும் |
| பரிசு நறு மலரால் | செவ்வியுண்டாக பரிமளம்மிக்க புஷ்பங்களைக் கொண்டு | துலங்கு ஒளி சேர் தோற்றத்து | மிகவிளங்குகின்ற ஒளிபொருந்தித் தோன்றுதலை யுடையதுமான |
| புரிவார் | விரும்பித் தொழுமவர்கள், | நல் அமரர் கோமான் நகர் | நித்யஸூரி நாதனுடைய திவ்யநகரமான பரமபதத்தை |
| புரிவார்கள் தொல் அமரர் | ஸாதநாநுஷ்டாந பரர்களான (இந்திரன் முதலிய) பழைய தேவர்களுக்கும் | புகப்பெறுவர் போலாம் | அடையப் பெறுவர்கள். |

* * *—ஸமயத்தில் ஆச்ரிதர்களுக்கு வந்து உதவுகைக்காகத் திருப்பாற்கடலிலே வந்து திருக்கண்வளர்ந்தருளும் திருக்குணத்தி லீடுபட்டு அப்பெருமானது திருவடிகளிலே நல்ல மலர்களைக் கொண்டு ஸமர்ப்பித்து ஆராதிக்குமவர்கள் பரஞ்சோதியான பரம பதத்திலே சென்று புகப்பெறுவர்; இந்திரன் முதலிய தேவர்களும் அப்பரமபதத்தை இன்னமும் காதால் கேட்டுக்கொண்டிருக்கிறார் களேயொழியக் கண்ணால் கண்டு சேரப்பெற்றார்களில்லை; அப்படி தேவர்கட்கும் அரிதான பரமபதத்தை அநந்ய ப்ரயோஜநரான பக்தர்கள் அடையப்பெறுவர் என்கிறார்.

"புகப்பெறுவர்போலாம்" என்றவிடத்து 'போல்' என்பது ஒப்பில் போலியாய் வந்தது வடமொழியில் 1. "கிமிவஹி மதுராணாம்" இத்யாதி ஸ்தலங்களில் இவசப்தம்போலே வாக்யாலங் காரமென்க.

புரிவார்கள்தொல்லமரர் கேள்வி=புரிவார்களான தொல்லமர ருண்டு-முழுகுவது மூக்கைப்பிடிப்பது ஜபிப்பது முதலிய ஸாதநா நுஷ்டாநங்களைச் செய்பவரான தேவர்கள்; அவர்களுடைய செவிப்புலனுக்குமாத்திரம் இலக்கானதேயன்றி, கட்புலனுக்கு

1. சாகுந்தளநாடகம்.

இலக்கானதன்று பரமபதம். ஆழ்வானருளிய ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் "யத்³ ஹ்ராஸவ்ருத்³தி⁴ரஹிதம் . . . நித்யம் நிவ்ருத்தி நிரபேத ஸுகா²நுபூ⁴தி" என்றதும், பிள்ளைப்பெருமாளையங்காரருளிய திருவேங்கடமாலையில் "கேட்டமரர் வேட்டுத் தளர்வாகுமந்தரத்தான்" (6) என்றதும் காண்க.

சாஸ்த்ரங்களில் பரமபதத்தைப்பற்றிச் சொல்லுமிடத்து "அத்யர்க்கா நலதீ³ப்தம் தத்ஸ்தா²நம் விஷ்ணோர் மஹாத்மந:" [ஸூர்யன் அக்நி முதலிய சுடர்ப்பொருள்களிற்காட்டிலும் மிக விஞ்சி விளங்குவது] என்று சொல்லப்பட்டிருத்தலால் 'துலங்கொளி சேர் தோற்றத்து' என்றார். .... ... .... (ந)

நகரிழைத்து நித்திலத்து நாண்மலர்கொண்டு * ஆங்கே
திகழுமணி வயிரம் சேர்த்து *—நிகரில்லாப்
பைங்கமல மேந்திப் பணிந்தேன் பனிமலராள் *
அங்கம்வலங் கொண்டா னடி. (ச)

| | |
|---|---|
| நகர் இழைத்து | என்னுடைய நெஞ்சை எம்பெருமான் வாழக்கூடிய திருமண்டபமாக அமைத்து |
| நித்திலத்து நாள் மலர் கொண்டு | (அதிலே) ஸ்நேஹமாகிற முத்தை செவ்விகுன்றாத புறவிதழாக அமைத்து |
| திகழும் மணி வயிரம் சேர்த்து | ஸங்கம் காமம் என்கிற நல்ல மாணிக்கத்தையும் வயிரத்தையும் அல்லியும் தாதுமாக வைத்து |
| நிகர் இல்லா | ஒப்பில்லாத |
| பைங் கமலம் ஏந்தி | பக்தியாகிற அழகிய தாமரைப்பூவைத் தரித்துக்கொண்டு |
| பனி மலராள் அங்கம் வலம் கொண்டான் | குளிர்ந்த தாமரைப் பூவிற் பிறந்த பிராட்டியை வலமார்பினில் வைத்துக்கொண்டிருக்கும் பெருமானுடைய |
| அடி | திருவடிகளை |
| பணிந்தேன் | வணங்கினேன். |

* * *—இப்பாசுரம் பெரும்பாலும் ரூபகாதிசயோக்தியலங்காரம் கொண்டுள்ளது. அதாவது—விஷயங்களை மறைத்தும் ரூபகமாக்கியும் பேசுகிறது. திருமாமகள் கொழுநனை எம்பெருமானை

என்னுடைய நெஞ்சிலே எழுந்தருளப்பண்ணி உயர்ந்த பக்திப் பெருங்காதலைக் காட்டினேன் என்று சொல்ல நினைத்த விஷயத்தை ஒரு சமத்காரமாகச் சொல்லுகிறார்.

நகரிழைத்து=ராஜாக்கள் வஸிக்குமிடம் நகரமெனப்படும்: தேவாதி தேவனை எம்பெருமான் உவந்து வஸிக்குமிடம் பக்தர்களுடைய ஹ்ருதயமேயாகையாலும் இவ்வாழ்வார் தாமும் பக்த சிரோமணியாகையாலும் இவர் தம்முடைய திருவுள்ளத்திலேயே உவந்து வஸிப்பனென்பது திண்ணம்; ஆகவே 'நகரிழைத்து' என்றது—என்னுடைய நெஞ்சை அவனுக்கு உறைவிடமாக்கி என்றபடி.

அரசர்களை ஆநந்தப்படுத்த விரும்புமவர்கள் தாமரைமுதலிய நல்ல புஷ்பங்களைக்கொண்டு பணிவதுபோல, தாமும் எம்பெருமானை நல்லதொரு புஷ்பமிட்டுப் பணிந்தமை சொல்லுகிறார்மேலே- நிகரில்லாப் பைங்கமலமேந்திப் பணிந்தேன் என்று. சாஸ்த்ரங்களில் "𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌪𑍍𑌰𑌥𑌮𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌃। 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌦𑌯𑌾 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌕𑍍𑌷𑌮𑌾𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃॥ 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌤𑌪𑌃𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌧𑍍𑌯𑌾𑌨𑌂𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌤𑌥𑍈𑌵 𑌚। 𑌸𑌤𑍍𑌯𑌮𑌷𑍍𑌟𑌵𑌿𑌧𑌂 𑌪𑍁𑌷𑍍𑌪𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌕𑌰𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍॥" [அஹிம்ஸை, இந்த்ரிய நிக்ரஹம், ஸர்வபூததயை, பொறுமை, ஞானம், தபஸ், த்யாகம், ஸத்யம் என்னுமிவை யெட்டும் எம்பெருமானுக்கு ப்ரீதிகரமான எட்டுவகைப் புஷ்பங்கள்] என்று சொல்லியிருப்பதுபோல, இங்கு இவ்வாழ்வார் பகவத்விஷய பக்தியை நிகரில்லாத தாமரைப் பூவாகக் கருதுகின்றனர். தாமரைப்பூவென்றால் அதற்குப் புறவிதழ் அகவிதழ் முதலானவை இருக்குமே; அவற்றின் ஸ்தானங்களிலே ஸ்நேஹம் ஸங்கம் காமம் என்கிற பக்தியின் பருவ விசேஷங்களை யிட்டுப் பேசநினைத்து, அவற்றையும் நேரே சொல்லாமல் முத்தும் மணியும் வயிரமுமாக உருவகப்படுத்திப் பேசுகின்றார். "நிகரில்லாப் பைங்கமல" மென்றது பொற்கமலத்தையாகையால் அதற்கிணங்க முத்தையும் மணியையும் வயிரத்தையும் சொல்லவேண்டிற்று. முதலடியில், மலர் என்றது மலரிதழைச் சொன்னபடி: ஆகுபெயர். புறவிதழின் ஸ்தானத்திலே முத்தாகச் சொல்லப்பட்ட ஸ்நேஹமும், அகவிதழின் ஸ்தானத்திலே மாணிக்கமாகச்

சொல்லப்பட்ட ஸங்கமும், தாதின் ஸ்தானத்திலே வயிரமாகச் சொல்லப்பட்ட காமமும் கமலமென்னப்பட்ட பக்தியின் அவஸ்தாபேதங்களென்க.

நித்திலம்=வடமொழியில், 'நிஸ்தலம்' என்கிறசொல் முத்து என்னும் பொருளதாகக் கவிகளால் பிரயோகிக்கப்படுகின்றது. "அதிவித்ரும மஸ்த நிஸ்தலா ஸீருசம் = அதிவித்ருமமஸ்த நிஸ்தலாஸீருசம்" என்று வரதராஜஸ்தவத்திலே கூரத்தாழ்வானும் பிரயோகித்தருளினர். அந்த நிஸ்தலமென்னும் வடசொல்லே தமிழில் நித்திலமென்று திரிந்து கிடப்பதாகக் கொள்க. இது தனியே ஒரு தமிழ்ச்சொல் என்பர் சிலர். ... .... (௪)

அடிமூன்றி லிவ்வுலக மன்றளந்தாய் போலும் *
அடிமூன் றிரந்தவனி கொண்டாய் *—படிநின்ற
நீரோத மேனி நெடுமாலே * நின்னடியை
யாரோத வல்லா ரறிந்து. (௫)

| | | | |
|---|---|---|---|
| படி நின்ற | பூமியிலே அவதரித்து நின்ற | இரந்து கொண்டாய் | (மாவலி யிடத்தில்) யாசித்துப் பெற்றாய்; |
| நீர் ஓதம் மேனி நெடு மாலே | கடல்வண்ணனான ஸர்வேச்வரனே!, | நின் அடியை | இப்படிப்பட்ட உனது திருவடிகளை |
| அன்று | முன்பொரு காலத்தில் | அறிந்து | நன்றாகத் தெரிந்து கொண்டு |
| இ உலகம் | இவ்வுலகத்தை | ஓத வல்லார் ஆர் | பேசவல்லவர்கள் யாவருளர்? [யாருமில்லை.] |
| அடி மூன்றில் அளந்தாய் போலும் | மூவடியாலே அளந்துகொள்பவன்போல | | |
| அடி மூன்று அவனி | மூவடி நிலத்தை | | |

* * *—எம்பெருமான் மாணுருவாய்ச் சென்று மாவலியிடத்தில் மூவடி நிலம் வேண்டினதன் கருத்து எதுவாயிருந்ததென்னில், மூன்று அடிகளாலே மூன்று லோகங்களையும் அளந்து ஆக்ரமித்துக்கொள்ள வேணுமென்பதே முதலில் அபிப்ராயமாக இருந்தது; பிறகு அளக்கிற ஸமயத்தில் கீழுலகங்களை ஓரடியாலும்

மேலுலகங்களை மற்றோரடியாலும் அளந்துகொள்ளுகையாலே மூன்றாவது அடி இரந்துபெற்றது வீணாய்விடும்போலிருந்தது; அது வீணாகாமைக்காக மாவலியைக் கேட்க, அவனும் தனது தலையையே அதற்கு இடமாகக் காட்ட அதன்மேல் மூன்றாமடியை வைத்து அவனைப் பாதாளத்திலே கொண்டு தள்ளினனாக இவ்வாழ்வாருடைய அநுஸந்தான முள்ளதாகக் கொள்க.

இந்தலோகம் அந்தரிக்ஷலோகம் ஸ்வர்க்கலோகம் என்னும் மூவுலகங்களையும் மூன்றடிகளாலே நீ அளப்பதாயிருந்தால் மூவடி நிலம் நீ யாசித்துப் பெறலாம்; காரியத்தில் அப்படி இல்லையே. மூவடி நிலம் யாசித்துப்பெற்று அந்த மூவடிகளாலே மூவுலகங்களை நீ அளந்தாயோ? அஃது இல்லையே!. யாசிக்கிறபோது இருந்த எண்ணம் வேறாகவும் அளக்கிறபோது உண்டான எண்ணம் வேறாகவும் ஆயிற்றே! இது என்ன? என்றபடி.

உண்மையில், மூன்றடி யாசிக்கிறபோதே 'இரண்டடிகளாலே கீழ்மேலுலகங்களை யளந்துகொண்டு மூன்றாமடிக்காக மாவலியைச் சிறையில் வைக்கவேணும்' என்னும் அபிப்ராயம் எம்பெருமானுக்கு இருந்திருக்கச் செய்தேயும் இவ்வாழ்வார் அபிப்ராயபேதம் தோற்ற அருளிச்செய்தது ஒரு சமத்காரமுமாகும்.

அவநி—வடசொல்; பூமி. படிநின்ற='படி' என்று உபமானத்துக்கும் வாசகமுண்டு; ஒப்பாகநின்ற கடல் என்னலாம்.

மூன்றாமடியில் "நின்படியை" என்ற பாடமும் பொருந்தும். ... ... ... (ரு)

அறிந்தைந்து முள்ளடக்கி யாய்மலர்கொண்டு * ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே *—அறிந்தவன்றன்
பேரோதி யேத்தும் பெருந்தவத்தோர் காண்பரே *
காரோத வண்ணன் கழல். (௬)

| | |
|---|---|
| அறிந்து | (எம்பெருமானுடைய வைலக்ஷண்யத்தையும் விஷயங்களின் கெடுதல்களையும் நன்றாக) அறிந்துகொண்டு |
| ஐந்தும் | பஞ்சேந்திரியங்களையும் |
| உள் அடக்கி | (பட்டிமேயவொண்ணாதபடி தடுத்து) பகவத்விஷயத்திலே ஊன்றும்படி நியமித்து |

| | | | |
|---|---|---|---|
| ஆய் மலர் கொண்டு | (பகவானுக்கு ஏற்கும்படி) ஆராய்ந்த புஷ்பங்களை ஸம்பாதித்துக்கொண்டு | ஓதி | இடைவிடாமற் சொல்லிக்கொண்டு |
| ஆர்வம் செறிந்த மனத்தர் ஆய் | பக்தியிருந்த மனத்தையுடையராகி | ஏத்தும் | துதிக்கின்ற |
| செவ்வே அறிந்து | (எம்பெருமானுக்கும் தமக்குமுள்ள முறைமையை) நன்றாக அறிந்து | பெரும் தவத்தோர் | மஹா பாக்யசாலிகள் |
| அவன் தன் பேர் | அப்பெருமானது திருநாமங்களை | கார் ஓதம் வண்ணன் கழல் | கருங்கடல் வண்ணனான அப்பெருமானுடைய திருவடிகளை |
| | | காண்பர் | கண்டு அநுபவிக்கப் பெறுவார்கள். |

* * *—பகவத் விஷயமானது அப்பொழுதைக்கப்பொழுது ஆராவமுதமான விலக்ஷண விஷயமென்பதையும், சப்தாதிவிஷயங்கள் இகழத்தக்கவை யென்பதையும் நன்றாகத் தெரிந்துகொண்டு, செவி வாய் கண் மூக்கு உடலென்னும் ஐம்புலன்களையும் வெளிவிஷயங்களில் ஓடவொட்டாமல் உள்விஷயமாகிய பகவத் விஷயத்திலேயே உபயோகப்படுத்தி, 1. "செண்பக மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி எண்பகர் பூவும் கொணர்ந்தேன்" என்றாற்போலே எம்பெருமானுக்கு உரிய நல்ல புஷ்பங்களைச் சேகரித்துக்கொண்டு ருஜுவானபக்தியையுடையராய் அப்பரமனுடைய திருநாமங்களையே எப்போதும் அநுஸந்திக்கும்படியான பாக்கியம் எவர்களுக்குள்ளதோ, அவர்கள் அப்பெருமானுடைய திருவடிகளைக் கண்டநுபவிக்கப் பெறுவர்கள் என்றாராயிற்று. இத்தால், கீழ்ப்பாசுரத்தில் "நின்னடியை யாரோதவல்லாரறிந்து" என்றது—இப்படி செய்யமாட்டாத தாந்தோன்றிகளைப்பற்றின வார்த்தையென்பது விளங்கிற்றும்.

தவம்—பாக்கியம். ... ... ... (சு)

கழலெடுத்து வாய்மடித்துக் கண்சுழன்று * மாற்றார்
அழலெடுத்த சிந்தையரா யஞ்ச *—தழலெடுத்த
போராழி யேந்தினான் பொன்மலர்ச் சேவடியே *
ஓராழி நேஞ்சே யுகந்து. (எ)

1. பெரியாழ்வார் திருமொழி 2-7-10.

ஆழி நெஞ்சே ஆழ்ந்த மனமே!, (முன்பு த்ரிவிக்ரமாவதாரம் செய்தருளினபோது)

கழல் எடுத்து { திருவடிகளை உயரத் தூக்கினவனுயும்,

மாற்றார் { எதிரிட்ட நமுசி முதலானவர்கள்

அழல் எடுத்த சிந்தையர் ஆய் அஞ்ச { பயாக்னி கொளுந்தின நெஞ்சையுடைய வர்களாய் நடுங்கும் படியாக

வாய் மடித்து { உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டு

கண் சுழன்று { (பார்க்கிற பார்வையிலேயே அவ்வெதிரிகள் சுருண்டு விழும்படி) கண்கள் வட்டமிட

தழல் எடுத்த போர் ஆழி { நெருப்பை யுமிழ்கிற, போர் செய்யவல்ல திருவாழி யாழ்வானை

ஏந்தினான் { தரித்தவனுயு மிருக்கிற எம் பெருமானுடைய

பொன் மலர் சே அடியே { அழகிய மலர்போன்ற திருவடிகளையே,

உகந்து ஓர் { விரும்பி அநுஸந்திப் பாயாக.

* * *—உலகளந்த பெருமானுடைய திருவடிகளையே உகந்து ஆச்ரயித்திருக்கும்படி தமது திருவுள்ளத்திற்கு உரைக்கிறார்.

மாவலியினிடத்தினின்றும் தானம் வாங்கியவுடனே ஸ்ரீ விஷ்ணு திரிவிக்கிரமனுய் மூவடிமண்ணை அளக்கப்புக, அதைக் கண்ட மஹாபலிபுத்திரனுன நமுசியென்பவன் ஓடிவந்து 'இது என்ன?' என்று வளருகிற திருவடியைத்தகைய, ஸ்ரீவிஷ்ணு 'நீ ஏன் தகைகிறாய்? நான் தானம்வாங்கியதை அளந்துகொள்ள வேண்டாமோ?' என்ன, 'நீ செய்கிறது கபடமன்றோ?' என்று நமுசிசொல்ல; ஸ்ரீவிஷ்ணு 'உன்னுடைய தகப்பன் யாசகபிரம சாரியாய் வந்த எனக்குத் தானம்பண்ணினது பொய்யோ?' என்ன, நமுசி 'என்னுடைய பிதா உன்னுடைய மோசந்தெரியாமல் உன் வஞ்சனத்தில் அகப்பட்டுக்கொண்டான்' என்ன, ஸ்ரீவிஷ்ணு 'நான்செய்வதை வஞ்சகமென்று எதனாற்சொல்லுகிறாய்?' என்ன, நமுசி 'நீ செய்வது வஞ்சனமன்றாகில், நீ முன்னே கேட்டபோ

திருந்த வடிவத்தைக்கொண்டு அளந்துகொண்டு போ' என்ன, ஸ்ரீவிஷ்ணு 'இது விகாரப்படுந்தன்மையுள்ள [எப்போதும் ஒரு தன்மையாயிராத] சரீரமாயிற்றே, முன்னைய வடிவத்தைக்கொண்டு எப்படி யளக்கமுடியும்?' என்ன, இப்படி ஸமாதானஞ்சொல்லவுங் கேளாமல் தான் பிடித்த திருவடியின் பிடியை விடாமல் உறுதியாயிருந்த நமுசியை வளர்ந்த திருவடியினால் ஆகாயத்திலே கொண்டுபோய்ச் சுழன்றுவிழும்படி செய்தானெம்பெருமான்— என்கிற வரலாற்றைப் பெரியாழ்வார் "என்னிது மாயம் என்னப்பனறிந்திலன், முன்னையவண்ணமே கொண்டளவாயென்ன, மன்னு நமுசியை வானிற்சுழற்றிய, மின்னுமுடியனே!" (1—8—8) என்ற பாசுரத்தில் அநுஸந்தித்தருளினர்; அதனை இப்பாட்டில் சுருங்க அநுஸந்திக்கிறாரிவர். மாற்றார் என்று மாவலியின்மகனை நமுசி முதலிய விரோதிகளைச்சொல்லுகிறது. அவர்கள் கண்சுழன்று அழலெடுத்த சிந்தையராய் அஞ்சும்படி வாய்மடித்தான் எம்பெருமானென்க.

"தழலெடுத்த போராழியேந்தினான்"=சக்கரத்தாழ்வானைக் கொண்டு காரியங்கொண்டதும் த்ரிவிக்ரமாவதாரத்திலுண்டு. மாவலியானவன் வாமநனுடைய வடிவழகாலும் மழலைச்சொல்லாலும் மனமகிழ்ந்து இவன் விரும்பியதைக்கொடுப்பதாக இருக்கும்போது அவனது குருவான சுக்கிராசாரியன் அப்பிரானது வடிவையும் வந்தவிதத்தையும் பேச்சையும் ஊன்றிப்பார்த்து 'இவன் ஸர்வேச்வரன், தேவகாரியஞ் செய்யும்பொருட்டு உன் ஸம்பத்துக்களையெல்லாம் பறித்துக்கொண்டுபோக வந்தான்' ஆகையால் நீ இவனுக்குத் தானம்பண்ணுவது தகுதியன்று; என்று தானஞ்செய்வதைத்தடுக்க, அவன் கேளாமல் தாரைவார்த்துத்தத்தஞ்செய்யப்புக, ஜலபாத்திரத்தின் துவாரத்திலே அந்த சுக்கிராசாரியன் புகுந்துகொண்டு ஜலத்தை விழவொட்டாமல் தடுக்க, ஸ்ரீவிஷ்ணு, த்வாரத்தைச் சோதிப்பவன்போலே தன்னுடைய திருக்கையிலணிந்த தர்ப்பபவித்ரத்தின் நுனியால் அவன் கண்ணைக் குத்திக்கலக்க, அவன் கண்ணையிழந்தானுப் அங்கிருந்து வெளிப்பட, பின்பு மாவலியிடத்தில் நீரேற்றனன் என்கிற வரலாறு ப்ரஸித்தமானதே; இதனைப் பெரியாழ்வார் அநுஸந்திக்கும்

போது 1. "சுக்கிரன் கண்ணைத் துரும்பால்கிளறிய சக்கரக்கையன்" என்றதனால் 2. "கருதுமிடம் பொருது கைநின்ற சக்கரத்தன்" என்கிறபடியே, திருமால் விரும்பிய இடங்களில் விரும்பினவடிவங் கொண்டு செல்லுந்தன்மையையுடைய திருச்சக்கரமே பவித்திர வடிவாய்நின்று சுக்கிரன் கண்ணைக்கலக்கினதாக ஆசார்யர்கள் வியாக்கியானித் தருள்வதாலும், அதை யநுஸரித்து ஸ்ரீகூர நாராயண ஜீயர் தாமும் ஸுதர்சநசதகத்திலே [30] "க்ருத நயந நயவ்ருஹதி ஸுக்ர ஸுவஸ்ய...வக்ரயாரா"—[சுக்கிரனுடைய கண்ணைக்கெடுத்த சக்கரம்] என்று அருளிச்செய்துள்ளதனாலும் இப்பாசுரத்தில் த்ரிவிக்ரமாவதார கதாநுஸந்தாநத்தில் 'தழ லெடுத்த போராழியேந்தினான்' என்றது ஒக்கும்.

வாய்மடித்து—கோபத்தின் மிகுதியினால் நாக்கைமடித்துப் பற்களைக் கடித்துக்கொண்டிருத்தல் இயல்வு. 'கண்சுழன்று' என்றது எம்பெருமானுடைய கோபத்தினாலாகிய கண்சுழற்சி யைச் சொன்னதாகவுமாம், நமுசியின் பயத்தினாலாகிய கண் சுழற்சியைச் சொன்னதாகவுமாம்.

மூன்றாமடியில் "சேவடியை" என்பதும் பாடம். ஈற்றடியில், ஓர்—வினைமுற்று; தியானம்பண்ணு என்றபடி. .... (எ)

உகந்துன்னை வாங்கி யொளிநிறங்கோள் கொங்கை *
அகங்குளிர வுண்ணென்றா ளாவி *—உகந்து
முலையுண்பாய் போலே முனிந்துண்டாய் * நீயும்
அலைபண்பா லானமையா லன்று. (அ)

| | | | |
|---|---|---|---|
| (பூதனையானவள்) | | ஒளி நிறம் கொள் கொங்கை | (பால் விம்மியிருத்தலால்) ஒளிவிட்டு அழகுபெற்றுள்ள (தனது) ஸ்தனத்தை |
| உகந்து | யசோதைப் பிராட்டியைப் போல அன்புடையவளாக அபிநயஞ் செய்து | அகம் குளிர உண் என்றாள் | ('குழந்தாய்!) மனமகிழ்ந்து உண்ணு' என்று சொல்லி வாயிலே வைத்தாள்; |
| உன்னை வாங்கி | (நீ தூங்கும்போது வந்து) உன்னைத் தூக்கியெடுத்து | | |

1. பெரியாழ்வார் திருமொழி 1-8-7. 2. திருவாய்மொழி 10-6-8.

| | | | |
|---|---|---|---|
| ஆனமையால் | ஆகையினாலே, | உகந்து | (பெரும்பேறு பெற்றாற்போலே) மகிழ்ந்துகொண்டு |
| அன்று | அவள் முலைதந்த அக்காலத்தில் | முனிந்து | (மனத்தில்) சீற்றங்கொண்டு |
| நீயும் | சிறுகுழந்தையான நீயும் | ஆவி | (அந்தப்பூதனையின்) உயிரை |
| அலை பண்பால் | அலையெறிகிற [அதிகமான] உன் ஸௌலப்ய குணத்தினாலே | உண்டாய் | உறிஞ்சி உட்கொண்டாய். |
| முலை உண்பாய் போலே | மெய்யே ஸ்தன்ய பானஞ்செய்பவனைப்போல | | |

* * *—பேய்ச்சியின் முலைப்பாலை அமுதமாகவுண்ட கதையை அநுஸந்தித்து ஈடுபடுகிறார். கண்ணபிரானைப்பெற்ற தாயான தேவகியினது உடன்பிறந்தவனும் அக்கண்ணபிரானுக்கு மாமனாகிய கம்ஸன், தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் ஒளித்து வளர்தலையறிந்து, அக்குழந்தையை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுப் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த க்ருஷ்ணசிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளைப் பேரிரைச்சலிட்டுக்கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தானென்பது கதை.

வந்த பேய்ச்சி யசோதையான பாவனையோடு வந்தாளாகையாலே அவளுடைய பரிவுபோன்ற பரிவை ஏறிட்டுக்கொண்டது பற்றி 'உகந்து' எனப்பட்டது. 1. "ஒரு முலையை வாய்மடுத்து ஒரு முலையை நெருடிக்கொண்டு, இருமுலையும் முறைமுறையா ஏங்கியேங்கி யிருந்துணாயே" என்னும்படியாகப் பால் விம்மியிருந்ததனால் 'ஒளிநிறங் கோள்கோங்கை' எனப்பட்டது. 2. "நந்தன்

1. பெரியாழ்வார் திருமொழி 2-2-8. 2. பெரிய திருமொழி 10-4-1.

பெறப்பெற்றநம்பீ! நானுகந்துண்ணுமமுதே! எந்தை பெருமானே! உண்ணாய் என்னம்மம் சேமமுண்ணாயே" 1. "உருகி யென்கொங்கையின் தீம்பால் ஓட்டந்து பாய்ந்திடுகின்ற, மருவிக் குடங்காலிருந்து வாய்முலையுண்ண நீவாராய்" என்று யசோதை ஆவலோடு சொல்லுமாபோலே பூதனையும் சொன்னமைதோற்ற 'அகங்குளிரவுண்ணென்றாள்' எனப்பட்டது. அவள் தாயான பாவனையிலே எவ்வளவு அன்பு அபிநயித்தாளோ, அவ்வளவு அன்பை இவனும் மகனான பாவனையிலே அபிநயித்தமைதோற்ற "உகந்து முலையுண்பாய்போலே" எனப்பட்டது. ஈற்றடியிலுள்ள "ஆனமையால்" என்பதை இரண்டாமடியிற் கூட்டிக்கொள்க.

அலைபண்பால்=இதன் அருமையான பொருள் குறிக்கொள்ளத்தக்கது. பண்பாவது குணம்; அலையெறிகின்ற குணம் என்றது-அளவுகடந்த குணம் என்றபடி. 2. "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந" [மெய்யான அன்போடு வராவிட்டாலும் மித்திரன் என்கிற பாவனை கொண்டுவந்தாலும், அன்னவனையும் நான் எவ்விதத்திலும் விடமாட்டேன்] என்று உறுதியாகச் சொல்லியுள்ள எம்பெருமான் ப்ரீதிபாவனையோடு வந்த பேய்ச்சியைக்கொன்றது ஏனென்றால்; அவளைக்கொன்று உலகுக்கு ஓருயிரான தன்னைக் காப்பாற்றிக்கொள்வதானது உலகமுழுமைக்கும் உயிரளித்ததாக ஆகிறபடியால், இந்த மஹாகுணத்தை வெளியிடவேண்டியே அவளைக்கொன்றானென்க. .... (அ)

அன்றதுகண் டஞ்சாத வாய்ச்சி யுனக்கிரங்கி *
நின்று முலைதந்த விந்நீர்மைக்கு *—அன்று
வரன்முறையால் நீயளந்த மாகடல்சூழ் ஞாலம் *
பெருமுறையா லெய்துமோ பேர்த்து. (௯)

| | | | |
|---|---|---|---|
| அன்று | (பூதனை பிணமாக விழும்படி நீ முலையுண்டு அவளுயிரை முடித்த) அக்காலத்தில் | அது கண்டு | முலை கொடுத்த அவள் செத்துக் கிடந்த அச் செய்தியைக் கண்ணாலே பார்த்தும் |

1. பெரிய திருமொழி 10—42. 2. ஸ்ரீராமசரமச்லோகம்.

| | | | |
|---|---|---|---|
| அஞ்சாத | 'முலை கொடுக்கிற நாமும் ஒருகால் செத்துப் போவோமோ!' என்று பயப் படாத | இ நீர்மைக்கு | இந்தப் பெருங் குணத்திற்கு, |
| ஆய்ச்சி | யசோதைப் பிராட்டியானவள் | அன்று நீ வரன் முறை யால் அளந்த மா கடல் சூழ் ஞாலம் | முன்பு நீ சிறந்த உறவினாலே அளந்துகொண்ட கடல் சூழ்ந்த இவ்வுலகமானது |
| நின்று | தரித்துநின்று (அந்தப் பூதனையின் விஷத்திற்கு மாற்றாக) | | |
| உனக்கு இரங்கி முலை தந்த | உன்னிடத்துப் பரிவுகொண்டு முலைகொடுத்த | பெரு முறையால் எய்துமோ | இன்னது பெரிய தென்று பார்க்கும் முறைமையில் ஒப்பாகப் பொருந்துமோ? |

* * *—முலைகொடுக்கவந்த பேய்ச்சியானவள் பிணமாய் விழுந்துகிடந்தபடியைப் பார்த்த யசோதை 'இதென்ன உத்பாதம்!' என்று வெருண்டோட வேணுமேயல்லது, அணுகிவந்து முலை கொடுத்திருக்கக்கூடாது; 1. "பேய்ச்சி முலையுண்ட பின்னையிப் பிள்ளையைப் பேசுவ தஞ்சுவனே" என்று அஞ்சிக் காதவழி யோடவேண்டியிருக்கவும் 2. "பேய்ச்சி பாலுண்ட பெருமானைப் பேர்ந்தெடுத்து ஆய்ச்சி முலைகொடுத்தாளஞ்சாதே" என்னும் படி அச்சமின்றி அணுகிவந்து உன்னை எடுத்தணைத்து முலை கொடுத்த பெருங்குணத்தை நோக்குங்கால், முன்பு நீ உலகளந்த அரியபெரிய காரியத்திற்காட்டிலும் இக்காரியமே மிகப்பெரி தென்று சொல்லலாம்படி யிருக்கின்றதென்கிறார். இத்தால்— யசோதைப்பிராட்டிக்குக் கண்ணபிரானிடத்துள்ள அன்பு அள வற்றதென்று வியந்து கூறினாராயிற்று.

**வரன்முறையால் நீ அளந்த**=**'வரம்'** என்னும் வடசொல் (மகர னகரப்போலியினால்) 'வரன்' என்று கிடக்கிறது. 'சிறந்த தான' என்றுபொருள். சிறந்த முறையாவது ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தம். உலகமுழுவதும் தன்னுடைய ஸொத்தாயும் தான் அதற்கும் ஸ்வாமியாயு மிருக்கையாகிற சிறந்த ஸம்பந்த மிருக்கை யாலேயன்றோ தன்னை யழியமாறியும் அளந்துகொள்ள நேர்ந்தது.

1. பெரிய திருமொழி 10—7—8. 2. மூன்றாந்திருவந்தாதி—29.

அளந்தமாகடல்சூழ்ஞாலம்—முலைதந்த இந்நீர்மைக்குப் பெருமுறையால் எய்துமோ ?=நீ மாகடல்சூழ் ஞாலத்தையளந்த மஹாகுணமானது யசோதை அஞ்சாமல் முலைதந்த மஹா குணத்திற்கு ஈடாகமாட்டாது என்றவாறு. அதாவது—யசோதை முலைதந்த நீர்மையை ஒரு தட்டிலும் நீயளந்தமாகடல் சூழ்ஞாலத்தை ஒரு தட்டிலும் வைத்து நிறுத்துப்பார்த்தால் 1. "ஐத்ரோக்ய ராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத்கலாம்" [மூவுலகுங்கூடியும் ஸீதைக்கு ஓரளவும் ஈடாகாது] என்றாற்போலே அஜகஜாந்தரமாயிருக்குமென்பதாகக் கொள்ளலாம்.

பெருமுறையால் எய்துமோ பேர்த்து=பெருமுறையாவது—இது பெரிதா? அது பெரிதா என்று ஆராயும் வகை; அப்படி ஆராயுமிடத்து ஒப்பாகுமோ? என்கை. "பேர்த்து" என்பதற்குப்பொருள் விசாரிக்கவேண்டா; வார்த்தைப்பாடு என்று கொள்ளலாம். .... .... ... ... (சு)

பேர்த்தனை மாசகடம் பிள்ளையாய் * மண்ணிரந்து
காத்தனை பல்லுயிரும் காவலனே *—ஏத்திய
நாவுடையேன் பூவுடையேன் நின்னுள்ளி நின்றமையால் *
காவடியேன் பட்ட கடை. (எ)

| | | | |
|---|---|---|---|
| காவலனே | ஸர்வரக்ஷகனே !, | பல் உயிரும் | எல்லா ஆத்மாக்களையும் |
| பிள்ளை ஆய் | சிறு குழந்தையாயிருந்து | காத்தனை | ரக்ஷித்தருளினாய் ; |
| மா சகடம் | (அஸுராவேசமுள்ள) பெரியவொருவண்டியை | நின் | (இப்படி ரக்ஷகனான) உன்னை |
| பேர்த்தனை | கட்டழியும்படி உதைத்துத் தள்ளினாய் ; | உள்ளி நின்றமையால் | (ஆச்ரயிக்கத் தக்கவனாக) மனப்பூர்வமாக எண்ணியிருப்பதனால் |
| மண் | பூமியை | ஏத்திய நா உடையேன் | உன்னைத் துதிப்பதையே ஸ்வபாவமாகவுள்ள நாக்கையுடையவனாயிருக்கிறேன் ; |
| இரந்து | (மஹாபலியினிடத்தில்) யாசித்துப் பெற்று | | |
| (திருவடியாலே குளிரத்தடவி) | | | |

1. ஸ்ரீராமாயணம் ஸுந்தரகாண்டம்-சிறியதிருவடி வார்த்தை.

| | | | |
|---|---|---|---|
| பூ உடையேன் | (அர்ச்சிப்பதற்கு உரிய) புஷ்பங்களையு முடையவனுயிருக்கிறேன் ; | பட்ட | வெகுகாலமாக அடைந்துள்ள |
| | (ஆன பின்பு) | கடை | தாழ்வுகளை |
| அடியேன் | உனக்கு அடியவனுயிருக்கும் பெரும் பதவியைப் பெற்றிருக்கிறநான் | கா | போக்கியருள வேணும். |

* * *—முதலாழ்வார்களுக்குப் பெரும்பாலும் எம்பெருமானுடைய விபவாவதாரங்களுள் க்ருஷ்ணவதாரமும் த்ரிவிக்ரமாவதாரமும், அர்ச்சாவதாரங்களுள் திருவேங்கடமலையும் அடிக்கடி வாய்வெருவும்படியா யிருக்குமென்பது குறிக்கொள்ளத்தக்கது.

பிள்ளையாய் மாசகடம்பேர்த்தனை=ஸ்ரீக்ருஷ்ணனுக அவதரித்த தான் நந்தகோபர் திருமாளிகையிலே ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தப்பெற்று (யசோதையும் யமுனைநீராடப்போய்) இருந்தகாலத்து, கம்ஸனுலேவப்பட்ட அஸுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்துத் தன்மேல் விழுந்து தன்னைக் கொல்லமுயன்றதையறிந்த பகவானான தான் பாலுக்கு அழுகிற பாவனையில் தன் சிறியதிருவடிகளை மேலே தூக்கியுதைத்து அச்சகடத்தைச் சிந்நபிந்நமாக்கின வரலாறு அறிக.

பிரானே! யசோதைப்பிராட்டியைப்போல உன்னிடத்து எனக்கு அதிகமான ப்ரேமம் இல்லாவிட்டாலும் 'ஆச்ரயிக்கத் தக்கவன் நீதான்' என்கிற எண்ணத்தைப்பெற்று உன்னை ஆச்ரயிப்பதற்கு உரிய ஸாமக்ரிகளைப் பரிபூர்ணமாகக் கொண்டிருக்கிறநான் இனி உன்னருளுக்கு இலக்காகக்கூடியவன் ; இதுவரையில் எனக்கு நேர்ந்திருந்த தேவதாந்தரபஜனம், உபாயாந்தரப்பற்று ப்ரயோஜநாந்தர விருப்பம் முதலிய பொல்லாங்குகளைத் தவிர்த்து இனி யென்னைக் காத்தருளவேணும் என்றாராயிற்று.

பேர்த்தனை, காத்தனை-முன்னிலையொருமை இறந்தகால வினைமுற்றுக்கள். 'ஏத்திய' என்னும் இறந்தகாலப் பெயரெச்சம் காலமுணர்த்தாது தன்மையுணர்த்திற்று. கா—வினைமுற்று. (ய

கடைநின் றமரர் கழல்தொழுது * நாளும்
இடைநின்ற வின்பத்த ராவர் *—புடைநின்ற
நீரோத மேனி நெடுமாலே * நின்னடியை
யாரோத வல்லா ரவர். (கக)

(பாழும் ஸம்ஸாரிகளானவர்கள்)

| | |
|---|---|
| அமரர் கடை நின்று | தேவதாந்தரங்களின் வாசல்களைப் பற்றிநின்று |
| நாளும் | நெடுங்காலம் வரையில் |
| கழல் தொழுது | (அவர்களுடைய) காலில் விழுந்து |
| | (பரமாநந்தம் பெறமாட்டாமல்) |
| இடை நின்ற இன்பத்தர் ஆவர் | நடுவே கிடக்கிற (சுவர்க்கம் முதலிய) சுகத்தைப் பெற்றொழிவர்கள்; |
| புடை நின்ற நீர் ஓதம் மேனி நெடுமாலே | (இவ்வுலகைச்) சூழ்ந்து கிடக்கிற கடல்போன்ற திருமேனியையுடைய ஸர்வேச்வரனே !, |
| நின் அடியை | உனது திருவடிகளை |
| ஓத வல்லா ரவர் ஆர் | அநுஸந்திக்கவல்லார் ஆரேனுமுண்டோ? (யாருமில்லையே!.) |

* * *—பெரும்பாலும் இவ்வுலகத்தவர்கள் தேவதாந்தர பஜனஞ்செய்து சுவையற்ற அற்பபலன்களைப்பெற்று அநர்த்தப் படுகின்றனரேயன்றி உன்னையுணர்ந்து ஆச்ரயித்து உஜ்ஜீவிப்பவர் யாருமில்லையே! என்று வருந்திப் பேசுகிறார்.

**கடைநின்றமரர்கழல்தொழுது**=அமரர் கடைநின்று கழல் தொழுது என்க. **கடையாவது** மனைவாசல்; தேவதாந்தரங்களின் மனைவாசலிலே நின்று என்றது—அவர்களை ஆராதித்தமை கூறிய வாறு. இனி, தொகுத்தல் விகாரமாகக்கொண்டு, "கடைநின்ற+அமரர்" என்று பிரித்து, 'தாழ்ந்த தெய்வங்களின் காலிலே விழுந்து' என்பதாகவும் பொருள்கொள்ளலாம். **இடைநின்ற வின்பத்தராவர்**—எம்பெருமானைப் பணிந்தவர்க்குக் கிடைக்கக் கூடிய பரமபதாநுபவமொன்றே உத்தமமாகையாலும், அதற்குக் கீழ்ப்பட்ட ஸ்வர்க்காநுபவம் முதலிய பலன்களெல்லாம் இடைக் கட்டாதலாலும்; தேவதாந்தர பஜனம் பண்ணுவார்க்கு அப்படிப் பட்ட க்ஷுத்ரபலன்களே கிடைக்குமாதலாலும் "இடைநின்ற

இன்பத்தராவர்" என்னப்பட்டது. இன்பமென்றதும் ப்ரமித்தவர்களின் கருத்தாலேயாம். 'ஆவர்' என்பதற்கு எழுவாய் வருவித்துக்கொள்க. ... .... ... (கக)

அவரிவ ரென்றில்லை யரவணையான் பாதம் *
எவர்வணங்கி யேத்தாதா ரெண்ணில் *—பவரும்
செழுங்கதிரோ னொண்மலரோன் கண்ணுதலோ னன்றே *
தொழுந்தகையார் நாளும் தொடர்ந்து. (கஉ)

எண்ணில் — ('எம்பெருமானை ஆச்ரயித்து ஸ்வரூபஸித்தி பெறுகிறவர்கள் ஆரார்?' என்று) ஆராயுமளவில்

அவர் இவர் என்று இல்லை — இன்னார்தாம் ஆச்ரயிப்பவர்கள், இன்னார் ஆச்ரயிக்காதவர்களென்று ஒருவாசியில்லை;

அரவு அணையான் பாதம் — சேஷசாயியான அப்பெருமானுடைய திருவடிகளை

வணங்கி — தொழுது

ஏத்தாதார் — துதியாதவர்கள்

எவர் — யாவர்? (ஒருவருமிலர்.)

பவரும் செழு கதிரோன் — பரவின அழகிய ஆயிரங்கிரணங்களையுடையவனான ஸூரியனும்

ஒள் மலரோன் — அழகிய (திருநாபிக் கமல) மலரை இருப்பிடமாகவுடைய பிரமனும்

கண் நுதலோன் — நெற்றிக்கண்ணனான ருத்ரனும்

(ஆகிய, நாட்டிலுள்ளவர்களால் ஆச்ரயிக்கப் படுகிறவர்களென்று பிரசித்தரான இவர்கள்)

நாளும் — நாள்தோறும்

தொடர்ந்து தொழும் தகையார் அன்றே — அப்பெருமானெழுந்தருளியிருக்கின்ற இடத்தைத்தேடி ஆச்ரயிக்கும் ஸ்வபாவமுள்ளவர்களன்றோ?.

* * *—கீழ்ப்பாட்டில், தேவதாந்தரபஜநம் பண்ணுமவர்கள் அநர்த்தப்பட்டுப்போவதை யருளிச்செய்தார்; 'ஆனால் அந்த தேவதைகளை ஆச்ரயிக்கலாகாதோ? இந்த்ரசந்த்ரருத்ராதிகளும் மேம்பட்ட தேவதைகளாகத்தானே சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றனர்' என்று நினைப்பார்க்கு உத்தரமாக இப்பாட்டருளிச்செய்கிறார். எம்பெருமானொருவனையே தொழுது உஜ்ஜீவிப்ப

தில் நம்மோடு அந்த தேவதாந்தரங்களோடு ஒரு வாசியில்லையான பின்பு தேவாதிதேவனான ஸ்ரீமந் நாராயணனைத் தொழுவதே அனைவர்க்கும் கடமையாமென்பது இதனாலுணர்த்தப்பட்டதாம்.

கீழ்ப்பாட்டில் "நெடுமாலே! நின்னடியை யாரோதவல்லார்?" என்று சொல்லிவைத்து இப்பாட்டில் "அரவணையான் பாதம் எவர் வணங்கி யேத்தாதார்?" என்றது முரண்படுமன்றோவென்று சங்கிக்கவேண்டா; எம்பெருமான் திருவடியைத் தொழுது துதித்தலைக் கடமையாகவுடையராகாதவர்கள் யாவர்? என்பதே இப்பாட்டின் நோக்கமாகும். ஆகவே, எல்லாரும் எம்பெருமானைத் தொழுதேத்தக் கடமைப்பட்டவர்களென்று ஸ்வரூபயோக்யதையை உணர்த்துமிப்பாசுரமும், இந்த ஸ்வரூபத்தைப் பரிபாலனம் பண்ணுவாரில்லையே யென்றுரைத்த கீழ்ப்பாசுரமும் முரண்படா. இப்பாட்டின் பின்னடிகளில், ஸூரியன் பிரமன் சிவன் முதலானவர்களும் நாடோறும் தொடர்ந்து தொழுவதாகச் சொல்லியிருந்தாலும், இவ்வுலகத்தவர்கள் பெரும்பாலோர் தொழாது கெட்டுப் போகின்றனரேயென்னும் வருத்தம் ஆழ்வார்க்குப் பெரிதுமுண்டு.

தொடரெடுத்த மால்யானை சூழ்கயம் புக்கஞ்சி *
படரெடுத்த பைங்கமலங் கொண்டு * அன்—றிடரடுக்க
ஆழியான் பாதம் பணிந்தன்றே * வானவர்கோன்
பாழிதா னெய்திற்றுப் பண்டு. (கரு)

தொடர் எடுத்த மால் யானை — காற்சங்கிலியை முறித்துக் கையிற்கொண்டு பதறியோடுந் தன்மையதான மதயானையானது

சூழ் கயம் புக்கு — (கரைகாண வொண்ணாதபடி) விசாலமாயிருந்த பொய்கையிலே இழிந்து

படர் எடுத்த பை கமலம் கொண்டு — மலர்ந்து ஓங்கியிருக்கிற அழகிய தாமரைப்பூவை (எம்பெருமானுக்கு ஸமர்ப்பிப்பதற்காக)க் கையிற்கொண்டு

அன்று இடர் அடுக்க — அந்த நிலைமையிலே (முதலையின் வாயிலகப்பட்டு விடுவித்துக் கொள்ளமுடியாத) பெருந்துன்பமுண்டாக

| | | | |
|---|---|---|---|
| அஞ்சி | (செவ்வியழிவதற்கு முன்னே இந்த மலர்களை எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்க முடியாமற் போய்விடுமோவென்று) மனம் பதறி, | பணிந்து அன்றே | (தியானித்து) வணங்கியதனாலன்றோ |
| | | தான் | அந்த கஜேந்திரம் |
| | | பண்டு | முற்காலத்தில் |
| ஆழியான் பாதம் | (முதலையைத் துணிக்குங் கருவியான) திருவாழியைக் கையிலேந்தின எம்பெருமானுடைய திருவடிகளை | வானவர் கோன் பாழி | தேவாதிதேவனுடைய இருப்பிடமான பரமபதத்தை |
| | | எய்திற்று | அடைந்தது. |

* * *—கீழ்ப்பாட்டில் "பவருஞ்செழுங்கதிரோனொண் மலரோன் கண்ணுதலோனன்றே தொழுந் தகையார் நாளுந் தொடர்ந்து" என்றருளிச் செய்ததில் அப்படிப்பட்ட உயர்ந்தவர்களான தேவர்கள் தாம் எம்பெருமானை ஆச்ரயிப்பதற்கு உரியவரேயன்றி நம்போன்ற எளியவர் அப்பரமனை அடையுந்தரத்தினரன்றுபோலும் என்பதாக ஒரு சங்கை பிறக்கக்கூடுமாதலால் எம்பெருமானை ஆச்ரயிக்கும் விஷயத்தில் சிறியார் பெரியாரென்னும் வாசியில்லை; பிறப்பு முதலியவற்றால் தாழ்ந்தவர்களும் கூசாதே ஆச்ரயிக்கலாமென்னும் விஷயத்தை நிலைநாட்டுதற்காக ஸ்ரீ கஜேந்திராழ்வானது செய்தியை அருளிச்செய்கிறாரிதில்.

மஹாவிஷ்ணு பக்தனான இந்த்ரத்யும்நனென்னும் அரசன் வழக்கப்படி ஒருநாள் விஷ்ணுபூஜை செய்துகொண்டிருந்தபோது அகஸ்த்யமஹாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவ்வரசன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப் பூஜிப்பதில் செலுத்தியிருந்ததனால் அம்முனிவனது வருகையை அறியாதவனாய் அவனுக்கு உபசாரமொன்றுஞ் செய்யாதிருக்க, அம்முனிவன் இப்படி அரசன் நம்மை அலக்ஷியஞ் செய்தானென்று மாறாகக் கருதிக் கோபித்து, 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக் கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒரு காட்டில் யானையாகத் தோன்றினனாயினும் முன்செய்த விஷ்ணு

பக்தியின் மஹிமையினால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந் தாமரை மலர்களைக்கொண்டு திருமாலை அர்ச்சித்துப் பூஜித்துவருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத் தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூப்பறிப்பதற்குப்போய் இறங்கிற்று; முன் பொருகால் தேவலனென்னும் முனிவன் ஒரு நீர்நிலையில்நின்று தவஞ்செய்துகொண்டிருந்தபோது அவனது காலைப்பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரிய முதலையாய்க்கிடந்த ஹூஹூவென்னுங் கந்தர்வன் அவ்யானையின் காலைக் கௌவிக்கொள்ள, அதனை விடுவித்துக்கொள்ள முடியாமல் கஜேந்திராழ்வான் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அப்பொய்கைக் கரையிலே அரைகுலையத் தலைகுலைய விரைந்தெழுந்தருளித் தனது திருவாழியைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன் வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முக்தியை அருளினன் என்ற வரலாறு உணர்க.

"தோடரேடுத்த" என்று யானைக்கு இட்ட விசேஷணம் சாதியியல்வைக் குறிப்பதாம். காலிலிட்ட விலங்கை முறித்துக் கையிலே கொண்டு யதேச்சையாகத் திரியுந்தன்மை யானைச்சாதிக்கு இயற்கையென்க.

எம்பெருமானை ஆச்ரயிப்பதற்கு இன்னார் ஆவார், இன்னார் ஆகார் என்கிற நியதியில்லாமை இப்பாட்டால் வெளியிடப்பட்டதாயிற்று. ... ... ... (கங)

பண்டிப் பெரும்பதியை யாக்கி * பழிபாவம்
கொண்டிங்கு வாழ்வாரைக் கூறுதே *—எண்டிசையும்
பேர்த்தகர நான்குடையான் பேரோதிப் பேதைகாள் *
தீர்த்தகர ராமின் திரிந்து. (கச)

| | | | |
|---|---|---|---|
| பேதைகாள் | அவிவேகிகளே!, | பழி பாவம் கொண்டு | தெரியாமல் விளையுங் குற்றங்களையும் தெரிந்து செய்யுங் குற்றங்களையும் மேன் மேலும் வளர்த்துக் கொண்டு |
| பண்டியை | வயிற்றை | | |
| பெரு பதி ஆக்கி | பெரிய ஊர்போலக் கண்டதையுங் கொண்டு நிரம்பச் செய்து வளர்த்து | | |

| | | | |
|---|---|---|---|
| இங்கு | இவ்வுலகில் | பேர் | திருநாமங்களை |
| வாழ்வாரை | வாழ்கின்ற ஸம்ஸாரிகளை | ஓதி | இடைவிடாது சொல்லிக்கொண்டு |
| ஏத்துதல் | புகழ்ந்து பேசுகை | திரிந்து | திவ்ய தேசங்கள்தோறும் ஸஞ்சரித்து |
| ஒழிமின் ... ரூதே | தவிர்ந்து, | தீர்த்தகரர் ஆமின் | (உங்கள் ஸஞ்சாரத்தாலே நாடுமுழுவதும்) பரிசுத்தமாம்படி செய்ய வல்லவராக ஆகுங்கோள். |
| எண் திசையும் பேர்த்த கரம் நான்கு உடையான் | (உலகளந்த காலத்தில்) எட்டுத்திக்குக்களையும் பேர்த்துப்போடும்படி விம்மி வளர்ந்த நான்கு திருத்தோள்களையுடையனான பெருமானுடைய | | |

* * *—சிறியார் பெரியாரென்னும் வாசியின்றி யாவராலும் எம்பெருமான் ஆச்ரயிக்கத் தக்கவனென்று கீழ்ப்பாசுரங்களால் ஸ்தாபிக்கப்பட்டதானபின்பு, ஸம்ஸாரிகளை ஸ்தோத்ரஞ்செய்துகொண்டு அதனால் இந்தப் பிரபஞ்சத்திலேயே உழன்றுகொண்டு தடுமாறாமல் அப்பெருமானைப் பணிந்து அவனது திருநாமங்களைச் சொல்லி அவ்வழியால் நீங்கள் மாத்திரம் ஈடேறுவதோடு நில்லாமல் உங்களுடைய ஸஞ்சாரத்தாலே நாடு முழுதும் பரிசுத்தமாகும்படி செய்யுங்கோளென்று நாட்டாரை விளித்து உபதேசிக்கின்றாரிதில். கண்ட பொருளையுங்கொண்டு வயிற்றை நிரப்புவதற்காகப் பழி பாவங்களைச் செய்து வாழ்கின்ற ஸம்ஸாரிகளைத் துதிப்பவர் விவேகிகளல்லர், பேதையர்களேயாவர் என்பது விளங்கப் 'பேதைகாள்!' என விளிக்கின்றனர்.

"பெரும்பதியை" என்றவிடத்துள்ள இரண்டாம் வேற்றுமையுருபைப் பிரித்து 'பண்டி' என்பதோடு கூட்டியுரைக்கப்பட்டது. பண்டியென்று வயிற்றுக்குப் பெயர். அதனைப் பெரும்பதியாக்குவதாவது வளர்ப்பதாம்; கண்டதையும் தின்றுதின்று ஏற்றச்சால் போலே வயிற்றை வைத்துக்கொண்டிருக்குமவர்களை நச்சிக் கவிபாடிக் காசுபெற்று வயிறுவளர்க்குந் தொழிலை விட்டுத்தொலையுங்கோளென்று முன்னடிகளாற் கூறினாராயிற்று. "பண்டு இப்பெரும்பதியை ஆக்கி" என்று பிரித்து பண்டு—அநாதிகாலமாக,

இப்பெரும்பதியை—இந்த ஸம்ஸாரத்தை, ஆக்கி—வளர்த்துக் கொண்டு என்றுரைக்கவுமாம்.

பழிபாவங்கோண்டு=கவனிப்பு இல்லாமையினால் அபுத்தி பூர்வமாகச் செய்யநேரும் பாவங்கள் பழியென்றும், வேணு மென்றே செய்யுந் தீங்குகள் பாவமென்றும் கொள்க. வயிற்றை நிரப்பவேண்டுவார்க்கு இவையித்தனையும் செய்யவேண்டியவையா மன்றோ. இங்கு வாழ்வாரை=இந்தப் பிரபஞ்ச சுகத்தையே வாழ்வாக நினைத்திருப்பவர்களை என்றபடி. கூறுதேயென்னுமள வால் பரித்யஜிக்க வேண்டுமதைச் சொல்லிப் பின்னடிகளாலே பரிக்ரஹிக்கவேண்டுமதைப் போதிக்கின்றார். உலகளந்த பெருமா னுடைய திருநாமங்களை யநுஸந்தித்துக்கொண்டு 1. "கண்டியூ ரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று, மண்டினாருய்யலல்லால் மற்றையார்க் குய்யலாமே" என்றபடி திருப்பதிகள்தோறும் நடந் தால், 2. "தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள், தலை வணக்கிக் கைகூப்பி ஏத்தவல்லார் திரிதலால் தவமுடைத்துத் தரணிதானே" என்று குலசேகராழ்வாரும் 3. "நாதனை நரசிங்கனை நவின்றேத்து வார்களுழக்கிய பாததூளி படுதலால் இவ்வுலகம் பாக்கியம் செய் ததே" என்று பெரியாழ்வாரும் அருளிச்செய்தபடியே உலக மெல்லாம் பவித்திரமாய்விடும் என்றவாறு. தீர்த்தகரர்—வடசொல்.

திரிந்தது வெஞ்சமத்துத் தேர்கடவி * அன்று
பிரிந்தது சீதையை மான்பின்போய் *—புரிந்ததுவும்
கண்பள்ளி கொள்ள வழகியதே * நாகத்தின்
தண்பள்ளி கொள்வான் றனக்கு. (கரு)

| | | | |
|---|---|---|---|
| வெம் சமத்து | கொடிய (பாரத) யுத்தத்திலே | அன்று | இராமனாகத் திருவவதரித்த காலத்து |
| தேர் கடவி | (பார்த்தஸாரதி யாகித்) தேரை நடத்திக்கொண்டு | மான் பின் போய் | மாரீசனாகிற மாயமானின் பின்னே சென்று |
| திரிந்ததும் | அலைந்ததும், | | |

1. திருக்குறுந்தாண்டகம் 19. 2. பெருமாள் திருமொழி. 10-5.
3. பெரியாழ்வார் திருமொழி. 4—4—6.

| | |
|---|---|
| சீதையை பிரிந்ததும் | பிராட்டியைப் பிரிந்து அலைச்சற் பட்டதும், |
| கண் | தரையிலே |
| பள்ளி கொள்ள | படுத்துக் கொள்ளும்படி |
| புரிந்ததுவும் | ஆசைகொண்டதும் |
| | (ஆகிய இச்செயல்கள்யாவும்) |
| நாகத்தின் தண் பள்ளி கொள்வான் தனக்கு | திருவனந்தாழ்வான் மேலே குளிரப் பள்ளிகொண் டிருக்கவேண்டிய பெருமானுக்கு |
| அழகியதே | ஏற்றவையோ? |

* * *—எம்பெருமானுகந்தருளின திருப்பதிகள் தோறும் திரியுங்கோளென்று ஸம்ஸாரிகளை நோக்கிக் கீழ்ப்பாட்டில் உபதேசித்தார்; உண்டியே உடையே உகந்தோடித் திரியு மிம்மண்டலத்திலே இவருபதேசத்தை ஆதரிப்பார் ஆர்? அவரவர்களிஷ்டப்படி தங்களுடம்பைப்பேணிப் பேய்களாய்த்திரிய, 'ஐயோ! இப்பாவிகளுக்காக எம்பெருமான் கிருஷ்ணனாய்ப் பிறப்பதும் இராமனாய்ப் பிறப்பதுமாய்க்கொண்டு படாத அலைச்சல்கள் பட்டுப் பரிதபியாநிற்க இவர்கள் இப்படி உண்டு உடுத்துத்திரிகின்றார்களே!' என வருந்தின ஆழ்வார், அப்பெருமான் ராமக்ருஷ்ணாவதாரங்களிலே அதிஸுகுமாரமான திருமேனியோடே பட்ட மிறுக்குக்களை நினைந்துருகிப் பேசுகின்றார்.

கண்ணபிரானாய்த் திருவவதரித்துப் பாரதப்போரிலே பார்த்தஸாரதியாயிருந்து எதிரிகள்விடுகிற அம்புகள் தன்மேலே படும்படி திருமேனிக்குக் கவசமும் தரியாதேகிடந்து அர்ஜுநன் சொன்னவிடத்திலே தேரை நடத்திக்கொண்டு பட்டபாடுகளை முதலடியிலே பேசினர். இராமனாய்த் திருவவதரித்துப் பித்ருவாக்யபரிபாலந வியாஜத்தாலே காட்டுக்கெழுந்தருளி மாயமான் பிரிக்கப் பிராட்டியைப்பிரிந்து பட்ட வருத்தங்களை இரண்டாமடியிற்பேசினர். 1. "மெல்லணைமேல் முன்துயின்றாய் யின்றினிப் போய் வியன்கான மரத்தினீழல், கல்லணைமேல் கண்டுயிலக் கற்றனையோ காகுத்தா கரியகோவே!" என்கிறபடியே கானகத்தில் கல்லும் முள்ளுமான விடங்களில் தரைக்கிடைகிடந்து வருந்தினதை மூன்றாமடியிற் பேசினர். ஆகிய இவ்வலைச்சல்கள்பட நேர்ந்த அவதாரங்கள் ஸம்ஸாரிகளைத் திருத்திப் பணிகொள்வதற்காகச் செய்தவையாதலால் இவ்வலைச்சல்களும் ஸம்ஸாரிகளுக்காகப்

1. பெருமாள் திருமொழி 9—3.

பட்டவையென்று திருவுள்ளம் பற்றுதல் பொருந்தும். நாகத்தின் தண்பள்ளி கொள்வான்தனக்கு அழகியதே = இவ்வலைச்சல்கள் எங்கே? அவனுடைய ஸுகுமாரமான திருமேனி எங்கே? மிடறு மெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கவேண்டியவன் வெம் பரல்களைக்கடித்தாற்போலே, மெத்தென்றசேஷசயனத்திலே திருக் கண்வளர்ந்தருள வேண்டியவன் இவ்வலைச்சல்கள்படத் தகுமோ என்றவாறு.

அழகியதேயென்றது விபரீத லக்ஷணையினால் மிகவும் தகாதவையாக இருந்தனவென்ற பொருளைத்தரும். "அழகியவே" என்றும் பாடமுண்டு; அழகிய = அன்சாரியைபெறாத பலவின்பால் முற்று.

மூன்றுமடியில், இடப்பொருளதான கண் என்னுஞ் சொல் இங்கு தரையென்ற பொருளைத்தந்தது ... .... (கரு)

தனக்கடிமை பட்டது தானறியா னேலும் *
மனத்தடைய வைப்பதாம் மாலை *—வனத்திடரை
ஏரியாம் வண்ண மியற்றுமிது வல்லால் *
மாரியார் பெய்கிற்பார் மற்று (கசு)

| | |
|---|---|
| தனக்கு | சேதநனாகிய தனக்கு |
| அடிமை | சேஷத்வமென்பது |
| பட்டது | அமைந்திருக்கின்ற தென்பதை |
| தான் அறியான் ஏலும் | தான் தெரிந்து கொள்ள அசக்தனா யிருந்தாலும் |
| (எம்பெருமான் தானாகவே) | |
| மனத்து | மனத்திலே |
| அடைய | வந்துசேர்ந்தவளவில் |
| மாலை | அப்பெருமானை |
| வைப்பது | இடங்கொடுத்து வைத்துக் கொள்வது |

| | |
|---|---|
| ஆம் | தகும்; |
| (இவனுக்கு இவ்வளவு ருசிமாத்திரம் உண்டானால் விரோதியைப்போக்கித் தன்னைத் தானே தந்தருள்வன் எம்பெருமான்; அது எங்ஙனே யென்னில்;) | |
| வனம் திடரை | காடெழுந்து கிடக்கிற மேட்டு நிலத்தை |
| ஏரி ஆம் வண்ணம் இயற்றும் இது அல்லால் | (பெய்யும் மழைநீர் அப்பால் போகாமல் தடையின்றி வந்துபுகும்படி) ஏரியாகக் குழி வெட்டுதல் செய்யக்கூடுமே யன்றி |

| | | | |
|---|---|---|---|
| மற்று | பின்னும் | யார் | யாவருளர்? (மழை பெய்யவேண்டுவது பகவத் ஸங்கல்பத்தாலன்றோ?.) |
| மாரி | மழையை | | |
| பெய்கிற்பார் | பெய்யும்படி செய்விக்க வல்லவர்கள் | | |

* * *—கீழ்ப்பாட்டிற் கூறியபடியே எம்பெருமான் எப்படி யாவது நம்மைப் பெறவேணுமென்றே பற்பல அவதாரங்களெடுத்துப் படாதன படுகிறபடியால் நம்மைத் திருத்திப் பணிகொள்ளுதல் அப்பெருமானுக்கே கடமையாயிருக்கும்; நாம் யாதொரு ஸாதநாநுஷ்டாநமும் செய்யவேண்டா; ஆனாலும் நம்மை மண்ணும் மரமும் கல்லும் கரியும்போலே அசேதநப்பொருளாகப் படைக்காமல் சேதநப் பொருளாகப் படைத்துள்ளதனால் நாம் அறிவுபெற்றுள்ள வாசிக்காகச் செய்யத்தக்கதொன்றுண்டு, அதாவது அவனைப் பெறவேணுமென்னும் ருசிமாத்திரம் நமக்கு இருக்கத்தகும். மற்றபடி பேற்றுக்கு உபாயமாக நாம் முயற்சி செய்யவேண்டுவதொன்றுமில்லை என்கிற ஸகல சாஸ்த்ரஸாரப் பொருளை வெளியிடுவதாம் இப்பாசுரம்.

இதில் முன்னடிகளுக்குப் பலவகையாகப் பொருள்கொள்ள இடமுண்டு. நம்மனத்தில் எம்பெருமான் வந்து தங்கும்படி விலக்காமையுடன் இருக்கவேண்டுவதே நாம் செய்யக்கூடிய செயல்; அங்கே வந்து இடைவிடாது தங்கும்படி அப்பெருமானைச் செய்விப்பதென்பதோ நமக்கு இயலாது; ஆதலால், நமக்கு ஸ்வரூப ஜ்ஞாநம் முற்றமுதிர உண்டாகாவிடினும், விலக்காமை என்கிற இவ்வளவுமாத்திரம் நம்மிடத்து உண்டானால் எம்பெருமான் அதனையே பற்றுக்கோடாகக்கொண்டு நம்முடைய விரோதிகளைப் போக்கித் தன்னைத் தந்தருள்வன்—என்பதாகக் கொள்ளலாம்.

அன்றியே; அவ்வெம்பெருமான் சேஷி, தான் சேஷன் என்றறிகின்ற விவேகமில்லாதவனாகவே இச்சேதநன் இருந்தாலும், இவனுக்கு அப்பெருமானிடத்து ருசியில்லாமலிருந்தாலும், "𑌯𑌦𑍍𑌯𑌦𑌾𑌚𑌰𑌤𑌿 𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑌦𑍇𑌵𑍇𑌤𑌰𑍋 𑌜𑌨𑌃" [பெரியோன் எந்த எந்தச் செயலைச்செய்கிறானோ அந்தச்செயலையே மற்றுள்ள ஸாமாந்ய ஜநங்களும் செய்கிறார்கள்] என்றதற்கேற்ப, பெரியோர்

செய்யும் முறைமையைக்கண்டாகிலும் ஸர்வேச்வரனை ஹ்ருதயத்திலேகொண்டு இச்சேதநன் தியானிக்கக்கடவன்; இவ்வளவே கொண்டு எம்பெருமான் விரோதிகளைத் தொலைத்து ஸ்வப்ராப்தியையும் செய்து தருவன்—என்பதாகவுங் கொள்வர். மற்றும் பலவகைகளுங் காண்க.

பின்னடிகளில் அருளிச்செய்யப்பட்டுள்ள த்ருஷ்டாந்த வாக்கியார்த்தத்தின் ஸ்வாரஸ்யத்தை உணர்ந்துகொண்டு அதற்கிணங்க முன்னடிகளின் ஆழ்ந்த கருத்தை அறிந்துகொள்க. காடெழுந்து மேடாயிருந்த நிலத்தைச் சீர்திருத்தி ஏரியாக வெட்டுகின்றோமாயின் இக்காரியம் மழைபெய்வதற்கு ஸாதநமாகமாட்டாது; நாம் ஏரி வெட்டுகிறோமென்பது கொண்டே பர்ஜந்யதேவன் மழைபெய்து விடுவனோ? மழை பெய்வதென்பது பகவத் ஸங்கல்பாதீநமாகையால், அப்படிப்பட்ட மழைக்கு ஏரி வெட்டுதல் உபாயமாகமாட்டாது. இஃது உலகறிந்த விஷயம். ஏரி வெட்டுதல் மழைபெய்வதற்கு உபாயமன்றாகில் வீணாக ஏரி வெட்டுவானேன்? என்று நினைக்கலாகாது; எப்போதாவது பகவத் ஸங்கல்பத்தாலே மழை பெய்யுமாகில் அந்த மழை நீரை வனத்திடர் தாங்கிக்கொள்ளமாட்டாது; நாம் அந்த வனத்திடரைச் சீர்திருத்தி ஏரியாக அமைத்துவைப்போமாயின், மழை பெய்யும்போது வரும் தண்ணீர் அதிலே தங்குவதற்குப் பாங்காகும். ஆகவே, மழைநீர் பழுதுபடாமைக்காக ஏரி வெட்டுதலேயன்றி மழையைப்பெய்வித்தற்காகவன்று என்பதுவிளங்கும். இவ்வாறே, நாம் சேதநராகப் பிறந்துள்ள வாசிக்காக நம்முடைய நிலைமையைச் சீர்ப்படுத்திக்கொள்வதானது பகவத்ப்ராப்திக்கு ஸாதநமாக மாட்டாது; ஒருகால் பகவான் நம்மைத் திருவுள்ளம்பற்ற வருவானாயின் அவனுடைய விஷயீகாரம் நம்மிடத்தில் நன்கு தங்குவதற்குப்பாங்காகும் நம்மை நாம் சீர்திருத்தி வைத்துக்கொள்ளுதல்.

திருத்தமுறாத சேதநரை வனத்திடரின் ஸ்தானத்திலே கொள்க; அத்வேஷாதிகளாலே தம்நெஞ்சைத் திருத்திக்கொள்வதானது ஏரியாம் வண்ண மியற்றுகையாம்; பகவத்ப்ராப்தி கைபுகுதல் மாரிபெய்கையாம். ஆகவே நாம் செய்யும் ஸுக்ருதங்களெல்லாம்—நிர்ஹேதுகமாகவுண்டாகிற பகவத் விஷயீகாரத்தைத்

தாங்கிக்கொள்வதற்குமாத்திரம் உறுப்பாகுமேயொழிய, பகவத் விஷயீகாரத்தை நிர்ப்பந்தப்படுத்தி யுண்டாக்குவதற்கு உறுப்பாக மாட்டாதென்று சேதநக்ருத்யங்களின் அநுபாயத்வம் ஸ்தாபிக்கப் பட்டதாயிற்று இப்பாட்டில்.

சேதநக்ருத்யமொன்றும் உபாயமன்றாகில், சேதநன் மனம் போனபடியேசெய்து திரியலாமன்றோ என்று சிலர்சங்கிப்பதற்கும் இடமில்லாமை காட்டப்பட்டது இதில். சாஸ்த்ரங்களுரைத்த நல் வழியில் நாம் இருந்துகொண்டு கர்த்தவ்யங்களை உபாயத்வ புத்தி யின்றியே அநுஷ்டிக்கவேண்டியது ஆவச்யகமே; ஆனால் நாம் நல்ல காரியங்களைச் செய்திருக்கிறோமாகையால் நமக்கு பகவத் விஷயீகாரம் விளைந்தே தீருமென்று அதற்கு இதை ஸாதநமாக ப்ரதிபத்திபண்ணியிருக்க ப்ராப்தியில்லை. 1. "எந்நன்றி செய் தேனா என்னெஞ்சில் திகழ்வதுவே" என்றே மஹான்கள் அநு ஸந்திப்பர்களாதலால் நிர்ஹேதுக க்ருபையினாலேயே எம்பெரு மான் நம்மை விஷயீகரிக்கிறானென்றும், நாம் செய்து போரும் நன்மைகள் ஒன்றுக்கு உபாயமாகையின்றியே ஸ்வயம் ப்ரயோஜந ரூபங்களென்றும் அறுதியிட்டிருக்கவேணும்.

ப்ரபத்தியை உபாயமாகச் சில ஸம்ப்ரதாயஸ்தர்கள் கொள் வது பிசகோ? எனின்; அன்று. இவ்விடத்திலே ஸாரமாகச் சொல்லுவோம் கேண்மின்;—கடலிலே வலைவீசி மீன் பிடித்து ஜீவிப்பானொரு செம்படவன் ஒருநாள் மீன்களிடையே விலை யுயர்ந்த ரத்னமொன்று கிடைக்கப்பெற்றான்; அதனுடைய மதிப்பை அவன் அறியமாட்டாதவனாதலால் 2. மாமதியம் தீண்டக் கும் கொடிமாளிகை சூழ்தெருவில் செழுமுத்து வெண்ணெற் கெனச் சென்று முன்னில் வளைக்கை நுளைப்பாவையர் மாறுமா போலே, அந்த ரத்னத்தைக் கொண்டுபோய் ஒரு வியாபாரியிடத் திலே மிகக்குறைந்த விலை கூறி விற்றுவிட்டான். அந்த வியாபாரி, தான் ரத்னத்தின் மதிப்பு நன்குணர்ந்தவனாகையாலும் வியாபா ரமே ஜீவிகையாகவுடையனாகையாலும் அவன் அதைக்கொண்டு போய் ஒரு மஹாராஜனிடத்திலே கிரமமாக அதற்குள்ள விலை

1. திருவாய்மொழி 10—6—8.

2. பெரிய திருமொழி 3—8—7. வேடச்சிகள் முத்துக்களைக்கொணர்ந்து நாழி நெல்லுக்கு விற்கிறார்களாம் திருநாங்கூரில்.

கூறி உயர்ந்த விலைக்கு விற்றுவிட்டான். பிறகு அந்த மஹாராஜன் அந்த ரத்நத்தைத் தான் விற்பனை செய்ய நினையாதே அதனைப் பெரியதொரு ஹாரத்திலே இணைத்து ஸ்வயம் போக்யமாக அமைத்துக்கொண்டான். ஆக இச்செய்தியில் ஒரு ரத்னத் துக்கே மூன்று தன்மைகள் உண்டாயின; அற்ப விலைக்கு மாறுதல் உள்ள விலைக்கு மாறுதல், விலைக்கு ஆட்படாமல் ஸ்வயம் போக்ய மாகக் கொள்ளப்படுதல் என மூன்று வகைகள் ஒன்றுக்கே அதி காரிபேதத்தால் கூடினாற்போலே, நாம் செய்யும் ஸுக்ருதங்களுக் கும் இங்ஙனே மூன்று தன்மைகள் கூடும்; ரத்னத்தின் மதிப்பை அறியமாட்டாது அதனை அற்பவிலைக்குவிற்ற செம்படவன்போல ப்ரபத்தியின் சீர்மையை அறியமாட்டாத சிற்றறிவாளர் [அதமா திகாரிகள்] ப்ரபத்தியைக்கொண்டு ஐச்வர்யகைவல்யாதி க்ஷுத்ர பலன்களைக் கொள்வர்; ரத்னத்தைக் குறைந்த விலைக்குக்கொடாதே தகுந்த விலைக்குக் கொடுக்கும் வியாபாரியைப்போன்ற மத்யம அதிகாரிகள் ப்ரபத்தியை மோக்ஷஸாதநமாக அபிமானித்து க்ஷுத்ர பலன்களைக் கொள்ளாதே மோக்ஷபலனைக் கொள்வர். ரத்னத்தை ஒன்றுக்கும் ஸாதநமாக்காதே ஸ்வயம் போக்யமாகக் கொள்ளும் மஹாராஜனைப் போன்ற உத்தமாதிகாரிகள் ப்ரபத் தியை ஒன்றுக்கும் ஸாதநமாகக் கோலாதே ஸ்வயம் புருஷார்த்த மாகக்கொண்டு வர்த்திப்பர்கள். மஹாராஜனுடைய நிலைமையை விரும்பாதே வியாபாரியின் நிலைமையை விரும்பி ப்ரபத்தியை ஸாதநமாகக் கொள்வார் அங்ஙனமே கொள்க.

“ஶ்லோ॥ ரத்நம் யீவர ஹஸ்தஸ்ய ஸ்வல்பம் மூல்யம் ஸமாஸாத்யேகஸ தந்த்ரம் வணிஜோ வஸும்வத்யை ப்ராப்நோதி மூல்யம் மஹத்। ஸ்வேச்சாதஸ்ஸதி ஸாவபௌமவஸதாம், ப்ராப்ய [ப்ரஹ்ம தீர்த்துக்கொள்ளும் நித்யம் ஸுக்ஷணதாஸ்வைவெதி, தஸ்ய”

என்று ஸம்ப்ரதாய வித்தாஞ்ஜந ரால் க்ஷயமடைபவனைக் கலை தோட்டம் சமைத்து மாபு த சந்திரனே, சிவபிரான் முடியின் பழங்களை அரைகுறை விலைக் பாதுகாத்ததனால் ஒற்றைப் பிறை முண்டு; விற்காதே ஸ்வமே னப்பட்டான். .. ... (கள)

முண்டு. ஒரு மாம்பழந்தானே ஒருத்தனுக்கு உபாயமாயும் ஒருத்தனுக்கு உபேயமாயும் ஆகாநின்றது. உபாயமாகக் கொள்ளுமவனுடைய தாழ்வும் உபேயமாகக் கொள்ளுமவனுடைய உயர்வும் உலகறிந்ததே. அதுபோலே, நம்முடைய நற்கிரிசைகட்கு உபாயத்தன்மையும் உபேயத் தன்மையும் உண்டாயிருக்கச் செய்தே உபேயத் தன்மையையே பாராட்டி உத்தமாதிகாரி கோஷ்டியில் புகாதே உபாயத் தன்மையைப் பாராட்டி அதமகோஷ்டியில் புக நினைப்பாரை நாமேன் விலக்குவோம்?

இப்பாட்டில், முன்னடிகட்கும் பின்னடிகட்கும் ஸங்கதி எங்ஙனேயென்னில்; சேதநன் ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை நன்கு தெரிந்துகொண்டு, தானே நல்ல முயற்சிகளைச் செய்து அவை ஸாதநமாக எம்பெருமானைப் பெறவேண்டுமென்று சொல்ல வேண்டியிருக்க அப்படி சொல்லாமல், தனக்கு ஸ்வரூபவுணர்ச்சி இல்லாமற்போனாலும் எம்பெருமான் தானாகவேவந்து விஷயீகரிக்குமளவில் அதனை விலக்காதவளவே அமையுமென்று முன்னடிகளிற் சொல்லப்பட்டதே, இது பொருந்துமோ? ஸாதநாநுஷ்டாநமில்லாமல் ஸாத்யம் கைபுகுமோ? என்று சங்கை உண்டாக, த்ருஷ்டாந்த முகத்தாலே அந்த சங்கைக்குப் பரிஹாரங் கூறுவன பின்னடிகள் என்க.

இப்பாசுரத்தின் அழகிய ஆழ்பொருள்களை இன்னமும் விரித்துரைக்க வேண்டியிருந்தும் விரிவுக்கு அஞ்சி நிற்கின்றோம்.

மற்றாரியலாவார் வானவர்கோன் மாமலரோன் *
சுற்றும் வணங்குந் தொழிலானை *—ஒற்றைப்
பிறையிருந்த செஞ்சடையான் பின்சென்று * மாலைக்
குறையிரந்து தான்முடித்தான் கொண்டு. (கஎ)

போலே, அந்த ...குத்
திலே மிகக்குறைந்த வி...னை
தான் ரத்னத்தின் மதிப்பும்
ரமே ஜீவிகையாகவுடையனைக்
போய் ஒரு மஹாராஜனிடத்திலே

சுற்றும் வணங்கும் தொழிலானை — பக்கங்களிற் சூழ்ந்துகொண்டு ஆச்ரயிப்பதற்கேற்ற சேஷ்டிதங்களையுடையனை

1. திருவாய்மொழி 10—6—8.
2. பெரிய திருமொழி 3—8—7. வேடானை எம்பெருமானை நாழி நெல்லுக்கு விற்கிறார்களாம் திருநாங்கூர்

| | | | |
|---|---|---|---|
| ஒற்றை பிறை இருந்த செம் சடையான் | ஒருகலாமாத்திரமான சந்திரனைத் தரித்த சிவந்த சடையையுடைய ருத்ரன் | தான் முடித்து கொண்டான் | தான் நிறைவேற்றிக் கொண்டான்; |
| | | | (ஆனபின்பு) |
| பின் சென்று | அநுவர்த்தித்து | இயல் ஆவார் | ஆச்ரயிக்கலாம்படி தகுதியுடையவர் |
| இரந்து | (பல்லைக்காட்டி) யாசித்து | | |
| குறை | தனது குறையை | மற்று ஆர் | அந்த ஸர்வேச்வரனைத்தவிர வேறுயாவர்?. |

* * *—கீழ்ப்பாட்டிற் கூறியபடி உபாயோபேயங்களிரண்டும் தானேயாயிருக்கிற எம்பெருமானே ஆச்ரயணீயன்; அவனைத் தவிர்த்து மற்றையோரை ஆச்ரயித்தால் நம்மை அடிமைகொள்ள வல்ல சக்தி அவர்களுக்கில்லாமையாலும், ஆச்ரயணீயரென்று ஸாமாந்யர் பிரமிக்கக்கூடிய சில்லரைத் தெய்வங்களும் ஸ்ரீமந் நாராயணனை அடிபணிந்தே தம்தம் குறைகளைத் தீர்த்துக்கொள்ளக் காண்கையாலும் அப்பரமபுருஷனே ஆச்ரயிக்கவுரியன் என்றாராயிற்று.

முப்பத்து முக்கோடி தேவர்கட்குத் தலைவனான இந்திரனும், திருமாலினது திருநாபிக் கமலத்தை வாழிடமாகவுடைய பிரமனும் நேராகநின்று கிட்டமாட்டாமையாலே சுற்றுப் பக்கங்களில் நின்றாகிலும் தம்முடைய அபிமாநம் நீங்கி எம்பெருமானை ஆச்ரயிக்கும்படியைக் கூறுவன முன்னடிகள்.

பக்கங்களிலே நிற்கவாவது தைரியமுண்டாயிற்று இந்திரற்கும் பிரமற்கும்; அவ்வளவும் தைரியமில்லாத சிவபிரான் பின்புறத்திலேசென்று நின்றுகொண்டு யாசித்துத் தன் குறையை [ப்ரஹ்மஹத்யாசாப நிவ்ருத்தி முதலியவற்றை]த் தீர்த்துக்கொள்ளும்படியைக் கூறுவன பின்னடிகள்.

தக்ஷமுனிவனது சாபத்தால் க்ஷயமடைபவனாய்க் கலை குறைந்துவந்து சரணமடைந்த சந்திரனை, சிவபிரான் முடியின் மீதுகொண்டு வரமளித்துப் பாதுகாத்ததனால் ஒற்றைப் பிறையணிந்த செஞ்சடையான் எனப்பட்டான். .. ... (கஎ)

கொண்ட துலகம் குறளுருவாய்க் கோளரியாய் *
ஒண்டிறலோன் மார்வத் துகிர்வைத்தது *—உண்டதுவும்
தான்கடந்த வேழுலகே தாமரைக்கண் மாலொருநாள் *
வான்கடந்தான் செய்த வழக்கு. (கஅ)

| | |
|---|---|
| குறள் உரு ஆய் | வாமநரூபியாய் (மாவலியிடஞ் சென்றுயாசித்து) |
| உலகம் | பூமி முதலிய லோகங்களை |
| கொண்டது | ஆக்ரமித்துக் கொண்டதும், |
| கோள் அரி ஆய் | மிடுக்கையுடைய நரசிங்கமாகி |
| ஒண் திறலோன் மார்வத்து | மஹா பலசாலியான இரணியனுடைய மார்பிலே |
| உகிர் வைத்தது | தனது நகங்களை யழுத்திக் கீண் டொழித்ததும், |
| ஒருநாள் | ஒருகாலத்திலே |
| தான் கடந்த | தான் அளந்து கொண்ட |
| ஏழ் உலகே | எல்லாவுலகங்களையும் |
| உண்டதுவும் | (பிரளயங் கொள்ளாதபடி) திருவயிற்றிலே வைத்துக்கொண் டதும் |
| | (ஆகிய இச்செயல்கள்) |
| வான் கடந்தான் | ஆகாசத்தை யளவிட்டாலும் அளவிடவொண் ணுதபடியுள்ள பெருமையை யுடையனும் |
| தாமரை கண் | செந்தாமரைக் கண்ணனுமாகிய |
| மால் | எம்பெருமான் |
| செய்த | செய்தருளின |
| வழக்கு | நியாயமான செயல்களாம். |

* * *—ஸ்ரீமந் நாராயணனே ஸர்வஸமாச்ரயணீயனென்று கீழ்ப்பாட்டிற் கூறியதை நிலைநாட்டுதற்காக, அப்பெருமான் தன்னை அழியமாறியும் ஜகத்ரக்ஷணம் பண்ணுகிறபடியைப் பாருங்க ளென்கிறாரிதில். உலகத்தில் குள்ளனைக் கண்டால் கண்டவர்களும் ஏசிப் பேசுவது வழக்கம்; அப்படிப்பட்ட குள்ள வடிவைக் கொண்டான் இந்திரன் குறையைத் தீர்ப்பதற்காக. அன்றியும், உடல் ஒருபடியும் முகம் ஒரு படியுமாக வடிவெடுப்பதும் பரிஹா ஸாஸ்பதம்; அப்படிப்பட்ட வடிவையும் கொண்டான் மூவுலகங்க ளின் துயர் தொலைக்க. அன்றியும், தன் காலிலேபட்ட வஸ்து அசுத்தமென்று அதை எவனும் உட்கொள்ளமாட்டான்; எம் பெருமானேவென்னில், த்ரிவிக்ரமாவதாரத்தில் தன்னடிக் கீழ்ப்

பட்ட உலகங்களையே (மற்றொருகால் பிரளயங் கொள்ளாதபடி) உட்கொண்டான். ஆகவே இவ்வளவுஞ் செய்தது தன்னுடைமையைத் தான் நோக்கிக் கொள்வதற்காகவேயாதலால் இவனே ஸர்வஸ்வாமியென்பது திண்ணமன்றோ.

"வான்கடந்தான் செய்தவழக்கு" என்ற ஈற்றடிக்கு இருவகையாகக் கருத்தாகலாம்; தன்னுடைய ரக்ஷகத்வத்தை நிலைநாட்டிக்கொள்ளவேண்டிச் செய்த காரியங்களாகையாலே இவையெல்லாம் நியாயமான காரியங்கள் என்பதாக வொருகருத்து; இனி, வழக்கு என்றது எதிர்மறை இலக்கணையால் வழக்கல்ல என்றபடியாய், சிறிய வடிவைக் காட்டிப் பெரிய வடிவாலே உலகங்களை அளந்துகொள்வதும், உலகத்தில் எங்கும் என்றுங் கண்டறியாதவொரு விஜாதீயமான வடிவத்தையெடுத்து இரணியனைப் பிளந்தொழிப்பதும், தன் காலில்பட்டு அசுத்தமான வுலகத்தைத் தானே உட்கொள்ளுதலும் நியாயமல்லவே! என்றவாறும். ப்ரேமத்தின் கனத்தாலே பக்தர்கள் இப்படி பரிஹாஸமுறையிலே பேசுவதும் பொருந்தும்.

வான்கடந்தான் = வானத்தை அளவிடினும் அளவிடவொண்ணாத பெருமையை யுடையவனென்றும் ஸ்வர்க்கத்தை யளந்தவனென்றும் பொருளாகலாம். ... ... (கஅ)

வழக்கன்று கண்டாய் வலிசகடம் செற்றாய் *
வழக்கென்று நீமதிக்க வேண்டா *—குழக்கன்று
தீவிளவின் காய்க்கெறிந்த தீமை திருமாலே *
பார்விளங்கச் செய்தாய் பழி (கக)

திருமாலே!–; நீ—;
(கிருஷ்ணசிசுவாயிருந்தபோது)
வலி சகடம் — வலிதான சகடத்தை
செற்றாய் — { உதைத்து முறித்துத் தள்ளினாய்;
வழக்கு அன்று கண்டாய் — { இது உனக்குத் தகுதியன்று காண்;

வழக்கு என்று நீ மதிக்க வேண்டா — { இது நமக்குத் தகுந்ததே யென்று நீ நினைக்கலாகாது;
(இப்படிப்பட்ட ஸாஹஸச் செயல் செய்ததோடு நில்லாமல்)
குழ கன்று — { (அஸுரனான) இளங்கன்றை

| | | | |
|---|---|---|---|
| தீ விளவின் காய்க்கு எறிந்த | தீய விளங்காயை உருக்கும் பொருட்டு வீசிப்போட்ட | பார் விளங்க | பூமியிலே பிரகாசிக்கும்படி |
| தீமை | இந்தத் தீம்பான செயல் | பழி செய்தாய் | தவறு செய்தாய். |

* * *—நந்தகோபர் திருமாளிகையிலே ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே ஒரு தொட்டிலில் தான் கண்வளரும்போது கம்ஸனாலேவப்பட்ட அஸுரனொருவன் அந்த வண்டியில் ஆவேசித்துத் தன்மேல்விழுந்து தன்னைக்கொல்ல முயன்றபோது, அதனையறிந்த தான் பாலுக்கு அழுகிற பாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி யுதைத்து அச்சகடத்தை யொழித்தருளினது தன்னைத்தான் காப்பாற்றிக் கொடுத்து உலகத்தை வாழ்விக்கச் செய்த செயலாகிலும், ஸுகுமாரமான கைபடைத்த பிராட்டிமார்களும் தொட்டுப் பிடிக்கக் கூசும்படி அத்தனை ஸுகுமாரமாகவுள்ள திருவடியைக்கொண்டு ஒரு முரட்டு வண்டியை உதைத்தவிது மிகவும் தகுதியற்ற காரியமென்று தோற்றுவது மங்களாசாஸநபரர்களுக்கு ஸஹஜமாதலால் 'வலிசகடம் செற்றது வழக்கன்று' என்கிறார் முன்னடிகளில்.

கம்ஸனாலேவப்பட்ட அஸுரர்களில் ஒருவன் விளாமரத்தின் வடிவமாய், கண்ணன் தன்கீழ்வரும்போது மேல்விழுந்து கொல்லுவதாக எண்ணிவந்துநிற்க அதனையறிந்த கண்ணபிரான், அவ்வாறே தன்னை முட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு வந்த மற்றோரஸுரனைப் பின்னிரண்டு கால்களையும் பிடித்து எடுத்துச்சுழற்றி அவ்விளாமரத்தின்மேல் எறிய, கபித்தாஸுரனும் வத்ஸாஸுரனுமான இருவரும் சிதைந்து தமது அசுரவடிவத்துடனே விழுந்து இறந்தனர் என்ற வரலாறு பின்னடிகளில் அறியத்தக்கது. கடினப் பிரகிருதியான அஸுரனை அதிஸுகுமாரமான திருக்கையாலே பிடித்துச் சுழற்றியெறிந்தபோது அத்திருக்கைகள் எவ்வளவு நொந்திருக்குமோ! என்று கொண்ட வயிற்றெரிச்சலால் 'வழக்கென்று நீ மதிக்க வேண்டா' என்றும் 'பார்விளங்கத் தீமை செய்தாய்' என்றும் 'பழி செய்தாய்' என்றும் பேசினர். (கக)

பழிபாவம் கையகற்றிப் பல்காலும் நின்னை *
வழிவாழ்வார் வாழ்வராம் மாதோ !*—வழுவின்றி
நாரணன்றன் நாமங்கள் நன்குணர்ந்து நன்கேத்தும் *
காரணங்கள் தாமுடையார் தாம். (உ௰)

| | | | |
|---|---|---|---|
| பழி | அபகீர்த்தியையும் | நன்கு உணர்ந்து | நன்றாக அறிந்து |
| பாவம் | பாவங்களையும் | வழு இன்றி | இடைவீடின்றி |
| கை அகற்றி | நீக்கி | நன்கு ஏத்தும் காரணங்கள் உடையார் தாம் | அழகாகத்துதிப்பதற்கேற்ற உபகரணங்களையுடையவர்களும் |
| பல்காலும் | எப்போதும் | (ஆகிய இவ்விருவகை யதிகாரிகளும்) | |
| நின்னை | உன்னை | | |
| வழி வாழ்வார் | வழிப்பட்டு ஆச்ரயிக்குமவர்களும் | வாழ்வராம் | மகிழ்ந்து வாழப் பெறுவர்கள் |
| நாரணன் தன் | நாராயணனை யுன்னுடைய | | |
| நாமங்கள் | திருநாமங்களை | (மாதோ—அசை.) | |

* * *—இப்பாட்டுக்கு இரண்டு வகையான நிர்வாஹங்களுண்டு: உபாயாந்தர நிஷ்டர்களெனப்படுகிற உபாஸகர்களை முன்னடிகளிலும், அநந்யோபாயரான ப்ரபந்நர்களைப் பின்னடிகளிலுங் குறிப்பதாகக்கொண்டு, இவ்விருவகையதிகாரிகளும் எம்பெருமானையே உபேயமாகப் பெறுபவராதலால் வாழ்ச்சி பெற்றவராவர் என்பதாக ஒரு நிர்வாஹம்.

அன்றியே; வழுவின்றி நாரணன்றன் நாமங்கள் நன்குணர்ந்து நன்கேத்துங் காரணங்கள் தாமுடையராகிப் பழிபாவங் கையகற்றிப் பல்காலும் நின்னை வழிவாழ்வார் வாழ்வராம்—என்று ஒரே வாக்கியார்த்தமாக அந்வயித்து ஒருவகை யதிகாரிகளைப்பற்றியே இப்பாசுரம் கூறுவதாக நிர்வஹிப்பதும் ஒரு புடையுண்டு.

தாங்கள் அறியாதிருக்கப் பிறர் ஏறிடும் அபகீர்த்தி பழியெனப்படும்; தாங்களே புத்தியறிந்துசெய்யும் பரஹிம்ஸை முதலியவை பாவமெனப்படும்: இவ்விரண்டுக்கும் தங்களிடத்தில் அவகாசம் கொடாமல் எப்போதும் பகவந்நாமங்களையே அநுஸந்தித்து ஏத்

திக்கொண்டிருக்கும்படியான ருசி விச்வாஸங்களை யுடையவர்கள் வாழ்வர்—என்றதாயிற்று.

மாதோ—அசை, இடைச்சொல்லுமாம். ஈற்றடியின் முதற் பதம் மோனையின்பத்திற்கிணங்க 'தாரணங்கள்' என்றிருக்கலாமென்றுகொண்ட பெரியவாச்சான்பிள்ளை அப்படியும் ஒரு பாடமருளிச்செய்கிறார்; "தாரணங்கள் தாமுடையாரென்றபோது த்ருதி (𑌧𑍃𑌤𑌿) யுடையாரென்றபடி." என்பது வியாக்கியானம். '𑌧𑌾𑌰𑌣𑌂' என்ற வடசொல் திரிந்ததென்க. மனவுறுதியைச் சொன்னபடி. இனி '𑌤𑌾𑌰𑌣𑌂' என்னும் வடசொல்லே வந்ததாகக் கொண்டால் உஜ்ஜீவநோபாயம் என்பது பொருளாம். ... ... (உ0)

தாமுளரே தம்முள்ள முள்ளுளதே * தாமரையின்
பூவுளதே யேத்தும் பொழுதுண்டே *—வாமன்
திருமருவு தாள்மருவு சென்னியரே * செவ்வே
அருநரகம் சேர்வ தரிது. (உக)

தாம் உளரே — (எம்பெருமானைப் பணிவதற்குப் பாங்கான கரணகளேபரங்களை யுடைய) சேதநர் தாங்கள் ஏற்கனவே இருக்கின்றார்களே;

தம் உள்ளம் உள் உளதே — (எம்பெருமானைச் சிந்திப்பதற்கான) தங்களுடைய மனமும் (வெளியே போய்த் தேட வேண்டாதபடி) தமக்குள்ளே யிருக்கின்றதே;

தாமரையின் பூ உளதே — (எம்பெருமான் திருவடிகளில் சாத்தத்தக்க) தாமரைப்பூ (குளங்கள் தோறும்) நிறைந்து கிடக்கின்றதே;

ஏத்தும் பொழுது உண்டே — அவனை வாய்விட்டுப் புகழ்வதற்கு ஏற்றகாலம் ஏராளமாக வுள்ளதே.

| | |
|---|---|
| வாமன் | (தன் உடைமையைப்பெறுகைக்குத் தான் யாசகனாகச்சென்ற சீலமுள்ள) வாமநமூர்த்தியான ஸர்வேச்வரனுடைய |
| திரு மருவு தாள் | அழகிய திருவடிகளை |
| மருவு | பணிவதற்குப் பொருத்தமான |
| சென்னியரே | தலையையுடையவர்களாக இருக்கின்றார்களே; |
| (இப்படி ஒன்றாலும் குறையின்றியேயிருக்கவும் இவ்வுலகத்தவர்கள்) | |
| செவ்வே | நேராக |
| அரு நரகம் | கொடிய நரகத்தை |
| சேர்வது | அடைவதானது |
| அரிது | (ஆச்சரியப்படத்தக்க) அருமையான செயலாயிருக்கின்றது. |

* * *—முதல் திருவந்தாதியில் "நாவாயிலுண்டே நமோ நாரணாயவென்று, ஓவாதுரைக்கு முரையுண்டே, மூவாத மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே, என்னொருவர் தீக்கதிக்கண் செல்லுந்திறம்" (95) என்ற பாசுரத்தின் கருத்தைப் பெரும்பாலும் தழுவியதாமிப்பாசுரம். எம்பெருமானை ஏத்துவதற்கு ஏற்ற ஸாமக்ரிகள் குறைவற்றிருக்கச் செய்தேயும் இவ்வுலகத்தவர் விலக்கடி தேடிக்கொண்டு நரகத்திற்சென்று சேருகின்றார்களே! இஃது என்னோ! என்று வயிறெரிகிறார். "ஜிஹ்வே! கீர்த்தய கேசவம் முராரிம்" என்ற முகுந்தமாலை ச்லோகத்திற் சொல்லுகிறபடியே எம்பெருமானைப் பணிவதற்கு ஏற்ற கரசரணாதி அவயவங்களோடு கூடியிருக்கின்றார்களே; இனி புதிதாகத் தங்களைத் தாம் ஸ்ருஷ்டி பண்ணிக்கொள்ள வேண்டியதில்லையே; எல்லாவற்றுக்கும் மூல காரணமான நெஞ்சுதானும் வெளியிற்சென்று தேடவேண்டாதபடி உள்ளே அமைந்துகிடக்கின்றதே; அர்ச்சிப்பதற்கு உரிய தாமரை மலர்கள் தடாகங்கள்தோறும் மலிந்துகிடக்கின்றனவே; 'போது போகவில்லையே, போதுபோகவில்லையே' என்று பாழும் ஸம்ஸாரிகள் தவிக்கவேண்டும்படி பொழுதும் ஏராளமாகவுண்டே பகவானைத் துதிப்பதற்கு; தலைபடைத்த ப்ரயோஜனம்பெற அவனை வணங்கலாமே; இப்படி ஒன்றுமொன்று குறையின்றியிருக்க, இவர்கள் நித்ய ஸம்ஸாரிகளாகவேயிருக்க வழிதேடுவது என்ன

கேடுகாலமோ வென்றவாறு. "𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍇𑌤𑌿 𑌶𑌬𑍍𑌦𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌵𑌾𑌗𑌸𑍍𑌤𑌿 𑌵𑌶𑌵𑌰𑍍𑌤𑌿𑌨𑍀 𑌤𑌥𑌾𑌪𑌿 𑌨𑌰𑌕𑍇 𑌘𑍋𑌰𑍇 𑌪𑌤𑌨𑍍𑌤𑍀𑌤𑌿 𑌕𑌿𑌮𑌦𑍍𑌭𑍁𑌤𑌮𑍍 = நாராயணேதி சப்தோஸ்தி வாகஸ்தி வசவர்த்திநீ—ததாபி நரகே கோரே பதந்தீதி கிமத்புதம்" என்ற புராண ச்லோகமும் இப்பாட்டுக்கு ஒருபுடை சார்பாக அநுஸந்திக்கத்தகும். .... (உக)

அரிய தெளிதாகு மாற்றலால் மாற்றி *
பெருக முயல்வாரைப் பெற்றால் *—கரியதோர்
வெண்கோட்டு மால்யானை வென்று முடித்தன்றே *
தண்கோட்டு மாமலரால் தாழ்ந்து. (உஉ)

ஆற்றலால் — தன்னுடைய சக்தியினால்

மாற்றி — சேதநன் செய்யும் முயற்சி ஒன்றும் வேண்டா வென்று விலக்கி

(சேதநனுக்கு வேண்டிய ஸகல காரியங்களையும் தானே செய்வதாக ஏன்று கொண்டு)

பெருக முயல்வாரை — மிகவும் உத்ஸாஹங் கொண்டிருக்கின்ற மஹா புருஷனை எம்பெருமானை

பெற்றால் — கிடைக்கப்பெற்றால்

அரியது — செய்வதற்கு அருமையான செயலும்

எளிது ஆகும் — லகுவாய்விடும்; (இப்படியாக எங்கே கண்டோமென்னில்)

வெண் கோடு — வெண்ணிறமான தந்தங்களையுடைய

மால் — பெரிய

கரியது ஓர் யானை — கருநிறமுள்ள கஜேந்திராழ்வான்

தண் — குளிர்ந்த

கோடு — பொய்கைக் கரையிலே

மா — சிறந்த

மலரால் — தாமரைப்பூக்களைக் கொண்டு

(மடுவின்கரையிலெழுந்தருளின எம்பெருமான் திருவடிகளிலே)

தாழ்ந்து — வணங்கி யடிமை செய்ததனால்

வென்று முடித்தன்றே — விரோதியை ஜயித்துத் தன் அபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொண்டதன்றோ

* * *—எம்பெருமான் ஸர்வசக்தனென்பதை யறிந்துகொண்டு, அப்படி ஸர்வசக்தனை அவனே நம்முடைய பாரங்களைத் தன்

தலைமீது ஏற்றுக்கொண்டு நமக்காகவேண்டிய ஸகலகாரியங்களையுஞ் செய்து தலைக்கட்டத் தானே உத்ஸாஹங்கொண்டிருக்கிறானென்பதையறிந்து அவனுடைய ப்ரவ்ருத்திக்கு விலக்கான நம்முடைய ப்ரவ்ருத்தியை நிறுத்திக்கொள்வோமாயின் நமக்குப் பெறமுடியாத தொன்றுமில்லை, எல்லாம் எளிதேயாம்; இதற்கு உதாஹரணமுங் காண்மின்; முதலையின் வாயிலகப்பட்ட கஜேந்திராழ்வான் தனது சக்தியைக்கொண்டு அவ்வாபத்தைப் போக்கிக்கொள்ள நினைத்துத் தானாக முயற்சிசெய்துகொண்டிருந்தவரையில் துன்பம் நீங்கப் பெற்றதில்லை; 'தன்னாலானமட்டும் ஒரு கை பார்க்கட்டும்' என்று எம்பெருமான் விலகியே நின்றான்; இனி நம்மாலாகாதென்று துணிந்து ஸ்வப்ரவ்ருத்தியைவிட்டு 'ஆதிமூலமே!' என்றழைத்த பின் தன்காரியமாகக்கொண்ட எம்பெருமான் அரைகுலையத் தலை குலைய மடுவின்கரையிலே ஓடிவந்து வினைதீர்த்தொழித்தானன்றோ.

ஆற்றலால் மாற்றிப் பெருக முயல்வாரைப் பெற்றால் அரியது எளிதாகும்=ஆற்றலாவது சக்தி; எம்பெருமானுடைய சக்தியைச் சொன்னபடி. மாற்றி—சேதநனுடைய ப்ரவ்ருத்திகளை விலக்கி என்றபடி. சேதநன் தன்னுடைய முயற்சியை நீக்கிக்கொண்டு எம்பெருமானுடைய சக்தியே ஓங்கும்படி நின்றால் அரியகாரியமும் எளிதாக முடியுமென்பது தேர்ந்த கருத்து.

ஈற்றடியிலுள்ள 'கோடு' என்னுஞ் சொல் நீர்க்கரையென்னும் பொருளது. "தண் தோட்டு மாமலரால்" என்றும் பாடமுண்டாம்; தோடு—அகவிதழ்; மலர்க்கு விசேஷணம். ... ... (உஉ)

தாழ்ந்து வரங்கொண்டு தக்க வகைகளால் *
வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும் *—தாழ்ந்த
விளங்கனிக்குக் கன்றெறிந்து வேற்றுருவாய் * ஞாலம்
அளந்தடிக்கீழ்க் கொண்ட வவன். (உங)

| | |
|---|---|
| தாழ்ந்த | (பழத்தின் கனத்தினால் கிளைகள்) தாழ்ந்துகிடந்த |
| விளா | விளாமரத்தினுடைய |
| கனிக்கு | பழங்களை உதிர்ப்பதற்காக |
| கன்று | கன்றை (எறிகோலாகக்கொண்டு) |
| எறிந்து | வீசியெறிந்தவனும் |

| | |
|---|---|
| வேறு உரு ஆய் | (திருமாலான தன்னுடைய வடிவத்தைவிட்டு) யாசகனான வாமந மூர்த்திவடிவமாய் |
| ஞாலம் | பூமியை |
| அளந்து | அளந்து |
| அடி கீழ் | தனது காற்கீழே |
| கொண்ட | அடங்கும்படி கொண்டவனாயு முள்ள |
| அவன் | அந்த எம்பெருமான், |
| தாழ்ந்து | தனது திருவடிகளிலே வணங்கி |
| வரம் கொண்டு | (எங்கள் இஷ்டத்தை நீயே பூர்த்தி செய்து தரவேணுமென்று சொல்லித் தனது) திருவருளைப் பெற்று |
| தக்க வகைகளால் | (தங்கள் தங்கள் நிலைமைக்கு) ஏற்ற வண்ணமாக |
| வாழ்ந்து | ஐச்வரியத்தையோ கைவல்யத்தையோ பகவத்ப்ராப்தியையோ பெற்று |
| கழிவாரை | மேன்மேலும் ஸுகத்தை மிகுத்துக்கொள்ள வேணுமென்றிருக்கிற அந்தந்த அதிகாரிகளை |
| வாழ்விக்கும் | வாழ்விப்பான். |

* * *—எம்பெருமான், தன்னை ஆச்ரயிப்பவர்களின் இடையூறுகளைத்தொலைத்து அவரவர் மேன்மேலும் விரும்புகின்ற இஷ்டங்களையுந் தந்தருள்வனென்கிறது. பின்னடிகளில், கபித்தாஸுரவத்ஸாஸுரர்களைக் கொன்றொழித்ததையும் மாவலியின் கொழுப்பை யடக்கியதையும் பேசினதன் கருத்தாவது—துராஹங்காரியான மாவலியின் கையில் அகப்பட்டுக்கிடந்த பூமியைத் தன் திருவடிகளிலே கொண்டு வாழ்வித்தவன், வணங்கினவர்களின் விரோதிகள் கபித்தாஸுரனும் வத்ஸாஸுரனும் பட்டபாடுபடும்படி போக்கிக் காப்பனென்பதாம்

வேற்றுருவாய்=திருமகள் கொழுநனாயிருக்கும் உருவத்தை விட்டு யாசக ப்ரஹ்மசாரியின் உருவத்தை யேறிட்டுக்கொண்டு என்றபடி. அன்றி, இரக்கும்போது சிறியகாலைக்காட்டி, அளக்கும்போது பெரியகாலைக்கொண்டு என்றுமாம். .... ... (உ௩)

அவன்கண்டாய் நன்னெஞ்சே யாரருளும் கேடும் *
அவன்கண்டா யைம்புலனாய் நின்றான் *—அவன்கண்டாய்
காற்றுத்தீ நீர்வான் கருவரைமண் * காரோதச்
சீற்றத்தீ யாவானும் சென்று. (உச)

நல் நெஞ்சே — நல்லமனமே!,
ஆர் அருளும் — பரிபூர்ணக்ருபையாலே உண்டாகக் கூடிய மோக்ஷமும்
கேடும் — நிக்ரஹத்தால் வரக்கூடியதான ஸம்ஸாரமும்
(ஆகிய இரண்டுக்கும் நிர்வாஹகன்)
அவன் கண்டாய் — அந்த எம்பெருமானேயாவன்;
ஐம்புலன் — பஞ்சேந்திரிய வடிவமான சரீரத்திற்கு உத்பாதகங்களான
காற்று தீ நீர் வான் மண் ஆய் நின்றான் அவன் கண்டாய் — பஞ்சபூதங்களாய் நிற்பவனும் அந்த எம்பெருமானே யாவன்;
கரு வரை — கறுத்த மலைகளும்
(அவன் கண்டாய்) — அவனேயாம்;
சென்று — (இந்தப் பிரபஞ்சத்தையழிக்கத் திருவுள்ளம்) ப்ரஸரித்து
கார் ஓதம் சீற்றம் தீ ஆவானும் — கறுத்த கடலைச் சீறிச்சுடவல்ல படபாக்நியாகுமவனும்
அவன் கண்டாய் — அந்த எம்பெருமானே யாம்.

* * *—எம்பெருமான் தன்னை வணங்கினவர்களை வாழ்விப்பனென்று கீழ்ப்பாசுரத்தி லருளிச்செய்த ஆழ்வார், அடியே பிடித்து சேதநனுடைய ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகிற எம்பெருமானுக்கு இஃது ஓரேற்றமோ வென்கிறார்போலு மிப் பாட்டால்.

ஆரருளுங் கேடும் அவன்கண்டாய்=இந்த ஸம்ஸாரத்தை ப்ரவர்த்திப்பித்தவன் எம்பெருமானேயாதலால் சேதநவர்க்கங்களைக் காக்கவேண்டியதும் அவனுக்குப் பாரமாயிற்று; ஆகவே, சேதநர்க்குக் கரணகளேபரங்களைக்கொடுத்து ஸம்ஸாரத்தில் ப்ரவர்த்திப்பித்த அவனே, ப்ரபந்நர்களைத் தன்னுடைய மாயையான ஸம்ஸாரத்தில் நின்றும் மீளச்செய்வ னென்றவாறு. “ஊஜெவ யெ வூவஷ்ஜெ ஊயாஜெ தாம் தரவ்தி தெ=மாமேவ யே ப்ரபத்

யந்தே மாயாமேதாம் தரந்தி தே." என்று கீதாசார்யன் சோதி வாய்திறந்து பணித்ததும் உணர்க. ... ...

சென்ற திலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால் *
கொன்ற திராவணனைக் கூறுங்கால் *—நின்றதுவும்
வேயோங்கு தண்சாரல் வேங்கடமே * விண்ணவர்தம்
வாயோங்கு தொல்புகழான் வந்து. (உரு)

| | | | |
|---|---|---|---|
| விண்ணவர்தம் வாய் | தேவர்களின் வாயினால் | கொன்றது | ஸம்ஹரித்தது |
| ஓங்கு தொல் புகழான் | உயர்வாகக் கூறப்படுகின்ற பழமையான புகழையுடைய எம்பெருமான் | இராவணனை | ராவணனையாம்; |
| செவ்வே | நேராக | கூறுங்கால் | சொல்லுமிடத்து, |
| சென்றது | சீறிச்சென்றது | வந்து நின்றதுவும் | (சேதநர் எக்காலத்தும் உஜ்ஜீவிக்க வேணுமென்று கருதி) வந்து நின்றவிடமும் |
| இலங்கை மேல் | லங்காபுரியின் மேலாகும்; | வேய் ஓங்கு தண் சாரல் வேங்கடமே | மூங்கில்கள் ஓங்கி வளர்ந்துள்ள குளிர்ந்த சாரலையுடைய திருவேங்கடமலையேயாம். |
| தன் சீற்றத்தால் | தனக்கு வந்தேறியான கோபத்தால் | | |

* * *—"ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச்செய்வர்" என்பது ஸ்ரீவசநபூஷணம். அதாவது—ஸங்கல்பமாத்திரத்தாலே எல்லாவற்றையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வசக்தியான ஸர்வேச்வரன் தன்னை யழியமாறி மநுஷ்யர்களைப்போன்று அவதரித்துக் கைதொடனாய்நின்று செய்த ராவணாதி நிரஸநரூபமான அதிமாநுஷக்ருத்யங்களெல்லாம் மஹர்ஷிகள் முதலான பாகவதர்திறத்தில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே என்று நஞ்சீயரருளிச்செய்வராம். திருவாழியாழ்வானைக்கூட ஏவாமல் ஸங்கல்பமாத்திரத்தாலே காரியஞ்செய்யவல்லமை எம்பெருமானுக்கிருந்தாலும் ஆச்ரிதர்களுக்காகத் தான் உடம்புநோவக் காரியஞ்செய்தாலன்றித் தனக்கு த்ருப்திபிறவாதாகையால் தானே நேரில் வந்து தோன்றிக் கைதொட்டுக் காரியஞ் செய்கின்றானும். படாதபாடுகள் பட்டு இலங்கையை நோக்கிச்செல்லாமலே "பஸ்மீபவது ராவண:"

என்றாற்போன்ற வொரு ஸங்கல்பமாத்திரத்தாலே இராவணனை நீறாக்கி யொழித்திருக்கலாமே; அப்படியிருக்கவும், வந்து பிறந்து இலங்கையை நோக்கிப் படைதிரட்டிச்சென்றதும் இராவணனைப் போர்க்களத்திலே கொன்றதும் என்னோ ?

இராவணன் முதலிய துஷ்டர்களை ஸங்கல்பமாத்திரத்தாலே நிக்ரஹித்துவிடக்கூடுமாயினும், "பரித்ராணாய ஸாதூநாம்" என்று சொல்லப்பட்ட ஸாதுபரித்ராணம் [சிஷ்டர்களை வாழ்விப்பது] ஸங்கல்பத்தால் தலைக்கட்டாது; திவ்யமங்கள விக்ரஹத்தினழகைக் கண்ணாரக் காணவேணுமென்றும் அணைத்துக்கொள்ளவேணு மென்றும் அன்பர் கொள்ளும் ஆவலை நேரில் வந்தவதரித்தே தீர்க்கவேணுமேயன்றி ஸங்கல்பத்தால் தீர்க்கப்போகாதாகையாலே "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய சதுஷ்க்ருதாம்-தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே" என்று சொல்லப்பட்ட அவதார ப்ரயோஜநங்கள் மூன்றனுள் முக்கியமாக ஸாதுபரித்ராண மொன்றுக்காகவே விபவாவதாரங்களும் அர்ச்சாவதாரங்களும் செய்தருள்கிறானென்பதை வெளியிடுதலே இப்பாட்டின் பரம தாத்பர்யமாம்.

விண்ணவர்தம் வாயோங்கு தோல்புகழான் = ராவணஸம்ஹாரம் முடிந்தபின் பிரமன் முதலிய தேவர்கள் வந்து தோத்திரஞ் செய்ததைக் கூறிற்றாகவுங் கொள்ளலாம். ... .... (உரு)

வந்தித் தவனை வழிநின்ற வைம்பூதம் *
ஐந்து மகத்தடக்கி யார்வமாய் *—உந்திப்
படியமரர் வேலையான் பண்டமரர்க் கீந்த *
படியமரர் வாழும் பதி. (உசு)

| | | | |
|---|---|---|---|
| படி அமரர் | நிலத்தேவரான பிராமணர்கள் | வழி நின்ற | (எம்பெருமானை ஆச்ரயிப்பதற்குத் தடங்கலாய்) குறுக்கே நிற்பனவான |
| வாழும் | நித்யவாஸம் பண்ணுகிற | ஐம்பூதம் ஐந்தும் | பஞ்ச பூதங்களையும் பஞ்சேந்திரியங்களையும் |
| பதி | திருப்பதியாகிய திருமலை யென்பது,— | | |

| | | | |
|---|---|---|---|
| அகத்து அடக்கி | வெளியிற் போகவொண்ணாத படி நியமித்து | படி | வந்து படிகின்ற |
| அவனை | அவ்வெம்பெருமானை | அமரர் | தேவர்களுக்காக |
| வந்தித்து | வணங்கி | வேலையான் | திருப்பாற் கடலி லுள்ள பெருமான் |
| ஆர்வம் ஆய் | பக்தியுடையவர்களாய் | பண்டு அமரர்க்கு ஈந்த | முன்னைத் தேவர்களான நித்யஸூரிகட்கும் (அநுபாவ்யமாகக்) கொடுத்த தலமாகும். |
| உந்தி | ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு மேல்விழுந்து | | |

* * *—கீழ்ப்பாட்டில், "நின்றதுவும் வேயோங்கு தண்சாரல் வேங்கடமே" என்று திருமலையின் ப்ரஸ்தாவம் வந்ததனால் அத்திருமலையிலேயே இவ்வாழ்வார்க்கு இன்னமும் திருவுள்ளம் அவகாஹித்து அதன் வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார். இரண்டரை யடிகளால் க்ஷீராப்திநாதனை வருணித்தாராயிற்று. தேவர்கள் ஜிதேந்திரியர்களாய்க்கொண்டு நான் முன்னே நான் முன்னே யென்று ஒருவரையொருவர் தள்ளிக்கொண்டு வந்து படியுமிடமான திருப்பாற்கடலின்மேல் பள்ளிகொள்ளும் பெருமான், இந்நிலவுலகத்தில் ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுபவித்து வாழுமிடமான திருவேங்கடமலையை நித்யஸூரிகளுக்குத்தந்தான்—என்றவிதன் கருத்து யாதெனில்; 1. "தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்று திருமழிசைப்பிரானும் 2. "மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான்" என்று திருப்பாணாழ்வாரும் அருளிச்செய்த படியே இத்திருமலை இவ்விபூதியிலுள்ளார்க்கு மாத்திரமேயல்லாமல் அவ்விபூதியிலுள்ள நித்யஸூரிகளுக்கும் எட்டிப்பிடித்தாற்போல் வந்து பணியுமாறு அமைக்கப்பட்ட திருப்பதியாமென்பதே. "சுமந்து மாமலர் நீர்சுடர் தூபங்கொண்டு, அமர்ந்து வானவர் வானவர்கோனொடும், நமன்றெழூந் திருவேங்கடம்" என்ற திருவாய்மொழியுங் காண்க.

வந்தித்து—வடமொழித்தாது வடியாகப்பிறந்த வினையெச்சம். உந்தி—வினையெச்சம்; 'உந்து' என்பது வினைப்பகுதி. மூன்று

1. நான்முகன் திருவந்தாதி—45. 2. அமலனாதிபிரான்—3.

மடியில், படியமரர்—வினைத்தொகை. வேலை—கடற்கரையை யுணர்த்தும் வடசொல்லாகிய 'வேலா' என்பது ஐயீறாகி இலக்கணையால் கடலையுணர்த்திற்று. ஈந்த—'ஈந்தது' என்பதன் விகாரம் படியமரர்வாழும்=படி—பூமி; வானுலகத்தில் தேவர்கள் விளங்குவதுபோல இருள்தருமா ஞாலமான இந்தப்பூமியில் விளங்குபவர்; எனவே, அந்தணர்களையும் ஸ்ரீவைஷ்ணவர்களையும் சொல்லிற்றாம். .... .... ... (உசு)

பதியமைந்து நாடிப் பருத்தெழுந்த சிந்தை *
மதியுரிஞ்சி வான்முகடு நோக்கி *—கதிமிகுத்தங்
கோல்தேடி யோடும் கொழுந்ததே போன்றதே *
மால்தேடி யோடும் மனம். (உஎ)

| | |
|---|---|
| பதி | திருமலைத் திருப்பதியிலே |
| அமைந்து | வேரூன்றி நின்று |
| நாடி | எங்கேயெங்கே யென்று தேடிக்கொண்டு |
| பருத்து எழுந்த சிந்தை | மிகவும் வளர்ந்து மேற்கிளர்ந்த மனோரதத்தை யுடையதாய், |
| மதி உரிஞ்சி | சந்திரபதத்தையும் உராய்ந்துகொண்டு |
| வான் முகடு நோக்கி | (அப்பால்) அண்ட முகட்டையும் பார்த்துவிட்டு |
| | (அங்கும் நில்லாமல்) |
| மால் தேடி | பரமபதநாதனைத் தேடிக்கொண்டு |
| கதி மிகுத்து ஓடும் | விரைவு மிகுந்து செல்லுகின்ற |
| மனம் | என்னெஞ்சமானது |
| அம் கோல் தேடி ஓடும் | அழகிய கொள் கொம்பைத்தேடிக் கொண்டு பரந்து செல்லுகின்ற |
| கொழுந்து அது போன்றது | கொடியை ஒத்திரா நின்றது. |

* * *—கீழிரண்டு பாசுரங்களில் எம்பெருமானுடைய திருமலையிலிருப்பை அநுஸந்தித்த ஆழ்வார் இவ்விடத்தில் தாம் தம்முடைய ஆசைதீர அப்பெருமானோடு பரிமாறவேணுமென்று பாரித்தார்; அர்ச்சாவதாரமாகையாலே அப்படிப்பட்ட பரிமாற்றம் ஒன்றும் பெற்றிலர்; விபவாவதாரங்கள் காலாதீதமாய்ப்போகையாலே இனி பரமபதநாதனோடேயாகிலும் கலந்து பரிமாறப்

பெறலாமோ என்று பார்த்திருக்கும் திருவுள்ளம் பரமபதத்தளவும் பதறிச்செல்லும்படியைப் பேசுகிறது இப்பாசுரத்தில்.

முதலடியின் முடிவிலுள்ள 'சிந்தை' என்னுஞ்சொல் எழுவாய்போலத் தோற்றமாயினும் அஃது எழுவாய் அன்று; பாட்டின் முடிவிலுள்ள மனமே எழுவாய்; சிந்தை அதற்கு விசேஷணமாய் அந்வயிக்கும். எனது மனமானது திருவேங்கட மலையிலே சென்று சேர்ந்து தன் ஆவல் தோற்றும்படி எங்கே யெங்கேயென்று திருமாலைத்தேடி அங்குத் தன் நினைவு தலைக்கட்டப்பெறாமையாலே மிகவும் வளர்ந்து மேற்கிளர்ந்த மனோரதத்தையுடையதாகி மேலே மேலே சென்று திருநாட்டுத் தலைவனைத்தேடியோடாநின்றது; இஃது, அழகிய கொள்கொம்பைத் தேடிக் கொண்டு பரந்துசெல்கின்ற கொடியைப்போன்றுள்ளது—என்றாராயிற்று. .... ... ... (உஎ)

மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான் * மற்றும்
நினைப்பரிய நீளரங்கத் துள்ளான் *—எனைப்பலரும்
தேவாதி தேவனெனப் படுவான் * முன்னொருநாள்
மாவாய் பிளந்த மகன். (உ௮)

- எனை பலரும் — கணக்கில்லாத வைதிகபுருஷர் யாவராலும்
- தேவாதி தேவன் எனப்படுவான் — தேவர்கட்கும் தேவனென்று ப்ரஸித்தமாகச் சொல்லப்படாநிற்பவனும்
- மா கடலான் — பரந்த திருப்பாற்கடலிலே பள்ளிகொண்டிருப்பவனும்
- முன் ஒருநாள் — முன்பொரு காலத்தில் (ஸ்ரீகிருஷ்ணாவதரித்தபோது)
- மா வாய் பிளந்த — குதிரையுருக் கொண்டுவந்த கேசியின் வாயைக் கீண்ட
- மகன் — சிறு பிள்ளையானவனும்
- மற்றும் — பின்னும்
- நினைப்பு அரிய நீள் அரங்கத்து உள்ளான் — நினைப்பதற்கும் அருமையான போக்யதை மிக்கிருந்துள்ள கோயிலிலே பள்ளி கொள்பவனுமாகி
- வேங் கடத்தான் — திருமலையிலே (ஸர்வ ஸுலபனாய்க்கொண்டு) எழுந்தருளி நிற்பவன் (இப்போது)
- மனத்து உள்ளான் — என் மநஸ்ஸிலே நித்யவாஸம் பண்ணாநின்றான்.

* * *—கீழ்ப்பாட்டில் "கோல்தேடியோடுங் கொழுந்ததே போன்றதே மால்தேடியோடும் மனம்" என்னும்படியாக ஆசை கரைபுரண்டு செல்லப்பெற்ற தம்முடைய திருவுள்ளத்திலே திருவேங்கடமுடையான் அழகியமணவாளன் திருப்பாற்கடல் நாதன் பரமபதநாதன் ஆகிய எம்பெருமான்களெல்லாரும் வந்து குடிகொண்டபடியைக் கூறுகின்றாரிதில்.

தேவாதிதேவனான பரமபத நிலயன் ஜகத்ரக்ஷணார்த்தமாக முதலில் திருப்பாற்கடலில் வந்துதங்கிப் பின்பு ஸ்ரீக்ருஷ்ணனாயவதரித்து 'இப்படி நாம் வருவதும் போவதுமாக இராமல் ஸ்திர ப்ரதிஷ்டையாக இருந்து ஸம்ஸாரிகளைக் காக்கவேணும்' என்று திருவுள்ளம்பற்றிக் கோயில் திருமலை முதலிய திருப்பதிகளிலே யெழுந்தருளியிருந்து இப்போது என்னெஞ்சிலே வந்து கிடக்கிறானென்கிறார்.

இப்பாட்டில் 'மனத்துள்ளான்' என்பது முதலிலேயிருந்தாலும் அர்த்தஸ்வாரஸ்யம் நோக்கி அது முடிவுசொல்லாகக் கொள்ளப்படும்.

தேவாதி தேவன்—வடசொல் தொடர்.

மாவாய்பிளந்த வரலாறு :—கண்ணபிரானைக் கொல்லும்படி கம்ஸனாலேவப்பட்டிருந்த அஸுரர்களில் ஒருவனான கேசியென்பவன் குதிரையினுருவங்கொண்டு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத்துரத்திக்கொண்டு கண்ணன்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப்பெருக்கி நீட்டி அதன்வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப்பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினன் என்பதாம். (உஅ)

மகனாகக் கொண்டெடுத்தாள் மாண்பாய கொங்கை *
அகனார வுண்பனென் றுண்டு *—மகனைத்தாய்
தேறாத வண்ணம் திருத்தினாய் * தென்னிலங்கை
நீறாக வெய்தழித்தாய் நீ. (உகூ)

| | |
|---|---|
| தென் இலங்கை | அழகிய லங்காபுரி |
| நீறு ஆக | நீறாகியொழியும்படி |
| எய்து | அம்புகளைச் செலுத்தி |
| அழித்தாய் | முடித்தவனே! |
| நீ—; | |
| மகன் ஆக கொண்டு எடுத்தாள் | உன்னைப் புத்திர பாவனைசெய்து (பரிவுகாட்டி முலைகொடுக்க) எடுத்துக் கொண்ட பூதனையினுடைய |
| மாண்பு ஆய கொங்கை | அழகான முலையை |
| அகன் ஆர உண்பன் என்று உண்டு | வயிறார உண்ணக் கடவேனென்று சொல்லி (பாலோடு அவளுயிரையும்) குடித்து |
| மகனை | புத்திரனை உன் விஷயத்திலே |
| தாய் | உனது தாயாகிய யசோதை |
| தேறாத வண்ணம் | நம்பிக்கையற்றிருக்கும்படி |
| திருத்தினாய் | செய்துவிட்டாய். |

* * *—க்ருஷ்ணாவதாரம் நினைவுக்கு வந்துவிட்டால் ஆழ்வார்கள் விரைவில் ஓயமாட்டார்களே; கீழ்ப்பாட்டில் "முன்னொருநாள் மாவாய்பிளந்த மகன்" என்று க்ருஷ்ணாவதாரம் ப்ரஸக்தமானபடியால் அதுதன்னிலேயே திருவுள்ளம் அவகாஹித்து அநுபவித்து இப்பாசுரம் பேசுகிறார். விஷந்தடவின முலையைக் கொடுத்து உன்னைக்கொல்லவந்த பேய்ச்சியானவள் மெய்யே தாய் போன்று பரிவுகாட்டி உன்னை வாரியெடுத்தணைத்து முலைகொடுத்தாள்; நீயும் மெய்யே குழந்தையாகவே பாவனைகாட்டி, பாலின் கனத்தாலே விம்மி விளங்குகின்ற அம்முலையைச் சுவைத்துண்பவன்போல அவளுயிரையே உறிஞ்சியுண்டாய்; அதுமுதலாக உனது மெய்த்தாயான யசோதைப்பிராட்டிக்கு உன்னிடத்தில் நம்பிக்கையுண்டாக இடமில்லாமலே போயிற்று; 'இவனை நாம் சிறு குழந்தையென்று நம்பவேகூடாது' என்று எப்போதும் துணுக்குத்துணுக்கென்று அவள் அஞ்சியிருக்கும் வண்ணமே செய்துவிட்டாய் என்றாராயிற்று.

அகன்—அகம்; மகரனகரப்போலி.

"தென்னிலங்கை நீறாக எய்தழித்தாய்" என்ற விளியின் கருத்தாவது—க்ருஷ்ணாவதாரத்தில் மாத்திரமே இப்படி நம்பிக்கையற்று அஞ்சியிருக்கவேணுமேயொழிய ராமாவதாரத்தில்

இப்படிப்பட்ட அச்சத்திற்கு அவகாசமில்லை; பருவம் முற்றின பின்பே ராவண ஸம்ஹாரம் முதலிய அரிய பெரிய செயல்களைச் செய்தாயாகையாலே—என்பதாம்.

**தென்னிலங்கை**—தென் திசையிலுள்ள இலங்கை என்றுமாம். **தென்**—அழகுக்கும் பெயர். ... ... (௨௯)

நீயன் றுலகளந்தாய் நீண்ட திருமாலே *
நீயன் றுலகிடந்தா யென்பரால் *—நீயன்று
காரோத முன்கடைந்து பின்னடைத்தாய் மாகடலை *
பேரோத மேனிப் பிரான். (௩௦)

| | |
|---|---|
| பேர் ஓதம் மேனி பிரான் | பெரிய கடல்போன்ற திருமேனியையுடைய பெருமானே! |
| நீண்ட திரு மாலே | எண்ணுதற்கு அரிய பெருமைபடைத்த திருமாலே! |
| நீ | இப்படிப்பட்ட நீ, |
| அன்று | முன்பொருகால் |
| உலகு | உலகங்களை |
| அளந்தாய் | (திரிவிக்கிரமனாகி) அளந்துகொண்டாய் (என்றும்) |
| நீ | நீ |
| அன்று | மற்றுமொரு காலத்தில் |
| உலகு | பூமியை |
| இடந்தாய் | (மஹாவராஹமாகி) அண்டபித்தியில் நின்றும் ஒட்டுவிடுவித்துக் கொணர்ந்தாய் (என்றும்) |
| நீ அன்று—; | |
| கார் ஓதம் முன் கடைந்து | கரியகடலை முன்னே கடைந்தாயென்றும், |
| மா கடலை | (அந்தப்) பெரிய கடல்தன்னையே |
| பின் | பிறகு (ராமாவதாரத்திலே) |
| அடைத்தாய் | அணைகட்டித் தூர்த்தாயென்றும் |
| என்பர் | (மஹர்ஷிகள்) சொல்லுகின்றனர். |

* * *—எம்பெருமானுடைய சில திவ்ய சேஷ்டிதங்களை நினைந்து வாயாரப்பேசி யேத்துகிறார். திரிவிக்கிரமனாகி உலகளந்தாய்; மஹாவராஹமாகி உலகிடந்தாய்; வங்கக்கடல்கடைந்தாய்; அக்கடலிலே அணைகட்டினாய்—என்று மஹர்ஷிகள் கூறுகின்றார்களென்கிறார்.

காரோதம் கடைந்த வரலாறு:—முன்னொருகாலத்தில், இவ் வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துக்குச் சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப்பெற்ற ஒரு வித்யாதரமகள், மகிழ்ச்சியோடு அம் மாலையைத் தன் கைவீணையில் தரித்துக்கொண்டு பிரமலோக வழியாய் மீண்டுவருகையில் துர்வாஸமஹாமுநி எதிர்ப்பட்டு அவளை வணங்கித்துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆநந்தத்தோடு தேவ லோகத்திற்கு வந்து, அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவத யானையின்மேற் பவனி வந்துகொண்டிருந்த இந்திரனைக் கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்த யானையின் பிடரியின்மேல் வைத்தவளவில் அம்மதயானை அதனைத் துதிக்கையாற் பிடித்திழுத் துக் கீழெறிந்து காலால்மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முநி வரன் கடுங்கோபங்கொண்டு இந்திரனைநோக்கி 'இவ்வாறு செல்வச் செருக்குற்ற உன்னுடைய ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்து விடக்கடவன' என்று சபிக்க, உடனே தேவர்களின் செல்வம் யாவும் ஒழிந்தன; ஒழியவே அசுரர் வந்து பொருது அமரரை வென்றனர். பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரண மடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர் களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாக நாட்டி வாஸுகி யென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறுகப்பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர். அப்பொழுது மத்தாகிய மந்தரகிரி கடலி னுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின் கீழேசென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதார மாக எழுந்தருளியிருந்தனன். இப்படி ஸ்ரீமந்நாராயணன் அக்கடலினிடையே மஹா கூர்மமாய் மந்தரபர்வதத்திற்கு ஆதார மாய் எழுந்தருளியிருக்க, வாஸுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப்பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய

இருதிறத்தாரும் அதனை வலியப்பிடித்து இழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அத்திருமால் தான் ஒரு திருமேனியைத்தரித்துத் தேவர்கள் பக்கத்திலேயும் வேறொரு திருமேனியைத்தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று வாஸுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக்கடைந்தனன் என்பதாம்.

கடலடைத்த வரலாறு:—விபீஷணாழ்வான் இராமபிரான் பக்கல் வந்துசேர்ந்து உய்ந்தபின் பெருமாளைப்பார்த்து 'ஸ்வாமிந்! இந்த நம்முடைய ஸேனைகள் கடலைக்கடந்து அப்பாற் செல்ல வேண்டுமாதலால் அதற்காகக் கடலரசனை நீர் சரணம் புகவேணும்' என்ன; இராமபிரான் "கடலைக்கடக்க உபாயம் சொல்லவேண்டும்" என்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்துத் தர்ப்பசயனத்திலே படுத்து மூன்று நாளளவும் ப்ராயோபவேசமாகக்கிடக்க, ஸமுத்ரராஜன் அப்பெருமானது மஹிமையைக் கருதாமல் உபேக்ஷையாயிருந்துவிடவே ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு 'அனைவரும் நடந்தேசெல்லும்படி கடலை வற்றச்செய்வேன்' என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத் தொடங்கியவளவிலே வருணன் அஞ்சிநடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு, நளன் கையினால் நீரில் போகட்ட கற்களும் மிதக்குமென்று அவனுக்கு அவன் தகப்பனார் வரமளித்திருக்கிறாராகையால் அவனைக்கொண்டு ஸேது கட்டவேணுமென்று சொல்லிவிட்டு மறைந்துவிட்டான். இராகவனும் அப்படியே மற்ற வானரங்கள் சுற்றுமுள்ள மலைகளைப் பிடுங்கிக்கொண்டுவந்து நளன்கையில் கொடுக்கச்செய்து நளன் கையினால் அம்மலைகளை நீரில் போகடுவித்து ஸேது கட்டுவித்தான். அவ்வழியாய் வானரப்படைகளோடு இராமபிரான் இலங்கை சேர்ந்து அந்நகரையும் இராவணனுள்ளிட்ட அரக்கர் குலத்தையும் நீறுபடுத்தின வரலாறு ப்ரஸித்தம்.

"பேரோத மேனிப்பிரான்—காரோத முன்கடைந்து" என்ற சொல்லாற்றலால், கடல் கடைகிறபோது ஒருகடலை மற்றொரு கடல் நின்று கடைந்தாற்போலே யிருந்ததென்பது தொனிக்கும்.

'என்பர்' என்பது "அளந்தாய், இடந்தாய், அடைத்தாய்" என்ற மூன்றிடத்தும் அந்வயிக்கும்.

முதலடியில், 'நீண்ட' என்றது—திரிவிக்கிரமனைப் நீண்ட என்றபடியுமாம். .... .... .... (௯௦)

பிரானென்று நாளும் பெரும்புலரி யென்றும் *
குரா நற் செழும்போது கொண்டு *—வராகத்
தணியுருவன் பாதம் பணியுமவர் கண்டீர் *
மணியுருவம் காண்பர் மகிழ்ந்து. (௯௧)

| | | | |
|---|---|---|---|
| பிரான் என்றும் | 'மஹோபகாரங்கள் பண்ணினவனே!' என்றும் | வராகத்து அணி உருவன் பாதம் | அழகிய வராஹ வுருக்கொண்ட பெருமானுடைய திருவடிகளை |
| பெரு புலரி என்றும் | 'இன்றே நல்விடிவு' என்றும் (கொண்டாடிக்கொண்டு) | பணியுமவர் கண்டீர் | வணங்குபவர்களே |
| நாளும் | நாள்தோறும் | மணி உருவம் | (அப்பெருமானுடைய) திவ்யமங்கள விக்ரஹத்தை |
| நல் குரா | நல்ல மணம்மிக்க | | |
| செழு | அழகிய | | |
| போது கொண்டு | புஷ்பங்களைக் கொண்டு, | மகிழ்ந்து காண்பர் | ஸேவித்து ஆநந்திக்கப் பெறுவர்கள். |

* * *—ஆபத்பந்துவான பகவானுடைய திருவடிகளில் * செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி முதலிய புஷ்பங்களைப் பணிமாறித் தொழுமவர்கள் அப்ராக்ருதமான அப்பரமனது திருமேனியை ஸேவித்து நித்யாநந்தம் அநுபவிக்கப் பெறுவர்களென்கிறார்.

[பிரானென்றும் பெரும்புலரியென்றும் பணியுமவர் கண்டீர்.] ஸ்ரீவசநபூஷணத்திலே—"அஜ்ஞரான மநுஷ்யர்கள் வாளா தந்தானென்றிருப்பர்கள்; ஜ்ஞாநவான்கள் 'இன்றென்னைப் பொருளாக்கித் தன்னையென்னுள் வைத்தான்—எந்நன்றி செய்தேனா என்னெஞ்சில் திகழ்வதுவே—நடுவே வந்து உய்யக்கொள்கின்ற நாதன்—அறியாதனவறிவித்த அத்தா நீ செய்தன அடியேனறியேனே—பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி அடிமைகொண்டாய்—

என்னைத் தீமனங்கெடுத்தாய்—மருவித்தொழும் மனமே தந்தாய்' என்று ஈடுபடா நிற்பர்கள்'' என்றருளிச்செய்தவை இங்கு அநுஸந்திக்கத்தக்கன. பிரானே! என்றும் பெரும்புலரி என்றும் சொல்லிக்கொண்டு எம்பெருமான் பாதம்பணியவேணுமென்கிறாரிவ்வாழ்வார். 'இன்றளவும் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து விஷயாந்தரங்களிலே ஆழ்ந்து உண்டியே உடையே உகந்தோடித் திரிந்தவென்னை இன்று உன் திருவடிகளிலே கொண்டு கூட்டினையே!, இதனிலும் மிக்க வுபகாரமுண்டோ?' என்று பெருநன்றி பாராட்டவேணுமென்பது "பிரானேன்றும்" என்பதன் கருத்து. [பிரான்—உபகாரகன்; இங்கே இது ஸம்போதநம்.]

பெரும்புலரி என்றும்=1. "பழுதே பலபகலும் போயின" என்கிறபடியே பாழாய்க் கழிந்த பல நாள்களுக்குள்ளே பகவத்விஷயத்திலிழியும்படி விடிந்த இந்நாளே நல்ல நாள்! என்று நாளைக்கொண்டாடவேணுமென்கிறது. கம்ஸன் தனது வேலைக்காரனான அக்ரூரனை யழைத்து 'நீ போய்க் கண்ணபிரானை யழைத்து வா' என்று கட்டளையிட்டனுப்ப, அவனும் புறப்பட்டு வரும்போது 2. "[Grantha verse: illegible] = அத்ய மே ஸபலம் ஜந்ம ஸுப்ரபாதாச மே நிசா— யதுந்நித்ராப்ஜபத்ராக்ஷம் விஷ்ணோ: த்ரக்ஷ்யாம்யஹம் முகம்." கம்ஸன் சோறுண்டு வளர்ந்த வெனக்கும் இன்று எம்பெருமான் திருமுகத்திலே விழிக்கப்பெறும் பாக்கியம் நேர்கின்றமையாலே இன்றே என் பிறவி பயன்பெற்றது; இன்றே நல்விடிவு என்று களிந்து கூறினதுபோலவும், "மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்" என்று ஆய்ச்சிகள் நாளைக் கொண்டாடினது போலவும்.

துராநற் செழும்போது=' துரா' என்று பரிமளத்திற்கும் ஒரு புஷ்ப விசேஷத்திற்கும் பெயர். இங்கே அவ்விரண்டு பொருளுங் கொள்வர். காண்பர் மகிழ்ந்து=கண்டு மகிழ்வர் என்றவாறு. (௬௧)

1. முதல் திருவந்தாதி—16.

2. ஸ்ரீ விஷ்ணுபுராணம் 5-17-3.

மகிழ்ந்தது சிந்தை திருமாலே * மற்றும்
மகிழ்ந்ததுன் பாதமே போற்றி *— மகிழ்ந்த
தழலாழி சங்க மவைபாடி யாடும் *
தொழிலாகம் சூழ்ந்து துணிந்து. (௩௨)

| | |
|---|---|
| திரு மாலே!— | லக்ஷ்மீபதியே!, |
| சிந்தை | என் நெஞ்சமானது |
| மகிழ்ந்தது | (உன்னைச்சிந்தித்து அதனாலே) ஆநந்தமுற்றது ; |
| மற்றும் | நெஞ்சுக்கு அடுத்ததான வாக்கும் |
| உன் பாதமே போற்றி | உன் திருவடிகளையே துதித்து |
| மகிழ்ந்தது | ஆநந்திக்கப் பெற்றது ; |
| ஆகம் | என்னுடைய தேஹமானது |
| அழல் | எதிரிகளின்மீது நெருப்பை உமிழ்கின்ற |
| ஆழி | திருவாழியையும் |
| சங்கம் | ஸ்ரீபாஞ்ச ஜந்யத்தையும் |
| அவை | மற்றுமுள்ள திவ்யா யுதங்களையும் |
| பாடி ஆடும் | கொண்டாடிப்பாடி ஆடுகையாகிற |
| தொழில் | வியாபாரத்திலே |
| சூழ்ந்து | பொருந்தி |
| துணிந்து | இதுவே நமக்குக் காரியமென்று துணிவுகொண்டு |
| மகிழ்ந்தது | களிக்கப்பெற்றது. |

* * *—தம்முடைய மனமொழிமெய்கள் மூன்றும் பகவத் விஷயத்திலேயே ஊன்றினபடியைப் பேசுகிறார். திருமாலே! சிந்தை மகிழ்ந்தது=நாட்டாருடைய மனம் விஷயாந்தரங்களிலே ஊன்றி அதனால் ஆநந்தமடையும்; என்னுடைய சிந்தை அப்படியன்றியே அவற்றைக் காறியுமிழ்ந்து, நீயும் பிராட்டியுமாகச் சேர்ந்திருக்கும் சேர்த்தியைச் சிந்தித்த மாத்திரத்தில் மகிழ்ச்சியடையா நின்றது.

மற்றும் உன் பாதமே போற்றி மகிழ்ந்தது=மனம் நினைத்ததைவாய் சொல்லக்கடவதாகையாலே மனத்துக்கு அடுத்ததான வாக்கை 'மற்றும்' என்கிறது. நாட்டாருடைய வாக்கு விஷயாந்தரங்களை வருணித்து அதனாலே களிப்புறும்; என்னுடைய வாக்கு அப்படியன்றியே உனது திருவடிகட்கு வாழ்த்துக்கூறி மகிழ்வுறுகின்றது. இனி, பின்னடிகளால் சரீரத்தின் தொழிலுறுதியைக் கூறுகின்றார். திருவாழி திருச்சங்கு முதலிய திவ்யாயுதங்க

ளோடே நீ சேர்ந்து விளங்குகின்ற அழகை வருணித்து வாய் பாட, அப்பாடலுக்குத் தகுதியாக ஆடுவதையே என்னுடைய சரீரம் தொழிலாகக் கொண்டுள்ளது என்றாராயிற்று. ... (௩௨)

துணிந்தது சிந்தை துழாயலங்கல் * அங்கம்
அணிந்தவன் பேருள்ளத்துப் பல்கால் *—பணிந்ததுவும்
வேய்பிறங்கு சாரல் விறல்வேங் கடவனையே *
வாய்திறங்கள் சொல்லும் வகை. (௩௩)

| | |
|---|---|
| சிந்தை | என்மனமானது |
| துழாய் அலங்கல் அணிந்தவன் பேர் | திருத்துழாய் மாலையை அணிந்துள்ள பெருமானுடைய திருநாமங்களை |
| பல்கால் | பலமுறை |
| உள்ளத்து | நினைப்பதில் |
| துணிந்தது | த்ருடமாக அத்யவஸாயங் கொண்டது ; |
| அங்கமும் | எனது உடலும் |
| (பல்கால்) | எப்போதும் |
| பணிந்தது | வணங்குவதாயிராநின்றது ; |
| வாயும் | என் வாக்கும் |
| வேய் பிறங்கு சாரல் | மூங்கில் மிக்கிருக்குந் தாழ்வரையையுடைய |
| விறல் வேங்கடவனை | திருமலையிலெழுந்தருளியிருக்கிற மிடுக்குடைய பெருமானது |
| திறங்களை | தன்மைகளையே |
| (பல்கால்) | எப்போதும் |
| சொல்லும் வகை | சொல்லுகிற விதத்திலே |
| (துணிந்தது) | துணிவுகொண்டதாயிற்று. |

* * *—"யந்மநஸா த்யாயதி தத்வாசா வததி தத்கர்மணா கரோதி" என்று வேதத்திற் சொல்லுகிறபடியே முதலில் சிந்தை சிந்திப்பது பிறகு வாய் சொல்லுவது, அதன்பிறகு உடல் செய்வது என்றிப்படி மனமொழி மெய்களின் செயல்முறைமை ஏற்பட்டிருக்கும் விதமாகத் தமக்கு அந்த மூன்று கரணங்களும் பகவத்விஷயத்தில் அவகாஹித்தபடியைக் கீழ்ப்பாசுரத்திற் பேசினர்; இந்த முறைமையின்படியே ஒழுகாது, வாக்குக்கு முன்னே சரீரம் முந்துகிறபடியை இப்பாசுரத்தில் மொழிகின்றார். 'நான் முன்னே நான் முன்னே' என்று தம்முடைய இந்திரியங்கள் பகவத்விஷயாநுபவத்துக்கு முற்படும்படியைத் தெரிவித்தவாறு. கீழ்ப்பாட்டில்

மனமொழி மெய்களை வரிசையாகச் சொல்லி, இப்பாட்டில் 'சிந்தை, அங்கம், வாய், என்று மாறுபடக் கூறியிருத்தல் காண்க.

"வேய் பிறங்கு சாரல்" என்ற விசேஷணம் 'வேங்கடவனை' என்பதில் ஏகதேசமான வேங்கடத்தில் அந்வயிக்கும்; 'விறல்' என்ற விசேஷணம் வேங்கடவனுக்கு அந்வயிக்கும். விறல்—பெருமை, வலி, வீரம், வெற்றி.

திறம்—குணம், சாமர்த்தியம், தன்மை, மேன்மை முதலியன. திருவேங்கடமுடையானுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளைச் சொல்லிக்கொண்டிருப்பதிலே வாய் துணிவுகொண்டதென்கை.

வகையா லவனி யிரந்தளந்தாய் பாதம் *
புகையால் நறுமலரால் முன்னே *—மிகவாய்ந்த
அன்பாக்கி யேத்தி யடிமைப்பட்டே னுனக்கு *
என்பாக்கி யத்தா லினி. (௩௪)

| | |
|---|---|
| முன்னே | முற்காலத்திலே, |
| வகையால் | உபாயத்தினால் |
| அவனி | பூமியை |
| இரந்து | (மாவலிபக்கல்) யாசித்து |
| அளந்தாய் | அளந்துகொண்ட வுன்னுடைய |
| பாதம் | திருவடிகளை |
| புகையால் | தூபங்கொண்டும் |
| நறு மலரால் | நல்ல பரிமளமுள்ள புஷ்பங்களைக் கொண்டும் |
| மிக வாய்ந்த அன்பு ஆக்கி | மிகுதியாக [நன்றாக]ப் பொருந்தின ப்ரீதியுடனே |
| ஏத்தி | துதித்து |
| இனி | மேலுள்ள காலமெல்லாம், |
| என் பாக்கியத்தால் | நீ என்மேல் பண்ணின விசேஷ கடாக்ஷமாகிற பாக்யத்தாலே |
| உனக்கு அடிமைப் பட்டேன் | உனக்குத் தொண்டனாய் விட்டேன். |

* * *—கீழருளிச்செய்தபடி தம்முடைய மநோவாக்காயங்கள் எம்பெருமான் பக்கலிலேயே ஊற்றமுற்றதற்குக் காரணம்—அந்த எம்பெருமான் மஹாபலியிடத்தினின்று பூமியை மீட்டு இந்திரனுக்குத் தருவதென்கிற வியாஜத்தால் எல்லார் தலையிலும் திருவடியை வைத்து வாழ்வித்ததுபோல, தம் தலைமேலும் திருவடி

களைவைத்து விசேஷகடாக்ஷஞ் செய்தருளினதேயாமென்பது இப்பாட்டில் தோன்றும்.

வகையால்—தந்திரத்தாலே யென்றபடி: இராவணன் போலவே மாவலியும் தேவர்களுக்குத் தீங்கிழைத்தவனுதலால் ராவணனைக் கொன்றொழித்தது போலவே இவனையுங் கொல்ல வேண்டியிருந்தும், இவன் உதாரகுணமொன்றை மேற்கொண்டிருந்ததனுல் இவனைக் கொல்லவேண்டாவென்றுகொண்டு மூவடியிரந்துபெறுகிற இச்செயலிலேயே பூமியை இந்திரனுக்குச் சேர்ப்பித்தலும் மாவலியை அடக்குதலுமாகிற இரண்டும் எளிதிற் கைகூடுமென்று நினைத்துச் செய்த தந்திரம் அறிக. இனி, வகையால் என்பதற்கு—வடிவழகு, மழலைச்சொல் மனத்தைக் கவர வல்ல செயல் முதலிய வகைகளாலே என்றுரைக்கவுமாம்.

அவநி—வடசொல்.

என் பாக்கியத்தால்='நான் செய்த பாக்கியத்தால்' என்று பொருளன்று; எனக்கு நேர்ந்த பாக்கியத்தால் என்கை. எம்பெருமானுர் காலத்திலே திருவரங்கம் பெரிய கோயிலில் ஒருநாள் நம்பெருமாள் புறப்பாட்டை எதிர்பார்த்துக்கொண்டு பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக மஹாஜ்ஞாதாக்களான முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் 'நாம் அநாதி காலமாக ஆர்வீட்டு வாசலிலே எவனுடைய புறப்பாட்டை எதிர்பார்த்துக்கொண்டு கிடந்தோமோ தெரியாது, இன்று ப்ராப்த சேஷியான பெருமாளுடைய புறப்பாடுபார்த்து வந்திருக்க என்ன பாக்கியம் பண்ணினோமோ!' என்ன, அந்த ப்ரஸங்கத்திலே 'நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்தவனுக்கு ஒருநாள் பகவத்விஷயத்திலே ருசிபிறப்பதற்குக் காரணமென்ன?' என்று விசாரிக்கச்செய்தே 'யாத்ருச்சிகஸுக்ருதம்' என்று சிலரும் 'அஜ்ஞாதஸுக்ருதம்' என்று சிலருமாய் இப்படி வார்த்தைகள் உண்டாக, அவ்வளவில் அங்கிருந்த கிடாம்பிப்பெருமாள் 'நமக்கு பகவத் விஷயம்போலே ஸுக்ருததேவர் என்றும் ஒருவர் ஆச்ரயணீயருண்டோ?' என்ன அதற்குப் பிள்ளை திருநறையூரரையர் 'ஸுக்ருத'மென்று சொல்லுகிறதும் வேறொன்றையன்று, பகவத் விஷயத்தையே காண்' என்றாராம். ஸ்ருஷ்டி அவதாரம் முதலியவற்றாலே எம்பெரு

மான் பண்ணின க்ருஷியின் பயனாகவே ஒரு நாளடைவில் நமக்கு பகவத் விஷயத்தில் ருசி பிறக்கிறபடியாலே அந்த பகவத் கடாக்ஷந்தன்னையே பாக்கியமென்கிறது. இவ்வர்த்தத்தையே ஸ்ரீமத் வேதாந்த தேசிகனும் ரஹஸ்யத்ரயஸாரத்திலே "உபாய: ஸ்வப்ராப்தேருபநிஷதபிகதஸ் ஸ ஸ்வாநுபூதே: ஸ்வஸாமர்த்ய தஸ்யாபேக்ஷ்யநுநிர்யாஸ ஸமதீ। தஸ்யாபேக்ஷ: காம் ஸாம் ஸக்ஷ் தவரிஹாரே ஸதா நிதாநம் தத்ராபி ஸ்வபதஸித்திநிர்வாண நிர்வாண:." என்று தெளியவருளிச்செய்தார்.

1 "எதிர்சூழல்புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள்செய்ய, விதிசூழ்ந்ததா லெனக்கேலம்மான் திரிவிக்கிரமனையே" என்று—எம்பெருமான் ஸர்வலோக வ்யாபியானது தம்மைக் கைப்பற்றிக் கொள்வதற்காகவேயென்று நம்மாழ்வார் அநுஸந்தித்தது போல இவ்வாழ்வாரும் அநுஸந்திக்கின்றமை முதலடியிலே நன்கு விளங்கும். ... ... ... (நச)

இனிதென்பர் காம மதனிலு மாற்ற *
இனிதென்பர் தண்ணீரு மெந்தாய் *—இனிதென்று
காமநீர் வேளாது நின்பெருமை வேட்பரேல் *
சேமநீ ராகும் சிறிது. (நரு)

எந்தாய் — என் ஸ்வாமியானவனே!,

(பாமரர்கள்)

காமம் — ஹேயமான சப்தாதி விஷயங்களை

இனிது என்பர் — போக்யமாகக் கொள்வர்;

(விரக்தர்களுங்கூட)

தண்ணீர் அதனிலும் ஆற்றவும் இனிது என்பர் — அந்த சப்தாதி விஷயங்களிற் காட்டிலும் தண்ணீர் மிகவும் போக்யமென்பர்கள்;

காமம் நீர் — (கீழ்ச் சொல்லப்பட்ட) காமத்தையும் தண்ணீரையும்

இனிது என்று வேளாது — போக்யமாகக் கொண்டு அவற்றிலே ஆசை கொள்ளாமல்

நின் பெருமை சிறிது வேட்பர் எல் — உன்னுடைய போக்யதையையே கொஞ்சமேனும் விரும்பி மேல் விழுவாராகளாயி(ல்) (அது)

சேமம் நீர் ஆகும் — (எல்லா நிலைமையிலும்) ரக்ஷகமான தன்மையை யுடையதாகும்.

1. திருவாய்மொழி 2—7—6.

* * *—1. "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணன்" என்கிறபடியே பரமபோக்யனான நீயிருக்கையில், நாட்டிலுள்ளவர் உன்னையே தாரகபோஷக போக்யங்களாகப் பற்றாமல் சப்தாதிவிஷயங்களை விரும்பித் திரிகின்றார்களே! என்று உலகத்தார் செயலை வெறுத்து உன்னைப் பற்றுவதே எல்லார்க்கும் தஞ்சமென்று கூறுகிறார்.

'காமம்' என்பது ஆசைக்குப் பேராயினும் ஆசைப்படுவதற்கு உரிய விஷயாந்தரங்களையும் சொல்லக் கடவது; கூத்துப் பார்ப்பது, பாட்டுக்கேட்பது, பூச்சூடுவது, சாந்து பூசுவது, மாதர்களை யணைவது முதலியவை விஷயாந்தரங்களெனப்படும்; இவையே போக்யமென்று ஒழிவர் பலர்; மற்றும் பலர் விஷயாந்தரவிரக்தர்களென்று பெயர் சுமந்தும் சோற்றையுந் தண்ணீரையும் விட்டிருக்கமாட்டாமல் அவற்றை போக்யமாகக் கொள்வர். அநந்யபோக்யத்வத்தை ஸ்வரூபமாகவுடைய அதிகாரிகள் முதலடியிற் சொன்ன விஷயாந்தரங்களையும் இரண்டாமடியிற் சொன்ன தண்ணீர் முதலியவற்றையும் போக்யமாகக் கொள்ளாது "எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே" "அமுதிலுமாற்றவினியன்" "கன்னலங்கட்டி தன்னைக் கனியை யின்னமுதந்தன்னை" என்று பரமபோக்யனாகச் சொல்லப்படுகிற உன்னையே விரும்பப்பெறில் இவ்விருப்பமே அவர்கட்குச் சேமமாகும் என்றாராயிற்று.

இரண்டாமடியில் 'தண்ணீர்' என்றதும் மூன்றாமடியில் 'நீர்' என்றதும்—சோறு, வெற்றிலை முதலியவற்றுக்கும் உபலக்ஷணமென்க. "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று பகவத்கீதையிலே துர்லபனாகச் சொல்லப்பட்டுள்ள மஹாத்மாவாக இருக்குமவர்கட்கே குறைவற்ற சேமமுண்டாகுமென்றதாயிற்று.

சேமநீர்='க்ஷேமம்' என்னும் வடசொல் சேமமெனத் திரிந்து. நீர்—நீர்மையை யுடையது; நீர்மையாவது தன்மை. (ருரு)

சிறியார் பெருமை சிறிதின்க ணெய்தும் *
அறியாரும் தாமறியா ராவர் *—அறியாமை
மண்கொண்டு மண்ணுண்டு மண்ணுமிழ்ந்த மாயனென்று *
எண்கொண்டேன் னெஞ்சே யிரு. (ருசு)

---

1. திருவாய்மொழி 6—7—1.

சிறியார் — (இயற்கையான மேன்மை சிறிதுமில்லாமல்) அற்பரான ஸம்ஸாரிகளுடைய

பெருமை — ('நானே ஈச்வரன்' என்று அஹங்கரிப்பதால் வருகிற) மேன்மையானது

சிறிதின்கண் எய்தும் — (தமக்குப் பழமையாயுள்ள) தாழ்விலேயே கொண்டு சேர்ப்பிக்கும்;

அறியாரும் — அவிவேகிகளும் (தங்களை ஸர்வஜ்ஞராக நினைத்திருந்தார்களாகிலும்)

தாம் அறியார் ஆவர் — (நன்மை தீமைகளைத்) தாங்கள் அறியாதவர்களாகவே ஒழிந்திடுவர்;

என் நெஞ்சே — என்மனமே!,

அறியாமை — பிறர் அறியாதபடி

மண் கொண்டு — (மாவலியிடத்தில்) பூமியைப் பெற்றவனும்

மண் உண்டு — அந்தப்பூமியை (ப்ரளயத்திலே) திருவயிற்றில் வைத்தவனும்

மண் உமிழ்ந்த — (பிறகு) அந்தப்பூமியை வெளிப்படுத்தினவனுமிருக்கிற

மாயன் என்று — ஆச்சர்யகரனை எம்பெருமான் என்று

எண் கொண்டு — இடைவிடாது கருதி

இரு — (அவனைப்பற்றின நமக்கு ஒரு குறை இல்லை யென்று) நிர்ப்பரனாக இருப்பாயாக.

* * *—கீழ்ப்பாட்டில் நாட்டாருடைய செயலை நினைந்து வெறுத்த ஆழ்வார், இதில் தம் திருவுள்ளத்தை நோக்கி 'நெஞ்சே! உலகத்தார் ஒழிகிறபடி ஒழிக; நீ எம்பெருமானுடைய சேஷ்டிதங்களையே எப்போதும் சிந்தித்துக்கொண்டிரு' என்று உபதேசிக்கிறார்.

சிறியார் பெருமை சிறிதின்கண் எய்தும்=உலகத்தில், இயற்கையாகச் சிறிதேனும் மேன்மையுடையவர்களாயிருந்தால் அவர்கள் அதிகப்படியாக மேன்மையை ஏறிட்டுக் கொண்டாலும் ஒருவாறு ஏற்கும்; சிறிதும் மேன்மையற்றவர்கள் 'நாமே பெரியோம்; நம்மிற் பெரியாரில்லை' என்று மார்பு நெறித்தால் அந்த அஹங்காரமானது அவர்களுடைய சிறுமையையே நன்கு ஸ்தாபித்துவிடும். ஆகையாலே அப்படிப்பட்ட அஹங்காரிகள் இஷ்டப்படி தொலையட்டும் என்கை. அன்றியே, அற்ப தேவதைகளான

பிரமன் முதலியோரைப் பெருந் தலைமை யுடையவராக மதிப்பது நம்மைத் தாழ்ந்த நிலைமையிற் சேர்ப்பிக்கு மென்றவாறுமாம். எய்தும்—எய்துவிக்கும்; பிறவினையில் வந்த தன்வினை. இவ்வாறு வருவதனை வடநூலார் ‘அந்தர்ப்பாவிதணிச்’ என்பர்.

அறியாரும் தாமறியாராவர்=ஒன்றுந் தெரியாத மூடர்கள் எல்லாமறிந்தவர்கள்போலப் பாவித்திருந்தார்களாகிலும், அப்படிப்பட்டவர்கள் நன்மை தீமைகளைத் தாங்களுமறியார்கள்; பிறர் போதித்தாலும் கேட்டு உணரமாட்டார்கள்; ஆகவிப்படி சிறியாரும் அறியாரும் மலிந்துகிடக்கிற இந்நிலத்திலே, நெஞ்சே! நீ அவர்களின் வகுப்பில் சேராமல் பகவத்விஷயத்தையே சிந்தித்திரு—என்கிறார் பின்னடிகளால்.

அறியாமை=எதிர்மறை வினையெச்சம். ‘திருமால்தான் இப்படி வாமனவேஷங்கொண்டு யாசகனாய் வந்தா’ னென்று பிறர் அறியாதவண்ணம் என்றபடி. .... .... (௩௬)

இருந்தண் கமலத் திருமலரி னுள்ளே *
திருந்து திசைமுகனைத் தந்தாய் *—பொருந்தியநின்
பாதங்க ளேத்திப் பணியாவேல் * பல்பிறப்பும்
ஏதங்க ளெல்லா மெமக்கு. (௩௭)

| | | | |
|---|---|---|---|
| இரு | பெரிய | நின் | உன்னுடைய |
| தண் | குளிர்ந்த | பாதங்கள் | திருவடிகளை |
| கமலத்து | திருநாபிக்கமலத்தின் | ஏத்தி | வாயாரத்துதித்து |
| இரு மலரின் உள்ளே | பெருமை பொருந்திய பூவில் | பணியா எல் | வணங்கித் தொழு தற்கு உறுப்பாக விட்டால் |
| திருந்து | ஸமர்த்தனை | | |
| திசைமுகனை | நான்முகக்கடவுளை | எமக்கு | எங்கட்கு |
| தந்தாய் | படைத்தருளின பெருமானே!, | பல் பிறப்பும் எல்லாம் | பலவகையாகப் பிறக்கின்ற பிறவிகளெல்லா |
| பொருந்திய | ஸர்வலோக சரண்யனாகி எல்லாரோடும் பொருந்தியிருக்கிற | ஏதங்கள் | பயனற்றவையேயாம். |

* * *—கீழ்ப்பாட்டிலருளிச்செய்தபடி எம்பெருமானிடத்து அந்வயிப்பதற்குப் பாங்கல்லாத பிறவிகள் வீண் என்கிறார். எம்பெருமான் ஆத்மாக்களுக்குப் பல ஜன்மங்களை யுண்டாக்குவது ஒரு ஜன்மத்திலில்லாவிட்டாலும் ஒரு ஜன்மத்திலாவது இவை நம்மை ஆச்ரயித்து ஈடேறவேணுமென்னும் விருப்பத்தினாலேயே: இந்தவிருப்பம் நிறைவேறாவிடில் ஆத்மாக்களுக்கு நேர்கின்ற பிறவிகளெல்லாம் வியர்த்தமேயென்க.

பின்னடிகளுக்கு வேறு வகையாகவுங் கருத்துரைக்கலாம்;—எனக்கு நேர்ந்த பல பிறவிகளும் உன் நினைவின்படி உன்னை ஆச்ரயிப்பதற்கு உறுப்பாகவேணும்; அங்ஙனம் ஆகாவிடில், உலகத்திலே பிறக்கின்ற உயிர்களின் துயரமெல்லாம் என்னொருவனுக்கு உண்டாகும்—என்று. இக்கருத்தில், ஏதங்கள்—துக்கங்கள் என்கை.

முன்னடிகளில், 'நான்முகனை உந்திக்கமலத்தில் தோற்றுவித்தவனே!' என விளித்தது—முமுக்ஷுக்கள் சரணம் பற்றுதற்கு உரியவனே! என்றபடி: இப்பொருள் எங்ஙனே கிடைக்குமென்னில்; "யோ ப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம்......முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே" [முதலில் பிரமனைப் படைப்பவன் யாவனோ அப்பெருமானை முமுக்ஷுவாகிய நான் சரணம் புகுகின்றேன்] என்பதாக உபநிஷத்தில் ஓதியிருப்பதுகொண்டு இப்பொருள் கிடைக்குமென்பது பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம்.

திருந்து திசைமுகன்=ஸ்ருஷ்டி செய்யவேண்டும் விதத்தை ஒருமுறை சொல்லிக்கொடுத்துவிட்டால் அதில் அடிக்கடி ஸந்தேஹங்கொண்டிராமல் புத்தி சாதுர்யத்தாலே முற்றும் நிர்வஹிக்க வல்ல நான்முகன். ... .... ... (௩௭)

எமக்கென் றிருநிதிய மேமாந் திராதே *
தமக்கென்றும் சார்வ மறிந்து *—நமக்கென்றும்
மாதவனே யென்னும் மனம்படைத்து * மற்றவன்பேர்
ஓதுவதே நாவினா லோத்து. (௩௮)

| | |
|---|---|
| இரு நிதியம் | (' இப்பொருளை எப்போது நாம் கொள்ளை யடிக்கப் போகிறோம்' என்று அயலார் எதிர்பார்த்திருப்பதற்குக் காரணமான) பெருஞ் செல்வத்தை |
| எமக்கு என்று | தங்களுடையதாக நினைத்து |
| ஏமாந்து இராதே | மனச்செருக்குக் கொண்டிராமல் |
| தமக்கு என்றும் சார்வம் அறிந்து | தங்களுக்கு எப்போதும் ரக்ஷகமாயிருக்கக்கூடிய உபாயத்தை யறிந்து |
| நமக்கு என்றும் மாதவனே என்னும் மனம் படைத்து | 'நமக்கு எக்காலத்திலும் எம்பெருமானே சரணம்' என்று துணிந்திருக்கும் நெஞ்சையுடையராய் |
| மற்று | அதற்குப்பின்பு |
| அவன் பேர் | அத்திருமாலினது திருநாமங்களை |
| ஓதுவதே | ஸங்கீர்த்தநம் பண்ணுவதே |
| நாவினால் ஓத்து | நாவுக்கு ஓதுவதற்கு உரிய விஷயம். |

* * *—உலகத்தில் தனவான்களென்று பேர் படைத்துள்ள பலர் 'நமக்கு ஏராளமான செல்வமிருக்கும்போது என்ன குறை? இதுவே நமக்கு ஆபத்பந்து' என்றெண்ணி எம்பெருமானை நெஞ்சிலும் நினையாதே பணத்தையே தொட்டுத்தொட்டுப் பார்த்துக் கொண்டு காலங்கழிப்பதுண்டே; அன்னவர்களுடைய நெஞ்சிலே உறுத்தும்படி இப்பாசுர மருளிச்செய்கிறார். 1. "ஒரு நாயகமாய் ஓட வுலகுடனாண்டவர், கருநாய் கவர்ந்த காலர் சிதைகியபானையர்; பெருநாடுகாண இம்மையிலே பிச்சைதாங் கொள்வர்" என்று தொடங்கிப் பல பாசுரங்களிலே நம்மாழ்வாரருளிச்செய்த செல்வ நிலையாமையை இவர் ஓரடியால் சுருங்க வருளிச்செய்தனரென்க.

இடத்தைவிட்டுச் செல்வதையே இயல்வாகவுடையதாதல் பற்றியே ஸம்பத்துக்குச் செல்வமென்று பெயரிடப்பட்டதாதலால் இப்படி நிலையற்றதான செல்வத்தை நம்பிச் செருக்குக்கொண்டிராதே 'எப்போதும் ஸ்திரமாயிருக்கக்கூடிய பற்றுக்கோடு எது?' என்று ஆராய்ந்து பார்த்து 'திருமகள் கொழுநனான எம்பெருமானே நமக்கு என்றும் சார்வம்' என்கிற தெளிவுபெற்று அவனுடைய திருநாமங்களை ஓதுவதே உறும்—என்றாராயிற்று.

1. திருவாய்மொழி 4-1-1.

நிதியம்=‘நிதி’ என்னுஞ் சொல் ‘அம்’ சாரியை பெற்று வந்துள்ளது. இருநிதி-பெருத்தநிதி. ஏமாத்தல்-களித்தல். சார்வம்-‘சார்வு’ என்னுஞ் சொல் ‘அம்’ சாரியை பெற்றது. (ருஅ)

ஓத்தின் பொருள்முடிவு மித்தனையே * உத்தமன்பேர்
ஏத்துந் திறமறிமி னேழைகாள் *—ஓத்ததனை
வல்லீரேல் நன்றதனை மாட்டீரேல் * மாதவன்பேர்
சொல்லுவதே யோத்தின் சுருக்கு. (ருகூ)

| | | | |
|---|---|---|---|
| ஏழைகாள் | கண்டகண்ட தேவதைகளின் கால்களி லெல்லாம் விழுகிற அறிவு கேடர்களே !, | சொல்லுவதே | உச்சரிப்பதே |
| ஓத்து அதனை | வேதமோதுவ தாகிற காரியத்தை (ச் செய்ய) | ஓத்தின் சுருக்கு | ஸகல வேதங்களின் ஸாரமாகும்; |
| வல்லீர் ஏல் | ஸமர்த்தர்களா யிருப்பீர்களாகில் | ஓத்தின் பொருள் முடிவும் இத்தனையே | வேதத்தினுடைய அர்த்தங்களில் நிஷ்கர்ஷிக்கப் பட்டதும் இவ்வளவே; (ஆகையாலே) |
| நன்று | அப்படியே வேதமோதுவது நல்லது; | உத்தமன் | புருஷோத்தமனை எம் பெருமானுடைய |
| அதனை மாட்டீர் ஏல் | அது செய்ய சக்தியற்றவர் களாகில் | பேர் | திருநாமங்களைக் கொண்டு |
| மாதவன் பேர் | திருமாலின் திருநாமங்களை | ஏத்தும் திறம் | (அவனைத்) துதிக்கும் வகையை |
| | | அறிமின் | தெரிந்து கொள்ளுங்கள். |

* * *—ஸகல வேத வேதாந்த விழுப்பொருளை உங்கட்குச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன் கேளுங்கள்; சக்தியுண்டாகில் வேதங்களை அதிகரித்து அவற்றின் மூலமாக ஸ்ரீமந்நாராயணனது திருநாமங்களை ஸங்கீர்த்தனம் பண்ணுங்கள். [அதாவது—“வேதாக்ஷராணி யாவந்தி படிதாநி த்விஜாதிபி:। தாவந்தி ஹரிநாமாநி கீர்த்திதாநி நஸம்ஶய:=அந்தணர்களால் வேதத்தின் எத்தனை அக்ஷரங்கள் ஓதப்படுகின்றனவோ அத்தனையும் பகவந் நாமங்களே ஓதப்பட்டனவாம்” என்றாற்போலே வேதாக்ஷரங்

களைக் கொண்டே ஹரிநாம ஸங்கீர்த்தநம் பண்ணுங்கள் என்ற வாறு.] அதில் சக்தியும் அதிகாரமுமில்லாதவர்களா யிருப்பின் 'கேசவா!, கோவிந்தா!, மாதவா!, மதுஸூதநா!' என்றுவது சொல்லிக்கொண்டிருங்கள். எவ்வகையினாலாவது எம்பெருமானது திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ணவேணுமென்பதே ஸகலவேத தாத்பர்யமாகும்.

“த்⁴யாயந் க்ருதே யஜந் யஜ்ஞைஸ் த்ரேதாயாம் த்³வாபரே(அ)ர்சயந்। யதா³ப்நோதி ததா³ப்நோதி கலௌ ஸங்கீர்த்ய கேஸ²வம்॥” கிருதயுகத்தில் தியானஞ் செய்வதாலும் த்ரேதாயுகத்தில் வேள்விகள் செய்வதாலும், த்வாபரயுகத்தில் அர்ச்சிப்பதாலும் எவ்விதமான பேற்றைப் பெறுகிறானோ, அவ்விதமான பேற்றைக் கலியுகத்தில் திருநாம ஸங்கீர்த்தநத்தினால் பெறுகிறான்” என்று சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்டுள்ளது காண்க: இதுபற்றியே “ஓத்தின் பொருள்முடிவு மித்தனையே” என்றும் “மாதவன் பேர் சொல்லுவதே ஓத்தின்சுருக்கு” என்றும் இதிற் சொல்லப்பட்டது.

வேதத்தில், இந்திரன் சந்திரன் வருணன் என்றிப்படி பல பல நாமங்கள் வந்தாலும் அந்தந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணன்வரையிற் சென்று அர்த்தஜ்ஞாந முண்டாக வேணுமென்பது வேதாந்திகளின் கொள்கை ஆகவே “வேதை³ஸ்²ச ஸர்வைரஹமேவ வேத்³ய:= ஸகலவேதங்களாலும் அறியப்படுபவன் நானே” என்று அப்பெருமானே சோதி வாய்திறந்து அருளிச்செய்திருப்பதற் கிணங்க வேதங்களிலுள்ள ஸகல தேவதா நாமங்களையும் பகவத்பரமாக நிர்வஹித்து அநுஸந்திப்பதே வேத தாத்பர்ய ஸாரமாகும்; இதற்கு சாஸ்த்ரஜ்ஞாநம் விசேஷமாக வேண்டியிருப்பதால் அவ்வளவுக்கு அதிகாரிகளல்லாதவர்கள் திருமகள்நாதனை ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கிற 'மாதவன்' முதலிய திருநாமங்களைக் கொண்டே ஏத்தலாம் என்பதும் இப்பாசுரத்தின் கருத்தாகும். ... ... ... .... (௩௯)

சுருக்காக வாங்கிச் சுலாவிநின்று * ஐயார்
நெருக்காமுன் நீர்நினைமின் கண்டீர் *—திருப்பொலிந்த
ஆகத்தான் பாத மறிந்தும் * அறியாத
போகத்தா லில்லை பொருள். (௪௦)

| | |
|---|---|
| ஐயார் | கோழையானது |
| சுருக்காக வாங்கி | சரீரத்தைச் சுருங்கவலித்து |
| சுலாவி நின்று | உடம்பு முழுதும் சூழ்ந்துகொண்டு நின்று |
| நெருக்கா முன் | (உயிர்போகும் போது கழுத்தளவிலே வந்து கூடி) நெருக்குவதற்கு முன்பே, |
| திரு பொலிந்த ஆகத்தான் பாதம் | பிராட்டியாலே விளங்குகின்ற திருமார்பை யுடைய பெருமானுடைய திருவடிகளை |
| நீர் நினைமின் | நீங்கள் சிந்தியுங்கோள் |
| அறிந்தும் | பகவத்விஷயத்தை அறிந்தவர்களா யிருந்தும் |
| அறியாத | அறியாதவர் களாகவே உங்களைச் செய்யவல்ல |
| போகத்தால் | சப்தாதி விஷயங்களால் |
| பொருள் இல்லை | ஒரு ப்ரயோஜனமு மில்லை. |

* * *—சிற்றின்பங்களில் ஆழ்ந்து திரிகின்ற விஷயப்ரவணர்களை விளித்து 'நீங்கள் இப்படி விஷயபோகங்கள் செய்வதனால் சிறிதும் பலனில்லை; லக்ஷ்மீநாதனான எம்பெருமானுடைய திருவடிகளையே சிந்தித்திருங்கள்; ஆனால் நீங்கள் என்ன நினைக்கலாமென்றால், எம்பெருமானைச் சிந்திப்பதற்கு இப்போது என்ன அவஸரம்? போகப் போகப் பார்த்துக்கொள்வோம் என்று நினைத்திருக்கலாம்; இவ்வழுக்குடம்பின் தன்மை உங்களுக்குத் தெரியாதோ? கோழையானது சரீரமெங்கும் சூழ்ந்துகொண்டு உடம்பைச் சுருங்கடித்து ஒன்றைச் சிந்திக்கவும் ஒன்றைச் சொல்லவும் முடியாதபடி திடீரென்று பண்ணிவிடும்; "ப்ராணப்ரயாணஸமயே கபவாதபித்தை: கண்டாவரோதநவிதௌ ஸ்மரணம் குதஸ்தே? = உயிர்போகுங்காலத்தில் கபம், வாயு, பித்தம் முதலியவற்றால் கழுத்து அடைபட்டுவிட்டால் உன்னைச் சிந்திக்கமுடியுமோ?" (முகுந்தமாலை) என்று ஞானிகளும் சொல்லிவைத்திருக்கிறார்கள்; நமக்கு இன்னமும் நீண்ட ஆயுள் இருக்கின்றதென்று நம்பியிருக்க இடமுண்டோ? இல்லை; ஆதலால் சிலேஷ்மம் வந்து கட்டி வருத்துவதற்கு முன்னமே திருமகள் கொழுந

னுடைய திருப்பாதங்களைச் சிந்தித்து வாழுங்கள். நீங்கள் பற்றியிருக்கிற விஷயபோகங்கள் எப்படிப்பட்டவையென்றால், பகவத் விஷயஜ்ஞாநம் சிறிது இருந்தாலும் அதனை உருமாய்க்குமவை; ஆகவே அப்படிப்பட்ட விஷயபோகங்களால் உங்களுக்கு அநர்த்தமே பலிக்குமேயன்றி வேறொரு நன்மையும் நேரிடாது என்று உபதேசித்தாராயிற்று.

ஐயார்='ஐ' என்று கோழைக்குப்பெயர்; 'ஆர்' விகுதி—இழிவு சிறப்பு. சுலாவுதல்—சூழ்ந்து கொள்ளுதல்.

அறிந்துமறியாத போகத்தால்=விவேகிகளையும் அவிவேகிகளாகச் செய்யவல்ல விஷயபோகம் என்கை. அன்றியே; 'விஷயபோகம் பொல்லாதது' என்று தெரிந்துகொண்டாலும் அந்தஅறிவின் பலனாக அதை விட்டுத் தொலைக்கவேணுமே; அப்படி விடமுடியாத போகம்—என்றும் பொருள் கூறுவர். இப்பொருளில்; 'அறியாத' என்றது—அறிவின் காரியமான விடுகையைப் பெறமாட்டாத என்றபடி. மஹாகவிகளின் பிரயோகங்களில், சொல் மிகச் சுருங்கிப் பொருள் மிக விரிந்திருக்குமே. .... .... (ச௦)

பொருளா லமருலகம் புக்கியல லாகாது —*
அருளா னறமருளு மன்றே *—அருளாலே
மாமறையோர்க் கீந்த மணிவண்ணன் பாதமே
நீமறவேல் நெஞ்சே நினை. (சக)

| | | | |
|---|---|---|---|
| அமருலகம் | சுவர்க்கலோகத்தை | அருளாலே | கிருபையினாலே |
| பொருளால் | 'இதுவும் ஒரு புருஷார்த்தம்' என்கிற எண்ணத்துடன் | மா மறையோர்க்கு | மஹர்ஷிகளுக்கு |
| புக்கு இயலல் ஆகாது | போய்ச்சேர முயல்வது தகாது; | ஈந்த | முத்தியளித்த |
| அருளான் | பரமதயாளுவான எம்பெருமான் | மணி வண்ணன் பாதமே | நீலமணி நிறத்தவனான எம்பெருமானது திருவடிகளையே |
| அறம் | புண்யத்தின் பயனான சுவர்க்க லோகத்தை | நெஞ்சே | நெஞ்சமே! |
| | | நீ மறவேல் | நீ மறவாதே |
| அருளும் அன்றே | தன்க்ருபையாலே கிடைக்கச் செய்வனும்; | நினை | தியானித்துக் கொண்டிரு. |

* * *—முன்னடிகட்குப் பலவகையாகப் பொருள்கொள்ள இடமுண்டு. கீழ்ப்பாட்டில் காம புருஷார்த்தத்தை நிந்தித்தார்; விஷயபோகங்கள் காம புருஷார்த்தத்தைச் சேர்ந்தவையாதலால் அவற்றை ஹேயமென்றது காம புருஷார்த்தத்தை ஹேயமென்ற வாறும். இப்பாட்டில் அர்த்த புருஷார்த்தத்தை நிந்திக்கிறார். விசேஷமாகப் பொருள்களை ஸம்பாதித்து அவற்றால் யஜ்ஞயாகங்களைப் பண்ணி அவற்றின் பலனாக ஸ்வர்க்கலோகத்தை யடைந்து ஸுகிப்பது—என்றொரு வழியுண்டே; அவ்வழியையும் மேற்கொள்ளவேண்டா வென்கிறது. பொருளால் அமருலகம் புக்கியலலாகாது = அர்த்த புருஷார்த்த மென்கிற திரவியங்களைக் கொண்டு ஸ்வர்க்கலோகத்தைப் பெறுவோமென்று அதற்கு முயற்சி செய்யலாகாது என்றபடி. அன்றியே, பொருளால் = 'இது நமக்குப் புருஷார்த்தம்' என்னும் புத்தியோடே, ஸ்வர்க்கலோக ப்ராப்தியை விரும்பி அதற்காக ஒரு பிரயத்நம் பண்ணவேண்டா என்றபடியுமாம். அருளான் அறமருளுமன்றே = ஸ்வர்க்கலோக ப்ராப்தியில் உங்களுக்கு விருப்பமிருந்தாலும் அதற்காக நீங்கள் எம்பெருமானையே அடிபணிந்தால் அவன் கருத்தறிந்து காரியஞ்செய்யுமவனாகையால் 'நம்மை அடுத்திருக்கு மிவர்களுக்கு ஸ்வர்க்கத்தில் நசையாகில் அதையும் அநுபவித்துத் திரட்டும்' என்று கிருபை பண்ணியருள்வன்; அதற்காக நீங்கள் தனிப்பட ஒரு ப்ரயாஸங்கொள்ள வேண்டா; எது வேணுமானாலும் மணிவண்ணன் பாதமே நினைக்கத்தகும்.—என்கிறார்.

"நெஞ்சே!—நீ மறவேல்" என்று தம்முடைய திருவுள்ளத்தை நோக்கிச் சொல்லுவதாயிருந்தாலும் இதை அந்யாபதேசமாகக் கொள்ளவேணும்; பிறரைக் குறித்துச் சொல்லவேண்டுவதையும் தம்மை நோக்கிச் சொல்லிக்கொள்வதுண்டு: திருவாய்மொழியில் (8—3—2) "சரணமாகிய நான்மறை நூல்களுஞ் சாராதே, மரணந்தோற்றம் வான்பிணி மூப்பென்றிவைமாய்த்தோம்" என்ற விடங்காண்க. இங்கு, முன்னிலையாகச் சொல்ல வேண்டியதைத் தன்மையாகச் சொல்லியிருத்தல் உணர்க.

அமருலகம்—'அமராருலகம்' என்பதன் விகாரம் 'அறம்' என்பது தர்மத்துக்குப் பேராயினும் தர்மத்தினால் ஸாத்யமான

புண்யலோகத்தைச் சொல்லுகிறது இங்கு. அருளும்=செய்யு மென் முற்று.

மூன்றாமடியில், "மாமறையோர்க்கு" என்றும் "மாமறையோற்கு" என்றும் பாடபேதமுண்டு: முந்தின பாடத்தில் பன்மை; பிந்தின பாடத்தில் ஒருமை. பன்மையாகில், தண்டகாரண்ய வாஸிகளான முனிகளைச் சொல்லுகிறது; சுகர், வாமதேவர் முதலிய ரிஷிகளைச் சொல்லவுமாம்; ஒருமையாகில், மார்க்கண்டேயனைச் சொல்லுகிறதாம். முக்தியளிக்கவல்ல முகுந்தன் பாதமேபற்றினால் முதலில் ஸ்வர்க்கத்தையும் பெறலாம்; காலக்கிரமத்தில் முக்தியையும் பெற்றுவாழலாம் என்பதும் இதில் தொனிக்கும்.

முதலடியில் 'அமருலகம்' என்றதும் இரண்டாமடியில் 'அறம்' என்றதும் மோக்ஷலோகத்தையே சொல்லுவதாகவும் ஒரு யோஜனையுண்டு; அப்போது, 'பொருளால்' என்றது—ஸாதநாநுஷ்டாநத்தினால் என்றபடி; ஆக, மோக்ஷத்துக்காக ஒரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேணுமென்பதில்லை; பரமதயாளுவான எம்பெருமான் அதை நிர்ஹேதுக கிருபையினாலே தந்தருள்வன்; அப்படியே பல வைதிகர்களுக்கு அவன் அருளியிருக்கிறான்; இப்படியாகில் எல்லார்க்கும் மோக்ஷமளிக்க வேண்டிவருமே யென்னில்; இந்த ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வாராமைக்காக அந்த மணிவண்ணனது திருவடிகளைச் சிந்தித்தல் வேண்டும்—என்பதாகக் கருத்துக் கொள்ளலாம். ... ... .... (சுக)

நினைப்பன் திருமாலை நீண்டதோள் காண *
நினைப்பார் பிறப்பொன்றும் நேரார் *—மனைப்பால்
பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்ப மெல்லாம்
துறந்தார் தொழுதாரத் தோள். (சஉ)

திருமாலை — லக்ஷ்மீநாதனை எம்பெருமானை

நீண்ட தோள் காண நினைப்பன் — (அவனது) சிறந்த திருத்தோள்களைக் கண்டு அநுபவிப்பதற்காக நினைக்கின்றேன்;

நினைப்பார் — இப்படி நினைப்பவர்கள்

ஒன்று பிறப்பும் — ஒருவகை யோனிப்பிறப்பையும்

| | | | |
|---|---|---|---|
| நேரார் | அடையமாட்டார்கள்; | மனைப்பால் பிறந்தார் பிறந்து எய்தும் பேர் இன்பம் எல்லாம் | ஸம்ஸாரத்தில் பிறந்தவர்கள் ஜன்மமெடுத்ததனால் அடையக்கூடிய சிற்றின்பங்களையெல்லாம் |
| அத் தோள் | அந்தத் திருத்தோள்களை | | |
| தொழுதார் | தொழுமவர்கள் | துறந்தார் | வெறுப்பவராவர். |

* * *—ஸம்ஸாரபோகங்களைத் துறந்து அவனை அநுஸந்திக்குமவர்களே பிறவிகளை அடியறுக்கவல்லவரென்கிறார். திருமாலை நீண்டதோள்காண நினைப்பன்=ஐச்வரிய மளிக்கவேணுமென்றும் ஸந்தான மளிக்கவேணுமென்றும் பலபல கோரிக்கைகளை முன்னிட்டு எம்பெருமானைப் பலர் அடிபணிவராகிலும் நான் அப்படி ஒரு கோரிக்கையும் கருதினவனல்லேன்; "தோள் கண்டார் தோளே கண்டார்" என்னும்படியான அவனது தோளழகை ஸேவிக்கப் பெறவேணுமென்பது தவிர வேறோராசையும் எனக்கில்லை என்றவாறு. இப்படி எம்பெருமானுடைய திவ்யாவயவத்தை ஸ்வயம் போக்யமாக நினைப்பவர்கள் "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பு மிந்நின்ற நீர்மை இனியாமுறாமை" என்று ஆழ்வார் பிரார்த்தித்த பிறப்பின்மையைப் பெற்று நித்யமுக்தராய் வாழ்ந்திடுவர்.

இனிமேல் பிறக்கமாட்டார்களென்பதுந்தவிர, இப்பிறவியிலும் ஸம்ஸாரிகள் உகக்கிற சிற்றின்பங்களை உகவாதே அவற்றைக் காறியுமிழ்ந்து கைவிடும்படியான விரக்தியும் பெறுவர்கள் அவனது திருத்தோள்களை ஸேவிக்குமவர்கள்—என்கிறார் பின்னடிகளில்.

பின்னடிகளை இரண்டுவகையாக யோஜிக்கலாம்;—அத்தோள் தொழுதார் (எவரோ அவரே) மனைப்பால் பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் துறந்தாராவர்; மனைப்பால் பிறந்தா பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் துறந்தார் எவரோ அவரே அத் தோள் தொழுதாராவர்—என்று. சிற்றின்பங்களை வெறுத்தவர்களே எம்பெருமானுடைய வடிவழகில் ஈடுபட்டவராவர்; எம்பெருமானுடைய வடிவழகில் ஈடுபட்டவர்களே சிற்றின்பங்களை வெறுக்கவல்லவராவர்—என்றவாறு.

மனைப்பால்=பால்—ஏழனுருபு. சிற்றின்பத்தைப் 'பேரின்பம்' என்றசொல்லாற் சொன்னது எதிர்மறை யிலக்கணையாம்: ஸம்ஸாரிகளுடைய நினைவாலே பேரின்பமென்கிறது.

எம்பெருமானார் ஒருநாள் உச்சிப்போதில் திருக்காவிரியிலே மாத்யாஹ்நிகம் அநுஷ்டித்துக் கொண்டிருக்கையில், ஒரு காமுகன் தன்னுடைய மனைவியை அழைத்துக்கொண்டு அக்கரையில் நின்றும் ஆற்றிலே வரும்போது வெய்யிலின் கடுமையினால் அவளுக்கு ஒரு வாட்டம் வாராமைக்காக அவன் அவளுக்கு நடைபாவாடை போட்டுக்கொண்டும் குடைபிடித்துக் கொண்டும் மற்றும் பல உபசாரங்கள் செய்துகொண்டும் மிக்க ஆதரந்தோற்ற அழைத்துக் கொண்டு வருவதை எம்பெருமானார் கண்டு 'அப்பா! இவ்வளவு உபசாரங்கள் பண்ணுகிறாயே, என்னவிசேஷம்?' என்று கேட்டருள, 'இவளுடைய கண்ணழகிலே நான் மிகவும் ஈடுபட்டிருப்பேன்; அதற்கொரு குறைபாடு நேராமைக்காக உபசாரங்களைப் பண்ணி வருகிறேன்' என்று அவன் விடையளிக்க, அதை எம்பெருமானார் கேட்டு 'இதனிலும் விஞ்சிய அழகுவாய்ந்த கண்களை நீ கண்டதில்லையோ?' என்ன, 'எங்குங் கண்டதில்லை' என்று அவன் சொல்ல, 'அப்படிப்பட்ட கண்களைக்காட்டினால் என்ன செய்வாய்?' என்று உடையவர் கேட்க, 'இங்ஙனே ஸகல உபசாரங்களும் அங்கே பண்ணக்கடவேன்' என்று விடையளிக்க, அப்போதே நம்பெருமாள் ஸந்நிதியினுள்ளே அழைத்துக்கொண் டெழுந்தருளி 1. "அரங்கத்தமலன் முகத்துக் கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி, நீண்டவப் பெரியவாய கண்களென்னைப் பேதைமை செய்தனவே" என்னப்பட்ட திருக்கண்களை ஸேவிக்கப் பண்ணினவாறே அத்தம்பதிகளிருவரும் அத்திருக்கண்களுக்கு அற்றுத் தீர்ந்தனர் என்றொரு இதிஹாஸம் ப்ரஸித்தம்; இதனை இப்பாட்டின் பின்னடிகளுக்குப் பொருத்தமாக அநுஸந்திப்பது. ... (சஉ)

தோளிரண் டெட்டேழும் மூன்றும் முடியனைத்தும் *
தாளிரண்டும் வீழச் சரந்துரந்தான்—தாளிரண்டும் *
ஆர்தொழுவார் பாத மவைதொழுவ தன்றே * என்
சீர்கெழுதோள் செய்யுஞ் சிறப்பு. (சங)

1. அமலனாதிபிரான்—8.

தோள் இரண்டு எட்டு ஏழும் மூன்றும் — இருபது தோள்களும்
முடி அனைத்தும் — (பத்தாகிய) எல்லாத் தலைகளும்
தாள் இரண்டும் — இரண்டு கால்களும்
வீழ — முடியும்படி
சரம் துரந்தான் — அம்புகளைச் செலுத்தின பெருமானுடைய
தாள் இரண்டும் — இரண்டு திருவடிகளையும்
தொழுவார் ஆர் — தொழுகிறவர்கள் எவரோ (அவர்களது)
பாதம் அவை — திருவடிகளை
தொழுவது அன்றே — ஸேவிப்பதன்றோ
என் சீர் கெழு தோள் செய்யும் சிறப்பு — எனது அழகிய தோள்கள் (எனக்குச்) செய்யும் உபகாரமாம்.

* * *—எம்பெருமானுடைய திருத்தோள்களைத் தொழுவதைப் புருஷார்த்தமாகக் கீழ்ப்பாட்டி லருளிச்செய்தார்; 'அவனுடைய திருத்தோள்களைத் தொழவேணுமென்னும் நிர்ப்பந்தம் எனக்கில்லை; அவனுடைய திருவடிகளைத் தொழுமவர் எவரோ அவருடைய திருவடிகளைத் தொழுவதே எனக்குப் புருஷார்த்தம்' என்கிறார் இப்பாட்டில். எம்பெருமானிடத்து அன்பு செய்வதிற் காட்டிலும் பாகவதர்களிடத்து அன்பு செய்வதே சிறந்ததென்னும் நூற்கொள்கை இதில் தழுவப்பட்டதென்க. "ஸித்திர்பவதி வா நேதி ஸம்சயோச்யுதஸேவிநாம்। ந ஸம்சயோஸ்தி தத்பக்தபரிசர்யாரதாத்மநாம் = எம்பெருமானை அடிபணிந்தவர்களுக்குப் பேறு தப்பாமல் கிடைக்குமென்று துணிந்து சொல்லமுடியாது; ஸந்தேஹமுண்டு; பாகவதர்களை அடிபணிந்தவர்களுக்கு அப்படிப்பட்ட ஸந்தேஹத்திற் கிடமில்லை; பேறு கைபுகுந்தே தீரும்" என்று சாஸ்த்ரங்களிற் சொல்லியிருப்பது காண்க

இரண்டும் எட்டும் ஏழும் மூன்றுங் கூடினால் இருபது; "தோள்களிருபதும்" என்னாமல் "தோளிரண்டெட்டேழுமூன்றும்" என்று விரித்துரைத்தது—இராவணனைச் சித்ரவதம் பண்ணினமை தோற்றுதற்காக; ஒரு பிரயோகத்திலேயே இருபது தோள்களையும் ஒருசேரத் துணித்தொழித்தால் நற்கொலையாகுமே;

அங்ஙனாகாமல், முதலில் இரண்டு தோள்களைத் துணித்துக் குருதி குழம்பி யெழ விட்டிடுதல், பின்னையொருகால் எட்டுத் தோள்களைத் துணித்தல், மற்றுமொருகால் ஏழு தோள்களைத் துணித்தல், முடிவில் மூன்று தோள்களைத் துணித்தல்—ஆகவிப்படி சித்திர வதம் செய்தமையைத் தெரிவிக்கிறபடி.

என் சீர்கெழுதோள் செய்யுஞ் சிறப்பு=உலகத்தில் எல்லா மனிதர்களுக்கும் கைகள் படைக்கப்பட்டிருந்தாலும் அவர்கள் அந்தக் கைகளைக்கொண்டு பிறர் பொருளைக் கவர்தல், நல்லாரைக் கொல்லுதல் முதலிய தொழில்களைச் செய்து கொள்வர்; எனது கைகள் அப்படிப்பட்ட தொழில்களில் எனக்கு உதவிபுரியவேண்டா; பாகவதர்களைத் தொழுவதற்கு உறுப்பாகுமேல் இதுவே எனக்குச் செய்த மஹோபகாரமென்கிறார். .... (௪௩)

சிறந்தார்க் கெழுதுணையாம் செங்கண்மால் நாமம் *
மறந்தாரை மானிடமா வையேன் *—அறந்தாங்கும்
மாதவனே யென்னும் மனம்படைத்து * மற்றவன்பேர்
ஓதுவதே நாவினா லுள்ளு. (௪௪)

| | |
|---|---|
| சிறந்தார்க்கு | ஸ்ரீவைஷ்ணவோத் தமர்களுக்கு |
| எழு துணை ஆம் | உஜ்ஜீவந ஹேதுவான துணையாகின்ற |
| செம் கண் மால் | செந்தாமரைக் கண்ணனான பெருமானுடைய |
| நாமம் | திருநாமத்தை |
| மறந்தாரை | மறப்பவர்களை |
| மானிடம் ஆ | மநுஷ்யயோனியிற் பிறந்தவர்களாக |
| வையேன் | என்னெஞ்சில் கொள்ள மாட்டேன்; |
| அறம் தாங்கும் மாதவனே என்னும் மனம் படைத்து | "தர்மஸ்தாபநம் பண்ணவல்ல திருமாலே!" என்று கூவி யழைக்கும்படியான அத்யவஸாயங்கொண்டு |
| மற்று | மேலும் |
| அவன் பேர் | அவனது திருநாமத்தை |
| நாவினால் ஓதுவதே | நாவினால் சொல்லுவதையே |
| உள்ளு | (ப்ராப்தமென்று) அநுஸந்தித்திரு. |

[நெஞ்சமே! என்று விளி வருவித்துக் கொள்க.]

* * *—'சிறந்தார்' என்றது—பகவத்கீதையில் "ஜ்ஞாநீத் வாத்மைவ மே மதம்=ஞானியானவன் எனக்கே உயிராயிருப்பன்" என்று கீதாசார்யனை தானே அருளிச்செய்யும்படி அவனுடைய உகப்புக்கு இலக்கான மாஞானிகளே; அப்படிப்பட்டவர்கள் உஜ்ஜீவிப்பதற்கு உரிய துணையான எம்பெருமானுடைய திருநாமத்தை ஸர்வகாலமும் ஸ்மரிக்கவேண்டியது கடமையாயிருக்க, எவர்கள் மறந்திருக்கின்றார்களோ, அவர்களை மநுஷ்யகோடியில் இட்டு எண்ணமாட்டேன்—என்கிறார் முன்னடிகளில். 1. "ஆன்விடையேழன்றடர்த்தாற்கு ஆளானாரல்லாதார், மானிடவரல்லரென்று என் மனத்தே வைத்தேனே" என்றார் திருமங்கையாழ்வாரும்.

தாம் இருக்கவேண்டும்படியைத் தம்முடைய நெஞ்சுக்கு உரைக்கிறார் பின்னடிகளில். "நெஞ்சே" என்னும் விளி வருவித்துக்கொள்வது. நெஞ்சே!, 'தர்ம ஸம்ஸ்தாபநம் பண்ணுவதற்காக அவதரிக்கிறேன்' என்று தானே சொல்லிக்கொண்டபடி வேண்டியபோது திருவவதரித்துத் தருமநெறியைத் தாங்குகின்ற மாதவனே! என்று சொல்லி எம்பெருமானுடைய தன்மைகளையே அநுஸந்திக்கும்படியான உறுதிகொண்டு அவனது திருநாமங்களை ஓதுவதே உரியதென்று கொண்டிரு—என்று உபதேசித்தாராயிற்று. ... .... .... ... (௪௪)

உளதேன் றிறுமாவா ருண்டில்லை யென்று *
தளர்த லதனருகும் சாரார் *—அளவரிய
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும் *
பாதத்தான் பாதம் பயின்று. (௪௫)

| | | | |
|---|---|---|---|
| அளவு அரிய வேதத்தான் | அளவிட முடியாதபடி அநந்தமாயுள்ள வேதங்களினால் பிரதிபாதிக்கப் படுபவனும் | விண்ணோர் முடி தோயும் பாதத்தான் | நித்யஸூரிகளின் முடிகள் பணியப்பெற்ற திருவடிகளையுடையனுமான எம்பெருமானுடைய |
| வேங்கடத்தான் | திருமலையிலே வந்து நிற்பவனும் | பாதம் | திருவடிகளிலே |

1 பெரிய திருமொழி 11—7—9.

| | | | |
|---|---|---|---|
| பயின்று | பழகி (இருக்குமவர்கள்) | உண்டு இல்லை என்று | (செல்வம்) நேற்று இருந்து இன்று அழிந்துபோயிற் றென்று |
| உளது என்று இறுமாவார் | தமக்குச் செல்வ முள்ளதென்று செருக்குக் கொள்ள மாட்டார்கள் ; | தளர்தல் அதன் அருகும் சாரார் | தளர்ச்சியடையும் ஸ்வபாவத்தின் கிட்டவும் செல்ல மாட்டார்கள். |

* * *—பாகவதர்களின் பெருமையைப் பேசுகிறார். ஸகல வேதங்களினாலும் பரம்பொருளாகப் பிரதிபாதிக்கப்பட்டவனும், அந்த மேன்மை விளங்குமாறு திருமலையிலே வந்து நித்ய ஸந்நிதி பண்ணியிருப்பவனும், அங்கே நித்யஸூரிகளும் வந்து அடிபணிய நிற்பவனுமான எம்பெருமானுடைய திருவடிகளிற் பழகுகின்ற பாகவதர்கள் செல்வம் படைத்தாலும் 'நாம் செல்வம் படைக்கப் பெற்றோம்; நம்மோடு ஒத்தாரும் மிக்காருமில்லை' என்று செருக்குக் கொள்ளமாட்டார்கள் ; இருந்த செல்வம் அழிந்து போனாலும் 'ஐயோ ! ஏழைமை வந்து விட்டதே !' என்று சிறிதும் தளர்ச்சியடையமாட்டார்கள். 1. "களிப்பும் கவர்வுமற்று" என்ற பாசுரத்திற் சொன்னபடி லாபநஷ்டங்களில் ஒருபடிப்பட்ட சிந்தை நிலைமையையுடையராயிருப்பர். 2. "முனியார் துயரங்கள் முந்திலும், இன்பங்கள் மொய்த்திடினும் கனியார்மனம்...எங்களிராமாநுசனை வந்தெய்தினர்" என்ற ஸ்ரீ ராமாநுஜபக்தர்களைப் போன்றிருப்பர்களாம் பகவத்பக்தர்களும்.

உண்டில்லை யென்று=செல்வம் அடியோடு இல்லாதவர்களுக்கு அவ்வளவாகத் தளர்ச்சி இராது ; சிலநாள் இருந்து கழிந்தவர்களுக்கு அளவற்றதளர்ச்சி உண்டாக ப்ரஸக்தியுண்டே ; அப்படிப்பட்ட நிலைமையிலும் தளரமாட்டார்கள் என்கைக்காக "உண்டில்லை யென்று" என்றார் ; 'நேற்று உண்டாயிருந்தது, இன்று இல்லையா யொழிந்தது' என்று தளரமாட்டார்கள் என்கை.

அளவரிய வேதத்தான்=வேதங்களுக்கு அளவில்லையென்பது வேதத்திலேயே விளங்கக்காட்டப்பட்டுள்ளது. க்ருஷ்ணயஜுர்

1. திருவாய்மொழி. 2—3-10.
2. இராமாநுச நூற்றந்தாதி—17.

வேதத்தின் ப்ராஹ்மணத்தில் ஒருபகுதியான 'காடகம்' என்னும் சாகையில் முதல் ப்ரச்நத்தில் பதினோராவது அநுவாகத்தில் ஓர் உபாக்கியானம் ஓதப்பட்டிருக்கின்றது; அதாவது—முன்பொரு கால் 'பரத்வாஜர்' என்னும் மஹர்ஷியானவர் ஸகலவேதங்களை யும் ஓதி முடிக்கவேணுமென்ற முயற்சிகொண்டு அதற்குரிய ஆயுஸ் ஸைப் பெறுவதற்காக இந்திரனைக் குறித்து உபாஸனைசெய்து அவனை ப்ரஸந்நனாக்கி அவனுடைய அநுக்ரஹத்தால் ஒரு புரு ஷாயுஸ்ஸுக்கு நூறாண்டு விழுக்காடு முந்நூறாண்டுகொண்ட மூன்று ஆயுஸ்ஸுக்களை வரம்பெற்று அந்த வாழ்நாளில் குருகுல வாஸஞ் செய்து வேதமோதிவந்தார். முந்நூறாண்டும் முடிந்து ஜீர்ண சரீரராய்க் கிழத்தனமடைந்து சரமகாலமணுகிப் படுத்திருக் கும் அம்முனிவரை இந்திரன் வந்துகிட்டி 'ஓ பரத்வாஜமுனிவரே! மீண்டும் ஒரு நூறாண்டுகொண்ட ஆயுளை உமக்கு நான் கொடுப்பே னாகில் அந்த வாழ்நாளை நீர் எவ்விதமாகக் கழிக்க உத்தேசிக்கிறீர்? அந்த ஆயுஸ்ஸில் நீர் ஸாதிக்கவிரும்பும் புருஷார்த்தம் யாது? என்று கேட்க; முனிவர் 'வேறு நான் என்ன செய்யப் போகி றேன்? அந்த ஆயுஸ்ஸிலும் வேதாத்யயநமே செய்யக்கடவேன்' என்றார். அதைக்கேட்ட இந்திரன் 'ஓ! இவர் இதுவரை கழிந்த மூன்று ஆயுஸ்ஸில் மூன்று வேதங்களையும் பூர்த்தியாக ஓதிவிட்ட தாகவும் இன்னமும் ஒரு வேதம் குறைபட்டிருப்பதாகவும், அதை யும் இந்த நான்காவது ஆயுஸ்ஸில் ஓதிவிட்டால் சதுர்வேதீ என்று விருது பெற்றுவிடலாமென்றும் இவர் ஆசைப்படுகிறார் போலும்; இவருடைய ப்ரமத்தை நீக்குவோம்.' என்றெண்ணி, ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் என்ற மூன்று வேதங்களையும் தம் முடைய யோகஸாமர்த்தியத்தினால் மூன்று மலைகளாக்கி இதற்கு முன் அம்முனிவர் கண்டறியாத மலைவடிவமான அந்த வேதங்களை அவருக்குக் காட்டினான். பிறகு அவற்றுள் ஒவ்வொரு மலையி னின்றும் ஒவ்வொரு முஷ்டியால் தூள்களையெடுத்து அங்ஙனம் மூன்று முஷ்டிகளெடுத்துக் காட்டி 'ஓ முனிவரே! இம்மூன்று மலைகளும் வேதங்களே; அதில் ஒவ்வொரு துகளும் ஒவ்வொரு வேதமாதலால் வேதங்களுக்கு எல்லையே கிடையாது' என்றான். இவ்வார்த்தையைக்கேட்ட முனிவர் 'இப்படியாகில் இன்றளவும்

நாம் செய்த வேதாத்யயநம் எவ்வளவாயிருக்கும்' எனச் சிந்தை கொண்டபடியைக் குறிப்பாலறிந்த இந்திரன் 'முனிவரே! இம் மூன்று முஷ்டிகளில் அடங்கியுள்ள வேதராசியைத்தான் நீர் இதுவரை முந்நூறுண்டுகளாகக் குருகுல வாஸஞ்செய்து ஓதினீர்; இதோ மலைமலையாகக் கிடக்கும் வேதங்கள் உம்மால் ஓதப்படவில்லை' என்றானும். "அநந்தா வை வேதா:". (சரு)

பயின்ற தரங்கம் திருக்கோட்டி * பன்னாள்
பயின்றதுவும் வேங்கடமே * பன்னாள்—பயின்ற
தணிதிகழும் சோலை யணிநீர் மலையே *
மணிதிகழும் வண்தடக்கை மால். (சகூ)

| | |
|---|---|
| மணி திகழும் | நீலமணிபோல் விளங்குமவனும் |
| வண் தட கை | உதாரமாய் நீண்ட திருக்கைகளை யுடையனுமான |
| மால் | எம்பெருமான் |
| பயின்றது | நித்யவாஸம் செய்தருளுமிடம் |
| அரங்கம் திருக்கோட்டி | திருவரங்கமும் திருக்கோட்டியூருமாம்; |
| பல் நாள் | அநாதிகாலம் |
| பயின்றதுவும் | நித்யவாஸம் செய்யுமிடமும் |
| வேங்கடமே | திருமலையாம்; |
| பல் நாள் பயின்றதுவும்—; | |
| அணி திகழும் சோலை | அழகு விளங்குகின்ற சோலைகளையுடைத்தாய் |
| அணி | இந்நிலவுலகுக்கு அலங்காரமான |
| நீர்மலை | திருநீர்மலையாம். |

* * *—பாகவதர்கள் லாபநஷ்டங்களில் உகப்பும் வெறுப்புங் கொள்ளாதிருக்கும்படி எம்பெருமான் பல திவ்யதேசங்களில் ஸந்நிதிபண்ணி க்ருஷிபண்ணினுகையாலே அப்படிப்பட்ட திவ்யதேசங்களில் சிலவற்றைப்பேசி அநுபவிக்கிறுர். திருவரங்கம்பெரியகோயில், திருக்கோட்டியூர், திருவேங்கடம், திருநீர்மலை என்னுமித் திருப்பதிகளிலே எம்பெருமான் நெடுங்காலமாக வாழ்கின்றுனென்கிறுர்.

ஆச்ரிதர்கள் திருந்துவதற்காக எம்பெருமான் உகந்து வர்த்திக்கும் திருப்பதிகள் இங்ஙனே பல்லாயிரமுள்ளன; அவற்றுக்கு ஓர் வரையறையில்லை—என்றவாறு.

“அணிதிகழுஞ் சோலை” என்றதை நீர்மலைக்கு விசேஷண மாக்காமல் தனி விசேஷ்யமாகக் கொண்டு திருமாலிருஞ்சோலை யென்றுரைத்தலு மொக்கும். ... ... ... (சுசு)

மாலை யரியுருவன் பாதமல ரணிந்து *
காலை தொழுதெழுமின் கைகோலி *—ஞாலம்
அளந்திடந் துண்டுமிழ்ந்த வண்ணலைமற் றல்லால் *
உளங்கிடந்த வாற்றா லுணர்ந்து. (சஎ)

| | |
|---|---|
| ஞாலம் | பூமி முழுவதையும் |
| அளந்து | ஒருகால் அளந்தும் |
| இடந்து | மற்றொருகால் (வராஹமாகி) இடந்தும் |
| உண்டு | (பிரளயத்தில்) திருவயிற்றினுள் வைத்தும் |
| உமிழ்ந்த | பிறகு வெளிப்படுத்தியும் இப்படியெல்லாம் (ரக்ஷணைத் தொழில்) செய்த |
| அண்ணலை | ஸர்வ ஸ்வாமியான எம்பெருமானை |
| மற்று அல்லால் | கீழ்ச்சொன்ன வகையான ரக்ஷணத் தொழில்கள் தவிரவும் |
| உளம் கிடந்த ஆற்றால் | (அன்பருடைய நெஞ்சை உருக்கிக்கொண்டு அவர்களுடைய) நெஞ்சிலே கிடக்கும் விதங்களோடுகூட |
| உணர்ந்து | அநுஸந்தித்து, |
| | (முன்பொருகால் ப்ரஹ்லாதனுக் கருள் செய்வதற்காக) |
| மாலை | மாலைப்பொழுதிலே |
| அரி உருவன் | நரசிங்கமூர்த்தியாய்த்தோன்றின அப்பெருமானுடைய |
| பாதம் | திருவடிகளை |
| மலர் | புஷ்பங்களாலே |
| அணிந்து | அலங்கரித்து |
| காலை | சிற்றஞ் சிறுகாலையில் |
| கைகோலி தொழுது | கைகூப்பிவணங்கி |
| எழுமின் | உஜ்ஜீவியுங்கள். |

* * *—கீழ்ப்பாட்டிற் கூறியபடியே பல திருப்பதிகளில் கோயில் கொண்டெழுந்தருளி யிருக்குமவனுடைய திருவடிகளிலே புஷ்பார்ச்சனை பண்ணி “சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து உன் பொற்றாமரையடியே போற்றும்” என்கிறபடியே போற்றுங்

கோளென்று உலகத்தார்க்கு உபதேசிக்கிறார். ஒவ்வொரு திருப்பதியிலும் ஒவ்வொரு விபவாவதாரத் திருமேனியோடே ஸேவை ஸாதித்தருளுகின்றானாகையால் உபலக்ஷணமாக ஒரு திருமேனியை யெடுத்துக் கூறுகின்றார் ' அரியுருவன் ' என்று. எம்பெருமானை ஆராதிக்கும்போது ' இது நமக்கு ஸ்வரூபப்ராப்தம் ' என்றே ஆராதிக்க வேண்டுமாயினும் " [illegible] வாமதஃ = குணைர்தாஸ்ய முபாகதஃ" என்கிறபடியே திருக்குணங்களுக்குத் தோற்று அடிமைசெய்யும் முறைமையும் ஒன்றுண்டாகையாலே அத்திருக்குணங்களுக்கு ப்ரகாசகமாக அப்பெருமான் செய்தருளின பெருநன்றிகளைப் பாராட்டிக் கொண்டே அடிபணிய வேணுமென்கைக்காக ' ஞாலமளந்திடந் துண்டுமிழ்ந்த அண்ணலை ' என்கிறார். மாவலியைச் செருக்கடக்கி மண்ணளந்த மஹாகுணத்தையும் ஹிரண்யாக்ஷனைக் கொன்று பூமியைமீட்டுக் கொணர்ந்த மஹோபகாரத்தையும், பிரளயங்கொள்ளாதபடி உலகங்களைத் திருவயிற்றிலே அடக்கிக் காத்தருளின பெரு நன்றியையும், பிறகு வெளிப்படுத்தின குணத்தையும் வாய்வெருவிக்கொண்டு தொழுதெழுங்கள் என்றவாறு.

இப்படி நாட்டுக்குப் பொதுவாகச் செய்த உபகாரங்கள் மாத்திரமன்றியே, 1. " மருவித்தொழும் மனமேதந்தாய் " 2. " என்னைத் தீமனங்கெடுத்தாய் " என்றிப்படி பெரியார் மன முருகி அநுஸந்திக்கும் ஐகாந்திகமான உபகாரங்களும் பலவுண்டாகையால் அப்படிப்பட்ட மஹோபகாரங்களையுங்கூட அநுஸந்திக்க வேணுமென்கிறது ஈற்றடி. 3. "எத்திறம்! உரலினோ டிணைந் திருந் தேங்கிய வெளிவே!" என்றும் 4. " பிறந்தவாறும் வளர்ந்தவாறும்!" என்றும் மிக ஈடுபட்டு அநுஸந்திக்கும் குணசேஷ்டிதங்களும் ஈற்றடிக்குப் பொருளாம். ... ... (சஎ)

உணர்ந்தாய் மறைநான்கு மோதினாய் நீதி *
மணந்தாய் மலர்மகள்தோள் மாலே *—மணந்தாய்போய்
வேயிருஞ் சாரல் வியலிரு ஞாலஞ்சூழ் *
மாயிருஞ் சோலை மலை. (சஅ)

1. திருவாய்மொழி 2—7—7. 2. திருவாய்மொழி 2—7—8.
3. திருவாய்மொழி 1—3—1. 4. திருவாய்மொழி 5—10—1.

| | |
|---|---|
| மாலே | ஸர்வேச்வரனே!, |
| மறை நான்கும் | நான்கு வேதங்களையும் |
| உணர்ந்தாய் | (பிரளயந்தோறும்) ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்து பிறகு வெளியிடுகின்றாய்; |
| நீதி | அந்த வேதங்களின் பொருளை விவரிக்கவல்ல ஸ்ம்ருதி முதலிய உபப்ரும்ஹண நூல்களையும் |
| ஓதினாய் | (மநுமுதலிய மஹர்ஷிகள் முகமாக) அருளிச் செய்கின்றாய்; |
| மலர் மகள் | பூவிற்பிறந்த பெரியபிராட்டி யாருடைய |
| தோள் | திருத்தோளோடே |
| மணந்தாய் | கூடி வாழ்கின்றாய்; |
| வேய் இரும் சாரல் | மூங்கில்கள் நிறைந்த தாழ்வரையை யுடையதும் |
| வியல் | அற்புதமானதும் |
| இரு ஞாலம் சூழ் | பரந்த இப்பூமியிலுள்ளவர்களால் பிரதக்ஷிணஞ் செய்யப்படுவதுமான |
| மாயிருஞ் சோலைமலை பேராய் | திருமாலிருஞ் சோலைமலையிலே வந்து |
| மணந்தாய் | திருவுள்ளமுவந்து வாழ்கின்றாய். |

* * *—கீழ்ப்பாட்டில் "உளங்கிடந்த வாற்றாலுணர்ந்து" என்றதை விவரிப்பது போலும் இப்பாட்டு. 'அன்பர் மறக்க முடியாதபடி அவர்களுடைய நெஞ்சைக் கொள்ளை கொண்டிருக்கு முபகாரம் நான் என்ன செய்திருக்கிறேன்?' என்று எம்பெருமான் கேட்பதாகக்கொண்டு, பிரானே! நீ செய்தருளின மஹோபகாரங்கள் சொல்லாற் கூறும்பரமோ? கண்ணில்லாதவர்களுக்குக் கண் கொடுத்தாற்போலே வேதங்களையெல்லாம் வெளியிட்டருளினாய். அந்த வேதங்களின் அரும்பெரும் பொருள்களை விவரிப்பனவாய் வேதோபப்ரும்ஹணமென்று பேர்பெற்றனவான ஸ்ம்ருதீதிஹாஸ புராணாதிகளையும் முனிவர்களைக்கொண்டு பிரவசநம் செய்தருளினாய்; ஆச்ரிதர்களுடைய குற்றங்களையும் நற்றமாக உபபாதிக்கவல்ல பெரியபிராட்டியாரை ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியாதிருக்கின்றாய்; திருமலைமுதலிய திருப்பதிகளிலே படுகாடு கிடக்கின்றாய்; இப்படியாக நீ செய்தருளும் பெருநன்றிகளுக்கு எல்லையுண்டோ? என்றாராயிற்று.

உணர்ந்தாய் மறைநான்கும் = வேதங்கள் எம்பெருமானால் ஸ்ருஷ்டிக்கப்பட்டனவென்று சிலர் மயங்கிக்கிடப்பதுண்டு; ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் எம்பெருமான் நான்முகனுக்கு வேதோபதேசம் செய்வதாகச் சொல்லப்படுகிறதே, ஸ்ருஷ்டிக்கு முன்பு வேதம் இருக்கமுடியாதே, ஆதலால் ஈச்வரனால்தான் வேதம் செய்யப்பட்டிருக்கவேணும் என்று சில வைதிகர்களுங்கூட மயங்குவதுண்டு: உண்மை யாதெனில்; வேதத்துக்கு நாம் எப்படி கர்த்தாக்களல்லவோ அப்படியே எம்பெருமானும் கர்த்தாவல்லன்: உலகத்தின் ஸ்ருஷ்டியானது ஒன்றன்பின் ஒன்றாக அநாதிகாலமாய் நடந்து வருகிறது. ஒவ்வொருகல்பத்தின் ஆரம்பத்திலும் ஈச்வரன் நான்முகனுக்கு வேதத்தை உபதேசிக்கிறான்; ஆனால் முன்கல்பத்தில் வேதம் எவ்விதமான ஆநுபூர்வியோடு இருந்ததோ, அவ்விதமேயான ஆநுபூர்வியையுடையதாகவே மறுகல்பத்தின் ஆரம்பத்திலும் உபதேசிக்கிறான். பூர்வபூர்வ ஆநுபூர்விகளை அப்படியே எம்பெருமான் திருவுள்ளத்தில் ஸ்மரித்துக்கொண்டிருந்து எவ்விதமான மாறுதலும் செய்யாமல் இப்படியே அநாதிகாலமாக உபதேசித்து வருகிறான். இவ்வர்த்தம் விளங்கவே இங்கு ஆழ்வார் "மறை நான்கும் உணர்ந்தாய்" என்கிறார். ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் "ஸம்ஸ்காரோத்போதிதஸ்ஸந் ரஸயஸி—வேதாந்ஸ்ரோதஸ்ஸம் ததி:." என்ற ச்லோகத்தில் இவ்விஷயம் ஸாரமாக அருளிச்செய்யப்பட்டுள்ளது.

"மாயிருஞ்சோலைமலை" என்றது திருமாலிருஞ்சோலைமலையை என்றாவது திருவேங்கடமலையை என்றாவது கொள்ளலாம். (சஅ)

மலையேழும் மாநிலங்க ளேழு மதிர *
குலைசூழ் குரைகடல்க ளேழும் *—முலைசூழ்ந்த
நஞ்சுரத்துப் பெண்ணை நவின்றுண்ட நாவனென்று *
அஞ்சாதென் னெஞ்சே யழை. (சகூ)

என் நெஞ்சே எனதுமனமே!,

மலை ஏழும் { ஸப்த குலபர்வதங்களும் | மா நிலங்கள் ஏழும் } ஸப்தத்வீபங்களும்

| | | | |
|---|---|---|---|
| குலை சூழ் குரை கடல்கள் ஏழும் | கரையாலே சூழப்பட்டு ஒலிசெய்கிற ஸப்த ஸாகரங்களும் | நவின்று | (முலையுண்ணும் போது இடையிடையே மழலைச் சொற்கள்) சொல்லிக் கொண்டே |
| அதிர | அதிரும்படியாக | உண்ட | உண்டுமுடித்த |
| முலை சூழ்ந்த நஞ்சு உரத்து பெண்ணை | "முலையில் வியாபித்த விஷத்தாலுண்டான கொடுமையையுடைய (பூதனையென்னும்) பேய்மகளை | நாவன் என்று | திருப்பவளத்தையுடையவனே!" என்றுசொல்லி |
| | | அஞ்சாது | கூசாமல் |
| | | அழை | வாய்விட்டுக்கூப்பிடு. |

* * *—நெஞ்சே! எம்பெருமான் செய்தருளின மஹோபகாரங்களை எடுத்துரைக்கக் கேட்டாயன்றே; இப்படிப்பட்ட மஹோபகாரங்களை அநுஸந்தித்தால் நாம் வாயடைத்துக் கிடக்கக் கூடுமோ? உலகங்களெல்லாம் அதிரும்படி அப்பெருமான் திருநாமங்களைச் சொல்லிக் கதறவேண்டாவோ; மிகப்பெரியோனை அவனை மிக நீசரான நாம் எப்படி வாய்கொண்டு பேசலாம் என்று நீ அஞ்சியிருக்கிறாய்போலும்; அந்த அச்சத்தை ஒழித்திட்டு உரக்கக் கூப்பிட்டழை என்கிறார்.

"மலையேழும் மாநிலங்களேழும் குலைசூழ்குரைகடல்களேழும் அதிர" என்றவிது 'அழை' என்ற வினைமுற்றிலே அந்வயிக்கும். "விண்ணெல்லாங் கேட்க அழுதிட்டாய்" என்றாற்போலே ஸப்த லோகமுங்கேட்கக் கூப்பிடவேணுமென்கிறார். நாடுநகரமும் நன்கறிய பகவத்கீர்த்தநம் பண்ணவேணுமென்கை

மலையேழும்=ஸப்தகுல பர்வதங்களாவன—" இமயம், மந்தரம், கைலை, வடவிந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரியெனக், குலவரையேழுங் கூறுமென்ப." என்று திவாகரத்திற் சொல்லப்பட்டவை.

மாநிலங்களேழும்=ஸப்தத்வீபங்களைச் சொல்லுகிறது: அவையாவன:—" நாவலந்தீவே இறலித்தீவே, குசையின்தீவே கிரவுஞ்சத்தீவே, சான்மலித்தீவே தெங்கின்தீவே, புட்கரத்தீவே யெனத் தேழே." எனப்பட்டவை.

குரைகடல்களேழும் = "உவரோடு கரும்பு மது நெய் தயிர் பால் புனல் மாகடலேழென வகுத்தனர் புலவர்."

நவின்றுண்ட நாவன் = சிறுபிள்ளைகள் தாயினிடத்து முலை யுண்ணும்போது ஸந்தோஷமிகுதியினால் இடையிடையே குதலைச் சொற்களைச் சொல்லிக்கொண்டு முலையுண்பதுபோல், கண்ணபிரா னும் பூதனையை மெய்த்தாயாகவே பாவித்து மகிழ்ச்சியுடன் முலை யுண்பதாகக்காட்டிக்கொள்ள மழலைச்சொற்களைச் சொன்னமையை 'நவின்று' என்றதனால் வெளியிடுகிறார். நாவன்—அண்மைவிளி; நாவனே! என்கை. .... .... ... (சக)

அழைப்பன் திருமாலை யாங்கவர்கள் சொன்ன *
பிழைப்பில் பெரும்பெயரே பேசி *—இழைப்பரிய
வாயவனே யாதவனே யென்றவனை யார்முகப்பும் *
மாயவனே யென்று மதித்து. (நு0)

| | |
|---|---|
| இழைப்பு அரிய | ஆராய்வதற்கு அருமையான ஸ்வரூப ஸ்வபா வங்களை யுடைய |
| ஆயவனே என்றும் | கோபால க்ருஷ்ணனே! என்றும் |
| யாதவனே என்றும் | யதுகுலத்தில் (வஸுதேவர் மகனாய்த்) தோன்றி னவனே! என்றும் |
| மாயவனே என்றும் | (குணசேஷ்டிதங் களினால்) ஆச்சர்யபூதனே! என்றும் |
| மதித்து | அநுஸந்தித்துக் கொண்டு, |
| ஆங்கு அவர்கள் சொன்ன | அத்திருவாய்ப்பாடி யிலுள்ளவர்கள் சொல்லியழைத்த |
| பிழைப்பு இல் பெரு பெயரே பேசி | குற்றமற்ற சிறந்த திருநாமங்களையே பேசி |
| யார் முகப்பும் | எல்லாரெதிரிலும் |
| திருமாலை அவனை | திருமாலாகிய அப்பெருமானை |
| அழைப்பன் | கூப்பிடாநின்றேன். |

* * *—கீழ்ப்பாட்டில் "முலைசூழ்ந்த நஞ்சுராத்துப் பெண்ணை நவின்றுண்ட நாவன்" என்று திருவாய்ப்பாடியில் நடந்த பேய்ச்சி முலைசுவைத்த கதையைப் பேசினபடியால் இப்பாட்டில் "ஆங்கு அவர்கள்" என்றதற்கு அத்திருவாய்ப்பாடியிலுள்ள ஆய்ச்சிகள் என்று பொருளாகக் குறையில்லை. பிரகரணபலத்தினாலென்க.

ஆங்கவர்கள் சொன்ன பிழைப்பில் பெரும் பெயர்களாவன— கற்றினமேய்த்தவன், வெண்ணெய்த்திருடன், தாம்பாலாப்புண்டவன், உரலிடைக்கட்டுண்டவன் என்றிவைபோன்ற திருநாமங்களாம். இவை பெரும்பெயர்களாகுமோ, சிறுபெயர்களன்றோ இவை என்று சிலர் நினைப்பர்: அவதாரத்தில் எளிமைக் குணத்தைக் காட்டி நிறம்பெற நினைத்த கண்ணபிரானது திருவுள்ளத்தால் நாராயணாதி நாமங்களே சிறுபேர் என்றும், கோவிந்த, நவநீத சோராதி நாமங்களே பெரும்பேரென்றும் நிச்சயிக்கத்தகும். திருப்பாவையில் ஆய்ச்சிகள் கண்ணபிரானை நோக்கி அடிக்கடி 'நாராயணன்' என்று சிறுபேரையிட்டுச் சொன்னதற்கு அநுதபித்து "உன்றன்னைச் சிறுபே ரழைத்தனவுஞ் சீறியருளாதே" என்று பொறுப்பித்துக் கொண்டது காண்க. அவன் திருவுள்ளமுகக்குந் திருநாமமேயன்றோ பெரும்பேர் ஆவது; 1. "திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி செங்கனிவா யெங்களாயர் தேவே" என்னப்படுகின்ற எம்பெருமான் திருவுள்ளமுகக்குந் திருநாமம் நாராயணாதி நாமங்களாக எப்படியாகும்? கோவிந்த கோபாலாதி நாமங்களேயாகுமென்க.

பிழைப்பு இல் பெரும் பெயரே—'பிழைப்பு' என்பதற்கு 'ஜீவித்தல்' என்றும் பொருள் கொள்ளலாம்; விட்டு உயிர்தரிக்க முடியாத பெரும்பெயர் என்றவாறு. "ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்திமகனாய் ஒளித்துவளர" என்கிறபடியே யதுகுலத்திற் பிறந்து இடைக்குலத்தில் வளர்ந்ததற்கேற்ப "யாதவனே!, ஆயவனே!" என்றது. ... ... ... (டுo)

மதிக்கண்டாய் நெஞ்சே மணிவண்ணன் பாதம் *
மதிக்கண்டாய் மற்றவன் பேர்தன்னை *—மதிக்கண்டாய்
பேராழிநின்று பெயர்ந்து கடல் கடைந்த *
நீராழி வண்ணன் நிறம். (டுக)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | மனமே!, | மதி கண்டாய் | சிந்திக்கக்கடவாய்; |
| மணி வண்ணன் பாதம் | நீலமணிவண்ணனை எம்பெருமானது திருவடிகளை | மற்று | இன்னமும் |
| | | அவன் பேர் தன்னை | அப்பெருமானது திருநாமங்களை |

1. திருவாய்மொழி 10-3-10.

| | | | |
|---|---|---|---|
| மதி கண்டாய் | அநுஸந்திக்கக் கடவாய்; | கடல் கடைந்த | (தேவர்களுக்கு அமுதங்கொடுக்க) அக்கடலைக் கடைந்த |
| பேர் ஆழி நின்று பெயர்ந்து | பெரிய திருப்பாற் கடலில் நின்றும் துயில் விட்டெழுந்து | நீராழி வண்ணன் நிறம் | கடல் வண்ணனை அப்பெருமானுடைய திரு மேனி நிறத்தை |
| | | மதி கண்டாய் | நினைக்கக்கடவாய். |

* * *—இப்பாட்டில் 'நெஞ்சே!' என்று நெஞ்சை மாத்திரம் விளிப்பதாயிருந்தாலும், நெஞ்சுக்கு அடுத்ததான வாக்கையும், வாக்குக்கு அடுத்ததான உடலையும் விளிப்பதாகவுங் கொள்ளவேணும். "யந்மநஸாத்யாயதி தத்வாசாவததி தத்கர்மணாகரோதி" என்று வேதமுரைத்த கட்டளையிலே மனமொழி மெய்களுக்கு ஒரு சேர்த்தியுண்டு. அம்மூன்று காரணங்களுக்கும் காரியம் விதிக்கிறவிப்பாட்டில் 'மதிக்கண்டாய்' என்பதே மூன்றிடத்தும் க்ரியாபதமாயினும் இடத்துக்குத் தக்கபடி பொருள்வாசி கொள்ளவேணும். மனமே! நீராழிவண்ணனது திருமேனி நிறத்தையே நீ சிந்திக்கக்கடவாய்; வாக்கே! மணிவண்ணன் திருநாமங்களையே நீ சொல்லிக்கொண்டிருக்கக்கடவாய்; தலையே! மணிவண்ணன் திருவடிகளையே நீ அணிந்துகொண்டிருக்கக் கடவாய் என்று இங்ஙனே யோஜிப்பது அழகியதாம்.

பேராழிநின்று பெயர்ந்து கடல்கடைந்த—1. "அறிதுயிலலைகடல் நடுவே ஆயிரஞ்சுடர்வாய் அரவணைத்துயின்றான்" என்கிறபடியே திருப்பாற்கடலில் சேஷசயனத்தின்மீது திருக்கண்வளர்ந்தருளுமழகைக்கண்டு 2. "ஏரார்கோலந்திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே!" என்றும், 3. "அம்மாமலர்க்கண் வளர்கின்றானே என்னான் செய்கேனே" என்றும் ஈடுபட்டு மங்களாசாஸநம் பண்ணவேண்டியிருக்க, அது செய்யாது 4. "பேணலமில்லாவரக்கர் முந்நீர பெரும்பதிவாய் நீணகர் நீளெரிவைத்தருளாயென்று, நின்னை விண்ணோர் தாள்நிலந்தோய்ந்து தொழுவர் நின்மூர்த்தி பல்கூற்றி

1. பெரியதிருமொழி 5-7-6. 2. திருவாய்மொழி 5-8-1.
3. திருவாய்மொழி 5—8—2. 4. திருவிருத்தம்—92.

லொன்று காணலுமாங்கொலென்றே?" என்று நம்மாழ்வார் வயிறு பிடித்துப் பேசினபடியே தேவதைகள் சென்று 'பெருமானே! எழுந்திருந்து உடம்புநோவக் காரியஞ்செய்து எங்கட்கு ஆகவேண்டியதைத் தலைக்கட்டிக்கொடு' என்று பிரார்த்திப்பவர்களேயன்றி ஸ்வப்ரயோஜநத்தோடுகூட எம்பெருமான் திருமேனியிலும் சிறிது கண் வைப்பவர்களேயல்லர்; அமுதமளிக்கக் கடல்கடைந்தருளுங் காலத்தில் 'உப்புச்சாறு எப்போது கிளரப்போகிறது!' என்று தேவதைகள் கண்ணைக் கவிந்துகொண்டு அதைக் கண்டுகொண்டிருந்தார்களேயன்றி, தோளுந் தோள்மாலையுமாக எம்பெருமான் கடல் கடைந்தருளுமழகைச் சற்றேனும் உற்றுநோக்கினவர்களல்லர்: அக்குறைதீர அப்போதைய அழகை நெஞ்சே! இன்று நீ சிந்தியாய் என்கிறார். .... .... .... (நிக)

நிறங்கரியன் செய்ய நெடுமலராள் மார்வன் *
அறம்பெரிய னாரதறிவார் *—மறம்புரிந்த
வாளரக்கன் போல்வானை வானவர்கோன் தானத்து *
நீளிருக்கைக் குய்த்தான் நெறி. (நிஉ)

நிறம் கரியன் { (காளமேகம் போல்) கருநிறமுள்ளவனும்

செய்ய நெடு மலராள் மார்வன் { சிவந்த நிறத்தை யுடையளாய்ப் பெரிய தாமரைப் பூவை யிருப்பிடமாகவுடையளான பெரிய பிராட்டியாரைத் திருமார்விலே யுடையனுமான எம்பெருமான்

அறம் பெரியன் { அருளில் பெருத்தவன்;

மறம் புரிந்த பகைபாராட்டின

வாள் அரக்கன் போல்வானை { வாட்கையனான இராவணன் போன்ற மஹாபலியை

(இராவணனைப் போலவே தலையறுக்க வேண்டியிருந்தும் அது செய்யாமல்)

வானவர் கோன் தானத்து { தேவேந்திரனுடைய லோகமானஸ்வர்க்கம்போலே விலக்ஷணமான பாதாளலோகத்திலே

நீள் இருக்கைக்கு { நீண்டகாலம் வாழும் படியாக

உய்த்தான் { செலுத்தின அப்பெருமானுடைய

நெறி அது அவ்வருள் வகையை

ஆர் அறிவார் { யார் தெரிந்து கொள்ளவல்லர்?.

* * *—கொடியவர்களிடத்தும் ஈரநெஞ்சுடையனாயிருக்கை யென்னுங்குணம் 'ஆந்ருசம்ஸ்யம்' எனப்படும்; அதாவது ஒருவர்க்குந் தீங்கு செய்யாமை. இக்குணம் எம்பெருமானிடத்தில் அமைந்திருக்கும்படியை ஒரு த்ருஷ்டாந்த முகத்தாற் கூறுகின்றாரிதில்.

காளமேகத்திருவுருவனாயும் அகலகில்லேனிறையுமென்றலர்மேல் மங்கையுறை மார்பனாயுமிருக்கிற ஸர்வேச்வரன், அறம் பெரியன்—'ஆந்ருசம்ஸ்யம்' [தயை] என்னுங் குணம் பெரிதுமுடையான். இஃது எங்ஙனே தெரிகின்றதென்னில், கேண்மின்; எம்பெருமான் ஸர்வபூதஸுஹ்ருத்தாகையாலே அவனுக்கு நேரே ஒருவனும் பகைவனல்லன்; ஆச்ரிதர்களுக்கு எவன் விரோதியோ, அவனையே எம்பெருமான் தனக்கு விரோதியாகக் கருதுவன். கண்ணபிரானாய்த் தூது போமிடத்துத் துரியோதநனை நோக்கிச் சொல்லும்போது 'எனது உயிர்நிலையான பாண்டவர்களுக்கு நீ விரோதியாகையாலே எனக்கு நீ விரோதியாகின்றாய்' என்றருளிச் செய்துள்ளது குறிக்கொள்ளத்தக்கது. ஆகவே, ஆச்ரிதனான தேவேந்திரனுக்குக் குடியிருப்பையழித்து விரோதியான மாவலியானவன் அம்முகத்தாலே எம்பெருமானுக்கும் விரோதியாயினன். இப்படிப்பட்ட மாவலியை இராவணனைப்போலவே தலையறுத்து ஒழிக்கவேண்டியது ப்ராப்தமாயிருந்தும் ஔதார்யமென்னும் ஒரு குணத்தைக் கைக்கொண்டிருந்தானென்று இதனை ஒரு வியாஜமாக்கி அவனைத் தலைதுணித்திடாது நெடுங்காலம் பாதாளத்தில் குடிசெய்து வாழுமாறு விட்டருளின பெருங்குணத்தை நோக்குங்கால் 'ஸ்ரீமந்நாராயணனில் விஞ்சின தயாளு இல்லை' என்பது விளங்குமே என்கிறார்.

"வானவர்கோன் தானத்து"—வானவர்கோன் தானமென்று ஸ்வர்க்கலோகத்திற்குப் பெயராயினும், அதுபோல் விலக்ஷணமான பாதாளலோகமென்பது இவ்விடத்திற்குப் பொருள். (ருஉ)

நெறியார் குழல்கற்றை முன்னின்று பின்தாழ்ந்த
அறியா திளங்கிரியென் றெண்ணி *—பிரியாது
பூங்கொடிகள் வைகும் பொருபுனல் குன்றென்னும் *
வேங்கடமே யாம்விரும்பும் வெற்பு. (ருங)

| | | | |
|---|---|---|---|
| நெறியார் | திருமலை வழியிலேயே ஊன்றியிருப்பவர்களுடைய | பிரியாது | அவ்விடம் விட்டு நீங்காமல் |
| குழல் கற்றை முன் நின்று பின்தாழ்ந்து அறியாது | கேசபாசமானது முன்னே முளைத்துப் பின்னே தொங்கிக் கொண்டிருக்கவும் இது மநுஷ்யவ்யக்தியென்று தெரிந்து கொள்ளாமல் | வைகும் | நித்யவாஸம் பண்ணப் பெற்றதாய் |
| | | பொரு புனல் குன்று என்னும் | அலையெறிகின்ற ஜலஸம்ருத்தியையுடைத்தான திருமலையென்று ப்ரஸித்தமான |
| | | வேங்கடமே | திருவேங்கடமே |
| இள கிரி என்று எண்ணி | இது ஒரு சிறுமலையென்றுஎண்ணிக் கொண்டு | யாம் விரும்பும் | நாம் ஆசைப்படவுரிய |
| பூங் கொடிகள் | பூங்கொடிகளானவை | வெற்பு | திருமலையாகும். |

* * *—திருவேங்கடமலையை ஒருசமத்காரம் பொலிய வருணிக்கிறார். திருமலையாத்திரையாக வருகின்ற மஹான்கள் பலர் "1. வெறியார்தண்சோலைத் திருவேங்கடமலைமேல், நெறியாய்க் கிடக்கும் நிலையுடையேனாவேனே" என்று ஸ்ரீ குலசேகரப் பெருமாள் விரும்பினபடியே திருமலையேறும் வழியிலே மிக்க ஆதரம்வைத்து, திருமலைமேற்சென்று வாழ்வதிற்காட்டிலும் திருமலைவழியிற் கிடப்பதையே பரம உத்தேச்யமாகக்கொண்டு அவ்வழியிலே வீற்றிருந்து எம்பெருமானைச் சிந்தைசெய்கின்றனர்; அப்போது, மூச்சுவிடுதல் உடம்பு அசைத்தல் முதலியன ஒன்றுஞ்செய்யாதே வால்மீகி முதலிய மஹர்ஷிகளைப்போலே யோகநிலையில் ஆழ்ந்துகிடக்கின்றனர்; அன்னவர்களது கூந்தல் கற்றையானது முன்னின்று பின்தாழ்ந்திருப்பதைக்கண்ட பூங்கொடிகளானவை 'சில மனிதர்கள் வீற்றிருக்கின்றார்கள்' என்றும் 'அவர்களுடைய குழல்கற்றை தாழ்ந்திருக்கின்றது' என்றும் தெரிந்து கொள்ளாமல் 'இவை சில சிறுமலைகள்' என்றெண்ணி அவற்றின்மேலே படர்கின்றனவாம். பண்டு, வான்மீகிமுனிவர் மீது புற்று மூடினாற்போலே இந்த பக்தர்களின் மேலும் பூங்கொடிகள் படர்ந்திருப்பது அற்புதமான வொரு காட்சியா

1. பெருமாள் திருமொழி 4—8.

யமைந்தது. இப்படிப்பட்ட காட்சிக்கு இடமான திருமலையே நாம் விரும்பத்தக்க மலையாம்-என்றாராயிற்று. கிரி-வடசொல். (ருங)

வெற்பென் றிருஞ்சோலை வேங்கடமென் றிவ்விரண்டும் *
நிற்பென்று நீமதிக்கும் நீர்மைபோல் *—நிற்பென்
றுளங்கோயி லுள்ளம்வைத் துள்ளினேன் * வெள்ளத்
திளங்கோயில் கைவிடே லென்று. (ருச)

| | |
|---|---|
| வெற்பு என்ற | (தெற்குத்) திருமலை யென்னப் படுகிற |
| இருஞ் சோலை | திருமாலிருஞ் சோலை யென்ன, |
| வேங்கடம் | திருவேங்கட மென்ன |
| என்ற இவ் இரண்டும் | ஆகிய இத் திருமலை களிரண்டும் |
| நிற்பு என்று | நாம் உகந்து வாழு மிடமென்று |
| நீ மதிக்கும் நீர்மை போல் | நீ திருவுள்ளம்பற்றி யிருக்குந் தன் மையை உடைத் தாயிருப்பது போலவே |
| உளம் கோயில் | (என்னுடைய) ஹ்ருதயமாகிற கோயிலும் |
| நிற்பு என்று | நீ உகந்து வாழுமிட மென்று |
| உள்ளம் வைத்து | பிரதிபத்திபண்ணி |
| வெள்ளத்து இள கோயில் | "திருப்பாற்கடலா கிறபாலாலயத்தை |
| கைவிடேல் என்று | கைவிட வேண்டா" என்று |
| உள்ளினேன் | பிரார்த்திக்கின் றேன். |

* * *—எம்பெருமான் திருவுள்ளமுவந்து வாழுந் திருப்பதிகளில் எவர் விருப்பம் பண்ணுகின்றனரோ, அவர்களுடைய நெஞ்சிலே எம்பெருமான் உவந்து வந்து எழுந்தருளியிருப்பனன்றே; அப்படியே, திருமலை முதலிய திருப்பதிகளில் ஆதரம் விஞ்சப்பெற்ற இவ்வாழ்வாருடைய திருவுள்ளத்தில் எம்பெருமான் வந்து சேர்ந்து "தென்னனுயர் பொருப்புந் தெய்வவடமலையும்" என்னப்படுகிற திருமாலிருஞ் சோலைமலை திருவேங்கட மலைகளில் தான் பண்ணிப்போந்த விருப்பத்தை இவர் தம்முடைய திருவுள்ளத்திலே செய்து போருகிறபடியை ஒரு சமத்காரமாக வெளியிடுகிறார்.

ஸ்ரீவசநபூஷணத்தில்—"கல்லுங்கனைகடலு மென்கிறபடியே இது ஸித்தித்தால் அவற்றில் ஆதரம் மட்டமாயிருக்கும். இளங்

கோயில் கைவிடேல் என்று இவன் பிரார்த்திக்க வேண்டும்படியாயிருக்கும்" என்றருளிச்செய்தது இப்பாசுரத்தை உட்கொண்டதேயாம்.

திருமாலிருஞ் சோலைமலையென்றும் திருவேங்கடமலையென்றுஞ் சொல்லப்படுகிற இரண்டு திருமலைகளில் நீ எவ்வளவு மகிழ்ச்சியுடன் வாழ்கின்றாயோ அவ்வளவு மகிழ்ச்சியோடே என்னுடைய ஹ்ருதயமாகிற கோயிலிலும் வாழ்கின்றாய் என்று கண்டறிந்த அடியேன் "வெள்ளத்திளங்கோயில் கைவிடேல்" என்று பிரார்த்திக்கின்றேனென்கிறார். இதன் கருத்துயாதெனில்;— திருப்பாற்கடலானது எல்லா அவதாரங்களுக்கும் மூலக்கிழங்கு எனப்படும்: "ஸ ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:। நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்॥ — திருப்பாற்கடல் நாதனான ஸ்ரீமந்நாராயணன் சேஷசயனத்தை விட்டிட்டு வடமதுரையில் வந்து பிறந்தான்" என்றாற்போலே ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களும் மற்றும் அர்ச்சாவதாரங்களுமெல்லாம் திருப்பாற்கடல் மூலமாகவே நிகழ்வதாகக் கொள்ளுங் கொள்கை வைதிகர்களுக்கு உள்ளது. இக்காரணம்பற்றித் திருப்பாற்கடல் 'இளங்கோயில்' எனப்படும். [அதாவது—பாலாலயம் என்றபடி: இக்காலத்தும் திருக்கோயில்களில் எம்பெருமான் திருமேனியை ஜீர்ணோத்தாரணம் செய்யநேரும்போது பாலாலய ப்ரதிஷ்டை செய்வது வழக்கமாயிருப்பது காண்க. வேறொரு பெருங்கோயிலிற் சென்று சேர்வதற்கு உறுப்பாக (பூருவாங்கமாக) சிறுகக்கொள்ளுங் கோயிலை பாலாலயமென்கிறது] திருமலை முதலிய திவ்யதேசங்களும் அன்பருடைய ஹ்ருதயமுமாகிற பெருங்கோயில்களிற்சென்று சேர்ந்துவாழ்வதற்குப் பூர்வாங்கமாகவே எம்பெருமான் திருப்பாற்கடலில் வாழ்வதாக ஆழ்வார்கள் அநுஸந்திப்பர்களாதலால் இந்த அநுஸந்தானத்திற்கு இணங்க, திருப்பாற்கடலை இளங்கோயில் [பாலாலயம்] ஆகச்சொல்லுதல் பொருத்தமுடைத்தே. பெருங்கோயிலிற்சென்று சேர்ந்தபின்பு இளங்கோயிலில் ஆதரம் இருக்க ப்ரஸக்தியில்லாமையாலே எம்பெருமானுக்கும் தமது திருவுள்ளமாகிற பெருங்கோயிலில் வாழ்ச்சி அமைந்தபின்பு இளங்கோயிலாகிய திருப்பாற்கடலில்

ஆதரம் குறைந்துவிடுமென்றறிந்த ஆழ்வார், 'பிரானே! அவ்விளங் கோயிலில் நீ ஆதரத்தைக் குறைத்துக்கொள்ளலாகாது. என்னுள்ளத்தில் வந்து சேர்வதற்கு அவ்விடம் பூர்வாங்கமாயிருந்ததனால் அதுதன்னில் அடியேன் நன்றிபாராட்டக் கடவனாதலால் அந்த நன்றியறிவின் காரியமாகப் பிரார்த்திக்கின்றேன்—அவ்விடத்தை நீ ஒருநாளும் கைவிடலாகாது' என்று—என்கிறார்.

இதனால், 1. "பணிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட்டு ஓடிவந்தென் மனக்கடலில் வாழவல்ல மாயமணாள நம்பீ!" என்னுமாபோலே திருப்பாற்கடலையும் உபேக்ஷித்துவிட்டுத் தம் ஹ்ருதயத்திலே வந்து சேரும்படியான வ்யாமோஹம் எம்பெருமானுக்கு விளைந்தமை வெளியிடப்பட்டதாயிற்று. "ப்ரஸக்தஸ்ய ஹி ப்ரதிஷேத:—ப்ரஸக்தியுள்ளதற்கே ப்ரதிஷேதங்கூடும்" என்பது சாஸ்த்ரஜ்ஞர் வார்த்தையாகையால், 'வெள்ளத்திளங் கோயில் கைவிடேல்' என்று ஆழ்வார் பிரதிஷேதிக்கும்போது எம்பெருமான் திருப்பாற்கடலைக் கைவிடத்தொடங்கினான் என்பது அவசியம் விளங்குகின்றமையால், இப்படி திருப்பாற்கடலையும் கைவிடும்படியான வியாமோஹம் அவனுக்கு உண்டாயிற்றென்பதைத் தெரிவிப்பதே இப்பாசுரத்தின் பரமதாற்பரியமாகுமென்க. .... ... ... ... (ருச)

என்று மறந்தறியே னேழ்பிறப்பு மெப்பொழுதும் *
நின்று நினைப்பொழியா நீர்மையால் *—வென்றி
அடலாழி கொண்ட வறிவனே * இன்பக்
கடலாழி நீயருளிக் காண். (ருரு)

| | | | | |
|---|---|---|---|---|
| வென்றி | ஜயசீலமாய் | | | இப்படியிருக்கிற நீ |
| அடல் | தீக்ஷ்ணமான | | ஏழ் பிறப்பும் | எல்லா ஜன்மங்களிலும் |
| ஆழி | சக்கரத்தை | | எப்பொழுதும் | எல்லா அவஸ்தைகளிலும் |
| கொண்ட | கைக்கொண்டிருக்கிற | | | |
| அறிவனே | ஸர்வஜ்ஞனான பெருமானே!, | | | |

1. பெரியாழ்வார் திருமொழி 5—4—9.

| | | | |
|---|---|---|---|
| நின்று நினைப்பு ஒழியா நீர்மையால் | ஒருபடிப்பட நின்று என்னைப் பற்றின நினைவு தப்பாமலிருந்ததனால் | இன்பம் கடல் ஆழி | ஆநந்தஸாகரத்தையும் |
| என்றும் மறந்தறியேன் | உன்னை ஒருநாளும் மறப்பேனல்லேன்; | அருளிக்காண் | எனக்கு அருளவேணும். |

* * *—பிரானே! இவ்விருள்தருமா ஞாலத்தில் உன்னை நினைப்பதென்பது எளிதில் கைகூடாத காரியம்; ஆனாலும் 1. "எதிர் சூழல்புக்கு எனைத்தோர் பிறப்பு மெனக்கே யருள்கள் செய்ய, விதிசூழ்ந்ததா லெனக்கேலெம்மான் திரிவிக்கிரமனையே" என்றாற்போலே எப்படியாவது என்னை அகப்படுத்திக்கொள்ள வேணுமென்று நீ நெடுநாளாகவே க்ருஷிபண்ணிப்போருகையாலே உன்னுடைய நினைவு என்மேல் இடையறாது இருப்பதனாலே என்னுடைய நினைவும் உன்மேல் நிரந்தரமாக இருக்கின்றது; ஆனால் இவ்வளவோடு நான் த்ருப்தியடைபவ னல்லேன்: 2. "அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை" என்னப் படுகிற இன்பக்கடலையும் அவகாஹிக்கப்பெறவேணுமென்று ஆவல் கொண்டிருக்குமடியேனை அந்த இன்பக்கடலிலும் அழுந்தச்செய் தருளாய்—என்கிறார்.

"இன்பக்கடல்" என்னுமளவே போதுமாயிருக்க "கட லாழி" என்றது அப்பரமாநந்தத்தின் அளவில்லாமையை நன்கு காட்டுதற்கென்க. "இன்பம் ஆழிகடல்" என்று இயைத்து, இன்பமாகிற ஆழ்கடல் என்று முரைக்கலாம். உன்னையே எப்போதும் சிந்தித்துக்கொண்டிருக்கு மடியேனை உன் திருவடி களிற் சேர்த்துக்கொள்ளவேணு மென்றதாயிற்று இப்பாட்டால்.

"நின்று நினைப்பொழியா நீர்மையால்" என்றது—எம்பெரு மான் இவ்வாழ்வார் தம்மையே நினைத்துக்கொண்டிருக்கிறபடியைக் கூறுவதாக உரைக்கப்பட்டது. இனி, இவ்வாழ்வார் எம்பெரு மானையே நினைத்துக்கொண்டிருப்பதைக் கூறுவதாகவே உரைக்கவு மாம். எல்லாப்பிறவிகளிலும் அடியேன் உன்னையே நினைத்துக் கொண்டிருக்கும்படியான தன்மை எனக்கு வாய்த்திருப்பதனால் உன்னை யொருகாலும் மறந்தறியேன் என்றவாறு.

1. திருவாய்மொழி 2—7—6. 2. திருவாய்மொழி 10—9—11.

வென்றியடலாழிகொண்ட அறிவனே!—நீ ஸர்வசக்தனும் ஸர்வஜ்ஞனுமிருக்கையாலே என்காரியத்தைச்செய்து தலைக்கட்டுகை உனக்கு அரிதன்றே என்று குறிப்பிடுகிறார்போலும். "வென்றியடலாழிகொண்ட" என்றது—ஸர்வசக்தியுக்தனென்றபடி. அருளிக்காண்—அருள்செய் என்கை. .... (௫௫)

காணக்கழி காதல் கைமிக்குக் காட்டினால் *
நாணப் படுமேன்றால் நாணுமே *—பேணிக்
கருமாலைப் பொன்மேனி காட்டாமுன் காட்டும் *
திருமாலை நங்கள் திரு. (௫௬)

| | | | |
|---|---|---|---|
| திரு மாலை காண கழி காதல் | எம்பெருமானை ஸேவிக்க வேணுமென்று மிகுந்த விருப்பம் | கரு மாலை | கரிய திருமாலாகிய அப்பெருமானை |
| கைமிக்கு காட்டினால் | மேன் மேலும் அதிகரித்தால் | பொன் மேனி காட்டா முன் | அவனது அழகிய திருமேனிதானே காட்டிக்கொடுப்பதற்கு முன்னே |
| நாணப்படும் என்றால் | அடங்கி யிருக்க வேணுமென்றால் | நங்கள் திரு | நமக்குப் புருஷகாரபூதையான பிராட்டி |
| நாணுமே | அடங்கியிருக்க முடியுமோ? | பேணி | விரும்பி |
| | | காட்டும் | காட்டிக் கொடுப்பள். |

* * *—கீழ்ப்பாட்டில் "இன்பக்கடலாழி நீயருளிக்காண்" என்று பிரார்த்தித்தார்; எல்லாப்படியாலும் பாரதந்திரியமே வடிவாயிருக்குமவர் 'எம்பெருமான் திருவுள்ளமானபடி செய்கிறான்' என்று ஆறியிருக்கவேணுமேயன்றி இன்னது நீ செய்ய வேணுமென்று அவனை நிர்ப்பந்திப்பது தகுதியோ என்று ஒரு சங்கை பிறக்குமாதலால் அந்த சங்கைக்குப் பரிஹாரமாக இப்பாசுர மருளிச்செய்கிறாரென்க.

அவனைப் பரிபூர்ணமாக ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கவேணுமென்னுங்காதல் கிளராதிருக்குமாயின் நம்முடைய பாரதந்திரியம் ஜீவிக்கும்; அக்காதல் அளவற விஞ்சிவிட்டால் ஸ்வரூபத்தை நோக்கி அடங்கியிருக்கவேணுமென்றால் யாரால் அடங்கியிருக்க முடியும்? ஸ்வரூபவுணர்ச்சியினால் எவர் பதறாது அடங்கியிருக்கின்றனரோ, அவர்க்குக் காதல் உண்டாகவில்லையென்று கொள்ள வேணுமேயன்றி, காதலுள்ளவர்கள் ஸ்வரூபவுணர்ச்சியினால்

அடங்கியிருக்கிறார்களென்பது ஒருநாளுமில்லை.—என்பது முன்னடிகளின் கருத்து.

'காதலின் கனத்தால் நீர் பதறினும் அப்பெருமான் தானே நிர்ஹேதுகமாக அருள்செய்து தனது திருமேனியைக் காட்டிக்கொடுத்தாலன்றோ நீர்கண்டு அநுபவிக்கலாம்; உம்முடைய பதற்றத்தினால் என்ன ஆகும்? "வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்றுமிதுவல்லால், மாரியார்பெய்கிற்பார் மற்று" என்று நீர்தாமே சொல்லிவைத்திருக்கிறீரே' என்று சிலர் சொல்ல; எம்பெருமான் தனது திருமேனியைத் தானே காட்டிக்கொடாவிடினும், ஸகல லோகமாதாவாயிருக்கிற முறைமையினாலும், நிக்ரஹம் கலசாது அநுக்ரஹமே வடிவாயிருக்குந் தன்மையினாலும், அபராதங்களைப் பார்த்துச் சீறியிருக்கு மெம்பெருமானுடைய திருவுள்ளத்தையும் திருத்தி சேதநர்களை அங்கீகரிப்பிக்கும் புருஷகாரபூதையான பிராட்டியானவள் தானே அவனைக்காட்டித்தருவள்; அதிலொருகுறையில்லை—என்கிறார் பின்னடிகளில்.

"காணக்கழிகாதல்" என்றவிடத்து 'கழி' என்பதை உரிச்சொல்லாகக் கொண்டால் 'அதிகமான காதல்' என்று பொருள்படும்; அன்றி, 'கழிகாதல்' என்று வினைத்தொகையாகக் கொண்டால் 'கண்டே கழியக்கடவதான காதல்' என்று பொருள்படும்: 1. "கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும்" என்றது காண்க.

நாணுதல்—அடங்குதல். கருமால் பொன்மேனியை அக்கருமால் காட்டாமுன் நங்கள் திரு காட்டும். .... ... (ருசு)

திருமங்கை நின்றருளுந் தெய்வம் நாவாழ்த்தும் *
கருமங் கடைப்பிடிமின் கண்டீர் *—உரிமையால்
ஏத்தினோம் பாத மிருந்தடக்கை யெந்தைபேர் *
நாற்றிசையுங் கேட்டீரே நாம். (ருஎ)

திருமங்கை பெரிய பிராட்டியார்

நின்றருளும் தெய்வம் { நித்யவாஸஞ் செய்யப் பெற்ற எம்பெருமானை

நா வாழ்த்தும் கருமம் { நாவினாலே வாழ்த்துகையாகிற காரியத்தை

1. திருவிருத்தம் 97.

| | | | |
|---|---|---|---|
| கடைப்பிடிமின் கண்டீர் | உறுதியாகப் பற்றுங்கள்; | உரிமையால் | ஸ்வரூப ப்ராப்தியாலே |
| நாம் | நாமோவென்றால், | ஏத்தினோம் | போற்றுமவர்களாயிராநின்றோம் |
| இரு தட கை எந்தை | மிகநீண்ட திருக்கைகளையுடையனை எம்பெருமானுடைய | (இவ்விஷயத்தை) | |
| பாதம் | திருவடிகளையும் | நால் திசையும் | நான்கு திசைகளிலுமுள்ளீர்! |
| பேர் | திருநாமங்களையும் | கேட்டீரே | கேட்டீர்களோ?. |

* * *—எந்த தெய்வத்தை ஸ்ரீமஹாலக்ஷ்மி விரும்புகின்றளோ அதுவே பரதத்துவம் என்பது வேதாந்தஸித்தாந்தம்: ஸ்ரீகுணரத்நகோசத்திலே பட்டர் "𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌃 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌂 𑌮𑌰𑌭𑌿𑌦𑍁𑌰𑌸𑌿 𑌯𑌤𑍍𑌪𑌾𑌦𑌚𑌿𑌹𑍍𑌨𑍈𑌸𑍍𑌤𑌰𑌨𑍍𑌤𑌿 = வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாதசிஹ்நை ஸ்தரந்தி" [அதாவது; இன்னது பரதத்துவம் என்று நிஷ்கர்ஷிக்கமாட்டாமல் கவலை கொண்டிருந்த வேதாந்தங்கள் ஸ்ரீமந்நாராயணனுடைய திருமார்பில் பிராட்டியின் அடிச்சுவடுகண்டு இவனே பரதத்துவமென்று நிர்ணயித்துக் கவலை தீர்ந்தன"] என்றருளிச்செய்ததுங் காண்க. ஆகப் பிராட்டி ஸம்பந்தத்தாலே மேன்மைபெற்ற தைவம் யாதொன்றுண்டு—ஸ்ரீமந்நாராயணன்; அவனை நாவினால் வாழ்த்துந் தொழிலையே உறுதியாகக் கைப்பற்றுங்கோளென்கிறார் முன்னடிகளில்.

பிறர்க்கு உபதேசிப்பவர் தாம்முந்துற அநுஷ்டித்துக் காட்டவேணுமே; ஆதலால் ஸ்வாநுஷ்டானத்தை வெளியிடுகிறார் பின்னடிகளில்.

உரிமையால்—சேஷ சேஷித்வமாகிற ஸம்பந்த முறைமை கொண்டு என்றபடி. நாற்றிசையுங் கேட்டீரே—இதனை எல்லாருமறியவேணு மென்றவாறு. ... ... (௩௭)

நாம்பெற்ற நன்மையும் நாமங்கை நன்னெஞ்சத்து *
ஓம்பி யிருந்தெம்மை யோதுவித்து *—வேம்பின்
பொருள்நீர்மை யாயினும் பொன்னாழி பாடென்று *
அருள்நீர்மை தந்த வருள். (௩௮)

| | | | |
|---|---|---|---|
| வேம்பு பொருளின் நீர்மை ஆயினும் | (எம்பெருமானைப் பாடுவதானது) வேம்பு என்னும் வஸ்துவின் ஸ்வபாவம் போலே கைப்பதாகத் தோன்றினாலும் | நல் நெஞ்சத்து | (நமது) நல்ல நெஞ்சிலே |
| | | ஓம்பி இருந்து | ஆதரித்து இருந்து |
| | | எம்மை | நம்மைக்கொண்டு |
| | | ஓதுவித்து | பகவத்விஷயத்தை பாடச்செய்ததனால் |
| பொன் ஆழி | அழகிய திருவாழியை [கையுந் திருவாழியுமான சோத்தியழகை] | நாம் பெற்ற நன்மையும் | நாம் அடைந்த ஸுக்ருதமும் (எதனாலே வந்ததென்னில்) |
| பாடு என்று | பாடக்கடவாய் என்று | அருள் நீர்மை தந்த அருள் | அருளையே இயல்வாகவுடைய ஸர்வேச்வரன் அருளிய க்ருபையினாலே வந்தது. |
| நா மங்கை | ஸரஸ்வதியானவள் | | |

* * *—1. "எனக்குத்தேனே பாலே கன்னலேயமுதே திருமாலிருஞ்சோலைக் கோனேயாகி" என்று மஹான்களுக்கு எம்பெருமான் பரமபோக்யனாயிருப்பனாயினும் அரஸிகனான பாவியேனுக்கு வேம்பாயிருப்பன்; ஆயினும் "இந்த பகவத்விஷயத்தையே நீ பாடக்கடவை" என்று எம்பெருமான் தானாகவே திருவருள் கூர்ந்து நியமித்ததன் பலனாகவே ஸரஸ்வதியானவள் நம்முடைய ஹ்ருதயத்திலே வீற்றிருந்து சப்தராசிகளைத் தொடுக்கச்செய்தாளென்கிறார்.

நாமங்கை=நாவில்வாழும்பெண்; ஸரஸ்வதி. பொன்னாழி பாடு=பொன்னாழியைப்பாடு எனினும், பொன்னாழியையுடைய எம்பெருமானைப்பாடு எனினும் ஒக்கும். ... .... (ருஅ)

அருள்புரிந்த சிந்தை யடியார்மேல் வைத்து *
பொருள்தெரிந்து காண்குற்ற வப்போது *—இருளிரிந்து
நோக்கினேன் நோக்கி நினைந்தேன தொண்கமலம் *
ஓக்கினே னென்னையுமங் கோர்ந்து. (ருகூ)

| | | | |
|---|---|---|---|
| அருள் புரிந்த சிந்தை | அருளோடு கூடின திருவுள்ளத்தை | அடியார் மேல் வைத்து | அடியவராகிய எங்கள்மேலே வைத்து |

1. திருவாய்மொழி. 10-7-2.

| | |
|---|---|
| பொருள் தெரிந்து | (அபதார்த்தமான எங்களை) ஒரு பதார்த்தமாகத் திருவுள்ளம் பற்றி |
| காண்குற்ற அப்போது | கடாக்ஷித்தருளுகிற காலத்திலே |
| இருள் இரிந்து | அஜ்ஞான விருள் நீங்கப்பெற்று |
| நோக்கினேன் | ஸ்வரூபத்தை ஆராய்ந்தேன்; |
| நோக்கி | அப்படி ஆராய்ந்து |
| ஒண் கமலம் அது | அழகிய தாமரை மலர்கள் என்னலாம் படியுள்ள அத்திருவடிகளை |
| நினைந்தேன் | (ப்ராப்யமாக) அநுஸந்தித்தேன்; |
| ஓர்ந்து | (இத்திருவடிகள் தவிர நமக்கு வேறுபுகலில்லையென்று) நிரூபித்து |
| என்னையும் | ஆத்மாவையும் |
| அங்கு | அத்திருவடிகளிலே |
| ஒக்கினேன் | ஸமர்ப்பித்தேன். |

* * *—எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தையே பேசுகிறார். தாய்தந்தையர்க்கு மக்களிடத்தில் இயற்கையாக வாத்ஸல்யமிருப்பதுபோல எம்பெருமானும் அடியவராகிய நம்மிடத்து ஸஹஜமான வாத்ஸல்யத்தை நிலைநிறுத்தி அபதார்த்தமாய்க்கிடந்த நம்மைப் பதார்த்தமாக்கிக் கடாக்ஷித்தருளினபடியாலே, எம்பெருமானுக்கும் நமக்குமுள்ள அநாதிஸம்பந்தத்தை அறியவொட்டாமல் தடையாய்க்கிடந்த அஜ்ஞானவிருள் தொலையப்பெற்று ஸ்வரூபஜ்ஞாநம்பெற்று அவனுடைய திருவடித்தாமரைகளை அநுஸந்திக்கப்பெற்றேன்; அத்திருவடிகளிலேயே ஆத்மஸமர்ப்பணமும் பண்ணப்பெற்றேன் என்றாராயிற்று.

"அடியார்மேல் வைத்து" என்று படர்க்கையாயிருந்தாலும் தன்மையில் நோக்கென்று கொள்க: 'அடியேன்மேல் வைத்து' என்பதே கருத்தாகும். "பொருள் தெரிந்து"=1. "பொருளல்லாத வென்னைப்பொருளாக்கி யடிமைகொண்டாய்" என்றவாறு. இனி, 'பொருள் தெரிந்து' என்பதற்கு—அர்த்தபஞ்சகத்தை நாங்கள் தெரிந்துகொள்ளுமாறு என்றும் பொருள்கொள்ளலாம். நம்மால் அடையத்தக்க எம்பெருமானுடைய ஸ்வரூபம், எம்பெருமானை

1. திருவாய்மொழி 5—7—3.

அடையுமவனான சேதநனுடைய ஸ்வரூபம், அடைவதற்கான உபாயம், அடைந்து பெறும்பேறு, அப்பேற்றை அடையவொட்டாமல் தடைசெய்கிற விரோதிகளின் தன்மை—ஆகிய இவை ஐந்தும் அர்த்தபஞ்சகமெனப்படும் இவற்றை நாங்கள் தெரிந்து கொள்ளும்படி கடாக்ஷித்தருளினமையாலே அகவிருள் நீங்கி அடியவரானோம் என்கை.

இரண்டாமடியின் தனிச்சீர் "இருள் திரிந்து" என்று ஓதப்பட்டு வருமாயினும் 'இருளிரிந்து' என்றபாடமே புராதநமும் சிறந்ததுமாம். ஒண்கமலம்=ஒண்கமலம்போன்ற திருவடி என்றபடி: முற்றுவமை. ... .... ... (௫௯)

ஓருருவ னல்லை யொளியுருவம் நின்னுருவம் *
ஈருருவ னென்ப ரிருநிலத்தோர் *—ஓருருவம்
ஆதியாம் வண்ண மறிந்தாரவர் கண்டீர் *
நீதியால் மண்காப்பார் நின்று. (௬௦)

ஓர் உருவன் அல்லை — (எம்பெருமானே!) பாரத்வமேவடிவாக இருப்பவனன்று நீ;

ஒளி உருவம் — ஆச்ரித பாரதந்த்ரமாய்க் கொண்டு ஒளி பெற்றிருக்கிற ஸ்வரூபம்

நின் உருவம் — உனது வடிவாம்;

(இப்படி ஆச்ரிதபாரதந்திரியமே வடிவாயிருக்கிற உன்னை)

இரு நிலத்தோர் — இப்பெரிய பூமண்டலத்திலுள்ளவர்கள்

ஈர் உருவன் என்பர் — பாரத்வமாகிற பெரியவடிவை யுடையனாகச் சொல்லுகின்றனர்;

ஓர் உருவம் — ஆச்ரிதபாரதந்திரியமாகிற ஒரு வடிவே

ஆதி ஆம் வண்ணம் — எல்லார்க்கும் உஜ்ஜீவந ஹேதுவாயிருக்குமென்பதை

அறிந்தாரவர் கண்டீர் — தெரிந்துகொள்ளுமவர்களே

நீதியால் — நியாயப்படி

நின்று — நிலைத்து நின்று

மண் காப்பார் — உலகத்தை ரக்ஷிக்க வல்லவராவர்.

* * *—கீழ்ப்பாட்டிற் கூறியபடி எம்பெருமான் தன்பெருமையைப் பாராமல் எளிமையையே பிரகாசப்படுத்தித் தம்மை விஷயீகரித்த நீர்மையை அநுஸந்திக்கையாலே, எம்பெருமானுக்கு ஸ்வாதந்திரியமே வடிவு என்று நினைத்திருக்கும் நினைவுதவிர்ந்து அவனுக்கு ஆச்ரித பாரதந்திரியமே வடிவு என்று அனைவரும் நினைக்கவேணு மென்கிறாரிதில்.

இப்பாட்டு எம்பெருமானை நோக்கிக் கூறுவதாம். விளி வருவித்துக்கொள்க. நீ ஓருருவனல்லை=உனக்குப் பரத்வமே வடிவு என்று சாஸ்த்ரங்களைக்கொண்டு பலர் பேசுவர்; அஃது அப்படியன்று; பரத்வத்தையே நீ வடிவாகவுடையையல்லை யென்றபடி. இதில் ஓருரு என்றது பரத்வமாகிற வடிவைக் கருதினபடி எனக்குப் பரத்வம் வடிவன்றாகில், பின்னை எது வடிவு என்கிறாயோ? ஒளியுருவம் நின்னுருவம்=இருட்டறையில் விளக்குப்போலே இவ்விருள்தருமா ஞாலத்தில் ஒளிபெற்று விளங்குமதான உனது ஸௌலப்ய குணமே உனக்கு வடிவாயிருக்கும். நீ ஸ்வதந்திரனன்று, ஆச்ரிதபரதந்திரன் என்கை.

ஆழ்வீர்! எனக்கு ஆச்ரிதபாரதந்திரியமே ஸ்வருபமென்று நீர் சொல்லுகின்றீரே, இது நீரொருவர்மாத்திரம் சொல்லுகிற வார்த்தையா? மற்றுள்ளாரெல்லாரும் இப்படியே கருதியிருக்கின்றார்களா? என்று எம்பெருமான் கேட்டருள, அதற்கு உத்தரமுரைக்கின்றார் ஈருருவனென்ப ரிருநிலத்தோர் என்று. உன்னுடைய ஸௌலப்யகுணம் என்மேல் ஏறிப் பாய்ந்தபடியாலே இவ்வுண்மையை நானொருவன் தெரிந்து சொல்லுகிறேனத்தனை; இக்குணத்தைக் கனவிலுங் கண்டறியாத உலகத்தவர்கள் உன்னைப் பரத்வமே வடிவாக வுடையனாகத்தான் சொல்லுகின்றனர் என்கை. இதில் ஈருருவன் என்றவிடத்து ஈர் என்றது 'இரண்டு' என்னும் பொருளில் வந்ததன்று; 'பெருமை' என்னும் பொருளில் வந்தது. பரத்வமாகிற பெரிய வடிவுள்ளவனாக இவ்வுலகத்தவர் உன்னைச் சொல்லுகின்றனர் என்கை.

ஸௌலப்ய குணத்திலீடுபடாத உலகத்தவர்கள் கிரஹித்திருக்கிறபடி யல்லாமல் அக்குணத்தை அநுபவித்த தாம் அறிந்திருக்கிறபடியே 'எம்பெருமானுக்கு ஆச்ரிதரிட்ட வழக்காயிருக்

குந் தன்மையே நிலைநின்ற வடிவு' என்று எவர் தெரிந்துகொள்வரோ அவர்களே இவ்வுலகில் மேம்பட்டிருப்பர் என்கிறார் பின்னடிகளில்.

இப்பாட்டுக்கு மற்றொருவகையாகவும் பொருள் கொள்ளலாம்;—ஒருருவனல்லை=" உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தா யிமையோர் தலைவா!" என்கிறபடியே அடியவர்களைக் காத்தருள்வதற்காக நீ பலபல யோநிகளில் திருவவதரித்தாயாதலால் பரவாஸுதேவனாயிருக்கையாகிற ஒரு உருவத்தையே நீ உடையையல்லை. ஒளியுருவம் நின்னுருவம்=மீனாகவும் ஆமையாகவும் பன்றியாகவும் பலவுருக்கள் நீ கொண்டாலும் அவை அழுக்குடம்பு அல்ல; நீ பிறக்கு முருவங்களும் சுத்த ஸத்வமயமாய்க் கொண்டு நிரவதிக தேஜோரூபமாகவே யிருக்கும். ஈருருவனென்பரிருநிலத்தோர்=ஆக விப்படி அஸாதாரண விக்ரஹம், அவதார விக்ரஹம் என்று இருபடிப்பட்ட திருமேனியையுடையனாக உன்னை இவ்வுலகத்தவர் தெரிந்துகொண் டிருக்கின்றனர். ஆயினும், அஸாதாரண விக்ரஹத்திற்காட்டிலும் அவதார விக்ரஹமே ஸகல லோக உஜ்ஜீவந ஹேது என்று அறிந்து கொள்வதே சிறப்பு என்கிறார் பின்னடிகளில். ... ... ... (சுo)

நின்றதோர் பாதம் நிலம்புதைப்ப * நீண்டதோள்
சென்றளந்த தென்பர் திசையெல்லாம் *—அன்று
கருமாணியா யிரந்த கள்வனே * உன்னைப்
பிரமாணித்தார் பெற்ற பேறு. (சுக)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொரு காலத்திலே | நின்றது ஓர் பாதம் | (பூமியை அளப்பதாக) நின்ற ஒரு திருவடியானது |
| கரு மாணி ஆய் | கரியகோலப் பிரமசாரியாய்ச் சென்று | நிலம் | பூமண்டலத்தை |
| இரந்த | (மாவலிபக்கல் மூவடிமண்) யாசித்த | புதைப்ப | ஆக்ரமித்துக் கொள்ள (அதன் பிறகு) |
| கள்வனே | க்ருத்ரிமனான பெருமானே!, | நீண்ட தோள் | விம்ம வளர்ந்த திருத் தோளானது |

திசை எல்லாம் சென்று — திக்குக்களெல்லா வற்றிலும் வியாபித்து
அளந்தது என்பர் — (மேலுலகத்தை) அளந்துகொண்ட தென்று (பெரியோர்) சொல்லு கின்றனர்;

(இப்படி நீ காரியஞ் செய்த விது)
உன்னை பிரமாணித்தார் பெற்ற பேறு — உன்னை நம்பினவர்கள் எல்லாரும் பெற்ற புருஷார்த்தமாகும்.

* * *—கீழ்ப்பாட்டில் புகழ்ந்து பேசப்பட்ட ஆச்ரிதபாரதந்திரிய குணத்தை [அல்லது, அவதார விக்ரஹவைலக்ஷண்யத்தை] உலகளந்த சரிதைமுகத்தால் அநுபவிக்கிறாரிதில்.

மாவலியிடத்தில் உதககதாநம் பெறும்போது சிறிய இரண்டு திருவடிகளோடே நீ நின்றுகொண்டிருந்தாயே, அத்திருவடிகளுள் ஒரு திருவடியானது விம்மவளர்ந்து பூமிப்பரப்பு முழுவதையும் ஆக்கிரமித்து விட்டது. மேலுலகங்களை ஆக்கிரமிப்பதற்காக இரண்டாவது திருவடியை உயரத்தூக்க நினைத்திருக்கையில் திசைகள்தோறும் விம்மவளர்ந்த திருத்தோள்களே மேலுலகப் பரப்பு முழுவதையும் ஆக்ரமித்துவிட்டன என்று சமத்காரமாகச் சொல்லுகிறார்.

இப்படி மாவலியை வஞ்சித்து உலகமளந்தவிது ஆச்ரிதனை இந்திரனுக்காகச்செய்த செயலென்று ஸாமாந்யமாகச் சிலர் நினைக்கக் கூடுமாயினும் அவ்விந்திரனொருவனுக்காக மாத்திரம் செய்த காரியமன்று இது; ‘அப்பெருமானையே நாம் விச்வஸித்திருந்தால் நமக்காகவும் இப்படி தன்னை அழியமாறியும் காரியஞ் செய்தருள்வன்’ என்று ஒவ்வொருவரும் நம்பியிருப்பதற்குடலாக எல்லார்க்குமாகச்செய்த காரியமேயாம் இது—என்கிறார் பின்னடிகளில்.

வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:—“உன்னைப்பேணாதே உன்னுடைய விபூதியை அவன் [மாவலி] தன்னதென்ன, அவன் பக்கலிலே இரந்தாயாய் வஞ்சித்தாயாய்ச் செய்தது இந்த்ரனொருத்தனுக்குச் செய்ததேயோ? ‘ஆச்ரித விஷயத்தில் தன்னை அழியமாறி, வஞ்சிக்கும்—தூதுபோம்—ஸாரத்யம்பண்ணும்—எல்லாம் செய்து ரக்ஷிக்கும்’ என்று உன்னை ப்ரமாணித்தவர்கள் மார்விலே கைவைத்துறங்கும்படி பண்ணினையத்தனையன்றோ” என்பதாம்.

பேறொன்று முன்னறியேன் பெற்றறியேன் பேதைமையால் *
மாறென்று சொல்லி வணங்கினேன் *—ஏறின்
பெருத்தெருத்தங் கோடொசியப் பெண்ணசையின் பின்போய் *
எருத்திறுத்த நல்லாய ரேறு. (சுஉ)

| | | | |
|---|---|---|---|
| பெண் நசையின் பின் போய் | நப்பின்னைப் பிராட்டி விஷயத்தி லுண்டான ஆசைக்கு வசப்பட்டு, | மாறு | (நமது பாபங்களுக் கெல்லாம்) சத்துருவான வன், |
| | | என்று சொல்லி | என்றெண்ணி |
| ஏறின் | விருஷபங்களி னுடைய | வணங்கினேன் | அவனை ஆச்ரயித்தேன்; |
| பெருத்த எருத்தம் | பெருத்த முசுப்புகளும் | முன் | இதற்குமுன்பு |
| கோடு | கொம்புகளும் | பேறு ஒன்றும் அறியேன் | இப்படிப்பட்ட புருஷார்த் தத்தைச் சிறிதும் அறியாதவனா யிருந்தேன்; |
| ஒசிய | முறியும்படியாக | | |
| எருத்து | (அந்த ரிஷபங் களின்) கழுத்தை | பேதைமையால் | அப்படி அறியா திருந்ததனால் |
| இறுத்த | முறித்த | | |
| நல் ஆயர் ஏறு | விலக்ஷணனான கோபால கிருஷ்ணன் | பெற்று அறியேன் | அதனைப்பெறுதும் இழந் தொழிந்தேன். |

* * *—இப்படி ஆச்ரித பரதந்த்ரனானவனே என் பிரதி பந்தகங்களைப் போக்கி அபேக்ஷிதங்களையும் தந்தருள்வனென்று அவனைப் பற்றினேனென்கிறார். நப்பின்னைப் பிராட்டியை மணம் புரிவதற்கு இடையூறாயிருந்த ஏழ் விடைகளையும் வென்றடர்த்து அவளை யணைந்துகொண்ட பெருமான் அவ்விதமாகவே நம்மோடு சேர்வதற்கும் பிரதிபந்தகமாயுள்ள பாவங்களைத் தொலைத்து நம்மையு மணைந்தருள்வனென்று கருதி அவன் திருவடிகளில் தலை சாய்த்தேன். அநாதிகாலம் அவிவேகியாய் இழந்தொழிந்த நான் இன்று இப்பேறு பெற்றேன் என்றாராயிற்று. ... (சுஉ)

ஏறேழும் வென்றடர்த்த வெந்தை * எரியுருவத்
தேறேறி பட்ட விடுசாபம் *—பாறேறி
யுண்டதலை வாய்நிறையக் கோட்டங்கை யொண்குருதி *
கண்டபொருள் சொல்லில் கதை. (கூட)

| | |
|---|---|
| ஏறு ஏழும் | ரிஷபங்களேழையும் |
| வென்று | ஜயித்து |
| அடர்த்த | தொலைத்த |
| எந்தை | ஸ்வாமியான கண்ணபிரான் |
| எரி உருவத்து ஏறு ஏறி பட்ட | நெருப்புப்போன்ற உருவத்தையுடையவனும் விருஷபவாஹநனுமான ருத்ரன் அநுபவித்த |
| விடு சாபம் | எல்லாரும் கைவிடும்படியான சாபத்தை(ப் போக்குதற்காக), |
| பாறு ஏறி உண்ட தலை வாய் நிறைய | பருந்துகள் ஏறியிருந்து உண்ணுதற்குரிய கபாலம் வாய் நிரம்பும்படியாக |
| கோடு | குவிந்த |
| அம் கை | அழகிய திருக்கையாலே |
| | (கீறி யெடுத்து அளித்த) |
| ஒண் குருதி | அழகிய ரத்தத்தாலே |
| கண்ட பொருள் | (அக்கபாலம் கையினின்று கழன்றுவிழக்) கண்ட விஷயத்தை |
| சொல்லில் | சொல்லத் தொடங்கினால் |
| கதை | பெரியதொரு பாரத கதையாக முடியும். |

* * *—கீழ்ப்பாட்டில் எம்பெருமானை ஆச்ரயித்தேனென்று அருளிச்செய்தவர் ‘அவ்வெம்பெருமானே எல்லார்க்கும் ஆச்ரயணீயன்’ என்று தெரிவிக்கவேண்டி அவனுடைய மேன்மையைத் தெரிவித்தற் பொருட்டு அரனுடைய சாபத்தைத் தீர்த்தருளின கதையை எடுத்துரைக்கிறாரிதில்.

முன்னொருகாலத்தில் பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்துதலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக்கொள்ளுதலும் அவன் ‘இதற்கு என்செய்வது!’ என்று கவலைப்

பட, தேவர்களும் முனிவர்களும், 'இப்பாவந் தொலையப் பிச்சை யெடுக்கவேண்டும்: என்றைக்குக் கபாலம் நிறையுமோ, அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பல காலம் பலதலங்களிலுஞ் சென்று பிச்சை யேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நிறையப்பெறுமையால் நீங்காமற் போகவே, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தையடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது—என்ற வரலாறு இங்கு அறியத் தக்கது.

சிவனுடைய நிறம் செந்நிறமாதலால் "எரியுருவத்து" எனப் பட்டது. விடுசாபம்=வினைத்தொகை: "கபாலீ த்வம் பவிஷ்யஸி" என்று பிரமனால் பிரயோகிக்கப்பட்ட சாபம் என்றாவது, 'இந்த சாபத்தைத்தீர்க்க என்னாலாகாது, என்னாலாகாது' என்று ஒவ்வொருவராலும் கைவிடப்பட்ட சாபம் என்றாவது பொருள் கொள்க. சாபம்—சாபத்திற்காக; சாபம் நீங்குவதற்காக என்றபடி. பாறு—பிணந்தின்னிப்பறவை. பாறேறியுண்டதலை=மாம்ஸ விருப்பத்தினால் முண்டத்தைப் பருந்து முதலிய பறவைகள் உண்பது வழக்கமாதலால் அவ்வழக்கம் பற்றிய விசேஷணம் இது: 1. "தொடரெடுத்தமால்யானை" என்றதுபோல.

ஒண்குருதி=அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே அப்ராக்ருதமான திருமேனியில் நின்றுமுண்டான ரக்தமாகையாலே 'ஒண் குருதி' என்று சிறப்பித்துக் கூறப்பட்டதென்க. சொல்லில் கதை="பன்னியுரைக்குங்கால் பாரதமாம்." ... (சுந)

கதையும் பெரும்பொருளும் கண்ணாநின் பேரே *
இதய மிருந்தவையே யேத்தில் *—கதையின்
திருமொழியாய் நின்ற திருமாலே * உன்னைப்
பருமொழியால் காணப் பணி. (சுச)

| | | | |
|---|---|---|---|
| கண்ணா | கண்ணபிரானே!, | பெரு பொருளும் | அவற்றின் சிறந்த அர்த்தங்களும் |
| கதையும் | இதிஹாஸ புராணங்களும் | இதயம் | அவற்றின் தாற்பரியமும் |

1. இரண்டாந்திருவந்தாதி—13.

| | |
|---|---|
| இருந்த வையே | உள்ளது உள்ளபடியே |
| ஏத்தில் | அறிந்து துதித்தால் |
| நின் பேரே | (அவையெல்லாம்) உன்னுடைய திருநாமங்களே யாம்; |

| | |
|---|---|
| கதையின் திருமொழி ஆய் நின்ற திருமாலே | இதிஹாஸ புராணங்களின் ஸ்ரீஸூக்தி வடிவமாக நிற்கிற திருமாலே! |
| உன்னை | உன்னை |
| பரு மொழியால் காண | பரிபூர்ண சப்தங்களாலே கண்டு அநுபவிக்கும்படி |
| பணி | திருவுள்ளம் பற்றவேணும். |

* * *—இந்த லீலாவிபூதியில் இருந்துகொண்டு, உன்னுடைய குணசேஷ்டிதம் முதலியவற்றைப் பிரதிபாதிக்கின்ற இதிஹாஸ புராணமுகமாக உனது திருநாம ஸங்கீர்த்தனமாகிற பாக்கியம் எனக்கு வாய்த்தாலும், நித்ய விபூதியில் வந்து சேர்ந்து "ஹாவு ஹாவு ஹாவு; அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்; அஹமந்நாதோ ஹமந்நாதோஹ மந்நாதஃ" என்று வாய்விட்டுப் பேசியநுபவிக்கும்படியான பூர்ணாநுபவத்தை எனக்குத் தந்தருளவேணுமென்கிறார்.

கதை என்ற ஸாமாந்யசப்தம் இங்கு பகவத்கதையான இதிஹாஸபுராணங்களென்று விசேஷப்பொருள் பெற்றுநிற்கும். ஸ்ரீராமாயணம் ஸ்ரீமஹாபாரதம் முதலான இதிஹாஸங்களையும், வைஷ்ணவம், பாத்மம் முதலான புராணங்களையும் மூலம்மாத்திரமே அநுஸந்தித்தாலும், அவற்றின் அர்த்தங்களை அநுஸந்தித்தாலும், அவற்றின் உட்கருத்தைக் கண்டறிந்து அநுஸந்தித்தாலும் எல்லாம் உன்னுடைய திருநாமங்களையாயிருக்குமென்பதில் ஸந்தேஹமில்லை; ஏனென்றால், கதையின் திருமொழியாய் நின்ற திருமாலே!—அந்த இதிஹாஸ புராணங்களின் அக்ஷரங்களாக அமைந்துள்ளவன் நீயேயாதலால் அவற்றைச் சொல்லுவதும் அவற்றின் அர்த்தங்களையும் தாத்பர்யங்களையும் அநுஸந்திப்பதும் உன்னுடைய திருநாம ஸங்கீர்த்தநமாகக் குறையில்லையென்றவாறு.

ஆனால் இவ்வளவிலே நான் த்ருப்திபெறக் கூடவில்லை; பரமபதத்திலே முக்தர்களும் நித்யர்களும் பெருமிடறுசெய்து சொல்லு

கிற சப்தராசிகளுண்டே "ஹாவு ஹாவு ஹாவு" முதலியன—அவற்றைக்கொண்டு உன்னை நான் அநுபவிக்கும்படி அருள்புரியவேணுமென்கிறது ஈற்றடி.

இதயம்='ஹ்ருதயம்' என்ற வடசொல்விகாரம். "கதையும் திருமொழியாய் நின்ற" என்ற சிலருடையபாடமும் இருக்கலாம்; கதையும்—சொல்லப்படுகிற என்கை: அவரவர்கள் சொல்லுகிற திவ்யஸூக்தி ஸ்வரூபமாக நிற்பவனே! என்றபடி. ... (௬௪)

பணிந்தேன் திருமேனி பைங்கமலம் கையால் *
அணிந்தேனுன் சேவடிமே லன்பாய் *—துணிந்தேன்
புரிந்தேத்தி யுன்னைப் புகலிடம்பார்த்து - * ஆங்கே
இருந்தேத்தி வாழு மிது. (௬௫)

| (திருமாலே!,) | | உன்னை | உன்னை |
|---|---|---|---|
| திரு மேனி | உனது திருமேனியை | புரிந்து ஏத்தி | விரும்பித் துதித்து |
| பணிந்தேன் | ஸேவித்தேன்; | புகல்இடம் பார்த்து | பரமபதத்தி லிருக்குமிருப்பை நோக்கி |
| உன் சே அடி மேல் | உனது செவ்விய திருவடிகளின் மேல் | ஆங்கே இருந்து ஏத்தி வாழும் இது துணிந்தேன் | அவ்விடத்திலேயே இருந்துகொண்டு மங்களாசாஸநம் பண்ணி வாழும் வாழ்ச்சியே உரியதென்று அத்யவஸாயங்கொண்டேன். |
| பை கமலம் | அழகிய தாமரை மலர்களை | | |
| அன்பு ஆய் | அன்புகொண்டு | | |
| கையால் அணிந்தேன் | கையால் ஸமர்ப்பித்தேன்; | | |

* * *—இதுவரையில் தாம்பெற்ற லாபத்தை முன்னடிகளிற்பேசி, இனிப்பெறவிரும்பும் லாபத்தைப் பின்னடிகளிற் பேசுகிறார். திருமேனி பணிந்தேன்=உன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்து அதிலே ஆழங்காற்பட்டு வேரற்ற மரம் போலே விழுந்தேன் என்றபடி. அன்பாய் உன் சேவடிமேல் கையால் பைங்கமலமணிந்தேன்=அடிமை செய்யாவிடில் தரிக்க மாட்டாத ப்ரேமத்தையுடையேனாய்க்கொண்டு உன்னுடைய திருவடிகளின்மேல் அழகிய தாமரைப்பூ முதலிய நன்மலர்களை, கைபடைத்த ப்ரயோஜனம் பெறுமாறு ஸமர்ப்பிக்கப்பெற்றேன்

இப்படிச்சொன்ன ஆழ்வாரைநோக்கி எம்பெருமான் 'இவ் விபூதியில் உமக்கு இவ்வளவு அநுபவம் வாய்த்ததாகில் இனி ஒரு குறையுமில்லையே; இங்கேயே இருந்துகொண்டு இப்படியே போது போக்கலாமன்றோ' என்றருளிச்செய்ய; அதற்கு உத்தரமாகப் பின்னடிகள் கூறுகின்றார்;—இவ்விபூதியில் கிடைக்கிற அநுபவம் நிலைத்திருக்கமாட்டாதே; ஆற்றங்கரைவாழ் மரம்போல் அஞ்சவேண்டிய விபூதியாயிற்றே இது; ஆகையால், முடிவாகப் போய்ச் சேரவேண்டுமிடமான பரமபதத்திற் போய்ச்சேர்ந்து அங்கேயிருந்துகொண்டு "பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந் தேத்துவர் பல்லாண்டே" என்று சொல்லப்படுகிற மங்களாசாஸநத்தைச் செய்துகொண்டு வாழும்வகையொன்றே உரியதென்று துணிந்திருக்கின்றேன் என்றாராயிற்று.

புகலிடம்=நாம்போய்ப் புகவேண்டுமிடம் என்ற காரணத்தினாலாவது, அவதாரஸமாப்தியான பின்பு எம்பெருமான் போய்ப் புகுமிடம் என்ற காரணத்தினாலாவது பரமபதத்தைச் சொல்லுகிறது. ... ... ... ... (௫௫)

இதுகண்டாய் நன்னெஞ்சே யிப்பிறவி யாவது *
இதுகண்டா யெல்லாம் நாமுற்றது *—இதுகண்டாய்
நாரணன் பேரோதி நரகத் தருகணையா *
காரணமும் வல்லையேல் காண். (௫௬)

நல் நெஞ்சே — நல்ல மனமே!,
இப் பிறவி ஆவது இது கண்டாய் — இந்த ஸம்ஸாரத்தின் கொடுமை இப்படிப்பட்டது காண்;
நாம் உற்றது எல்லாம் இது கண்டாய் — (இந்த ஸம்ஸாரத்தில்) நாம் அநுபவித்த துக்கங்களெல்லாம் இப்படிப்பட்டவை காண்;
நாரணன் — ஸ்ரீமந் நாராயணனுடைய
பேர் — திருநாமங்களை
ஓதி — ஸங்கீர்த்தனம் பண்ணி
நரகத்து — ஸம்ஸாரமாகிற நரகத்தினுடைய
அருகு — ஸமீபத்திலும்
அணையா காரணமும் — நாம் நிற்கலாகாது என்று வெறுப்பதற்குக் காரணமும்

| | | | |
|---|---|---|---|
| இதுகண்டாய் | இந்த ஸம்ஸாரத்தின் தோஷமேகாண்; | வல்லை ஏல் | நீயே தெரிந்து கொள்ளக் கடவை யாகில் |
| (இப்படி ஒவ்வொன்றையும் நான் எடுத்து உரைக்கவேண்டாதபடி) | | காண் | எல்லாம் தெரிந்துகொள். |

* * *—இந்த ஸம்ஸாரத்தின் கொடுமையைத் தம் திருவுள்ளத்திற்கு உரைக்க எடுத்தெடுத்துக் காட்டுகிறார். நன்னெஞ்சே! இப்பிறவியாவது இதுகண்டாய்= பிறப்பதும் இறப்பதுமாக நடந்து செல்லுகிற இந்த ஸம்ஸாரத்தின் நிலைமையை நெஞ்சே! தெரிந்துகொண்டிருக்கிறாயா? என்கை.

நாம் உற்றதெல்லாம் இதுகண்டாய்= இதுவரையில் நாம் ஸுகதுக்கங்களை மாறிமாறி அநுபவித்து வருகிறோமே, அதற்குக் காரணம் இந்த ஸம்ஸாரமே கிடாய் என்கை.

நாரணன் பேரோதி நரகத்தருகணையாக் காரணமும் இது கண்டாய்= நித்யவிபூதியில் ஒரு மூலையிலிருந்துகொண்டு ஸ்ரீமந் நாராயணனுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ணிக்கொண்டு நரகப்ராயமான இந்நிலத்தின் அருகிலும் அணுகாதிருக்கவேணுமென்று இவ்விருள்தருமாஞாலத்தில் நாம் வெறுப்புக் கொண்டிருப்பதற்குக் காரணமும் இந்த ஸம்ஸாரத்தின் தோஷங்களேயாம்—என்கை. (இவ்விபூதியின் தோஷங்களைக் கொண்டு இதை நரகமென்றே ஞானிகள் சொல்லுவர்கள்.)

வல்லையேல் காண்= உலகத்தில் மறைபொருளாக இருக்குமவற்றை ஒருவர் எடுத்துக்காட்டவேணுமேயன்றி, கண்ணெதிரே நன்கு புலப்படும் விஷயங்களை எடுத்துக்காட்டவேண்டிய அவசியமில்லை; இந்த ஸம்ஸாரத்தின் தோஷம் மறைவானதல்ல; நீயே ப்ரத்யக்ஷமாகக் காணலாம்; பாபத்தாலே கண்குருடானால் ஸம்ஸார தோஷம் தெரியமாட்டாது; அப்படியன்றிக்கே, நீ காணவல்லையேல் நீயே நன்கு கண்டுகொள் என்றவாறு.

இப்பாட்டின் கருத்தை மற்றும் பலவகையாகப் பன்னியுரைக்கலாம். ... ... ... (சுசு)

கண்டேன் திருமேனி யான்கனவில் * ஆங்கவன்கைக்
கண்டேன் கனலுஞ் சுடராழி *—கண்டேன்
உறுநோய் வினையிரண்டு மோட்டுவித்து * பின்னும்
மறுநோய் செறுவான் வலி. (கூஎ)

| | | | |
|---|---|---|---|
| யான் | அடியேன் | உறு நோய் வினை இரண்டும் | மிக்க நோய்களுக்குக் காரணமான புண்ய பாபங்க ளென்கிற இரண்டு கருமங்களையும் |
| கனவில் | ஸ்வப்நம்போன்ற ஸ்வாநுபவத்திலே | ஓட்டுவித்து | தொலைத்திட்டு |
| திரு மேனி | திவ்ய மங்கள விக்ரஹத்தை | பின்னும் | பின்னையும் |
| கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன் ; | மறு நோய் செறுவான் | மறு கிளை கிளர்ந்து வரக்கூடிய வாஸநா ருசிகளை யும் தொலைத் தருளுமவனான எம்பெருமா னுடைய |
| ஆங்கு | அப்போது | வலி | மிடுக்கையும் |
| அவன் கை | அவனது திருக்கையிலே | கண்டேன் | காணப்பெற்றேன். |
| கனலும் சுடர் ஆழி கண்டேன் | ஜ்வலிக்கிற சுடர் மயமான திரு வாழியைக் கண்டேன் ; | | |

* * *—கீழ்ப்பாட்டில் ஆழ்வார் தம் திருவுள்ளத்திற்கு ஸம்ஸார தோஷங்களை எடுத்துரைக்கக்கண்ட எம்பெருமான் 1. "எம்மா வீட்டுத்திறமும் செப்பம்" என்றும், 2. "இச்சுவைதவிர யான் போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே!" என்றும், 3. "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்றும் 4. "வைகுண்டவாஸேபி நமேபிலாஷ:" என்றும் ஞானிகள் பேசாநிற்க, இவர் இந்நிலத்தை இப்படி இகழ்கிறாரே; நம்முடைய அநுபவம் இவர்க்கு இங்கு நன்கு வாய்த்ததாகில் இவர் இந்நிலத்தை இகழ்ந்து பரம பதத்தை ஒரு பொருளாக விரும்பமாட்டார்—என்றெண்ணி, தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹஸேவையை விலக்ஷணமாகப்

1. திருவாய்மொழி 2—9—1. 2. திருமாலை —2.
3. அமலனாதிபிரான்—10. 4. வரதராஜ பஞ்சாசத்–(வேதாந்ததேசிகன்.)

பண்ணிக்கொடுக்க, ஸேவித்து ஆநந்தம் பொலியப் பேசும் பாசுரம் இது.

ப்ரத்யக்ஷ ஸமாநாகாரமான மாநஸ ஸாக்ஷாத்காரத்தைக் கனவு என்கிறது. "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன், திகழுமருக்கனணி நிறமுங் கண்டேன்—செருக்கிளரும், பொன்னாழிகண்டேன் புரிசங்கங் கைக்கண்டேன், என்னாழிவண்ணன்பா லின்று" என்ற பேயார் பாசுரத்தின் பொருளை முன்னிரண்டடிகளில் அடக்கிப் பேசினார்போலு மிவ்வாழ்வார்.

உறுநோய் வினையிரண்டு மோட்டுவித்துப் பின்னும் மறுநோய் செறுவான்வலி கண்டேன்= இப்படி மாநஸ ஸாக்ஷாத்காரம் பெற்றமாத்திரத்திலே தம்முடைய இருவகைக் கருமங்களும் தொலைந்து ருசிவாஸனைகளும் அகன்றொழிந்தனவாகத் தாம் அறுதியிட்டபடியை இதனால் வெளியிடுகிறார். முமுக்ஷுக்களுக்குப் பாபம்போலவே புண்யமும் ப்ரதிபந்தகமாதலால் 'வினையிரண்டு மோட்டுவித்து' என்றார். பாவம் நரகத்திலே கொண்டுதள்ளும்; புண்யம் சுவர்க்கத்திலே கொண்டுதள்ளும்; ஆகவே இருவினைகளும் ஒழியவேண்டும்: "ததா வித்வாந் புண்ய பாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்று சுருதியும் புண்ய பாபங்கள் தொலைந்தபின்பே பரமஸாம்யாபத்தி விளைவதாகச் சொல்லிற்று.

அரிசியில் உமிகழிந்தாலும் தவிடானபாகம் ஒட்டிக்கொண்டிருப்பதுபோல், ஆத்மாவிலும் புண்யபாபங்கள் கழிந்தாலும் சில நாள் வரையில் அவற்றில் நசை தொடர்ந்து வருமாதலால் அதுவும் கழியவேண்டியது முக்கியம்; அதனையுங் கழித்துத் தந்தமை சொல்லுகிறது 'பின்னும் மறுநோய் செறுவான்' என்று.

செறுவான் என்பதை வினையாலணையும் பெயராகக் கொள்ளாமல் வான்விகுதிபெற்ற வினையெச்சமாகக் கொண்டு உரைப்பதும் ஒக்கும்; வாஸநையையும் போக்குகைக்குத்தக்க வலிவு பெற்றேன் என்றவாறு. ... ... ... (சுஎ)

வலிமிக்க வாளெயிற்று வாளவுணர் மாள *
வலிமிக்க வாள்வரை மத்தாக *—வலிமிக்க
வாணாகஞ் சுற்றி மறுகக் கடல்கடைந்தான் *
கோணாகங் கொம்பொசித்த கோ. (சுஅ)

| | |
|---|---|
| வலி மிக்க | மஹாபலசாலிகளாய் |
| வாள் எயிறு | வாள்போன்ற கோரப்பற்களை யுடையராய் |
| வாள் | வாட்படையை யுடையரான |
| அவுணர் | ஆஸுர ப்ரக்ருதிகள் |
| மாள | முடிந்து போவதற்காக,— |
| வலி மிக்க வாள் வரை மத்து ஆக | மிக்க வலிவுள்ளதாய் ஒளியை யுடைத்தான மந்தர மலையை மத்தாகக் கொண்டு |
| வலி மிக்க வாள் நாகம் | அதிகமான சக்தியையும் ஒளியையுமுடைய வாஸுகி நாகத்தை |
| சுற்றி | கடைகயிறாகச் சுற்றி |
| கடல் மறுக கடைந்தான் | கடல் குழம்பும்படி கடைந்தருளினவன் (எவனென்றால்) |
| கோள் நாகம் | மிடுக்கையுடைய குவலயாபீடமென்னும் மதயானையினது |
| கொம்பு | கொம்புகளை |
| ஒசித்த | முறித்தொழித்த |
| கோ | ஸ்வாமியாவன். |

* * *—பிரயோஜநாந்தரத்தை விரும்புமவர்களானாலும் தன்னை வந்து அடுத்தால் அவர்களது விருப்பத்தைப் படாதன பட்டும் தலைக்கட்டியருளுமவன் எம்பெருமான் என்கிறது இப்பாட்டு.

முன்னொருகாலத்தில், அவ்வண்ட கோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்திற் சென்று திருமகளைப் புகழ்ந்துபாடி அவளால் ஒரு பூமாலை ப்ரஸாதிக்கப்பெற்ற ஒரு வித்யாதரமகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில் தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டுவருகையில் துர்வாஸமஹாமுநி எதிர்ப்பட்டு அவளை வணங்கித்துதிக்க, அவ்விஞ்சைமங்கை அம்மாலையை அம் முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையையுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆநந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, அப்பொழுது அங்கு வெகு உல்லாஸமாக ஐராவதயானையின்மேற் பவனி வந்துகொண்டிருந்த இந்திரனைக் கண்டு அவனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக் கொடுக்க, அவன் அதனை மாவட்டியினால் வாங்கி அந்தயானையின் பிடரியின்மேல் வைத்தவளவில், அம்மதயானை அதனைத் துதிக்கையாற் பிடித்திழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது; அதுகண்டு முனிவரன் கடுங்கோபங்கொண்டு இந்திரனை நோக்கி 'இவ்வாறு

செல்வச் செருக்குற்ற உன்னுடைய ஐச்வரியங்களெல்லாம் கடலில் ஒளிந்துவிடக் கடவன' என்று சபிக்க, உடனே தேவர்களின் செல்வம் யாவும் ஒழிந்தன; ஒழியவே, அசுரர் வந்து பொருது அமரரை வென்றனர்: பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சென்று சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாகநாட்டி வாஸுகியென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடையலாயினர்: அப்பொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின் கீழேசென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனன். இப்படி ஸ்ரீமந்நாராயணன் அக்கடலினிடையே மஹாகூர்மமாய் மந்தரபர்வதத்திற்கு ஆதாரமாய் எழுந்தருளியிருக்க, வாஸுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப் பிடித்துக் கொண்ட அசுரர்களும் ஆகிய இருதிறத்தாரும் அதனை வலியப் பிடித்து இழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அத்திருமால் தான் ஒரு திருமேனியைத் தரித்துத் தேவர்கள் பக்கத்திலேயும் வேறொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று வாஸுகியின்வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக்கடைந்தனன்—என்பது கடல்கடைந்த வரலாறு.

[அப்பால் அந்த ஸ்ரீமஹாவிஷ்ணு தந்வந்தரி யென்னும் தேவரூபத்தைத் தரித்து அம்ருத பூர்ணமான கமண்டலத்தைக் கையிலெடுத்துக் கொண்டு அந்த க்ஷீரஸமுத்ரத்திலிருந்து தோன்றினன். அப்பொழுது அசுரர்கள் தந்வந்தரியின் கையிலிருந்த அம்ருத கலசத்தை பலாத்காரமாகப் பிடுங்கிக்கொள்ள, அந்த எம்பெருமான் ஜகந்மோஹநமான ஒரு பெண்வடிவத்தைத் தரித்து அசுரர்களை மயக்கி வஞ்சித்து அமுதத்தைக் கைக்கொண்டு அமரர்களுடைய கோஷ்டிக்கு மாத்திரம் ப்ரஸாதித்தனன் என்பதும் அறியத்தக்கது.]

கோணாகங் கொம்பொசித்த வரலாறு:—கம்ஸன் தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீ புத்திரன் யசோதையினிடம் ஒளித்து வளர்தல் முதலிய வரலாறுகளை நாரத முனிவர் சொல்லக்கேட்டு அதிக கோபங்கொண்டு எவ்வகையினாலாவது கண்ணனைக் கொல்ல நிச்சயித்து, வில்விழாவென்கிற வியாஜம் வைத்துக் கண்ணபிரானையும் பலராமனையும் அழைத்து வரும்படி அக்ரூரனை நியமிக்க, அக்ரூரனுடைய பிரார்த்தனைக் கிணங்கக் கண்ணபிரான் நம்பி மூத்தபிரானுடன் புறப்பட்டுக் கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில், அவ்வரண்மனை வாயில் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, அவ்யாதவவீரர் அதனை யெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை யெடுப்பதுபோல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக் கொண்டு அடித்து அவ்யானையையும் யானைப்பாகனையும் உயிர் தொலைத்துவிட்டு உள்ளே புகுந்தனர்—என்பதாம்.

நாகம்—வடசொல். .... .... ... (சுஅ)

கோவாகி மாநிலங்காத்து * நங்கண் முகப்பே
மாவேகிச் செல்கின்ற மன்னவரும் *—பூமேவும்
செங்கமல நாபியான் சேவடிக்கே யேழ்பிறப்பும் *
தண்கமல மேய்ந்தார் தமர். (சுகூ)

| | | | |
|---|---|---|---|
| கோ ஆகி | ராஜாதி ராஜர்களாய் | நாபியான் | திருநாபியையுடைய பெருமானுடைய |
| மா நிலம் காத்து | பரந்த பூமண்டலத்தை அரசாட்சிபுரிந்து | சே அடிக்கே | திருவடிகளுக்கு |
| நம் கண் முகப்பே | நம் கண்ணெதிரே | ஏழ் பிறப்பும் | பலபல ஜன்மங்களிலே |
| மா ஏகி செல்கின்ற | குதிரையேறித் திரிகின்ற | தண் கமலம் | அழகிய தாமரைப் பூக்களை |
| மன்னவரும் | அரசர்களும், | ஏய்ந்தார் | ஸமர்ப்பித்தவர்களான |
| செம் கமலப்பூ மேவும் | செந்தாமரை மலர் பொருந்தியிருக்கப்பெற்ற | தமர் | பக்தர்களாவர். |

* * *—ஸ்வர்க்கலோகத்திலுள்ள தேவர்கள் எம்பெருமானைப்பற்றித் தங்கள் பிரயோஜனம் பெற்றமை சொன்னார் கீழ்ப்பாட்டில்; அவர்கள் மாத்திரமேயன்று; பூலோகத்திலுள்ள அரசர்களும் எம்பெருமானை ஆராதித்தே மேன்மைபெற்றுப் பொலிகின்றன ரென்கிறா ரிப்பாட்டில்.

சக்ரவர்த்திகளென்று பட்டப் பெயர்பெற்று இந்நிலம் முழுவதையும் அரசாண்டுகொண்டு குதிரையேறிப் பவனி வருகின்ற பிரபுக்களும் தாமே பிரபுக்களாய் விடவில்லை; பத்மநாபனை எம்பெருமானுடைய திருவடிகளில் பல பிறவிகளில் தொண்டுசெய்து அப்பெருமானுடைய அநுக்ரஹத்தினால் பிரபுக்களாயினர் என்றாராயிற்று.

“பூமேவுஞ் செங்கமல நாபியான்” என்றதை உள்ளபடியே அந்வயித்து, பூ—போக்யதை, மேவும்—பொருந்தியிருக்கப்பெற்ற, செங்கமலம்—செந்தாமரைப் பூவை, நாபியான்—திருநாபியிலுடையவன் என்றுரைக்கவுமாம். ஈற்றடியில், “ஏய்ந்தார்தமர்” என்றதற்கு ‘ஏய்ந்தாருடைய பக்தர்களாய்க் கொண்டு’ என்று பொருள்கூறி, ‘பகவத் பக்தர்களுக்குத் தொண்டுசெய்தே பிரபுக்களாயினர்’ என்று உரைத்தலுமாம். ... ... (௬௯)

தமருள்ளம் தஞ்சை தலையரங்கம் தண்கால் *
தமருள்ளுந் தண்பொருப்பு வேலை *—தமருள்ளும்
மாமல்லை கோவல் மதிள்குடந்தை யென்பரே *
ஏவல்ல வெந்தைக் கிடம்.

(௭௦)

| | |
|---|---|
| தமர் உள்ளம் | பக்தர்களுடைய ஹ்ருதயம் |
| தஞ்சை | தஞ்சைமாமணிக் கோயில் |
| தலை அரங்கம் | சிறந்ததான திருவரங்கம் |
| தண் கால் | திருத்தண்கால் |
| தமர் உள்ளும் | பக்தர்கள் தியானிக்கிற |
| தண் பொருப்பு | அழகிய திருமலை |
| வேலை | திருப்பாற்கடல் |
| தமர் உள்ளும் | பக்தர்கள் சிந்திக்கிற |
| மா மல்லை | திருக்கடன்மல்லை |
| கோவல் | திருக்கோவலூர் |
| மதிள் குடந்தை | திருமதில்களோடு கூடின திருக்குடந்தை |

(ஆகிய இத்தலங்களெல்லாம்)

| | |
|---|---|
| ஏ வல்ல எந்தைக்கு இடம் என்பர் | எதிரிகளை முடிக்க வல்லவனான எம்பெருமானுக்கு இருப்பிடமென்பர். |

* * *—எம்பெருமான் திருவுள்ள முவந்து எழுந்தருளியிருக்குமிடங்களிற் சிலவற்றை யெடுத்துக் கூறுகின்றாரிதில். அன்பருடைய நெஞ்சகம், தஞ்சைமாமணிக்கோயில், திருப்பதிகளெல்லாவற்றினும் தலையான திருவரங்கம், திருத்தண்கால், திருமலை, திருப்பாற்கடல், திருக்கடன்மல்லை, திருக்கோவலூர், திருக்குடந்தை—என்னு மிவ்விடங்களை இங்கெடுத்தது மற்றுமுள்ள திருப்பதிகட்கும் உபலக்ஷணமென்க. திருமலை, திருவரங்கம் முதலிய திருப்பதிகளிற் காட்டிலும் எம்பெருமானுக்கு அன்பருடைய நெஞ்சகமே மிகவும் ஆதரணீயமா யிருத்தலால் 'தமருள்ளம்' என்று முற்படக் கூறப்பட்டது.

ஏவல்ல=ஏ—அம்பு; பாகவத விரோதிகளின்மீது அம்புகளைச் செலுத்தவல்ல ஸ்வாமி என்கை. .... ... (எo)

இடங்கை வலம்புரி நின்றார்ப்ப * எரிகான்
றடங்கா ரொடுங்குவித்த தாழி *—விடங்காலும்
தீவா யரவணைமேல் தோன்றல் திசையளப்பான் *
பூவா ரடிநிமிர்த்த போது. (எக)

| | | | |
|---|---|---|---|
| விடம் காலும் | விஷத்தைக் கக்குகின்ற | நிமிர்த்த போது | உயரத்தூக்கியருளின காலத்து |
| தீ வாய் | பயங்கரமான வாயையுடைய | வலம்புரி | சங்கானது |
| | | இடங்கை | இடத்திருக்கையில் |
| அரவு | திருவனந்தாழ்வானாகிற | நின்று | இருந்து கொண்டு |
| அணை மேல் | சயனத்தின் மீது (பள்ளிகொண்டிருக்கின்ற) | ஆர்ப்ப | முழங்க, |
| | | ஆழி | திருவாழியானது |
| தோன்றல் | ஸர்வேச்வரன் | எரி கான்று | நெருப்பை உமிழாநின்று கொண்டு |
| திசை | எல்லா விடங்களையும் | | |
| அளப்பான் | அளந்துகொள்வதற்காக | அடங்கார் | எதிரிகளாய் நின்ற நமுசிமுதலானவர்களை |
| பூ ஆர் அடி | பூப்போன்ற திருவடியை | ஒடுங்குவித்தது | வாய்மாளப் பண்ணிற்று. |

* * *—உலகளந்தருளின காலத்தில் திருவாழி திருச்சங்குகளாகிற நித்யஸூரிகளுக்கு நேர்ந்த ஸம்ப்ரமத்தைப் பேசுகிறுரிதில். எம்பெருமான் மாண்குறள் கோலப்பிரானாய் மாவலியிடஞ் சென்று மூவடிமண் யாசித்தபோது அவன் அப்படியே கொடுப்பதாக இசைந்து தாரைவார்க்கத் தொடங்கும்போது அஸுரகுருவான சுக்கிரன் தடை செய்யவும், பிறகு மூவடிமண்ணை எம்பெருமான் அளந்துகொள்ளத் தொடங்கும்போது "என்னிதுமாயம்! என்னப்பனறிந்திலன், முன்னைய வண்ணமே கொண்டளவாய்" என்று நமுசி வந்து தடை செய்யவும் நேர்ந்து, இவ்விரோதிகளெல்லாம் தொலைந்து எம்பெருமான் வெற்றிபெற்று உலகங்களை அளக்கப்பெற்ற ஸந்தோஷ மிகுதியினால் திருச்சங்காழ்வான் இடத்திருக்கையி லிருந்துகொண்டு பகைவர் அஞ்சி நடுங்கும்படி பெருமுழக்கஞ் செய்தான்; திருவாழியாழ்வான் வலத்திருக்கையிலிருந்துகொண்டு சத்துருக்கள் மண்ணுண்ணும்படி பெருஞ்சுடர் விட்டு ஜ்வலித்தான்.

மெத்தென்ற பஞ்சசயனம்போன்ற சேஷசயனத்தின் மீது இனிதாகத் திருக்கண் வளர்ந்தருள வேண்டிய பெருமான் ஆச்ரிதார்த்தமாகக் காடு மேடையு மளக்க நேர்ந்ததே! என்னும் வயிற்றெரிச்சல் ஆழ்வார்க்கு உள்ளமை பின்னடிகளிற் போதரும்.

விடங்காலுந்தீவாயரவு=அறிவில் தலைநின்ற நித்யஸூரிகளுக்கும் எம்பெருமானிடத்துப் பரிவு மிகுதியினால் அஸ்தாநத்தில் பயசங்கை உண்டாவதுண்டு; நித்யர்களும் முக்தர்களும் திரண்டு 'ஹாவு ஹாவு ஹாவு' என்று ஸாமகோஷம் செய்யாநின்றாலும் அதனை ஸாமகோஷமென்று தெளிந்து கொள்ளாமல் 'அஸுரராக்ஷஸர்கள் இவ்விபூதியிலும் வந்து ஆரவாரஞ் செய்கின்றனர்' என்று பிரமித்துத் திருவனந்தாழ்வான் விஷத்தைக் கக்குகின்றனனென்க. "ஆங்கு ஆரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவு" என்றார் திருமழிசைப் பிரானும். ... ... (எக)

போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு * ஆங்கலர்ந்த
போதரிந்து கொண்டேத்தும் போது * உள்ளம்—போது
மணிவேங்கடவன் மலரடிக்கே செல்ல *
அணிவேங்கடவன் பேராய்ந்து. (எஉ)

| | | | |
|---|---|---|---|
| வானரங்கள் | குரங்குகளானவை | போது | (நீயும் அப்படி செய்ய) வா ; |
| போது அறிந்து | விடியற்கால முணர்ந்து (எழுந்துபோய்) | அணி வேங்கடவன் | அழகிய திருமலையி லுள்ள பெருமா னுடைய |
| பூ சுனை புக்கு | புஷ்பித்த நீர்நிலை களிலே புகுந்து [நீராடி] | பேர் | திருநாமங்களை |
| ஆங்கு அலர்ந்த | அப்போதே மலர்ந்த | ஆய்ந்து | அநுஸந்தித்துக் கொண்டு |
| போது | புஷ்பங்களை | வேங்கடவன் மலர் அடிக்கே செல்ல | அத்திருவேங்கட முடையானுடைய திருவடித்தாமரை கட்கே சென்று சேரும்படியாக |
| அரிந்து கொண்டு | பறித்துக் கொண்டுவந்து ஸமர்ப்பித்து | போதும் | புஷ்பங்களையும் |
| ஏத்தும் | தோத்திரஞ் செய்யா நின்றன : | அணி | ஸமர்ப்பிக்கக் கடவாய். |
| உள்ளம் | மனமே ! | | |

* * *—திருமலையில் திர்யக் ஜந்துக்களான வானரங்களும் எம்பெருமானுக்குப் பணிவிடை செய்யும்படியை எடுத்துக்காட்டி, நெஞ்சே ! நீயும் அப்படி செய்யவேணுமென்கிறார். பஞ்ச பஞ்ச உஷஃகாலத்திலே ரிஷிகள் துயில்விட்டெழுமாபோலே குரங்கு களும் எழுந்து பூத்த சுனைகளிலே சென்று ஸ்நாநம்பண்ணி அங் குள்ள செவ்விப் பூக்களைப் பறித்துக் கொண்டு போய் ஜாதிக்கு ஏற்றவாறு ஏதேனுமொன்றைச் சொல்லித் துதிசெய்து பணியா நிற்கும்: நெஞ்சே ! நீயும் அப்படி செய்யப் புறப்படு. திருவேங் கட முடையானுடைய சீலம் முதலிய குணங்களுக்கு வாசகமான திருநாமங்களை அநுஸந்தித்துக் கொண்டு நன்மலர்களை நாடிக் கொணர்ந்து அவனது திருவடித் தாமரைகளிற் சாத்துவாயாக.

இப்பாட்டில் 'போது' என்ற சொல் நான்கிடத்தில் வந்துள் ளது. முதலிலுள்ளதற்குக் காலமென்று பொருள் ; இரண்டாவ தாகவும் நான்காவதாகவு முள்ளதற்குப் புஷ்பமென்று பொருள் : மூன்றாவது வினைமுற்றாய் 'புறப்படு' என்னும் பொருளது.

மூன்றாமடியின் முதற்சீர் மோனை யின்பத்திற்கிணங்க 'மணி' என்றிருக்கத் தகுமாதலால் "மணி வேங்கடவன்" என்றல் சிறக்

கும். நான்காமடியின் முதலிலுள்ள 'அணி' என்பதை வினை முற்றாகக் கொள்ளலாம். ... ... .... ... (எஉ)

ஆய்ந்துரைப்ப னாயிரம்பே ராதிநடு வந்திவாய் *
வாய்ந்தமலர் தூவி வைகலும் *—ஏய்ந்த
பிறைக்கோட்டுச் செங்கண் கரிவிடுத்த பெம்மான் *
இறைக்காட்படத் துணிந்த யான். (எங)

| | |
|---|---|
| பிறை ஏய்ந்த கோடு | சந்திரகலை போன்ற தந்தத்தையும் |
| செம் கண் | சிவந்த கண்களையுடைய |
| கரி | கஜேந்திராழ்வானை |
| விடுத்த | முதலைவாயில் நின்று விடுவித்தருளின |
| பெம்மான் | ஸர்வேச்வரனை |
| இறைக்கு | ஸ்ரீமந் நாராயணனுக்கு |
| ஆள்பட | அடிமைசெய்ய |

| | |
|---|---|
| துணிந்த யான் | உறுதிகொண்ட அடியேன் |
| ஆதி நடு அந்திவாய் வைகலும் | காலை பகல் மாலை முதலிய எல்லாக் காலங்களிலும் |
| வாய்ந்த மலர் | கிடைத்த புஷ்பங்களை |
| தூவி | ஸமர்ப்பித்து |
| ஆயிரம் பேர் | ஆயிரந் திருநாமங்களையும் |
| ஆய்ந்து உரைப்பன் | ஆராய்ந்து அநுஸந்திப்பேன். |

* * *—எம்பெருமான் ஸ்ரீகஜேந்திராழ்வான் திறத்தில் வெளியிட்டருளின அநுக்ரஹத்தை நோக்கின பின்பு, நாமும் அந்த கஜேந்திரனைப்போலே அடிமை செய்வோமாயின் அப்படிப்பட்ட பகவதநுக்ரஹத்திற்கு நாமும் பாத்திரமாகலாமன்றோ வென்று கருதி எப்போதும் புஷ்பங்களை எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பிப்பதும் அவனுடைய ஸஹஸ்ரநாமங்களை அநுஸந்திப்பதுமாயிராநின்றேனென்று தம்முடைய போதுபோக்கைச் சொல்லிக்கொண்டாராயிற்று.

"ஆதி நடு அந்திவாய்" என்று மூன்று காலங்களை யெடுத்துரைத்தது எல்லாக்காலங்களிலு மென்றபடி.

ஆய்ந்து உரைத்தலாவது—அர்த்தாநுஸந்தாநத்துடன் சொல்லுகை. "வாய்ந்தமலர் தூவி" என்றதனால்—எம்பெருமானுக்கு

ஸமர்ப்பிக்கவேணுமாகில் இன்ன புஷ்பந்தான் ஸமர்ப்பிக்கவேணு மென்று சிரமப்பட்டுத் தேடவேண்டிய நிர்ப்பந்தமில்லை; எந்தப்புஷ்பம் கையில் கிடைக்கிறதோ அதுவே போதுமானது; 'இது எம்பெருமானுக்கு' என்னும் பிரதிபத்தி யொன்றே வேண்டுவது என்பது வெளியாம்.

ஏய்ந்தபிறைக்கோடு=யானையின் தந்தத்திற்குப் பிறையை உவமை கூறுதல் "கானக்களியானை தன் கொம்பிழந்து கதுவாய் மதஞ்சோரத் தன்கையெடுத்துக், கூனற்பிறை வேண்டியண்ணாந்து நிற்குங் கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையே" என்ற பெரியாழ்வாரது வர்ணனையிலுங் காணத்தக்கது.

செங்கண்கரி=யானையின் கண்ணுக்குச் செம்மைநிறம் இயற்கையன்று; முதலையின்மீது கோபத்தினால் வந்தேறியானதென்க. "கரிவிடுத்த பெம்மான்" என்றவிதனை கஜேந்திரமோக்ஷபரமாக உரைத்தலின்றியே கம்ஸனுடைய யானையான குவலயாபீடத்தின் நிரஸநத்தைக் கூறுவதாக உரைத்தலுமொக்கும். கரி—குவலயாபீட யானையை, விடுத்த—தொலைத்த. ... ... (எங)

யானே தவஞ்செய்தே னேழ்பிறப்பு மெப்பொழுதும்
யானே தவமுடையே னெம்பெருமான் *—யானே
இருந்தமிழ் நன்மாலை யிணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழ னல்லேன் பெரிது.

(எச)

| | | | |
|---|---|---|---|
| எம் பெருமான் | ஸர்வஸ்வாமிந்!, | இரு தமிழ் நல் மாலை | சிறந்த தமிழ்ப் பாஷையிலாகிய நல்ல சொல்மாலைகளை |
| ஏழ் பிறப்பும் | எல்லா ஜன்மங்களிலும் | இணை அடிக்கே | (உனது) உபய பாதங்களிலே |
| எப் பொழுதும் | எல்லா அவஸ்தைகளிலும் | சொன்னேன் | விஜ்ஞாபித்தவனாய் |
| தவம் செய்தேன் | தவம் புரிந்தவன் | பெரு தமிழன் | பெரிய தமிழ்க்கலையில் வல்லவனாய் |
| யானே | நானே; | பெரிது | மிகவும் |
| தவம் உடையேன யானே | அந்தத் தபஸ்ஸின் பலனைப்பெற்றவனும் யானே; | நல்லேன் | உனக்கு நல்லவனாயிருப்பவன் |
| | | யானே | அடியேனே. |

* * *—விஷயாந்தரங்களிலே மண்டி உண்டியே உடையே உகந்தோடும் இம்மண்டலத்தார் நடுவே தாம் அப்படியிராமல் எம்பெருமானுக்கே தொண்டுசெய்து திரியும்படியான பாக்கியம் பெற்றமையை நினைக்குங்கால், இவ் விருள்தருமா ஞாலத்திலும் நமக்கு இப்படிப்பட்ட நற்காலக்ஷேபம் வாய்த்ததே! என்கிற ஸந்தோஷமிகுதியினால் 'இல்லையெனக்கெதி ரில்லையெனக்கெதி ரில்லையெனக்கெதிரே' என்றாற்போன்ற வாசகங்கள் பரவசமாகவே வெளிவருவதுண்டு: இவ்வநுஸந்தாநம் ஹேயமான அஹங்காரத்தின் பாற்படாது; உத்தேச்யமான அஹங்காரமேயாம். அஃது இப்பாட்டில் விளங்காநிற்கும்.

காயிலை தின்றும் கானிலுறைந்தும் தீயிடை நின்றும் பூவலம் வந்தும் திரிகின்றசிலர், தங்களையே மஹாதபஸ்விகளாக நினைத்துக் கொள்ளுகின்றனர்; உண்மையில், எம்பெருமானை இடைவிடாது சிந்தித்தும் இப்படிப்பட்ட இனிய தமிழ்ப்பாசுரங்களைப் பாடியும் அநுபவிக்கின்ற நானே தவஞ்செய்தவனாவேன்; தவத்தின் பலனைப் பெற்றவனும் நானேயாவேன்—என்கிறார்.

முதலடியில் "யானே தவஞ்செய்தேன்" என்றார்; தாம் முயற்சிகொண்டு ஒரு தபஸ்ஸு பண்ணினதாகத் தமக்குத் தெரியாமையாலும் தபஸ்ஸின் பலன்மாத்திரம் தம்மிடத்திலுண்டாயிருக்கக் காண்கையாலும் 'யானே தவமுடையேன்' என்றார். இங்ஙனே தாம் சொல்லிக்கொள்வதற்குக் காரணம் இன்னதென்பதை விளக்குவன பின்னடிகள். என்னுடைய வாக்கு பகவத்விஷயத்தில் உபயோகப்படப் பெற்றதனால் நானே தவஞ்செய்தேன், நானே தவமுடையேன்—என்கை. மற்றுள்ள ஆழ்வார்களும் இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்ன பெருந்தமிழர்களாயிருந்தாலும் தம்முடைய அடங்காப் பெருமகிழ்ச்சியினால் "யானே இருந்தமிழ்நன்மாலை யிணையடிக்கே சொன்னேன் பெருந்தமிழன் நல்லேன் பெரிது" என்று சொல்லிக்கொள்ளக் குறையில்லையென்க.

பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று *
இருகணிள மூங்கில் வாங்கி *—அருகிருந்த
தேன்கலந்து நீட்டுந் திருவேங்கடங் கண்டீர் *
வான்கலந்த வண்ணன் வரை. (எரு)

| | | | |
|---|---|---|---|
| பெருகும் | பெருகுகின்ற | அருகு இருந்த தேன் கலந்து | (அந்த மூங்கிற் குருத்தை) ஸமீபத்திலுள்ள தேனிலே தோய்த்து |
| மதம் | மதநீரையுடைத்தான | | |
| வேழம் | யானையானது | | |
| மா பிடிக்கு முன் நின்று | (தனது) சிறந்த பேடையின் முன்னே நின்று | நீட்டும் | (பேடைக்குக்) கொடுப்பதாகக் கையை நீட்டப்பெற்ற |
| இரு கண் இள மூங்கில் வாங்கி | இரண்டு கணுக்களையுடைத்தாய் இளையதான மூங்கில் குருத்தைப்பிடுங்கி | திருவேங்கடம் கண்டீர் | திருமலையன்றே |
| | | வான் கலந்த வண்ணன் வரை | மேகத்தோடொத்த நிறத்தனான பெருமானுடைய (வாஸஸ்தானமான) பர்வதம். |

* * *—கீழ்ப்பாட்டில் 'பெருந்தமிழன் நல்லேன் பெரிது' என்று போரப்பொலியச் சொல்லிக்கொண்ட ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'நீர் நல்ல பெருந்தமிழர் என்பதை நாடுநகரமும் நன்கறிய ஒருகவி சொல்லும், பார்ப்போம்' என்ன, அப்போதருளிச்செய்த கவியாம் இது. வடதிருவேங்கடமாமலையை வருணிக்கிறார். மதம்பிடித்து மனம்போனபடி திரிந்துகொண்டிருந்த ஒரு யானையானது தன்பேடையைக் கண்டது; அதனைமீறி அப்பால் செல்லமாட்டாமல் அதற்கு இனிய உணவுகொடுத்து அதனை த்ருப்திசெய்விக்க விரும்பி மூங்கில்குருத்தைப் பிடுங்கித் தேனிலே தோய்த்து அப்பேடையின் வாயிலே பிழிகின்றதாம்; இப்படிப்பட்ட நிகழ்ச்சிக்கு இடமான திருமலையானது நீலமேக நிறத்தனான எம்பெருமான் உவந்து எழுந்தருளியிருக்குமிடம்— என்றாராயிற்று. எம்பெருமான் பிராட்டியை உவப்பிக்கும்படியைக் கூறுதல் இதற்கு உள்ளுறை பொருள்.

பெரியதிருமொழியில் "வரைசெய்மாக்களிறிளவெதிர் வளர்முளை யளைமிகு தேன்தோய்த்துப், பிரசவாரிதன் இளம்பிடிக்கருள்செயும் பிரிதிசென் றடைநெஞ்சே!" [1–2–5.] என்ற பாசுரமும் இப்பொருள் கொண்டதே. ... ... (எரு)

வரைச் சந்தனக்குழம்பும் வான்கலனும் பட்டும் *
விரைப்பொலிந்த வெண் மல்லிகையும்–நிரைத்துக்கொண்டு *
ஆதிக்கண் நின்ற வறிவ னடியிணையே *
ஓதிப் பணிவ துறும். (எகூ)

| | |
|---|---|
| வரை சந்தனம் குழம்பும் | (மலய) பர்வதத்தினின்று முண்டான சந்தனத்தின் குழம்பையும் |
| வான் கலனும் | சிறந்த ஆபரணங்களையும் |
| பட்டும் | பட்டுப் பீதாம்பரங்களையும் |
| விரை பொலிந்த | பரிமளம் விஞ்சியிருக்கப்பெற்ற |
| வெண் மல்லிகையும் | வெளுத்த மல்லிகை மலர்களையும் |

| | |
|---|---|
| நிரைத்துக் கொண்டு | சேகரித்துக்கொண்டு |
| ஆதிக்கண் நின்ற அறிவன் | ஸகல ஜகத்காரணபூதனாய் ஸர்வஜ்ஞனான பெருமானுடைய |
| அடி இணையே | உபய பாதங்களையே |
| ஓதி | வாயாரத்துதித்து |
| பணிவது | தலையார வணங்குவது |
| உறும் | ஸ்வரூபத்துக்குச் சேரும். |

* * *—எம்பெருமானைத் திருவடிதொழுவதற்காக அவன் ஸந்நிதிக்கு நாம் விடைகொள்ளும்போது "ரிக்த ஹஸ்தஸ்து நோபேயாத் ராஜாநம் தைவதம் குரும் = அரசனையும் கடவுளையும் ஆசார்யனையும் வெறுங்கையனாக அணுகலாகாது" என்ற விதியை அடியொற்றியும் நமது காதலுக்கு இணங்கவும் அப்பெருமானுக்கு உரிய பொருள்களைக் கையிற்கொண்டு செல்லவேணுமென்கிறார். சிறந்த சந்தனம், திவ்யமான ஆபரணம், உயர்ந்த பீதாம்பரம், நறுமணம்மிக்க நன்மல்லிகைமலர் ஆகிய இவற்றைக் கையிற்கொண்டு சென்று எம்பெருமானது திருவடிகளைத் துதித்து வணங்குதல் நன்று.

இப்பாசுரத்திற்கு ஓரடைவிலே அழகிய மணவாளச்சீயர் ரஸோக்தியாக ஏறிட்டு உபந்யஸித்த ஒரு பொருளும் குறிக்கொள்ளத்தக்கதே; அதாவது—வரைச்சந்தனக்குழம்பு முதலியவற்றை எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கும்பொருட்டுக் கையிற்கொண்டு ஸந்நிதிக்குச் செல்லவேணுமென்பதே இப்பாசுரத்தின் பொருளாயினும் வேறுவகையான பொருளும் தொனிக்கின்றது;

அன்பர்கள் பகவத்ஸந்நிதியிலே அருளிச்செயல் ஸேவிக்கப் போகும்போது அழுக்குடம்போடும் கந்தைத்துணியோடும் சிக்கு நாற்றத்தலையோடும் போகுகையின்றியே, "மெய்யிட நல்லதோர் சாந்தமும்" என்கிறபடியே அழகாக உடம்பிற் சந்தனம் பூசிக்கொண்டும், "கழுத்துக்குப்பூணொடு காதுக்குக் குண்டலமும்" என்கிறபடியே கண்டிகை, குண்டலம், மோதிரம் முதலிய ஆபரணங்களணிந்துகொண்டும், "உடுத்துக்களைந்த நின்பீதக வாடையுடுத்து" என்கிறபடியே திவ்ய வஸ்த்ர முடுத்துக்கொண்டும், "தொடுத்த துழாய்மலர் சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம்" என்கிறபடியே நல்ல புஷ்பங்களைச் சூடிக்கொண்டும் சென்று, ஓதிப்பணிவது உறும்=அருளிச்செயல் ஓதுவது நன்று—என்றும். பண்டைக்காலத்தில் பட்டர் இயல் கோஷ்டிக்கு எழுந்தருளும்போது இவ்வகை அலங்காரங்களுடனே எழுந்தருள்வரென்பது ப்ரஸித்தம். .... ... ... (எசு)

உறுங்கண்டாய் நன்னெஞ்சே யுத்தமன் நற்பாதம் *
உறுங்கண்டா யொண்கமலந் தன்னால்—* உறுங்கண்டாய
ஏத்திப் பணிந்தவன்பே ரீரைஞ்ஞூ றெப்பொழுதும் *
சாத்தி யுரைத்தல் தவம். (எஎ

| | |
|---|---|
| நல் நெஞ்சே | நல்ல மனமே!, |
| உத்தமன் | புருஷோத்தமனுடைய |
| நல் பாதம் | சிறந்த திருவடிகள் |
| உறும் கண்டாய் | நமக்கு ப்ராப்தமானவை காண்; |
| (அப்படிப்பட்ட திருவடிகளை) | |
| ஒண் கமலம் தன்னால் | அழகிய தாமரை மலர்களினால் |
| (ஆராதிப்பதானது) | |
| உறும் கண்டாய் | நமக்கு உரியது காண்; |
| சாத்தி | (அத்தாமரை மலர்களை) ஸமர்ப்பித்து |
| ஏத்தி | துதித்து |
| பணிந்து | நமஸ்கரித்து |
| அவன் பேர் ஈர் ஐஞ்ஞூறு | அவனது ஸஹஸ்ர நாமங்களையும் |
| எப்பொழுதும் | அநவரதமும் |
| உரைத்தல் | ஸங்கீர்த்தனம் பண்ணுகையாகிற |
| தவம் | தபஸ்ஸானது |
| உறும் கண்டாய் | உரியது காண். |

* * *—நான் சொல்வதைக்கேட்டு அதன்படியே நடக்கும் நன்னெஞ்சமே! உனக்கு ஹிதமானவற்றைச் சொல்லுகின்றேன், கேளாய் யோக்யர் அயோக்யர் என்று வாசிபாராதே எல்லாரையும் ஆட்படுத்திக்கொள்ளுகையாகிற சிறந்த குணம் வாய்ந்த புருஷோத்தமனுடைய திருவடிகளே நமக்கு ப்ராப்தமென்று கொள்; அன்னவனது அத்திருவடிகளைத் தாமரைமலர் முதலிய நன்மலர்களால் ஆராதிப்பது ஸ்வரூபப்ராப்தம் என்று கொள்: அவனையே வாயாரத்துதித்துத் தலையாரவணங்கிப் பேராயிரமும் ஓதுவதே நமக்குத்தவம் என்று கொள்—என்றாராயிற்று. (எஎ)

தவஞ்செய்து நான்முகனே பெற்றான் * தரணி
நிவர்ந்தளப்ப நீட்டிய பொற்பாதம் *—சிவந்ததன்
கையனைத்து மாரக் கழுவினான் * கங்கைநீர்
பெய்தனைத்துப் பேர்மொழிந்து பின். (எஅ)

| | |
|---|---|
| தரணி | பூமியை |
| அளப்ப நிவர்ந்து | தாவியளப்பதாகத் தொடங்கின த்ரிவிக்ரமாவதார காலத்திலே |
| நீட்டிய | பரப்பின |
| பொன் பாதம் | அழகிய திருவடியை |
| கங்கை நீர் பெய்து | கங்காதீர்த்தமாகப் பெருகின கமண்டலதீர்த்தத்தைப் பணிமாறி |
| அனைத்து பேர் மொழிந்து | (பரமனுடைய) எல்லாத் திருநாமங்களையும் வாயாரச் சொல்லி |
| பின் | பிறகு |
| தன் சிவந்த கை அனைத்தும் ஆர | தனது அழகிய கைகளெல்லாம் ஸபலமாகும்படி |
| கழுவினான் | திருவடி விளக்கியவனான |
| நான்முகனே | பிரமனொருவனே |
| தவம் செய்து பெற்றான் | தவப்பயன் பெற்றவனாயினன். |

* * *—எம்பெருமான் உலகளந்தருளினகாலத்தில் ஸ்ரீபாத தீர்த்தங்கொண்ட நான்முகனொருவனே பெருந்தவத்தோனென்கிறார் "குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்பெய்து, மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி—கறைகொண்ட, கண்டத்தான் சென்னிமேலேறக் கழுவினான், அண்டத்தான் சேவடியையாங்கு" என்ற திருமழிசைப்பிரான் பாசுரங்காண்க.

கங்கைநீர்பெய்து—நான்முகன் தனது கமண்டலதீர்த்தத்தைக் கொண்டு திருமாலின் திருவடியை விளக்கினதாக ப்ரமாணங்கள் சொல்லாநிற்க, இவர் 'கங்கைநீர்பெய்து' என்கிறாரே, இது பொருந்துமோ? என்னவேண்டா; பிரமன் திருவடிவிளக்கின கமண்டலதீர்த்தமே அடுத்த க்ஷணத்தில் கங்காதீர்த்தமாக ப்ரவஹிக்கப்பெற்றதனால் அதனையுட்கொண்டே "கங்கைநீர் பெய்து" என்றருளிச் செய்யப்பட்டுள்ளது—என்றுணர்க. ஆகவே, இங்குக் கங்கைநீர் என்றது—கங்கைநீர் ஆவதற்கு உறுப்பான கமண்டலதீர்த்தத்தைச் சொன்னபடி. தரணி—வடசொல். (எஅ)

பின்னின்று தாயிரப்பக் கேளான் * பெரும்பணைத்தோள்
முன்னின்று தானிரப்பாள் மோய்மலராள் *—சொல்நின்ற
தோள்நலத்தான் நேரில்லாத் தோன்றல் * அவனளந்த
நீணிலந்தா னத்தனைக்கும் நேர். (எகூ)

| | |
|---|---|
| தாய் | மாதாவான கௌஸல்யை |
| பின் நின்று | பின் தொடர்ந்து |
| இரப்ப | (என்னைவிட்டு நீ காட்டுக்குப் போகலாகாது என்று) பிரார்த்திக்கவும் |
| கேளான் | அதனை ஏற்றுக் கொள்ளாதவனும், |
| பெரு பணை தோள் | சிறந்த மூங்கில் போன்ற திருத்தோள்களை யுடையளாய் |
| மொய் மலராள் தான் | அழகிய தாமரைப் பூவில் பிறந்தவளான பிராட்டியின் அம்சமான ஸீதையானவள் |
| முன் நின்று | முன்னே நின்று |
| இரப்பாள் | (இந்த ஸுகுமாரமான திருமேனியைக்கொண்டு காட்டுக்குப் போவது வேண்டா என்று) பிரார்த்தித்தவளவிலும் |
| | (அதையும் ஆதரியாதவனும்) |
| சொல் நின்ற | தந்தையின் நியமனமாகிய சொல் ஒன்றிலேயே தீவ்ரமாக நின்ற |
| தோள் நலத்தான் | புஜபலத்தை யுடையனும் |
| நேர் இல்லா தோன்றல் | ஒப்பற்ற ஸ்வாமியுமான இராமபிரானுடைய

| | | | | |
|---|---|---|---|---|
| அத்தனைக்கும் | (காட்டின் கொடுமையைப் பாராமல் தைரியமாகக் காட்டுக்கு எழுந்தருளின) அப்படிப்பட்ட செயலுக்கு | அவன் அளந்த நீள் நிலம் தான் நேர் | அப்பெருமான் மிகப்பெரிய இவ்வுலகத்தை அளந்த செயல் ஒன்றே ஒத்தது. |

* * *—ஸ்ரீராமாவதாரத்தில், இராமபிரான் தந்தையின் நியமநங்கொண்டு காட்டுக்குப் புறப்படுகையில் தாயாகிய கௌஸல்யையும் தேவியான பிராட்டியும் காட்டின் கொடுமைக்கு அஞ்சி 'காட்டுக்குப் போகலாகாது' என்று சொல்லி வேண்டச்செய்தேயும் அவ்வேண்டுகோளைச் சிறிதுங் காதிற்கொள்ளாமல் 'தந்தை சொல் தவறலாகாது' என்பதுபற்றியும், 'துஷ்டர்களைத் தண்டித்து சிஷ்டர்களை வாழ்விப்பதற்குப் பாங்காக நமக்கு வாய்த்த வநவாஸத்தை இழக்கலாகாது' என்பதுபற்றியும் ஒன்றையும் சிந்தியாது காட்டுக் கெழுந்தருளின பெருங்குணத்திற்கு ஒப்பாகச் சொல்லக்கூடிய விஷயம் வேறொன்றுமில்லை; சொல்லில், அப்பெருமான் வஸிஷ்டசண்டாள விபாகம் பாராமல் எல்லார்தலையிலும் திருவடியை வைக்கத் தாவி யன்றுலகளந்த சரிதமொன்றே ஒப்பாகச் சொல்லத்தகும்; இராமனுடைய பெருங்குணத்திற்குத் திரிவிக்கிரமனுடைய பெருங்குணமே ஒப்பாகப் பொருந்தவற்று—என்கிறார். இதனால், 'சந்திரன் சந்திரனைப்போலே அழகியான்; கடல் கடல்போலே பெரிது' என்னுமாபோலே எம்பெருமானுடைய குணத்திற்கு அவனுடைய குணத்தையே ஒப்புச் சொல்லவேணுமத்தனையல்லது, வேறொருவருடைய குணமும் பகவத்குணத்திற்கு ஈடாக மாட்டாது—என்று காட்டியவாறு.

"அத்தனைக்கும் அவனளந்த நீணிலந்தான் நேர்" என்றதற்கு— இராமபிரானுடைய குணம் எப்படிப்பட்டதென்றால், "பெரிது பெரிது புவனம் பெரிது" என்கிறாப்போலே இவ்வுலகம் எவ்வளவு பெரிதோ அவ்வளவு பெரிது என்னலாமத்தனை யொழிய, மற்றைப்படியாக அவன் குணத்தை வகையிட்டுச் சொல்லமுடியாது என்றுங் கருத்தாகலாம்.

சொல்நின்ற = ஸ்ரீராமாயண ப்ரதிபாத்யமாய் நின்ற என்றுமாம். மூன்றாமடியில், "தோள் நலத்தான்" என்பதே ப்ராசீந பாடம்; "தோள் நலந்தான்" என்ற பாடத்திலும் பொருள் பொருந்தும்; தோள்—திருத்தோள்களையுடையனான இராமபிரானுடைய, நலந்தானத்தனைக்கும் — மஹாகுணத்துக்கெல்லாம் என்க. ... ... ... ... (எகூ)

நேர்ந்தே னடிமை நினைந்தேன் அதொண்கமலம் *
ஆர்ந்தேனுன் சேவடிமே லன்பாய் *—ஆர்ந்த
அடிக்கோலங் கண்டவர்க் கென்கொலோ * முன்னைப்
படிக்கோலம் கண்ட பகல். (அ0)

| | | | |
|---|---|---|---|
| அடிமை நேர்ந்தேன் | (உனது திருவடிகளில்) கைங்கரியம்பண்ண நேர்பட்டேன்; | ஆர்ந்த | பரிபூர்ணமான |
| ஒண் கமலம் அது நினைந்தேன் | அழகிய தாமரைப் பூப்போன்ற அத் திருவடிகளைச் சிந்தித்தேன்; | அடி கோலம் | திருவடிகளினழகை |
| உன் சே அடி மேல் | உனது அத்திருவடிகள் விஷயத்திலே | கண்டவர்க்கு | ஸேவிக்கப்பெற்றவர்கட்கு |
| அன்பு ஆய் ஆர்ந்தேன் | அன்பே வடிவெடுத்தவனாகப் பொருந்தினேன்; | படி கோலம் கண்ட முன்னைப் பகல் என்கொல் | திருமேனியின் அழகை ஸேவிக்கப்பெற்ற முற்காலம் சிறந்ததாகுமோ? |

[திருமேனி ஸேவையிற் காட்டிலும் திருவடி ஸேவையேயன்றோ மிகச் சிறந்தது.]

* * *—எம்பெருமானுடைய திருவடிகளிலேயே தமக்கு அளவுகடந்த அன்பு அமைந்திருக்கும்படியை முன்னடிகளில் வெளியிட்டார்; அதற்குமேல் 'எம்பெருமானுடைய திருமேனியெல்லாம் உத்தேச்யமன்றோ; திருவடியை மாத்திரமே பேசுகின்றீரே; மற்ற அவயவங்கள் உத்தேச்யமல்லவோ உமக்கு?' என்று ஒரு கேள்விபிறந்ததாகக்கொண்டு, திருவடியின் அழகுக்குமுன்னே திருமேனியின் அழகு ஒரு பொருளாய்த் தோற்றுமோ? என்கிறார் பின்னடிகளில்.

ஒண்கமலம் அது நினைந்தேன்= 'கமலம்போன்ற திருவடி என்று சொல்லவேண்டுமிடத்து, கமலம் என்றே சொன்னது—ரூபகாதிசயோக்தி யலங்காரமென்க.

உன் சேவடிமேல் அன்பாய் ஆர்ந்தேன்= அன்பு என்று ஒரு வஸ்துவும், அதனையுடைய நான் என்று ஒரு வஸ்துவும் ஆக இரண்டு வஸ்துக்களின்றியே அன்புதானே நானாக வடிவெடுத்த தென்னப் பொருந்திவிட்டேன் என்கை.

ஆர்ந்த அடிக்கோலம் கண்டவர்க்கு முன்னைப்படிக்கோலங் கண்ட பகல் என்கொல்?= உகைளந்தகாலத்தில், கீழுலகத்தி லுள்ளவர்கட்கும் மேலுலகத்திலுள்ளவர்கட்கும் திருவடிஸேவை கிடைத்தது; நடுவுலகத்தி லுள்ளவர்கட்குத் திருமேனிஸேவை கிடைத்தது; திருமேனியை ஸேவிக்கப் பெற்றவர்களிற் காட்டிலும் திருவடிகளை ஸேவிக்கப் பெற்றவர்களின் பாக்கியமே சிறந்த பாக்கியமாதலால் திருமேனியிற் காட்டிலும் திருவடியே பரம உத்தேச்யமாம்—என்பது இப்பாட்டின் ஸாரமான கருத்து.

"அடிக்கோலம் கண்டவர்க்கு" என்றதை—தன்மையில் வந்த படர்க்கையாகக் கொண்டு, இன்று திருவடிகளை ஸேவிக்கப் பெற்ற வெனக்கு இதற்குமுன் திருமேனியை ஸேவிக்கப் பெற்ற காலம் என்னுவது? அக்காலத்தைவிட இக்காலமே எனக்குச் சிறந்தது—என்பதாகவும் உரைக்கலாம். .... ... (அ0)

பகல்கண்டேன் நாரணனைக் கண்டேன் * கனவில்
மிகக்கண்டேன் மீண்டவனை மெய்யே * மிகக்கண்டேன்
ஊன்திகழு நேமி யொளிதிகழுஞ் சேவடியான் *
வான்திகழுஞ் சோதி வடிவு. (அக)

| | | | |
|---|---|---|---|
| பகல் கண்டேன் | இராக்காலம் கலசாமல் ஒரே பகற்போதாய்ச் செல்லுகிற நல்விடிவைக் கண்டேன்; | நாரணனை கண்டேன் | ஸ்ரீமந் நாராயண (ஞகிற என்று மஸ்தமியாத ஆதித்ய)னைக் கண்டேன்; |
| (அதாவது என்னவென்றால்) | | மீண்டு | இன்னமும், |

| | | | |
|---|---|---|---|
| கனவில் | மாநஸஸாக்ஷாத் காரத்திற் காட்டிலும் | ஒளி திகழும் சே அடியான் | பிரகாசம் மிக்க திருவடிகளை யுடையவனுமான அப்பெருமா னுடைய |
| மிக மெய்யே | மிகவும்ப்ரத்யக்ஷமாக அவனை கண்டேன்—; | வான் திகழும் | பரமபதத்திலே விளங்குகின்ற |
| ஊன் திகழும் நேமி | திருமேனியில் விளங்குகின்ற திருவாழியை யுடையவனும் | சோதி வடிவு | சோதிமயமான வடிவத்தை |
| | | மிக கண்டேன் | (இங்கே) நன்கு ஸேவிக்கப் பெற்றேன். |

* * *—எம்பெருமானுடைய ஸாக்ஷாத்காரம் தமக்கு வாய்த்த படியை வாயாரப் பேசுகிறார். இந்த ஸம்ஸாரத்தில் முப்பதுநாழிகைக்கு ஒருமுறை இராப்பொழுதும் பகற்பொழுதும் மாறி மாறி வந்தாலும் எம்பெருமானுடைய ஸேவை கிடைக்கப்பெறாத காலத்தைக் காளராத்திரியாகவே ஞானிகள் கருதுவர்கள். ஸூரியன் விளங்குங்காலம் பகற்பொழுது என்றும், அங்ஙனல்லாத காலம் இராப்பொழுதென்றும் ஸாமாந்யர்கள் நினைத்திருப்பர்களாயினும், விசேஷ ஞானிகள் அங்ஙனம் நினைத்திரார்கள். பகவத் ஸேவை வாய்க்குங்காலம் எதுவோ, அதுவே பகல்; மற்றது இரவு—என்பதே இவர்களது ஸித்தாந்தம். அதனை அடியொற்றி ஆழ்வார் "பகற் கண்டேன்" என்கிறார்; எம்பெருமானை ஸேவிக்கப் பெற்றேன் என்பது இதன் கருத்து; இக்கருத்தைப் பிறர் தெரிந்து கொள்ளுதல் அரிதாகையாலே தாமே இதனை விவரணஞ் செய்தருள வேண்டி "நாரணனைக் கண்டேன்" என்கிறார்.

இவ்விடத்தில் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானவருளிச் செயல் காண்மின்:—"(பகற்கண்டேன்.) காளராத்ரியாய்ச் செல்லாதே விடியக் கண்டேன். வடுகர் வார்த்தைபோலே தெரிகிறதில்லை; எங்களுக்குத் தெரியும்படி சொல்லீரென்ன; (நாரணனைக் கண்டேன்.) அஸ்தமியாத ஆதித்யனைக் கண்டேன்."

இப்படி இவர் "பகற்கண்டேன்" என்றும் "நாரணனைக் கண்டேன்" என்றும் சொல்லக் கேட்டவர்கள் 'நீர் அடிக்கடி கண்டேன் கண்டேன் என்கிறதெல்லாம் கனவுபோலே நெஞ்சில்

தோற்றுகிற தோற்றத்தைத்தானே சொல்லுகிறீர்; இப்போது கண்டேனென்கிறதும் அப்படிப்பட்ட தோற்றந்தானோ' என்ன இப்போது நான் விலக்ஷணமாகக் கண்டேனென்கிறார் மற்ற அடிகளால். பரமபதத்திலே "ஸதா பஶ்யந்தி ஸூரய:" என்று நித்யஸூரிகள் கண்டுகொண்டிருக்கும் திவ்யமங்கள விக்ரஹத்தை மெய்யே காணப்பெற்றேனென்றாராயிற்று.

வான்திகழும் சோதிவடிவு=மேகம்போலே விளங்குகின்ற சோதி வடிவை என்று முரைப்பர். ... ... .... (௭௧)

வடிக்கோல வாள்நெடுங்கண் மாமலராள் * செவ்விப்
படிக்கோலம் கண்டகலாள் பன்னாள் *—அடிக்கோலி
ஞாலத்தாள் பின்னும் நலம்புரிந்த தென்கொலோ *
கோலத்தா லில்லை குறை. (௭௨)

வடி கோலம் — வடிக்கட்டின அழகை யுடையவளும்

வாள் நெடு கண் — ஒளி பொருந்திய நீண்ட திருக்கண்களை யுடையவளும்

மா மலராள் — சிறந்த தாமரை மலரில் பிறந்த வளுமான பெரிய பிராட்டியார்

செவ்வி படி கோலம் — சிறப்புற்ற (அவனது) திருமேனியின் அழகை

கண்டு — கண்ணால் அநுபவித்து

பல் நாள் அகலாள் — க்ஷணகாலமும் விட்டுப் பிரியாமல் எப்போதும் கூடியே யிருக்கின்றாள்;

பின்னும் — எம்பெருமானுடைய அழகிலே பிராட்டி ஆழங்காற்பட்டு அழுந்துகிற படியைக் கண்டுவைத்தும்

ஞாலத்தாள் — பூமிப்பிராட்டியானவள்

அடிக்கோலி — பாரித்துக்கொண்டு

நலம் புரிந்தது என் கொலோ — (அப்பெருமானிடத்தில்) ஆசையைப் பெருக்கிக்கொண்டிருப்பது என்னோ?

| | | |
|---|---|---|
| கோலத்தால் குறை இல்லை | (எத்தனை பேர்கள் அநுபவித்தாலும் ஏற்றிருக்கும்படியான) அழகினால் குறையில்லையன்றோ. | [எம்பெருமானிடத்தில் அழகு அளவற்றிருப்பதனால் பலரும் ஆசைப்பட நேர்கின்றது.] |

* * *—கீழ்ப்பாட்டில் "நாரணனைக் கண்டேன்" என்றாரே; ப்ரஹ்மசாரி நாராயணனைக் கண்டேனல்லேன்; திருமடந்தை மண்மடந்தைகட்குக் கொழுநனை திருமாலைக் கண்டேனென்கிறார் இதில். இவ்வர்த்தத்தை நேரே அருளிச்செய்யாமல் ஒரு சமத்காரம் பொலியப் பேசுகிற அழகு காண்மின்.

பூவிற்பிறந்த பெரிய பிராட்டியார் எம்பெருமானுடைய அளவிறந்த போக்யதையிலே ஆழங்காற்பட்டு 'உன்னை ஒருநொடிப் பொழுதும் விட்டுப் பிரியமாட்டேன், உன்னை ஒருநொடிப்பொழுதும் விட்டு அகலமாட்டேன்' என்றே வாய்வெருவிக்கொண்டு அவனுடைய போக்யதையாகிற அமுத வெள்ளத்திலே கிடந்து தத்தளிக்கின்றாள். அநுபவத்தில் பெரிய கைகாரியான பிராட்டியின் நிலைமையே இதுவாயின் அவளினும் கீழ்ப்பட்டவளான பூமிப்பிராட்டி 'நாம் அணுகுவதற்கும் நமக்கு போக்யதையில்லை; ஒன்றான பிராட்டியே குமிழ் நீருண்ணும் விஷயத்திலே நாம் கை வைக்கத்தகுமோ?' என்று உதாஸீனையாய் விலக வேண்டியிருக்கவும், அந்த எம்பெருமான் விஷயத்திலே தானும் அபிநிவேசங்கொண்டு அணுகுகின்றாளே; இஃது என்கொல்?

இதற்குத் தாமே ஸமாதான மருளிச்செய்கிறார் ஈற்றடியால்; [கோலத்தால் குறை இல்லை.] உலகத்தில் க்ஷுத்ர விஷயங்களிலே ஒரு வஸ்துவில் ஒருவன் ஆசைவைத்து விட்டால் அதை மற்றொருவன் ஆசைப்பட நினையாதிருப்பதுண்டு; அதற்குக்காரணம் ஏதென்னில், அந்த விஷயங்களில் போக்யதை மிகவும் அற்பமாகையாலே ஒருவன் அநுபவிப்பதற்கே போதும் போதாதாயிருக்கும்; சிறியதொரு குட்டையில் தண்ணீர் குடிக்க ஒருவன் இறங்கினால் 'அவனொருவனுக்கே போராததான அதிலே நாமும் இறங்குவதேன்?' என்று மற்றையோர் அதனை உபேக்ஷித்துப் போவர்; அதுவே ஒரு பெரு வெள்ளமாயிருந்தால் 'இஃது எல்

லார்க்கும் ஈடு கொடுக்கும்' என்று அனைவரும் அதிலே இறங்கி அநுபவிப்பர்கள்; அதுபோல, பகவத்விஷயமானது * கொள்ள மாளாவின்ப வெள்ளமாதலால் எத்தனைபேர் அநுபவித்தாலும் பாங்காகவே யிருக்குமாகையாலே பூமிப்பிராட்டியும் மேல்விழும்படி யிருக்கின்றது என்று—எம்பெருமானுடைய போக்யதையின் அளவின்மை சொன்னவாறு.

இங்கே வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:—“ தன்னில் மிடுக்கனானவன் அழுந்தப்புக்கால் கரையிலே நிற்கிறவன் புகாதே போகவன்றோ அடுப்பது; எல்லாரிலும் அளவுடைய பெரியபிராட்டியார் குமிழ் நீருண்ணும் விஷயமானால் இவள் அகலப்பாராதே அகப்படுகைக்கு ஹேது வென்னென்னில்; ஹேது சொல்லுகிறது (கோலத்தால் இத்யாதி.) நின்றார் நின்ற நிலைகளிலே அகப்பட வேண்டும் அழகு குறைவற்றிருக்கையாலே யென்கை இதரவிஷயங்கள் இருவர்க்கும் அநுபவிக்கப் போராமையாலே சீறுபாறென்கிறது: கிண்ணகத்தி விழியுமாபோலே எல்லாரும் திரளவநுபவிக்க வேண்டும் பரப்பு உண்டாகையாலே இவ்விஷயத்தை யநுபவிப்பார்க்கு ப்ரியமேயுள்ளது.”

வடிக்கோல வாள்நெடுங்கண்=வடி—கூர்மை பொருந்தியதும், கோலம்—அழகியதுமான, வாள்—வாள்போன்ற, நெடுங் கண்களையுடைய மாமலராள் என்று முரைக்கலாம். “அடிக்கோலி” என்பதற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் ‘அகலப்பாரித்து’ என்று பொருள் காண்கிறது; அதாவது ‘இலையகலப் பாரித்து’ என்றபடி. ச்ராத்தத்தில் நிமந்த்ரணமுண்ணப்போகிறவன் ‘அப்படி உண்ணவேணும், இப்படி உண்ணவேணும், வடையை நெய்யில் தோய்த்து உண்ணவேணும்’ என்றிப்படி முன்னம் மநோரதிக்குமது இலையகலப் பாரித்த லெனப்படும்: அதுபோல, பூமிப்பிராட்டியார் எம்பெருமானை அநுபவிப்பதற்கு மநோரதிக்கும்படியை ‘அடிக்கோலி’ என்றதனால் சொல்லிற்றென்க. அரும்பதவுரைகாரர் “அடிக்கோலுகை—அகலுகைக்கு உத்யோகிக்கை” என்று வரைந்து வைத்தது என்னோ அறியோம். ... ... ... (அஉ)

குறையாக வெஞ்சொற்கள் கூறினேன் கூறி *
மறையாங் கெனவுரைத்த மாலை *—இறையேனும்
ஈயுங்கொ லென்றே யிருந்தே னெனைப்பகலும் *
மாயன்கண் சென்ற வரம். (௭௫)

| | |
|---|---|
| மறை | வேதங்களும் |
| ஆங்கு என உரைத்த மாலை | ப்ரத்யக்ஷித்துச் சொல்லமாட்டாமல் பரோக்ஷமாகவே சொன்ன எம்பெருமானை |
| | (அல்பஜ்ஞனான நான்) |
| குறை ஆக | குறையுண்டாம்படி |
| வெம் சொற்கள் | செவிசுடும்படியான சொற்களாலே |
| கூறினேன் | பேசினேன்; |
| கூறி | அப்படி பேசினது மல்லாமல், |
| மாயன் கண் சென்ற வரம் | அப்பெருமானிடத்தில் தங்கியிருக்கின்ற அநுக்ரஹமானது |
| இறையேனும் | ஸ்வல்பமான பலனை யாகிலும் |
| ஈயும் கொல் என்றே | (நமக்குக்) கொடுக்குமோ என்று (பலனையும் எதிர்பார்த்துக் கொண்டு) |
| எனைப்பகலும் | வெகுகாலமாக |
| இருந்தேன் | இருக்கின்றேன். |

* * *—கீழ் எழுபத்தினான்காம் பாசுரத்தில் "யானே இருந் தமிழ் நன்மாலை யிணையடிக்கே சொன்னேன், பெருந்தமிழன் நல் லேன் பெரிது" என்று பகவத்விஷயத்தில் தாம் கவிபாடப் பெற் றமைக்கு மகிழ்ந்து பேசினவர் (கீழ்ப்பாட்டிற்படியே) நாய்ச்சி மாரும் பெருமாளுமாகக் கூடியிருக்கும் சேர்த்தியழகைக் கண்ட வாறே, அந்தோ! இச்சேர்த்தி யழகுக்குப் பொருத்தமாகக் கவி பாடத் தெரியவில்லையே எனக்கு; செவிக்கினிய செஞ்சொற்களால் நிறையப் பாடுகையின்றியே கடுஞ்சொற்களால் ஏதோ அரைகுறை யாகப் பாடினேனே!; இப்படி பாடினது மல்லாமல் 'நம்முடைய பாடலுக்கு ஏதோ வெகுமதி கிடைக்கப்போகிறதென்று கைம்மாறு தன்னையுங் கருதிக்கிடந்தேனே! என்று அநுதபிக்கிறார்.

மறை ஆங்கென வுரைத்தமாலை= ப்ரத்யக்ஷ நிர்த்தேசமென் றும் பரோக்ஷ நிர்த்தேசமென்றும் இருவகையான வ்யவஹாரங்க ளுண்டு; 'அவன் அங்கேயிருக்கிறான்; அது அப்படிப்பட்டது' என்றாற்போன்ற வ்யவஹாரங்கள் பரோக்ஷ நிர்த்தேசமெனப்

படும் 'இவன் இதோ இருக்கிறான்; இது இப்படிப்பட்டது' என்றாற்போன்ற வ்யவஹாரங்கள் ப்ரத்யக்ஷ நிர்த்தேசமெனப்படும். 1. "யதோ வாசோ நிவர்த்தந்தே। அப்ராப்ய மநஸா ஸஹ" என்று—எம்பெருமானுடைய தன்மையைச் சிறிதுங் கண்டறிய மாட்டாமல் வேதங்களும் மீள்கின்றன என்கையாலே வேதபுருஷனும் ப்ரத்யக்ஷிக்க மாட்டாமல் பரோக்ஷித்தே பேசுகின்றானென்பதை 'மறை ஆங்கெனவுரைத்த' என்றதனாற் காட்டினபடி.

'அவன்படிகளை உள்ளபடி தரைகண்டு பேசவொருப்பட்ட வேதங்களானவை அது வென்று சொல்லுமித்தனை போக்கி இதமித்தமென்று பரிச்சேதித்துச் சொல்லமாட்டாத பெருமையையுடைய ஸர்வேச்வரனை" என்பது முன்னோருரை வாக்கியம்.

மாயன்கண்சென்ற வரம் இறையேனும் ஈயுங்கொலென்றே இருந்தேன்—எம்பெருமானுடைய அநுக்ரஹமானது நாம் பாடின பாட்டுக்குப் பரிசாக ஏதாவதொரு பலனைத் தந்திடுமென்றோவென்று ப்ரயோஜநாபேக்ஷியாயு மிருந்தேனே! என்றவாறு.

ஆக இப்பாட்டில், திருமாலின் வைலக்ஷண்யத்திற்குத் தகுந்தவாறு கவிபாடப் பெறாமைக்கு அநுதாபமும், பச்சையை நச்சிப் பாடினதற்கு அநுதாபமும் ஆக இரண்டு அநுதாபங்கள் முறையே முன்னடிகளிலும் பின்னடிகளிலும் விளங்கும். .... (அங)

வரங்கருதித் தன்னை வணங்காத வன்மை *
உரங்கருதி மூர்க்கத் தவனை *—நரங்கலந்த
சிங்கமாய்க் கீண்ட திருவ னடியிணையே *
அங்கண்மா ஞாலத் தமுது. (அச)

| | | | |
|---|---|---|---|
| வரம் கருதி | (தேவர்களிடத்துப் பெற்ற) வரத்தை மதித்து | மூர்க்கத் தவனை | மூர்க்கத்தனம் கொண்டிருந்தவனுமான இரணியனை |
| தன்னை வணங்காத | (ஸர்வேச்வரனை) தன்னை வணங்காதிருந்தவனும் | நரம் கலந்த சிங்கம் ஆய் கீண்ட | நரசிங்கவுருக் கொண்டு பிளந்தொழித்த |
| வன்மை உரம் கருதி | (தன்னுடைய) மனவலிமையையும் தேஹவலிமையையும் நினைத்து | திருவன் | அழகனுடைய |
| | | அடி இணையே | உபயபாதமே |

1. தைத்திரீய உபநிஷத்து—ஆநந்தவல்லீ.

| | | | |
|---|---|---|---|
| அம் கண் மா ஞாலத்து | அழகிய இடமுடைத்தான இம்மாநிலத்தில் | அமுது | (போக்யமான) அம்ருதமாகும். |

* * *—'ஆழ்வீர்!, "குறையாக வெஞ்சொற்கள் கூறினேன்" என்று அநுதாபமாகச் சொல்லிக்கொண்டே மேன்மேலுங் கவி பாடாநின்றீரே; உமது சொற்கள் வெஞ்சொற்களாயின் கவிபாடுதலை நிறுத்திக்கொள்ளலாமே' என்று சிலர் சொல்லக்கூடுமென்றெண்ணி 'ஒரு போக்கியமான வஸ்துவைக்கண்டால் நாமும் இதில் சிறிது வாய்வைக்க வேணுமென்று தோன்றுவதுபோல, எம்பெருமான் பரமபோக்ய னென்றறிந்தவாறே அதில் வாய்வைக்காதிருக்க முடியவில்லை' என்று விடையளிக்க விரும்பி, இரணியனை நரசிங்கமாகிக்கிழித்த அழகியானுடைய அடியிணை இவ்வுலகத்து அமுதம் போன்றுளது என்று பகவத் விஷய போக்யதையைப் பேசுகிறாரிதில்.

நரங்கலந்த சிங்கத்தினால் கிழித்தெறியப்பட்ட இரணியன் எப்படிப்பட்டவ னென்றால், அவன் பரமமூர்க்கனா யிருந்தவ னென்பன முன்னடிகள். வரபலத்தினாலும் புஜபலத்தினாலும் மனக்கொடுமையினாலும் வணங்காமுடி மன்னனாயிருந்த மூர்க்கனாம் இரணியன். .... ... ... (அச)

அமுதென்றும் தேனென்று மாழியா னென்றும் *
அமுதன்று கொண்டுகந்தா னென்றும் *—அமுதன்ன
சொன்மாலை யேத்தித் தொழுதேன், சொலப்பட்ட *
நன்மாலை யேத்தி நவின்று. (அரு)

| | | | |
|---|---|---|---|
| அமுது என்றும் | அமிருதம் போன்றவனென்றும் | சொலப்பட்ட | சொல்லப்பட்டிருக்கின்ற |
| தேன் என்றும் | தேன் போன்றவனென்றும் | நல் மாலை | விலக்ஷணனான எம்பெருமானை |
| ஆழியான் என்றும் | திருவாழியை யுடையவனென்றும் | அமுது அன்ன சொல் மாலை | அம்ருதம் போன்ற இப்பாசுரங்களினால் |
| அன்று அமுது கொண்டு உகந்தான் என்றும் | முற்காலத்தில் (கடல் கடைந்து) அமுதமெடுத்தளித்து மகிழ்ந்தவனென்றும் | எத்தி எத்தி நவின்று தொழுதேன் | பலகாலும் துதித்துச் சொல்லி வணங்கினேன். |

* * *—கீழ் எண்பத்துமூன்றும் பாட்டில் "குறையாக வெஞ்சொற்கள் கூறினேன்" என்று—தாம் புன்மையான சொற்களைத் தொடுத்துக் கவிபாடினதற்கு அநுதபித்தார்; 'இப்படி அநுதாபப்படுகிற நீர் வாய்மூடிக்கிடவாமல் மேன்மேலும் கவிபாடிக் கொண்டே யிருப்பானேன்?' என்று கேட்டவர்கட்கு உத்தரமாக 'பகவத்விஷயம் பரமபோக்யமாயிருப்பதனாலே அதில் வாய் வைத்தே தீரவேண்டியிருக்கின்றது' என்பவர்போல பகவத்விஷயத்தின் பரமபோக்யதையைக் கீழ்ப்பாட்டில் அருளிச்செய்தார்: அப்படி பரமபோக்யமான விஷயத்தைப்பற்றின பாடலாகையாலே என்னுடைய வெஞ்சொற்களும் அமுதன்ன சொல்மாலையாய் விட்டன என்கிறாரிப்பாட்டில்.

அமுதென்றும் தேனென்றும் ஆழியானென்றும் அன்று அமுதுகொண்டுகந்தானென்றும் சொலப்பட்ட நன்மாலை அமுதன்ன சொன்மாலை (கொண்டு) ஏத்தியேத்தி நவின்று தொழுதேன்—என்று அந்வயிப்பது. சக்ரபாணி என்பதும் கடல்கடைந்தமுதங்கொண்டவனென்பதும் எம்பெருமானுக்கு எப்படி திருநாமங்களோ அப்படியே 'அமுது' என்பதும் 'தேன்' என்பதும் அவனுக்குத் திருநாமங்களாமென்க. "ரஸோ வை ஸ:" என்றான் வேதபுருஷன். "தேனைநன்பாலைக் கன்னலையமுதை" "எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே திருமாலிருஞ்சோலைக் கோனேயாகி நின்றொழிந்தான்" என்பர் ஆழ்வார்கள். இப்படி அமுதுந்தேனுமான எம்பெருமானைப் பாடுகின்ற பாடல்களும் அமுதமயமாகக் குறையில்லையென்பார் 'அமுதன்ன சொன்மாலை' என்றார்.

"அமுது அன்று கொண்டு உகந்தான்"—தன்னை வந்து அடிபணிந்தவர்கட்குக் காரியம் நிறைவேறினால் அவர்கள் மகிழ்வதிலுங்காட்டில் அதிகமாக மகிழ்வன் எம்பெருமான்; 'நம் ஆச்ரிதருடைய குறையைத்தீர்க்கப்பெற்றோமே!' என்று மகிழ்வனும். அதுதோன்ற 'உகந்தான்' எனப்பட்டது. .... (அரு)

நவின்றுரைத்த நாவலர்கள் நாண்மலர்கொண்டு * ஆங்கே
பயின்றதனால் பெற்றபய னென்கொல் *—பயின்றார்தம்
மெய்த்தவத்தால் காண்பரிய மேகமணிவண்ணனை * யான்
எத்தவத்தால் காண்பன்கொ லின்று. (அசு)

| | |
|---|---|
| நவின்று உரைத்த | (அவனது திருநாமங்களைப்) பலகாலுஞ் சொல்லுகின்ற |
| நாவலர்கள் | கவிகள் |
| நாள் மலர் கொண்டு | அப்போதலர்ந்த புஷ்பங்களைக் கொண்டு |
| ஆங்கே பயின்று | அந்த ஸர்வேச்வரனிடத்தில் நெருங்கி யாச்ரயித்து |
| அதனால் பெற்ற பயன் என்கொல் | அதனால் (அவர்கள்) பெற்ற பிரயோஜநம் என்னோ? |

[எம்பெருமான் தானே நிர்ஹேதுகமாக அநுக்ரஹித்தாலன்றி, இவர்களுடைய ஸ்வப்ரயத்நத்தால் என்ன பேறு பெறமுடியும் என்கை.]

| | |
|---|---|
| பயின்றார் தம் | நெருங்கி ஸாதநாநுஷ்டாநம் பண்ணுமவர்களுடைய |
| மெய் தவத்தால் | சரீரம் நொந்து செய்கிற தபஸ்ஸினால் |
| காண்பு அரிய | காணமுடியாதவனும் |
| மேகம் மணி வண்ணனை | மேகத்தையும் நீலமணியையும் போன்றநிறத்தையுடையனுமான எம்பெருமானை |
| யான் | அடியேன் |
| இன்று | இப்போது |
| எத் தவத்தால் கொல் காண்பன் | எந்தத் தபஸ்ஸினால் காணப்பெற்றேன்? [அவனே காட்டிக்கொடுக்கக் கண்டேனேயொழிய, ஒரு தவஞ்செய்து கண்டவனல்லேனென்கை.] |

* * *—எம்பெருமானைக் காணவேணுமென்று சிலர் ஸாதநாநுஷ்டாநம் பண்ணுவதுண்டு; எம்பெருமான் தானே சிலர்க்குக் காட்சி தந்தருளவேணுமென்று பாரிப்பதுண்டு: இவற்றுள், பரகதஸ்வீகாரமெனப்படுகிற எம்பெருமான் தானே பற்றும் பற்று பலிக்குமேயன்றி, சேதநர் பண்ணுகிற ஸாதநாநுஷ்டாநம் பலிக்கமாட்டாது என்கிறார் இதில். எம்பெருமான் தானே தனது நிர்ஹேதுககிருபையினாலே தன்படிகளையெல்லாம் எனக்குக்காட்டியருள நான் காணப்பெற்றேன்; வேறு எந்த ஸாதநாநுஷ்டாநம் பண்ணியும் நான் காணப்பெற்றேனல்லேன்; ஆகையாலே, ஸாதநாநுஷ்டாநம்பண்ணிக் காண்கிறவர்கள் என்னோடு ஒப்பர்களோ? என்கை.

நாம் ஒரு உபாயத்தை அநுஷ்டித்தே எம்பெருமானைப் பெற வேணுமென்கிற எண்ணத்துடன் திருநாமங்களைப் பலகால் ஸங்கீர்த்தனம் பண்ணியும் புஷ்பம் முதலியவற்றைப் பலகால் கொண்டு ஆராதித்தும் ஆகவிப்படி செய்யும் உபாயாநுஷ்டாநங்கள் பயனற்றவை என்பன—முன்னடிகள்.

அப்படி உபாயாநுஷ்டாநம் பண்ணினவர்களுக்கும் காண்பதற்கு அரியனான எம்பெருமானைத் தாம் கண்டபடியையும், 'அப்படி கண்டது ஒரு தவத்தினாலன்று, அவனது நிர்ஹேதுக கிருபையினாலே' என்பதையும் தெரிவிப்பன—பின்னடிகள்.

தவம்—உடம்பினால் வருத்தப்பட்டுச் செய்யும் காரியம். யான் எத்தவத்தால் காண்பன்கோல் இன்று—நான் ஒரு ஸாதநமும் அநுஷ்டியாமல் இன்று காணப்பெற்றேன் என்றவாறு. (௬௬)

இன்றா வறிகின்றே னல்லேன் * இருநிலத்தைச்
சென்றாங் களந்த திருவடியை *—அன்று
கருக்கோட்டி யுள்கிடந்து கைதொழுதேன் கண்டேன் *
திருக்கோட்டி யெந்தை திறம். (௬௭)

அன்று கரு கோட்டியுள் கிடந்து — முன்பு கர்ப்ப ஸ்தானத்துக்குள்ளே கிடந்து
திருக் கோட்டி எந்தை திறம் — திருக்கோட்டியூர்ப் பெருமானுடைய தன்மைகளை
கண்டேன் — கண்டு அநுபவிக்கப் பெற்றேன்;
கை தொழு தேன் — கைதொழவும் பெற்றேன்;
(ஆனபின்பு)
இரு நிலத்தை — விசாலமான இந்நிலத்தை
ஆங்கு சென்று அளந்த திரு அடியை — அங்கங்கே தானே வியாபித்து முழுதும் அளந்து கொண்ட திருவடியை
இன்று ஆ அறிகின் றேன் அல் லேன் — இன்றைக்குத்தான் அறிந்து கொண்டேனென்பதில்லை. (கர்ப்பவாஸமே தொடங்கி அறிவேன்.)

* * *—இப்பாட்டும் கீழ்ப்பாட்டுக்கு சேஷபூதமானதேயாம். எம்பெருமானது திருவருளால் தமக்குண்டான வைலக்ஷண்யத்தைப் பேசுகிறார். நான் கர்ப்பவாஸம் செய்யும்போதேபிடித்து

எம்பெருமானால் நிர்ஹேதுகமாகக் கடாக்ஷிக்கப்பெற்றுத் தன்னுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளையெல்லாம் அவன் தானே காட்டக்கண்டு "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதநः—ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ் ஸவை மோக்ஷார்த்த சிந்தகः."=[கர்ப்பத்திலேயே எம்பெருமான் எவனைக் கடாக்ஷித்தருள்வனோ அவனே ஸாத்விகன்; அவனே முமுக்ஷுவாவான்] என்கிறபடியே சுத்த ஸாத்விகனாய் அப்பெருமானுடைய திருக்கல்யாண குணம் முதலியவற்றை ஸ்வயம் அநுபவிப்பதும் பிறர்க்கு எடுத்து உபதேசிப்பதுமாக இவற்றையே காலக்ஷேபமாகக் கொண்டிருந்தவன்; எல்லாரும் பகவானை மறந்திருக்கும்படியான கர்ப்பவாஸ காலத்திலுங்கூட அடியேன் அவனை மறவாது வாழ்த்திக்கொண்டிருந்தேனாகையால், நான் எம்பெருமானை நெடுநாளாகவே அறிந்தவனேயன்றி இன்று புதிதாக அறிந்தவனல்லேன்.

இருநிலத்தைச் சென்று ஆங்களந்த திருவடியை என்றது இங்கு விசேஷாபிப்ராயத்தோடு கூடியது; "அவன் அளக்கி... விடத்திலே பூமி சென்றதோ? பூமி கிடந்தவிடமெல்லாம் தானுஞ் சென்று அளந்தானித்தனையன்றோ" என்பது பெரியவாச்சியான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி. உலகமுள்ள விடமெ...பண்டி, தானே சென்று அடிப்படுத்திக் கொண்டதுபோல அவன் ...ரிதில். மேல்விழுந்து விஷயீகரிக்கப் பெற்றேனடியேன் என்றவா... ...ய பாக

இதில் மூன்றாமடியில் ஒரு சங்கை பிறக்கும்; அதா...ஸனைக் குருக்கத்திப் பந்தரிலே ஒரு குருக்கத்திமலரிலே திருவவத...ால்லு ஞல் அயோநிஜராகிய இவ்வாழ்வார்க்கு கர்ப்பவாஸமென்ப... கிடையாதே; அப்படியிருக்க "கருக்கோட்டியுள் கிடந்து" என்று இவர் தாம் எங்ஙனே அருளிச்செய்கிறாரென்று.

இதற்கு உத்தரமாவது—'கருக்கோட்டியுள் கிடந்து' என்...விதனால் * தீண்டாவழும்பும் செந்நீரும் சீயும் நரம்பும் செறிதசையும் வேண்டாநாற்றம் மிக்கிருக்கிற கர்ப்பத்தும்பையில்நின்றும் ஆழ்வார் பிறந்தாரென்று கொள்ளவேண்டிய அவசியம் யாதுமில்லை; எவ்விடத்தில்நின்று அவதரித்தாரோ அவ்விடமே கர்ப்பஸ்தாநமாகும். 'நான் இவ்விருள் தருமாஞாலத்தில் வந்து தோன்று

வதற்கு முன்னமே எம்பெருமானுடைய கடாக்ஷம் பெற்றவன்' என்று சொல்லுவதே இங்கு விவக்ஷிதம். "அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" என்றாற்போலுமாம்.

கோட்டி—மொஷீ. ... ... (அஎ)

திறம்பிற் றினியறிந்தேன் தென்னரங்கத் தெந்தை *
திறம்பா வழிசென்றார்க் கல்லால் *—திறம்பாச்
செடிநரகை நீக்கித்தாம் செல்வதன்முன் * வானோர்
கடிநகர வாசற் கதவு. (அஅ)

| | |
|---|---|
| தென் அரங்கத்து எந்தை | தென்னரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கு மெம்பெருமானுடைய |
| ..ா வழி | பிசகாத மார்க்கத்திலே [அவனே உபாயோபேயம் என்னும் நெறியிலே |
| ..ர்க்கு ..ல்லால் | நிற்பவர்களுக்குத் தவிர (மற்றையோர்க்கு), |
| அன்று கோட்டு கி.. | தாமாகவே |
| திருக் கோ.. எந்தை சடி நீக்கி | அறுக்கமுடியாத புதர்போன்ற ஸம்ஸார பந்தங்களை அறுத்துக் கொண்டு |
| செல்வதன் முன் | போவதற்குள்ளே, |
| வானோர் | நித்யஸூரிகளுடையதும் |
| கடி | அரணையுடைத்தானதுமான |
| நகரம் | வைகுந்தமாநகரத்தினுடைய |
| வாசல் கதவு | வாசற் கதவானது |
| திறம்பிற்று | மூடிக்கொண்டதாகும்; |
| இனி அறிந்தேன் | (இதை) இப்போது அறிந்து கொண்டேன். |

* * *—'எம்பெருமானே வேறொன்றை எதிர்பாராத உபாயபூதன்' என்று நன்குணர்ந்து அவ்வுணர்ச்சியின்படியே நடந்துகொள்ளுமவர்களே ஸம்ஸாரபந்தத்தை அறுத்துக்கொண்டு வைகுந்த நீள்வாசலினுள்ளே புகப்பெறுவர்; மற்றையோர்களுக்கு வைகுந்த வாசற்கதவு திறவாதே மூடிக்கொள்ளு மென்கிறார்.

திறம்பிற்று—எதிர்காலப்பொருளில் இறந்தகாலமாகச் சொன்னது காலவழுவமைதி. ... ... .... (அஅ)

கதவிக் கதஞ்சிறந்த கஞ்சனைமுன் காய்ந்து
அதவிப்போர் யானை யொசித்து *—பதவியாய்ப்
பாணியால் நீரேற்றுப் பண்டொருகால் மாவலியை
மாணியாய்க் கொண்டிலையே மண். (௫௬)

| | |
|---|---|
| முன் | முற்காலத்தில் |
| கதம் சிறந்த | கோபம் மிகுந்த |
| கஞ்சனை | கம்ஸனை |
| கதவி காய்ந்து | கோபித்து முடித்து |
| போர் யானை | போர் செய்வதாக எதிர்த்துவந்த குவலயாபீட மென்னும் யானையை |
| ஒசித்து | கொம்பு முறித்து |
| அதவி | கொன்று, |
| பண்டு ஒருகால் | முன்னொரு காலத்தில் |
| பதவியாய் | நீர்மையை யுடைய னாய்க்கொண்டு |
| மாணி ஆய் | பிரமசாரியாகி |
| மாவலியை | மஹாபலியி னிடத்திலே |
| பாணியால் | கையினாலே |
| நீர் ஏற்று | தானம் வாங்கி |
| மண் கொண்டிலையே | பூமியைப் பெற்றது யல்லையோ? |

* * *—எம்பெருமானே! நீ ஆச்ரிதர்களுக்குக் காரியஞ் செய்வதென்று மனம்வைத்துவிட்டால் அருமையான காரியங்களையும் எளிதாகச்செய்து முடிப்பவனன்றோ என்னவேண்டி, அடியவர்க்காகச்செய்த சில காரியங்களை எடுத்துரைக்கின்றாரிதில்.

1. "சாதுசனத்தை நலியுங்கஞ்சன்" என்கிறபடியே பாகவதர்களுக்கெல்லாம் கொடுமையியற்று மவனாயிருந்த கம்ஸனைச் சீறிமுடித்தாய்; பாகவதர்களுக்கு உயிரான உன்னைக் கொல்லுமாறு அக்கஞ்சனால் ஏவிநிறுத்தப்பட்டிருந்த மதயானையை முடித்தாய்; இந்திரனுக்காக மாவலிபக்கல் மூவடிமண் நீரேற்றுப்பெற்று மூவுலகங்களையும் அடிப்படுத்தி வாழ்வித்தாய். ஆக இப்படிப்பட்ட காரியங்கள் செய்தவனல்லையோ நீ.

அதவுதல்—ஹதம்பண்ணுதல். "அதவிப் போர்யானையொசித்து" என்பதே வியாக்கியானத்துக்கிணங்கிய ஆன்றோர் பாடம்; "உதவிப் போர்யானை" என்றும் சிலர் ஓதுவர்களாம்; இப்பாடம் யானையின்பக்துக்குச் சேர்ந்திருக்கு மென்னலாமாயினும் முன்

1. திருவாய்மொழி 3—5—5.

னோர் விரும்பியபாடமன்று. கம்ஸனுக்கு உதவியாயிருந்தயானையை ஓசித்து என்று பொருள்கூறலாம்.

பதவியாய்—'வடிவீ' என்னும் வடசொல்லாகக்கொண்டு 'வழியாகவே' என்று பொருள் கொள்வதும் தகும். பாணி—வடசொல். ... .... ... ... (அகூ)

மண்ணுலக மாளேனே வானவர்க்கும் வானவனாய் *
விண்ணுலகம் தன்னகத்து மேவேனே *—நண்ணித்
திருமாலைச் செங்க ணெடியானை * எங்கள்
பெருமானைக் கைதொழுத பின். (கூ0)

| | |
|---|---|
| திருமாலை | பிராட்டியினிடத்தில் வியாமோஹமுடையவனும் |
| செம் கண் | செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவனும் |
| நெடியானை | ஸர்வேச்வரனுமான |
| எங்கள் பெருமானை | எம்பெருமானை |
| நண்ணி | கிட்டி |
| கை தொழுத பின் | அஞ்ஜலி பண்ணி ஆச்ரயித்த பின்பு |
| மண் உலகம் ஆளேனே | இவ்விபூதியை நானிட்டவழக்காக நிர்வஹிக்க மாட்டேனோ? |
| வானவர்க்கும் வானவன் ஆய் | தேவாதிதேவனாய்க் கொண்டு |
| விண் உலகம் தன் அகத்து | நித்யவிபூதியிலே |
| மேவேனே | நித்யாநந்த மநுபவிக்க மாட்டேனோ? |

* * *—'ஆழ்வீர்! நாம் முன்புசெய்த காரியங்களை எடுத்துரைக்கிறீர்; அஃது இருக்கட்டும்; இப்போது நாம் உமக்குச் செய்யவேண்டிய காரியம் ஏதேனுமுண்டாகில் சொல்லிக்காணீர்' என்று ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் அருளிச்செய்ய, பிரானே! உன்னை ஆச்ரயித்தபோதே எல்லாப் புருஷார்த்தங்களும் பெற்றேனானேன்காண்; மண்ணுலகத்தோடு விண்ணுலகத்தோடு வாசியற உபயவிபூதியும் நானிட்டவழக்காம்படி ஆள்வதற்கு உரியேனானபின்பு இனி எனக்குச் செய்யவேண்டுவதொன்றுண்டோ? என்றாராயிற்று. ... ... (கூ0)

பின்னா லருநரகம் சேராமல் பேதுறுவீர் *
முன்னால் வணங்க முயல்மினோ *—பன்னூல்
அளந்தானைக் கார்க்கடல்சூழ் ஞாலத்தை * எல்லாம்
அளந்தா னவன் சேவடி. (கூக)

| | | | |
|---|---|---|---|
| பின்னால் | சரீரம்விழுந்தபின்பு | கார் கடல் சூழ் ஞாலத்தை எல்லாம் அளந்தானவன் | கரிய கடல் சூழப் பட்ட பூமியை யெல்லாம் அளந்து கொண்டவனு மான எம் பெருமானுடைய |
| அரு நரகம் | கடினமான நரகத்தை | சே-அடி | செவ்விய திருவடிகளை |
| சேராமல் | அடையாமலிருக்கும் படிக்கு | முன்னால் | இப்போதே |
| பேதுறுவீர் | மனங்கலங்கி யிருக்கும் மனிசர்களே!, | வணங்க | வணங்குமாறு |
| பல் நூல் | பலவகைப்பட்ட சாஸ்த்ரங்களினால் | முயல்மின் | முயற்சிசெய்யுங்கள். |
| அளந்தானை | நிச்சயிக்கப்படு பவனும் | | |

* * *—இப்பாட்டுத்தொடங்கி மேல் நான்கு பாட்டுக்களாலே பரோபதேசம் பண்ணுகிறார். உலகத்தவர்களே! நீங்கள் செய்யும் காரியங்களைப்பார்த்தால் நரகமார்க்கத்திற்கே செல்லப்பார்க்கிறீர்களென்று நினைக்கும்படியா யிராநின்றது. 'நரகவேதனை நமக்குக் கிடைத்தால் என்செய்வோம்' என்று கலங்கி நிற்கிறீர்களாகில் அதைத் தப்புவதற்கு இப்போதே உபாயம் சொல்லுகிறேன் கேளுங்கள்; உலகளந்த பெருமானுடைய சேவடியை வணங்குவதற்கு முயற்சி செய்தீர்களாகில் பின்னால் அருநரகம் சேராமல் பிழைக்கலாம் என்கிறார்.

'சேவடியை வணங்குமினோ' என்னாமல்-'வணங்கமுயல்மினோ' என்றமையால் — எம்பெருமான் திருவடிகளை வணங்கவேணுமென்னும் முயற்சியுண்டான மாத்திரமே நரகம் தவிரும் என்பது விளங்கும். ... ... ... .... (கூக)

அடியால்முன் கஞ்சனைச் சேற்று - * அமரரேத்தும்
படியான் கொடிமேல் புள்கொண்டான் *—நெடியான்றன்
நாமமே யேத்துமின்க ளேத்தினால் தாம்வேண்டும் *
காமமே காட்டும் கடிது. (கூஉ)

| | | | |
|---|---|---|---|
| முன் | முன்னே | நாமமே | திருநாமங்களையே கொண்டு |
| அடியால் | திருவடியினால் | ஏத்துமின்கள் | ஸ்தோத்ரம் பண்ணுங்கள் ; |
| கஞ்சனை | கம்ஸனை | ஏத்தினால் | அப்படி ஸ்தோத்ரம் பண்ணினால் |
| செற்று | உதைத்துக் கொன்றதனாலே | தாம் வேண்டும் காமம் | தாங்கள் அபேக்ஷிக்கும் புருஷார்த்தத்தை |
| அமரர் ஏத்தும் படியான் | தேவர்கள் துதிக்கும் படியாக வுள்ளவனும் | கடிது | விரைவாக |
| கொடி மேல் புள் கொண்டான் | த்வஜத்திலே கருடபக்ஷியையுடையவனுமான | காட்டும் | (அத்திருநாமம்) பெறுவிக்கும். |
| நெடியான் தன் | ஸர்வேச்வரனுடைய | | |

* * *—எம்பெருமானது திருவடிகளை வணங்க முயன்றால் நரகயாதனை தவிருமென்றார் கீழ்ப்பாட்டில். அவனுடைய திருநாமங்களைக் கீர்த்தனம்பண்ணினால் நீங்கள் விரும்புகின்ற புருஷார்த்தங்களெல்லாம் கைபுகுமென்கிறாரிதில்.

உயர்ந்த சிங்காசனத்தின்மீது வீற்றிருந்த கம்ஸனைத் தலைமயிர் பற்றியிழுத்துக் கிரீடம் சிதறக் கீழேதள்ளித் திருவடியால் உதைத்து முடித்ததனால் இந்த வீரச்செயலிலே ஈடுபட்டுத் தேவர்கள் துதிக்கின்ற கருடத்வஜனுடைய திருநாமங்களையே சொல்லுங்கள் ; சொன்னால், சொன்னவாய் மூடுவதற்குள்ளே தாம்தாம் விரும்பும் புருஷார்த்தங்களை அத்திருநாமமே பெறுவிக்குமென்றாராயிற்று. ... ... .... (கஉ)

கடிது கொடுநரகம் பிற்காலும் செய்கை *
கொடிதென் றதுகூடா முன்னம் *—வடிசங்கம்
கொண்டானைக் கூந்தல்வாய் கீண்டானை * கொங்கைநஞ்
சுண்டானை யேத்துமினோ வுற்று. (கங)

| | | | |
|---|---|---|---|
| கொடு நரகம் | க்ரூரமான நரகமானது | பிற்காலும் | அதற்குமேலும் |
| கடிது | கண்கொண்டு காண வொண்ணாதபடி கோரமாயிருக்கும் ; | செய்கை | (அங்கு யமபடர்கள் செய்யும் யாதனைச்) செயல்கள் |

| | | | |
|---|---|---|---|
| கொடிது | பொறுக்க முடியாதனவா யிருக்கும், | கூந்தல் வாய் கீண்டானை | கேசியின்வாயைக் கீண்டொழித் தவனும் |
| என்று | என்று தெரிந்து கொண்டு | கொங்கை நஞ்சு உண்டானை | (பேய்ச்சியின்) முலையில் தடவியிருந்த விஷத்தை உண்டவனுமான எம்பெருமானை |
| அது கூடா முன்னம் | அந்த நரகவேதனை நேராதபடி | | |
| வடி சங்கம் கொண்டானை | கூர்மையான த்வநியையுடைய சங்கைத் திருக் கையிலே உடையவனும் | உற்று | பொருந்தி |
| | | ஏத்துமின் | ஸ்தோத்திரம் பண்ணுங்கள். |

* * *—உலகத்தவர்களே!, 'நரகம்' என்கிற சொல் காதில் பட்டமாத்திரத்திலே ஒவ்வொருவருடைய உடலும் நடுங்கும்; அதற்குமேல், அந்த நரகத்தில் யமபடர்கள் செய்கிற நலிவுகளைக் கேட்டாலோ இடிவிழுந்தாற்போலாகும். இப்படி கோரமான நரக வேதனைகட்கு இடமுண்டாவதற்கு முன்னே, விரோதி நிரஸந சீலனான எம்பெருமானுடைய தோத்திரத்திலே மூளுங்கோள் என்கிறார்.

கூந்தல்வாய் கீண்டானை=தலைமயிர்க்கு வாசகமான கூந்தலென்னுஞ்சொல் 'லக்ஷித லக்ஷணை' என்னும் வழியால் கேசியென்பவனைக் குறிக்கும். எங்ஙனேயென்னில்; கூந்தல் என்பதற்கு வடமொழிநாமம் கேசமாகும்; அச்சொல் கேசியை நினைப்பூட்டும். வில்லிபுத்தூரார் பாரதத்தில் புத்திஸேநனைச் சொல்லவேண்டுமிடத்து, "திங்கள் சேர் பெயரினான்" என்றதுகாண்க. (திங்கள்—சந்திரன்; தமிழில் மதி என்னுஞ்சொல்லும் சந்திரனைச் சொல்லும்; 'மதி' என்கிற அச்சொல் வடமொழியாய்க்கொண்டு புத்தியென்னும் பொருள் தரும். ஆகவே, புத்திஸேநன் என்றபெயர் திங்கள் சேர் பெயராயிற்று. இங்ஙனே தமிழ்ப் பிரயோகங்கள் பலவுள.) கம்ஸனுடைய ஏவுதலினால் குதிரை வடிவங்கொண்டு கண்ணபிரானைக் கொல்லவந்த கேசியென்னுமஸுரனை வாய்பிளந்து முடித்தவரலாறு ப்ரஸித்தம். .... ... .... (௧௬)

உற்று வணங்கித் தொழுமின் * உலகேழும்
முற்றும் விழுங்கும் முகில்வண்ணன் *—பற்றிப்
பொருந்தாதான் மார்விடந்து பூம்பாட கத்துள்
இருந்தானை * ஏத்துமென் நெஞ்சு. (௯௪)

| | |
|---|---|
| உலகு ஏழும் முற்றும் விழுங்கும் | உலகங்களை யெல்லாம் (பிரளயங்கொள்ளாதபடி) அமுது செய்தவனும் |
| முகில் வண்ணன் | மேகம்போன்ற வடிவையுடையவனும் |
| பொருந்தாதான் | (ப்ரஹ்லாதனுக்கு) சத்ருவான இரணியனுடைய |
| மார்பு | மார்வை |
| பற்றி | பிடித்து |
| இடந்து | கிழித்தவனும் |
| பூ பாடகத்துள் இருந்தானை | அழகிய திருப்பாடகமென்னுந் திருப்பதியில் வீற்றிருப்பவனுமான எம்பெருமானை |
| என் நெஞ்சு | என் மனமானது |
| ஏத்தும் | துதிக்கும்; (நீங்களும் இப்படியே) |
| உற்று வணங்கி தொழுமின் | பொருந்தி வணங்கி ஆச்ரயியுங்கோள். |

* * *—பண்டொருகால் உலகமெல்லாம் பிரளயப்பெருங்கடலிலே அழிந்து போவதாயிருக்கையில் அவற்றையெல்லாம் திருவயிற்றிலே யெடுத்துவைத்தடக்கிக் காத்தருளின சிரமம் தீரவும், ப்ரஹ்லாதாழ்வானைப் பாதுகாத்தருளவேண்டி இரணியன் மாரபிடந்த சிரமம் தீரவும் கச்சிநகரில் திருப்பாடகமென்னுந் திருப்பதியில் இனிதாக எழுந்தருளியிருக்கு மெம்பெருமானை என் நெஞ்சு ஏத்துகின்றது; நீங்களும் அவனையே வணங்கி வாழுங்கள் என்று உலகத்தவர்க்கு உபதேசித்தாராயிற்று.

பாடகம்=பெரியகாஞ்சீபுரத்திலுள்ள பாண்டவதூதர் ஸந்நிதி. 'பாடு அகம்' என்று பிரிக்க. பெருமைதோற்ற எழுந்தருளியிருக்கும் தலம் என்கை. கண்ணன் பாண்டவதூதனாய்த் துரியோதனனிடஞ் சென்றபொழுது துர்யோதநன் ரஹஸ்யமாகத் தனது ஸபாமண்டபத்தில் மிகப்பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் அனேகமல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளேயிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற்பிளப்புக்களால் மேலேமூடி அதன்மேற் சிறந்த ரத்நாஸ

மொன்றை அமைத்து அவ்வாஸனத்தில் கண்ணனை வீற்றிருக்கச் சொல்ல, அங்ஙனமே ஸ்ரீக்ருஷ்ணன் அதன்மேல் ஏறினமாத்திரத்திலே ழங்கிற் பிளப்புக்கள் முறிபட்டு ஆசனம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில், அப்பெருமான் மிகப்பெரிதாக விச்வரூபமெடுத்துப் பல கைகளையும் கால்களையுங்கொண்டு எதிர்க்கவே, அப்பிலவறையிலிருந்த மல்லர்கள் அழிந்தனர். அப்போது கொண்ட விச்வரூபத்திருக்கோலத்திற்கு ஸ்மாரகமாகப் பெரியதிருமேனியோடே ஸேவைஸாதிக்குமிடம் பாடகம். பாடு—பெருமை. ("அரவுநீள் கொடியோனவையுளாசனத்தை அஞ்சிடாதேயிட அதற்குப், பெரியமாமேனி அண்டமூடுருவப் பெருந்திசை யடங்கிட நிமிர்ந்தோன்" என்ற பெரிய திருமொழிப்பாசுரத்தில் அநுஸந்திக்கப்பட்ட திருமேனிவளர்த்தியோடே ஸேவைஸாதிக்குமாறு காண்க.) ... .... ... (கூச)

என்னெஞ்ச மேயானென் சென்னியான் * தானவனை
வன்னெஞ்சம் கீண்ட மணிவண்ணன் *—முன்னம்சே
யூழியா னூழி பெயர்த்தான் * உலகேத்தும்
ஆழியா னத்தியூ ரான். (கூரு)

| | |
|---|---|
| தானவனை | (இரணியனென்கிற) அசுரனுடைய |
| வல் நெஞ்சம் | வலிய மார்வை |
| கீண்ட | கிழித் தொழித்தவனும் |
| மணி வண்ணன் | நீலமணிபோன்ற நிறத்தை யுடையவனும் |
| முன்னம் சேய் ஊழியான் | நெடுங்காலமாக வுள்ளவனும் |
| ஊழி பெயர்க்கான் | காலம் முதலிய ஸகல வஸ்துக்களையு முண்டாக்கினவனும் |
| உலகு ஏத்தும் ஆழியான் | உலகத்தவரால் துதிக்கப்பட்டவனாய்க்கொண்டு திருப்பாற் கடலில் பள்ளி கொண்டிருப்பவனும் |
| அத்தியூரான் | ஹஸ்திகிரியில் எழுந்தருளியிருப்பவனுமான எம்பெருமான் |
| என் நெஞ்சம் மேயான் | என்னுடைய நெஞ்சிலே பொருந்தியிரா நின்றான்: |
| என் சென்னியான் | என்னுடைய தலையிலே உள்ளான். |

* * *—பெருமாள்கோயில் ஸ்ரீ ஹஸ்திசைல சிகரோஜ்வல பாரிஜாதமான பேரருளாளனை மங்களாசாஸநம்பண்ணும் பாசுரங்கள்—இப்பாட்டும் மேற்பாட்டும்.

'எங்குமுளன் கண்ணன்' என்று சொன்ன ப்ரஹ்லாதாழ்வானைப் பலபடிகளாலும் நலிந்த இரணியாசுரனுடைய முரட்டுடலைப்பிளந்தொழித்தவனும், இவ்விதமாக பக்தபரிபாலனம் செய்யப்பெற்றதனாலே திருமேனி புகர்பெற்றவனும், அநாதிகாலமாகவே பிறப்பிறப்பு மூப்புகள் ஒன்றுமின்றி யிருப்பவனும், ஸகல பதார்த்தங்களையும் இவ்வுலகில் தோன்றுவித்தவனும், உலகத்தவரால் துதிக்கப்பட்டவனும், திருப்பாற்கடலில் துயில் கொண்டிருப்பவனுமான எம்பெருமான் அத்தியூர் என்னப்படுகிற ஸ்ரீ ஹஸ்திகிரி க்ஷேத்ரத்தில் எழுந்தருளியிராநின்றான்; அவன் இன்று எனது நெஞ்சினுள்ளும் தலையின்மீதும் வந்து சேர்ந்து மகிழ்விக்கின்றான் காண்மின் என்கிறார்.

திருவாய்மொழியில் "இவையு மவையு முவையும்" என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் தம்முடைய ஒவ்வொரு அவயவத்திலும் எம்பெருமான் வந்து சேர்ந்ததாக அநுஸந்தித்ததுபோலவே இப்பாட்டிலும் அநுஸந்தேயம்; நெஞ்சு, தலை என்ற இரண்டிடங்களைமாத்திரம் சொன்னது மற்ற ஒக்கலை, கண், மார்பு, தோள் முதலிய அவயவங்கட்கும் உபலக்ஷணமென்க.

ஸ்ரீ ஹஸ்திகிரியின் கீழே நரஸிம்ஹ மூர்த்தியாக ஸேவை ஸாதிக்கும் பெருமானைத் தானவனை வன்னெஞ்சங்கீண்ட மணி வண்ணன் என்றதனால் மங்களாசாஸநம் செய்கிறாரென்னலாம்.

முன்னம் சே யூழியான்='சேய்' என்றது வெகுதூரம் என்றபடி. ஊழியாவது காலம். முன்னமேபிடித்து வெகுதூரமான காலத்திலே உள்ளான் எனவே, அநாதிஸித்தன் என்றதாம்.

ஊழி பெயர்த்தான்—இங்கும் ஊழியென்று காலத்தைச் சொல்லுகிறது. பரமபதமாகிய நித்யவிபூதியில் காலமென்பது கிடையாது; அது உள்ளது இவ்விபூதியில் மாத்திரமே. ஆகவே, இங்குக் காலத்தைச்சொன்னது மற்றும் இவ்விபூதியிலுள்ள வஸ்துக்களையெல்லாம் சொன்னபடி. பெயர்த்தல்—உண்டாக்குதல்.

"உலகேத்து மாழியான்" என்பதற்கு—உலகம் புகழும் திருவாழி யாழ்வானையுடையவன் என்றும் பொருள்கொள்ளலாம்.

அத்தியூரான்—'ஹஸ்தி' என்னும் வடசொல் அத்தியெனத் திரியும். ஹஸ்திக்ஷேத்ர மென்றபடி. "ஹஸ்திநா ஸேவிதோ யஸ்மாத் வரதோ பகவாந் ஹரி:। தஸ்மாத் ஹஸ்திகிரிர் நாம்நா க்யாதி மேஷ கிரேர் அபூத்॥" என்று ஹஸ்திகிரி மாஹாத்மியத்தில் முதலத்யாயத்திற் சொல்லப்பட்டுள்ளமை காண்க. பண்டு இந்த க்ஷேத்ரத்தில் திக்கஜங்கள் வந்து எம்பெருமானை ஆராதித்தமையால் அது பற்றி ஹஸ்திகிரி யென்று திருநாமமாயிற்றும். மற்றும் சில வகையாகவும் நிர்வஹிப்பதுண்டு. ... (கூ௫)

அத்தியூரான் புள்ளையூர்வான் * அணி மணியின்
துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான் *—முத்தீ
மறையாவான் மாகடல் நஞ்சுண்டான் றனக்கும் *
இறையாவா னெங்கள் பிரான். (கூ௬)

புள்ளை ஊர்வான் — பெரிய திருவடியை வாஹனமாகக் கொண்டு நடத்துமவனும்

அணி மணியின் துத்தி சேர் நாகத்தின் மேல் துயில்வான் — அழகிய மாணிக்கங்களோடு கூடினவனாய் படப்பொறிகளை யுடையவனான ஆதிசேஷன் மேல் பள்ளி கொள்பவனும்

முத்தீ ஆவான் — மூன்று அக்நிகளாலே ஆராதிக்கப் படுகிறவனும்

மறை ஆவான் — வேதங்களால் பிரதிபாதிக்கப் படுகிறவனும்

மா கடல் நஞ்சு உண்டான் தனக்கும் இறை ஆவான் — பெரியகடலில் நின்று உண்டான விஷத்தை உட்கொண்டவனை ருத்ரனுக்கும் ஸ்வாமியா யிருப்பவனுமான

எங்கள் பிரான் — எம்பெருமான்

அத்தியூரான் — ஸ்ரீஹஸ்திகிரியிலே எழுந்தருளி யிருக்கிறான்.

* * *—தென்னத்தியூரரான பேரருளாளப் பெருமாளை மங்களாசாஸநம் செய்தருளு மிப்பாசுரத்தில் 'புள்ளையூர்வான்' என்று ஆழ்வார் திருவாய்மலர்ந்தருளவேதான் இப்பெருமானுடைய கருடோத்ஸவம் இமவந்தந் தொடங்கி இருங்கடலளவும்

பிரஸித்தமாகப் பெருமேன்மை வாய்ந்ததாயிற்றென்று பெரியோர் பணிப்பர்.

நாகத்தின்மேல் துயில்வான்=திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொள்ளும் பெருமானே ஸ்ரீ ஹஸ்திகிரியிலும் ஸேவைஸாதித்தருள்வதாக அநுஸந்திக்கிறார். இந்த விசேஷணம் கூரத்தாழ்வான் திருவுள்ளத்திலே புகுந்திருந்து, வரதராஜஸ்தவத்தில் "நீலமேக நிபம்" என்னும் ச்லோகத்தில் 'அநந்தசயம் த்வாம்' என்றருளிச்செய்வதற்குக் காரணமாயிற்றென்க. "ஃபணி வதிஶய நீயாரூடிதஸ்ஸம்ப்ரூஹாத்தெ வாரூ ஸதத ஜ்ஞாநஸம ஸஙியெயாஃ" என்ற வேதாந்த தேசிக திவ்யஸூக்தியும் ஸ்மரிக்கத்தகுமிங்கு.

துத்தி—படங்களிலுள்ள பொறி: இலக்கணையால் படத்தையும் சொல்லுமென்ப. "முத்தீ மறையாவான்" "முத்தி மறையாவான்" என்பன பாடபேதங்கள். முந்தின பாடத்தில், முத்தீயாவான், மறையாவான் என்று அந்வயித்து, த்ரேதாக்நிகளில் ஹோமம் செய்யும் முகத்தாலே ஆராதிக்கப்படுபவனும் வேதங்களால் பிரதிபாதிக்கப்படுபவனுமான பெருமான் என்க. அன்றியே, த்ரேதாக்நிகளைச் சொல்லுகிற வேதங்களாலே பிரதிபாதிக்கப்படுமவன் என்றுமாம். இனி, "முத்திமறையாவான்" என்ற பாடத்தில், மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கின்ற வேதங்களாலே சொல்லப்படுமவன் என்கை. ... .... ... (௬௬)

எங்கள் பெருமா னிமையோர் தலைமகன்நீ *
செங்க ணெடுமால் திருமார்பா *—பொங்கு
படமூக்கி ளாயிரவாய்ப் பாம்பணைமேல் சேர்ந்தாய் *
குடமூக்கில் கோயிலாக் கொண்டு. (௬௭)

| | | | |
|---|---|---|---|
| செம் கண் நெடு மால் | சிவந்த திருக்கண்களை யுடைய ஸர்வேச்வரனே ! | இமையோர் தலை மகன் நீ | நித்யஸூரிகளுக்கு தலைவனான நீ |
| | | எங்கள் பெருமான் | எங்களுக்கு ரக்ஷகனாய்க் கொண்டு |
| திரு மார்பா | பிராட்டியைத் திருமார்பி லுடையவனே ! | குடமூக்கு இல் | கும்பகோண க்ஷேத்ரத்தை |

| | |
|---|---|
| கோயில் ஆ கொண்டு | கோயிலாகத் திருவுள்ளம்பற்றி |
| பொங்கு படம் மூக்கின் | விகஸித்தபடங்களையும் மூக்கையுமுடையவனும் |
| ஆயிரம் வாய் | ஆயிரம்வாயையுடையவனுமான |
| பாம்பு | ஆதிசேஷனாகிற |
| அணை மேல் | படுக்கையின்மீது |
| சேர்ந்தாய் | பள்ளி கொண்டருளினாய். |

* * *—எம்பெருமானே! என்போன்ற அடியார்களை விஷயீகரிப்பதற்காகவன்றோ திருக்குடந்தையிலே வந்து சாய்ந்தருளாநின்றாய் என்கிறார்.

'கும்பகோணம்' என்ற வடசொல்லுக்கு நேரான தமிழ்ச்சொல் குடமூக்கு என்பதாம். (கும்பம்—குடம்; கோணம்—மூக்கு.) இல்—க்ருஹம். ... ... ... (௬௭)

கொண்டு வளர்க்கக் குழவியாய்த் தான்வளர்ந்தது *
உண்ட துலகேழு முள்ளோடுங்க *—கொண்டு
குடமாடிக் கோவலனாய் மேவி * என்னெஞ்சம்
இடமாகக் கொண்ட விறை. (௬௮)

| | |
|---|---|
| கோவலன் ஆய் | இடையனாய்வந்து பிறந்து |
| குடம் கொண்டு ஆடி | குடங்களைக் கையிலே கொண்டு கூத்தாடி (அதனாலுண்டான ஆயாஸம் தீர) |
| என் நெஞ்சம் மேவி | என்னுடைய ஹ்ருதயத்திலே பொருந்தி |
| இடம் ஆக கொண்ட இறை | (எனது நெஞ்சையே) நித்யவாஸஸ்தானமாகக் கொண்ட ஸ்வாமி |
| கொண்டு வளர்க்க | சிலர் கையிலெடுத்துச் சீராட்டி வளர்க்க வேண்டும்படியான |
| குழவி ஆய் | சிறுகுழந்தையாய் |
| தான் வளர்ந்தது | தான் வளர்ந்த அப்படிப்பட்ட மிகச்சிறிய பருவத்திலே |
| உலகு ஏழும் | ஸப்தலோகங்களும் |
| உள் ஒடுங்க | தன்னுள்ளே ஒடுங்கும்படி |
| உண்டது! | உட்கொண்டது (என்ன ஆச்சரியம்!.) |

* * *—தம்மை விஷயீகரித்த எம்பெருமானுடைய சில திவ்ய சேஷ்டிதங்களை அநுபவிக்கிறார். இடையனாய் வந்து பிறந்தருளி அந்த ஜாதியின் மெய்ப்பாட்டுக்காகக் குடக்கூத்தாடி, அதனாலுண்டான சிரமந்தீர என்னெஞ்சிலேவந்து இளைப்பாறு மெம்பெருமான், முன்னை செய்தவொரு அற்புதச்செயலை என்னவென்று சொல்லுவேன்; அது யாதெனில், மிகச்சிறிய குழந்தையாக இருக்கும் பருவத்திலே ஏழுலகங்களும் தனது சிறிய திருவயிற்றினுள்ளே ஒடுங்கும்படி செய்த விசித்திரம். இவன் வளர்ந்ததோ கொண்டுவளர்க்கக் குழவியாய்; உண்டதோ உலகேழுமுள்ளொடுங்க; இது என்னமாயம்!.

ஸ்வாதீநமாக ஒருகாரியமும் செய்யமுடியாத மிகச்சிறிய குழந்தைப்பருவம் என்று காட்டுதற்காகக் கொண்டு வளர்க்கக் குழவியாய் என்றது.

குடமாடி=தலையிலே அடுக்குக்குடமிருக்க, இருதோள்களிலும் அங்ஙனே அடுக்குக்குடமிருக்க, இவை சிறிதும் சலியாதபடி இரண்டுகைகளாலும் குடங்களை மாறிமாறியெறிந்து ஆடுவதொரு கூத்து குடக்கூத்தெனப்படும்.

'கோபாலன்' என்பது கோவலனாயிற்று. ... (கூஅ)

இறை யெம்பெருமா னருளென்று * இமையோர்
முறைநின்று மோய்மலர்கள் தூவ *—அறைகழல
சேவடியான் செங்க ணெடியான் * குறளுருவாய்
மாவடிவின் மண்கோண்டான் மால். (கூகூ)

| | |
|---|---|
| இமையோர் | (பிரமன்முதலான) தேவர்கள் |
| எம் பெருமான் | 'எம்பெருமானே!, (எங்கள் விஷயத்தில்) |
| இறை | கொஞ்சம் |
| அருள் என்று | கிருபைபண்ண வேணும்' என்று சொல்லி |
| முறை நின்று | அடிமைக்கு ஏற்ப நின்று |
| மொய் மலர்கள் | அழகிய புஷ்பங்களை |
| தூவ | பணிமாறும்படியாக, |
| அறை கழல சே அடியான் | ஒலிக்கின்ற வீரக் கழலையுடைய திருவடிகளை யுடையவனும் |
| செம் கண் | செந்தாமரைக் கண்ணனும் |

| | |
|---|---|
| நெடியான் | எல்லாரிலும் மேம்பட்டவனுமான |
| மால் | திருமால் |
| குறள் உரு ஆய் | (மாவலிபக்கல்) வாமநரூபியாய் வந்து தோன்றி |
| மா வடிவின் | பெரியவடிவினாலே |
| மண் கொண்டான் | பூமியை அளந்து கொண்டான். |

* * *—எம்பெருமான் செய்தருளின அவதாரங்கள் பலபல கிடந்தாலும் த்ரிவிக்ரமாவதாரத்திலும் க்ருஷ்ணாவதாரத்திலுமே இவ்வாழ்வார் திருவுள்ளம் மிக ஈடுபட்டிருக்குமென்பது சாத்துப் பாசுரமாகிய இப்பாட்டிலும் மேற்பாட்டிலும் விளங்கும்.

உலகங்களை வியாபிக்கும்போது ஓங்கிவளர்ந்த திருவடியைக் கண்டு, அதற்குமுன் அஹங்காரிகளாயிருந்த தேவர்களெல்லாரும் 'ஸ்வாமிந்! எமக்குச் சிறிது அருள்புரியவேணும்' என்று இரந்து புஷ்பங்களை ஸமர்ப்பித்து வழிபாடுகள் செய்தமை முன்னடிகளின் கருத்து.

இப்படி தேவர்களெல்லாரும் ஆச்ரயிக்கும்படியாக எம்பெருமான் உலகளந்தான் என்று சொல்லிவிட்டதானது—அத்திருவடிகளை நமக்கும் ஆச்ரயணீயம் என்றபடி. ... ... (கூகூ)

மாலே நெடியோனே கண்ணனே * விண்ணவர்க்கு
மேலா வியன்துழாய்க் கண்ணியனே *—மேலால்
விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே * என்றன்
அளவன்றால் யானுடைய வன்பு. (க00)

| | |
|---|---|
| மாலே | (அடியாரிடத்தில்) வியாமோஹமுள்ளவனே! |
| நெடியோனே | ஸர்வஸ்மாத்பரனே! |
| கண்ணனே | ஸ்ரீக்ருஷ்ணனே! |
| விண்ணவர்க்கு மேலா | நித்யஸூரிகளுக்குத் தலைவனே! |
| வியன் துழாய் கண்ணியனே | அழகிய திருத்துழாய் மாலையை அணிந்துள்ளவனே! |
| மேலால் | முன்னொரு காலத்தில் |
| விளவின் காய் | விளங்காயை |
| கன்றினால் | ஒரு கன்றைக் கொண்டு |
| வீழ்த்தவனே | உதிர்த்துத்தள்ளினவனே!, |

| | | |
|---|---|---|
| யான் உடைய { (உன்னிடத்தில்) அடியேன் வைத்திருக்கிற | அன்பு | அன்பானது |
| | என்தன் அளவு அன்று | { என்னளவில் அடங்கி நிற்பதன்று. |

* * *—அமுதம்போன்ற பல விளிகளாலே எம்பெருமானை யழைத்து "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்று சொல்லித் தலைக்கட்டுகிற இவ்வாழ்வாருடைய கருத்து யாதெனில்; பிரானே! பிரயோஜநாந்தரங்களை விரும்புகின்ற தேவர்களுக்கு நீ படாதனபட்டு உடம்புநோவக் காரியங்கள் செய்தாய்; எனக்காக அப்படி ஒருகாரியமும் செய்யவேண்டா; என்னால் தாங்கமுடியாதபடி வளர்ந்து செல்லுகிற எனது காதலை அடக்கித் தந்தாயாகில் இதுவே எனக்குப் பரமோபகாரம் செய்ததாகும் என்கை. இதனால், பகவத்விஷயத்தில் தமக்கு அளவுகடந்த அன்பு விளைந்திருக்கும்படியைச் சொல்லி, இப்பிரபந்தம் கற்பார்க்கும் இப்படிப் பட்ட அன்பு விளையும் என்று ஸூசிப்பிக்கிறபடி.

இப்பாசுரந்தன்னையே திருமங்கையாழ்வார் திருக்குறுந்தாண்டகத்தில் "சித்தமும் செவ்வைநில்லாது என்செய்கேன் தீவினையேன், பத்திமைக்கு அன்புடையேனாவதே பணியாய் எந்தாய்!" என்று விரித்துரைத்தனர் போலும்.

இஷ்டங்களைக் கொடுப்பதற்கும் அநிஷ்டங்களைத் தவிர்ப்பதற்கும் கடவனான எம்பெருமானே அன்புக்கு உரியவன் என்று சொல்லிப் பிரபந்தத்தைத் தலைக்கட்டினாராயிற்று. ...

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
இரண்டாந்திருவந்தாதி உரை
முற்றிற்று.

# இரண்டாந்திருவந்தாதி—அடிவரவு.

1. அன்பு ஞானத்தால் பரிசு நகரிழை, அடிமூன்றி
லறிந்தைந்து கழலெடுத் துகந்து, அன்றது பேர்த்தனை
கடைநின்றமரர்.

2. கடைநின் றவரிவர் தொடரொடு பண்டி, இரிந்தது
தனக்கடி மற்றார் கொண்டது, வழக்கன்றுகண்டாய்
பழிபாவம் தாமுளரே

3. தாமுள ரரியது தாழ்ந்தவன் கண்டாய், சென்றது
வந்தித்துப் பதியமை மனதுவேம், மகனாக நீயன்றுலகு
பிரானென்று.

4. பிரானென்று மகிழ்ந்தது துணிந்தது வகையால,
இனிதென்பர் சிறியார் இருந்தண் எமக்கென்று,
ஓத்தின் சுருக்காகப் பொருளாலமரு.

5. பொருளால் நினைப்பன் தோளிரண் சிறநதார்க்கு,
உளதென்று பயின்றது மாலையரி உணர்ந்தாய்,
மலையேழு மழைப்பன் திருமாலை மதிக்கண்டாய்.

6 மதி நிறங்கரியன் நெறியார் வெற்பென்றிரும், என்று
மறந்தறி காணக்கழி திருமங்கை, நாம்பெற் றருள்புரி
ஒருரு நின்றதோர்.

7. நின்றதோர் பேறான் றேறேழும் கதையும்,
பணிந்தே னிதுகண்டாய் கண்டேன் வலிமிக்க,
கோவாகித் தமருள்ளந்தஞ்சை யிடங்கை.

8. இடங்கை போதறிந் தாய்ந்துரை யானைதவம்,
பெருகுமத வரைச்சந் துறுங்கண்டாய் தவம்பெற்றான்,
பின்னின்று நேர்ந்தேன் பகற்கண்டேன்.

9. பகல் வடிக்கோலக் குறையாக வரங்கருதி, அமுதென்றும்
நவின்றாரை இன்றாவறி திறம்பிற்று, கதவிக்கத
மண்ணுலகம் பின்னாலருநரகம்.

10. பின்னா லடியால்முன் கடிதுற்றுவணங்கி, என்னெஞ்ச
மத்தியூ ரெங்கள்பெருமான், கொண்டுவளர்க்க இறை
மாலன்பே.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

முதலாழ்வார்களுள்

பேயாழ்வார் அருளிச்செய்த

# மூன்றாந்திருவந்தாதி.

பெருமாள்கோயில்

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

அருளிய

"திவ்யார்த்த தீபிகை" யென்னும்

சென்னை M. R. கோவிந்தசாமி நாயுடுவால்,

மாடல் அச்சுக்கூடத்தில்,

அச்சிடுவிக்கப்பட்டது.

---

சுக்கில௵

1929.

## ஸ்ரீமத். உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்கள்.

---

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி விரிவுரை | ... | 3 | 0 |
| திருப்பாவையின் விரிவுரை | ... | 1 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 4 |
| நாச்சியார் திருமொழி விரிவுரை | ... | 1 | 8 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 12 |
| பெருமாள் திருமொழி விரிவுரை | ... | 1 | 4 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 8 |
| திருச்சந்த விருத்தத்தின் ஷை | ... | 1 | 10 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு—இவற்றின் விரிவுரை | ... | 1 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 4 |
| பெரிய திருமொழி விரிவுரை 1,2 பத்துக்கள் | ... | 3 | 0 |
| முதல் திருவந்தாதி விரிவுரை | ... | 1 | 8 |
| இரண்டாந்திருவந்தாதி விரிவுரை | ... | 1 | 4 |
| திருவெழுகூற்றிருக்கையும், திருமடல்களும் விரிவுரை | ... | 2 | 4 |
| திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஷை | ... | 2 | 0 |
| இராமாநுச நூற்றந்தாதி ஷை | ... | 0 | 12 |
| கூரத்தாழ்வான் வைபவம் | ... | 0 | 4 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் (மூலத்துடன் கூடியது.) | ... | 1 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 4 |
| முகுந்தமாலையின் தெளிவுரை | ... | 0 | 6 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் தெளிவுரை | ... | 0 | 12 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 0 |
| ஸுதர்சநசதகம் மிகத்தெளிவான தமிழுரை | ... | 1 | 0 |
| நமஸ்காரதத்துவம் | ... | 0 | 2 |
| ஸ்தோத்ரவ்யாக்யான சோதநம் | ... | 0 | 3 |
| ப்ரணவாதிகாரதத்துவம் | ... | 0 | 4 |
| வாத்ஸல்யார்த்த விவரணம் | ... | 0 | 2 |
| விதவாவபந வித்வம்ஸநம் | ... | 0 | 4 |
| உபந்யாஸரத்நமாலா (க்ரந்த லிபி) ஸம்ஸ்க்ருத பாஷை | ... | 0 | 6 |
| பாதுகாஸஹஸ்ராவதார தத்துவம் ஷை ஷை | ... | 0 | 4 |

### தெலுங்குலிபிப் பிரசுரங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீவரதராஜஸ்தவம் ஸ்ரீஸ்தவம் இவற்றின் விஸ்தாரமான மணிப்ரவாள வியாக்கியானம் | ... | 1 | 8 |
| அதிமாநுஷஸ்தவத்தின் ஷை | ... | 0 | 12 |
| திருப்பல்லாண்டு விரிவுரை | ... | 0 | 4 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் | ... | 0 | 3 |
| ரஹஸ்ய மூலம் | ... | 0 | 6 |

**இன்னும் பல புஸ்தகங்களும் உள்ளன.**

பேருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத் தனியன்கள்.

(நம்பெருமாள் அருளிச்செய்தது.)

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్ ।
యతీన్ద్రప్రవణం వన్దే రమ్యజామాతరం మునిమ్ ॥

[ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்.
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.]

(ஆழ்வான் அருளிச்செய்தவை.)

లక్ష్మీనాథసమారమ్భాం + వన్దే గురుపరమ్పరామ్ ॥
యోనిత్యమచ్యుతపదామ్బుజ + రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే.

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் + வந்தே குருபரம்பராம்.
யோ நித்யமச்யுத + ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.]

(ஆளவந்தார் அருளிச்செய்தது.)

మాతా పితా యువతయః + ప్రణమామి మూర్ధ్నా

[மாதா பிதா யுவதய: + ப்ரணமாமி மூர்த்நா.]

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

భూతం సరశ్చ + శ్రీమత్పరాఙ్కుశమునింప్రణతోఽస్మినిత్యమ్.

[பூதம் ஸரச்ச + ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.]

ஸ்ரீ:



பேயாழ்வார் அருளிச்செய்த

# மூன்றாந் திருவந்தாதி.

இது—மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்களுள் மூன்று மவரான பேயாழ்வாரருளிச்செய்ததும், நாலாயிரப்பிரபந்தத்தில் மூன்றாவது ஆயிரமாக ஸ்ரீமந்நாதமுனிகளால் வகுக்கப்பட்ட இயற்பாவில் மூன்றாவது பிரபந்தமுமாகும். பொய்கையாழ்வாருடைய திருவந்தாதிப் பிரபந்தத்திற்கு அடுத்ததான (இரண்டாந் திருவந்தாதிப் பிரபந்தத்திற்கு அடுத்தபடியாக இத்திருவந்தாதி அவதரித்ததுபற்றி மூன்றாந்திருவந்தாதி யென்று இதற்குத் திரு நாமமிட்டு வழங்கலாயினர் முன்னோர்.

இப்பிரபந்த மருளிச்செய்த பேயாழ்வாருடைய திருவவதார வரலாறு முதலியன முதற்றிருவந்தாதியுரைத் தொடக்கத்தில் விவரிக்கப்பட்டுள்ளன; அங்கே கண்டுகொள்க.

பொய்கையாழ்வார் முதல் திருவந்தாதியிலே ஸ்ரீமந்நாராயண னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை நிர்ஹேதுகமான எம்பெருமா னருளாலே தோன்றிய பரபக்திதசையை அடைந்துள்ள ஜ்ஞான விசேஷத்தாலே ஸாக்ஷாத்கரித்தநுபவித்து அத்திருமாலுக்கு சேஷமான விபூதியை ஸ்வதந்த்ரமென்றும் அந்யசேஷமென்றும்

பிரமிக்கிற அஜ்ஞாநவிருள் நீங்கும்படி பூமிமுதலிய பதார்த்தங்களைத் தகளி முதலியனவாக உருவகப்படுத்திக்காட்டி, உபயவிபூதியுக்தனான எம்பெருமானே சேஷியென்றும் அவனுக்கு சேஷமாயிருப்பதே ஆத்மஸ்வரூபமென்றும் அவனது திருவடிகளிற்செய்யுங் கைங்கரியமே புருஷார்த்தமென்றும் அதனைக் கைப்படுத்தித்தரும் உபாயமும் அவன் திருவடிகளே யென்றும் நிஷ்கர்ஷித்துப் பேசினார்.

பூதத்தாழ்வார் இரண்டாந்திருவந்தாதியில்—கீழே பொய்கையாழ்வாரோடு கூடவிருந்து எம்பெருமானது திருக்குணங்களை யநுபவித்ததனால் அவனது அருளாலே வந்த தமது பரபக்தியானது பரஜ்ஞாநதசையை அடையும்படி பரிபக்வமாகி வளர, பரஜ்ஞாநதசையையடைந்த அந்த ப்ரேமவிசேஷத்தாலே எம்பெருமானுடைய தன்மைகளை முழுவதும் ஸாக்ஷாத்கரித்தநுபவித்தார்.

இத்திருவந்தாதியில் பேயாழ்வார்—கீழ் இரண்டு ஆழ்வார்களோடு கூடவிருந்து எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுபவித்ததனால் அவனது இன்னருளாலே பரமபக்தி தலையெடுத்து வளரப்பெற்று, கடலைக்கண்டவன் அதனுள் உண்டான முத்து மணி மாணிக்கம் முதலியவற்றைத் தனித்தனி கண்டு உகக்குமாபோலே, லக்ஷ்மி சங்கு கௌஸ்துபம் முதலியவற்றுக்கு இருப்பிடமாய் அவயவ ஸௌந்தர்யாதிகள் அலையெறிகிற பெரும் புறக்கடலாகிய எம்பெருமானை ஸாக்ஷாத்கரித்து 'இன்னது கண்டேன் இன்னது கண்டேன்' என்று வகுத்துரைத்து, அக்காட்சியினாலே தமக்குண்டான ஜ்ஞாநவைசத்யத்தினால் ஸ்வரூப உபாய புருஷார்த்தங்களுக்கு உரிய அர்த்த விசேஷங்களையும் பன்னியுரைக்கிறார்.

கீழ் இரண்டு ஆழ்வார்கள் வையந்தகளி யென்றும் அன்பே தகளி யென்றும் இரண்டு திருவிளக்கு ஏற்றிக்காட்ட, இவர் கண்டேன் கண்டேன் என்கிறார் காணும். "மன்னிய பேரிருள் மாண்டபின் கோவலுள் மாமலராள் தன்னொடு மாயனைக்கண்டமை காட்டுந் தமிழ்த்தலைவ" ரின்றே இவர்.

எம்பெருமானை உபயவிபூதியுக்தனென்றார் பொய்கையார்; அவன் நாராயண சப்தவாச்யனென்றார் பூதத்தார்; நாராயண சப்தத்தோடே ஸ்ரீமத்பதத்தையுங் கூட்டிக்கொள்ள வேணுமென்கிறாரிவ்வாழ்வார் என்று பூர்வர்கள் ரஸமாக நிர்வஹிக்கும்படி. இது—ஒவ்வொரு திருவந்தாதியிலும் முதற்பாசுரத்திற்கு உள்ளீடான பொருளை உபஜீவித்து அருளிச்செய்யும்படியாம்.

ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# மூன்றாந்திருவந்தாதி.

# தனியன் உரை.

[குருகைகாவலப்பனருளிச்செய்த தனியன்.]

(இருவிகற்ப நேரிசை வெண்பா.)

சீராரும் மாடத் திருக்கோவ லூரதனுள்
காரார் கருமுகிலைக் காணப்புக்கு—ஓராத்
திருக்கண்டே னென்றுரைத்த சீரான் கழலே
உரைக்கண்டாய் நெஞ்சே யுகந்து.

பதவுரை.

| | |
|---|---|
| சீர் ஆரும் மாடம் | அழகுபொருந்திய மாடங்களையுடைய |
| திருக் கோவலூர் அதனுள் | திருக்கோவலூரில் |
| கார் ஆர் கரு முகிலை | கார்காலத்துக் காள மேகம்போன்ற எம்பெருமானை |
| காண புக்கு | ஸேவிக்கப் புகுந்து |
| ஓரா | நெஞ்சென்னும் உட்கண்ணாலே அநுஸந்தித்து |
| திருக் கண்டேன் என்று உரைத்த | 'திருக்கண்டேன்' என்று தொடங்கி நூறுபாசுர மருளிச்செய்த |
| சீரான் | சீர்மைபொருந்திய பேயாழ்வா ருடைய |
| கழலே | திருவடிகளையே |
| நெஞ்சே | எனது நெஞ்சமே! |
| உகந்து உரை | மகிழ்ந்து பேசு; |

(கண்டாய்—முன்னிலையசை.)

* * *—பேயாழ்வாருடைய திருவடிகளே சரணமென்ற உறுதிகொண்டிருக்குமாறு தமது நெஞ்சுக்கு உபதேசிப்பதாம். ஓடித்திரியும் யோகிகளாய்ப் பதியே பரவித்தொழுந் தொண்டரா யிருந்த முதலாழ்வார்கள் மூவரும் ஒருநாளிரவு ஒன்றுகூடினது திருக்கோவலூரிலேயாதலால் "சீராருமாடத்திருக்கோவலூரதனுள்" எனப்பட்டது. திருக்கோவலூராயனைக் கவிபாடுகின்ற திருமங்கையாழ்வார் "மழைமுகிலேபோல்வான் தன்னை" என்றருளிச் செய்ததை உட்கொண்டு 'காரார் கருமுகிலை' எனப்பட்டது. மழைக்காகத் திருக்கோவலிடைகழியிலே ஒதுங்கி அங்கேயொரு மழைமுகிலைக் கண்டுகளித்த பேயாழ்வாருடைய திருவடிகளையே அநுஸந்திக்கவேணுமென்றதாயிற்று. ... ...

தனியன் உரை முற்றிற்று.



ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## பேயாழ்வார் அருளிச்செய்த

# மூன்றாந்திருவந்தாதி.

[பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் * திகழு
மருக்க னணிநிறமுங் கண்டேன் *—செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கங் கைக்கண்டேன் *
என்னாழி வண்ணன்பா லின்று. (க)

| | | | |
|---|---|---|---|
| இன்று | எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷம்பெற்ற இப்போது | அணி | உஜ்வலமான |
| என் ஆழி வண்ணன் பால் | கடல்வண்ணனை எம்பெருமானிடத்திலே | நிறமும் | ப்ரகாசத்தையும் |
| திரு | பெரிய பிராட்டியாரை | கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன்; |
| கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன்; | செரு | யுத்தபூமியிலே |
| பொன் மேனி | அழகிய திருமேனியையும் | கிளரும் | பராக்ரமங்காட்டுகின்ற |
| கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன்; | பொன் ஆழி | அழகிய திருவாழியையும் |
| திகழும் | விளங்குகின்ற | கை | திருக்கையிலே |
| அருக்கன் | ஸூர்யன்போன்று | கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன்; |
| | | புரி சங்கம் | வலம்புரிச்சங்கையும் (மற்றொரு திருக்கையிலே) |
| | | கண்டேன் | ஸேவிக்கப் பெற்றேன். |

* * *—முதலாழ்வார் மூவரும் ஒருவரையொருவர் அறியாமல் தேசஸஞ்சாரம் செய்துகொண்டிருக்கையில், இம்மூவரையும்

ஓரிடத்திலே சேர்த்து ஆட்கொண்டு இவர்கள் முகமாக உலகத்தை வாழ்விக்க வேணுமென்கிற குதூஹலங்கொண்ட எம்பெருமானுடைய திருவுள்ளம் நிறைவேறுதற்காக, ஒருநாள் ஸூர்யன் அஸ்தமித்தபின்பு பொய்கையாழ்வார் திருக்கோவலூரையடைந்து அங்கு ம்ருகண்டு மஹர்ஷியின் திருமாளிகையிற்சென்று அதன் இடைகழியிற் பள்ளிகொண்டிருக்கையில் பிறகு பூதத்தாழ்வாரும் அங்கே வந்துசேர, "வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத் புவி" என்கிற சாஸ்திரமுறைப்படி ஒருவரையொருவர் வந்தனை வழிபாடுகள் செய்தவுடன் 'இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் உட்கார்ந்திருக்கலாம்' என்று பொய்கையார் விண்ணப்பஞ்செய்ய, அவ்விதமே இருவரும் அங்கு உட்கார்ந்திருக்கையில், பேயாழ்வாரும் அவ்விடத்திற்கே வந்துசேர, ஒருவரையொருவர் தண்டன்ஸமர்ப்பித்து உபசரித்துக்கொண்டபின் 'இவ்விடம் ஒருவர்படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்று பொய்கை பூதத்தாரிருவரும் சொல்ல, அவ்விதமே மூவரும் அவ்விடத்திலே நின்றுகொண்டு பரஸ்பரம் பகவத்குணங்களைச் சொல்லுதலும் கேட்டலுஞ் செய்து களித்திருக்கையில்,—உலகளந்த மூர்த்தி அவர்கள் திறத்திலே திருவருள் செய்யும் பொருட்டுப் பெருத்த இருளையும் கனத்தமழையையு முண்டாக்கி, பெரிய வடிவத்தோடு அவர்களிடையே சென்றுநின்று பொறுக்க முடியாத மிக்க நெருக்கத்தைச் செய்தருள, அதன்மேல் இவர்கள் 'இதுவரையிலும் இல்லாத நெருக்கம் இப்போது உண்டானதற்குக் காரணமென்கொல்? பிறரெவரேனும் இங்கு வந்து புகுந்தவருண்டோ?' என்று சங்கிக்கையில்—பொய்கையாழ்வார் பூமியாகியதகழியில் கடல்நீரையே நெய்யாகக்கொண்டு ஸூரியனை விளக்காக ஏற்ற, பூதத்தாழ்வார் அன்பாகிய தகழியில் ஆர்வத்தை நெய்யாகவும் சிந்தையைத் திரியாகவுங்கொண்டு ஞானதீபத்தை ஏற்ற, இவ்விரண்டி னொளியாலும் இருளற்றதனால் இப்பேயாழ்வார் எம்பெருமானைத் தாம் ஸேவிக்கப் பெற்றமையை இப்பாசுரத்தாலே வெளியிடுகிறார்.

'எம்பெருமானைக்கண்டேன்' என்று சொல்லிவிட்டால் அவனிடத்திலுள்ளவையெல்லாம் கண்டமை சொல்லப்பட்டதாக ஆகு

மாயினும், தம்முடைய மகிழ்ச்சியின் மிகுதியினால் 'அதுகண்டேன் இதுகண்டேன்' என்று சிலவற்றைப் பிரித்துப் பிரித்துப் பேசுகின்றார்.

புருஷகாரபூதையான பிராட்டியைக் கண்டேன்; அவளுடைய சேர்க்கையினாலே நிறம்பெற்ற திருமேனியைக் கண்டேன்; மரகதகிரியிலே உதித்து ஒளிவிட்டுக்கிளருகிற பாலஸூர்யனைப்போலே விளங்காநிற்பதாய் இருவருடைய ஒளியும் தன்னிலே கலசி விளங்காநின்றுள்ளதான அழகிய நிறத்தையும் கண்டேன்; இந்தச் சேர்த்திக்கு என்னதீங்கு வருகிறதோவென்று அஸ்தாநே பயசங்கைபண்ணி யுத்தஸந்நத்தனாய் கண்டார்மேலே சீறிவிழாநின்றவனாய், ச்யாமளமான அவன்வடிவுக்குப் பரபாகமாம்படி பொற்கென்ற நிறத்தையுடையனான திருவாழியாழ்வானையுங் கண்டேன்; கைத்தலத்திலிருந்துகொண்டே பெருமுழக்கத்தாலே சத்துருக்களை உயிர்மாளப்பண்ணும் ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானையுங் கண்டேன் என்றாராயிற்று.

நூல் இயற்றுவார் மங்கல மொழி முதலிலே வகுத்துக் கூறுவ ராதலால் 'திரு' என்று தொடங்கினர். பொன்மேனிகண்டேன் = "ஹிரண்ய வர்ணாம் ஹரிணீம்" என்கிற சுருதியின்படி பொன்னின் நிறம் போன்ற நிறமுடையளான பிராட்டியின் நித்யஸம்ச்லேஷத்தாலே அப்படியே பொன்னிறமாகப் பெற்றதாம் எம்பெருமானுடைய கரியதிருமேனியும். அன்றியே, பொன்போல் விரும்பத்தக்க மேனி என்றுமாம். 'அர்க்க:' என்னும் வடசொல் அருக்கன் எனத்திரிந்தது. "உருவுகரிதாய் முகம் செய்தாய் உதய பருப்பதத்தின்மேல், விரியுங்கதிரே போல்வானை விருந்தாவனத்தே கண்டோமே" என்ற நாச்சியார் திருமொழிப்பாசுரம் இங்கு நினைக்கத்தகும். செருக்கிளரும் பொன்னாழி = "ஹேஹாஉஹா நரகா வ்யஸநிஸிரஸம் ஸாஜ்ஞேவக்ராலிஷ்வெவ்யீ" என்ற ஸ்ரீகுணரத்நகோச ஸ்ரீஸூக்தியை அநுஸந்திப்பது. "கருதுமிடம் பொருது—கைவந்த சக்கரத்தன்" என்ற திருவாய்மொழியுங் காண்க.

"புரிசங்கம் கை கண்டேன்" என்றும், "புரிசங்கு அம் கை கண்டேன்" என்றும் பிரிக்கலாம். புரி என்றது வலம்புரி என்றபடி.

அன்றியே, ஸ்புரிக்கின்ற—விளங்குகின்ற சங்கமென்றுமாம். புரி—புரிந்துபார்க்கிற [எங்கே யெங்கேயென்று சுற்றுமுற்றும் சீறிப் பார்க்கிற] சங்கு என்றுமாம். சேஷத்வத்தாலே எப்போதும் வணக்கத்தையுடைய சங்கு என்றுமாம்.

ஈற்றடியில் எம்பெருமானை ஆழிவண்ணன் என்றது மிகப் பொருந்தும்: பிராட்டி, சங்கு, கௌஸ்துபமணி முதலியவை கடலில் தோன்றினவாதலால், அப்படிப்பட்ட வஸ்துக்களை இன்று இக்கடலிலே காணப்பெற்றே னென்கிறார் போலும். .... (க)

இன்றே கழல்கண்டேன் ஏழ்பிறப்பும் யானறுத்தேன் *
பொன்தோய் வரைமார்பில் பூந்துழாய் *—அன்று
திருக்கண்டு கொண்ட திருமாலே * உன்னை
மருக்கண்டு கொண்டேன் மனம். (உ)

| | | | |
|---|---|---|---|
| பொன் தோய் | பொன்மயமான பூஷணங்கள் சேரப்பெற்றதும் | என் மனம் | அடியேனுடைய மனமானது |
| | | உன்னை | உன்னிடத்தே |
| வரை | மலைபோன்றது மான | மருக்கண்டு கொண்டு | பொருந்தப் பெற்றதனால் |
| மார்பில் | திருமார்பிலே (சாத்தப்பட்டிருந்த) | யான் | அடியேன் |
| | | இன்றே | இன்று |
| பூந்துழாய் | திருத்துழாயை | கழல் | உனது திருவடிகளை |
| அன்று | கடல்கடைந்த வக்காலத்தில் | கண்டேன் | கண்டு அநுபவிக்கப் பெற்றேன்; |
| திரு | பெரியபிராட்டியார் | ஏழ்பிறப்பும் | ஜந்மபரம்பரைகளை யெல்லாம் |
| கண்டு கொண்ட | அநுபவிக்கும்படியாகப் பெற்ற | அறுத்தேன் | (இனிமேல் தொடாதபடி) ஒழித்திட்டேன். |
| திருமாலே | லக்ஷ்மீநாதனே!, | | |

* * *—எம்பெருமானை விசேஷணங்களுடனே கண்டே னென்றார் கீழ்ப்பாட்டில்; அவனைக் கண்டபோதே விரோதிவர்க்க மெல்லாம் வேரற ஒழிந்தன வென்கிறார் இப்பாட்டில். பிராட்டி தானே ஆசைப்பட்டுவந்து ஏறும்படியான விலக்ஷணமான திரு மார்புபடைத்த திருமாலே! எனது மனமானது உன்னிடத்திலே

பொருந்தி ஸேவிக்கப்பெற்றதனால், இதுவரையில் பாழேகழிந்த பலபிறவிகளுக்குள்ளே இன்றே உனது திருவடிகளை ஸேவிக்கப் பெற்றவனானேன்; உன்னுடைய அநுபவத்திற்கு விரோதியாயிருந்த ஜந்மபரம்பரைகளையும் இன்றோடு அறுத்துவிட்டேன்; (அதாவது—இனிமேல் நமக்கு நித்யாநந்தமே யொழியப் பிறவியில்லை யென்று நிச்சயித்துவிட்டேன் என்கை.)

கீழ்ப்பாட்டில் 'பொன்மேனிகண்டேன்' என்று திருமேனியிலே வாய்வைத்தார்; சிறுகுழந்தைகள் தாயின்முலையிலே வாய் வைப்பதுபோல சேஷபூதர் இழியுந்துறை திருவடியே யாகையாலே முந்துறமுன்னம் திருமேனியிலே வாய்வைத்தோமே யென்று அநுதபித்தவர்போல இதில் "இன்றே கழல் கண்டேன்" என்கிறார் என்னலாம்.

பொன்தோய்வரைமார்பில்='பொன்' என்று பிராட்டியைச் சொல்லிற்றாய், 'பிராட்டி வந்துசேர்ந்த வரைமார்பிலே' என்று பொருள் கொள்ளலாமாயினும், இந்த வாக்கியத்திலேயே திருக் கண்டுகொண்ட" எனவருதலால், 'பொன் தோய்' என்பதற்குப் பொன்மயமான ஆபரணங்கள் தோயப்பெற்ற எனப் பொருள் கொள்வதே பொருந்தும். பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் "பொன்தோய் இத்யாதி" என்று ப்ரதீகமெடுத்து—"பிராட்டி தானே ஆசைப்பட்டு வந்து ஏறும்படியான மார்புபடைத்த ச்ரிய: பதியே!" என்று பொருளருளிச் செய்திருப்பது 'பொன்தோய்' என்றதன் பொருளன்று; "பொன்தோய் வரைமார்பில் பூந்துழாய் திருக்கண்டு கொண்ட திருமாலே" என்ற வளவுக்கு அருளிச்செய்த தாத்பர்யமாம் அது. திருத்துழாயணிந்த திருமார்வையுடையனைத் திருப்பாற்கடல் கடைந்தபோது பிராட்டியானவள் அத்திரு மார்பிலே வந்து சேர்ந்து அத்திருத்துழாயை அநுபவிக்கப் பெற்றாளென்ற விதனால், பிராட்டிதானே ஆசைப்பட்டுவந்து மேல் விழும்படியான போக்யதையை யுடையவன் என்பது பெறப்படும். கடல் கடைந்தகாலத்துத் திருமார்பிலே திருவாபரணங்களணிந்து கொண்டிருந்தமைபற்றிப் பொன்தோய் என்று திருமார்புக்கு அடைமொழி கொடுக்கப்பட்டது. மார்பிலிருந்த பூந்துழாயைத் திருவானவள்

கண்டு கொண்டாளென்றால் அவள் மார்பிலேவந்து சேர்ந்தா ளென்றதாமென்க.

மருக்கண்டுகோண்டு=மருவி கண்டுகொண்டு என்றுமிரண்டு சொற்கள் ஒருமுழுச்சொல்லாயிற்றென்ப. ... ... (உ)

மனத்துள்ளான் மாகடல் நீருள்ளான் * மலராள்
தனத்துள்ளான் தண்டுழாய் மார்பன் *—சினத்துச்
செருநருகச் செற்றுகந்த தேங்கோதவண்ணன் *
வருநரகம் தீர்க்கும் மருந்து. (ங)

| | | | |
|---|---|---|---|
| மா கடல் நீர் உள்ளான் | பெரிய திருப்பாற் கடல் நீரிலே திருக்கண் வளர்ந் தருள்பவனும் | செற்று | நிவம்ஸம்பண்ணி |
| மலராள் தனத்து உள்ளான் | பிராட்டியின் திருமுலைத் தடத்திலே அடங்கிக் கிடப்பவனும் | உகந்த | மகிழ்ந்தவனும் |
| தண் துழாய் மார்பன் | குளிர்ந்த திருத்துழாயைத் திருமார்பி லணிந்தவனும், | தேங்கு ஓதம் வண்ணன் | தேங்கின கடல் போன்ற வடிவை யுடையவனும் |
| செருநர் | சத்துருக்க ளானவர்கள் | வரு நரகம் தீர்க்கும் மருந்து | தப்பாமல் நேரக்கூடிய ஸம்ஸாரமாகிற நரகத்தைப் போக்கவல்ல மருந்து போன்ற வனுமான ஸர்வேச்வரன் |
| உக | அழியும்படி | மனத்து உள்ளான் | என்மனத்திலே வந்து சேர்ந் விட்டான். |
| சினத்து | சீற்றத்தினாலே | | |

* * *—கீழ்ப்பாட்டில் ஆழ்வார் தம்முடைய திருவு எம்பெருமானளவிலே பொருந்தினபடியைப் பேசினார்; இட் டில், அப்பெருமான்தானே தம்முடைய மனத்தில்வந்து பெ தினமையைப் பேசுகிறார். இப்பாட்டில், மனத்துள்ளான் எ வினை முற்றாக நிற்கக்கடவது. மாகடல் நீரிலும் மலராள் தன மிருந்தவன் அவ்விடங்களை விட்டிட்டு என்மனத்திலே புகுந்தானென்கிறார்.

ஆச்ரிதரக்ஷணத்திற்காகத் திருப்பாற்கடலிலே கிடந்து அ விடம்போலே பெரியபிராட்டியார் திருமுலைத்தடத்தையும் ஒரு

ஸ்தானமாகவுடையனும், அவள் மேல்விழுந்து அநுபவிக்கும்படியாகக் குளிர்ந்த திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமார்பையுடையனும், ஆச்ரிதர்களுக்கு விரோதிகளாயுள்ளவர்கள் உருவழிந்து ஒழியும்படியாகச் சீறி அவர்களைத் தொலைத்து 'ஆச்ரித விரோதிகள் தொலையப் பெற்றோம்' என்று திருவுள்ளமுவந்தவனும், அந்த உவப்பினால் புகர்பெற்று விளங்குகின்ற வடிவையுடையனும், அநுபவித்தே தீரவேண்டும்படியான ஸம்ஸாரநரகத்தைக் கடப்பதற்கு அருமருந்தானவன் என்னுடைய நெஞ்சிலேயுள்ளான் என்றாராயிற்று.

மற்றவிசேஷணங்களைப்போலே மனத்துள்ளான் என்பதையும் ஒரு விசேஷணமாக்கி,...இப்படிப்பட்ட எம்பெருமான் வருநரகம் தீர்க்கும் மருந்தாயிருப்பன் என்று முடிக்கவுங் கூடுமாயினும் மனத்துள்ளானென முடிப்பதே நன்கு பொருந்தும்.

செருநர்—பகைவர். 'சினத்து' என்பதைச் செருநர்க்கு விசேஷணமாக்கவுமாம்; கோபத்தையுடைய பகைவர் என்றவாறு. ... ... ... ... (௩)

மருந்தும் பொருளும் அமுதமும் தானே *
திருந்திய செங்கண்மா லாங்கே *—பொருந்திய
நின்றுலக முண்டுமிழ்ந்து நீரேற்று மூவடியால் *
அன்றுலகம் தாயோ னடி. (௪)

| | | | |
|---|---|---|---|
| திருந்திய | இவனே பரமபுருஷனென்று தெளிவாகக் கண்டு கொள்வதற்குக் காரணமான | நின்று பொருந்திய | நிலைநின்று பொருந்தினவனும் |
| | | உலகம் | உலகங்களை |
| செம் கண் | செந்தாமரை போன்ற திருக் கண்களையுடைய | உண்டு | பிரளயங் கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்துக் காத்தவனும் |
| மால் | ஸர்வேச்வரனும் | | |
| ஆங்கே | உலகத்தைக் காத்தருள்வதாகிய அக்காரியமொன்றிலேயே | உமிழ்ந்து | பிறகு வெளிப்படுத்தினவனும் |
| | | அன்று | முன்பொரு காலத்தில் |

| | | | |
|---|---|---|---|
| நீர் ஏற்று | (மாவலியிடத்தில்) யாசித்துப் பெற்று | மருந்தும் | மருந்துபோலே ஸம்ஸாரவியாதியைத் தொலைப்பனவாயும் |
| மூ அடியால் உலகம் தாயோன் | மூவடியாலே உலகங்களை யெல்லாம் தாவியளந்தவனாயுமுள்ள எம்பெருமானுடைய | பொருளும் | பணம்போலே வேண்டியவற்றைப் பெறுவிப்பனவாயும் |
| அடி தானே | திருவடிகளே | அமுதமும் | அமிருதம்போலே போக்யமாயுமிருக்கின்றன. |

* * *—இடைவிடாது அநாதிகாலமாக நம்முடைய ரக்ஷணத்தொழிலிலேயே ஊன்றியிருக்கிற எம்பெருமானது திருவடிகளே உபாயமும் உபேயமுமாம் என்கிறது இப்பாட்டு. அன்று உலகம் தாயோனுடைய அடிதானே மருந்தும் பொருளும் அமுதமும் என்று இயைக்க.

மருந்து என்றது—உலகத்தில் ஔஷதமானது வியாதிகளைப் போக்குவதுபோல எம்பெருமானுடைய திருவடிகளும் நம்முடைய விரோதிகளைப் போக்கவல்லது என்றபடி. பொருள் என்றது—உலகத்தில் பணமானது பலபல பண்டங்களை வாங்குவதற்கு ஸாதனமாவதுபோல, எம்பெருமானுடைய திருவடிகளும் நமக்கு இஷ்டங்களைப் பெறுவிக்கவல்ல உபாயம் என்றபடி. அமுதம் என்றது—இப்படி இஷ்டங்களைப் பெறுவிப்பதற்கும் அநிஷ்டங்களைத் தொலைப்பதற்கும் உபாயமாக நிற்கும் மாத்திரமேயல்லாமல் ஸ்வயம் போக்யமாயும், ஆனதுபற்றியே ப்ராப்யமாயுமிருக்குமென்றபடி.

திருந்திய செங்கண்மால்=நாம் திருந்துவதற்குப் பாங்கான திருக்கண்களை யுடையவன் என்கை. இவனே பரமபுருஷனென்று நாம் நிஸ்ஸம்சயமாக அறுதியிடலாம்படி, தன்னுடைய ஸர்வேச்வரத்வத்தைக் கோட்சொல்லித் தருகின்ற திருக்கண்கள் படைத்தவன். "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள்."

'ஆங்கே பொருந்திய' என்றது—எப்போதும் அடியவர்களைக் காத்தருள்வதாகிற காரியமொன்றிலேயே எம்பெருமான் பொருந்தியிருக்கின்றமையைச் சொன்னபடி. இதனையே விவரிக்கிறார் உலகமுண்டுமிழ்ந்து நீரேற்று மூவடியா லன்றுலகந் தாயோன் என்று. பிரளயம் வந்தவாறே அதில் உலகங்களெல்லாம் அழியாதபடி அவற்றைத் திருவயிற்றிலேவைத்து நோக்கியும், பிறகு வெளிப்படுத்தியும், மஹாபலி போல்வாருடைய அபிமானத்தில் நின்றும் மீட்டுத் தன்னடிக் கீழ்ப்படுத்தியும் இவை போல்வன பல காரியங்களினால் தன்னுடைய ரக்ஷகத்வத்தைப் பிரகாசப்படுத்திக் கொண்டேயிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளே உபாயோபேயங்க ளென்றதாயிற்று.

திருந்திய என்பதற்கு வேறொரு வகையாகவும் பொருள் கொள்ளலாம்; "இவ்வாத்மாக்கள் திருந்தாவிட்டால் இவற்றைத் திருத்தப் பாராதே இவற்றுக் கீடாகத் தன்னைத் திருத்திக்கொண்டிருக்கும் ஸர்வேச்வரன்" என்ற பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயலின் அழகு காண்மின். ... ... (௪)

அடிவண்ணம் தாமரை அன்றுலகம் தாயோன் *
படிவண்ணம் பார்க்கடல் நீர்வண்ணம் *—முடிவண்ணம்
ஓராழி வெய்யோன் ஒளியுமஃதன்றே *
ஆராழி கொண்டாற் கழகு. (௫)

| | |
|---|---|
| அன்று உலகம் தாயோன் | முன்பு உலகங்களைத் தாவியளந்த பெருமானுடைய |
| அடி வண்ணம் | திருவடிகளின் நிறம் |
| தாமரை | தாமரைபோலே சிவந்திராநின்றது; |
| படி வண்ணம் | திருமேனியின் நிறம் |
| பார் கடல் நீர் வண்ணம் | பூமியைச் சூழ்ந்த கடல் நீரின் வண்ணம்போல் கறுத்துக் குளிர்ந்திராநின்றது; |
| முடி வண்ணம் | கிரீடத்தினுடைய நிறம் |
| ஓர் ஆழி வெய்யோன் | ஒற்றைச்சக்கரமுடைய தேரிலேறின ஸூர்யனுடைய நிறம் போன்றது; |
| ஒளியும் | (அப் பெருமானுடைய) தேஜஸ்ஸும் |

| | | | |
|---|---|---|---|
| அன்று அன்றே | அந்த ஸூர்யப்ரகாசம் போன்றதேயன்றோ ; | ஆர் ஆழி கொண்டாற்கு அழகு | அழகு பொருந்திய திருவாழியைக் கையில் கொண்டுள்ள பெருமானுடைய அழகு இப்படிப் பட்டதாயிராநின்றது. |

* * *—முதலாழ்வார்கள் உலகளந்த சரிதையிலே மிகவும் ஆழ்ந்திருப்பர்களென்பது ப்ரஸித்தம். உலகளந்த வரலாறு ப்ரஸ்துதமானால் அதிலே உள்ளுறைந்திருப்பர்கள். கீழ் "அன்றுலகந் தாயோன்" என்று உலகளந்த செய்தி ப்ரஸ்துதமாகையாலே அதிலே தோற்று அவனழகை யநுபவிக்கிறாரிதில்.

மஹாபலி தாரை வார்த்துத் தத்தம் பண்ணினவாறே உலகங்களை யளந்துகொண்ட பெருமானுடைய திருவடிகளின் நிறமானது தாமரைபோலே சிவந்திராநின்றது ; திருமேனியின் நிறமோ கடல் நீர்போலே இருண்டு குளிர்ந்திரா நின்றது ; திருவபிஷேகமோ "கதிராயிர மிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியன்" என்கிறபடியே ஆதித்யன்போலே யிராநின்றது; தேஜஸ்ஸுக்கோ ஒப்பே இல்லை ; ஒருகால் ஒப்புச்சொல்ல வேணுமானால் அந்த ஆதித்யனுடைய தேஜஸ்ஸையே ஒப்புச்சொல்ல வமையும். கையுந் திருவாழியுமான எம்பெருமானுடைய அழகு இப்படிப்பட்டதாங் கிடீர்.

ஓராழி வெய்யோன்=1. "ஸப்தாச்வஏகசக்ரம்" என்று வடமொழி வேதத்திலும், 2. "ஒரு காலுடைய தேரொருவன்" என்றும் 3. "தனியாழித் தேரார் நிறைகதிரோன்" என்றும் தமிழ் வேதத்திலும் கூறியபடியே ஒற்றைச் சக்கரம்பூண்ட தேரையேறி நடத்துமவன் ஸூர்யன் என்க. ... .... (௫)

அழகன்றே யாழியாற்கு ஆழிநீர் வண்ணம் *
அழகன்றே யண்டம் கடத்தல் *—அழகன்றே
அங்கைநீ ரேற்றாற்கு அலர்மேலோன் கால்கழுவ *
கங்கைநீர் கான்ற கழல். (௬)

1. தைத்திரீய-ஆரண்யகம்.
2. பெரிய திருமொழி 5—7—8.
3. சிறிய திருமடல்.

| | | | |
|---|---|---|---|
| ஆழியாற்கு | திருவாழியை யுடைய ஸர்வேச் வரனுக்கு | நீர் ஏற்றாற்கு | மாவலி தானம் பண்ணின நீரைப் பெற்றுக் கொண்ட பெருமானுக்கு |
| ஆழி நீர் வண்ணம் | கடல் நீரின் நிறம் போன்ற நிறமானது | அலர் மேலோன் | பிரமன் |
| அழகு அன்றே | மிகவுமழகிய நிறமன்றோ ; | கால் கழுவ | திருவடிகளை விளக்க, (அப்போது) |
| அண்டம் கடத்தல் | மேலுலகங்களை அளந்து கொண்டது | கங்கை நீர் | கங்காதீர்த்தத்தை |
| அழகு அன்றே | அழகன்றோ ; | கான்ற | வெளிப்படுத்திய |
| அங்கை | உள்ளங்கையிலே | கழல் | அத்திருவடி |
| | | அழகு அன்றே | அழகன்றோ. |

* * *—எம்பெருமானுடைய திருமேனி யழகையும் சில திவ்ய சேஷ்டிதங்களையுஞ் சேர்த்து அநுபவிக்கிறார்.

ஆழியாற்கு ஆழிநீர்வண்ணம் அழகன்றே=எம்பெருமானுக்குப் பல திருநாமங்களுண்டு ; அவற்றுள் 'கடல்வண்ணன்' என்பதும் ஒன்று ; இதனை யறிந்தவர்களெல்லாரும் எம்பெருமானைக் கடல் வண்ணனென்று மாத்திரம் வாயாற் சொல்லி விடுகிறார்களேயன்றி, இதனால் எம்பெருமானுடைய அழகிய திருநிறம் சொல்லப்படு கின்றதென்று ரஸித்து அநுபவிப்பாரில்லையே !, எத்தனையோ நாமங்களை வாயாற் சொல்லிவிடுதல்போலக் கடல்வண்ண னென்ப தையும் வெறுமனே சொல்லிவிடுகிறார்களேயன்றி இஃது அழகுக் குடலான சிறந்த திருநாமமென்று உள்குழைந்து நிற்பாரில்லையே!, (இவ்வழகிய திருநிறத்துக்கு மேலே சில அலங்காரங்களும் வேணுமோ? ஸ்வயமே அழகிய வடிவன்றோ?) என்பதாக விரித் துக்கொள்க.

அழகன்றே அண்டங்கடத்தல்—எம்பெருமான் ஓங்கி உலகளந்த வரலாற்றைப் பேசுமவர்கள் 'ஓஓ! வெகு ஸாமர்த்தியமாக அளந் தான் ; வருத்தம் சிறிதுமின்றி அநாயாஸமாகக் காரியஞ் செய் தான்' என்று இந்த சக்தி விசேஷத்தைச் சொல்லிப் புகழ்கின்

றனரேயன்றி, 'வல்லார் ஆடினாற்போலே வெகு அழகாகச்செய்த காரியமன்றோ உலகளந்த செயல்' என்று அழகிலே ஈடுபட்டுப் பேசுவாரில்லையே! என்கை.

அங்கை நீரேற்றாற்கு அலர்மேலோன் கால்கழுவக் கங்கைநீர் கான்ற கழல் அழகன்றே=உலகளந்த காலத்தில் ஸத்யலோகத்தளவுஞ் சென்ற திருவடியைப் பிரமன் தன் கைக்கமண்டல தீர்த்தத்தினால் விளக்க, அத்திருவடியினின்று கங்கை பெருகிற்றென்றும் அதனைச் சங்கரன் சடையினில் தாங்கிப் பரிசுத்தி யடைந்தானென்றும் உலகர் சொல்லுகையாலே, 'எம்பெருமானுடைய திருவடியானது பரமபரிசுத்தையான கங்கைக்குப்பிறப்பிடமாகையாலே மிகப் பரிசுத்தமானது' என்று இத்தனை சொல்லுகிறார்களேயல்லது, 'செவ்விய திருவடியினின்று வெண்ணிறமான கங்கைநீர் பெருகப்பெற்ற பரபாக சோபையாகிற அழகிலே ஈடுபட்டுப் பேசுவாரில்லையே! என்கை. எம்பெருமானுடையவை யெல்லாம் மிகவு மழகியவையென்றே அநுஸந்திக்க வேணுமென்பது கருத்து. (சு)

கழல்தொழுதும் வாநெஞ்சே கார்க்கடல்நீர் வேலை *
பொழிலளந்த புள்ளூர்திச் செல்வன் *—எழிலளந்தங்
கெண்ணற் கரியானை எப்பொருட்கும் சேயானை *
நண்ணற் கரியானை நாம். (எ)

நெஞ்சே — ஓமனமே!,
கார் கடல் நீர் — கறுத்த கடலின் நீரோடே கூடின
வேலை — கரையை யுடைத்தான
பொழில் — பூமியை
அளந்த — அளந்து கொண்டவனும்
புள் ஊர்தி — கருடனை வாஹநமாக வுடையவனும்
செல்வன் — ஐச்வரிய முடையவனும்
எழில் அளந்து எண்ணற்கு அரியானை — அழகை எல்லைகண்டு நினைப்பதற்கும் முடியாதவனும்
எப் பொருட்கும் சேயானை — எல்லா வஸ்துக்களுக்கும் நெடுந்தூரத்தி லிருப்பவனும்
நண்ணற்கு அரியானை — (யார்க்கும் தம் முயற்சியாலே) கிட்டமுடியாதவனாயிருப்பவனுமான எம்பெருமானுடைய
கழல் — திருவடிகளை
நாம் தொழுதும் — நாம் வணங்குவோம்;
வா — நீயும் உடன் படுவாயாக.

* * *—கீழ்ப்பாட்டில் எம்பெருமானுடைய அழகிலே தோற்ற ஆழ்வார் தம் திருவுள்ளத்தை நோக்கி 'அவன் திருவடிகளிலே நாம் அடிமைசெய்து வாழும்படி அநுகூலிக்கப் பாராய்' என்கிறார்.

கடல் சூழ்ந்த உலகங்களையெல்லாம் அளந்தவனும், தனது பெருமேன்மைக் குறிப்பாகப் பெரிய திருவடியை வாஹநமாகக் கொண்டிருப்பவனும், உபய விபூதி நாயகத்வமாகிற ஐச்வரியம் மிக்கவனும், தன்னழகை இவ்வளவென்று பரிச்சேதித்து நெஞ்சால் நினைத்துப் பார்க்கவும் முடியாதபடி அழகு விஞ்சியிருப்பவனும், எந்த வஸ்துவோடும் ஒப்பிட்டுச் சொல்ல வொண்ணாதபடி எல்லா வஸ்துக்களுக்கும் அப்பாற்பட்ட வைலக்ஷண்யத்தையுடையவனும், எப்படிப்பட்டவர்க்கும் ஸ்வயத்நத்தால் கிட்டுகைக்கு அருமையா யிருப்பவனுமான பரமபுருஷனுடைய திருவடிகளைத் தொழுவோம், வா நெஞ்சமே! என்றாராயிற்று.

"எழிலளந்தும் எண்ணற்கரியானை" என்றும் "எழிலளந்தங்கு எண்ணற்கரியானை" என்றும் பாடபேதங்கள். (அங்கு—அசைச்சொல்.) ... ... .... (எ)

நாமம் பலசொல்லி நாராயணா வென்று *
நாமங்கையாற் றொழுதும் நன்னெஞ்சே!—வா * மருவி
மண்ணுலக முண்டுமிழ்ந்த வண்டறையுந் தண்டுழாய் *
கண்ணனையே காண்கநங் கண். (அ)

| | | | |
|---|---|---|---|
| நல் நெஞ்சே | நல்ல மனமே!, | உண்டு உமிழ்ந்த | ஒருகால் உள்ளே அடக்கிவைத்துப் பிறகு வெளிப் படுத்தினவனும் |
| நாராயணா என்று பல நாமம் சொல்லி | நாராயணன் முதலாகவுள்ள பல திருநாமங்களைச் சொல்லி | வண்டு அறையும் தண் துழாய் | வண்டுகள் படிந்து ஒலிசெய்யப் பெற்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடையவனுமான |
| அம் கையால் | அழகியகையினாலே | கண்ணனையே | கண்ணபிரானையே |
| நாம் தொழுதும் | நாம் தொழுவோம்; | நம் கண் | நமது கண்கள் |
| மருவி வா | இதற்கு நீயும் உடன்பட்டுவா; | காண்க | கண்டு களித்திடுக. |
| மண் உலகம் | பூமி முதலிய லோகங்களை | | |

* * *—இந்திரியங்களெல்லாவற்றாலும் எம்பெருமானை அநுபவிக்கவேணு மென்கிறார். நாராயணாதி ஸஹஸ்ரநாமங்களைச் சொல்லுவதிலே வாய் ஊன்றியிருக்கவேணும்; கைகள் அஞ்சலி பண்ணுவதிலே அவகாஹித்திருக்கவேணும்; கண்கள் அப்பெருமானையே ஸேவித்துக் கொண்டிருக்கவேணும். மனத்தின் துணையின்றி ஒரு இந்திரியமும் ஒரு காரியமும் செய்யமாட்டாதாகையாலே இவையித்தனைக்கும் நெஞ்சு உடன்பட்டிருக்கவேணும் என்றதாயிற்று.

"வண்டறையுந் தண்டுழாய்க்கண்ணனை" என்றதனால்—தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையில் மதுவைப்பருகி ரீங்காரம் செய்கின்ற வண்டுகளின் ஒலியே செவிக்கு விஷயமாகவேணுமென்பதும் அந்தத் திருத்துழாயின் பரிமளமே மூக்குக்கு விஷயமாகவேணு மென்பதும் தொனிக்குமென்றுணர்க. "ஜிஹ்வே கீர்த்தய கேசவம் முராரிம்" என்ற முகுந்தமாலை ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தகும். ... ... .. (அ)

கண்ணுங் கமலங் கமலமே கைத்தலமும் *
மண்ணளந்த பாதமும் மற்றவையே—* எண்ணிற்
கருமா முகில்வண்ணன் கார்க்கடல்நீர் வண்ணன் *
திருமாமணி வண்ணன் தேசு. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கரு மா முகில் வண்ணன் | கரிய பெரிய மேகம் போன்ற வடிவை யுடையவனும் | கண்ணும் | திருக்கண்களும் |
| கார் கடல் நீர் வண்ணன் | கரியகடல் நீரின் நிறம்போன்ற நிற முடையவனும் | கமலம் | தாமரைப் பூப் போன்றவை; |
| திரு மா மணி வண்ணன் | அழகிய நீலமணி போன்ற நிற முடையவனு மான எம்பெருமானுடைய | கைத் தலமும் | திருக்கைத்தலங் களும் |
| தேசு | அழகை | கமலமே | அத்தாமரைப் பூப் போன்றவையே; |
| எண்ணில் | ஆராய்ந்து நோக்கு மளவில், | மண் அளந்த பாதமும் | உலகளந்த திருவடி களும் |
| | | அவையே | அத்தாமரைப் பூப் போன்றவையே. |

* * *—கீழ்ப்பாட்டில் "கண்ணனையே காண்க நங்கண்" என்று விரும்பிய ஆழ்வாருடைய கண்ணுக்கு எம்பெருமான் ஸேவைஸாதிக்க, ஸேவித்து அவனுடைய வடிவழகைப் பேசியநுபவிக்கிறாரிதில். கார்காலத்து மேகம்போலவும் கருங்கடல்நீர்போலவும் நீலமணிபோலவும் விளங்குகின்ற நிறமுடையனான எம்பெருமானுக்குத் திருக்கண்கள் திருக்கைத்தலம் திருவடி எல்லாம் தாமரையே என்னலாம்படியிருக்கின்றன வென்கிறார்.

"கண்ணும் கைத்தலமும் மண்ணளந்த பாதமும் கமலமே" என்று ஏகவாக்கியமாகச் சொல்லியிருக்கலாமே; அங்ஙனன்றி "கண்ணுங்கமலம் கமலமே கைத்தலமும், மண்ணளந்த பாதமும் மற்றவையே" என்று மூன்றுவாக்கியமாகச் சொல்லுவானேன்? மூன்று அவயவங்களுக்கும் தாமரையொன்றே உபமாநமாகச் சொல்லப்படுகையாலே ஓரேவாக்கியமாக அமைந்தால் நன்றாயிருக்குமே என்று சிலர் நினைப்பர்; ஆநந்தமாக அநுபவம் செல்லுமளவில் சொல்லிலக்கணம் சிக்ஷிக்கப்புகுமவர்கள் அரஸிகர்களாவர்: வடமொழியில் ஒரு ச்லோகமுண்டு;—"𑌰𑌸𑍋𑌲𑍍𑌲𑌾𑌸𑍇𑌨 𑌵𑍇𑌲𑌾𑌯𑌾𑌂 𑌶𑌬𑍍𑌦𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌶𑌾𑌰𑌦𑌾𑌃। 𑌨𑍀𑌵𑍀𑌵𑌿𑌸𑍍𑌰𑌂𑌸𑌨𑌵𑍇𑌲𑌾𑌯𑌾𑌂 𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌿𑌵𑌿𑌚𑌾𑌰𑌕𑌾𑌃" [அதாவது—அநுபவபரீவாஹமாக ஆநந்தம் தலைமண்டைகொண்டு பேசும்போது பொருளின்பத்தில் ஆழ்ந்து அகங்குழைய வேண்டியிருக்க, அதில் கரையாதே சொல்லைப் பிடித்துக்கொண்டு மன்றுமவர்கள்—சிருங்கார கேளி ஸமயத்தில் 'இந்தப் புடவை என்னவிலை? எவ்வூரில் நெய்வித்தது? என்ன எடையிருக்கும்?' என்று உப்புப்புளிப்பில்லாத விசாரங்கள் பண்ணுவாரைப்போலே அரஸிகர்களாவர் என்றபடி.]

"தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண்டாருமஃதே" என்றாற்போலே ஒவ்வொரு அவயவத்திலும் வேறொன்றறியாதே மருண்டு நிற்குமவர்களுடைய பாசுரங்களை நாமோ சிக்ஷிப்போம்? திருக்கண்ணழகிலே ஈடுபட்டுக் 'கண்ணுங் கமலம்' என்றுபேசி நெடும்போது கழித்தபின் திருக்கையழகிலே கண்வைத்துக் 'கமலமே கைத்தலமும்' என்றார். அதற்குப்பிறகு நெடும்போது கழித்துத்

திருவடியழகிலே தோற்று 'மண்ணளந்த பாதமும் மற்றவையே' என்றார். ஒருபோதும் அழகு குன்றாமலிருக்கிற எம்பெருமானுடைய திவ்யாவயவத்திற்கு ஒருநொடிப்பொழுதில் அழகு மாறும்படியான தாமரையை ஒப்புச்சொல்லத்தகுமோ? தகாது தகாது; ஆனாலும் ஒப்பற்ற அவயவத்திற்கு அத்தாமரையல்லது வேறொன்றும் ஒப்பாக வாய்திறக்கவும் போராமையாலே இந்த அஸ்வாரஸ்யந் தோற்ற "பாதமும் மற்றவையே" என்றார். "கைவண்ணந்தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தம் அடியுமஃதே" என்ற திருநெடுந்தாண்டகமும் காண்க. "ஜ்யாயா: ஶ்ரவிஷ்ரொவநம் வக்ஷ்வாணிதஶம்" என்றருளினர் ஸுந்தரபாஹு ஸ்தவத்திலும் ஆழ்வான்.

திருமாமணி வண்ணனுடைய தேசு—தேஜஸ்ஸானது, எண் இல்—எண்ணமுடியாதது,—இப்படிப்பட்டதென்று சிந்திக்கவும் முடியாதது என்று பொருள் கூறுதலுமாம். 'தேஜஸ்' என்னும் வடசொல் தேசு எனத்திரிந்தது. ... ... (கூ)

தேசுந் திறலுந் திருவு முருவமும் *
மாசில் குடிப்பிறப்பும் மற்றவையும்—பேசில் *
வலம்புரிந்த வான்சங்கங் கொண்டான் பேரோத *
நலம்புரிந்து சென்றடையும் நன்கு. (ய)

| | | | |
|---|---|---|---|
| வலம் புரிந்த வான் சங்கம் கொண்டான் | வலது பக்கத்தில் சுழித்திருக்கிற சிறந்த சங்கை ஏந்தியுள்ள பெருமானுடைய | திறலும் | பராக்ரமமும் |
| | | திருவும் | செல்வமும் |
| | | உருவமும் | அழகிய ரூபமும் |
| பேர் ஓத | திருநாமங்களை அப்யஸிக்க வேணுமென்று | மாசு இல் குடி பிறப்பும் | குற்றமற்ற நற்குலமும் |
| | | மற்றவையும் | மற்றுமுள்ள நன்மைகளும் |
| பேசில் | சொன்னமாத்திரத்தில் | நலம் புரிந்து நன்குசென்று அடையும் | தாமே ஆசைப் பட்டு நன்றாக வந்து சேரும். |
| தேசும் | தேஜஸ்ஸும் | | |

* * *—எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற அழகை எல்லாரும் பேசி விடலாகுமோ? பலவகை நன்மைகளைப் பெற்ற

மஹான்களே யன்றோ அவ்வழகைப் பேசவுரியார் என்று சிலர் நினைக்க, அப்பெருமானுடைய திருநாமத்தை ஸங்கீர்த்தநம் பண்ண நினைத்த மாத்திரத்திலே எல்லாவகை நன்மைகளும் தன்னடையே மேல்விழுந்து வந்து சேருங்கிடீர் என்கிறார்.

கண்டவர்களெல்லாரும் நன்கு மதிக்கும்படியான தேஜஸ்ஸும், எதிரிகளை வாய்மாளப் பண்ணவல்லமிடுக்கும், கண்டார் நெஞ்சையுங் கண்ணையும் கவரும்படியான வடிவழகும், குற்றமற்ற நற்குடிப்பிறப்பும், மற்றும் நன்மையாகச் சொல்லப்படுமவைகளும் தானேவந்து சேரும்; யாரிடத்திலென்னில்; சங்குதங்கு தடங் கையனான எம்பெருமானுடைய திருநாமங்களைக் கற்கவேணுமென்பாரிடத்து.

இழிகுலத்திற் பிறந்திருந்தாலும் பகவத் பக்திவைபவத்தாலே அவ்விழிகுலம் நீங்கித் தொழுகுலம் உண்டாகுமென்பது இரண்டாமடியில் விளங்கும். "பண்டைக் குலத்தைத் தவிர்ந்து" என்றார் பெரியாழ்வாரும். ... ... ... ... (௧௦)

நன்கோதும் நால்வேதத் துள்ளான் * நறவிரியும்
பொங்கோ தருவிப் புனல்வண்ணன்—* சங்கோதப்
பாற்கடலான் பாம்பணையின் மேலான் * பயின்றுரைப்பார்
நூற்கடலான் நுண்ணறிவி னான். (௧௧)

நன்கு ஓதும் நால்வேதத்து உள்ளான் — நன்றாக ஓதப்படுகிற நான்கு வேதங்களாலும் பிரதிபாதிக்கப்படுபவனும்

நறவு இரியும் — தேன் தோற்கும்படியான போக்யதையை யுடையதாய்

பொங்கு ஓதம் அருவி புனல் — கடல் போலவும் அருவிநீர்போலவுமுள்ளதான

வண்ணன் — திருமேனியை யுடையவனும்

சங்கு ஓதம் பால் கடலான் — சங்குகளோடே கூடின அலைகளையுடைத்தான திருப்பாற்கடலில் கண் வளர்ந்தருள்பவனும்

பாம்பு அணையின் மேலான் — சேஷ சயனத்தின் மேல் துயில்பவனும்

| | | | |
|---|---|---|---|
| பயின்று உரைப்பார் நூல் கடலான் | ஓதியுணர்த்துகின்ற வைதிகர்களின் கடல்போன்ற சாஸ்த்ரங்களால் பிரதிபாதிக்கப் படுபவனுமான எம்பெருமான் | நுண் அறிவினன் | (தம் முயற்சியாலே அறிவார்க்கு) அறிய முடியா தவன். |

* * *—எம்பெருமானுடைய திருநாம ஸங்கீர்த்தநம் பண்ணினால் எல்லாவகை நன்மைகளும் வந்துகூடு மென்றார் கீழ்ப்பாட்டில்; எம்பெருமானுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களை உள்ளபடியே உணருகையாகிற நன்மையும் உண்டாகுமோ என்று கேள்விபிறக்க, எம்பெருமானுடைய ஸ்வரூப ஸ்வபாவங்களை உணர்வது மாத்திரம் அருமையான தென்கிறார் இதில்.

நால் வேதங்களாலே பிரதிபாதிக்கப் பட்டவனாய், 'தேன் தோற்றது' என்னும்படியான போக்யதையையுடைய விலக்ஷண திவ்யமங்கள விக்ரஹமுடையனாய், திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான்மேல் திருக்கண் வளர்ந்தருளுமவனாய், மநு முதலிய மஹர்ஷிகளினால் வேதங்களுக்கு உபப்ரும்ஹண [வியாக்கியான] மாக இயற்றப்பட்ட ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களினால் பிரதிபாதிக்கப்பட்டவனான எம்பெருமான், நுண்ணறிவினன் = நுட்பமான அறிவையுடையவன், அதாவது—அவனை அறிவது மிகவும் நுட்பமானது—அஸாத்யமானது என்றபடி.

"நுண்ணறிவினன்" என்பதற்கு—ஸூக்ஷ்மமான ஜ்ஞாநத்தாலே அறியக்கூடியவன், (நம் போன்றவர்களுடைய ஸ்தூலமான ஜ்ஞாநத்தாலே அறியக்கூடாதவன்) என்றும் பொருள் கொள்ளலாம். இரண்டாமடியில், ஓதம் + அருவி, 'ஓதமருவி' என்றாக வேண்டுவது 'ஓதருவி' என்றானது தொகுத்தல். ... (கக)

அறிவென்னுந் தாள்கொளுவி ஐம்புலனுந் தம்மில் *
செறிவென்னுந் திண்கதவஞ் செம்மி—* மறையென்றும்
நன்கோதி நன்குணர்வார் காண்பரே * நாடோறும்
பைங்கோத வண்ணன் படி. (கஉ)

| | |
|---|---|
| மறை | வேதத்தை |
| என்றும் | இடைவிடாது |
| நன்கு ஓதி | நன்றாக அத்யயநம் பண்ணி |
| அறிவு என்னும் | ஜ்ஞாநமாகிற |
| தாள் கொளுவி | தாழ்ப்பாளையிட்டு |
| ஐம்புலனும் | பஞ்சேந்திரியங்களையும் |
| தம்மில் செறிவு என்னும் | (வெளிச்செல்லாமல்) உள்ளே அடக்கிவைப்பதாகிற |
| திண் கதவம் செம்மி | திடமான கதவையடைத்து |
| நன்கு உணர்வார் | நன்றாக தியானிக்குமவர்கள் |
| பைங்கோதம் வண்ணன் படி | அழகிய கடலின் நிறம்போன்ற நிறமுடையனான எம்பெருமானது தன்மைகளை |
| நாள் தோறும் | தினந்தோறும் |
| காண்பர் | ஸாக்ஷாத்கரிப்பர்கள். |

* * *—எம்பெருமான் ஒருவராலும் அறியக்கூடாதவன் என்றால், 'ஆகாசத்தாமரை, மலடிபிள்ளை முதலானவைபோல் பரப்ரஹ்மமும் அடியோடு இல்லாத வஸ்து' என்றதாய்விடுமே என்று சிலர் சங்கிக்க, அப்படி அடியோடு அறியக்கூடாதவனல்லன் எம்பெருமான்; நாம் சொல்லுகிற வழியாலே அறிவார்க்கு அறியலாம் என்கிறாரிதில்.

வேதங்களை ஓதியுணர்ந்து அவற்றின் பொருள்களையும் நன்குணர்ந்து, வெளிவிஷயங்களில் இந்திரியங்களைப் போகவொட்டாமல் தடுத்து அவனைக் காணப்புகுந்தால் காணலாம்.

நல்ல ஞானம் பெற்றவர்களுடைய இந்திரியங்கள் பட்டிமேயமாட்டாவாகையால் அறிவைத் தாழ்ப்பாளாக உருவகப்படுத்தினர். பசுமை+ஓதம்=பைங்கோதம். நன்னூலில் பண்புப் பகுதியின் விகாரங்களை யுணர்த்துகின்ற "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திரத்தில் "இனமிகல் இனையவும் பண்பிற்கியல்பே" என்றது நோக்குக. வேறுவழிகளு முண்டு. 'பை இங்கு ஓதம்'+பைங்கோதம். 'இங்கு' என்றது—தங்குகின்ற என்றபடி. பசுமை தங்கிய ஓதமென்கை. சந்தியில் இகரம் கெட்டது. .... (கஉ)

படிவட்டத் தாமரை பண்டுலகம் நீரேற்று *
அடிவட்டத் தாலளப்ப நீண்ட—முடிவட்டம் *
ஆகாய மூடறுத்து அண்டம்போய் நீண்டதே *
மாகாயமாய் நின்ற மாற்கு. (கங)

| | |
|---|---|
| பண்டு | முன்னொரு காலத்தில், |
| உலகம் நீர் ஏற்று | பூமி தானம் வாங்கிக்கொண்டு |
| தாமரை படிவட்டம் | தாமரை மலர்ந்தாற் போலே வட்ட வடிவமாயிருக்கிற பூமியை |
| அடி வட்டத்தால் அளப்ப | திருவடியினால் அளப்பதற்காக |
| மா காயம் ஆய் நின்ற மாற்கு | பெரிய திருமேனியாய் [த்ரிவிக்ரமனாய்] வளர்ந்துநின்ற எம்பெருமானுடைய |
| நீண்ட முடி வட்டம் | நீண்ட திருவபிஷேகமானது, |
| ஆகாயம் ஊடு அறுத்து | மேலுலகங்களின் வழியாகச் சென்று |
| அண்டம் போய் நீண்டதே | அண்ட கடாஹத்தளவாக வளர்ந்ததே! இஃது என்ன ஆச்சரியம்!. |

* * *—"நன்கோதி நன்குணர்வார்—நாடோறும் பைங்கோத வண்ணன்படி காண்பர்" என்றாரே கீழ்ப்பாட்டில். எம்பெருமான்படியை இன்னவிதமாகக் காண்பரென்பதைக் காட்ட வேண்டி இப்பாசுரமருளிச்செய்கிறார். இறந்த காலங்களில் நடந்த எம்பெருமானுடைய சரிதங்களெல்லாம் இன்று கண்ணெதிரே தோற்றுவதாக ஸாக்ஷாத்கரிப்பர்கள் என்று காட்டுகிறாரிப்பாட்டால்.

மாவலிபக்கல் மூவடிமண் நீரேற்றுப்பெற்று எம்பெருமான் பெரிய திருவுருவாகி உலகங்களை அளக்கும்போது அவனது திருமுடியானது மேலுலகங்களையெல்லாம் அதிக்ரமித்துச் சென்று அண்டங்களுக்கப்பால் விளங்கிற்று என்கிறார். இவ்விதமாகக் காண்பர்கள் என்றவாறு.

வட்டம்—மண்டலம்; படிவட்டம்=பூமண்டலம். எம்பெருமானுடைய ஸுகுமாரமான திருவடிபட்ட விடமென்று பூமியைத் தாமரையாக உபசரித்துச் சொல்லுகிறார். இப்பூமண்டலம் பெரிய தாமரைப்பூ மலர்ந்தாற்போலே வட்டவடிவாயிருப்பதுபற்றியுமாம். திருவடியும் பூமண்டலத்துக்குச் சமமாகப் பரவி நின்றமையால் "அடி வட்டம்" எனப்பட்டது.

ஈற்றடியில், காயம்—வடசொல்; சரீரமென்று பொருள். (கங)

மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு *
நூற்பால் மனம்வைக்க நொய்விதாம் *— நாற்பால
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும் *
பாதத்தான் பாதம் பணிந்து.

(கச)

| | |
|---|---|
| நாற்பால வேதத்தான் | நான்கு வகைப்பட்ட வேதங்களாலே பிரதிபாதிக்கப் படுபவனும் |
| வேங்கடத்தான் | திருமலையிலே நிற்கும் ஸௌலப்ய முடையவனும் |
| விண்ணோர் முடி தோயும் பாதத்தான் | நித்யஸூரிகளின் கிரீடம் உறையும் படியான திருவடிகளை யுடையவனுமான எம்பெருமானுடைய |
| பாதம் | திருவடிகளை |
| பணிந்து | ஆச்ரயித்து |
| மால் பால் | அந்த ஸர்வேச்வரனிடத்திலே |
| மனம் சுழிப்ப | நெஞ்சு பொருந்த, (அதனாலே) |
| மங்கையர் தோள் கைவிட்டு | ஸ்த்ரீகளின் தோளோடே அணையவேணுமென்கிற காமத்தைக் கைவிட்டு |
| நூல் பால் | (வேதம் முதலிய) சாஸ்திரங்களிலே |
| மனம் வைக்க | மனம் செலுத்துவதற்கு |
| நொய்விது ஆம் | எளிதாகும். |

* * *— கீழ் "அறிவென்னுந்தாள் கொளுவி" என்கிறபாட்டில்— இந்திரியங்களைப் பட்டிமேய வொண்ணாதபடி அடக்கி நின்று சாஸ்த்ரங்களை அப்யஸித்தால் எம்பெருமான் படிகளைக் காணலாமென்றார். இது எளிதில் கைகூடாத காரியமாயிற்றே! என்று சிலர் நினைக்கக்கூடுமே; அவர்களுக்குச் சொல்லுகிறார். நான்கு வேதங்களாலும் பிரதிபாதிக்கப்படுகிற எம்பெருமான் திருவேங்கடமலையிலே வந்துநின்று தேவர்கள் வணங்க நிற்கிற நிலையிலே ஆச்ரயித்து அப்பெருமானிடத்திலேயே நெஞ்சை ஊன்றவைத்தால், சிற்றின்பங்களிலே விருப்பம் ஒழிந்து, எம்பெருமான்படிகளை யுணர்த்துகின்ற சாஸ்த்ரங்களிலே நெஞ்சைச் செலுத்துவதற்கு அநுகூலமாகும் என்கிறார்.

"மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு" என்றவிதில் சிலர் சொல்லுவதொன்றுண்டு; அதாவது சிற்றின்பங்களில் பற்று அற்றாலன்றி பகவத்விஷயத்திலே ஊற்றம் பிறவாது ; பகவத்

விஷயத்திலே ஊற்றம் பிறந்தாலன்றிச் சிற்றின்பங்களில் பற்று அறாது என்று அந்யோந்யாச்ரய தோஷம் சொல்லலாம்படி யிருக்கையாலே 'மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு' என்று எங்ஙனே சொல்லலாம்? என்று:

இதற்குப் பெரியோர் பணிப்பதாவது—நாம் சிற்றின்பங்களை விரும்பி வேசி முதலானவர்களைக் காண்பதையே முக்கிய நோக்கமாகக்கொண்டு பலகாலும் பகவத்ஸந்நிதிகளுக்குச் செல்லுகிறோம்; அப்போது யாத்ருச்சிகமாக எம்பெருமான் திருமேனியிலும் கண் செலுத்த நேருகின்றது; இப்படி பலகால் நேர்ந்தால், ஒருகால் ஸுக்ருத விசேஷத்தினால் அப்பெருமானிடத்திலேயே நம்மனம் லயித்து 'என்னமுதினைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்னும்படியாக ஆகி, சிற்றின்பங்களில் ஜிஹாஸை பிறந்துவிடுகின்றது; ஆகவே 'மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு' என்றது பொருந்தும்; அந்யோந்யாச்ரயதோஷமில்லை. சிற்றின்பங்களில் பற்று அற்றால்தான் பகவத்விஷயத்தில் மனம் சுழிக்குமென்று நியதிகூறவேண்டா—என்பர்.

மாற்பால்=பால்—ஏழனுருபு: மாலிடத்திலே என்கை. 'நூற்பால்' என்றவிடத்தும் இங்ஙனமே. நோய்விது—ஸுலபம். (கச)

பணிந்துயர்ந்த பௌவப் படுதிரைகள் மோத *
பணிந்தபண மணிகளாலே—அணிந்தங்
கனந்தனணைக் கிடக்குமம்மான் * அடியேன்
மனந்தனணைக் கிடக்கும் வந்து. (கரு)

| | | | |
|---|---|---|---|
| பணிந்து உயர்ந்த | தாழ்ந்தும் எறியும் வீசுகின்றவையான | பணிந்த | (அத்திவலைகள் திருமேனியில் படாதபடி குடைபிடித்தாற்போலே) கவிந்திருக்கிற |
| பௌவம் படு திரைகள் | கடலிலுண்டான அலைகளானவை | பணம் | படங்களிலுண்டான |
| மோத | நாலு பக்கமும் அடிக்க, | மணிகளாலே | மாணிக்கங்களினாலே |
| | | அணிந்த | அலங்கரிக்கப் பட்டிருக்கிற |

| | | | |
|---|---|---|---|
| அனந்தன் | திருவனந்தாழ்வானாகிற | அங்கு | அங்கு நின்றும் |
| அணை | திருப்பள்ளி மெத்தையிலே | வந்து | புறப்பட்டுவந்து |
| கிடக்கும் | திருக்கண் வளர்ந்தருளுகிற | அடியேன்தன் | அடியேனுடைய |
| அம்மான் | ஸர்வேச்வரன் | மனம் அணை | மனமாகிற படுக்கையில் |
| (அந்தப் படுக்கையிற் பொருந்தாதே) | | கிடக்கும் | சயனித்திரா நின்றான். |

* * *—கீழ்ப்பாட்டில் "மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு, நூற்பால் மனம்வைக்க நொய்விதாம்" என்றருளிச் செய்த ஆழ்வாரைநோக்கி 'சாஸ்த்ரங்களில் மனம்வைத்து அவ்வழியால்தான் எம்பெருமான் படிகளை அறியவேணுமென்கிறீரே; நீர் அவ்விதமாகத்தான் அறிந்தீரோ?' என்று சிலர் கேட்க; எம்பெருமானுடைய நிர்ஹேதுகமான விஷயீகாரத்திற்கு இலக்கானவர்கள் சாஸ்த்ரங்களில் ச்ரமப்படவேணுமோ? அவன்தானே ஒருவரை விஷயீகரிக்கத் திருவுள்ளம்பற்றினால் எல்லைகடந்த அன்புகொண்டு அவன் செய்யும் காரியங்களைத் தடுப்பாருண்டோ? திருப்பாற்கடலிலே பரமஸுகமாகக் கண்வளர்ந்தருளுமவன் அதனை விட்டிட்டு என்னெஞ்சிலே வந்து கிடக்கிறானே; இது அவனுடைய நிர்ஹேதுக க்ருபையினால் வந்ததன்றோ? இங்ஙனமே அவன் நிர்ஹேதுகமாக விஷயீகரிக்க விரும்பப் பெறுமவர்களுக்கு யாதொரு சாஸ்த்ர பரிச்ரமமும் வேண்டா; நான் பெற்ற பேறு அவர்களும் பெறுவர்கள்—என்ற கருத்தையடக்கி இப்பாசுரமருளிச் செய்கிறார்.

கடலில் அலை வீசும்போது ஏறியும் தாழ்ந்தும் வீசுவது இயல்பாதலால் 'பணிந்துயர்ந்த' எனப்பட்டது. "அணிந்தங்கு" என்றவிடத்துத் தொகுத்தல் விகாரம். அணிந்த அங்கு என்று பிரிக்க. அநந்தன்—வடசொல். .... .... (கறு)

வந்துதைத்த வெண்டிரைகள் செம்பவள வெண்முத்தம் *
அந்திவிளக்கு மணிவிளக்காம் *—எந்தை
ஒருவல்லித் தாமரையாள் ஒன்றியசீர் மார்பன் *
திருவல்லிக் கேணியான் சென்று. (ககூ)

| | |
|---|---|
| ஒரு அல்லி தாமரையாள் | அழகிய இதழ்களை யுடைய தாமரைப்பூவை இருப்பிடமாக வுடைய பிராட்டி |
| சென்று ஒன்றிய சீர் மார்பன் | வந்து பொருந்திய அழகிய திருமார்பை யுடையவனும் |
| வந்து உதைத்த வெண் திரைகள் செம் பவளம் வெண் முத்தம் | வந்து வீசுகின்ற வெளுத்த அலைகளினுண்டான சிவந்தபவழங்களும் வெளுத்த முத்துக்களும் |
| அந்தி விளக்கும் அணி விளக்கு ஆம் | ஸந்தியாகாலத்தை விளக்குகின்ற மங்களதீபங்களாக ஆகப்பெற்ற |
| திருவல்லிக் கேணியான் | திருவல்லிக்கேணியில் எழுந்தருளி யிருப்பவனுமான பெருமான் |
| எந்தை | எனக்கு ஸ்வாமி. |

* * *—திருப்பாற்கடலில் நின்றும் தம் திருவுள்ளத்துக்கு வரும்போது திருவல்லிக்கேணியில் தங்கி வந்தானென்கிறார் போலும். முதலிரண்டடிகள் திருவல்லிக்கேணிக்கு விசேஷணம். அருகிலுள்ள கடலில் அலைகள் மோதும்போது சிவந்த பவழங்களும் வெளுத்த முத்துக்களும் கொழிக்கப்படுகின்றன; அவை ஸாயம் ஸந்தியா காலத்தில் ஏற்றப்படுகின்ற மங்கள தீபமோ என்னலாம்படி யிருக்கின்றனவாம். சில விளக்குகள் செந்நிறமான ஒளியை யுடையனவாயும் சில விளக்குகள் வெண்ணிறமான வொளியை யுடையனவாயும் இருப்பதுண்டாகையாலே செந்நிறப் பவழங்களும் வெண்ணிற முத்துக்களும் திருவிளக்காகச் சொல்லப்பட்டன. திருவல்லிக்கேணியில் எப்போது பார்த்தாலும் திருவிளக்கேற்றப்பெற்ற மாலைப்பொழுதாகவே காணப்படுமென்று கருத்து. இப்படிப்பட்ட திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கின்ற திருமாமகள் கொழுநன் எனக்கு ஸ்வாமி—என்றாராயிற்று.

'ப்ரவாளம்' என்னும் வடசொல் பவள மெனவும், 'முக்தா' என்னும் வடசொல் முத்து எனவும், 'ஸந்த்யா' என்னும் வடசொல் அந்தி யெனவும் திரிந்தன. .... ... (கசு)

சென்றநாள் செல்லாத செங்கண்மா லெங்கள்மால் *
என்றநா ளேந்நாளும் நாளாகும் *—என்றும்
இறவாத வெந்தை யிணையடிக்கே யாளாய் *
மறவாது வாழ்த்துகவென் வாய். (கஎ)

| | |
|---|---|
| என்றும் இறவாத எந்தை | ஒருநாளுமழிவில்லாதவனான எம்பெருமானுடைய |
| இணை அடிக்கே | உபயபாதங்களுக்கே |
| ஆள் ஆய் | ஆட்பட்டு |
| மறவாது | மறவாமல் |
| என் வாய் வாழ்த்துக | என்வாய் வாழ்த்தவேணும்; (இங்ஙனேயாகில்) |
| சென்ற நாள் | கீழ்க்கழிந்த காலங்களும் |
| செல்லாத | இனிமேல் வரப்போகிற நாள்களும் |
| செங்கண் மால் எங்கள் மால் என்ற நாள் | 'புண்டரீகாக்ஷன் நம்மிடத்து வியாமோஹமுடையனாயிருக்கிறான்' என்று சொல்லப்பெற்ற நிகழ்காலமுமாகிய |
| எந்நாளும் | எல்லாக்காலங்களும் |
| நாள் ஆகும் | நல்லகாலமேயாகும். |

* * *—எம்பெருமானை வாழ்த்தப் பெறுவதொரு நாள் உண்டானால், கீழ்க்கழிந்த காலமும் மேல்வருங்காலமும் எல்லாம் நன்னாளாய் விடுமென்கிறார். இன்று ஒருநாள் எம்பெருமானை வாழ்த்தப்பெற்றால் அந்த ஒருநாள் மாத்திரம் நல்ல நாளாகுமேயன்றி, கீழே பழுதே கழிந்த காலமும் இனிமேல் வரப்போகிற காலமுங்கூட நன்னாளாய் விடுமோ? என்னில்; கேண்மின்; ஒருவன் நெடுங்காலமாக தரித்ராயிருந்து ஒருநாளில் செல்வம் மிக்கவனானால், அவனுக்கு அதற்கு முந்திக் கழிந்த நாட்களில் பலவகைக் கஷ்டங்களுண்டாயிருந்தாலும் அந்தக்கஷ்டகாலம் கழிந்தொழிந்து போயிற்றாகையாலே சென்ற நாட்களின் கெடுதல்கள் தோற்றமாட்டா; வயிறார உண்டபின் பசித்திருந்த முற்காலம் என் செய்யும்? அதுபோல, எம்பெருமானை வாழ்த்தப்பெறும் நாள் உண்டானபின்பு, அவனை வாழ்த்தாமல் பாழே கழிந்த கீழ்நாட்களும் 'கழிந்துபோன நாட்கள்' என்ற காரணத்தினாலேயே நன்னாளாய் விடுமென்க. ஒருவன் ஸந்தோஷமாயிருக்கும்போது 'மேலுள்ள காலமெல்லாம் நாம் இப்படியே ஸந்தோஷமாகவே இருப்போம்' என்று நினைத்திடுவனேயன்றி 'நாளைக்கே நாம் துயரை அநுபவிக்கப்போகிறோம்' என்று நினைக்கமாட்டான்; அதுபோல, ஆழ்வாரும் 'எம்பெருமானை வாழ்த்தப் பெறுவதொருநாள் வாய்த்துவிட்டால் அந்த வாழ்த்து மேலுள்ள காலமெல்லாம் மாறாதே செல்லும்' என்றெண்ணி எதிர்காலமும் நன்னாளாகுமென்கிறார்.

ஒருவனுக்கு நிகழ்காலமொன்று மாத்திரம் நன்றாயிருந்துவிட்டால் அவனுக்கு இறந்த காலமும் எதிர்காலமும் நன்றே என்க.

என்றுமிறவாத வெந்தையிணையடிக்கே ஆளாய் என்வாய் மறவாது வாழ்த்தப்பெற்றால், சென்றநாள் செல்லாதநாள் செங்கண்மா லெங்கண்மாலென்ற அந்நாள் ஆகிய எந்நாளும் நாளாகும் என்றதாயிற்று. .... ... .... (கஎ)

வாய்மொழிந்து வாமனனாய் மாவலிபால் * மூவடிமண்
நீயளந்து கொண்ட நெடுமாலே *—தாவியநின்
எஞ்சா விணையடிக்கே யேழ்பிறப்பு மாளாகி *
அஞ்சா திருக்க வருள்.

(கஅ)

| | | | |
|---|---|---|---|
| வாமனன் ஆய் | வாமநரூபியாகி | தாவிய | ஸர்வவ்யாபியான |
| மாவலி பால் | மஹாபலியினிடத்தில் (சென்று) | நின் இணை அடிக்கே | உனது உபய பாதங்களுக்கே |
| வாய் மொழிந்து | (மதுரமான சில) வாய்மொழிகளைச் சொல்லி | ஏழ் பிறப்பும் | எல்லாப் பிறவிகளிலும் |
| மூ அடி மண் | மூவடிநிலத்தை (இரந்து பெற்று) | ஆள் ஆகி | நான் ஆட்பட்டவனாகி |
| அளந்து கொண்ட | அதை அளந்து கொண்ட | அஞ்சாது இருக்க | பயங்கெட்டிருக்கும் படி |
| நெடு மாலே | ஸர்வேச்வரனே!, | | |
| எஞ்சா | சுருங்குதலின்றி | நீ அருள் | நீ கிருபைபண்ண வேணும். |

* * *—உலகளந்த பெருமானே! உன் திருவடிகளில் எனக்கு நித்யகைங்கர்யத்தைத் தந்தருளி உன்னுடைய அநுபவத்துக்கு இடையூறான ஸம்ஸாரபயத்தையும் மாற்றியருளவேணு மென்கிறார்.

'நம்முடைய உடைமையை நாம் இழக்கலாகாது' என்கிற திருவுள்ளத்தினால் உலகங்களையெல்லாம் அடிப்படுத்திக்கொண்டதுபோல உன்னுடைமையாகிய அடியேனையும் அடிப்படுத்திக் கொள்ளவேணு மென்கைக்காக இங்கு உலகளந்த சரிதையை எடுத்துக் கூறினரென்க. வாமநனுடைய மழலைச்சொற்களிலேயே மாவலி மதிமயங்கினனாதலால் அது தோன்ற 'வாய்மொழிந்து' என்கிறார். இரண்டாமடியிலுள்ள 'நீ' என்பது ஈற்றடியில் அந்வயிக்கக்கடவது. அஞ்சாதிருக்க='நாளைக்கே இந்த பகவத்

கைங்கரியம் மாறிப்போய் ஸம்ஸார தாபத்ரயமே மேலிட்டு விடுமோ?' என்று அஞ்சாதிருக்க. ... .... (கஅ)

அருளா தொழியுமே யாலிலைமேல் * அன்று
தெருளாத பிள்ளையாய்ச் சேர்ந்தான் *—இருளாத
சிந்தையராய்ச் சேவடிக்கே செம்மலர்தூய்க் கைதொழுது *
முந்தையராய் நிற்பார்க்கு முன். (க௯)

| | | | |
|---|---|---|---|
| இருளாத சிந்தையர் ஆய் | அஜ்ஞானவிருள் சேராத நெஞ்சையுடையராய்க் கொண்டு | முன் அன்று | முன் ஒருகாலத்தில் |
| சே அடிக்கே | திருவடிகளுக்கே | தெருளாத பிள்ளை ஆய் | அறியாத சிறு குழந்தையாய் |
| செம் மலர் தூய் | நல்ல புஷ்பங்களை ஸமர்ப்பித்து | ஆல் இலை மேல் சேர்ந்தான் | ஆலந்தளிரில் சயனித்த பெருமான் |
| கை தொழுது | அஞ்ஜலிபண்ணி | அருளாது ஒழியுமே | கிருபைபண்ணமற் போவனோ? |
| முந்தையர் ஆய் நிற்பார்க்கு | 'நான் முன்னே நான் முன்னே' என்று நிற்கும் பக்தர்களுக்கு,— | | |

* * *—"அஞ்சாதிருக்கவருள்" என்று சொல்லிவிட்டால் தவறாமல் அருள்வனோவென்ன; 'நம் அருளை எதிர்பார்ப்பார் ஆரேனுமுண்டோ?' என்று நோக்கியிருக்கு மெம்பெருமான் அருள்செய்யா தொழியமாட்டான்; அருள்செய்தே தீருவன்; ஆனால் எல்லார்க்கும் அருள்செய்தால் ஸர்வமுக்தி ப்ரஸங்கமுண்டாகி லீலாவிபூதியே அழிந்துபோக நேருமாதலால், இருளாத சிந்தையராய்ச் சேவடிக்கே செம்மலர்தூய்க் கைதொழுது முந்தையராய் நிற்பார் எவரோ, அவர்க்கே அருள்செய்யக் கடமைப்பட்டிருக்கிறானெம்பெருமான் என்கிறார். உலகமெல்லாம் பிரளயத்தில் அழிவதாயிருக்கையில் அவற்றையெல்லாம் வாரியெடுத்து வயிற்றினுள்ளடக்கிச் சிறியதோராலந்தளிரிலே துயின்றவனாதலால் எம்பெருமானுக்கு அடியார்களைக் காத்தருள்வதில் ஸாமர்த்தியமும் உத்ஸாஹமும் குறையற்றதென்று காட்டுதற்காக 'ஆலிலைமேலன்று தெருளாத பிள்ளையாய்ச் சேர்ந்தான்' என்றார்.

இருளாத சிந்தையராய்=ரஜஸ்தமோ குணங்கள் கலசாமல் சுத்தஸாத்விகராய் என்கை. முந்தையர்—பகவத்கைங்கரியத்திற்கு முற்பட்டிருக்குமவர்கள். .... .... .... (கக)

முன்னுலக முண்டுமிழ்ந்தாய்க்கு * அவ்வுலக மீரடியால்
பின்னளந்து கோடல் பெரிதொன்றே *—என்னே
திருமாலே செங்கணெடியானே * எங்கள்
பெருமானே நீயிதனைப் பேசு. (உo)

| | | | |
|---|---|---|---|
| முன் | முன்பொரு காலத்தில் | அளந்து கோடல் | அளந்து கொள்வதானது |
| உலகம் | உலகங்களை யெல்லாம் | பெரிது ஒன்றே | பெரியவொரு காரியமாகுமோ? [அருமையோ?.] |
| உண்டு | திருவயிற்றிலே வைத்திருந்து | திரு மாலே | திருமகள்நாதனே! |
| உமிழ்ந் தாய்க்கு | பிறகு வெளிப்படுத்தின உனக்கு | செம் கண் நெடியானே | சிவந்த திருக் கண்களையுடைய ஸர்வாதிகனே! |
| அவ்வுலகம் | அந்த வுலகங்களை | எங்கள் பெருமானே | எமக்கு ஸ்வாமி யானவனே! |
| பின் | பின்பொரு காலத்தில் | நீ இதனை பேசு | நீ இதை (எனக்குத் தெரிய)ச் சொல்லவேணும்; |
| ஈர் அடியால் | இரண்டு திருவடிகளாலே | என்னே | இஃது என்னே?. |

* * *—கீழ்ப் பதினெட்டாம் பாட்டில் உலகளந்த சரிதமும் பத்தொன்பதாம் பாட்டில் உலகமுண்ட சரிதமும் அநுஸந்திக்கப்பட்டன வாதலால் இவ்விரண்டு சரிதங்களையும் சேர்த்தநுபவித்து, வேடிக்கையாக ஒரு கேள்வி கேட்கிறார் எம்பெருமானையே நோக்கி. அதாவது—மிகச்சிறிய வடிவுகொண்டு ஏழுலகங்களையும் உண்டும் உமிழ்ந்தும் போந்த நீ அவ்வுலகங்களை மிகப் பெரிய இரண்டு திருவடிகளினால் அளந்துகொண்டாயென்றால் இது ஒரு வியப்போ? இதை அரிய பெரிய காரியமாக எல்லாரும் சொல்லிக்கொள்ளுகிறார்களே, இஃது என்னே? என்கிறார். .... (உo)

பேசுவார் எவ்வளவு பேசுவர் * அவ்வளவே
வாசமலர்த் துழாய் மாலையான் *—தேசுடைய
சக்கரத்தான் சங்கினான் சார்ங்கத்தான் * பொங்கரவ
வக்கரனைக் கொன்றான் வடிவு. (உக)

| | |
|---|---|
| வாசம் மலர் துழாய் மாலையான் | மணம்மிக்க புஷ்பங்களோடு கூடின திருத் துழாய் மாலையை அணிந்தவனும் |
| தேசு உடைய சக்கரத்தான் | தேஜஸ்ஸையுடைய திருவாழியை ஏந்தினவனும் |
| சங்கினான் | ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யுடையவனும் |
| சார்ங்கத்தான் | சார்ங்கவில்லை யுடையவனும் |
| பொங்கு அரவம் வக்கரனை கொன்றான் | மிக்க ஆரவாரமுடையனாய் வந்த தந்தவக்த்ரனைக் கொன்றொழித்தவனுமான எம் பெருமானுடைய |
| வடிவு | ஸ்வரூப ஸ்வபாவங்கள் |
| (எப்படிப்பட்டவை யென்னில்) | |
| பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே | பேசுகின்ற அவரவர்கள் எவ்வெவ்வளவு பேசுகின்றார்களோ அவ்வவ்வளவே யாம். |

* * *—'எம்பெருமானுடைய பெருமைகளைப் பேசுவதற்கு மாஞானிகளால்தான் ஆகும், மற்ற அற்பஞானிகளால் ஆகாது' என்பதில்லை; வாய் திறந்து நான்கு சொற்களைத் தொடுத்துப் பேச வல்லவர்கள் எவராயிருந்தாலும் எம்பெருமான் பெருமையைப் பேசலாம். ஆனால், நிரம்பிய ஞானமுடையார் பேசினாலன்றோ அவன்பெருமை உள்ளவளவும் பேசினதாக ஆகும்; அற்பஞானிகள் பேசினால் ஒரு திவலையளவும் பேசினதாக ஆகமாட்டாதே என்னில்; அப்படியில்லை: ஆயிரம்வாய்படைத்த ஒன்றான திருவனந்தாழ்வான்தானே பேசினாலும் எம்பெருமான் பெருமை முழுதும் பேசினதாக ஆகப்போகிறதில்லை யார்பேசினாலும் அவனுடைய பெருமைக்கடலிலே ஒரு திவலைமாத்திரமே பேசினதாக ஆகும். ஆகவே பேச வாய்படைத்தவர்களெல்லாரும் பேசலாம். எம்பெருமானுடைய வைபவம் எப்படிப்பட்டதென்றால், ஒருவன் சுருக்கமாகப் பத்துவார்த்தை சொன்னாலும் அதற்குள்ளே அவன் பெருமை அடங்கி விட்டது என்னும் படியாயிருக்கும்; மற்றொரு

வன் ஒரு மஹாபாரதமாகப் பன்னியுரைத்தாலும் அதற்குள்ளும் அவன் பெருமை அடங்கிவிட்டது என்னும்படியாகவேயிருக்கும்—என்று இக்கருத்தையடக்கி இப்பாசுரமருளிச்செய்கிறார்.

பேசுவார் எவ்வளவு பேசுவர்—(இது கேள்வியன்று;) பேசுகிறவர்கள் மிக்க சுருக்கமாகவோ மிக்க விரிவாகவோ நடுத்தரமாகவோ எந்த அளவில் எம்பெருமான் வடிவைப் பேசுகிறார்களோ, [அவ்வளவே...வடிவு.] அது அவ்வளவாகவேயிருக்கும். எல்லைகண்டு பேசுதல் யார்க்கும் முடியாதென்கை. திருவரங்கத்தமுதனார் எம்பெருமானைப்பற்றிச் சொல்லும்போது "பெரியவர் பேசிலும் பேதையர் பேசிலும் தன் குணங்கட்கு உரிய சொல் என்று முடையவன்" என்று பணித்த பாசுரம் இக்கருத்ததே.

போங்கரவவக்கரனைக் கோன்றான்=வக்கரன்—தந்தவக்ரன். (தந்தவக்ரன் என்பது முண்டு) கண்ணபிரான் ருக்மிணிப்பிராட்டியை ஸ்வீகரித்தருளினபோது எதிர்த்து வந்து போர்செய்த அரசர்களில் இவனொருவன்; சிசுபாலனுக்குப் பரிந்து வந்தவன்.

வடிவார் முடிகோட்டி வானவர்கள் * நாளும்
கடியார் மலர்தூவிக் காணும்—படியானை *
செம்மையா லுள்ளுருகிச் செவ்வனே நெஞ்சமே *
மெய்ம்மையே காண விரும்பு. (௨௨)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | ஓ மனமே!, | காணும் படியானை | ஸேவிக்கப்பெற்ற திருமேனியையுடையனான எம்பெருமானை |
| வானவர்கள் | நித்யஸூரிகள் | செம்மையால் | முறைப்படியே |
| வடிவு ஆர் | அழகு பொருந்திய | உள் உருகி | உருக்கங்கொண்டு |
| முடி | கிரீடங்களை | செவ்வனே | ருஜுவான வழியாலே |
| கோட்டி | தாழ்த்தி | மெய்ம்மையே | உள்ளபடியே |
| கடி ஆர் மலர் | மணம் பொருந்திய புஷ்பங்களை | காண | ஸேவிப்பதற்கு |
| நாளும் | நாள்தோறும் | விரும்பு | ஆசைப்படு. |
| தூவி | ஸமர்ப்பித்து | | |

* * *—நித்யஸூரிகள் தங்களுடைய அழகிய முடிகளை வணக்கி நறுமலர்களைப் பணிமாறி ஸேவிக்கும்படியாகவுள்ள பெரு

மானை நெஞ்சமே! காணவிரும்பு என்கிறார். அவனைக்காண விரும்பினால் கண்டுவிட முடியுமோ? என்னில், அதற்காக விசேஷித்து அருளிச்செய்கிறார் 'செம்மையால் செவ்வனே மெய்ம்மையே காண விரும்பு' என்கிறார். அதாவது—நம்முடைய முயற்சியால் நாமே காணவிரும்பினால் அவ்விருப்பம் பழுதாய்விடும்; அங்ஙனன்றியே 'பிரானே! உன் வடிவை நீயேகாட்டித் தந்தருளவேணும்' என்று அத்தலையாலே வருங்காட்சியை வேண்டினால் பழுதுபடாமே காணப்பெறலாமிறே. இப்படி அவனே காட்டக்காண்கையே செம்மையால் செவ்வனே காண்கையாம். .... .... (உஉ)

விரும்பிவிண் மண்ணளந்த அஞ்சிறைய வண்டார் *
சுரும்பு துளையில் சென்றூத *—அரும்பும்
புனந்துழாய் மாலையான் பொன்னங் கழற்கே *
மனந்துழாய் மாலாய் வரும். (உ௩)

| | | | |
|---|---|---|---|
| வண் தார் | அழகிய மாலையிலே | விரும்பி விண் மண் அளந்த பொன் அம் கழற்கே | ஆசைப்பட்டு விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையுமளந்த மிகவழகிய திருவடிகள் விஷயத்திலேயே |
| அம் சிறைய சுரும்பு | அழகிய சிறகுகளையுடைய வண்டுகள் | மனம் | எனது மனமானது |
| துளையில் சென்று ஊத | ரஸநாடியிலே படிந்து ஊத (அதனால்) | துழாய் | அவகாஹித்து |
| அரும்பும் | அரும்புகள் உண்டாகப்பெற்ற | மால் ஆய் வரும் | மயங்கிக் கிடக்கின்றது. |
| புனம் துழாய் மாலையான் | நல்ல திருத்துழாய் மாலையை அணிந்தவனான எம்பெருமானுடைய | | |

* * *—எம்பெருமானுடைய திருவடிகளிலேயே தம்முடைய திருவுள்ளம் வியாமோஹங் கொண்டிருக்கும்படியை அருளிச்செய்கிறார். அப்பெருமான் எப்படிப்பட்டவன்? அஞ்சிறைய சுரும்பு வண்தார் துளையில் சென்று ஊத அரும்பும் புனந்துழாய்மாலையான்= அவன், திருவடிதிருமார்பு திருத்தோள் திருமுடி முதலானவிடங்களில் திருத்துழாய்மாலைகள் அணிந்துகொண்டிருக்கிறான்; அவற்றில் வண்டுகள் படிந்து ரஸநாடிகளைக் கண்டுபிடித்து அங்கு ஊது

கின்றன; அதனால் அந்த மாலைகள் அரும்புகின்றனவாம்; திருத்துழாய் தன்னிலத்தில் இருந்தால் எப்படி அரும்புமோ அப்படி தனது திருமேனியிலும் அரும்பப்பெற்றவன் எம்பெருமான் என்று திருமேனிவளம் சொல்லிற்றாயிற்று.

முதலடியின் முடிவிலுள்ள வண்டார் என்பதை 'வண்தார்' என்று பிரிக்க 'வண்டு ஆர்' என்றும் பிரிப்பர்; அப்போது, வண்டு ஆர்—பெண்வண்டுகளோடு கூடின, சுரும்பு—ஆண்வண்டுகள் என்று பொருள்கொள்க

ஈற்றடியில், துழாய்—துழாவி என்றபடி. 1. "கடலும் மலையும் விசும்புந் துழாய்" என்ற திருவாய்மொழிப் பிரயோகமுங் காண்க. .... ... ... (உ௩)

வருங்காலிருநிலனும் மால்விசும்பும் காற்றும் *
நெருங்குதீ நீருருவுமானான் *—பொருந்தும் *
சுடராழி யொன்றுடையான் சூழ்கழலே * நாளும்
தொடராழி நெஞ்சே தொழுது. (உ௪)

ஆழி நெஞ்சே — கம்பீரமான மனமே!
இரு நிலனும் — விசாலமான பூமியும்
மால் விசும்பும் — அளவிறந்த ஆகாசமும்
காற்றும் — வாயுவும்
நெருங்கு தீ — செறிந்த தேஜஸ்ஸும்
நீர் உருவும் ஆனான் — ஜலதத்துவமும் ஆகிய பஞ்சபூதங்களுக்கும் அந்தர்யாமியானவனும்
பொருந்தும் சுடர் ஆழி ஒன்று உடையான் — பொருந்திய ஒரு சுடர்ச்சக்கரத்தையுடையவனுமான எம்பெருமானுடைய
சூழ் கழலே — அடியாரை அகப்படுத்திக் கொள்ளுகிற திருவடிகளையே
வருங்கால் நாளும் — மேலுள்ள காலமெல்லாம்
தொழுது — வணங்கி
தொடர் — (அவனையே) பின்பற்றியிரு.

* * *—எம்பெருமான் திருவடிகளிலேயே என் மனம் வியாமோஹங் கொண்டிருக்கின்ற தென்றார் கீழ்ப்பாட்டில்; இதில், 'நெஞ்சே! உனக்கு அந்த வியாமோஹம் நித்தியமாய்ச் செல்ல

1. திருவாய்மொழி 2—1—4.

வேணும்' என்று நெஞ்சை விளித்துக் கூறுகின்றார். முன்னடி களில் ஜகத்காரணமான பஞ்சபூதங்களைச் சொல்லியிருப்பது லீலா விபூதியைச் சொன்னபடி: லீலாவிபூதி நிர்வாஹகன் என்கை. மூன்றாமடியில் சுடராழியைச் சொல்லியிருப்பது மற்றுமுள்ள நித்யஸூரிகளுக்கெல்லாம் உபலக்ஷணமாய் நித்திய விபூதி நிர்வாஹகன் என்றபடி. ஆக, உபய விபூதிநாதனான எம்பெருமானுடைய திருவடிகளையே நெஞ்சமே! நாடோறும் தொழுது தொடர் என்றாராயிற்று.

சூழ் கழல்—சூழ்த்துக்கொள்ளும் கழல்; அதாவது—அடியார்களை அகப்படுத்திக்கொள்ளும் திருவடி என்கை. ... (உச)

தொழுதால் பழுதுண்டே? தூநீருலகம் *
முழுதுண்டு மொய்குழலா ளாய்ச்சி *—விழுதுண்ட
வாயானை மால்விடையேழ் செற்றானை * வானவர்க்கும்
சேயானை நெஞ்சே சிறந்து (உரு)

| | |
|---|---|
| தூ நீர் உலகம் | நிர்மலமான நீரையுடைய கடலோடு கூடின உலகங்களை |
| முழுது | முழுவதும் |
| உண்டு | திருவயிற்றிலே வைத்தவனையும், |
| மொய் குழலாள் ஆய்ச்சி | அழகிய கூந்தலையுடையளான யசோதையினுடைய |
| விழுது | வெண்ணெயை |
| உண்ட வாயானை | அமுதுசெய்த வாயையுடையவனையும் |
| மால் விடை ஏழ் செற்றானை | கொழுத்த ரிஷபங்களேழையும் முடித்தவனையும் |
| வானவர்க்கும் சேயானை | பிரமன் முதலிய தேவர்களுக்கும் எட்டாதவனையுமுள்ள எம்பெருமானை |
| நெஞ்சே | நெஞ்சமே!, |
| சிறந்து | சிறப்புற |
| தொழுதால் | வணங்கினால் |
| பழுது உண்டே | குற்றமேதேனுமுண்டோ?. |

* * *—கீழ்ப்பாட்டில் "சூழ்கழலே நாளுந்தொடர் ஆழி நெஞ்சே! தொழுது" என்றார்; அதற்கு நெஞ்சு இசையாதிருப்பதுபோல் தோன்றிற்று; 'நெஞ்சே! நான் உனக்குச் சொன்னதில் ஏதேனும் தப்பு உண்டோ? எம்பெருமானைத் தொழும்படி

தானே நான் உனக்குச்சொன்னேன்; தொழுதால் தீமையுண்டாகுமோ? சொல்லாய்' என்கிறார்.

கடல்சூழ்ந்த வுலகங்களையெல்லாம் பிரளயகாலத்தில் அமுது செய்ததற்கு மாற்றுமருந்தாகத் திருவாய்ப்பாடியில் வெண்ணெயமுதுசெய்தவனும், அவ்வெண்ணெய்ப்போல் மழமழவென்ற திருமேனியைக்கொண்டு முரட்டு எருதுகளோடே பொருது வெற்றி பெற்றவனும் தேவர்கட்கும் எட்டாதவனுமான எம்பெருமானைத் தொழுதால் குற்றமுண்டோ? (தொழுதால் அது வீணாகுமோ என்றுமாம்.) .... ... ... (உரு)

சிறந்தவென் சிந்தையும் செங்க ணரவும் *
நிறைந்தசீர் நீள்கச்சி யுள்ளும் *—உறைந்ததுவும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே *
தாங்கடவார் தண்டுழா யார். (உசு)

| | | | |
|---|---|---|---|
| தண் துழாயார் தாம் | குளிர்ந்த திருத்துழாய் மாலையை அணிந்துள்ள எம்பெருமான் | செம் கண் அரவும் | சிவந்த கண்களையுடைய திருவனந்தாழ்வானும் |
| கடவார் | ஒருநாளும் விட்டு நீங்காதவனாய்க் கொண்டு | நிறைந்த சீர் | நிறைந்த செல்வத்தையுடைய |
| உறைந்ததுவும் | நித்யவாஸம் பண்ணுமிடங்கள் (எவையென்றால்) | நீள் | பெரிய |
| சிறந்த என் சிந்தையும் | சிறந்ததான என்னுடைய நெஞ்சமும் | கச்சியுள்ளும் | கச்சித்திருப்பதியும் |
| | | வேங்கடமும் | திருமலையும் |
| | | வெஃகாவும் | திருவெஃகாவும் |
| | | வேளுக்கைப் பாடியுமே | திருவேளுக்கைத் திருப்பதியுமாம். |

* * *—தண்டுழாய்மாலை யணிந்துள்ள எம்பெருமான் என் சிந்தையோடு திருவனந்தாழ்வானோடு கச்சிப்பதியோடு திருவேங்கடமலையோடு திருவெஃகாவோடு திருவேளுக்கையோடு வாசியற இவ்விடங்களில் திருவுள்ளமுவந்து வாழ்கிறானென்கிறார். எம்பெருமான் விரும்பி மேல்விழுவதற்கு உறுப்பான தம் சிந்தைக்கு, 'சிறந்த' என்று அடைமொழி கொடுத்தது பொருந்தும்.

இப்பாசுரத்திற்கு இரண்டு மூன்று வகையாக யோஜனைகள் அருளிச்செய்வதுண்டு; பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்திற் காண்க.

வெஃகா—யதோக்தகாரி ஸந்நிதி. வேளுக்கை—'காமாஸிகா' என்ற திருநாமத்தால் வழங்கப்படுகிற ஆளழகிய சிங்கப்பெருமாள் ஸந்நிதி. இவ்விரண்டு தலங்களும் கச்சிப்பதியிலுள்ளன. 'வேளுக்கைப்பாடி' என்றதை இரண்டாகப்பிரித்து, வேளுக்கையும் திருவாய்ப்பாடியும் என்று பொருள் கொள்ளவுமாம். (உசு)

ஆரே துயருழந்தார் துன்புற்றா ராண்டையார் *
காரேமலிந்த கருங்கடலை *—நேரே
கடைந்தானைக் காரணனை * நீரணைமேல் பள்ளி
அடைந்தானை நாளு மடைந்து. (உஎ)

| | | | |
|---|---|---|---|
| கார் மலிந்த கரு கடலை | மேகங்கள் நிறைந்த பெரிய கடலை | நாளும் அடைந்து | நாடோறும் பணிந்து (இருக்குமவர்கள்) |
| நேரே கடைந்தானை | தானே முன்னின்று கடைந்தவனும் | துயர் உழந்தார் | துக்கங்களுக்கு மூலமான பாபங்களைப் பண்ணினவர்களாயிருந்தாலும் |
| காரணனை | ஸகல ஜகத்காரண பூதனும் | துன்பு உற்றார் ஆர் | துக்கங்களை அநுபவித்தவர்கள் யார்? (ஒருவருமில்லை;) |
| நீர் அணை மேல் பள்ளி அடைந்தானை | திருப்பாற்கடலில் (ஆதிசேஷனாகிற) சயனத்தின்மேல் பள்ளிகொண்டிருப்பவனுமான எம்பெருமானை | (அப்படிப்பட்டவர்கள்) ஆண்டையார் | எங்கிருக்கிறார்கள்? (எங்குமில்லை.) |

* * *—எம்பெருமானை ஆச்ரயிக்கப்பெற்றவர்களில் ஆரேனும் துன்பப்படுவாருண்டோ? ஒருவருமில்லை என்கிறார்.

துயருழந்தார் துன்புற்றார் ஆரே?—துயர் என்று துக்கத்துக்குப் பேராயினும் இங்கு இலக்கணையால் துக்க ஹேதுவான பாபத்தைச் சொல்லுகிறது. எத்தனை கொடிய பாவங்கள் செய்தவர்களாயிருந்தாலும் அப்பாவங்களின் பலனான துன்பங்களை பகவத் பக்தர்கள் அனுபவிக்க மாட்டார்களென்கை. "மாயனை....வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்க, போயபிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்" என்றது காண்க,

ஆண்டையார்—எவ்விடத்திலுள்ளார்?. எவ்விடத்திலுமில்லை யென்றபடி.

காரேமலிந்த கருங்கடலை நேரே கடைந்தானை = சிலர் மேலெழுந்தவாரியாக வந்து அடிபணிந்தாலும் அவர்களுக்காகத் தன்னுடம்பு நோவக் காரியம் செய்யுமவனன்றே எம்பெருமான்; அப்படிப்பட்டவனை யடைந்து துக்கப்படுவாருண்டோ?

காரணனை = தாயையும் தமப்பனையும் அடைந்து துக்கப் படுவாருண்டோ?

நீரணைமேல் பள்ளியடைந்தானை = ஆர்த்தியோடே வந்து சேர்ந்து நம்மைக் கூவுவாருண்டோவென்று கடலில் துயிலும் பெருமானையடைந்து துக்கப்படுவாருண்டோ? ... (உஎ)

அடைந்த தரவணைமேல் ஐவர்க்காய் * அன்று
மிடைந்தது பாரத வெம்போர் *—உடைந்ததுவும்
ஆய்ச்சிபால் மத்துக்கே அம்மனே! வாளெயிற்று *
பேய்ச்சிபா லுண்ட பிரான் (உஅ)

| | |
|---|---|
| வாள் எயிறு | வாள்போன்ற பற்களையுடைய ளான |
| பேய்ச்சி | பூதனையினுடைய |
| பால் | முலைப்பாலை |
| உண்ட | உண்டு அவளை முடித்தவனான |
| பிரான் | ஸ்வாமியானவன் |
| அடைந்தது | பள்ளிகொண்டது |
| அரவு அணை மேல் | சேஷசயனத்தின் மேலாம்; |
| அன்று | முன்னொரு காலத்தில் |
| ஐவர்க்கு ஆய் | பஞ்சபாண்டவர்களுக்காக |
| மிடைந்தது | நெருங்க நடத்தினது |
| வெம் பாரதம் போர் | கடுமையான பாரத யுத்தமாம்; |
| உடைந்ததுவும் | அஞ்சி நின்றதும் |
| ஆய்ச்சிபால் | இடைச்சியான யசோதைப் பிராட்டியினிடத் துண்டான |
| மத்துக்கே | மத்துக்காகவாம்; |
| அம்மனே | அந்தோ!. |

* * *—எம்பெருமானுடைய சில சரித்திரங்களை போக்ய மாகப் பேசியநுபவிக்கிறூர். கிருஷ்ணாவதாரத்துக்கு முன்னே "ஏஷ நாராயணஃ ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதநஃ" என்கிறபடியே திருப்பாற்கடலில் திருவனந்தாழ்வான் மீது திருக்கண் வளர்ந்

திருந்தான்; பிறகு ஸ்ரீக்ருஷ்ணனாகத் திருவவதரித்துப் பஞ்ச பாண்டவர்கட்குப் பக்ஷபாதியாயிருந்து பாரதப்போர் நடத்தி வைத்தான்; இவ்வளவு அபாரசக்தி வாய்ந்தவனா யிருக்கவும், 1. "உழந்தாள் நறுநெய்யொரோ தடாவுண்ண, இழந்தாளெரிவினாலீர்த்து எழில்மத்தின், பழந் தாம்பாலோச்சப் பயத்தால் தவழ்ந்தான்" என்கிறபடியே யசோதைப்பிராட்டி மத்துகொண்டு அடிப்பதாகக் கைதூக்க, அசக்தரைப்போலே நடுநடுங்கிக் கிடந்தான்; அப்படி அசக்தியை அபிநயிக்கும் பருவத்துக்கு முன்னமே முலையுண்கிற வியாஜத்தாலே பூதனை யென்னும் பேய்ச்சியின் உயிரை உறிஞ்சி முடித்தான். இங்ஙனே சக்தியையும் அசக்தியையும் மாறிமாறி வெளியிடுவது எத்திறம்! என்று உள் குழைந்தவாறு.

"ஆய்ச்சிபால்" என்றவிடத்து, பால்—ஏழனுருபு. அம்மனே—ஆச்சரியக் குறிப்பிடைச் சொல். ... ... (உஅ)

பேய்ச்சிபா லுண்ட பெருமானைப் பேர்ந்தெடுத்து *
ஆய்ச்சிமுலை கொடுத்தாள் அஞ்சாதே *—வாய்த்த
இருளார் திருமேனி யின்பவளச் செவ்வாய் *
தெருளா மொழியானைச் சேர்ந்து (உகூ)

| | |
|---|---|
| பேய்ச்சி | பூதனையினுடைய |
| பால் | முலைப்பாலை |
| உண்ட | அமுதுசெய்த |
| பெருமானை | ஸ்வாமியானவனும் |
| வாய்த்த இருள் ஆர் திரு மேனி | அமைந்த இருள்போன்ற திருமேனியையுடையவனும் |
| இன் பவளம் செம் வாய் | அழகிய பவழம் போற்சிவந்த அதரத்தையுடையவனும் |
| தெருளா மொழியானை | உருத்தெரியாத மழலைச் சொற்களைச் சொல்லும் சிறு குழந்தையுமான கண்ணபிரானை |
| சேர்ந்து | கிட்டி |
| ஆய்ச்சி | யசோதையானவள் |
| பேர்ந்து எடுத்து | வாரியெடுத்தணைத்துக்கொண்டு |
| அஞ்சாதே | சிறிதும் பயப்படாமல் |
| முலை கொடுத்தாள் | தன் முலையை உண்ணக் கொடுத்தாள். |

1. பெரியாழ்வார் திருமொழி 1—2—4.

* * *—கீழ்ப்பாட்டில் யசோதைப் பிராட்டியின் ப்ரஸ்தாவம் வந்ததனால் அவளுக்குக் கண்ணபிரானிடத்திருந்த பரிவின் மிகுதியைப் பேசுகிறார்இதில். யசோதைப்பிராட்டி சற்றுப்போது கண்ணுறங்கிப் போன ஸமயத்திலன்றோ பூதனை வஞ்சிக்க வந்து முலை கொடுத்து மாண்டு பிணமாய் விழுந்தது. உடனே கண் விழித்து நோக்கின யசோதையானவள் அப்பூதனை பெரியவுடம் போடே பயங்கரமான பிணமாய் நிலத்தில் விழுந்திருப்பதைக்கண்டு 'இஃது என்ன பேயோ பிசாசோ!' என்று அஞ்சிக் காதவழி ஓடவேண்டியிருக்க சிறிதும் அஞ்சாமல் கண்ணபிரா னருகிற் சென்று அவனை வாரி எடுத்தணைத்து முலை கொடுத்தாளே! இஃது என்ன பரிவு! என்று ஈடுபடுகிறார்.

அஞ்சாதே=ஒருத்தி முலைகொடுத்துப் பிணமாய் விழுந்து இன்னும் பத்துநிமிஷ மாகவில்லையே; இந்த நிலைமையில் நாம் முலை கொடுக்கத் துணியலாமோ என்று அஞ்ச வேண்டுவது ப்ராப்தமாயிருந்தும் பரிவின் கனத்தாலே அஞ்சிற்றிலள் என்க. "நின்னுருகிப் பேய்த்தாய் முலைதந்தாள் பேர்ந்திலளால், பேரமர்க்கண் ஆய்த்தாய் முலைதந்தவாறு" என்ற பொய்கையார் பாசுரமும் இங்கு அநுஸந்திக்கத் தகும்.

யசோதைப் பிராட்டி ஏன் அஞ்சவில்லை யென்றால், பிரானுடைய வடிவழகிலே யீடுபட்டதனால் உடனே அணுகி வாரி எடுத்தணைக்க விருப்ப முண்டாயிற்றேயன்றி அஞ்சி அப்பால் செல்ல மனமுண்டாக வில்லையென்று காட்டுகிறார் மூன்றாமடியால்.

தேருளா மொழியானை=யசோதை முலைகொடுக்க வந்தபோது 'ஆச்சி ஆச்சி' என்றாற்போலே சில மழலைச் சொற்களைச் சொன்னான் போலும் .... ... .... (உக)

சேர்ந்த திருமால் கடல்குடந்தை வேங்கடம் *
நேர்ந்த வென்சிந்தை நிறைவிசும்பும் *—வாய்ந்த
மறைபாடகமனந்தன் வண்டுழாய்க் கண்ணி *
இறைபாடி யாய விவை (௩௦)

| | | | |
|---|---|---|---|
| கடல் | திருப்பாற் கடலென்ன | குடந்தை | திருக்குடந்தை யென்ன |

| | |
|---|---|
| வேங்கடம் | திருமலையென்ன |
| நேர்ந்த என் சிந்தை | நேர்பட்ட எனது ஹ்ருதயமென்ன |
| நிறை விசும்பும் | பரம்பின பரமபதமென்ன |
| வாய்ந்த மறை | அமைந்த வேதமென்ன |
| பாடகம் | திருப்பாடகமென்ன |
| அனந்தன் | ஆதிசேஷனென்ன |
| ஆய இவை | ஆகிய இவையெல்லாம் |
| வண் துழாய் கண்ணி | அழகிய திருத்துழாய் மாலையை அணிந்துள்ள |
| திருமால் சேர்ந்த | எம்பெருமான் நித்யவாஸம் பண்ணப்பெற்ற |
| இறைபாடி | ராஜதானிகளாம். |

* * *—கீழ்ப்பாசுரங்களில் அநுபவித்த திருக்குணங்களெல்லாம் குன்றத்திலிட்ட விளக்குப்போலே விளங்கப்பெற்ற சில இடங்களை எடுத்துப் பேசியநுபவிக்கிறார்.

திருக்குடந்தை திருவேங்கடம் முதலான திருப்பதிகளோடே கூடத் தம்முடைய சிந்தையும் சேர்த்துக் கணக்கிடுகையாலே, எம்பெருமானுக்கு இவர் தம் சிந்தையோடு மற்ற திருப்பதிகளோடு ஒரு வாசியில்லை என்றாராயிற்று. "வாய்ந்தமறை" என்று வேதங்களையும் உடன் கூறினது—திருப்பதிகளில் ஸேவை ஸாதிப்பது போலத் தமக்கு வேதங்களிலும் ஸாக்ஷாத்தாக ஸேவைஸாதிக்கும் படியைத் தெரிவித்தவாறாம்.

இறைபாடி—ராஜதானி. ... ... .... (ருo)

இவையவன் கோயில் இரணியன தாகம் *
அவைசெய் தரியுருவ மானான் *—செவிதேரியா
நாகத்தான் நால்வேதத் துள்ளான் * நறவேற்றான்
பாகத்தான் பாற்கட லுளான். (ருக)

| | |
|---|---|
| இரணியனது | ஹிரண்யாஸுரனுடைய |
| ஆகம் | மார்பை |
| அவைசெய்து | இருபிளவாக்க |
| அரி உருவம் ஆனான் | நரசிங்கமாகத் தோன்றினவனும் |
| செவி தெரியா நாகத்தான் | கண்ணையே செவியாகவுடையதாகையாலே தனிப்பட செவி தெரியாமலிருக்கிற ஆதிசேஷனைப் படுக்கையாகவுடையவனும் |

| | | | |
|---|---|---|---|
| நால் வேதத்து உள்ளான் | நான்கு வேதங்களுக்கும் பொருளா யிருப்பவனும் | பாற்கட லுளான் | திருப்பாற்கடலில் பள்ளி கொள்பவனுமான |
| நறவு ஏற்றான் பாகத்தான் | தேன்போன்ற கங்கையை ஏற்றுக் கொண்டவனான ருத்ரனைத் திருமேனியின் ஒரு பாகத்திலே உடையவனும் | அவன் | அப் பெருமானுடைய |
| | | கோயில் இவை | கோயில் கீழ்ப்பாட்டில் சொன்ன திருப்பதிகளாம். |

* * *—கீழ்ப்பாட்டில் அநுஸந்தித்த திவ்யஸ்தலங்கள் ஆழ்வார் திருவுள்ளத்தைவிட்டுப் பேராமல் அநுவர்த்திக்கவே, பின்னையும் 'இவையவன் கோயில்' என்கிறார். "கடல்குடந்தை வேங்கடம் என் சிந்தை நிறைவிசும்பு வாய்ந்தமறை பாடகம் அனந்தன்" என்று கீழ்ப்பாட்டிற் சொன்னவற்றையே இங்கு 'இவை' என்று சுட்டிக்காட்டினர்.

நரசிங்கவுருக்கொண்டு ஹிரண்யாஸுரனுடைய மார்பைப் பிளந்தவனும் சேஷசயனத்தில் திருக்கண் வளர்ந்தருள்பவனும் நான்கு வேதங்களாலும் பிரதிபாதிக்கப்படுபவனும், அஹங்காரியான ருத்ரனுக்கும் திருமேனியிலே இடங்கொடுத்து ஆதரிப்பவனும் திருப்பாற்கடலி லுள்ளவனுமான எம்பெருமானுக்குக் கீழ்ப்பாட்டிற் சொன்ன தலங்கள் உகந்து வாழுமிடமாயிருக்கின்றன— என்றதாயிற்று.

அவை செய்தல்-இருபிளவாகச்செய்தல். செய்து-எச்சத்திரிபு; செய்ய என்க. அன்றியே, உருபு பிரித்துக்கூட்டி, 'அரியுருவமாய் இரணியனதாகம் அவைசெய்தான்' என்றும் யோஜிக்கலாம். செவிதெரியா நாகத்தான்=பாம்புக்கு வடமொழியில் 'சக்ஷுச்ச்ரவஸ்' என்றும், தென்மொழியில் 'கட்செவி' என்றும் பெயர் வழங்கும் கண்ணைக்கொண்டே காண்பதும் கேட்பதும் செய்தல் பாம்புஜாதியின் இயல்வாம்; ஆகவே செவிகள் தனிப்படத்தெரியா. இங்கு இந்த விசேஷணம் திருவனந்தாழ்வானுக்கு ஏதுக்கு இட்டதென்னில்; ஒரு இந்திரியத்தாலே பல இந்திரியங்களின் காரியங்

களை நிர்வஹிப்பதுபோல. "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும் புணையாமணிவிளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற் கரவு." என்கிறபடியே ஒரு திருமேனியைக்கொண்டே பல கைங் கரியங்களும் செய்பவன் திருவனந்தாழ்வான் என்று காட்டுதற் கென்க.

நறவேற்றான்='நறவு' என்று தேனுக்குப் பெயர்; உவமை யாகுபெயரால் கங்கையைச் சொல்லுகிறது. வேதத்தில் "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்று எம்பெருமான் திருவடியில் தேன்வெள்ள மிருப்பதாகச் சொல்லியிருப்பது கங்கையைக் குறித்தே என்று நிர்வஹிப்பது முண்டாகையாலே இங்கு 'நறவு' என்று சொல்லியிருப்பது கங்கையை என்னலாம்: ஏற்றான் என் றது முடிமீது ஏற்றுக்கொண்டவன் என்றபடி. அன்றியே, 'ஏறு' என்று எருதுக்குப் பேராகையாலே ஏற்றான் என்பதற்கு எருதை வாஹனமாகவுடையவன் என்றும் பொருளாகலாம். கங்கையையும் எருதையுமுடையவன் என்க. கங்கையைத் தாங்குமவனும் எரு தால் தாங்கப்படுமவனுமிருப்பவன். இனி, நறவு என்று கள்ளுக் கும் பெயராதலால், கள்ளைக்குடிப்பவனும் எருதின்மேல் ஏறு மவனுமான ருத்ரனையும் திருமேனியில் இடங்கொடுத்து ஆதரிப்ப வன் என்றும் பொருள் கூறுவர். ஹாரம் என்ற வடசொல் பாக மெனத்திரிந்தது. .... ... .... (௩௧)

பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனிவிசும்பும் *
நூற்கடலும் நுண்ணூல தாமரைமேல் *—பாற்பட்
டிருந்தார் மனமும் இடமாகக் கொண்டான் *
குருந்தொசித்த கோபாலகன். (௩௨)

| | | | |
|---|---|---|---|
| குருந்து | குருந்த மரத்தை | பாம்பும் | திருவனந் தாழ்வானையும் |
| ஒசித்த | முறித்தொழித்த | பனி விசும்பும் | (ஸம்ஸார தாபங்கள் தட்டாமல்) குளிர்ந்திருக்கிற பரமபதத்தையும் |
| கோபாலகன் | கண்ணபிரான் | | |
| பால் கடலும் | திருப்பாற் கடலையும் | | |
| வேங்கடமும் | திருமலையையும் | நூல் கடலும் | கடல்போன்ற சாஸ்த்ரங்களையும் |

| | | | |
|---|---|---|---|
| நுண் நூல தாமரை மேல்பால் பட்டிருந்தார் மனமும் | ஸூக்ஷ்மமான சாஸ்த்ரங்களால் ப்ரதிபாதிக்கப் பட்ட ஹ்ருதய கமலத்திலே கரணங்க ளெல்லாம் ஊன்றி யிருக்கும்படி யோகத்தில் நிலைநின்ற யோகி களினுடைய நெஞ்சையும் | இடம் ஆக கொண்டான் | வாஸஸ்தானமாகக் கொண்டிருக் கிறான். |

* * *—இப்பாட்டிலும் எம்பெருமா னிருப்பிடங்களைச் சொல்லுகிறார். திருப்பாற்கடல் திருவேங்கடம் திருவனந்தாழ்வான் ஸ்ரீவைகுண்டம் வேதவேதாங்கங்கள் யோகிகளின் உள்ளக் கமலம் ஆகிய இவற்றை இருப்பிடமாகக் கொண்டவனென்றாராயிற்று.

பனிவிசும்பு=ஸம்ஸாரத்தில் பட்ட தாபங்களையெல்லாம் ஆற்றிக் குளிரப்பண்ணும் பரமபதம் என்கை. நூற்கடல்=கடல்போன்றிருக்கிற ச்ருதிஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் முதலிய சாஸ்த்ரங்கள்.

[நுண்ணூல தாமரையித்யாதி.] "வஹ்கொஶ ஷ்ரதீகாஶம் ஹ்ருதயஞ்சாப்யதோமுகம்" என்று வேதத்திற் சொல்லப்பட்டயாதொரு தாமரையுண்டு—ஹ்ருதயகமலம், அதிலே ஸமஸ்தகரணங்களும் ப்ரவணமாம்படி யோகத்திலே ஊன்றியிருக்கிற பரமயோகிகளுடைய மநஸ்ஸைச் சொன்னபடி. "ஹ்ருத்நாம் யதுவாஷ்டிஉஹாஶம் வஷ்ணிதம் வஷ்ணரீகம்" என்ற வரதராஜஸ்தவ ஸ்ரீஸூக்தி உணர்க. இனி, நுண்ணூலதாமரை யித்யாதிக்கு வேறுவகையாகவும் பொருள்கூறலாம்: நுட்பமான நூலையுடைத்தான யாதொரு தாமரையுண்டு, அதன்மேல் பொருந்தியிருக்கும் பெரியபிராட்டியாருடைய, மனம்—திருமார்பு, அதாவது திருமுலைத்தடம் என்று. பெரியபிராட்டியாருடைய நெஞ்சையே கொள்ளவுமாம். தாமரை நாளத்தில் நுட்பமான நூல் இருப்பது ப்ரஸித்தம். மேற்பால்—மேலிடத்தில், மேலே என்றபடி.

குருந்தோசித்த வரலாறு:—கண்ணனைக் கொல்லுமாறு கம்ச னால் ஏவப்பட்ட அஸுரர்களில் ஒருவன் ஒருநாள் கண்ணபிரா மலர் கொய்தற்பொருட்டு விரும்பியேறும் குருந்தமரமொன்றி பிரவேசித்து அப்பெருமான் வந்து தன்மீது ஏறும்போது தா முறிந்துவீழ்ந்து அவனை வீழ்த்திக் கொல்லக்கருதியபோது மாய னை கண்ணபிரான் அம்மரத்தைக் கைகளாற்பிடித்துத் த வலிமைகொண்டு முறித்து அழித்தனனென்பதாம். (௩௨

பாலகனாய் ஆலிலைமேல் பைய * உலகேல்லாம்
மேலொருநா ளுண்டவனே மெய்ம்மையே *—மாலவனே
மந்தரத்தால் மாநீர்க்கடல் கடைந்து * வானமுதம்
அந்தரத்தார்க் கீந்தாய்நீ யன்று. (௩௩

| | | | |
|---|---|---|---|
| மேல் ஒரு நாள் | முன்னொரு காலத்தில் | மாலவனே | ஸர்வாதிகனே ! |
| பாலகன் ஆய் | சிறு குழந்தை வடிவ முடையனாகி | நீ | இப்படிப்பட்ட நீ, |
| ஆல் இலை மேல் | ஆலந்தளிரிலே | அன்று | அன்றொருநாள் |
| உலகு எல்லாம் | உலகங்களை யெல்லாம் | மந்தரத்தால் | மந்தரமலையைக் கொண்டு |
| பைய | மெல்ல | மா நீர் கடல் கடைந்து | மிக்க நீரையுடைய கடலைக் கடைந்து |
| மெய்ம்மெயே | உண்மையாகவே | வான் அமுதம் | திவ்யமான அமிருதத்தை |
| உண்டவனே | அமுதுசெய்து கிடந்தவனே !, | அந்தரத்தார்க்கு | தேவர்களுக்கு |
| | | ஈந்தாய் | அளித்தாய். |

* * *—அநிஷ்டங்களைத் தவிர்ப்பதும் இஷ்டங்களை அளிப் பதுமாகிய ரக்ஷணத்தைச் செய்யவல்லவன் எம்பெருமானே என் கிறது. இதில் முன்னடிகளால் அநிஷ்டத்தைத் தவிர்த்தமையும் பின்[illegible]களால் இஷ்டங்களை அளித்தமையும் சொல்லிற்று. பிர [illegible] [illegible]லிலே [illegible]ட்டுபோதும். உள்ளபடியே நிவ[illegible] [illegible] [illegible]ள்க. ... ... ... ([illegible])

அன்றிவ்வுலகம் அளந்த வசவே கோல் *
நின்றிருந்து வேளுக்கை நீணகர்வாய் *—அன்று.
கிடந்தானைக் கேடில் சீரானை * முன்கஞ்சைக்
கடந்தானை நெஞ்சமே காண் (௩௪)

நெஞ்சமே — மனமே!,
அன்று — முன்பொரு காலத்தில்
நின்று — நின்றுகொண்டே
இவ்வுலகம் — இவ்வுலகங்களை யெல்லாம்
அளந்த — அளந்தருளினவனும்
அசவே கொல் — கிரமத்திலேயோ
வேளுக்கை — திருவேளுக்கையிலே
இருந்து — வீற்றிருந்து
நீள் நகர் வாய் — (திருவெஃகா வென்கிற) சிறந்த திருப்பதியில்

அன்று — ஒருகாலத்தில்
கிடந்தானை — பள்ளி கொண்டவனும்
கேடு இல் சீரானை — ஒருகாலு மழிவில்லாத திருக்குணங்களை யுடையவனும்
முன் — முன்னொருகால்
கஞ்சை — கம்ஸனை
கடந்தானை — கொன்றொழித்த வனுமான பெருமானை
காண் — ஸேவி.

* * *—திருக்கச்சிமாநகரில் திருவேளுக்கைப்பதியில் இருப்பதும் திருவெஃகாவில் கிடப்பதுமாக எம்பெருமான் ஸேவை ஸாதிப்பது முன்பு உலகளந்த ஆயாஸம் தீருவதற்கோ என்னவோ என்கிறார். "நின்றிருந்து வேளுக்கை நீணகர்வாய்" என்றதில் நின்று என்பதை முதலடியில்கூட்டி உரைக்கப்பட்டது. நீணகர் என்றது திருவெஃகாவை என்று பூருவர்களின் வியாக்கியானம்.

அசவு—கிரமம்; 'அயர்வு' என்பதன் விகாரம்.

"கொடியார்மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்றே நீதுயில்மேவி மகிழ்ந்ததுதான், அடியாரல்லல் தவிர்த்த [illegible] [redacted] வுமாம். தாமல நாளததில் நுட்பமான நூல் இருப்பது ப்ரஸித்தம். மேற்பால்-மேலிடத்தில், மேலே என்றபடி.

காண்காணென விரும்பும் கண்கள் * கதிரிலகு
பூண்டார கலத்தான் பொன்மேனி *—பாண்கட்
டொழில்பாடி வண்டறையும் தொங்கலான் * செம்பொற்
கழல்பாடி யாம்தொழுதும் கை (௫௫)

| | | | |
|---|---|---|---|
| கண்கள் | என்னுடைய கண்களானவை | வண்டு | வண்டுகளானவை |
| கதிர் இலகு | ஒளிவிளங்கா நின்றுள்ள | பாடி | இசைபாடிக்கொண்டு |
| பூண் | திருவாபரணங்களையும் | அறையும் | ஒலிசெய்யப்பெற்ற |
| தார் | மாலையையும் | தொங்கலான் | மாலையை யுடையனான அப் பெருமானுடைய |
| அகலத்தான் | திருமார்விலே உடையனான எம்பெருமானுடைய | தொழில் | சேஷ்டிதங்களை |
| பொன் மேனி | அழகிய திருமேனியை | பாண் கண் பாடி | ராகத்திலே அமைத்துப்பாடி |
| காண் காண் என விரும்பும் | காணவேணுங் காணவேணு மென்று ஆசைப் படாநின்றன; | யாம் | நாம் |
| | | கை | கைகளினாலே |
| | | செம் பொன் கழல் தொழுதும் | சிவந்த பொன்போல் சிறந்த (அவனுடைய) திருவடிகளை வணங்குவோம். |

* * *—உலகத்தாருடைய இந்திரியங்களிற்காட்டில் என்னுடைய இந்திரியங்கள் மிகச்சிறந்தவை யென்கிறார் உலகத்தாருடைய இந்திரியங்கள் விஷயாந்தரங்களை அநுபவிப்பதிற் செல்லுகின்றன; அங்ஙனன்றியே என்னுடைய இந்திரியங்கள் பகவத்விஷயாநுபவத்திலேயே ஊன்றியிருக்கின்றன வென்கிறார். கண்களோ திருவாபரணங்களாலும் திருமாலைகளாலும் அழகுபெற்றுள்ள எம்பெருமானது பொன்மேனியைக் காண்பதற்கே பாரித்திருக்கின்றன. வாய் திரு[illegible] திவ்யசரித்திரங்களைப் பாடுவதிலேயே ஊன்றுபோலும். உள்ளபடியே நிர்வஹிப்பாருள் [redacted] ருள்க. ... ... ... (௫௭)

கைய கனலாழி கார்க்கடல்வாய் வெண்சங்கம் *
வெய்யகதை சார்ங்கம் வெஞ்சுடர்வாள் *—செய்ய
படைபரவை பாழி பனிநீருலகம் *
அடியளந்த மாய ரவர்க்கு. (௫௬)

| | |
|---|---|
| பனி நீர் உலகம் | குளிர்ந்த நீரையுடைய கடல்சூழ்ந்த உலகங்களை |
| அடி | தனது திருவடியினாலே |
| அளந்த | அளந்துகொண்ட |
| மாயர் அவர்க்கு | ஆச்சரியச் செய்கையை யுடையரான அப்பெருமானுக்கு |
| கனல் ஆழி | தீக்ஷ்ணமான சக்கரமும் |

| | |
|---|---|
| கார் கடல் வாய் வெண் சங்கம் | கருங்கடலில் தோன்றின வெளுத்த சங்கும் |
| வெய்ய | வெவ்விதான |
| கதை | கதையும் |
| சார்ங்கம் | சார்ங்கமும் |
| வெம் சுடர் வாள் | வெவ்விய சுடரை யுடைய நந்தக வாளும் ஆகிய |
| செய்ய படை | அழகிய இவ்வாயுதங்கள் |
| கைய | திருக்கையிலுள்ளன; |
| பரவை | கடலானது |
| பாழி | படுக்கையா யிருக்கின்றது. |

* * *—எம்பெருமானை அநுபவிக்கிறார். திருவாழி திருச் சங்கு முதலிய பஞ்சாயுதாழ்வார்கள் திருக்கைகளிலே விளங்கு கின்றனர்; திருப்பாற்கடல் படுக்கையாக அமைந்திருக்கின்றது. இவை ஆர்க்கு? என்றால், பனிநீருலக மடியளந்த மாயரவர்க்கு.

அவற்கடிமை பட்டேன் அகத்தான் புறத்தான் *
உவர்க்குங் கருங்கடல் நீருள்ளான் *—துவர்க்கும்
பவளவாய்ப் பூமகளும் பன்மணிப் பூணாரம் *
திகழுந் திருமார்வன் தான். (௫௭)

உவர்க்கும் கரு [illegible] உப்புக்கரிக்கின்ற [illegible] | துவர்க்கும் [illegible] சிவந்த [illegible] ளம் [illegible] யை கொள்ளவுமாம். [illegible] யை நாளத்தில் நுட்பமான நூல் இருப்பது ப்ரஸித்தம். மேற்பால் மேலிடத்தில், மேலே என்றபடி.

| | | | | |
|---|---|---|---|---|
| பல் மணி பூண் | பலவகையான ரத்னங்க ளழுத்தின திரு வாபரணங்களும் | | அகத்தான் புறத்தான் | உள்ளிலும் வெளியிலும் வாசியறக் கலந் திருக்கின்றான்; |
| ஆரம் | ஹாரங்களும் | | | |
| திகழும் | விளங்கப்பெற்ற | | அவற்கு | அப்படிப்பட்ட பெருமானுக்கு |
| திரு மார்வன் தான் | திருமார்பை யுடையனான எம்பிரான் | | அடிமை பட்டேன் | ஆட்பட்டவ னானேன். |

* * *—இப்பாட்டில் 'அகத்தான் புறத்தான்' என்ற விசேஷணங்கள் நரம்பாயிருக்கும். நான் அவனை அநுபவிக்கப் பாரித்துக்கொண்டிருக்கையில் அவன் என்னை யநுபவிக்க விரும்பி என்னை உள்ளிலும் வெளியிலும் மொய்த்துக்கொண்டிருக்கிறானென்கிறார்.

"இப்படி தாம் அவனை யநுபவிக்கப்புக்கவாறே அவனும் தன்பெருமையைப் பாராமல் தம்பக்கலிலே அத்யபிநிவிஷ்டனாய்க் கொண்டு பலவடிவுகொண்டு தம்மையநுபவியா நின்றானென்கிறார்" என்றும் "நான் அடிமையிலே அந்வயிக்க, ஸௌபரியைப்போலே அவன் அநேகம் வடிவுகொண்டு புஜிக்க ஆசைப்படா நின்றானென்கிறது" என்றுமிறே பூருவர்களின் வியாக்கியான வாக்கியமும்.

திருவாய்மொழியில் (4—7—6.) "நாடோறு மென்னுடைய, ஆக்கையுள்ளுமாவியுள்ளு மல்லபுறத்தினுள்ளும் நீக்கமின்றியெங்கும் நின்றாய்" என்ற பாசுரமும் இங்கு ஸ்மரிக்கத்தகும்.

எம்பெருமான் திருப்பாற்கடலில் துயில் கொள்வதுபோல உப்புக்கடலிலும் வாழ்வதுண்டென்று ப்ரஸித்தியுண்டாதலால் "உவர்க்குங் கருங்கடல் நீருள்ளான்" எனப்பட்டது. இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில், ["உவர்க்குங் கருங்கடல் நீருள்ளான்] திருப்பாற்கடலை வாஸஸ்தாநமாகவுடையனாய்" என்று வாக்கிய முள்ளதாக அச்சுப்பிரதிகளிற் காண்கிறது; "திருப்பாற்கடலோபாதி உப்புக்கடலையும் வாஸஸ்தாநமாகவுடையனாய்" என்றிருக்கவேண்டிய வாக்கியம் அச்சுப்பிழையினால் மாறிவிட்டதுபோலும். உள்ளபடியே நிர்வஹிப்பாருளரேல் நிர்வஹித்தருள்க. ... ... ... (கூஎ)

தானே தனக்குவமன் தன்னுருவே யெவ்வுருவும் *
தானே தவவுருவும் தாரகையும் *—தானே
எரிசுடரும் மால்வரையும் எண்டிசையும் * அண்டத்
திருசுடரு மாய விறை (௫௭)

| | | | |
|---|---|---|---|
| எவ் உருவும் | எல்லாப் பொருள்களும் | எரி சுடரும் | ஜ்வலிக்கின்ற அக்கியும் |
| தன் உருவே | அவன்றனக்கு சரீரமாகவே யிருக்கும்; | மால் வரையும் | பெரிய குலபர்வதங்களும் |
| தவம் உருவும் | தபஸ்ஸு பண்ணிப் புண்யசரீர முடையரா யிருக்கிற பிரமன் முதலான வர்களும் | எண் திசையும் | எட்டு திக்குக்களும் |
| | | அண்டத்து | மேலுலகிலுள்ள |
| | | இரு சுடரும் | சந்த்ரஸூர்யர்களும் |
| | | தானே ஆய இறை | தனக்கு ப்ரகாரமா யிருக்கப்பெற்ற எம்பெருமான் |
| தாரகையும் | நக்ஷத்ரங்களும் | தனக்கு தானே உவமன் | (ஒப்பற்றவனாகையாலே) தனக்குத் தானே உபமானமா யிருப்பவன். |
| தானே | அவன்றன் வடிவாகவே யிருக்கும்; | | |

* * *—எம்பெருமான் பலவடிவுகொண்டு தம்மை அநுபவிக்க விரும்புவதாகக் கீழ்ப்பாட்டில் அருளிச்செய்தார். அவன் ஒரு ஸாமாந்ய புருஷனல்லன், ஒப்புயர்வற்ற புருஷோத்தமன் காண்மின் என்கிறாரிப்பாட்டில். உலகத்திலுள்ள ஸகலபதார்த்தங்களும் அவனுக்கு சரீரபூதங்களாய் எல்லாவற்றுக்கும் அவன் சரீரியாய் இருப்பவனாகையாலே அவனோடு ஒப்புச் சொல்லலாவதொரு பொருள் இல்லை; அவனுக்கு அவன்றானே உவமை என்கிறார். இது, அநந்வயாலங்காரம். "ஐஐ஦ிஹ஦ிவஸ்ரீஜாநு" [சந்திரன் சந்திரனைப்போல் அழகியவன்] "ராமராவணயோர்யுத்தம் ராமராவணயோரிவ" [இராமபிரானுக்கும் இராவணனுக்கும் நடந்த யுத்தத்திற்கு அந்த யுத்தமே உவமை] என்பனகாண்க. (௫௮)

இறையாய் நிலனாகி யெண்டிசையும் தானாய் *
மறையாய் மறைப்பொருளாய் வானாய் *—பிறைவாய்ந்த
வெள்ளத்தருவி விளங்கொலிநீர் வேங்கடத்தான் *
உள்ளத்தி னுள்ளே யுளன். (௫௯)

இறை ஆய் — ஸர்வஸ்வாமியாய்
நிலன் ஆகி — பூமிக்கு அந்தர்யாமியாய்
எண் திசையும் தான் ஆய் — எட்டு திக்குக்களிலுமுண்டான ஸகல வஸ்துக்களையும் தனக்கு ப்ரகாரமாகவுடையனாய்
மறை ஆய் — வேதங்களுக்கு ப்ரவர்த்தகனாய்
மறை பொருள் ஆய் — அந்த வேதங்களின் பொருளாயிருப்பவனாய்
வான் ஆய் — நித்ய விபூதி நிர்வாஹகனாய்
பிறை வாய்ந்த — சந்திரபதத்தைக் கிட்டியிருப்பதும்
வெள்ளம் அருவி — மிக்க ஜலத்தையுடைய அருவிகளினுடைய
விளங்கு ஒலி — விளங்குகின்ற கோஷத்தையுடைத்தான
நீர் — நீரையுடையதுமான
வேங்கடத்தான் — திருவேங்கட மலையில் வாழ்பவனான எம்பெருமான்
உள்ளத்தின் உள்ளே உளன் — என்னெஞ்சினுள்ளே இருக்கின்றான்.

* * *—இப்படி ஜகத்திலுள்ள பொருள்களெல்லாம் தானேயாயிருக்கும் பெருமான் திருமலையிலேவந்து ஸந்நிஹிதனாய்ப் பின்பு என்னுடைய ஹ்ருதயத்தைவிட்டுப் போகிறானில்லை யென்கிறார். இதில் முன்னடிகளிரண்டும் கீழ்ப்பாட்டிற் பொருளின் அநுவாதம்.

பிறைவாய்ந்த = இது வேங்கடத்திற்கு விசேஷணம்: அருவி வெள்ளத்திற்கு விசேஷணமாகவுமாம். சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கும்படியைச் சொன்னவாறு. எங்கணும் பேரொலி செய்துகொண்டு பெருகுகின்ற அருவிகள் நிறைந்ததும் ஓங்கியுயர்ந்ததுமான திருமலையிலுள்ளவனாய்க்கொண்டு அங்கிருந்து என்னுள்ளத்தில் வந்து சேர்ந்தவனாயினனென்கிறார். “மலைமேல் தான் நின்று என்மனத்துளிருந்தானை” என்ற திருவாய்மொழியுங் காண்க. ... ... .... .... (௩௯)

உளன்கண்டாய் நன்னெஞ்சே உத்தமனென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத் துளன்கண்டாய் *
விண்ணெடுங்கக் கோடுயரும் வீங்கருவி வேங்கடத்தான் *
மண்ணொடுங்கத் தானளந்த மன். (௪௦)

நல் நெஞ்சே — எனக்குப் பாங்கான மனமே!,

விண் ஒடுங்க — மேலுலகங்களெல்லாம் ஒரு மூலையில் ஒதுங்கும்படி

கோடு — சிகரங்கள்

உயரும் — உயர்ந்தோங்கி யிருக்கப்பெற்றதும்

வீங்கு அருவி — நிறைந்த அருவிகளை யுடையதுமான

வேங்கடத்தான் — திருமலையில் எழுந்தருளி யிருப்பவனும்

மண் — பூமிப் பரப்பெல்லாம்

ஒடுங்க — (திருவடியின் ஒரு பாகத்திலே) ஒடுங்கிப் போம்படி

தான் அளந்த — தான் அளந்து கொண்டவனுமான

மண் — ஸ்வாமியானவன்

உளன் கண்டாய் — (நம்மை ரக்ஷிப்பதிலே) ஸத்தை பெற்றிருப்பவன் காண்;

உத்தமன் — புருஷோத்தமனான அப்பெருமான்

என்றும் உளன் கண்டாய் — எக்காலத்திலும் (நம்மை ரக்ஷிப்பதிலே தீக்ஷை கொண்டு) இருக்கிறான் காண்;

உள்ளுவார் உள்ளத்து — ஆஸ்திகர்களுடைய மனத்திலே

உளன் கண்டாய் — நித்யவாஸம் பண்ணுமவன் காண்.

* * *—இப்படி ஸர்வாதிகனான எம்பெருமான் நம்மிடத்து வந்து புகுந்த பின்பு, நெஞ்சே! நமக்கு ஒரு குறையுமில்லைகாண் என்கிறார். நம்முடைய ஸத்தையை நோக்குவதற்காகவே தான் ஸத்தை பெற்றிருக்கின்றான்; 'எம்பெருமானுளன்' என்று நாம் இசைந்தாலும் இசையாவிட்டாலும் எப்போதும் நம்முடைய ரக்ஷணத்திலே முயன்று உளனாயிருக்கின்றான்; தன்னைச் சிந்திப்பவர்கள் நெஞ்சிலே படுகாடு கிடக்கின்றான்; இதற்குறுப்பாகத் திருவேங்கடமலையிலே வந்து தங்குமவன்; இக்குணங்களையெல்லாம் த்ரிவிக்ரமாவதாரத்தில் விளங்கக் காட்டினவன். .... (௪௦)

மன்னு மணிமுடிநீண்டு அண்டம்போ யெண்டிசையும் *
துன்னுபொழி லனைத்தும் சூழ்கழலே *—மின்னை
உடையாகக் கொண்டு அன்றுலகளந்தான் * குன்றம்
குடையாக ஆகாத்த கோ. (௪௧)

குன்றம் குடை ஆக — கோவர்த்தன மலையைக் குடையாகக் கொண்டு

ஆ காத்த கோ — பசுக்களைக் காப்பாற்றின ஸ்வாமியானவன்,

| | |
|---|---|
| அன்று | முன்பொரு காலத்தில், |
| மன்னு மணி முடி | பொருந்தின ரத்னங்களையுடைய கிரீடம்! |
| நீண்டு | ஓங்கி வளர்ந்து |
| அண்டம் போய் | அண்ட பித்தியைச் சென்றுகிட்ட, |
| எண் திசையும் | எட்டு திக்குக்களையும் |
| துன்னு பொழில் அனைத்தும் | (பிராணிகள்) நெருங்கிக் கிடக்கிற பூமண்டலம் முழுவதையும் |
| சூழ் | வியாபித்த |
| கழலே | திருவடியினாலேயே, |
| மின்னை உடை ஆக கொண்டு உலகு அளந்தான் | மின்னலைப் பீதாம்பரமாக அணிந்துகொண்டு உலகங்களையளந்தான். |

* * *—உலகளந்த வரலாற்றைப் பேசி யநுபவிக்கிறார். முதலடியில் 'மன்னுமணிமுடி' என்ற சொல் இரட்டுற மொழிதலால் 'மணிமயமான கிரீடத்தையணிந்த திருமுடி' யென்றும் பொருள் படலாம்.

இடையர்கள் இந்திரனுக்கிட்ட அந்த பூஜையை விலக்கித் தானே அமுது செய்ததனால் சீற்றங்கொண்டு ஆயர்க்கும் ஆநிரைக்கும் மிக்க துன்பமுண்டாம்படியாக ஏழுநாள் விடாமழை பெய்வித்தபோது கோவர்த்தன மலையையே குடையாக வெடுத்துப் பிடித்துநின்று காத்தருளின பெருமான் இப்படி ஆநிரையைத் துன்பப்படுத்தின அவ்விந்திரனுக்குப் பக்ஷபாதியாயிருந்து செய்த செயல் உலகளந்தது. அப்போது திருமுடியானது மேலுலகமெங்கும் நீண்டு செல்ல, திருவடியானது நிலவுலக மெங்கும் நிறைந்துசெல்ல, அந்தரிக்ஷலோகத்திலுள்ள மின்னல் திருமேனிக்குப் பீதாம்பரம்போல் விளங்க, இந்த நிலைமையாக உலகங்களையளந்தா னெம்பெருமான் என்றாராயிற்று. ... ... (சுக)

கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக் குழலூதி *
மாவலனாய்க் கீண்ட மணிவண்ணன் *—மேவி
அரி யுருவமாகி இரணியன தாகம் *
தெரியுகிரால் கீண்டான் சினம். (சுஉ)

| | |
|---|---|
| கோவலன் ஆய் | இடையனாய்ப் பிறந்து |
| ஆநிரைகள் | பசுக்கூட்டங்களை |
| மேய்த்து | (புல்லுந் தண்ணீருமுள்ள விடங்களிலே கொண்டு சென்று) மேய்த்தவனாயும் |

| | |
|---|---|
| குழல் ஊதி | புல்லாங்குழலை ஊதினவனையும் |
| மா | குதிரை வடிவு கொண்டு நலிய வந்த கேசி யென்னுமசுரனை |
| வலன் ஆய் கீண்ட | ஸமர்த்தனாய்க் கொண்டு கிழித்தவனையும் |
| மணி வண்ணன் | நீலமணி போன்ற வடிவையுடையனையும் |
| மேவி அரி உருவம் ஆகி | பொருத்தமான நரசிங்க வடிவங் கொண்டு |
| இரணியனது ஆகம் | இரணியாஸுரனுடைய முரட்டுடலை |
| உகிரால் | நகங்களினால் |
| கீண்டான் | கிழித்தவனாயுமுள்ள பெருமானுடைய |
| சினம் | சீற்றத்தை |
| தெரி | (நெஞ்சமே!) தெரிந்துகொள். |

* * *—எம்பெருமானுக்கு அடியார்களிடத்திலுள்ள ப்ரீதி விச்வாஸங்களை எப்படி நாம் ஆபத்தனமாக நம்பியிருக்கவேணுமோ அப்படியே அப்பெருமான் ஆச்ரிதசத்ருக்களிடத்தில் கொண்டுள்ள சீற்றத்தையும் நாம் ஆபத்தனமாக நினைத்திருக்கவேண்டும். ‘நமக்கொருவன் பகைவனாக இருந்தால் அவனிடத்தில் எம்பெருமான் சீற்றங்கொள்வன்’ என்று நாம் அறிந்தால் பிறகு பகைவர்க்கு நாம் அஞ்சவேண்டாவன்றோ? ஆனதுபற்றியே திருமங்கையாழ்வார் 1. “கொண்டசீற்ற மொன்றுண்டுளதறிந்து, உன்னடியனேனும் வந்தடியிணையடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே!” என்றருளிச்செய்தார். இவ்வாழ்வாரும் எம்பெருமானுடைய சீற்றத்தைச் சிந்திக்குமாறு தம் திருவுள்ளத்திற்கு உரைக்கின்றார். இப்பாட்டில், ‘நெஞ்சே!’ என்னும் விளி வருவித்துக் கொள்ளவேணும். எம்பெருமான் ப்ரஹ்லாதாழ்வான் பக்கலில் வைத்திருந்த வாத்ஸல்யத்திற்காட்டிலும் அவனுக்கு விரோதியாயிருந்த இரணியனிடத்தில் கொண்டிருந்த சீற்றமே நம்மால் தியானிக்கத் தகுந்தது என்கிறார். பக்தனான ப்ரஹ்லாதனுடைய விரோதியைச் சீறி முடித்ததுபோலவே நம் விரோதியையும் சீறி முடித்தருள்வான் என்று தேறியிருத்தற்கு இது உறுப்பாகுமென்க.

“அருளன்று நமக்கு உத்தேச்யம்; ஆச்ரிதவிரோதிகள் பக்கல் அவனுக்குண்டான சினம் உத்தேச்யம்; அச்சினத்தைத் தெரி- அநுஸந்தி” என்ற பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகாண்க.

---

1. பெரிய திருமொழி 5—8—3.

கோவலனாய்க் குழலூதிக்கொண்டு ஆநிரைகள் மேய்த்தவனும், சதுரனாய்க் கேசியின்வாயைக் கீண்டொழித்தவனுமான எம்பெருமான் நரசிங்கமூர்த்தியாய்த் திருவவதரித்து, சினம்—கோபத்தையுடையனாய், தேரி உகிரால்—விளங்காநின்ற நகங்களினால், இரணியனது ஆகம் கீண்டான்—; என்று வினைமுற்றாக்கி உரைத்துக் கொள்ளவுமாம்.

மூன்றாமடியில், "எரியுருவமாகி" என்றபாடம் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற்குப் பொருந்தும்; "ஒளியுண்டான ரூபத்தையுடையனாய்" என்பது வியாக்கியான வாக்கியம்.

சினமா மதகளிற்றின் திண்மருப்பைச் சாய்த்து *
புனமேய பூமியதனை *—தனமாகப்
பேரகலத் துள்ளொடுக்கும் பேரார மார்வனார் *
ஓரகலத் துள்ள துலகு. (௬௫)

| | | | |
|---|---|---|---|
| சினம் மா மதம் | கோபத்தையும் மிகுந்த மதத்தையுமுடைய | பேர் அகலத்துள் ஒடுக்கும் | சிறிய திருவயிற்றினுள் அடக்கிக் காத்தவனும் |
| களிற்றின் | (குவலயாபீடமென்கிற) யானையினுடைய | பேர் ஆரம் மார்வனார் | சிறந்த ஹாரங்கள் பூண்ட திருமார்பை யுடையனுமான எம் பெருமானுடைய |
| திண்மருப்பை | திடமான தந்தத்தை | | |
| சாய்த்து | முறித்துத்தள்ளினவனும் | | |
| புனம் மேய | நல்ல நிலங்களோடு கூடின | ஓர் அகலத்து | ஸங்கல்பரூபமான ஜ்ஞானத்தின் ஏகதேசத்தில் |
| பூமிஅதனை | பூமியை | | |
| தனம் ஆக | நிதியாக நினைத்துக் கொண்டு | உலகு உள்ளது | உலகமெல்லாம் உள்ளது. |

* * *—உலகமெல்லாம் எம்பெருமானுடைய ஸங்கல்பத்தினால் ஸத்தைபெற்றுக் கிடக்கின்றதென்கிறார். வில்விழவென்கிற வியாஜம்வைத்துக் கம்ஸனாலழைக்கப்பட்டு மதுரையில் அவனது அரண்மனையினுட் புகும்போது எதிர்த்துப் போர்செய்து கொல்ல வந்த குவலயாபீடமென்னும் மதயானையை மருப்பொசித்து முடித்தவனும், பூமண்டலமெல்லாம்பிரளயப்பெருங்கடலில் அழியாதபடி

நிதியைக்காப்பாற்றுவதுபோல அவற்றைத் திருவயிற்றிலேவைத்துக்காப்பாற்றினவனும், இப்படி தன்னுடைமையானது ரக்ஷிக்கப்பட்டதென்ற மகிழ்ச்சி காரணத்தினால் ஆபரணம் பூண்டாற்போலேயிருக்கிற திருமேனியை யுடையவனுமான எம்பெருமானுடைய ஸங்கல்பத்தின் ஏகதேசத்திலுள்ளது இவ்வுலகமெல்லாம்.

அகலம் என்றசொல் ஸங்கல்பத்துக்கு வாசகமாவது எங்ஙனேயென்னில்; இச்சொல் மார்பைச் சொல்லும்; அதன் உட்புறமான மனத்தின் தருமமாகிய ஸங்கல்பத்தை இலக்கணையால் சொல்லுகின்றதென்க.

“பேரகலத்துள்” என்ற விடத்து, பேர் என்றது எதிர்மறையிலக்கணையில் சிறுமையைச் சொல்லுமென்க. .... (சங)

உலகமு மூழியு மாழியும் * ஒண்கேழ்
அலர்கதிரும் செந்தீயு மாவான் *—பலகதிர்கள்
பாரித்த பைம்பொன் முடியா னடியிணைக்கே *
பூரித்தென் னெஞ்சே புரி. (சச)

| | |
|---|---|
| என் நெஞ்சே | எனதுமனமே!, |
| உலகமும் | உலகங்களும் |
| ஊழியும் | ஸம்ஹாரகாலமும் |
| ஆழியும் | கடல்களும் |
| ஒண் கேழ் அலர் கதிரும் | அழகிய நிறத்தையும் பரம்பின கிரணங்களையுமுடைய சந்திர ஸூர்யர்களும் |
| செம் தீயும் | சிவந்த நிறத்தையுடைத்தான அக்நியும் |
| ஆவான் | ஆகிய இப்பொருள்களெல்லாம் தனக்கு ப்ரகாரமாம்படி நிற்பவனும், |
| பல கதிர்கள் பாரித்த | பல கிரணங்களைப் புறப்பட விடுகின்ற |
| பை பொன் முடியான் | அழகிய பொன்முடியை யுடையவனுமான எம் பெருமானுடைய |
| அடி இணைக்கே | உபயபாதங்களுக்கே |
| பூரித்து புரி | பரிபூரணமாக விருப்பங் கொள்ளு. |

* * *—இப்போது காணப்படுகின்ற லோகங்களும், இவையெல்லாம் ஸம்ஹரிக்கப்பட்டுக் காலமொன்று மாத்திரம் மிகுந்திருக்கப்பெற்ற பிரளயகாலமும், ஆதித்யனும் அக்நியும் ஆகிற பதார்த்தங்களை ப்ரகாரமாகவுடையனாய் [இவற்றுக்கெல்லாம் ஆத்மாவாய்,] பரமபதத்திலே பல கிரணங்களை வெளியிடுகின்ற திருவபிஷேகத்தையுடையனாய்க் கொண்டு எழுந்தருளியிருக்கு மெம்பெருமானுடைய திருவடிகளிலே பரிபூரணமான பக்தியைக்கொண்டிருக்குமாறு நெஞ்சுக்கு உபதேசித்தாராயிற்று. ... (சச)

புரிந்து மதவேழம் மாப்பிடியோடூடி *
திரிந்து சினத்தால் பொருது *—விரிந்தசீர்
வெண்கோட்டு முத்துதிர்க்கும் வேங்கடமே * மேலொருநாள்
மண்கோட்டுக் கொண்டான் மலை. (சரு)

| | |
|---|---|
| மதம் வேழம் | மத்த கஜமானது |
| மா பிடியோடு | சிறந்த தன்பேடையோடு |
| புரிந்து | கலவிசெய்து |
| ஊடி | பிரணய கலஹம்பண்ணி |
| திரிந்து | (அதனால் பேடையைத் துறந்து) இங்குமங்குந் திரிந்து |
| சினத்தால் பொருது | கோபத்தினால் கரைபொருது |
| வெண் கோடு | வெளுத்த கொம்புகளினின்று |
| விரிந்த சீர் முத்து | சிறந்த முத்துக்களை |
| உதிர்க்கும் | வெளிவிடப்பெற்ற |
| வேங்கடமே | திருமலையே |
| மேல் ஒருநாள் | முன்னொருநாளில் (வராஹ ரூபியாய்) |
| மண் | பூமியை |
| கோடு | கோரப்பல்லின்மீது |
| கொண்டான் | எடுத்துக் கொண்டு வந்த பெருமானுடைய |
| மலை | திருமலையாம். |

* * *—ஏழுலகும் தனிக்கோல் செல்லப் பரமபதத்தில் வீற்றிருக்கக் கடவனான அவன் நம்போன்றவர்க்கும் ஆச்ரயிக்க எளியனாய்த் திருமலையிலே வந்து நித்யஸந்நிதி பண்ணியிராநின்றானென்கிறார். திருமலையை வருணிக்கிறார். யானை தன் பேடையுடனே கலந்திருந்தபோது பிரணயகலஹம் உண்டாயிற்று; அதனால் பேடையை விட்டிட்டு இங்குமங்குந்திரிந்து கோபத்திற்குப்

போக்குவீடாகத் தனது தந்தத்தை மணிப்பாறைகளிலே யிட்டுக் குத்துகின்றதாம்; அப்போது அத்தந்தத்தில் நின்று வெண்முத்துக்கள் உதிர்கின்றனவாம்; இப்படி இருக்கப்பெற்ற திருமலை முன்பு வராஹாவதாரஞ் செய்தருளின பெருமானுடைய இருப்பிடம் என்கை.

பொருது=திருமலையிலுள்ள பளிங்குப் பாறைகளிலே யானை தன் நிழலைக்கண்டு எதிர்யானையென்று பிரமித்து அதனோடே போர்செய்கின்றதாகவுங் கொள்ளலாம். ... ... (சரு)

மலைமுகடு மேல்வைத்து வாசுகியைச் சுற்றி *
தலைமுகடு தானொருகை பற்றி *—அலைமுகட்
டண்டம்போய் நீர்தெறிப்ப அன்றுகடல் கடைந்தான் *
பிண்டமாய் நின்ற பிரான். (சசு)

| | |
|---|---|
| பிண்டம் ஆய் நின்ற பிரான் | (ஜகத்துக்கு) மூலகாரணமாக நின்ற எம்பெருமான், |
| அன்று | முன்பொரு காலத்தில், |
| முகடு மலை | சிகரத்தையுடைத்தான மந்தரமலையை |
| மேல் வைத்து | (கூர்மரூபியான தன்னுடைய முதுகின்மேலே) வைத்து |
| வாசுகியை சுற்றி | (அதிலே) வாஸுகிநாகத்தை (க் கடைகயிறாக) ச்சுற்றி |
| தலை முகடு | அதன் தலைப்பாகத்தை |
| தான் ஒரு கை பற்றி | தான் ஒரு கையாலே பற்றிக்கொண்டு |
| அலை நீர் | அலையின் திவலைகள் |
| அண்டம் முகடு போய் தெறிப்ப | அண்டத்தின் மேற் சென்று தெறிக்கும்படியாக |
| கடல் கடைந்தான் | கடலைக்கடைந்தான். |

* * *—பிரயோஜநாந்தரத்தை விரும்புமவர்க்கும் உடம்பு நோவக் காரியஞ்செய்து பயனளிப்பவனெம்பெருமான் என்கிறார். துர்வாஸமஹர்ஷியின் சாபத்தினால் தேவர்களின் செல்வம்யாவும் ஒழியவே இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையும் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாகநாட்டி வாஸுகியென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறாகப்பூட்டிப் பாற்கடலைக் கடைகை

யில், மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின்கீழேசென்று அதனைத்தனது முதுகின் மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்து, இப்படியிருக்கையில் வாஸுகியின் வாலைப்பிடித்துக் கொண்ட தேவர்களும் தலையைப்பிடித்துக்கொண்ட அசுரர்களும் அதனை வலியப்பிடித்திழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கி அத்திருமால்தான் ஒரு திருமேனியைத்தரித்துத் தேவர்கள் பக்கத்திலும் வேறொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலும் நின்று வாஸுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக்கடைந்த வரலாறு அறிக. அப்போது கடைகிற வேகத்தாலே அலைநீர்த்திவலைகள் அண்டம் போய்த் தெறித்தனவென்கிறார்.

பிண்டமாய் நின்ற பிரான்=மண்ணுண்டையானது பல காரியப் பொருள்களாக ஆகி, பானை யென்றும் மடக்கென்றும் சால் என்றும் பலவடிவுகளை அடைவதுபோல, எம்பெருமானும் ஸகல ஜகத்துக்கும் உபாதாநகாரணமாயிருத்தல்பற்றிப் பிண்டமாய் நின்ற என்கிறார். ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டனாயிருந்தபடியைச் சொல்லிற்றென்க. ... .... ... (௬௬)

நின்ற பெருமானே நீரேற்று * உலகெல்லாம்
சென்ற பெருமானே செங்கண்ணா *—அன்று
துரகவாய்கீண்ட துழாய் முடியாய் * நங்கள்
நரகவாய் கீண்டாயும் நீ. (௬௭)

| | | | |
|---|---|---|---|
| நீர் ஏற்று நின்ற பெருமானே | (மாவலிபக்கல்) உதகதானம் வாங்கிக்கொண்டு நின்ற பெருமானே! | செம் கண்ணா | செந்தாமரைக் கண்ணனே! |
| | | அன்று | முன்பொரு காலத்தில் |
| உலகு எல்லாம் சென்ற பெருமானே | எல்லா வுலகங்களையும் வியாபித்த பெருமானே! | துரகம் | குதிரைவடிவு கொண்டு நலியவந்த கேசியென்னு மசுரனுடைய |

| | | | |
|---|---|---|---|
| வாய் | வாயை | நங்கள் | எங்களுடைய |
| கீண்ட | கிண் டொழித்தவனே! | நரகம் வாய் | நரகமார்க்கத்தை |
| துழாய் முடியாய் | திருத்துழாயணிந்த திருமுடியை யுடையவனே! | கீண்டாயும் நீ | அழித்தவனும் நீயேயன்ருே? |

* * *—வாமனனுகி மாவலிபக்கல் யாசகனுய்ச்சென்று இரந்து உதகதானம்பெற்று நின்றபோதையழகை என்சொல்வேன்!; உடனே திரிவிக்ரமனுய் ஓங்கிவளர்ந்து உலகெல்லாம் வியாபித்த விதத்தை என்சொல்வேன்!; ஆச்ரிதபக்ஷபாதம் நன்கு விளங்கும் படி திருக்கண்ணழகு இருக்குமாற்றை என்சொல்வேன்!; கம்ஸனு லேவப்பட்டு உன்னைக்கொல்லவந்த கேசியென்னும் குதிரையுருக் கொண்ட வசுரனுடைய வாயைப்பிளந்து அவனை முடித்த வீரத்தை என்சொல்வேன்; அவ்வசுரனோடு போர்செய்தவளவிலும் திரு முடியிலணிந்திருந்த திருத்துழாய் சிறிதும் வாடாதிருந்த விசித் திரத்தை என்சொல்வேன்!. எங்களுடைய நரகத்தின் வாயைக் கிழித்தவுனக்கு ஒரு கேசியின் வாயைக்கிழித்தது ஆச்சரியமோ? என்றவாறு.

துரகம்=வடசொல்; விரைவாகச்செல்வது என்று குதிரைக் குக் காரணப்பெயர். நரகவாய் கீண்டாய்=இனி நாங்கள் ஸம்ஸார மாகிற நரகத்தில் புகுவதற்கு வழியில்லாதபடி செய்தருளினு யென்கை. ... .... ... ... (சஎ)

நீயன்றே நீரேற்று உலகமடி யளந்தாய் *
நீயன்றே நின்று நிரைமேய்த்தாய் *—நீயன்றே
மாவா யுரம்பிளந்து மாமருதி னூடுபோய் *
தேவாசுரம் பொருதாய் செற்று. (சஅ)

| | | | |
|---|---|---|---|
| நீர் ஏற்று | (மாவலிபக்கல்) உதகதானம் வாங்கி | நின்று | ரக்ஷிப்பதில் நிலைத்து நின்று |
| | | நிரை | பசுக்கூட்டங்களை |
| உலகம் | உலகங்களை | மேய்த்தாய் நீ அன்றே | மேய்த்தவனும் நீயன்ருே? |
| அடி அளந்தாய் நீ அன்றே | திருவடியா லளந்தவன் நீயன்ருே? | மா | குதிரைவடிவு கொண்டுவந்த கேசியென்னு மசுரனுடைய |

| | |
|---|---|
| வாய் உரம் | வாயின் வலிமையை |
| பிளந்து | ஒழித்தவனும் |
| மா மருதின் ஊடு போய் | பெரிய இரட்டை மருத மரங்களி னிடையே தவழ்ந்து அவற்றை முறித்துத் தள்ளினவனும் |
| தேவாசுரம் | தேவாஸுர யுத்தத்திலே |
| செற்று | (அசுரர்களை) அழியச்செய்து |
| பொருதாய் நீ அன்றே | போர் செய்தவனும் நீயன்றோ ? |

* * *—ஒன்றோடொன்று சேராதசெயல்களைச் செய்தவன் நீயோவென்கிறார். மாவலிபக்கல் யாசகனாய்ச்சென்றாய் என்றும் விம்மவளர்ந்து உலகங்களையெல்லாம் அளந்தாய் என்றும் கேள்விப்படுகிறோம்; யாசகனாய்ச்சென்ற செயலாலே அசக்தியைக் காட்டிக்கொண்டாய்; உலகளந்த செயலாலே ஒப்பற்ற சக்தியைக் காட்டிக்கொண்டாய்; இவை என்கொல்?.

தவிரவும்; திருவாய்ப்பாடியில் இடையனாய்ப்பிறந்து பசுக்களையுங் கன்றுகளையும் புல்லுந்தண்ணீருமுள்ள விடங்களிற் கொண்டுசென்று மேய்த்தாயென்றும், அந்த நிலைமையிலேயே கேசியின் வாயைக் கீண்டொழித்தாயென்றும் கேள்விப்படுகிறோம். இவையும் அப்படியே.

அன்றியும்; நீ கண்ணனாய்ப்பிறந்து குழந்தையாயிருக்குங் காலத்தில், துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்தயசோதை உன்னை வயிற்றில் கயிற்றினால் கட்டி ஒருரலிலே பிணித்துவிட, அவ்வுரலையும் இழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே சென்றாய் என்றும், தேவாஸுரயுத்தத்தில் அசுரர்களைக்கொன்று தேவர்களை வெற்றி பெறுவித்தாயென்றும் கேள்விப்படுகிறோம்; இவையும் அப்படியே. ஆகவிப்படி அசக்தியையும் சக்தியையும் காட்டவல்ல செயல்களைச் செய்த மஹாநுபாவன் நீயோ பிரானே! என்றாராயிற்று. ... ... ... (சஅ)

சேற்றதுவுஞ் சேரா விரணியனை * சென்றேற்றுப்
பெற்றதுவும் மாநிலம் பின்னைக்காய்*—முற்றல்
முரியேற்றின் முன்னின்று மொய்ம்பொழித்தாய் * மூரிச்
சுரியேறு சங்கினாய்! சூழ்ந்து. (சகூ)

| | | | |
|---|---|---|---|
| பின்னைக்காய் | நப்பின்னைப் பிராட்டிக்காக, | சங்கினாய் | சங்கைத் திருக்கையி லேந்தி யுள்ளவனே! (இப்படியிருக்கிற நீ,) |
| முற்றல் மூரி | முதிர்ந்த வலிமையை யுடைய | | |
| ஏற்றின் | ரிஷபங்களினுடைய | | |
| முன் நின்று | எதிரில் (அஞ்சாதே) நின்று | செற்றதுவும் | கைகூசாமல் முடித்துப் போட்டதும் |
| சூழ்ந்து | (அவற்றைக் கொல்லும் வகையை) ஆலோசித்து | சேரா இரணியனை | உன்னைச்சேர்ந்து வாழமாட்டாத ஹிரண்யா ஸுரனை; |
| மொய்ம்பு ஒழித்தாய் | அவற்றின்) மிடுக்கை ஒழித்தவனே!, | சென்று | (மஹாபலிபக்கலில்) சென்று |
| | | ஏற்று | யாசித்து |
| மூரி | பெரிதாயும் | பெற்றதுவும் | பெற்றுக் கொண்டதும் |
| சுரி ஏறு | (உள்ளே) சுழித்தலை யுடைத்தாயு மிருக்கிற | மா நிலம் | பெரிய பூமியை. |

* * *—எம்பெருமானே! நீ அடியவர் திறத்தில் அன்பு மிகுதியினால் அவர்களின் இஷ்டங்களை நிறைவேற்றுதற்காகவும் அநிஷ்டங்களைப் போக்குதற்காகவும் செய்தருள்கின்ற செயல்களுக்கு எல்லையுண்டோ? பரமபக்தனான ப்ரஹ்லாதாழ்வானுடைய கருத்துக்கு இரணியன் இணங்கவில்லையென்ற காரணத்தினால் அவனைக் கைதொட்டு முடித்துப் போட்டாய்; இந்திரன் கண்ணீர்விட்டு அழுவதைக்கண்டு பொறுத்திருக்க மாட்டாமல் அவனுக்காகக் குறளுருவாகி மாவலிபக்கல் சென்று எண்சாணுடம்பை இருசாணாக்கி இரப்பாளனாய்க் காரியஞ் செய்தாய்; நப்பின்னைப் பிராட்டியின் திருமேனியிலுள்ள சாபலத்தினால் 'இவளைப் பெறுதற்கு எவ்வளவு கடினமான செய்கை செய்தாலும் செய்யலாம்' என்று கொழுத்த காளைகளேழுடனே பொருது வெற்றிபெற்றாய்; தூரத்திலேயிருந்து உன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்களும் உன் வரவைத் தெரிவிக்கின்ற சங்கின் ஓசையைக்கேட்டு நெஞ்சு குளிர்ந்திருக்குமாறு ஒலி செய்யச் சங்கை

விடாமற் கைக்கொண்டுள்ளாய்; ஆகவே உனது ப்ரவ்ருத்திகளடங்கலும் பரார்த்தமாகவே யிருக்கின்றனகாண்—என்றாராயிற்று.

சேராவிரணியன்=சத்துருவான இரணியன் என்றபடி. ஆச்ரிதர்களுக்கு விரோதம் செய்பவர்களை எம்பெருமான் தனக்கு சத்துருவாக நினைப்பிடுவேன் என்க. .... ... .... (௬௯)

சூழ்ந்த துழாயலங்கல் சோதி மணிமுடிமால் *
தாழ்ந்த வருவித் தடைவரைவாய்—ஆழ்ந்த
மணிநீர்ச் சுனைவளர்ந்த மாமுதலை கொன்றான் *
அணிநீல வண்ணத் தவன். (௭௦)

| | |
|---|---|
| சூழ்ந்த | நிறையச்சாத்தப் பெற்றுள்ள |
| துழாய் அலங்கல் | திருத்துழாய் மாலையாலே |
| சோதி | புகர் பெற்ற |
| மணி முடி | மணிமயமான கிரீடத்தை யுடையனும் |
| அணி நீலம் வண்ணத் தவன் | அழகிய நீலநிறத்தை யுடையனுயு மிருக்கிற |
| மால் | ஸர்வேச்வரன், |
| தாழ்ந்த அருவி தட வரை வாய் | பூமியளவும் தாழ்ந்து பெருகுகின்ற அருவிகளை யுடைய பெரிய மலையின் கணுள்ள |
| ஆழ்ந்த மணி நீர் சுனை | ஆழமாய் அழகிய நீரை யுடைத்தான பொய்கையிலே |
| வளர்ந்த | (சாபத்தினால்) வளர்ந்து கொண்டிருந்த |
| மா முதலை | பெரிய முதலையை |
| கொன்றான் | முடித்தொழித்தான். |

* * *—எம்பெருமான் அடியார்களுக்காகச் செய்தருளின காரியங்களெல்லாவற்றினும் ஸ்ரீ கஜேந்திராழ்வானுக்குச் செய்தருளின அநுக்ரஹம் விலக்ஷணமாகையாலே, மற்ற காரியங்களெல்லாம் ஒருதட்டும் இது ஒரு தட்டுமாக இருப்பதுபற்றி கஜேந்த்ர மோக்ஷ வ்ருத்தாந்தத்தைத் தனிப்பட அருளிச் செய்கிறாரிதில்.

இப்பாட்டில் நடுவே இரண்டடிகளில் கதையை யருளிச்செய்து முதலடியிலும் ஈற்றடியிலும் எம்பெருமானைச் சிறப்பித்துக் கூறியிருப்பதன் கருத்தை உய்த்துணர வேண்டும்: எம்பெருமான் திருத்துழாய் மாலை அணிந்து கொண்டிருப்பதும், திருவபி

ஷேகம் அணிந்து கொண்டிருப்பதும் 'தானே அனைத்துலகும் காக்கவல்ல முழுமுதற் கடவுள்' என்பதை விளக்குவதற்கேயாம்; பரமபக்தனான கஜேந்திராழ்வான் நெடுங்காலமாக ஒரு நீர்ப்புழுவின் வாயில் அகப்பட்டுக்கொண்டு மிகவும் நொந்துகிடந்ததனால் எம்பெருமானுடைய ரக்ஷகத்வம் குன்றிக்கிடந்தது; அவனுடைய திருத்துழாய் மாலையும்வாடி, திருவபிஷேகமும் ஒளிமழுங்கிக்கிடந்தது. பிறகு முதலையைத் துணித்து வேழத்தை வாழ்வித்ததனால் ரக்ஷகத்வ லக்ஷணமான திருத்துழாய் மாலையும் திருவபிஷேகமும் ஒளிமல்கப் பெற்றமையால் அதனை 'சூழ்ந்த துழாயலங்கல் சோதி மணி முடிமால்' என்ற முதலடியால் அருளிச்செய்தார். 'பக்தனுடைய விரோதி தொலைப்பெற்றோம்' என்று பிறந்த அளவற்ற மகிழ்ச்சியினால் திருமேனி புகர்பெற்றபடியை 'அணிநீல வண்ணத்தவன்' என்ற ஈற்றடியினால் அருளிச்செய்தார்.

கஜேந்திராழ்வான் தாமரைப்பூப்பறித்த பொய்கை மலைமேலிருந்ததனால் 'தடவரை வாய்' எனப்பட்டது. ... (ரு0)

அவனே யருவரையால் ஆநிரைகள் காத்தான் *
அவனே யணிமருதம் சாய்த்தான் *—அவனே
கலங்காப் பெருநகரம் காட்டுவான் கண்டீர் *
இலங்காபுரமெரித்தா னெய்து. (ருக)

| | | | |
|---|---|---|---|
| அரு வரையால் | ஒருவரால் அசைக்கவும் முடியாததான கோவர்த்தன மலையினால் | சாய்த்தான் | முறித்துத் தள்ளினவனும் |
| ஆநிரைகள் | பசுக்கூட்டங்களை | அவனே கண்டீர் | அப்பெருமானே யாவன்; |
| காத்தான் | ரக்ஷித்தருளினவன் | எய்து | அம்புகளைப் பிரயோகித்து |
| அவனே கண்டீர் | அப்பெருமானே யாவன்; | இலங்காபுரம் | லங்காபட்டணத்தை |
| அணி மருதம் | அழகாக நின்று கொண்டிருந்த இரட்டைமருத மரங்களை | எரித்தான் | எரியவிட்டவனை |
| | | அவனே | அப்பெருமானே |
| | | கலங்கா பெரு நகரம் | ஒருவகைக் கலக்கமுமில்லாத பரமபதத்தை |
| | | காட்டுவான் | காட்டித்தருவான். |

* * *—இந்திரன் எம்பெருமானிடத்தில் எத்தனையுபகாரங்கள் பெற்றான்!; எத்தனை பெற்றும் நன்றி நெறியுள்ளவனோ அவன்? இடையர்கள் வழக்கமாகத் தனக்கு இடுஞ் சோற்றைக் கண்ணபிரான் விலக்கினன் என்பதுவே காரணமாகப் பசிக்கோபங் கொண்டு மாடுகளையுங் கன்றுகளையும் இடையர்களையும் படாத பாடு படுத்திவிட வேணுமென்று மேகங்களையேவிப் பெருமழை பெய்வித்தான்; அந்த இந்திரனுடைய தலையை அறுத்தெறிய எத்தனை நிமிஷஞ்செல்லும் கண்ணபிரானுக்கு!; எளிதாகத் தலையை அறுத்தெறியலாமாயினும் 'அவனுணவைக் கொள்ளை கொண்ட நாம் உயிரையுங் கொள்ளை கொள்ளலாகுமோ?' என்று பரம கருணை பாராட்டி 'நம்மவர்களை நாம் ஒழுங்காகப் பாதுகாத்துக் கொள்வோம்; கைசலித்தால் தானே ஓய்ந்து நிற்கிறான்' என்று திருவுள்ளம்பற்றி இந்திரனை ஒன்றுஞ் செய்திடாது மலையைக் குடையாக வெடுத்து ஆயரையும் ஆநிரைகளையும் காத்தருளின குணத்தை என்சொல்வோம்!. மருதமரங்களின் கீழே உரலையு மிழுத்துக்கொண்டு கண்ணனாய்த் தவழ்ந்து சென்றபோது உரல் குறுக்காக இழுக்கப்பட்டதனால் அம்மருத மரங்கள் முறிந்து விழச் செய்தேயும் அதன்கீழிருந்த தனக்கு ஒரு தீங்குமின்றியே, அம்மரங்களாய் நின்ற குபேரபுத்திரர்களைச் சாபத்தில் நின்று விடுவித்தும் அம்மரங்களில் ஆவேசித்துக் கிடந்த அஸுரர்களைக் கொன்றொழித்தும் காட்டின சிறுச்சேவகத்தை என்சொல்வோம்!. கண்ணபிரானாய்த் திருவவதரித்து இப்படிப்பட்ட அருந்தொழில்கள் செய்தவனும் ஸ்ரீராமபிரானாய்த் திருவவதரித்து ராக்ஷஸர்களுடைய குடியிருப்பை யழித்தவனுமான பெருமான் இப்படி தனது நிர்ஹேதுக கிருபையினாலே தானே இதர நிரபேக்ஷனாய் விரோதிகளை வேரறுத்தது போல, அந்த நிர்ஹேதுக கிருபை கொண்டே நமக்கும் பரமபதமளித்தால் நாம் பெறலாகுமேயன்றி நாமாக ஒரு முயற்சி செய்து பரமபதம் பெறுவது அரிது என்கிறார்.

அவனே அவனே அவனே என்ற ஏகாரங்கள் மூன்றும்—அநிஷ்ட நிவ்ருத்தி செய்து கொள்வதற்கும் நம்மாலாகாது; இஷ்டப்ராப்தி பெறுதற்கும் நம்மாலாகாது; அப்பெருமானுடைய க்ருஷி

தானே யுண்டாகிப் பலித்தால் பலிக்குமத்தனை என்ற விதாந்தத்தை வற்புறுத்துவன.

"பரமபதம் அவனே காட்டக் காணுமத்தனை; ஸ்வயத்நத்தால் காண்பார்க்குக் காணப்போகாது" என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

எவ்வகைக் கலக்கங்களு முள்ளது இந்நிலத்திலே யாகையாலும் பரமபதத்தில் ஒருவகைக் கலக்கமு மில்லாமையாலும் கலங்காப் பெருநகர மென்று அவ்விடத்திற்குத் திருநாமமேற்கும். (ருக)

எய்தான் மராமர மேழுமிராமனாய் *
எய்தா னம்மான் மறியை ஏந்திழைக்காய் *—எய்ததுவும்
தென்னிலங்கைக் கோன்வீழச் சென்று குறளுருவாய் *
முன்னிலம் கைக்கொண்டான் முயன்று. (ருஉ)

| | |
|---|---|
| இராமன் ஆய் | ஸ்ரீராமனாகத் திருவவதரித்து |
| மராமரம் ஏழும் | ஸப்தஸால வ்ருக்ஷங்களையும் |
| எய்தான் | அம்புசெலுத்தித் துளைத்தான்; |
| ஏந்து இழைக்கு ஆய் | தரிக்கப்பட்ட ஆபரணங்களையுடைய பிராட்டிக்காக |
| அம் மான் மறியை | அப்படிப்பட்ட மாரீச மாயா மிருகக்குட்டியை |
| எய்தான் | பின்சென்றான்; |
| எய்ததுவும் | அம்புகளைச் செலுத்ினதும் |
| தென் இலங்கை கோன் வீழ | தென்னிலங்கைக்கு அரசனை இராவணன் முடியும்படியாகவாம்; |
| முன் | முன்பொரு காலத்திலே |
| குறள் உரு ஆய் | வாமனரூபியாய் |
| சென்று | மாவலியிடத்திற் சென்று |
| முயன்று | (வடிவழகுகாட்டுதல், மழலைச் சொற்களைச் சொல்லுதல் முதலிய) முயற்சிகளைச் செய்து |
| நிலம் கைக் கொண்டான் | பூமியைக் கைப்பற்றினன். |

* * *—'எம்பெருமான் ஸர்வசக்தன்' என்று ப்ரஸித்தமாயிருக்கச் செய்தேயும் 'இவனுக்கு சக்தியுண்டோ இல்லையோ?'

என்று யாரேனும் ஸந்தேகப்பட்டால் அந்த ஸந்தேஹத்தைத் தீர்க்குமாறு அரிய காரியங்களை எளிதிற் செய்து காட்டுவானவன் என்பதற்காக மராமரமேழு மெய்த வரலாற்றைக் கூறுகின்றார். ஸுக்ரீவன் இராமனால் அபயப்ரதானஞ் செய்யப்பெற்ற பின்பும் மனந்தெளியாமல் வாலியின் பேராற்றலைப் பற்றிப் பலவாறு சொல்லி, வாலி மராமரங்களைத் துளைத்ததையும் துந்துபியின் உடலெலும்பை ஒருயோஜனை தூரம் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக் கூறி, இவ்வாறு பேராற்றலமைந்தவனை வெல்வது ஸாத்யமாகுமோ? என்று சொல்ல, அதுகேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு நம்பிக்கை இல்லையாயின் இப்போது என்ன செய்ய வேண்டுவது?' என்ன, ஸுக்ரீவன் 'இராமபிரான் நீறுபூத்த நெருப்புப் போலத் தோன்றினும் வாலியின் வல்லமையை நினைக்கும்போது ஸந்தேஹமுண்டாகின்றது; ஏழு மராமரங்களையுந்துளைத்து இந்த துந்துபியின் எலும்பையும் இருநூறு விற்கடை தூரம் தூக்கி யெறிந்தால் எனக்கு நம்பிக்கை யுண்டாகும்' என்று சொல்ல, ஸுக்ரீவனுக்கு நம்புதலுண்டாக்குமாறு அவனது வார்த்தைக்கு இயைந்து இராமபிரான் துந்துபியின் உடலெலும்புக் குவியலைத் தனது காற்கட்டை விரலினால் இலேசாய்த் தூக்கிப் பத்து யோஜனை தூரத்துக்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட ஸுக்ரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கி யெறிந்தான்; இப்போது உலர்ந்துபோன இதனைத் தூக்கி யெறிதல் ஒரு சிறப்பன்று' என்று கூற, பின்பு இராமபிரான் ஒரு பாணத்தை ஏழு மராமரங்களின்மேல் ஏவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையும் துளைத்துச்சென்று மீண்டு அம்பறாத்தூணியை யடைந்ததென்ற வரலாறு இங்கு அறியத்தக்கது. மராமரம்—ஆச்சாமரம்.

ஏந்திழைக்காய் அம்மான் மறியை எய்தான் = 'எய்தான்' என்னுஞ் சொல் 'எய்' என்னும் வினைப்பகுதியடியாகவும் 'எய்து' என்னும் வினைப்பகுதியடியாகவும் தேறுவதுண்டு: முந்தினது அம்புகளைச் செலுத்தினானென்று பொருள்படும். பிந்தினது அடைந்தானென்று பொருள்படும். இப்பாசுரத்தில் முதலடியிலுள்ள 'எய்தான்' என்னும் வினைமுற்று எய் என்னும் வினைப் பகுதியடியாகப் பிறந்ததென்றும், இரண்டாமடியிலுள்ள எய்தா

னென்னும் வினைமுற்று எய்து என்னும் வினைப்பகுதியடியாகப் பிறந்ததென்றும் கொண்டு உரைக்கப்பட்டது. 'இது மாயா மிருகம்' என்று தனக்குத் தெரிந்திருந்தும் பிராட்டியின் கோரிக்கையைப் பின்சென்று நடக்கவேண்டிய பிரணயாதிசயத்தினால் அம்மான் குட்டியின் பின்னே நடந்தான் என்றவாறு. 'மறி' என்ற சொல்-சில மிருகங்களின் குட்டிக்குப் பொதுப்பெயராயும் மானுக்குச் சிறப்புப் பெயராயுமுள்ளது; இங்குக் குட்டியென்ற பொருளில் வந்தது. 'மான் மறிய' என்றும் பாடமுண்டென்பர்; அப்போது, மாரீச மாயாமிருகம் சாகும்படி என்று பொருளாம்.

'ஏந்திழைக்காய்' என்ற சொல் நடுநிலைத் தீவகமாய் இரண்டாமடியிலும் மூன்றாமடியிலும் அந்வயிக்கத்தக்கது. ... (ருஉ)

முயன்று தொழுநெஞ்சே மூரிநீர் வேலை *
இயன்றமரத் தாலிலையின்மேலால் *—பயின்றங்கோர்
மண்ணலங்கொள் வெள்ளத்து மாயக் குழவியாய் *
தண்ணலங்கல் மாலையான் தாள். (ருங)

| | |
|---|---|
| மூரி நீர் வேலை | பழையதான நீரையுடைத்தான ஸமுத்ரத்திலே |
| இயன்ற | பொருந்தியுள்ள |
| ஆலமரத்து இலையின் மேலால் | ஆலமரத்தின் இலைமீது |
| பயின்று | நெடுங்காலம் சாய்ந்திருந்து |
| அங்கு | அங்கே |
| மண் | பூமியினுடைய |
| நலம் | நன்மையை |
| கொள் | அபஹரித்த |
| வெள்ளத்து | பிரளய வெள்ளத்திலே |
| ஓர் மாயம் குழவி ஆய் | ஆச்சரியமான ஒரு குழந்தையாய் |
| தண் அலங்கல் மாலையான் | குளிர்ந்து அசைகின்ற மாலையையுடையவனான எம்பெருமானுடைய |
| தாள் | திருவடிகளை |
| நெஞ்சே | நெஞ்சமே! |
| முயன்று தொழு | உத்ஸாஹங்கொண்டு வணங்கு. |

* * *—ஆலிலையில் துயின்ற பெருமானுடைய திருவடிகளைத் தொழுமாறு தமது திருவுள்ளத்திற்கு உரைக்கிறார். பொய்கையாழ்வார் தமது திருவந்தாதியில் "பாலன் தனதுருவாய் ஏழுலகுண்டு, ஆலிலையின் மேலன்று நீவளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று

வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ?, சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு' என்று—'பிரளய காலத்தில் உனக்கு இருப்பிடமாயிருந்த ஆலமரம் பிரளயப் பெருங்கடலினிடையே இருந்ததா? விண்ணிலிருந்ததா? மண்ணிலிருந்ததா? எங்கிருந்தது, சொல்லு' என்று சமத்காரமாக எம்பெருமானை மடிபிடித்துக் கேள்வி கேட்டார்; எம்பெருமான் தனது விசித்ர சக்தி யோகத்தால் அந்த ஆலமரத்தைப் பிரளயக் கடலினிடையே தோன்றுவித்தான் என்கிற ஸமாதானத்தை இவ்வாழ்வார் இப்பாட்டில் வெளியிடுவார் போன்று "மூரிநீர் வேலையயன்ற மரத்தா லிலையின் மேலால்" என்கிறார்.

மூரிநீர்='மூரி' என்ற சொல்லுக்கு 'அநாதி' என்ற பொருளும் 'பெரிது' என்ற பொருளும் 'வலிமைகொண்டது' என்ற பொருளும் உண்டு. அம்மூன்று பொருள்களும் இங்குப் பொருந்தும். .... ... .... .... ... ... (ருரு)

தாளால் சகட முதைத்துப் பகடுந்தி *
கீளா மருதிடைபோய்க் கேழலாய் *—மீளாது
மண்ணகலம் கீண்டங்கோர் மாதுகந்த மார்வற்கு *
பெண்ணகலம் காதல் பேரிது. (ருசு)

| | |
|---|---|
| சகடம் | சகடாஸுரனை |
| தாளால் | திருவடியாலே |
| உதைத்து | உதைத் தொழித்தவனையும் |
| பகடு | (குவலயாபீட மென்கிற) யானையை |
| உந்தி | உதைத்துத் தள்ளினவனையும் |
| மருது இடை போய் | மருத மரங்களின் நடுவே தவழ்ந்து சென்று |
| கீளா | (அம்மரங்களை) முறிந்துவிழச் செய்தவனையும் |
| கேழல் ஆய் | வராஹரூபியாய்க் கொண்டு |
| மீளாது | காரியம் தலைக்கட்டாமல் திரும்பி வருவதில்லையென்று ஸங்கல்பித்துக் கொண்டு சென்று |
| அகலம் மண் கீண்டு | அகன்ற பூமியை (அண்டபித்தியில் நின்றும்) ஒட்டுவிடுவித்தெடுத்தவனையும் |

| | | | |
|---|---|---|---|
| ஓர் மாது உகந்த மார்வதற்கு | ஒப்பற்ற பெரிய பிராட்டியாரை விரும்பி யிருக்கின்ற திரு மார்பை யுடையவ னையுமுள்ள எம் பெருமானுக்கு | பெண் அகலம் | பூமிப்பிராட்டியி னுடைய திருமேனியிலே |
| | | காதல் | ஆசையானது |
| | | பெரிது | கரை புரண்டிருப்பது. |

* * *—நமக்கெல்லாம் சோறு, தண்ணீர், வெற்றிலைபாக்கு மாதர், ஆடையாபரணம், சூது சதுரங்கம் என்னுமிப் பொருள்களே உகப்புக்கு விஷயமாதலால் நம்முடைய வாய்வெருவுதலும் போதுபோக்கும் இப்பொருள்களிலேயே மாறிமாறிநடந்துகொண்டிருக்கும்; இங்ஙனன்றியே 1. "கார்கலந்த மேனியான் கைகலந்த வாழியான், பார்கலந்த வல்வயிற்றான் பாம்பணையான்—சீர்கலந்த, சொல்நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ்துயரை, என்னினைந்து போக்குவர் இப்போது" என்கிறபடியே பகவத் குணாநுபவத்தாலன்றி வேறொன்றால் போதுபோக்கறியாத ஆழ்வார்கள் மாறிமாறி பகவத்குண சேஷ்டிதங்களைப் பேசுமத்தனையல்லது வேறு எதனைப் பேசுவர்கள்? உலகளந்த சரித்திரத்தை உரைப்பது, வடதளசாயியின் வ்ருத்தாந்தத்தை வாய்வெருவுவது, கண்ண பிரான் கதைகளைக் கூறுவது, இராமபிரான் சரிதைகளை இயம்புவது, மீண்டும் இவற்றையே வகைவகையாகப் பேசுவதாய்க்கொண்டு இவர்கள் போதுபோக்கு மழகை நாம் என்சொல்லவல்லோம் வாய் கொண்டு?

ஸ்ரீக்ருஷ்ணனாக அவதரித்த தான் நந்தகோபர் திருமாளிகையிலே ஒருவண்டியின் கீழ்ப்புறத்திலே தொட்டிலிலிட்டுக் கண் வளர்த்தப்பெற்று (யசோதையும் யமுனை நீராடப்போய்) இருந்த காலத்து, கம்ஸனு லேவப்பட்ட அஸுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்துத் தன்மேல்விழுந்து தன்னைக்கொல்ல முயன்றதை அறிந்த தான் பாலுக்கு அழுகிற பாவனையில் தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கியுதைத்து அச்சகடத்தைச் சின்ன பின்னமாக்கினான். கம்ஸனுலழைக்கப்பட்டு அவனது அரண்மனையினுட் புகும்போது சீறிவந்த குவலயாபீட மென்னும் மதயானையை மோதி மருப்பொசித்தான். இரட்டை மருதமரங்களினிடையே

1. பெரிய திருவந்தாதி 86.

தவழ்ந்துசென்று அவற்றைக் கீண்டு தள்ளினன். வராஹரூபியாய்த் திருவவதரித்து பூமிப் பிராட்டியை ஹிரண்யாக்ஷனிடத்திலிருந்து உத்தரிப்பித்து மார்பாரப் புல்கி உவந்தான்—என்று சில பகவத்கதைகளைப் பேசி மகிழ்கிறார்.

பெண்ணகலம் காதல் பேரிது—கீழ் மூன்றுமடிக்குச் சேர, 'பூமிப்பிராட்டியினிடத்தில் கரைபுரண்ட காதலுடையவனாதலால் * மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாய்ப் பிறந்து படாதனபட்டான்' என்று கருத்துக் கொள்ளலாம். அன்றியே, 'எம்பெருமானுக்குப் பெரிய பிராட்டியாரிடத்தில் பெரிதானகாதல் உள்ளது; அவள் நமக்குப் புருஷகார பூதையாகையாலே நமக்கொரு குறையில்லை' என்பதாகவுங் கருத்துக் கொள்ளலாம்.

கீளா—செய்யா என்னும் வாய்பாட்டுடன்பாட்டிறந்தகால வினையெச்சம்; கீண்டு என்றபடி.

பெண்ணகலம்—பெண்ணிடத்தில் என்றுமாம். ... (ருச)

பெரிய வரைமார்வில் பேராரம் பூண்டு *
கரிய முகிலிடை மின்போல *—திரியுங்கால்
பாணொடுங்க வண்டறையும் பங்கயமே * மற்றவன்றன்
நீணெடுங்கண் காட்டும் நிறம். (ருரு)

| | | | |
|---|---|---|---|
| பெரிய வரை மார்வில் | பெரிய மலைபோன்ற திருமார்பிலே | நீள் நெடு கண் | நீண்டு பரந்த திருக்கண்களினுடைய |
| பேர் ஆரம் பூண்டு | பெரிய ஹாரத்தை அணிந்து கொண்டு | நிறம் | நிறத்தை, |
| திரியுங்கால் | உலாவினால் | பாண் ஒடுங்க வண்டு அறையும் பங்கயமே காட்டும் | பாட்டுடன்று பேர் பெற்றவையெல்லாம் ஒடுங்கும்படியாக [—அதிமதுரமாக] வண்டுகள் இருந்து பாடப்பெற்ற தாமரைப்பூவே காட்டித்தரும். |
| கரிய முகிலிடை மின் போல | காளமேகத்திலே மின்னல் மின்னினாற் போன்றிருக்கும்; | | |
| மற்று | அன்றியும்; | | |
| அவன் தன் | அப்பெருமானுடைய | | |

* * *—எம்பெருமானுடைய ஆபரணாலங்காரத்திலும் கண்ணழகிலும் ஈடுபட்டு அநுபவித்துப் பேசுகிறார். இரண்டாமடியின்

தனிச்சீர் 'தெரியுங்கால்' என்றும் 'திரியுங்கால்' என்றும் இரு வகைப்பாட முள்ளது. முந்தின பாடத்தில், எம்பெருமான் பெரிய மலைபோன்ற தனது திருமார்பில் ரத்நஹாரத்தைச் சாத்திக்கொண்டிருக்கும்படியை அநுஸந்தித்தால் காளமேகத்திலே மின்னல் மின்னினாற்போலே யிருக்கும் என்பதாகக் கருத்தாகும். பிந்தின பாடத்தில்—எம்பெருமான் தனது திருமார்பிலே ரத்நஹாரத்தையணிந்து கொண்டு உலாவத் தொடங்கினால் காளமேகத்தில் மின்னல் மின்னினாற்போலே யிருக்கும் என்பதாகக் கருத்தாகும். கரிய திருமார்புக்குக் காளமேகமும் ரத்நஹாரத்திற்கு மின்னலும் ஏற்றவுவமையாம்.

[பாணொடுங்க இத்யாதி.] பாண்—இசைப்பாட்டு; அது ஒடுங்கும்படியாக [அதைவிட அதிக மதுரமாக] வண்டுகள் இசைபாடப் பெற்ற தாமரைப்பூப் போலே அவனுடைய திருக்கண்கள் விளங்குகின்றன என்றவாறு. ... .... ... ... (௫௫)

நிறம் வெளிது செய்து பசிது கரிதென்று *
இறையுருவம் யாமறியோ மெண்ணில் *—நிறைவுடைய
நாமங்கை தானும் நலம்புகழ வல்லளே *
பூமங்கை கேள்வன் பொலிவு. (௫௬)

| | |
|---|---|
| இறை | ஸர்வேச்வரனுடைய |
| உருவம் | திவ்யமங்கள விக்ரஹமானது |
| நிறம் | நிறத்தால் |
| வெளிது | வெளுத்திருக்குமோ (அல்லது) |
| செய்து | சிவந்திருக்குமோ, (அல்லது) |
| பசிது | பச்சென்றிருக்குமோ, (அல்லது) |
| கரிது | கறுத்திருக்குமோ, |
| என்று | எவ்வண்ணமாயிருக்குமென்று |
| எண்ணில் | ஆராயுமிடத்தில் |
| யாம் அறியோம் | நாம் அறிய மாட்டோம்: (இது நிற்க:) |
| நிறைவு உடைய | ஜ்ஞான சக்திகளில் பூர்த்தியை உடையவளான |
| நா மங்கை தானும் | ஸரஸ்வதீ தேவியும் |
| பூ மங்கை கேள்வன் | பூவிற்பிறந்த பெரிய பிராட்டிக்குக் கணவனான எம்பெருமானுடைய |
| பொலிவு | பூர்த்தியை |
| நலம் புகழ வல்லளே | நன்றாகப் புகழ சக்தியுடையவளோ? (அல்லள்.) |

* * *—1. "பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும் புறம் போலுநீர்மை பொற்புடைத் தடத்து வண்டுவிண்டுலாம் நீல நீர்மை" என்றும் 2. "நிகழ்ந்தாய் பால் பொன்பசுப்புக் கார்வண்ணம் நான்கும்" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் ஒவ்வொருயுகத்திலும் ஒவ்வொரு நிறத்தைக் கொண்டிருப்பதாக நூல்கள் கூறுகின்றனவாயினும், 3. "என்றேனும் கட்கண்ணால் காணாத அவ்வுருவை" என்று கட்புலனுக்கு இலக்காக மாட்டாததாகச் சொல்லப்படுகிற எம்பெருமான் திருவுருவத்தின் நிறத்தை நான் ஒன்றுமறியேன்; நானே அறியாதபோது ஸரஸ்வதிதானும் அறிந்து பேசவல்லளோ? ஏனென்னில்? [பூமங்கை கேள்வன் பொலிவு.] மாரீசன் இராவணனுக்கு ஹிதோபதேசம் பண்ணும் போது மர்மமறிந்து சொன்ன சொல் அறியீர்களோ? "𑌅𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌂 𑌹𑌿 𑌤𑌤𑍍𑌤𑍇𑌜𑍋 𑌯𑌸𑍍𑌯 𑌸𑌾 𑌜𑌨𑌕𑌾𑌤𑍍𑌮𑌜𑌾 = அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்றானே; (அதாவது) இராமனென்பவன் பிராட்டியைக் கைப்பிடித்த பரஞ்சோதியன்றோ? அச்சோதி நெஞ்சாலும் நினைப்பரிதன்றோ என்றானே. ஆகையாலே, பூமங்கை கேள்வனவனுடைய பொலிவைப்புகழ யாராலாகும்? என்கிறார். ... ... ... .... ... ... (நிசு)

பொலிந்திருண்ட கார்வானில் மின்னேபோல் தோன்றி *
மலிந்து திருவிருந்த மார்வன் *—பொலிந்த
கருடன் மேல்கொண்ட கரியான் கழலே *
தெருடன்மேல் கண்டாய் தெளி. (நிஎ)

| | | | |
|---|---|---|---|
| திரு | பிராட்டியானவள், | மலிந்து இருந்த மார்வன் | பொருந்தி யிருக்கப் பெற்ற திருமார்பை யுடையனாய் |
| பொலிந்து இருண்ட கார் | செறிந்து இருளை யுடைத்தான கார் காலத்திலுண்டான | பொலிந்த கருடன் மேல் கொண்ட | விளங்குகின்ற கருடனால் மேற்கொள்ளப்பட்டவனான |
| வானில் | மேகத்தில் | | |
| மின்னே போல் தோன்றி | மின்னல் போல் பிரகாசித்து | | |

1. திருச்சந்த விருத்தம். 2. நான்முகன் திருவந்தாதி.
3. பெரிய திருவந்தாதி.

| | | | |
|---|---|---|---|
| கரியான் | கருநிறப் பெருமானுடைய | தெருள்தன் மேல் | ஜ்ஞாநத்திற்கு மேற்பட்டதான பக்திக்கு விஷயமென்று |
| கழலே | திருவடிகளே | தெளி கண்டாய் | (நெஞ்சே!) தெளிந்திரு. |

* * *—கீழ்ப்பாட்டில் "நிறம்வெளிது செய்து பசிது கரிதென்று இறையுருவம் யாமறியோம்" என்று எம்பெருமானுருவத்தைக் கனவிலுங் கண்டறியாதவர்போல ஆழ்வார் பேசினபேச்சு எம்பெருமானது திருச்செவியில் விழாதிருக்குமோ? விழுந்ததாகில் இச் சொல்கேட்டுப் பொறுத்திருக்க வல்லனோ அவன்? "திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் திகழுமருக்க னணிநிறமுங்கண்டேன், செருக்கிளரும் பொன்னாழிகண்டேன் புரிசங்கங் கைக்கண்டேன், என்னாழிவண்ணன்பா லின்று" என்று முதலடியில் தானே எல்லாங்கண்டதாகப் பேசின ஆழ்வார் திருவாக்கில் "இறையுருவம் யாமறியோம்" என்ற சொல் வெளிவந்தால் இஃது எம்பெருமானுக்கு ஸஹ்யமாயிருக்குமோ? உடனே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து பெரிய திருவடியின்மேல் வீற்றிருந்து காட்சிதந்தருளினன்; கண்ணாரக்கண்டு மகிழ்ந்து பேசுகிற பாசுரம்போலுமிது. கார்காலத்தெழுகின்ற கார்முகிலில் மின் மின்னினாற்போலே கரியதிருமேனியில் பொன்னிறத்தளான பெரிய பிராட்டி விளங்கப்பெற்றுக் கருடன்மீது ஸேவைஸாதிக்கின்ற பெருமானுடைய திருவடிகளிலேயே நெஞ்சே! நீ பக்திபண்ணு என்று திருவுள்ளத்திற்கு உபதேசித்தாராயிற்று. நெஞ்சே! என்னும் விளி வருவித்துக்கொள்க

தெருள்தன் மேல்கண்டாய்='தெருள்' என்று ஜ்ஞானத்திற்குப் பெயர்; 'கர்மஜ்ஞாந பக்திப்ரபத்திகள்' என்ற அடுக்கிலும் 'பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள்' என்ற அடுக்கிலும் ஜ்ஞாநத்திற்கு மேற்படியாக பக்தி சொல்லப்பட் டிருப்பதால், இங்கே தெருள்தன்மேல் என்றது பக்தியைச் சொன்னபடியாய், அவனது திருவடிகளை பக்திக்கு விஷயமாக்கு என்றதாம். அன்றியே, பக்தியும் ஜ்ஞாநத்தின் அவஸ்தா விசேஷமேயாதலால், தெருள் என்பதற்கே பக்தியென்று பொருள்கொண்டு, தெருள்தன்மேல்—பக்தி

யினாலே, கழல்கண்டாய்—திருவடிகளை (நெஞ்சே!) காணப் பெற்றாய்; தேளி—இனிமேல் கலக்கம்நீங்கித் தெளிந்திரு என்பதாகவுமுரைக்கலாம். .... .... ... (ருள)

தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி *
அளிந்த கடுவனையே நோக்கி *—விளங்கிய
வெண்மதியம் தாவென்னும் வேங்கடமே * மேலொருநாள்
மண்மதியில் கொண்டுகந்தான் வாழ்வு. (ருஅ)

| | | | |
|---|---|---|---|
| தெளிந்த | ஸ்வச்சமாயிருக்கிற | மேல் ஒருநாள் | பண்டொரு காலத்தில் |
| சிலாதலத்தின் மேல் இருந்த மந்தி | கற்பாறையின் மீது இருக்கும் பெண் குரங்கானது | மண் | பூமியை |
| அளிந்த கடுவனை நோக்கி | ஸ்நேஹமுள்ள ஆண் குரங்கை நோக்கி | மதியின் | தனது புத்தி சாதுரியத்தினால் |
| விளங்கிய வெண் மதியம் தா என்னும் வேங்கடம் | ‘விளங்குகின்ற வெளுத்த சந்திரனை(ப் பிடித்துக்) கொடு’ என்று சொல்லும்படி யிருக்கிற திருவேங்கடம் | கொண்டு | (மாவலியிடத்தில்) பெற்றுக்கொண்டு |
| | | உகந்தான் | திருவுள்ள முவந்த ஸர்வேச்வரன் |
| | | வாழ்வு | வாழுமிடம். |

* * *—கீழ்ப்பாட்டில் கருடன் மேற்கொண்ட கரியானாய் ஸேவை தந்தருளினவன் ‘என்னைத் திருவேங்கடமலையிலே நித்யமாகக் கண்டுகொண்டிரும்’ என்று சொல்லி மறைந்திடவே திருமலையிலே மண்டுகிறார். திருமலையின் சிகரம் சந்திரமண்டலத்தளவும் ஓங்கி யிருக்கின்றதென்ற அதிசயோக்திக்காக ஒரு வர்ணனை கூறுகின்றார். திருமலையில் கற்பாறையின்மீது பெண்குரங்கு உட்கார்ந்து கொண்டிருக்கின்றது; அதனருகில் ஆண்குரங்கும் ‘நமது பேடை நம்மை ஏவிக் காரியங்கொள்வது எப்போதோ’ என்று அதன் கட்டளையை எதிர்பார்த்துக் கொண்டு இராநின்றது; அதனை நோக்கிப் பெண்குரங்கானது ‘முகத்தினழகைப் பார்த்துக் கொள்வதற்குக் கண்ணாடி கொண்டுவந்து தா’ என்பாரைப்போலே ‘பூர்ண சந்திரனைப் பறித்துத் தா’ என்கிறதாம். இங்ஙனே சொல்

னும்படியாக ஓங்கியிருந்துள்ள திருமலையே ஓங்கியுலகளந்த வுத்தமன் வாழுமிடம் என்றாராயிற்று.

சிலாதலம்—வடசொல். மந்தி—பெண்குரங்கு. கடுவன்—ஆண் குரங்கு. மண்மதியிற் கொண்டுகந்தான்—கேட்டார் கேட்டபடியே தானம் பண்ணுவதென்று விரதம்பூண்டு மஹா தார்மிகனாயிருக்கிற மாவலியினிடத்தில் யாசகத் தொழில்கொண்டே காரியம்ஸாதிக்க வேணுமென்று நினைத்துச்சென்றது புத்தி சாதுரியமென்க. (ருஅ)

வாழும் வகையறிந்தேன் மைபோல் நெடுவரைவாய் *
தாழு மருவிபோல் தார்கிடப்ப *—சூழும்
திருமா மணிவண்ணன் செங்கண்மால் * எங்கள்
பெருமா னடிசேரப் பெற்று. (ருகூ)

| | |
|---|---|
| மை போல் நெடு வரை வாய் | மைபோல் இருண்டு பெரிதான மலையிடத்திலே |
| தாழும் | இருபக்கமும் தாழ விழுந்து பாய்கின்ற |
| அருவி போல் | அருவிபோலே |
| தார் கிடப்ப | மாலை சாத்தப் பட்டிருக்க, (அதிலே யீடுபட்டு) |
| சூழும் | ஒருக்ஷணமும் விட்டுப்பிரியாமல் வளைத்துக் கொண்டிருக்கிற |
| திரு | பிராட்டியை யுடையவனும் |
| மா மணி வண்ணன் | நீலமணிபோன்ற நிறத்தை யுடையவனும் |
| செம் கண் மால் | செந்தாமரை போன்ற திருக் கண்களை யுடைய பெரியோனுமான |
| எங்கள் பெருமான் | எம்பெருமானுடைய |
| அடி | திருவடிகளை |
| சேர பெற்று | அணுகப் பெற்றதனால் |
| வாழும் வகை அறிந்தேன் | உஜ்ஜீவிக்கும் வழி தெரிந்தவனானேன். |

* * *—எம்பெருமானுடைய கரிய திருமேனியிலே செந்நிறமான ரத்னங்களால் அமைந்த ஹாரங்கள் சாத்தப்பட்டிருப்பதானது அஞ்சனகிரியிலே அருவிகள் தாழ விழுந்தாற்போலே யிருக்கின்றனவாம். அவ்வழகிலே யீடுபட்டு அத்திருமார்பை ஒரு நொடிப்பொழுதும் விடமாட்டாதே சூழ்ந்து கிடக்கிறாள் பெரிய பிராட்டி; அப்படிப்பட்ட செங்கண்மாலுடைய திருவடிகளை நான்

சேரப் பெற்றதனால் 'இதுவே நமக்கு உஜ்ஜீவநம்' என்று துணிந்தேன். இனி விஷயாந்தரங்களில் அவகாஹித்துக் கெட்டுப்போக மாட்டேன்—என்றாராயிற்று.

மலைபருவிகள் வெண்ணிறமாகவும் பெருகுவதுண்டு; அங்குள்ள தாதுக்களுடன்கூடிச் செந்நிறமாகவும் பெருகுவதுண்டு; இங்கே 'அருவிபோல்தார் கிடப்ப' என்று பொதுப்படையாகக் கூறியிருப்பதனால் எதையேனுங் கொள்ளலாம். வெண்ணிறமான அருவியென்றால் அப்போது தார் என்றது முக்தாஹாரத்தைச் சொன்னபடியாம்; செந்நிறமான அருவியென்றால் மாணிக்கங்களழுத்தின ஹாரத்தைச் சொன்னபடியாம்.

சிசுபாலவத மஹாகாவ்யத்தில் முதல் ஸர்க்கத்தில் "[illegible] வக்ஷஃ." என்றுள்ள ச்லோகம் இப்பாட்டின் முன்னடிகட்குப் பொருத்தமாக நினைக்கலாகும்.

"எங்கள் பெருமானடி சேரப்பெற்று வாழும்வகையறிந்தேன்" என்று அந்வயம். ... ... .... ... (௫௯)

பெற்றம் பிணைமருதம் பேய்முலை மாச்சகடம் *
முற்றக்காத் தூடுபோ யுண்டுதைத்து *—கற்றுக்
குணிலை விளங்கனிக்குக் கொண்டெறிந்தான் * வெற்றிப்
பணிலம் வாய்வைத்துகந்தான் பண்டு. (௬௦)

| | | | |
|---|---|---|---|
| பெற்றம் | பசுக்களை | கன்று குணிலை கொண்டு | கன்றாகிய எறிதடியைக் கொண்டு |
| முற்ற காத்து | ஒன்று தப்பாமல் ரக்ஷித்தவனையும் | விளங்கனிக்கு எறிந்தான | விளாம்பழத்தின் மீது எறிந்தவனையுமுள்ள எம்பெருமான் |
| பிணை மருதம் ஊடு போய் | இரட்டை மருத மரங்களினிடையே சென்றவனையும் | பண்டு | முன்பொரு காலத்தில் |
| பேய் முலை உண்டு | பூதனையின்முலையை உண்டவனையும் | வெற்றி பணிலம் | ஜய சீலமான சங்கை |
| மா சகடம் உதைத்து | பெரிய சகடத்தை உதைத் தொழித்தவனையும் | வாய் வைத்து | வாயிலே வைத்து ஊதி |
| | | உகந்தான் | மகிழ்ந்தான் |

* * *—இப்பாட்டின் முன்னடிகளில், பெற்றம் முதலிய பெயர்ச்சொற்கள் 'காத்து' முதலிய வினைச்சொற்களை முறையே சென்று இயைதலால் முறைநிரனிறையாம்; இது வடமொழியில் யதாஸங்க்யாலங்காரம் என்றும், தென்மொழியில் நிரனிறையணி என்றும் அலங்கார சாஸ்த்ரிகள் கூறுவர். முதல் திருவந்தாதியிலுள்ள (54) "அரவமடல்வேழம் ஆன்குருந்தம் புள்வாய், குரவைகுடமுலை மற்குன்றம்—கரவின்றி, விட்டிறுத்து மேய்த்தொசித்துக் கீண்டு கோத்தாடி, உண்டட்டெடுத்த செங்கணவன்" என்ற பாசுரம் இத்தகையதே.

"சிவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி செங்கனிவாயெங்களாயர் தேவே!" என்கிறபடியே, நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாயிருக்கு மிருப்பிலுங்காட்டில் பசுக்களை மேய்க்குந் தொழிலையே பரமபோக்யமாகக் கொண்டவன்; இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்துசென்று வீரவிளையாட்டுச்செய்தவன்; பேய்ச்சியின் முலையைச் சுவைத்துயிருண்டவன்; பாலுக்கு அழுகிற பாவனையிலே அஸுராவிஷ்டமான சகடத்தை உதைத்துத் தள்ளினவன்; கன்றாயும் விளாமரமாயும் இரண்டு அஸுரர்கள்வந்து நிற்க, முள்ளைக்கொண்டே முள்ளைக் களைவதுபோல இரண்டையும் ஒருசேர முடித்தவன்; திருப்பவளத்திலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தைவைத்து ஊதி வெற்றியைத் தெரிவிப்பவன்—என்று சில பகவத் கதைகளை அநுபவித்துப் பேசினாராயிற்று.

கண்ணபிரானையன்றி மற்று எவனையும் கனவிலுங் கருதாதிருந்த ருக்மிணிப்பிராட்டிக்கு சிசுபாலனோடு விவாஹம் நடப்பதாகக் கோடித்து ஸித்தமாயிருந்த ஸமயத்தில் கண்ணபிரானது வரவை எதிர்பார்த்திருந்த அப்பிராட்டியின் நெஞ்சு முறிந்துபோய் இனிநாம் உயிர்துறப்பதே நல்லுபாயமென்று தீர்மானித்திருந்த க்ஷணத்தில் கண்ணபிரான் பதறி ஓடிவந்து புறச்சோலையிலே நின்று தனது ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஊத, அதனோசையானது அந்த ருக்மிணிப்பிராட்டியின் செவியிற் புகுந்து ஆனந்தத்தை விளைவித்ததென்கிற கதையை ஈற்றடிக்குப் பொருத்தமாக அநுஸந்திக்கலாம். அன்றி, பாரதப்போரில் செய்த சங்கொலியையுங் கொள்ளலாம்.

புணிலம்—சங்கு. ... ... ... ... (௬௦)

பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம் *
கொண்டங் குறைவாற்குக் கோயில்போல் *—வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை *
இளங்குமரன்றன் விண்ணகர். (சுக)

| | |
|---|---|
| வைகுந்தம் | பரமபதத்தை |
| கொண்டு | இருப்பிடமாகக் கொண்டு |
| அங்கு | அவ்விடத்திலே |
| உறைவாற்கு | வாஸம்பண்ணுமெம் பெருமானுக்கு, |
| பால் கடல் | திருப்பாற்கடலும் |
| வேங்கடம் | திருமலையும் |
| வண்டு வளம் கிளரும் நீள் சோலை | வண்டுகளின் திரள் மிக்கிருக்கிற பரந்தசோலைகளை யுடைத்தாய் |
| வண் | அழகியதாய் |
| பூ | போக்யமான |
| கடிகை | திருக்கடிகைக் குன்றும் |
| இள குமரன் தன் விண்ணகர் | நித்யயுவாவான அவனுடைய தன்னதான திருவிண்ணகரும் |

(ஆகிய இத்திருப்பதிக ளெல்லாம்)

| | |
|---|---|
| பண்டு எல்லாம் | என்னை விஷயீகரிப்பதற்கு முன்பெல்லாம் |
| கோயில் போல் | கோயில்களாக இருந்தன போலும். |

[இப்போதோவென்னில், என் னெஞ்ச மொன்றே அவனுக் குக் கோயிலாயிருக்கிறது என்பது உள்ளுறை.]

* * *—இப்பாட்டை இரண்டுவகையாக நிர்வஹிப்பதுண்டு, அவற்றுள் முதல்வகை எங்ஙனே யெனின்; ஸ்ரீ வைகுண்டத்தை வாஸஸ்தானமாகவுடைய எம்பெருமானுக்குத் திருப்பாற்கடல் திருவேங்கடம் திருக்கடிகை முதலிய திருப்பதிகள் முன்பெல்லாம் கோயிலாக அமைந்திருந்தன; (அதாவது—என்னுடைய நெஞ்சகம் அவனுக்குக் கோயிலாகக் கிடைப்பதற்குமுன்பு.) இப்போதோ வென்னில், அவன் விரும்பியெழுந்தருளி யிருப்பதற்குப் பாங்காக என்னுடைய நெஞ்சகம் அவனுக்கு ஆலயமாகக் கிடைத்துவிட் டதனால் அத்திருப்பதிகளிற் பண்ணுமாதரத்தை என்னெஞ்சிலே பண்ணிக்கொண்டு கிடக்கிறான் என்பதாம். மூலத்தில் 'பண்டெல் லாம்' என்றவளவுக்கு இவ்வளவு விசாலமான கருத்துக்கொள் வது கிரமமென்று தோன்றினால், வேறொருவகையான நிர்வாஹம் காட்டுவோம்;—ஆழ்வார் இப்பாட்டால் திருக்கடிகைக்குன்றைக்

சிறப்பித்துக் கூறுவதாகக்கொள்க. திருப்பாற்கடல் திருவேங்கடம் முதலிய திருப்பதிகளிற் காட்டிலும் * வண்டுவளங்கிளரும் நீள் சோலை வண்பூங்கடிகையிலே அதிகமான ஆதரத்தைப் பெருக்கி அதொன்றையே கோயிலாகக் கொண்டிருக்கிறானென்பதாகக் கொள்க.

கடிகை—தொண்டைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாய், 'சோளஸிம்ஹபுரம்' என்று ப்ரஸித்தமாக வ்யவஹரிக்கப்பட்டு வரும் திருப்பதி. வடமொழியில் "கடிகா" என்னுஞ் சொல் ஒரு நாழிகையென்ற பொருளுடையது: இத்திருப்பதியில் ஒரு நாழிகை வாஸம்பண்ணப் பெற்றாலும் முக்தி எளிதாகுமென்று காட்டுதற்காக இத்திருநாமமாயிற்றென்ப. .... ... (சுக)

விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம் *
மண்ணகரம் மாமாட வேளுக்கை *—மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி *
தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு. (சுஉ)

| | |
|---|---|
| விண்ணகரம் | திருவிண்ணகரமும் |
| வெஃகா | திருவெஃகாவும் |
| விரி திரை நீர் வேங்கடம் | விரிந்து அலையெறிகிற நீர்வளம் பொருந்திய திருமலையும் |
| மண் நகரம் | பூமியிலுண்டான வைகுந்தமாநகர் போன்ற |
| மா மாடம் வேளுக்கை | பெரிய மாடங்களையுடைத்தான திருவேளுக்கையும் |
| மண் அகத்த தென் குடந்தை | பூமியிலுண்டான அழகிய திருக்குடந்தையும் |
| தேன் ஆர் திரு அரங்கம் | தேன் (வெள்ளமிடுகிற சோலைகள்) பொருந்திய திருவரங்கமாநகரும் |
| தென் கோட்டி | தென் திருக்கோட்டியூரும் |
| | (ஆகிய இத்திருப்பதிகள்) |
| தன் குடங்கை | தனது உள்ளங்கையாலே |
| நீர் ஏற்றான் | (மாவலிபக்கல்) உதகதானம் பெற்ற பெருமான் |
| தாழ்வு | தங்குமிடங்களாம். |

* * *—'ஒப்பிலியப்பன் ஸந்நிதி' என்கிற திருவிண்ணகர், 'யதோக்தகாரி ஸந்நிதி' என்கிற திருவெஃகா, திருமலை, 'ஆளழகிய சிங்கர்ஸந்நிதி' என்கிற கச்சித்திருவேளுக்கை, திருக்குடந்தை,

திருவரங்கம் பெரியகோயில், திருக்கோட்டியூர் ஆகிய இத்திருப்பதிகளெல்லாம் எம்பெருமான் தங்குமிடங்கள் என்று சில திருப்பதிகளைப்பேசி அநுபவித்தாராயிற்று.

ஈற்றடியில் 'தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு' என்றருளிச்செய்ததன் கருத்து—மஹாபலிபக்கல் யாசகனாகப் போகும் போது எவ்வளவு ஸௌலப்யமும் ஸௌசீல்யமும் தோன்றிற்றோ அவ்வளவு சீலம் இத்திருப்பதிகளிலும் தோன்றும்படி யிருக்கிறானென்பதாம்.

தாழ்வு—தாழ்ச்சிதோற்ற இருக்குமிடமென்கை. (சுஉ)

தாழ்சடையும் நீண்முடியு மொண்மழுவும் சக்கரமும் *
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் *—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு *
இரண்டுருவு மொன்றா யிசைந்து. (சுங)

| | | | |
|---|---|---|---|
| தாழ் சடையும் | தாழக் கட்டின ஜடையும் | இரண்டு உருவும் | ஒன்றுக்கொன்று சேராச் சேர்த்தியா யிருக்கிற இரண்டு வடிவும் |
| நீள் முடியும் | நீண்ட திருவபிஷேகமும் | சூழும் திரண்டு அருவி பாயும் திரு மலைமேல் எந்தைக்கு | நாற்புறமும் திரள் திரளாக அருவிகள் பெருகப் பெற்ற திருமலைமேலுள்ள அப்பனுக்கு |
| ஒண் மழுவும் | அழகிய மழுவென்னு மாயுதமும் | ஒன்று ஆய் இசைந்து தோன்றும் | ஒரு வடிவமாய் அமைந்து விளங்காநின்றது; |
| சக்கரமும் | திருவாழி யாழ்வானும் | ஆல் | ஆச்சரியம்! |
| சூழ் அரவும் | சுற்றிலும் அணிந்துள்ள நாகாபரணமும் | | |
| பொன் நாணும் | பொன்னரைநாணு மாய்க்கொண்டு | | |

* * *—எம்பெருமான் செய்தருளின பல அவதாரங்களில் சங்கர நாராயணாவதார மென்பதுமொன்று; இது ஹரிஹராவதார மென்றும் சொல்லப்படும். பாதிவடிவம் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியாகவும் பாதிவடிவம் பரமசிவமூர்த்தியாகவும் கொண்டதாமிது. எம்பெருமான் கொண்ட கோலங்களெல்லாம் பகவத்பக்தர்கட்கு உத்தேச்யமாகையாலே இவ்வுருவந்தன்னையும் ஆழ்வார்கள் அநுஸந்தித்துப் பாசுரங்கள் பேசுவதுண்டு.

"திருமலைமே லெந்தைக்கு இரண்டுருவு மொன்ருயிசைந்து தோன்றும்" என்று இங்கு ஆழ்வா ரருளிச்செய்திருப்பது கொண்டு இதற்குப் பலர் பொருள்கொள்வ தெங்ஙனேயெனில்; திருவேங்கடமுடையானுக்குச் சடையுமுண்டு, கிரீடமுமுண்டு; மழுவுமுண்டு, சக்கரமுமுண்டு; நாகாபரணமுமுண்டு பொன்னுணு முண்டு—என்றிங்ஙனே பொருள்கொள்வர். இது பொருந்தாது; திருவேங்கடமலையில் அர்ச்சையாக எழுந்தருளியிருக்கு மெம் பெருமான் பக்கல் தாழ்சடையுமில்லை, ஒண்மழுவுமில்லை, சூழரவு மில்லை; நீண்முடியும் சக்கரமும் பொன்னுணுமேயுள்ளன. ஆகில் "திருமலைமேலெந்தைக்கு இரண்டுருவு மொன்ருயிசைந்து தோன்றும்" என்றது எங்ஙனே சேருமென்னில்; நன்கு சேரும்; திருவேங்கடமுடையானுக மேவைஸாதிக்கும் திருமலையப்பன்ருனே ஒரு ஸமயத்தில் இரண்டுருவையும் ஒன்ருயிசைத்துக்கொண்டு தோன்றினவன்-என்றபொருளே இதிலடங்கியுள்ளதாம். இதற்கு ஒன்றிரண்டு உதாரணங்களுங் காட்டுவோம்;—திருப்பள்ளியெழுச்சியில்—"மாமுனி வேள்வியைக்காத்து அவபிரதமாட்டிய அடுதிறலயோத்தி யெம்மரசே! அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே" என்கிருர். இதனுல் திருவரங்கத்தில் சேஷசயனத்தில் பள்ளி கொண்டிருக்கும் அழகிய மணவாளன்ருனே விச்வாமித்ர முனிவனுடன் சென்று வேள்வியைக் காத்துவந்தான் என்றதாகுமோ? அந்த ஸ்ரீராமபிரானும் இந்த அழகிய மணவாளனும் ஏகதத்துவம் என்றபடியா மத்தனையன்ருே? இன்னமும், பூதத்தாழ்வார் "அத்தியூரான் புள்ளையூர்வான் அணிமணியின் துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான்" என்றருளிச் செய்கிருர்; இதனுல் கச்சி நகர்ப் பேரருளாளப் பெருமாள் திருவனந்தாழ்வான்மீது பள்ளி கொண்டிருக்கிருர் என்றதாகுமோ? நாகத்தின்மேல் துயில்கொள்ளுமெம்பெருமானும் அத்தியூரானும் ஏகதத்துவம் என்றபடியா மத்தனையன்ருே. அப்படியே இங்கும், சங்கரநாராயணுவதாரமெடுத்த பெருமானும் திருமலைமேலெந்தையும் ஏகதத்துவம் என்றதாகுமத்தனையன்றி வேறில்லை. ஹரிஹரரூபத்தால் காட்டியருளின சீலம் திருவேங்கடமுடையான் பக்கலில் பொலிகின்றது என்று அநுபவித்துச் சொன்னுரென்க.

ஸுந்தரபாஹுஸ்தவத்தில் திருமாலிருஞ்சோலை யழகருடைய திவ்யாவயவங்களை அநுபவித்துப் பாசுரமிட்டுப் பேசாநின்ற கூரத்தாழ்வான்-"யசோதாம்ஸுஸ்ருஷ்டாங்குளித ஸம்ஸ்காரஸ்ய ஸ்தித தள கபோலாவஸ்யாவி ஹ்ருந்நாஸாத தக்ஷோபங்கள விராஜதே........ஸுந்தர பாஹோ:" [யசோதைப்பிராட்டியானவள் தனது கைவிரல் நுனியால் கண்ணபிரானது மோவாய்க் கட்டையை நிமிர்த்து முத்தமிட்டாளே, அதனாலுண்டான ஹர்ஷம் இன்றைக்கும் இடையறாமல் இவ்வழகருடைய திருக்கபோலங்களிலே திகழாநின்றது] என்கிறார். இப்புடைகளிலே பலபல ஸ்ரீஸூக்திகளுண்டு. அங்ஙனமே யிங்குங் கொள்க ... (கூங)

இசைந்த வரவமும் வெற்புங் கடலும் *
பசைந்தங் கமுது படுப்ப *—அசைந்து
கடைந்த வருத்தமோ கச்சி வெஃகாவில் *
கிடந்திருந்து நின்றதுவு மங்கு. (கூச)

| | |
|---|---|
| இசைந்த | கடைகயிறாகக் கொள்வதற்குத் தகுதியான |
| அரவமும் | வாஸுகிநாகமும் |
| (இசைந்த) | மத்தாக நாட்டுவதற்குத் தகுதியான |
| வெற்பும் | மந்தரபர்வதமும் |
| (இசைந்த) | தாழியாக்குவதற்குத் தகுதியான |
| கடலும் | கடலும் (ஆகிய இம் மூன்றையும்) |
| பசைந்து | ஒன்றோடொன்று ஸம்பந்தப் படுத்தி |
| அங்கு | அந்தக்கடலிலே |
| அமுது | அம்ருதமானது |
| படுப்ப | உண்டாம்படி |
| அசைந்து | அலைச்சல்பட்டு |
| கடைந்த வருத்தமோ | கடைந்ததனாலுண்டான ஆயாஸத்தினாலோ |
| கச்சி | காஞ்சீபுரத்திலுள்ள |
| வெஃகாவில் | திருவெஃகாவில் |
| கிடந்து | சயனித்துக் கொண்டும் |
| அங்கு | அக்காஞ்சீபுரத்தில் (திருப்பாடகத்தில்) |
| இருந்து | வீற்றிருந்தும் (திருவூரகத்தில்) |
| நின்றதுவும் | நின்று கொண்டும் இருப்பது ? |

* * *—தன்னை விரும்பாதே உபயோகமற்ற க்ஷுத்ரபலன்களை விரும்புமவர்கட்கும் எம்பெருமான் உடம்புநோவக் காரியஞ் செய்து பயனளிப்பவன் என்பதை, தேவர்கட்குக் கடல்கடைந்து

அமுதமளிக்க வரலாறுகொண்டு அநுஸந்தித்து உள்குழைகின்றார். பிரானே ! இடமும்வலமுமாக அசைந்தசைந்து கடல்கடைந்ததனாலுண்டான ஆயாஸத்தினால்தானோ கச்சித் திருப்பதிகளிலே கிடப்பதும் இருப்பதும் நிற்பதுமாகப் படுகிறாய் ? என்கிறார்.

கச்சிவெஃகாவில் சயனிப்பது மாத்திர முண்டேயன்றி நிற்பது மிருப்பதும் அங்கில்லையே ; அப்படியிருக்க "கச்சிவெஃகாவில் கிடந்திருந்து நின்றதுவுமங்கு" என்று கிடத்தலிருத்தல் நிற்றல் மூன்றும் வெஃகாவிலே நிகழ்வனவாக அருளிச்செய்தது எங்ஙனே ? என்று சங்கை பிறக்கும் ; பிரகரணத்திற்குப் பொருத்தமாக, கச்சி என்ற சொல்லால் பாடகத்தையுமூரகத்தையும் சேர்த்து அநுஸந்தித்துக்கொள்ளவேணு மென்பதே ஆழ்வார் திருவுள்ளமாதலின் ஒரு குறையுமில்லை. ["நின்றதெந்தையூரகத்து இருந்ததெந்தை பாடகத்து, அன்று வெஃகணைக்கிடந்தது" என்பது திருச்சந்த விருத்தம்.]

இப்பாட்டில் மற்றுமோர் சங்கை பிறக்கலாம்: உலகத்தில் சிரமமுண்டானால் அதற்குப் பரிஹாரமாகச் சயனித்துக்கொள்வதுண்டு ; 'இங்ஙனே சயனித்தருள்வது இன்ன ஆயாஸந்தீரவோ?' என்று கேட்பது பொருந்தும் ; திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்தில் "நடந்த கால்கள் நொந்தவோ ? நடுங்கஞால மேனமாய், இடந்த மெய்குலுங்கவோ விலங்குமால்வரைச் சுரம், கடந்த கால் பரந்த காவிரிக்கரைக் குடந்தையுள் கிடந்தவாறு" என்றும், நம்மாழ்வார் திருவாய்மொழியில் "கொடியார்மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னே நீ துயில் மேவி மகிழ்ந்ததுதான், அடியாரல்லல் தவிர்த்தவசவோ அன்றேலிப்படிதான் நீண்டுதாவிய அசவோபணியாயே ?" என்றும் அருளிச் செய்தவை போல இவ்வாழ்வாரும் "அசைந்து கடைந்த வருத்தமோ கச்சி வெஃகாவில் கிடப்பது ?" என்றருளிச் செய்வதன்றோ பொருந்தும் ; "இருந்து நின்றதுவுமங்கு" என்றது எதுக்கு ? சிரமத்தினால் கிடத்தலுண்டேயன்றி இருத்தலும் நிற்றலும் ச்ரமகார்யமன்றே என்று சிலர் சங்கிப்பர்கள் ; கேண்மின் ; இங்கு "அசைந்து கடைந்த வருத்தமோ ?" என்றிருத்தலால் ஆடியாடி அசைந்தசைந்து கடைந்ததனாலுண்டான ஆயாஸம் தீர்வதற்காக நிற்கவுமாம் இருக்கவுமாம் கிடக்கவுமாம். ... ... (கூச)

அங்கற் கிடரின்றி யந்திப் பொழுதத்து *
மங்க விரணியன தாகத்தை *—பொங்கி
அரியுருவமாய்ப் பிளந்த வம்மா னவனே *
கரியுருவம் கொம்பொசித்தான் காய்ந்து. (கூரு)

| | | | |
|---|---|---|---|
| அங்கற்கு | பிள்ளையான ப்ரஹ்லாதனுக்கு | பிளந்த | கிழித்தொழித்த |
| இடர் இன்றி | ஒருதுன்பமும் வாராதபடி | அம்மான் அவனே | அப்பெருமானே |
| அந்தி பொழுதத்து | ஸாயங்காலத்தில் | காய்ந்து | சீறி |
| இரணியனது | ஹிரண்யனுடைய | கரி உருவம் | கறுத்தவுருவத்தையுடைத்தாயிருந்த குவலயாபீடத்தினுடைய |
| ஆகத்தை | மார்பை | | |
| மங்க | அழிந்துபோம்படியாக | கொம்பு | தந்தத்தை |
| அரி உருவம் ஆய் பொங்கி | நரஸிம்ஹரூபியாய்க் கிளர்ந்து | ஒசித்தான் | முறித்துப் போட்டான். |

* * *—நரஸிம்ஹாவதாரம் செய்தருளினவனும் ஸ்ரீ க்ருஷ்ணாவதாரம் செய்தருளினவனும் ஒருவனே யென்கிறார்.

அங்கற்கு இடரின்றி=வடமொழியில், மகனை 'ஆத்மஜன்' என்று சொல்வதுபோலத் தமிழில் அங்கன் என்கிறது; அங்கத்திலிருந்து தோன்றினவன் என்று பொருள்: எனவே ஹிரண்யபுத்ரனை ப்ரஹ்லாதாழ்வானைச் சொல்லிற்றாயிற்று. அவனுடைய இடர் தீர்வதற்காக அரியுருவமானான் என்கையாலே, எம்பெருமான் தன் திறத்திலே ஆஸுரப்ரக்ருதிகள் எத்தனை அபசாரப்பட்டாலும் அதனால் சிறிதும் திருவுள்ளம் சீறமாட்டான்; தன்னடியவர் பக்கல் அபசாரப்படுமளவில் அவ்வபராதிகளைப் பங்கப்படுத்தியே தீருவன் என்கிற அர்த்தம் வெளியாகிறது.

"ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயர் அருளிச்செய்வர்" என்று ஸ்ரீவசநபூஷணத்தில் ஸ்ரீஸூக்தி. அதாவது—ஸ
மாத்திரத்தாலே எல்லாவற்றையும் நிர்வ
யான ஸர்வேச்வரன் தன்னையழியமாறி இதர
துக் கைதொடனாய் நின்று செய்த ஹிரண்

மான அதிமாநுஷ க்ருத்யங்களெல்லாம்–ப்ரஹ்லாதன் மஹர்ஷிகள் முதலான பாகவதர் திறத்தில் அவ்வவர்பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே யென்று நஞ்சீய ரருளிச்செய்வராம்.

அஸுர ராக்ஷஸர்களாலே தனக்கு நேரும் இடர்களைக் கணிசிக்கமாட்டான் எம்பெருமான்; அடியார்க்கு ஓரிடர் நேர்ந்தால் அதனை உடனே பரிஹரிக்கப் பாடுபடுவன் என்க: இது தோன்றவே இங்கு 'அங்கற்கு இடரின்றி' எனப்பட்டது. [இடரின்றி= இடரில்லாமலிருக்கும் பொருட்டு.] ஈற்றடியில், "கரியின் கொம்பொசித்தான்" என்ருலே போதுமே; 'கரியுருவம்' என்றதென்? என்னில்; மேலெழுப்பார்வைக்கு அது யானையாயிருந்த தத்தனை; உண்மையில் அஸுரவடிவேயாம் அது–என்ற கருத்தை வெளியிடுதற்கென்க. உருவத்தினல் கரியாயிருந்த [யானையாயிருந்த] விலங்கின் கொம்பை முறித்தவன் என்றபடி. கரீ—வடசொல்: துதிக்கையுடையதென்று காரணக்குறி. இனி, கரியென்றதைத் தமிழ்ச்சொல்லாகவே கொண்டு உரைக்கவுமாம்: (பதவுரை காண்க.) (சுரு)

காய்ந்திருளை மாற்றிக் கதிரிலகு மாமணிகள் *
ஏய்ந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப * — வாய்ந்த
மதுகைடபரும் வயிறுருகிமாண்டார் *
அதுகேடவர்க் கிறுதி யாங்கு. (சுசு)

| | |
|---|---|
| காய்ந்து | சீறி |
| இருளை மாற்றி | இருளைப் போக்கி |
| கதிர் இலகு | ஒளிவிடாநின்றுள்ள |
| மா மணிகள் | சிறந்த ரத்னங்கள் |
| எய்ந்த | பொருந்தியிருக்கிற |
| பணம் | (தன்னுடைய) படங்களினுடைய |
| கதிர் மேல் | ஒளிக்குமேலே |

| | |
|---|---|
| மது கைடபரும் | மதுகைடபர்கள் |
| வயிறு உருகி மாண்டார் | குடலழுகி முடிந்து போனர்கள்; |
| அவர்க்கு | அந்த மதுகைடபர்களைப்போலே பிரதிகூலராய் வருமவர்களுக்கு |
| ஆங்கு | அவ்வண்ணமாகவே |
| அது இறுதி கேடு | அப்படிப்பட்ட ப்ராண விநாச மான கேடே (பலிக்கும்.) |

கடைந்த வ(ருந்தம்மா ?)
கசைந்து கடைந்தத[illegible]சுவிட,
[illegible]ாம் இருக்கவுமாம் க[illegible]

* * *—தூணில்வந்து தோன்றி ப்ரஹ்லாத விரோதியை முடித்த வரலாற்றைக் கீழ்ப்பாட்டில் அநுஸந்தித்தார். எம்பெருமான் உறங்குவான்போலிருக்கும்போதே அநாயாஸமாக எதிரிகளை முடிக்கவல்லவனாயிருக்கையில் உணர்ந்திருந்து விரோதிநிரஸநஞ் செய்தது அவனுக்கு ஓரேற்றமோ? என்று சொல்ல நினைத்து, மதுகைடபர்களை எளிதாக முடித்திட்டபடியை இப்பாட்டில் அருளிச்செய்கிறார்.

மதுகைடபர்கள் மடிந்த வரலாறு பலவிதமாகச் சொல்லப் படுவதுண்டு; அவற்றுள் ஒருவிதம் வருமாறு:—பிரமதேவனது தினப்பிரளயத்தில் இவ்வுலகமெல்லாம் பெருங்கடலினால் எங்கும் நீர்மயமாயிருந்த பொழுது அவ்வெள்ளத்தில் திருமால் அரவணையில் அமர்ந்திருக்கையில், அத்திருமாலினிடத்து நின்று ரஜஸ் தமோ குணங்களின் வடிவமாகத் தோன்றி "எம்மை நீ கொல்லுக என்று தம் வாயாற்சொல்லிய பின்னரே தம்மைப் பிறர் கொல்லலாகும்" என்று வரம்பெற்ற மதுகைடபரிருவரும் அப்பிரளய நீரைக் குழப்பிக்கொண்டு பேராரவாரத்துடன் சென்று பிரமதேவனைக் கண்டு அவனிடத்துநின்று வேதங்களையெல்லாம் பறித்துக்கொண்டு அப்பிரளய வெள்ளத்தில் மறைந்தனராக, அப்போது தான் செய்யவேண்டுவது இன்னதெனத் தேறாது திகைப்புக் கொண்ட அப்பிரமன் பின்னர்ச் சிறிது தெளிந்து திருமாலைத்துதித்துத் தனக்கு நேர்ந்த ஆபத்தை முறையிட, அக்கடவுள் ஹயக்ரீவாவதாரஞ்செய்து அக்கடலிற்புக்கு இனியதோர் இசையைப் பாட, அவ்வினிய கீதத்தைக்கேட்ட அவ்வசுரர்கள் அவ்வேதங்களை ஓரிடத்து வைத்திட்டு அவ்வொலிவந்த வழியைப்பிடித்துச்செல்லுமளவில் திருமால் அவ்வேதங்களுள்ள விடத்திற்சென்று அவற்றைக் கொணர்ந்து பிரமனுக்குத் தந்தருள, அப்போது ஒருவரையுங் காணாதவராய் வேதங்களும் எடுத்துக்கொண்டு போகப்பட்டதையுணர்ந்த அவ்வசுரர்கள் மிகச்சினந்து அரவணையில் அறிதுயிலமரும் பரம்பொருளைக்கிட்டிப் போர்செய்யத் தொடங்கவே, திருமாலுக்கும் அவ்வசுரர்க்கும் வெற்றி தோல்விகளின்றி நெடுங்காலம் பெரும்போர் நிகழ்ந்ததாக, முடிவில் திருமாலை நோக்கி அவர்கள் 'உனது ஆற்றலுக்கு உவந்தோம்; வேண்டும் வரமென்று

றுக்கொள்' என்ன; அக்கடவுள் 'யான் உங்களைக் கொல்ல வேணும்' என்று வரம்வேண்ட, அவர்களும் அதற்கு இணங்குகையில், திருமாலும் 'உங்கட்கு வேண்டும் வரங்கொண்மின்' என்ன; 'ஒருவரும் இறவாத இடத்தில் நாங்கள் இறக்கவேண்டும்' என்று அவர்கள் வேண்ட, திருமாலும் அங்ஙனமே வரமளித்துத் தனது திருத்துடையைக் கொண்டு அவர்களை இறுக்கிக் கொன்றிட்டனன் என்பதாம்.

கூரத்தாழ்வான் ஸுந்தரபாஹு ஸ்தவத்தில் அழகருடைய திருத்துடைகளை வருணிக்குங்கால், "விஷ்உஷய கெட ஸீட ள—பிஷ்ட துஷ்ட மதுகைடப ேடள" என்றும், பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருத்துடைகளை வருணிக்குங்கால் "உஷிவ யகெட ஸவ......கிஉவதிஉஹி ஈஃமகஜுரொவெள?—மதமிவ மதுகைடபஸ்ய.......கிமுபமிமீமஹி ரங்கதுஞ்ஜரோர்வோः" என்றும் அருளிச்செய்திருக்கையாலே மதுகைடபர்கள் திருமாலின் திருத்துடையில் இறுகி முடிந்தனர் என்பது தெற்றென விளங்கும். இதிஹாஸ புராணங்கள் பலவகைப் பட்டிருத்தலால் இப்பாட்டில் ஆழ்வாரருளிச் செய்கிற விதமாகவும் உண்டென்று கொள்க. அரவணையில் துயில் கொள்ளும் எம்பெருமானோடு போர் புரிவதாக மதுகைடபர்கள் கிட்ட வந்த மாத்திரத்திலே திருவனந்தாழ்வானுடைய உஷ்ணமான மூச்சுக்காற்று வீசினவளவிலே அவ்வசுரர்கள் வயிறுருகி மாண்டொழிந்தனர் என்கிறார்.

1. "மேருகிரியவுணனுடல் மிடல் கெடுத்தா யென்பர் அது, உன் கூருகிரேயறிந்ததல்லால் கோவே! நீ அறியாயால்" என்றாற்போலே, உண்மையில் திருத்துடைகளால் இறுக்கிக் கொல்லப்பட்ட அவ்வசுரர்களை ஆதிசேஷனுடைய வெவ்வுயிர்ப்பினால் வயிறுருகி மாண்டனராகச் சொல்வதும் பொருந்தியதேயாம். அதிசயோக்தியில் ஒருவகையென்க.

அது கேடவர்க்கிறுதியாங்கு=2. "என்றுமென்பிள்ளைக்குத் தீமை செய்வார்கள் அங்ஙனமாவர்களே" என்று யசோதைப் பிராட்டி கைசுடுக்கி வைதாளே, அது போலக் கொள்க. கண்ணாம்

1 திருவரங்கக் கலம்பகம். 2 பெரியாழ்வார் திருமொழி 3—3—7.

பிரான் விஷயத்தில் தீமை செய்பவர்கள் வத்ஸாஸுரனும் கபித்தாஸுரனும் பட்டபாடு படுவர்கள் என்று அவள் சாபமிட்டாற் போல, இவ்வாழ்வாரும் சாபமிடுகிறார்—எம்பெருமான் விஷயத்தில் பிராதிகூல்யமுள்ளவர்கள் மதுகைடபர்கள் பட்டபாடு படுவர்கள் என்கிறார்.

அவர்க்கு என்றது—அந்த மதுகைடபர்களைப் போன்ற விரோதிகளுக்கு என்றபடி. .... .... .... (கசு.)

ஆங்குமலரும் குவியுமாலுந்திவாய் *
ஓங்கு கலத்திணேண்போது *—ஆங்கைத்
திகிரிசுடரேன்றும் வெண்சங்கம் * வானில்
பகருமதி யென்றும் பார்த்து. (கள)

| | | | |
|---|---|---|---|
| மால் | ஸர்வேச்வரனுடைய | (கை ஆம்) | இடத்திருக்கையிலுள்ள |
| உந்தி வாய் | திருநாபியிலே | வெண் சங்கம் | வெளுத்த சங்கை |
| ஓங்கு | உயரவளர்ந்த | வானில் பகரும் மதி என்றும் | ஆகாசத்தில் விளங்குகிற சந்திரனென்றும் |
| ஒண் கமலத்தின் போது | அழகிய தாமரைப் பூவானது | பார்த்து | நினைத்துக்கொண்டு |
| கை | அவனுடைய வலத் திருக்கையில் | ஆங்கு | ஏககாலத்திலே |
| ஆம் | உண்டான | மலரும் குவியும் | மலர்வதும் மூடிக் கொள்வதுமாயிரா நின்றது. |
| திகிரி | திருவாழியை | | |
| சுடர் என்றும் | ஸூர்யனென்றும் | | |

* * *—சேஷசயனத்தில் பள்ளிகொள்ளுமெம்பிரானுடைய திருநாபிக்கமலம் நன்றாக விகஸித்ததாகவுமிராதே நன்றாக மூடிக் கொண்டதாகவுமிராதே மலர்வதும் மொட்டிப்பதுமா யிருக்கிற அழகை அநுபவித்துப் பேசுகிறார். எம்பெருமானுடைய வலத் திருக்கையில் திருவாழியாழ்வான் விளங்குகிறான்; "ஸு஦ர்ஶநம் ஭ாஸ்கரகோடிதுல்யம்—ஸுதர்சநம் பாஸ்கர கோடிதுல்யம்" என்று அநேகமாயிரம் ஸூர்யர்களுக்கு ஸமானமாக ஸுதர்சநாழ்வான் சொல்லப்பட்டிருப்பதால் அவ்வாழ்வானைக் கண்டு ஸூர்யனென்றெண்ணி உந்திக்கமலம் மலரத் தொடங்குகின்றது; இடத் திருக்கையில் ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வான் வெள்ளை வெளே லென்று

விளங்குகிறான்; 1 "சந்திரமண்டலம் போல் தாமோதரன் கையில்........வலம் புரியே!" என்று அவன் சந்த்ரஸமாநனாகச் சொல்லப்பட்டிருப்பதால் அவ்வாழ்வானைக்கண்டு சந்திரனென் றெண்ணி மூடிக்கொள்ளத் தொடங்குகிறது. இப்படி மாறிமாறி மலர்வதும் மூடுவதுமாயிருக்குமிருப்பொழிய ஸ்திரமான வொரு நிலைமையில்லை யென்கிறார். .... ... ... (கூஎ)

பார்த்த கடுவன் சுனைநீர் நிழற்கண்டு *
பேர்த்தோர் கடுவனெனப் பேர்ந்து *— கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும் வேங்கடமே * மேனாள்
விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு. (கூஅ)

| | | | |
|---|---|---|---|
| சுனை நீர் | திருமலைச் சுனையின் நீரிலே | கார்த்த களங்கனிக்கு கை நீட்டும் | கரிய களாப்பழத்தைப் பறித்துத் தா வென்று கை நீட்டப்பெற்ற |
| பார்த்த | கவிந்து பார்த்த | வேங்கடமே | திருவேங்கடந்தான் |
| கடுவன் | குரங்கானது | மேல் நாள் | முன்பொருகாலத்தில் |
| நிழல் கண்டு | நீரினுள்ளே பிரதிபலிக்கிற தன்னிழலைக்கண்டு | விள கனிக்கு | (அஸுராவேசங் கொண்ட) விளாம் பழங்கள் உதிர்வதற்காக |
| பேர்த்து ஓர் கடுவன் என | (தனக்கு எதிரியான) வேறொரு குரங்கு இருப்பதாக ப்ரமித்து | கன்று எறிந்தான் | வத்ஸாஸுரனை (எறிகுணிலாகக் கொண்டு) வீசியெறிந்த பெருமானுடைய |
| பேர்ந்து | அவ்விடம் விட்டு நீங்கி | | |
| (மறுபடியும் சாபல்யத்தாலே) | | வெற்பு | திருமலை. |

* * *—திருமலையில் நிகழ்ச்சியைக் கூறுகின்றார். ஒருசுனையின் கரையிலே களாச்செடிகளில் களாப்பழங்களைப் பறித்துத் தின்னத் தொடங்கின குரங்கானது அச்சுனை நீரை எட்டிப்பார்த்தவாறே அதில் தன் பிரதிபிம்பத்தைக்கண்டு அங்கே வேறொரு குரங்கு இருப்பதாகவும் அது களாப்பழங்களைப் பறிப்பதாகவும் பிரமித்து 'எனக்குக் களாப்பழம் தா' என்று கைநீட்டுகின்றதாம்; இப்படிப்பட்ட திருமலையானது, வத்ஸாஸுரனைக் கொண்டு

1. நாச்சியார் திருமொழி 7—4.

கபித்தாஸூரனை முடித்த கண்ணபிரான் திருவுள்ளம் உவந்து வாழும் திவ்யதேசமாம்.

திருமலையப்பனுடைய சேஷ்டிதங்களைப் பேசுவதோடு அங்குள்ள திர்யக்ஜந்துக்களின் சேஷ்டிதங்களைப் பேசுவதோடு வாசியில்லை ஆழ்வார்க்கு. திருமலையிலுள்ளது ஏதேனுமாம்; எல்லாம் உத்தேச்யமாயிருக்கும். "எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனுமவேனே" என்றாரே ஸ்ரீ குலசேகரப் பெருமாள். ... (௬௮)

வெற்பென்று வேங்கடம் பாடும் * வியன்துழாய்க்
கற்பென்று சூடும் கருங்குழல்மேல் *—மற்பொன்ற
நீண்டதோள் மால்கிடந்த நீள்கடல் நீராடுவான் *
பூண்டநா ளெல்லாம் புகும் (௬௯)

| | | | |
|---|---|---|---|
| | (என் மகளானவள்) | மல் | மல்லர்களை |
| வெற்பு என்று | ஏதேனும் ஒரு மலையைச் சொல்ல நினைத்தாலும் | பொன்ற | பொடிபடுத்தின |
| வேங்கடம் | திருமலையைப் பற்றி | நீண்ட தோள் | நீண்ட திருத்தோள்களையுடைய |
| பாடும் | பாடுகின்றாள்; | மால் | ஸர்வேச்வரன் |
| கற்பு என்று | குலமரியாதைக்குத் தகுந்திருப்பதென்று | கிடந்த | சயனித்திருக்கப் பெற்ற |
| வியன் துழாய் | விலக்ஷணமான திருத்துழாயை | நீள் கடல் | பரந்த திருப்பாற் கடலிலே |
| கரு குழல் மேல் | (தனது) கரிய கூந்தலில் | நீராடுவான் | தீர்த்தமாடுவதற்காக |
| சூடும் | அணிந்து கொள்ளுகிறாள்; | பூண்ட நாள் எல்லாம் | விடிந்த விடிவுகள் தோறும் |
| | | புகும் | புறப்படுகின்றாள். |

* * *—எம்பெருமானையநுபவித்தல் பலவகைப்பட்டிருக்கும்: அவனுடைய திருநாமங்களைச் சொல்லியநுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லியனுபவித்தல், திவ்யசேஷ்டிதங்களைச் சொல்லியனுபவித்தல், வடிவழகை வருணித்தநுபவித்தல், அவனுகந்தருளின திவ்யதேசங்களின் வளங்களைப் பேசியநுபவித்தல், அங்கே அபிமாநமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப் பேசியநுபவித்தல்—என்றிப்படி பலவகைப் பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகைகளில் பரமவிலக்ஷணமான மற்றொரு

வகையுமுண்டு; அதாவது—தாமானதன்மையை [ஆண்மையை] விட்டுப் பிராட்டிமாருடைய தன்மையையேறிட்டுக் கொண்டு வேற்றுவாயாலே பேசியநுபவித்தல். இப்படியநுபவிக்குந்திறத்தில் தாய்பாசுரம், தோழிபாசுரம், மகள்பாசுரம் என்று மூன்றுவகுப்புகளுண்டு. இவை நம்மாழ்வார் திருமங்கையாழ்வார்களது அருளிச்செயல்களில் விசேஷமாக வரும். முதலாழ்வார்களின் திருவந்தாதிகளில் ஸ்த்ரீபாவனையினாற் பேசும் பாசுரம் வருவதில்லை. ச்ருங்கார ரஸத்தின் ஸம்பந்தம் சிறிதுமின்றியே கேவலம் சுத்த பக்திரஸமாகவே பாசுரங்களருளிச்செய்வர்கள் முதலாழ்வார்கள். ஆயினும் இப்பாசுரமொன்று தாய்வார்த்தையாகச் செல்லுகிறது. பேயாழ்வாராகிற பெண்பிள்ளையின் நிலைமையை அவளைப்பெற்றவளாகத் திருத்தாயார் பேசுவதாக அமைக்கப்பட்ட பாசுரம் இது.

"என்னுடைய மகளானவள்" என்ற எழுவாய் இதில் இல்லையாதலால் கற்பித்துக் கொள்ளவேண்டும். என்மகள் ஏதேனுமொரு மலையைச் சொல்லப்புகுந்து திருவேங்கடமலையைப் பாடுகின்றாள். திருத்துழாய் மலரைச் சூடிக்கொள்வதே தனது கற்புக்கு உரியதென்று தன்குழல்மேல் அதனைச் சூடிக்கொள்ளுகின்றாள். மல்லவதம் செய்தருளின பெருமான் பள்ளிகொண்டருளும் திருப்பாற்கடலில் நீராடுவதே தகுதியென்று அங்கேறப் புறப்படுகின்றாள் என்றதாயிற்று.

இப்பிரபந்தத்தில் அந்யாபதேசப் பாசுரம் வேறொன்றுமில்லாதிருக்க இஃதொன்றைமாத்திரம் இங்ஙனே தாய்பாசுரமாகக் கொள்ளுதல் சிறவாதென்றும், 'என்மகள்' என்ற எழுவாய் இல்லாமையாலும் இவ்வர்த்தம் உசிதமன்று என்றும் சிலர் நினைக்கக் கூடுமாதலால் இப்பாசுரத்திற்கு வேறுவகையான நிர்வாஹமும் பூருவர்கள் அருளிச் செய்துள்ளார். எங்ஙனேயெனின்? பாடும், சூடும், புகும் என்ற வினைமுற்றுக்களை முன்னிலையில் வந்தனவாகக் கொண்டு, 'ஓ உலகத்தவர்களே! நீங்கள் ஏதாவதொரு மலையைப் பாடவேண்டில் திருவேங்கடமலையைப் பாடுங்கள்; ஏதேனுமொரு மலரைக் குழலில் சூடவேண்டில் திருத்துழாய்மலரைச் சூடிக்கொள்வதே சேஷத்வத்திற்கு உரியதென்று கொண்டு அதனைச் சூடுங்கள்; நீராடுவதற்குத் திருப்பாற்கடலிலே சென்று புகுங்கள்—' என்பதாக.

இங்கே பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின் ;—"இப்பிரகரணத்தில் கீழும் மேலும் அந்யாபதேச மின்றிக்கே யிருக்க இப்பாட்டொன்றும் இப்படி கொள்ளுகிற தென்னென்று நிர்வஹிப்பர்கள் ;—.....திருமலையைப் பாடுங் கோள் ;.......திருத்துழாயைச் சூடுங்கோள் ;.......விரோதி நிரஸந சீலனானவன் கிடந்த திருப்பாற்கடலிலே முழுகுங்கோள்." என்று.

நன்னூல் வினையியலில் "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில், செல்லாதாகும் செய்யுமென்முற்றே" என்ற சிறப்பு விதிக்கு மாறாக, பாடும், சூடும், புகும் என்ற செய்யுமென் முற்றுக்களுக்கு முன்னிலைப்பொருள் கொள்ளலாமோ வென்னில் ; இதனைப் புதியன புகுதலாகக் கொள்க. "நீர் உண்ணும் என முன்னிலையிற் பன்மையேவலாய் வருதல் புதியனபுகுதல்" என்று நன்னூலுரைகாரர்களும் சொல்லிவைத்தார்கள். "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல காலவகையினானே" என்ற நன்னூற் சூத்திரமும் காண்க.

மற்பொன்ற நீண்ட தோள்மால் என்றவிடத்து அறியவேண்டும் வரலாறு வருமாறு:—கண்ணபிரான் கம்ஸனது ஸபையிற் செல்லும்போது எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர் செய்ய அவர்களையெல்லாம் கண்ணபிரான் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டனன்.

கண்ணபிரான் பாண்டவதூதனாய்த் துரியோதனனிடஞ் சென்றபொழுது துரியோதனன் ரஹஸ்யமாகத் தனது ஸபா மண்டபத்தில் மிகப் பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் அனேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளே யிருக்க வைத்து அப்படுகுழியைப் பிறர் அறிய வொண்ணாதபடி மூங்கிற் பிளப்புக்களால் மேலேமூடி அதன்மேற் சிறந்த ரத்நாஸநமொன்றை யமைத்து அவ்வாஸநத்தின்மீது தன்னை வீற்றிருக்கச் சொல்ல அங்ஙனமே தான் அதன்மேலேறின மாத்திரத்திலே மூங்கிற்பிளப்புக்கள் முறிபட்டு ஆஸனம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் மிகப்பெரிதாக விச்வரூப மெடுத்துப் பல கைகளையுங்

கால்களையுங் கொண்டு எதிர்த்து அப்பிலவறையிலிருந்த மல்லர்களை மடிவித்தனன் என்ற வரலாறு முணர்க.

பூண்டநாளெல்லாம் = ஸூர்யனுடைய தேரிலே குதிரை பூட்டின நாளெல்லாம் என்றபடியாய் 'விடிந்த விடிவுகள் தோறும்' என்று பொருள்பட்டது. ... ... .... (சுசு)

புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து * அருவி
உகுமதத்தால் கால்கழுவிக் கையால் *—மிகுமதத்தேன்
விண்டமலர் கோண்டு விறல் வேங்கடவனையே *
கண்டு வணங்கும் களிறு. (எ0)

| | | | |
|---|---|---|---|
| களிறு | (திருமலையிலுள்ள) யானையானது | கையால் | துதிக்கையாலே, |
| புகு மதத்தால் வாய் பூசி | மண்டையில் நின்றும் கபோலங்களில் நின்றும் வாயிலே புகுகின்ற மத ஜலத்தாலே வாய் கொப்பளித்து ஆசமனம் பண்ணி | மிகு மதம் தேன் | மிகுந்த மதத்தை யுண்டுபண்ணக் கூடிய தேனை யுடையதும் |
| | | விண்ட | மலர்ந்ததுமான |
| | | மலர் கொண்டு | புஷ்பத்தைக்கொண்டு |
| கீழ் தாழ்ந்து அருவி உகு மதத்தால் | மேலிருந்து கீழ் வரையில் அருவி போலே வந்து பெருகுகிற மத ஜலத்தாலே | விறல் வேங்கடவனையே | பெருமிடுக்கனை திருமலை யப்பனையே |
| கால் கழுவி | கால்களை சுத்தி செய்துகொண்டு | கண்டு வணங்கும் | ஸேவித்து வணங்குகின்றது. |

* * *—திருமலையில் மதயானைகள் தாமரைப் பூக்களைப் பறித்து அப்பன் திருவடிகளில் ஸமர்ப்பித்து வணங்குகிறபடியை ஒரு சமத்காரம் பொலியப் பேசுகிறார் எம்பெருமான் ஸந்நிதியில் தொண்டுசெய்யப் போமவர்கள் வாயைக் கொப்பளித்துக் கைகால்களை சுத்திசெய்து கொண்டு புஷ்பங்களை யெடுத்துக் கொண்டு போவது வழக்கம் இவ்வாசாரம் சாஸ்த்ரவச்யர்களான மானிட சாதியர்க்கு மாத்திரமல்ல, திருமலையிலுள்ள அஃறிணைப் பொருள்கட்கும் இவ்வாசாரம் கோல்விழுக் காட்டிலே அமைந்திருக்கின்றது என்கிறார்.

மத்தகம், கன்னங்கள் ஆகிய இடங்களிலிருந்து பெருகி வாயிலே புகுகின்ற மத ஜலத்தினால் வாய் கொப்பளித்து ஆசமனம் பண்ணினது போலும்; அருவிபோலே காலளாவும் பெருகுகின்ற மதஜலத்தினால் காலைக் கழுவினது போலும்.

விறல் வேங்கடவன்=இங்ஙனே திருமலையிலுள்ள திர்யக் ஜந்துக்களும் தன்னை வணங்குமாறு ஜ்ஞாநத்தைக் கொடுக்க சக்தனான திருவேங்கடமுடையான் என்ப. ... .... (௭௦)

களிறு முகில்குத்தக் கையெடுத் தோடி *
ஒளிறு மருப்போசிகை யாளி—பிளிறி
விழ * கொன்று நின்றதிரும் வேங்கடமே * மேனாள்
குழக்கன்று கொண்டெறிந்தான் குன்று. (௭௧)

| | | | |
|---|---|---|---|
| களிறு | யானையானது | பிளிறி விழ கொன்று | (அந்தயானை) வாய்விட்டலறிக் கொண்டு விழும்படி (அதனைக்) கொன்று |
| கை எடுத்து ஓடி | தனது துதிக்கையை எடுத்துக் கொண்டு வேகமாயோடி | நின்று அதிரும் | அங்கேயே நின்றுகொண்டு பெருமுழக்கம் செய்யப்பெற்ற |
| முகில் | (மதயானைபோ லெழுந்த) மேகங்களை | வேங்கடமே | திருவேங்கடமே |
| குத்த | (எதிரியானை யென்று நினைத்துக்) குத்த | மேல் நாள் | முன்பொரு காலத்தில் |
| யாளி | (இதைக் கண்ட) யாளியானது | குழ கன்று கொண்டு | இளங்கன்றை (எறிகுணிலாகக்) கொண்டு |
| ஒளிறு மருப்பு | (அந்தயானையி னுடைய) விளங்குகின்ற கொம்பை | எறிந்தான் | (விளங்கனிமீது) எறிந்த பிரானுடைய |
| ஒசி | முறிக்கிற | | |
| கை | கையை யுடைத்தாய்க் கொண்டு | குன்று | திருமலையாம். |

* * *—1. "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்!" என்றும், 2. "கரியமாமுகிற் படலங்கள் கிடந்தவை முழங்கிடக்,"

1. நாச்சியார் திருமொழி 8—9. 2. பெரிய திருமொழி 1—2—10.

களிறென்று" என்றும் சொல்லுகிறபடியே யானைக்கும் மேகத்திற்கும் ஒப்புமை ப்ரஸித்தம். ஆகவே, திருமலையிலுள்ள யானையானது மலைமுகட்டில் படிந்திருந்த மேகத்தை எதிரியானதொரு யானையென்று மயங்கிப் பெரிய வேகத்தோடே சென்று துதிக்கையினால் குத்த, இதனை ஒரு யாளி கண்டு 'இக்களிற்றுக்கு இவ்வளவு மதமா' என்று சினந்து ஓடிவந்து அவ் யானையின்மேற் பாய்ந்து அதன் கொம்பை முறித்தெறிந்து அது வாய்விட்டு அலறிக்கொண்டு விழும்படியாகக் கொலையுஞ் செய்து, அவ்வளவிலும் சீற்றம் தணியாமையாலே அவ்விடத்திலேயே நின்று மற்றுள்ள மிருகங்களும் மண்ணுண்ணும்படியாக கர்ஜிக்கின்றதாம் திருமலையில். .... .... ... ... .... (எக)

குன்றொன்றினாய குறமகளிர் கோல்வளைக்கை *
சென்றுவிளையாடும் தீங்கழைபோய் *—வென்று
விளங்குமதி கோள்விடுக்கும் வேங்கடமே * மேலை
இளங்குமரர் கோமா னிடம். (எஉ)

| | | | |
|---|---|---|---|
| குன்று ஒன்றினாய | அத்திருமலையொன்று தவிர வேறொரிடமும் அறியாதிருக்கிற | வென்று | ராஹுவைத் தகர்த்து, |
| குறமகளிர் | குறத்திகள் | விளங்கு மதிகோள் விடுக்கும் | விளங்காநின்ற சந்திரனுடைய கிரஹணத்தை விடுவிக்கப்பெற்ற |
| கோல் வளை கை | அழகிய வளைகளணிந்த கைகளினாலே | வேங்கடமே | திருமலையே |
| சென்று | மேலேறி | மேலை | மேலுலகத்திலுள்ள |
| விளையாடும் | விளையாடா நிற்கப் பெற்ற | இளகுமரர் கோமான் | நித்யயுவாக்களான நித்ய ஸூரிகளுக்குத் தலைவனான பெருமானுடைய |
| தீம் கழை | அழகிய மூங்கில்கள் | | |
| போய் | சந்திர மண்டலத்தளவும் போய் | இடம் | திவ்யதேசமாம். |

* * *—திருமலையில் வளர்கின்ற மூங்கில்கள் சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்றன வென்பதை ஒரு அதிசயோக்தியினால் கூறுகின்றார்.

குன்றோன்றினய குறமகளிர்=திருமலையை விட்டு ஒரு நொடிப்பொழுது கீழிழிந்தாலும் குடிப்பழியாம் என்று திருமலையை விடாதே அங்கே நித்தியவாஸம் பண்ணுகின்ற குறத்திகள். அவர்கள் ஊஞ்சலாடுகை முதலான விளையாடல்களுக்காக மூங்கில் மரங்களின்மேலே யேறியிருப்பதுண்டாகையாலே "குறமகளிர் கோல்வளைக்கை சென்று விளையாடுந் தீங்கழை" எனப்பட்டது. அப்படிப்பட்ட மூங்கில்களானவை, சந்திரனை க்ரஹிக்கின்ற ராஹுவைக்குத்தி அப்புறப்படுத்தி அச் சந்திரனை மகிழ்விக்கின்றனவாம். இங்ஙனே ஒக்கமுடைத்தான திருமலை நித்ய ஸூரிநாதன் வாழுமிடம்.

இப்பாட்டுக்கு மற்றும் பலவகையாகப் பொருள் கூறுவர்: விளையாடுகின்ற குறத்திகளின் கோல்வளைக்கையானது சென்று நல்ல மூங்கிற்செறிவை நீக்கி, சந்திரன் இங்குப் புகுரப்பெறுமையால் பெற்றிருந்த இடரை நீக்கும் என்றுமாம். அன்றியே, குறத்திகளின் வளைகளின் ஒளியானது சந்திரனொளி புகுரப் பெறாத மூங்கிலிருளை அகற்றி வெளியாக்கி, சந்திரன்மறுவையும் போக்கும் என்றுமாம்.

மேலையிளங்குமரர்=நித்ய ஸூரிகள் என்றும் பன்னிரண்டு வயது வாய்ந்திருப்பரென்க. ... .... ... (எஉ)

இடம்வலமேழ் பூண்ட இரவித்தேரோட்டி *
வடமுக வேங்கடத்து மன்னும் *—குடநயந்த
கூத்தனாய் நின்றான் குரைகழலே கூறுவதே *
நாத்தனா வுள்ள நலம். (எங)

| | | | |
|---|---|---|---|
| ஏழ் பூண்ட | ஏழு குதிரைகளைப் பூண்ட | வட முகம் வேங்கடத்து மன்னும் | வடதிசையின் கணுள்ள திருவேங்கடத்தில் நித்யவாஸம் பண்ணுமவனும் |
| இரவி தேர் | ஸூர்யனுடைய தேரை | | |
| இடம் வலம் | (மேருவுக்கு) இடப்பக்கமாகவும் வலப்பக்கமாகவும் | குடம் நயந்த கூத்தன் ஆய் நின்றான் | ஆசையோடு குடக்கூத்தாடின கண்ணபிரான் போன்று நிற்பவனுமான பெருமானுடைய |
| ஓட்டி | (அந்தர்யாமியா யிருந்து கொண்டு) நடத்துகிறவனும் | | |

| | | | |
|---|---|---|---|
| குரை கழல் கூறுவதே | ஆபரண வொலி பொருந்திய திருவடிகளை எத்துவதே | நா தன்னால் உள்ள நலம் | நாவினால் கொள்ளக் கூடிய பிரயோஜனம். |

* * *—"யஶ்சாஸாவாதி த்யே" என்றும் "த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்தீ நாராயண:" என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானுக்கு ஸூர்யமண்டலமும் ஒரு வாஸஸ்தானமாதலால் இரவித் தேரோட்டி' என்றார். எம்பெருமானுடைய அநுப்ரவேசமின்றி எந்த தேவதையும் எக்காரியமும் செய்ய முடியாதாகையாலே அவன்தானே ஸூர்யனுக்கு அந்தர்யாமியாயிருந்து தேரை நடத்துகின்றானென்க.

ஏழ் பூண்ட=ஏழு குதிரைகளைப் பூண்ட என்றபடி. காயத்ரீ, ப்ருஹதி, உஷ்ணிக், ஜகதீ, த்ரிஷ்டுப், அநுஷ்டுப், பங்க்தி—என்கிற ஏழு சந்தஸ்ஸுக்களும் ஏழு குதிரைகளாய்க் கொண்டு வஹிக்குமென்று சாஸ்த்ரம் சொல்லும். "ஸப்த யுஞ்ஜந்தி ரதமேகசக்ரம்" என்று வேதத்திலும், "ஹயாஶ்ச ஸப்தச்சந்தாம்ஸி தேஷாம் நாமாநி மே ஶ்ருணு। காயத்ரீ ச ப்ருஹத்யுஷ்ணிக் ஜகதீ த்ரிஷ்டுபேவ ச॥ அநுஷ்டுப் பங்க்திருக்தாஶ்சந்தாம்ஸி ஹரயோ ரவே:." என்று உபப்ருஹ்மணங்களிலும் "காரார் புரவி யேழ் பூண்ட தனியாழித் தேரார் நிறைகதிரோன்" என்று சிறிய திருமடலிலும் சொல்லிற்றாக் காண்க. வேதந்தன்னிலேயே "ஏகோ அஶ்வோ வஹதி ஸப்தநாமா" [ஸப்த என்று பெயர் பூண்ட ஒரு குதிரை வஹிக்கிறது] என்று சொல்லப்பட்டிருக்கிறதே, இதற்கு என்ன கதி? என்று ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில் $ ஸ்ரீ மணவாள மாமுனிகள் உபக்ஷேபித்துக் கொண்டு "ஏகவசநமாக வ்யாவ்ருத்தமான விடங்களிலே கண்டுகொள்வது" என்றருளிச் செய்துள்ளதும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

'ஓட்டி' என்பதை வினையெச்சமாகவுங் கொள்ளலாம்; 'இ' விகுதிபெற்ற பெயராகவுங் கொள்ளலாம்.

---

$ முதற் பிரகாணத்தில் "புரவியே ழொருகாலுடைய தேரிலே" என்ற விடத்து.

"குன்றமேந்திக் குளிர்மழை காத்தவன்....பரன்சென்று சேர் திருவேங்கடமாமலை" என்று கண்ணபிரான்தானே திருவேங்கடமலையில் வந்து ஸந்நிதி பண்ணியிருப்பதாக அருளிச் செய்கையாலே இங்கும் "குடமயந்த கூத்தனாய் நின்றான்" என்று கண்ணபிரானோடு ஒற்றுமை நயம்படக் கூறப்பட்டது. தலையிலே அடுக்குக்குட மிருக்க இருதோள்களிலும் இரு குடங்களிருக்க, இரு கையிலுங் குடங்களையேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து குடக்கூத் தெனப்படும்.

திருவேங்கடமுடையானுடைய திருவடிகளைத் துதிப்பதே நாவுக்குப் பயன் என்றதாயிற்று. ... .... ... (எ௩)

நலமே வலிதுகொல் நஞ்சூட்டு வன்பேய் *
நிலமே புரண்டுபோய் வீழ *—சலமேதான்
வெங்கொங்கை யுண்டானை மீட்டாய்ச்சி யூட்டுவான் *
தன்கொங்கை வாய்வைத்தாள் சார்ந்து. (எ௪)

| | |
|---|---|
| சலமே | கபடமாகவே |
| நஞ்சு | விஷத்தை |
| ஊட்டு | உண்பிக்க வந்த |
| வன் பேய் | கொடிய பூதனையானவள் |
| நிலமே | பூமியிலே |
| புரண்டு போய் வீழ | (பிணமாய்) மறிந்துபோய் விழும்படியாக |
| தான் சலமே | தானும் கபடமாகவே |
| வெம் கொங்கை | (அவளது) வெவ்விய முலையை |
| உண்டானை | அமுது செய்த கண்ணபிரானை |
| ஆய்ச்சி | யசோதையானவள் |
| மீட்டு | (அப் பூதனைபக்கலில் நின்றும்) மீட்டு |
| ஊட்டுவான் | (தனது முலைப்பாலை) உண்பிப்பதற்காக |
| சார்ந்து | அணுகிச் சென்று |
| தன் கொங்கை | தனது முலையை |
| வாய் வைத்தாள் | அவனது வாயிலே உண்ணக் கொடுத்தாள்; |
| நலமே வலிதுகொல் | இந்த ப்ரேமம் எவ்வளவு கனத்தது !. |

* * *—எம்பெருமானிடத்தில் அந்தரங்கமான அன்பு பூண்டவர்களுள் தலையானவள் யசோதைப் பிராட்டி யொருத்திதான் என்பதை வெளியிடுகிறாரிதில். கண்ணபிரான் இளங்குழவியாய்

நந்தகோபர் திருமாளிகையில் சயனித்திருக்கும்போது வஞ்சகக் கஞ்சனு லேவப்பட்டுக் கொல்லவந்த பூதனையென்னும் பேய்த்தாய் மிக்க பரிவுள்ளவள்போலத் தெய்வக்குழவியை யெடுத்துத் தனது விஷந்தடவின முலையைக்கொடுக்க, பேதைக்குழவி பிடித்துச் சுவைத்துண்டவாறே அப்பேய்ச்சி உயிர்மாண்டு பிணமாய் விழுந்தாள்; உடனே யசோதைப்பிராட்டி ஓடிவந்து குழந்தையை வாரி யெடுத்தணைத்து முலை கொடுத்தாள்—என்பதாக இதிஹாஸமுள்ளது: ஒருத்திவந்து முலைகொடுத்துப் பட்டபாடு கண்ணெதிரே காணுநிற்கச் செய்தே இன்னொருத்தி கிட்டவரத்தான் முடியுமா? அஞ்சாமல் கிட்டவந்து வாரியெடுத்து முலை கொடுத்தாளென்றால் இவளுடைய அன்பின் கனம் விளங்குமன்றோ. பூதனைகொடுத்த விஷத்திற்கு மாற்றான அம்ருதமாகத் தனது ஸ்தந்யத்தைக் கொடுக்க வேணுமென்னும் அன்பு மிகுதியினால் யசோதை செய்த இக்காரியம் அன்புக்கு ஒக்குமத்தனை.

நலமே வலிதுகோல்=ஸ்த்ரீகளுக்கு அச்சமே வலிதாயிருக்கச் செய்தேயும் யசோதைப்பிராட்டிக்கு அன்புதான் வலிது போலிருக்கின்றது! என்றவாறு.

'ஊலம்' என்ற வடசொல் சலமெனத் திரிந்தது. இச்சொல் இங்கு நடுநிலைத் தீவகமாய் முன்னும் பின்னும் அந்வயிக்கும். (எச)

சார்ந்தகடு தேய்ப்பத் தடாவியகோட் டுச்சிவாய் *
ஊர்ந்தியங்கும் வண்மதியி னொண்முயலை *—சேர்ந்து
சினவேங்கை பார்க்கும் திருமலையே * ஆயன்
புனவேங்கை நாறும் பொருப்பு. (எரு)

| | |
|---|---|
| தடாவிய | பரப்பையுடைத்தான |
| கோடு | சிகரங்களினுடைய |
| உச்சி வாய் | உச்சியிலே |
| அகடு தேய்ப்ப | கீழ்வயிறு உராயும்படியாக |
| சார்ந்து | கிட்டி |
| ஊர்ந்து இயங்கும் | மெல்ல ஸஞ்சரிக்கின்ற |
| வண் மதியின் | அழகிய சந்திரனிடத்துள்ள |
| ஒண் முயலை | அழகிய முயலை, |
| சினம் வேங்கை | கோபத்தையுடைத்தான வேங்கைப் புலியானது |
| சேர்ந்து | கிட்டி |

| | | | |
|---|---|---|---|
| பார்க்கும் | (அதைப் பிடித்துக் கொள்ளவும் விட்டுப் போகவும் மாட்டாமல்) எப்போதும் பார்த்தபடியே நிற்கப் பெற்ற | ஆயன் | கண்ணபிரானுடையதாய் |
| திருமலையே | திருமலைதான் | புனம் வேங்கை நாறும் | தன்னிலத்தில் வளர்ந்து செழிப்புற்ற வேங்கைமரங்கள் கமழப் பெற்றதான |
| | | பொருப்பு | மலை. |

* * *—திருமலையை அநுபவிக்கிறார். திருமலையின் சிகரம் சந்திரமண்டலத்தளவும் ஓங்கியிருக்கின்ற தென்பதை ஒரு அதிசயோக்தியினால் வெளியிடுகிறார். சந்திரனிடையே கறுப்பாகத் தோன்றுவதைக் கவிகள் பலவிதமாகக் கூறுவதுண்டு; மான் என்பர் சிலர்; முயல் என்பர் சிலர்; மற்றும் பல்வகையுங் கூறுவர். ஆகவே, சந்திரனுக்கு வடமொழியில் 'ம்ருகாங்கஃ' [மானை அடையாளமாக வுடையவன்] என்றும், 'சசாங்கஃ' [முயலை அடையாளமாக வுடையவன்] என்றும் பெயர்கள் வழங்குகின்றன. 'முயல்' என்ற கொள்கையைப் பின்பற்றி இப்பாசுரமருளிச் செய்யப் படுகிறது.

ஆகாசத்திலே திரிகின்ற சந்திரன் திருமலையின் சிகரநுனியில் தனது கீழ்வயிறு தேயும்படியாக இதில் ஸம்பந்தப் பட்டுக் கொண்டே செல்லுகின்றனனும்; அப்போது அவனது மடியிலிருக்கின்ற முயலைத் திருமலைமீது திரிகின்ற வேங்கைப்புலி கண்டு அதனைத் தான் உணவாகக் கொள்ளக்கருதி, பிடித்துக்கொள்ளவும் மாட்டாமல் விட்டுப்போகவும் மாட்டாமல் உறுத்துப் பார்த்தபடியே நிற்கின்றதாம். இப்படிப்பட்ட திருமலை வேங்கைமலர்களின் வாஸனை வீசப்பெற்றதாய்க் கண்ணபிரானெழுந்தருளியிருக்குமிடமான திருமலையாம். ... ... ... (எரு)

பொருப்பிடையே நின்றும் புனல்குளித்தும் * ஐந்து
நெருப்பிடையே நிற்கவும் நீர்வேண்டா *—விருப்புடை
வெஃகாவே சேர்ந்தானை மெய்ம்மலர்தூய்க் கைதொழுதால்
அஃகாவே தீவினைக ளாய்ந்து.

| | |
|---|---|
| | (ஓ உலகத்தவர்களே !,) |
| நீர் | நீங்கள் |
| பொருப்பு இடையே | மலைகளின் நடுவே |
| நின்றும் | நின்று கொண்டும் |
| புனல் | நீர்நிலைகளிலே |
| குளித்தும் | முழுகிக்கொண்டும் |
| ஐந்து நெருப்பு இடையே | பஞ்சாக்நி மத்யத்திலே |
| நிற்கவும் | நின்றுகொண்டும் தவஞ்செய்ய |
| வேண்டா | வேண்டியதில்லை ; |
| விருப்பு உடைய | (எல்லாராலும்) விரும்பத்தக்கதா யிருக்கின்ற |
| வெஃகா | திருவெஃகாவில் |
| சேர்ந்தானை | வந்து கண் வளர்ந்தருளும் பெருமானை |
| மெய் | மெய்யாக [அநந்ய ப்ரயோஜநமாக], |
| மலர் தூய் கை தொழுதால் | புஷ்பங்களைப் பணிமாறி வணங்கப் பெற்றால் |
| தீ வினைகள் | துஷ்கருமங்களெல்லாம் |
| ஆய்ந்து | (நமக்கு இவ்விடம் வாஸயோக்ய மன்று என்று) நிரூபித்தறிந்து |
| அஃகாவே | சுருங்கிப்போக மாட்டாவோ? (அகன்றோடிப் போய்விடு மென்கை.) |

* * *—இப்பாட்டில் விளிவருவித்துக்கொள்க. அருமையான தவங்கள் செய்து உடம்பை வருத்துகின்றவர்களே! நீங்கள் மலைமேல் ஒற்றைக்கால் விரலால் நின்றுகொண்டும், மழைகாலத்தில் நீர்நிலைகளிலே மூழ்கிக்கிடந்தும், வேனிற்காலத்திலே பஞ்சாக்நி மத்யத்தில் நின்றுகொண்டும் இப்படிப்பட்ட காயக்லேசங்களுடன் தவம்புரிவதெல்லாம் ஏதுக்காக? பாவங்கள் தொலைந்து நற்கதி நண்ணவேணுமென்றுதானே இங்ஙனம் தவம்புரிகின்றீர்கள்; இனி அங்ஙனம் வருந்தவேண்டா; திருவெஃகா நாயனார் திருவடிகளிலே அநந்யப்ரயோஜநராய்ப் புஷ்பங்களைப் பணிமாறி ஆச்ரயித்தால் தீவினைகளெல்லாம் தன்னடையே ஓடிப்போய் விடுமே. நமக்காக எம்பெருமான் காயக்லேசங்கள் படாநிற்க நாமும் படவேணுமோ? என்கிறார்.

பிள்ளைப்பெருமாளையங்கார் இப்பாசுரத்தைத் திருவுள்ளம் [சார்ந்து] பற்றியே திருவரங்கக் கலம்பகத்தில் "காயிலை தின்றும் கானிலுறைந் [ஊர்ந்து] தும் காலொடு நின்றும் பூவலம்வந்துந் திரிவீர்காள்!, [இயங்கும்]

தாயினுமன்பன் பூமகள்நண்பன் தடநாகப், பாயன் முகுந்தன் கோயிலரங்கம் பணிவீரே" என்றருளிய பாசுரம் நோக்கத்தக்கது.

விருப்புடைய வெஃகா=பகவானுடையவும் பாகவதர்களுடையவும் விருப்பத்திற்குப் பாத்திரமான வெஃகா என்றபடி. (எசு)

ஆய்ந்த வருமறையோன் நான்முகத்தோன் நன்குறங்கில் *
வாய்ந்த குழவியாய் வாளரக்கன் *—ஏய்ந்த
முடிப்போது மூன்றேழென் றெண்ணினான் * ஆர்ந்த
அடிப்போது நங்கட் கரண். (எஎ)

| | | | |
|---|---|---|---|
| ஆய்ந்த | ஆராய்ந்து அதிகரிக்கப்பட்ட | போது ஏய்ந்த | புஷ்பமாலை பொருந்தின |
| அரு மறையோன் | அருமையானவேதங்களை யுடையனை | முடி | தலைகளை |
| நான் முகத்தோன் | சதுர்முக ப்ரஹ்மாவினுடைய | மூன்று ஏழ் என்று எண்ணினான் | பத்து என்று (தனது திருவடியாலே) எண்ணிக் காட்டினவனுடைய |
| நன் குறங்கில் | அழகிய மடியிலே | அடி போது | திருவடித்தாமரைகள் |
| வாய்ந்த | நேர்பட்ட | நங்கட்கு | நமக்கு |
| குழவி ஆய் | இளங்குழந்தையாயிருந்துகொண்டு | ஆர்ந்த அரண் | குறையற்ற சரணம். |
| வாள் அரக்கன் | இராவணனுடைய | | |

* * *—இப்பாட்டில் அநுஸந்திக்கப்பட்டிருக்கும் பகவத்கதை முதல்திருவந்தாதியில் (45) "ஆமே யமரர்க்கறிய" என்ற பாட்டின் "பூமேய மாதவத்தோன் தாள்பணிந்த வாளரக்கன் நீண்முடியைப், பாதமத்தா லெண்ணினான்பண்பு" என்ற பின்னடிகளிலும், நான்முகன் திருவந்தாதியில் "கொண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய், தண்டவரக்கன் தலைதாளாற் பண்டெண்ணிப்—போங்குமரன்........." என்ற நாற்பத்து நான்காம்பாட்டிலும் பொய்கையாழ்வாராலும் திருமழிசைப்பிரானாலும் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. முன்பு இராவணன் தனது பத்துத்தலைகளை மறைத்துக்கொண்டு நான்முகனிடஞ்சென்று வரம்வேண்டிக்கொள்ளுமளவில் எம்பெருமான் ஒரு சிறு குழந்தைவடிவாய் அப்பிர-னுடைய மடியிலே உறங்குவான்போலே கிடந்து 'இவன் தலைகளையுடைய இராவணன்; ஸ்வஸ்வரூபத்

கொண்டு உன்னை வஞ்சித்து வரம் வேண்டிக்கொள்ள வந்திருக்கிறான்; இவனுக்கு நீ வரமளித்தால் பெருந்தீங்காக முடியும்' என்று தெரிவிப்பவன் போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத்தலைகளையும் எண்ணிக் காட்டினன்—என்பதாக இவ்வரலாறு விளங்குகின்றது. இக்கதை இதிஹாஸ புராணங்களில் உள்ள விடம் தெரியவில்லை; பெரியாழ்வார் திருமொழியில் 1. "சீமாலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீயெண்ணிச் சக்கரத்தால் தலைகொண்டாய்" என்றும், 2. "எல்லியம்போதினிதிருத்த லிருந்ததோரிடவகையில், மல்லிகை மாமாலைகொண்டு அங்கார்த்ததுமோரடையாளம்" என்றும் அருளிச்செய்த கதைகள் வியாஸர் வால்மீகி முதலிய முனிவர்களால் ஸாக்ஷாத்கரிக்கப்படாமல் ஆழ்வாரால் மாத்திரம் நிர்ஹேதுக பகவத் கடாக்ஷமடியாக ஸாக்ஷாத்கரிக்கப்பட்டவை என்று நம்பூருவாசாரியர்கள் $ நிர்வஹித்திருப்பதுபோலவே இக்கதையும் ஆழ்வார்களால் மாத்திரம் ஸாக்ஷாத்கரிக்கப்பட்டதென்று பெரியோர் கூறுவர். இனி, இதற்கு இதிஹாஸ புராணங்களில் ஆகரமுண்டேல் கண்டுகொள்க; விரிவும் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

குறங்கு=இச்சொல் துடைக்குப்பேராயினும் இங்கு இலக்கணையால் மடியை உணர்த்தும். .... ... (எஎ)

அரணாம் நமக்கென்று மாழி வலவன் *
முரனாள் வலம்சுழிந்த மொய்ம்பன் *—சரணாமேல்
ஏதுகதி யேதுநிலை யேதுபிறப் பென்னாதே *
ஓதுகதி மாயனையே யோர்த்து. (எஅ)

| | | | |
|---|---|---|---|
| ஆழி | திருவாழியாழ்வானை | மொய்ம்பன் | மிடுக்கையுடையவனுமான பெருமான் |
| வலவன் | வலத்திருக்கையிலுடையவனும் | சரண் ஆம் ஏல் | ரக்ஷகனை அமையும் பக்ஷத்தில், |
| முரன் | முராஸுரனுடைய | | |
| நாள் | ஆயுளையும் | | |
| வலம் | வலிமையையும் | | |
| சுழிந்த | போக்கின | | |

1. 2—7—8. 2. 3—10—2.

$ பெரியாழ்வார் திருமொழி 5—4—6 பாட்டின் பெரியவாச்சான் ...யானம் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | (ஓ நெஞ்சமே!,) |
| மதி எது நிலை எது பிறப்பு எது என்னாதே | (நம்முடைய) ஞானமென்ன!, ஆசாரமென்ன!, ஜன்மமென்ன! என்று (இவற்றின் தாழ்வுகளைப் பார்த்து) உபேக்ஷியாமல் | ஓர்த்து | இதை நன்றாக அறிந்துகொண்டு |
| | | மாயனையே | ஆச்சரியமான குணசேஷ்டிதங்களையுடையனான அப்பெருமானையே |
| நமக்கு என்றும் அரண் ஆம் | நமக்கு எல்லாக் காலத்திலும் ரக்ஷகனாகவே யிருப்பன்; | கதி | உபாயமாக |
| | | ஓது | அநுஸந்தித்துக் கொண்டிரு. |

* * *—எம்பெருமான் ஸர்வரக்ஷகனென்று பேர்பெற்றாலும் அவனுடைய ரக்ஷகத்வம் எல்லாரிடத்திலும் ஏககாலத்தில் புகமாட்டாது; தம்மை ரக்ஷித்துக்கொள்வதில் தாமே முயற்சிசெய்துகொள்பவர்கள் எத்தனையோ பேர்களுண்டே; அப்படிப்பட்டவர்களிடத்தில் அவன் தனது ரக்ஷகத்வத்தைச் செலுத்தியருளான். ஏனெனில், இருகையும் விட்டு 'நீயே சரண்' என்று ஸர்வபாரங்களையும் தன்மேலேறிட்டு, தம் தலையாலே ஒரு முயற்சியும் செய்யவில்லாத ஸ்வரூபஜ்ஞாநிகளையேதான் ரக்ஷித்தருள்வன். "இருகையும் விட்டேனோ த்ரௌபதியைப்போலே" என்னும்படியாக அவள் ஒரு கையாலே துகிலைப்பற்றிக்கொண்டு ஸ்வப்ரயத்ந நிஷ்டையாயிருந்தவரையில் அவளுடைய ரக்ஷணத்திலே கண்ணபிரான் திருவுள்ளம் செலுத்திற்றிலன்; "ஶஜாக்ருஷ்யதே தீரே ஹ்ராஹாக்ருஷ்யதே ஜலே" [யானை கரைக்கு இழுக்கிறது, முதலை நீர்க்கு இழுக்கிறது] என்னும்படியாக ஸ்ரீகஜேந்திராழ்வான் ஸ்வரக்ஷணத்தில் ஸ்வப்ரவ்ருத்தி பண்ணிக்கொண்டிருந்த வரையில் ஸ்ரீமந்நாராயணன் அவனுடைய ரக்ஷணத்தைத் திருவுள்ளம் பற்றிற்றிலன். இப்படிப்பட்ட உதாஹரணங்கள் பலபல காணலாம். ஆகவே நம்முடைய ரக்ஷணத்தில் நாமும் ஒரு கை பார்ப்போம் என்றிருக்கும்வரையில் எம்பெருமான் உதாஸீநனாகவே இருந்திடுவான். இவ்வர்த்தத்தை "ஸ்வவ்ருத்திவிரோதிஸ்வயத்நநிவ்ருத்திஃ—ஸ்வவ்ருத்திஃ" என்ற வாக்யத்தாலே பூருவர்களும் விளங்க வெளியிட்டருளினர். அதாவது—நம்மை நாம் ரக்ஷித்துக்கொள்வதற் முயற்சிசெய்வதானது நம்முடைய ரக்ஷணத்திற்கு உபே

படுவதில்லை என்கிறமாத்திரமேயன்று; எம்பெருமான் தான் ப்ரவர்த்தித்து நம்மை ரக்ஷிப்பதற்கும் தடையாக நிற்கிறது; அப்படிப்பட்ட ஸ்வப்ரவ்ருத்தியில் நின்றும் நாம் விலகி நிற்பது தான் ப்ரபத்தியாவது, என்றபடி. இந்த ஸத்ஸம்ப்ரதாயப் பொருளை நெஞ்சில் தேக்கிக்கொண்டு இப்பாசுரத்தின் கருத்தை ஊன்றிப்பார்த்தால் நன்கு விளங்கும்.

ஆழிவலவன் சரண்ஆமேல் நமக்கு என்றும் அரணும்=எம்பெருமான் நமக்கு ரக்ஷகனாக அமையும் பக்ஷத்தில் எல்லாக்காலத்திலும் ரக்ஷகனாகவே யிருப்பன், என்ருல் இதன் கருத்து என்னவென்று நோக்கவேணும். நம்மை நாம் ரக்ஷித்துக்கொள்ள முயலுமளவில் அவன் நமக்கு ரக்ஷகனாக அமையான்; ஆதலால் நம்முடைய ரக்ஷணத்தில் நாம் முயல்வதை விட்டிட்டு அவனுடைய ரக்ஷகத்வத்திற்கு அவகாசம் கொடுப்போமாகில் அவன் "என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக்கொள்ளேனே" என்கிறபடியே எக்காலத்திலும் ரக்ஷண ஜாகரூகனு யிருந்தருள்வன் என்றவாறு.

அவன் ரக்ஷகனும்போது நம்முடைய உபயோகமற்ற ஞானத்தையும், இகழத்தக்க ஆசாரத்தையும், நிஹீநமான ஜன்மத்தையும் பார்த்து உபேக்ஷித்திடானோ? என்ன; நம்முடைய அத்யவஸாயமொன்றில் மாத்திரம் அவன் திருக்கண் செலுத்துவனேயன்றி மற்றைப்படி நம் ஞானத்திலாவது ஆசாரத்திலாவது ஜன்மத்திலாவது சிறிதும் கண்வையான் என்கிறது "ஏதுகதி ஏது நிலை ஏது பிறப்பென்னுதே" என்பதனுல்.

ஆக மூன்றடிகளாலே சிக்ஷித்த அர்த்தத்தை நிகமித்துத் தம் திருவுள்ளத்திற்கு உபதேசிக்கிருர் ஈற்றடியால்.

இரண்டாமடியில் அறியவேண்டிய வரலாறு வருமாறு:—எம்பெருமான் வராஹாவதாரம் செய்து பூமியைக் கோட்டாற்குத்தியெடுத்தபொழுது, எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனுப் பிறந்தவனும் அஸமயத்தில் சேர்ந்து பெறப்பட்டதனுல் அஸுரத்தன்மை பூண்டவனுமான நரகனென்பவன் ப்ராக்ஜோதிஷ மென்னும் பட்டணத்தி லிருந்துகொண்டு ஸகல ப்ராணிகளையும் நலிந்து தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் ராஜாக்களுடைய கன்னிகைகளையும் பற்பலரைப்

பலாத்காரமாய் அபஹரித்துக்கொண்டுபோய்த் தான் மணம்புணர்வதாகக் கருதித் தன் மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரிசிகரமான ரத்நபர்வதத்தையும் தேவமாதாவான அதிதிதேவியின் குண்டலங்களையுங் கவர்ந்து போனதுமன்றி, இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக்கொண்டு போக ஸமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால் கண்ணபிரான் கருடனை வரவழைத்து, பூமிதேவியின் அம்சமான ஸத்யபாமையுடனே தான் கருடன் மேலேறி அந்நகரத்தையடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து அந்த நரகாஸுரனை யறுத்துத் தள்ளும்போது அவனுக்குப் பக்கபலமாயிருந்த அவனது மந்திரியான முரனையும் மற்றும் பல அசுரர்களையும் முன்னடியே அறுத்துத்தள்ளினன் என்பதாம். இதுபற்றியே எம்பெருமானுக்கு முராரி என்றும் ஒரு திருநாமம் வழங்கும். ... .... ... .... ... (எஅ)

ஓர்த்த மனத்தரா யைந்தடக்கியாராய்ந்து *
பேர்த்தால் பிறப்பேழும் பேர்க்கலாம் *—கார்த்த
விரையார் நறுந்துழாய் வீங்கோதமேனி *
நிரையார மார்வனையே நின்று. (எகூ)

| | | | |
|---|---|---|---|
| கார்த்த | பசுமையான நிறமுள்ளதாய் | நின்று | நெஞ்சு நிலைத்து நின்று |
| விரை ஆர் | பரிமளம் நிரம்பியதான | ஓர்த்த மனத்தர் ஆய் | அநுஸந்திக்கின்ற மனமுடையராய் |
| நறு துழாய் | செவ்வித் திருத்துழாய் மாலையையுடையவனும் | ஐந்து அடக்கி | பஞ்சேந்திரியங்களையும் வென்று |
| | | ஆராய்ந்து | ஸம்ஸாரத்தின் கெடுதல்களை ஆராய்ந்து |
| வீங்கு ஓதம் மேனி | பொங்குங்கடல் போன்ற திருமேனியையுடையவனும் | பேர்த்தால் | ஸம்ஸாரத்தில் நின்றும் நெஞ்சைத் திருப்பிக் கொண்டால் |
| நிரை ஆரம் மார்வனையே | ஒழுங்கான ஹாரங்களணிந்த திருமார்பையுடையவனுமான பெருமானையே | பிறப்பு ஏழும் | ஒன்றின்பின் ஒன்றாக நேரக்கூடிய ஜன்ம பரம்பரைகளை |
| | | பேர்க்கலாம் | தொலைத்துவிடலாம் |

* * *—கீழ்ப்பாட்டில் "ஓதுகதிமாயனையே யோர்த்து" என்றீரே; இஃது எப்படி கூடும்? நமது பஞ்சேந்திரியங்களும் சப்தாதிவிஷய க்ராமங்களிலே சென்றுகொண் டிருக்கையாலே நாம் மேன்மேலும் மாறிமாறிப் பலபிறப்பும் பிறக்க வழி தேடுமவர்களா யிருக்கின்றோமேயன்றி உஜ்ஜீவிக்கும் வழி தேடுமவர்களா யிருக்கின்றிலோமே! என்ன; * தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழா யுடையம்மானது திருமேனியின் போக்யதையிலும் அலங்காரங்களின் அழகிலும் நாம் நெஞ்சைச் செலுத்துவோமாயின் நம்முடைய இந்திரியங்கள் 1. "ஜிஹ்வே கீர்த்தய கேசவம் முரரிபும்......... மூர்த்ந் நமாதோக்ஷஜம்" என்கிறபடியே பகவத் விஷயாநுபவத்திலே ஊன்றி சப்தாதி விஷயங்களின் வழிச்செல்லாமல் ஸம்ஸாரத்தை யடியறுப்பதற்குப் பாங்காகும் என்கிறார். (௭௯)

நின்றெதிராய நிரைமணித்தேர் வாணன் தோள் *
ஒன்றிய வீரைஞ்ஞூ றுடன்துணிய *—வென்றிலங்கும்
ஆர்படுவான் நேமி யரவணையான் சேவடிக்கே *
நேர்படுவான் தான்முயலும் நெஞ்சு. (௮௰)

| | | | |
|---|---|---|---|
| நின்று | (கூசாமல்) முன்னே வந்து நின்று | வென்று | வெற்றி பெற்று |
| எதிர் ஆய | எதிரியாய்ப் போர் செய்ய வந்தவனும் | இலங்கும் | விளங்குகின்ற |
| நிரை மணி தேர் | ஒழுங்காக அழுத்தின மணிகளையுடைய தேரின்மேலேறி யுள்ளவனுமான | ஆர்படு | கூர்மையையுடைய |
| வாணன் | பாணாஸுரனுடைய | வான் | திவ்யமான |
| ஒன்றிய ஈர் ஐஞ்ஞூறு தோள் | அடியுரமுள்ள ஆயிரந்தோள்களும் | நேமி | திருவாழியாழ்வானை யுடையவனாய் |
| உடன் | ஏககாலத்தில் | அரவு அணையான் | சேஷசாயியான எம்பெருமானுடைய |
| துணிய | அறுப்புண்டு விழும்படியாகக் காரியஞ் செய்து | சே அடிக்கே | திருவடிகளிலே |
| | | நேர்படுவான் | அணுகுவதற்காக |
| | | நெஞ்சு தான் | (எனது) நெஞ்சு தானே |
| | | முயலும் | உத்ஸாஹப் படுகின்றது. |

1. முகுந்தமாலை.

* * *—தம்முடைய நெஞ்சு எம்பெருமான் திருவடிகளிற் சென்று சேர உத்ஸாஹங் கொண்டபடியை அருளிச்செய்கிறார்.

நின்று எதிராய=தாமஸதெய்வத்தைப் பணிந்தவனாகையாலே ஸர்வேச்வரனென்று மதியாதே எதிரிட்டு நின்றவனென்ப.

வாணன் தோளிரைஞ்ஞூறு துணித்த வரலாறு:— பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்தவனான பாணாஸுரன் ஒரு காலத்தில் சிவபிரானது நடனத்தைக்கண்டு அதற்குத் தனது இரண்டு கைகளால் மத்தளந்தட்ட, சிவபெருமான் அருள்கூர்ந்து அவனுக்கு ஆயிரங் கைகளையும் நெருப்புமதிளையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும் தான் தனது பரிவாரங்களோடு அவன் மாளிகை வாசலிற் காவல்செய்திருத்தல் முதலிய வரங்களையுந் தந்தருளினன்; அந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒரு நாள் ஒரு புருஷனோடு தான் கூடியதாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிக்க ஆசைபற்றியவளாய்த் தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து, அவள் மூலமாய் அந்தப் புருஷன் க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு, 'அவனைப் பெறுதற்கு உபாயம் செய்யவேண்டும்' என்று அத்தோழியை வேண்ட, அவள் தன் யோகவித்தை மஹிமையினால் த்வாரகைக்குச் சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டுவந்து அந்தஃபுரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்த பாணாஸுரன் தன் சேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாற் பொருது நாகாஸ்த்ரத்தினாற் கட்டிப் போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நாரதமாமுனிவனால் இவ்வரலாறு சொல்லப்பெற்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான், பெரியதிருவடியை நினைத்தருளி, உடனே வந்துநின்ற அக்கருடாழ்வானது தோளின்மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூட பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் ஸமீபத்திற் காவல் செய்துகொண்டிருந்த சிவபிரானது ப்ரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து

பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளு முள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ் செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தையுண்டாக்கி இதன் சக்தியினாலே அதனைத் துரத்திவிட்ட பின்பு, சிவபிரானது அநுசரராகையாற் பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் த்வம்ஸம்பண்ணி, பாணாஸுரனோடு போர்செய்யத் தொடங்க அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலிய பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒன்றுஞ் செய்யாமற் கொட்டாவி விட்டுக் கொண்டு சோர்வடைந்துபோம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஓறுத்து ஓட்டி, பின்னர், அநேகமாயிரஞ் சூரியர்க்குச் சமமான ஸுதர்சநாழ்வானை யெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரை தாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதாகவிருக்கையில் பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்தாழ்வானுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, கண்ணபிரான் திருவுள்ள முகந்து த்வாரகைக்கு மீண்டெழுந்தருளினன் என்ற வரலாறு அறியத்தக்கது.

ஆயிரந்தோள்களில் நான்கு தோள்கள் அறுக்கப்படாமல் விடப்பட்டாலும், பெருந்தொகையில் நாலைந்து குறைந்தாலும் மிகுந்தாலும் பெருந் தொகையையிட்டே வழங்கும் முறைமை பற்றி 'ஈரைஞ்ஞூறு துணிய' எனப்பட்டதென்க.

'ஆர்படு' என்பதற்கு 'கூர்மையை யுடைத்தான' என்றும் 'அரங்களையுடைத்தான' என்றும் பொருள் கொள்ளலாம். நேமி—வடசொல். ... .... ... .... ... (அ0)

நெஞ்சால் நினைப்பரியனேலும் * நிலைப்பெற்றேன்
நெஞ்சமே பேசாய் நினைக்குங்கால் *—நெஞ்சத்துப்
பேராதுநிற்கும் பெருமானை யென்கொலோ *
ஓராது நிற்ப துணர்வு. (அக)

| | |
|---|---|
| என் நெஞ்சமே | எனது மனமே!, |
| நெஞ்சால் நினைப்பு அரியன் ஏலும் | (எம்பெருமான்) நெஞ்சாலும் நினைக்க முடியாத பெருமை வாய்ந்தவனே யாயினும் |
| | (அவனுடைய பெருமையை நினையாமல் ஸௌலப்யத்தையே நினைத்து) |
| நிலைப்பெற்று | காலூன்றி நின்று |
| பேசாய் | அவனைப்பேசப்பார்; |
| நினைக்குங் கால் | நாம் ஒருகால் நினைத்தாலும் |
| நெஞ்சத்து | நெஞ்சுதன்னிலே |
| பேராது நிற்கும் | விட்டுநீங்காமல் நிலைத்து நிற்கின்ற |
| பெருமானை | எம்பெருமானை |
| உணர்வு | நமது நெஞ்சானது |
| ஓராது நிற்பது என்கொலோ | அநுஸந்தியாமல் வாளாவிருப்பது ஏனோ? |

* * *—இதில் முன்னடிகளிரண்டும் நெஞ்சை விளித்து உபதேசிப்பன; பின்னடிகளிரண்டும் தம்மில்தாம் வருந்திச் சொல்லிக்கொள்வன. என்னெஞ்சமே! (அவன்) நெஞ்சால் நினைப்பரியனேலும் நிலைப்பெற்றுப் பேசாய்=மனமே! அப்பெருமானுடைய ஐச்வரியம் சிந்திக்கவும் முடியாததாகையாலே 'இப்படிப்பட்ட பரமேச்வரனை நாம் எங்ஙனே பேசுவது?' என்று பின்வாங்கப் பாராமல், அவனது எளிமைக் குணங்களை நினைத்தாகிலும் கூசாமல் நிலைநின்று பேசப்பார் என்றபடி.

இப்படி உபதேசித்தவளவிலும், நெஞ்சானது அவனுடைய பரத்வத்தையே நினைத்துக் கூசிநிற்பது கண்டு, "நினைக்குங்கால் நெஞ்சத்துப் பேராது நிற்கும் பெருமானை உணர்வு ஓராது நிற்பது என்கொலோ?" என்கிறார். நாம் ஒருகால் நினைத்துவிட்டாலும் அதையே வியாஜமாகக்கொண்டு நம் நெஞ்சைவிட்டுப் பேராமல் ப்ரதிஷ்டிதனாயிருக்கும் பரமஸுலபனான பெருமானை நெஞ்சானது நினைக்கக் கூசுகின்றதே! இஃது என்ன பாவமோ! என்றவாறு.

உணர்வு என்ற சொல்—ஞானத்திற்கு வாய்த்தலையான நெஞ்சைச் சொல்லுகிறது இங்கு. "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே" என்ற உபநிஷத்தை நினைப்பது.

கீழ்ப்பாட்டில் "அரவணையான் சேவடிக்கே நேர்படுவான் தான் முயலும் நெஞ்சு" என்று அருளிச்செய்தவர் அடுத்த இப்பாட்டில் இங்ஙனே அருளிச்செய்யக் காரணமென்? என்று சங்

கிக்கக்கூடும் ; கேண்மின் ; தம்முடைய நெஞ்சு பகவத்விஷயத்திலே அவகாஹித்தபடியைக் கீழ்ப்பாட்டிற்கூறினது உண்மையே ; அந்த பகவத் விஷயத்தின் பெருமையைப் பார்த்தவாறே அதற்குத் தகுந்தவளவான ப்ராவண்யம் உண்டாகவில்லையாக நினைத்து 'பகவத் விஷயத்தில் நாம் இன்னம் அடியிடவேயில்லை போலும்' என்று தோன்றி இப்பாட்டருளிச் செய்தாரென்க. ஒருவன் வித்வானாயிருந்தாலுங்கூட இன்னமும் கற்றுணரவேண்டிய கல்விகளின் எல்லையில்லாமையை நினைக்குங்கால் 'நாம் என்னகற்றோம் ; ஓரக்ஷரமும் கற்றிலோம்' என்னும்படியா யிருக்குமன்றே ; அது போலக் கொள்க.

இவ்வர்த்தத்தைப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்கிற அழகு காண்மின்;—"கீழ், ஸம்ஸாரிகளுக்கில்லாதது தமக்குண்டானவாறே நெஞ்சு பகவத்விஷயத்திலே மண்டிற்றென்று கொண்டாடினார் ; விஷயத்தைப் பார்த்தவாறே அடியிட்டிலரா யிருந்தார்." என்று. ... .... ... .... (௮௧)

உணரி லுணர்வரிய னுள்ளம் புகுந்து *
புணரிலும் காண்பரிய னுண்மை *—இணரணையக்
கொங்கணைந்து வண்டறையும் தண்டுழாய்க் கோமானை *
எங்கணைந்து காண்டு மினி. (௮௨)

| | |
|---|---|
| உணரில் | (அப்பெருமானை நாமாக) அறியப் பார்த்தாலும் |
| உணர்வு அரியன் | (அவன்) அறியக் கூடாதவன் ; |
| | (அவன்தானே) |
| உள்ளம் புகுந்து புணரிலும் | நெஞ்சிலே வந்து புகுந்து சேர்ந்தாலும் |
| உண்மை காண்பு அரியன் | உள்ளபடி அறியக் கூடாதவன் ; |
| இனி | இப்படியான பின்பு, |
| இணர் அணைய | பூங்கொத்துகள் தாழும்படியாக |
| கொங்கு | தேனிலே |
| வண்டு | வண்டுகள் |
| அணைந்து | வந்துகிட்டி (மதுவைப்பருகி) |
| அறையும் | ரீங்காரம் செய்யப்பெற்ற |
| தண் | குளிர்ந்த |
| துழாய் | திருத்துழாய் மாலையை அணிந்துள்ளவனான |
| கோமானை | அப்பெருமானை |
| எங்கு | எவ்விடத்தில் |
| அணைந்து | கிட்டி |
| காண்டும் | காணக்கடவோம். |

* * *—கீழ்ப்பாட்டில், "நினைக்குங்கால் நெஞ்சத்துப் போராது நிற்கும் பெருமானை உணர்வு ஓராது நிற்பது என்கொலோ!" என்று வருந்தினார்; இங்ஙனே நாம் வருந்துவது ஏதுக்கு? ஒருவர்க்கும் ஒருவகையாலும் அறியவொண்ணாதபடியன்றோ அப்பெருமானுடைய ஸ்வரூபமிருப்பது: விஷயம் அப்படியிருக்கும்போது வீணாக நெஞ்சை நொந்துகொள்வதில் பயனென்? இனி அவனை நாம் கிட்டிக்காணும் விரகு என்னே! என்று தம்மில்தாம் குழைகின்றார்.

'உணரில் உண்மையுணர்வரியன்; உள்ளம்புகுந்து புணரிலும் உண்மை காண்பரியன்'=நம்முடைய முயற்சியாலே அவனுடைய உண்மை காணமுடியாதது என்பது மாத்திரமேயல்ல; "தாம் தம் பெருமையறியார்" என்றும் "தனக்குந்தன் தன்மையறிவரியான்" என்றுஞ் சொல்லுகிறபடியே அவன்றனக்கும் அறிய நிலமல்லாத உண்மையை அவன்றானும் நமக்கு அறிவிக்கவல்லனல்லன் என்றவாறு.

இணர்—பூங்கொத்து. எங்கு—எவ்விதமாக என்றுமாம். (௮௨)

இனியவன்மாய னெனவுரைப்ப ரேலும் *
இனியவன் காண்பரியனேலும் *—இனியவன்
கள்ளத்தால் மண்கொண்டு விண்கடந்த பைங்கழலான் *
உள்ளத்தி னுள்ளே யுளன். (௮௩)

| | |
|---|---|
| இனி | இப்போது |
| அவன் | 'அந்தஸர்வேச்வரன் |
| மாயன் | மாயைக்காரன்' |
| என | என்று |
| உரைப்பர் ஏலும் | சொல்லுவார்களேயாகிலும், |
| இனி | இப்போது |
| அவன் | அப்பெருமான் |
| காண்பு அரியன் ஏலும் | கண்டு அநுபவிக்கக் கூடாதவனேயாகிலும் |
| கள்ளத்தால் | க்ருத்ரிம வேஷத்தினால் |
| | (மாவலி பக்கலிலே சென்று) |
| மண் கொண்டு | பூமிதானம் வாங்கி |
| விண் கடந்த பை கழலான் அவன் | ஆகாசம் முதலிய மேலுலகங்களையும் ஆக்ரமித்துக் கொண்ட பரந்த திருவடிகளையுடையனான அப்பெருமான் |
| இனி | இப்போது |
| உள்ளத்தின் உள்ளே உளன் | எனது ஹ்ருதயத்தினுள்ளே (வேறிடமறியாமே) நிலைத்து நிற்கின்றான். |
| | (இந்த பரமலாபமே போதுமென்கை.) |

* * *—எம்பெருமான் பெரிய மாயக்காரன் என்று பலர் சொல்லுவர்கள்; அதாவது 1. "வந்தாய்போலே வாராதாய் வாராதாய்போல் வருவானே!" என்னுமாபோலே—கரைபுரண்ட மாநஸாநுபவ மாத்திரத்தினால் கைக்கு எட்டினவனாக நினைக்கலாம்படி யிருந்தும், 'ஒருநாளும் அவன் கைக்கு எட்டமாட்டான்' என்றிருக்கச் செய்தேயும் ஸ்வேச்சையாலே வந்து கைக்கு எட்டியும் இப்படி மாயாவியாயிருப்பவன் என்பர்கள்; மற்றுஞ் சிலர் 'அப்பெருமான் ஒருகாலும் ஒருவர்க்கும் காணமுடியாதவன்' என்பர்கள்; யார் எப்படி சொன்னாலும் எனக்கென்ன; அவன் மாயாவியாகவே யிருக்கட்டும், காண்பரியனாகவே யிருக்கட்டும்; தன் உடைமையைப் பெறுகைக்குத் தான் யாசகனாய்ச் சென்று அரிய பெரிய காரியஞ்செய்த அவன் என்னை மறக்க வொட்டாதபடி என் ஹ்ருதயத்திலே வந்து புகுந்துவிட்டான்; இனி அவனுடைய ஸ்வரூபம் எப்படிப்பட்டதா யிருந்தால் எனக்கென்ன? என்கிறார். ... ... ... ... .... ... (அ௩)

உளனாய நான்மறையி னுட்பொருளை * உள்ளத்
துளனாகத் தேர்ந்துணர்வரேலும் *—உளனாய
வண்டாமரை நெடுங்கண் மாயவனை யாவரே *
கண்டா ருகப்பர் கவி. (அ௪)

| | | | |
|---|---|---|---|
| நால் மறையின் | நான்கு வேதங்களினுடைய | நெடு கண் | நீண்ட திருக்கண்களையுடைய |
| உள் பொருள் | உள்ளுறை பொருளாக | மாயவன் | ஆச்சர்யபூதனாக |
| உளனாயவனை | இருக்கின்ற எம்பெருமானை | உளனாயவனை | இருக்கின்ற அப்பெருமானை |
| தேர்ந்து | (ஜ்ஞாநயோகத்தாலே) ஆராய்ந்து | கண்டார் யாவரே | கண்டு அநுபவிக்கப் பெற்றார் யாவர்? (ஒருவருமில்லை;) |
| உள்ளத்து உளன் ஆக | நெஞ்சிலே பொருந்தியிருப்பவனாக | | |
| உணர்வர் எனும் | (சில ஞானிகள்) அறிய வல்லாரென்றாலும், | கவி உகப்பர் | தோத்திரக் கவிகளை உகந்து வாயாற் சொல்லிக் கொண்டு போது போக்குவர்களத்தனை. |
| வண் தாமரை | அழகிய தாமரைப் பூப்போன்ற | | |

1. திருவாய்மொழி 6—10—9.

* * *—வேதங்களினால் அறியக்கூடியவனான எம்பெருமான் என்னெஞ்சிலுள்ளான் என்னெஞ்சிலுள்ளான் என்று ஒவ்வொருவரும் சொல்லிக் கொண்டிருக்கலாமத்தனை யன்றி அப்புண்டரீகாக்ஷனை நேரே கண்ணாற் கண்டவர் யாவர்? யாருமில்லை. அப்படியானால் எத்தனையோ பக்தர்கள் 'கண்டேனே, கண்டேனே' என்று சொல்லக் காண்கிறோமே, அஃது என்ன? என்று கேட்கில்; உவப்பினால் கவி சொல்லி விடுகிறார்களித்தனை யல்லது வேறில்லை—என்கிறார்.

எம்பெருமானைக் கண்டேனென்று சொல்லிக் கொண்டால் அதனால் தங்களுக்கொரு ஸந்தோஷம் விளைகிறபடியால் கண்டேன் கண்டேனென்று பலரும் கவிப்பாக்கள் கூறுகின்றவளவால் பரம்பொருளை மெய்யே கண்டார்களல்லர் என்றவாறு.

முதலடியில் "உட்பொருளை" என்ற விடத்துள்ள இரண்டாம் வேற்றுமை யுருபைப்பிரித்து 'உளனாய' என்பதோடு கூட்டி யுரைக்கப்பட்டது. மேலிடத்தும் இங்ஙனமே. ... (அச)

கவியினார் கைபுனைந்து கண்ணார் கழல்போய் *
செவியினார் கேள்வியராய்ச் சேர்ந்தார் *—புவியினார்
போற்றியுரைக்கப் பொலியுமே * பின்னைக்காய்
ஏற்றுயிரை யட்டா னெழில். (அரு)

| | |
|---|---|
| கவியினார் | தோத்திரக்கவிகளைச் சொல்லுபவராய்க்கொண்டு |
| கை புனைந்து | அஞ்ஜலிபண்ணி |
| கண் | தமது கண்கள் |
| ஆர் கழல் போய் | (அவனது) விலக்ஷணமான திருவடிகளிலே சென்று சேரப்பெற்று |
| செவியின் ஆர் கேள்வியர் ஆய் | காதுநிறைந்தகேள்விகளை யுடையராய்க் கொண்டு |
| சேர்ந்தார் | வந்து பணிந்தவர்களான |

| | |
|---|---|
| புவியினார் | பூமியிலுள்ளாரெல்லாரும் |
| போற்றி உரைக்க | (ஒன்றுகூடிப்) போற்றி யுரைத்தாலும், |
| பின்னைக்காய் ஏறு உயிரை அட்டான் எழில் பொலியுமே | நப்பின்னைப் பிராட்டிக்காக ரிஷபங்களினுயிரை மாய்த்த பெருமானுடைய அழகு சிறப்புறச் சொல்லப்பட்டதாகுமோ?. |

* * *—கீழ்ப்பாட்டில் "மாயவனை யாவரே கண்டார்" என்று பரம்பொருளை உள்ளபடியே காணப்பெற்றாருமில்லை யென்றார்; உள்ளபடியே பேசப்பெற்றவர்களாவது உண்டோவென்ன; இப்பூமியிலுள்ளாரடங்கலும் ஒன்று கூடிப் பேசினாலும் சிறப்புறப்பேசித் தலைக்கட்டலாம்படி யிராது எம்பெருமானுடைய குண சேஷ்டிதங்கள்—என்கிறாரிதில்.

வாயால் பலபல தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டும் கைகளைக் கூப்பிக்கொண்டும் கண்களை வேறொரு விஷயத்திலும் செலுத்தாது அவனது திருவடித்தாமரைகளிலேயே செலுத்திக் கொண்டும் "ஶ்ரவ்யாதகயாः ஶொத்ரஸ்ய ! ஶ்ரவணாய" என்கிறபடியே அப்பிரானது புண்யகீர்த்திகளையே செவிமடுத்துக் கொண்டும் இப்பூமியிலுள்ளாரடங்கலும் வந்து பணிந்து எல்லாருமொன்றுசேர்ந்து போற்றியுரைத்தாலும், கண்ணபிரான் நப்பின்னைப் பிராட்டிக்காக ரிஷபங்களை முடித்திட்டு மணக்கோலமும் பெருமிடுக்குமாக நின்ற அழகு பேச்சுக்கு நிலையாகுமோ? என்றவாறு.

பின்னைக்கா யேற்றுயிரை யட்ட வரலாறு:—கும்பனென்னும் இடையர் தலைவனது மகளும், நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ் செய்து கொண்டனன் என்பதாம். ... .... (அரு)

எழில்கொண்ட மின்னுக் கொடியெடுத்து * வேகத்
தொழில்கொண்டு தான்முழங்கித் தோன்றும் *—எழில்கொண்ட
நீர்மேக மன்ன நெடுமோல் நிறம்போல *
கார்வானம் காட்டும் கலந்து. (அசு)

| | | | |
|---|---|---|---|
| எழில் கொண்ட | அழகையுடைத்தாய் | எழில் கொண்ட மின் கொடி எடுத்து | அழகிய மின்னற்கொடி படைப்பெற்று |
| நீர் | நீர்நிறைந்ததான | | |
| மேகம் தான் | மேகமானது | | |

| | | | |
|---|---|---|---|
| வேகம் தொழில் கொண்டு | வேகமாகத் திரிதலாகிற வியாபாரத்தைச் செய்யப்பெற்று | கார் வானம் | கார்காலத்து ஆகாசமானது |
| முழங்கி தோன்றும் | கர்ஜித்துக்கொண்டு விளங்குதற் கிடமான | அன்ன நெடுமால் நிறம் போல கலந்து காட்டும் | அப்படிப்பட்ட எம்பெருமா னுடைய திருநிறத்தை அநுகரித் திராநின்றது. |

* * *—எம்பெருமானுடைய அழகானது ஒருவருடைய பேச்சுக்கு நிலமன்றாகிலும் பேசாதிருக்க முடியாதன்றோ; 'திருவடி அப்படியிருக்கிறது; திருக்கண் இப்படியிருக்கிறது' என்றாற் போலே உவமையிட்டாவது சொல்லிக்கொண்டுதானே யிருக்க வேண்டும்: ஆகவே உபமாந முகத்தால் எம்பெருமானது வடிவைப் பேசி அநுபவிக்கிறார் இப்பாட்டாலும் மேற்பாட்டாலும்.

கார்காலத்து ஆகாசமானது எம்பெருமானுடைய திருமேனி நிறத்தைக் கோட் சொல்லித் தருகின்றது. கார்காலத்து ஆகாசம் எங்ஙனே யிருக்குமென்றால், அழகிய நீர் கொண்டெழுந்த மேகம் மின்னற் கொடியோடு சேர்ந்து வேகமாகத் திரிந்துகொண்டிருக்க வும் கர்ஜித்துக் கொண்டிருக்கவும் பெற்றிருக்கும். எம்பெருமா னுடைய காளமேகம்போன்ற திருமேனியும் மின்னற்கொடி போன்ற பெரிய பிராட்டியாரோடு கூடியும், ஸ்ரீ கஜேந்திராழ்வான் போன்ற ஆர்த்தர்களான ஆச்ரிதர்களைக் காத்தருள்வதற்கு வேகமாக ஓடித்திரிந்துகொண்டும், 'ஆனைவரும் பின்னே, மணி யோசைவரும் முன்னே' என்கிறாப்போலே அன்பர்களிடம் தான் வருவதற்குமுன்னமே அறிகுறியாக முழக்கத்தைச் செய்து கொண்டிராநின்ற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யுடைத்தாகியுமிருக்கும். ஆகவே இங்குச்சொன்ன உபமாநோபமேயபாவம் நன்கு பொருந்துமென்க.

மின் + கொடி; மின்னுக்கொடி; புணர்ச்சியில் உகரச்சாரியை பெற்றது. 'மின்னலைக் கொடியாக வெடுத்து' என்றும் பொருள் கொள்ளலாம். முதலடியில் "எழில்கொண்டு" என்ற (வினையெச்ச மான) பாடம் பெரும்பான்மையாக வழங்கிவந்தாலும் அது பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற்கு இணங்காது: "எழிலை

யுடைத்தான மின்னை” என்பது வியாக்கியான வாக்கியமாதலால் “எழில்கொண்ட” என்ற (பெயரெச்சமான) பாடமே பொருந்தும். ... .... .... .... (அசு)

கலந்துமணியிமைக்கும் கண்ணா * நின்மேனி
மலர்ந்துமரதகமே காட்டும் *—நலந்திகழும்
கொந்தின்வாய் வண்டறையும் தண்டுழாய்க் கோமானை *
அந்திவான் காட்டுமது. (அஎ)

| | | | |
|---|---|---|---|
| மணி கலந்து | ஸ்ரீகௌஸ்துப மணியோடுகூடி | கொந்தின் வாய் | கொத்துக்களிலே |
| இமைக்கும் | விளங்காநின்ற | வண்டு அறையும் | வண்டுகள் ரீங்காரம் செய்யப்பெற்ற |
| கண்ணா | கண்ணபிரானே! | தண் துழாய் | திருத்துழாய் மாலையணிந்த |
| மரதகம் | மரதகரத்னமானது | கோமானை | ஸர்வேச்வரனாகிய உன்னை |
| மலர்ந்து | ஒளிப்பரப்பை யுடைத்தாய்க் கொண்டு | அந்தி வான் அது காட்டும் | ஸந்தியாகாலத்து ஆகாசமானது ஒத்திராநின்றது. |
| நின் மேனி காட்டும் | உனது திருமேனியை ஒத்திராநின்றது; | | |
| நலம் திகழும் | அழகாக விளங்குகின்ற | | |

* * *—இப்பாட்டும் உபமானமுகத்தால் அநுபவிப்பதாம். குருமாமணிப்பூண்குலாவித்திகழுந் திருமார்புடைய பெருமானே! மரதகப் பச்சையானது உனது பச்சைமாமலை போன்றமேனியைக் கோட்சொல்லித் தருகின்றது; பசுகுபசுகென்ற திருத்துழாய் மாலை யணிந்திருக்குமழகை ஸந்த்யாராக ரஞ்ஜிதமான ஆகாசம் காட்டுகின்றது என்கிறார். திருத்துழாயின் பசுமையும் “கைவண்ணந் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தம் அடியுமஃதே” என்னும்படியான திவ்யாவயவங்களிற் சிவப்புமான பரபாகசோபையை அந்திவான் காட்டுமென்றபடி.

கோமானை=முன்னிலையில்வந்த படர்க்கை.

ஓரடைவிலே இப்பாசுரத்தை அழகிய மணவாளச்சீயர் உபந்யஸித்தருளுமளவில், இதற்கு இங்ஙனேயும் பொருள் சொல்லலாமென்று அருளிச்செய்தபடி;—கண்ணா! நின்மேனியை மரதகமே

மலர்ந்துகாட்டும்; கலந்து மணியிமைக்குந் தண்டுழாய்க் கோமானை யுன்னை அந்திவான் காட்டும் என்று யோஜித்து, பச்சைமாமலைபோல் மேனியானது ஸமுதாயரூபேண மரதகப் பச்சைபோல் விளங்காநின்றது; அதற்குமேல் திருவாபரண ரத்நப்ரபையும் திருத்துழாய் சோபையுமான அழகை உற்று நோக்குங்கால் அந்திவான் போன்றிருக்கின்றது-என்று. "ஸிம்ஹாவலோகநந்யாய" என்கிற வடமொழியாளரின் நியாயம் தென்மொழியிலு முண்டாதலால், முதலடியிலுள்ள "கலந்து மணியிமைக்கும்" என்றதை மேலே அந்வயித்தல் சாலும். (அஎ)

அதுநன் றிதுதீதென் றையப்படாதே *
மதுநின்ற தண்டுழாய் மார்வன் *—பொதுநின்ற
பொன்னங் கழலே தொழுமின் * முழுவினைகள்
முன்னங் கழலும் முடிந்து. (அஅ)

| | |
|---|---|
| அது நன்று இது தீது என்று ஐயம் படாதே | 'அது நல்லதோ? இது கெட்டதோ?' என்று ஸந்தேஹப்பட்டுக் கொண்டிராமல் |
| மது நின்ற தண் துழாய் மார்வன் | தேன்நிறைந்த தண்டுழாய் மாலையைத் திருமார்பிலணிந்த பெருமானுடைய |
| பொது நின்ற | ஸர்வஜந ஸாதாரணமான |
| பொன் அம் கழலே | விரும்பத்தக்க அழகிய திருவடிகளையே |
| தொழுமின் | தொழுங்கோள்; |
| (அப்படி தொழுதால்) | |
| முன்னம் | முந்துறவே |
| முழு வினைகள் | ஸமஸ்த பாபங்களும் |
| முடிந்து | உருமாய்ந்து |
| கழலும் | விட்டு நீங்கும். |

* * *—உலகத்தாரை நோக்கி யுரைக்கிறார். நன்மை தீமைகளைப் பகுத்துணரு முணர்வு உங்களுக் கில்லாமையினால் 'எது நல்லது, எது தீயது' என்று ஸந்தேஹப்பட்டுக் கொண்டே காலங் கழிப்பதைத்தவிர்ந்து, 'பகவத் விஷயத்தில் ப்ராவண்யங் கொண்டிருப்பதே நன்று, ஸம்ஸாரத்தில் ஆசை கொண்டிருப்பது தீது' என்று உங்கட்கு நான் சொல்லும் விஷயத்தைத் திடமாகநம்பி, ஆச்ரித ரக்ஷணத்திற்குத் தனிமாலை யிட்டிருக்கு மெம்பெருமானுடைய ஸர்வஸாதாரணமான திருவடிகளைத் தொழுங்கோள்;

தொழுதால் உங்களுடைய பாபங்களெல்லாம் தொலைந்து போம் என்கிறார்.

முதலடிக்குப் பொருள் ;— அது—பகவத்விஷயமானது, நன்று—நல்லது ; இது—ஸம்ஸாரயானது, தீது—பொல்லாதது ; என்று—என்று நான் சொல்லுமிவ்விஷயத்தில், ஐயப்படாதே—, என்னவுமாம்

போதுநின்ற = 'தே³வாநாம் தா³நவாநாஞ்ச ஸாமாந்யமதி⁴தை³வதம்' என்னப்பட்ட எம்பெருமானுடைய திருவடிகள் ஸர்வஸாதாரணமென்னத் தட்டுண்டோ ? ராவணசிசுபாலாதிகளு முட்பட வந்து பணிந்தால் அங்கீகரிக்க ஸித்தமாயிருக்குந் திருவடிகளிறே.

முழுவினைகள் முன்னம் கழலும்=தொழவேணுமென்று நினைத்தமாத்திரத்தில் பாவங்கள் தொலையுமென்கை. 'முடிந்து' என்றதனால் அப்பாவங்கள் வேறொருவரிடத்திற் போய்ச்சேர்வதற் கில்லாமே உருமாய்ந்து ஒழியுமென்பது பெறப்படும். .... (அஅ)

முடிந்தபொழுதில் குறவாணர் * ஏனம்
படிந்துழுசால் பைந்தினைகள் வித்த *— தடிந்தெழுந்த
வேய்ங்கழைபோய் விண்திறக்கும் வேங்கடமே * மேலொருநாள்
தீங்குழல்வாய் வைத்தான் சிலம்பு. (அகூ)

| | |
|---|---|
| முடிந்த பொழுதில் குறவாணர் | மாணமடையும் நிலைமையிலுள்ள கிழவர்களான குறவர்கள் |
| ஏனம் படிந்து உழு சால் | காட்டுப்பன்றிகள் (தங்கள் செருக்காலே மூங்கில்கள் வேர்பறிந்து விழும்படி) படிந்து உழுத சால்களிலே |
| பை தினைகள் வித்த | புதிய தினைவிதைகளை விதைக்க |
| தடிந்து | அறுத்துப்போட்ட பின்பும் |
| எழுந்த | (நிலவளத்தினால்) ஓங்கிவளர்ந்த |
| வேய்ங்கழை | மூங்கில் தடிகளானவை |
| போய் | மேலேசென்று |
| விண் திறக்கும் | ஆகாசத்தை யளாவப்பெற்ற |
| வேங்கடம் | திருவேங்கடம் |
| மேல் ஒருநாள் | முன்பொருநாள் |
| தீம் குழல் | மதுரமான புல்லாங்குழலை |
| வாய் வைத்தான் | திருப்பவளத்தில் வைத்து ஊதின கண்ணபிரானுடைய |
| சிலம்பு | திருமலையாம். |

* * *—திருமலையின் நிலவளத்தையும் ஒக்கத்தையும் ஒரு சமத்காரமாகப் பேசுகிறாரிதில். தேன் திரட்டுதல், வேட்டையாடி மிருகங்களைப் பிடித்துவருதல் முதலியன குறவர்களின் தொழிலாகும்; இத்தொழில்கள் நல்லவயதிலுள்ள குறவர்கட்குச் செய்ய இயலுமேயன்றி, கிழக்குறவர்கட்குச்செய்ய இயலா. ஆகவே அவர்கள் கிருஷியினால் ஜீவிக்கப் பார்ப்பர்கள்; அது தன்னிலும் தாங்களே உழுது பயிரிடுதலும் அவர்கட்கு இயலாது. கலப்பை பிடித்து உழமாட்டாத முடிந்தபோழுதிற்குறவாணராதலால். பின்னை அவர்கள் என் செய்வார்களென்னில்; திருமலையிற் சில பாகங்களிலே காட்டுப்பன்றிகள் தங்கள் செருக்குக்குப் போக்கு வீடாக மூங்கில்கள் வேர் பறியுண்டு விழத் தள்ளி அந்நிலங்களை மூக்காலே உரோசி ஒருசால் உழுதுவைக்கும்; அத்தகைய நிலங்களிலே இக்கிழக்குறவர்கள் தினைகளை விதைத்து ஜீவிப்பார்கள். ஏற்கனவே பன்றிகள் தள்ளியிட்டிருந்த மூங்கில்கள் பயிர்க்குக் களையாக வொண்ணுதென்று அவற்றை இக்குறவர்கள் நன்றாகக் களைந்து போட்டுவிட்டுப் போனாலும் அவை நிலப்பண்பினால் பண்டு போலவே வளர்ந்து ஆகாசத்தை அளாவுகின்றனவாம். இப்படிப்பட்ட நிலவளம் வாய்ந்த திருமலை முன்பு ஸ்ரீக்ருஷ்ணனாய்த் திருவவதரித்து வேணுகாநம் பண்ணின பெருமான் வாழுமிடம்—என்றாயிற்று.

குறவர் தங்கள் சாதித்தொழிலை விட்டு க்ருஷியில் இறங்கினதற்குக் காரணங் கூறுவது போலும் 'முடிந்தபோழுதின்' என்ற அடைமொழி. சரமதசையிலே யிருக்கின்ற குறவர் என்கை. வாணர்—வாழ்நர்; குறவராக வாழ்பவர்கள் என்கை. சால்= 'ஒருசால் உழுதது, இரண்டுசால் உழுதது' என்று உலகவழக்க முள்ளமை உணர்க.

சிலம்பு—மலைக்குப் பெயர். .... ... (அகூ)

சிலம்பும் செறிகழலும் சென்றிசைப்ப * விண்ணு
றலம்பிய சேவடிபோய் * அண்டம்—புலம்பியதோள்
எண்டிசையும் சூழ இடம்போதா தென்கொலோ *
வண்டுழாய் மாலளந்த மண். (கூ0)

| | | | |
|---|---|---|---|
| சிலம்பும் | (திருவடிகளில் சாத்தின) நூபுரங்களும் | தோள் | திருத்தோள்கள் |
| செறி கழலும் | செறிவாக அணிந்த வீரத்தண்டைகளும் | எண் திசையும் சூழ | எட்டுத் திசைகளையும் வியாபிக்க |
| சென்று இசைப்ப | எங்கும் ஒலிக்க | இடம் போதாது | இடம் போரவில்லை ; |
| விண் ஆறு | ஆகாசகங்கையிலே | வண் துழாய் மால் | அழகிய திருத்துழாய் மாலையணிந்த எம்பெருமான் |
| அலம்பிய | விளக்கப்பட்ட | | |
| சே அடி | திருவடிகளானவை | அளந்த | அளந்துகொண்ட |
| அண்டம் போய் | அண்டபித்தியளவும் நீண்டு போனபோது, | மண் | பூமியானது |
| புலம்பிய | (அனைவராலும்) துதிக்கத் தக்க | என் கொல் | என்ன பெரிது ! [சிறியதே போலும்.] |

* * *—கீழ்ப்பாட்டில், திருமலையில் மூங்கிற்பணைகளின் வளர்த்தியைச்சொன்ன ப்ரஸங்கத்தாலே உலகளந்த பெருமானுடைய திருத்தோள்களின் திருவளர்த்தி நினைவுக்குவர, அதனைப் பேசி யநுபவிக்கிறாரிதில். எம்பெருமானளந்த இப்பூமண்டலம் மிகப்பெரிது என்கிறார்களே, அப்படி பெரிதாக எனக்குத்தோன்றவில்லை ; அவன் உலகளந்த காலத்து எண்டிசையும் விம்மவளர்ந்த திருத்தோள்கள் நெருக்குண்ணுமல் விசாலமாக அடங்கியிருப்பதற்கு இடம் போதவில்லையே ; அப்படியிருக்க, "பெரிது பெரிது புவனம் பெரிது" என்கிறார்களே, இது என்கொல் என்கிறார்.

"வண்டுழாய் மாலளந்தமண்" என்றவிடத்து 'அளந்த' என்பதை 'அளந்தது' என்றதன் குறையாகக்கொண்டும் உரைக்கலாம்: வண்டுழாய்மால் மண்அளந்தது என்கோலோ=அளப்பதாவது அடியை மாறிமாறியிட்டுச் செய்யவேண்டுவது ; திருத்தோள் வளர்த்திக்கே இடம் போரவில்லையென்றால் எம்பெருமான் மண்ணளந்தானென்று எப்படி சொல்லமுடியும்? என்கை. (௯௦)

மண்ணுண்டும் பேய்ச்சி முலையுண்டு மாற்றாதாய் *
வெண்ணெய் விழுங்கவெகுண்டு * ஆய்ச்சி—கண்ணிக்
கயிற்றினல் கட்டத் தான் கட்டுண்டிருந்தான் *
வயிற்றினேடாற்றா மகன்.

(௯௧)

| | |
|---|---|
| வயிற்றினோடு ஆற்றா மகன் | வயிற்றைக் கொண்டு ஆறியிருக்க மாட்டாத (கண்ணனாகிற) பிள்ளையானவன் |
| மண் உண்டும் | (பிரளயத்தில்) உலகங்களையெல்லாம் அமுதுசெய்தும் |
| பேய்ச்சி | பூதனையினது |
| முலை | (நஞ்சு தீற்றின) முலையை |
| உண்டும் | அமுது செய்தும் |
| ஆற்றாதாய் | த்ருப்தி பெறாதவனாய் |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| விழுங்க | (களவுசெய்து) விழுங்கின வளவிலே |
| ஆய்ச்சி | யசோதைப் பிராட்டி |
| வெகுண்டு | கோபங்கொண்டு |
| கண்ணி கயிற்றினால் | பல முடிச்சுகளையுடைய தாம்பினால் |
| கட்ட | உரைக்கக் கட்டிப் போட, |
| தான் | ஸர்வசக்தனான தான் |
| கட்டுண்டு இருந்தான் | (அதற்கொரு பரிஹாரம் செய்து கொள்ளமாட்டாமல்) கட்டுண்டிருந்தான். |

* * *—எம்பெருமானுடைய சில லீலைகளை அநுபவித்துப் பேசுகிறார். இதில் "வயிற்றினோடாற்றாமகன்" என்றருளிச் செய்த அழகை என்சொல்வோம். எத்தனை பொருள்களையிட்டு நிரப்பினாலும் நிரம்பாதே 'இன்னமும் ஏதேனும் கிடைக்குமோ? இன்னமும் ஏதேனும் கிடைக்குமோ?' என்றே எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் வயிறாகையாலே அதை வைத்துக்கொண்டு பரிக்க மாட்டாத மகன் என்றவாறு. அவன் இப்படிப்பட்ட வயிறு படைத்தவனென்பது எங்ஙனே தெரிகின்றதென்ன, முன்னடிகளி லருளிச்செய்கிறார். உலகங்களையெல்லாம் அமுதுசெய்து பார்த் தான்; அதிலும் வயிறு த்ருப்திபெறவில்லை; பெற்றதாய்போல் வந்தபேய்ச்சியின் பெருமுலையைச் சுவைத்துண்டுபார்த்தான்; அதிலும் த்ருப்திபெறவில்லை; ஆய்ச்சிகள் உறிகளிலே சேமித்து வைத்த வெண்ணெயெல்லாம் வாரியுண்டான்; ஒன்றிலும் த்ருப்தி பெற்றிலன்; வெண்ணெய் களவுசெய்த குற்றத்திற்காகக் கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டதொன்றினால் த்ருப்திபெற்றா னத்தனை.

கண்ணபிரான் வெண்ணெய் களவுசெய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால்கட்டி வருத்துகின்றாளென்று

வீட்டிலுள்ள கயிற்றையெல்லாம் துண்டுதுண்டாக அறுத்துவைத்திட்டுப் பின்பே வெண்ணெய் திருடப்போவன்; அவள் இவனைப் பிடித்துக்கொண்ட பின்பு துண்டுதுண்டான அக்கயிற்றையெல்லாம் ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு தாம்பு வடிவமாக்கி அதுகொண்டு கண்ணனைக்கட்டுவள்; ஆனதுபற்றிக் கயிற்றுக்குக் **கண்ணி** என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இப்படிப் பட்ட தாம்பினால் கட்டும்போது தன் உடம்புக்கு எட்டம் போராத படியான அத்தாம்பினால் தன்னைக் கட்டமுடியாதபடி எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ள வல்லவனாயினும், தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரித பாரதந்திரியம் முதலிய சீலங்களை வெளியிடுவதற்கென்றே பரத்வநிலையைத் தவிர்ந்து மநுஷ்ய ஸஜாதீயனாக அவதரித்திருக்கிற தான் உரலோடு கட்டுண்டிருக்கை முதலிய இவ்வகைகளினால்தான் அக்குணங்களை விளங்கச்செய்து கொள்ளவேணுமென்று கொண்டு, ஒரு சுற்றுக்குப் போராத தாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் சுருக்கி அமைத்துக் கொள்வனாதலால் இது தோன்றக் "கட்டுண்டிருந்தான்" எனப்பட்டது.

வெகுண்டு—இத்தனை வெண்ணெயை வாரியுண்டால் ஜரிக்குமோ என்று சீற்றங்கொண்டு. .... .... .... (௯௧)

மகனொருவர்க் கல்லாத மாமேனி மாயன் *
மகனா மவன்மகன்றன் காதல்—மகனை *
சிறைசெய்த வாணன்தோள் செற்றான் கழலே *
நிறைசெய்தேன் நெஞ்சே நினை.

(௯௨)

என் நெஞ்சே — என் மனமே!,

ஒருவற்கு மகன் அல்லாத — (கருமமடியாக) ஒருவனுக்கும் மகனாகப் பிறக்கத் தகாத [ஸர்வலோக பிதாவான]

மா மேனி — சிறந்த திருமேனியை யுடைய

மாயன் — ஆச்சர்யபூதனாய்

மகன் ஆம் அவன் — (வஸுதேவர்க்குப்) பிள்ளையாகப் பிறந்தவனாய்

மகன் தன் — தனது மகனான ப்ரத்யும்நனுடைய

காதல் மகனை — இஷ்ட குமாரனான அநிருத்தாழ்வானை

சிறை செய்த — சிறையிலே வைத்த

| | | | |
|---|---|---|---|
| வாணன் | பாணாஸுரனுடைய | கழலே | திருவடிகளையே |
| தோள் | தோள்களாயிரத்தையும் | நிறை செய்து | பூர்த்தியாக |
| செற்றான் | அறுத்தொழித்தவனான பெருமானுடைய | நினை | சிந்தை செய்வாயாக. |

* * *—எம்பெருமானேயென்னில் தாயும், தந்தையுமா யிவ்வுலகினில் வாழுமீசன்; அவன் ஸகலலோக பிதாவாய்க் கொண்டு எல்லாரையும் தனக்கு மக்களாக வுடையவனேயன்றித் தான் ஒருவற்கும் மகனாயிருக்கத் தக்கவனல்லன்; அஸ்மதாதிகளைப் போலே கருமங்காரணமாக அவன் பிறவாவிடினும் "அஜாயமாநோ பஹுதா விஜாயதே தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்." என்கிற படியே அநுக்ரஹம் காரணமாகப் பலபலயோனிகளிலும் பிறக்குமடைவிலே நந்தன்மகனாக ஒரு பிறவி பிறந்தான்; அப்பிறவியில், "புத்ரேண லோகாந் ஜயதி பௌத்ரேணாநந்த்யமச்நுதே" என்றாப் போலே தனக்கொரு மகனும் அவனுக்கொரு மகனும் ஆகப் பேரன்வரையில் பெற்றுவிட்டான் [தன்மகன்-ப்ரத்யும்நன்; அவனதுமகன்-அநிருத்தன்.] பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள் ஒருநாள் அவ்வநிருத்தனோடே தான் கூடியிருந்ததாகக் கனாக்கண்டு தனது தோழியான சித்திரலேகையின் யோகவித்தை மஹிமையினால் அவனை த்வாரகையில் நின்றும் தூக்கிக்கொண்டுவரச் செய்து அவனோடு போகங்களை அநுபவித்துக்கொண்டுவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த பாணாஸுரன் தன் ஸேனையுடன் அநிருத்தனை எதிர்த்து மாயையினாலேபொருது நாகாஸ்திரத்தினாற் கட்டிப் போட்டிருக்க, த்வாரகையிலே அநிருத்தனைக்காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது நாரதமுனிவனால் சமாசாரமறிந்த கண்ணபிரான் பெரியதிருவடியின் மேலேறிக் கொண்டு பலராமன் முதலானாரோடு பாணபுரத்திற்கு எழுந்தருளிக் கார்த்திகையானுங் கரிமுகத்தானும் கனலும் முக்கண் மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகுகாட்டிப்போகும்படி செய்து சக்ராயுதத்தைப் பிரயோகித்துப் பாணனது தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்தான்; அப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருவடிகளையே தமது திருவுள்ளத்தில் நிறைத்துக்கொள்ள விரும்பினாராயிற்று. .... ... ... ... ... (கூஉ)

நினைத்துலகி லார்தெளிவார் நீண்ட திருமால் *
அனைத்துலகு முள்ளொடுக்கி யால்மேல் *— கனைத்துலவு
வெள்ளத்தோர் பிள்ளையாய் மெள்ளத் துயின்றானை *
உள்ளத்தேவை நெஞ்சே யுய்த்து. (கூரு)

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சே | ஓ மனமே !, | ஆல் மேல் | ஆலந்தளிரின்மேலே |
| நீண்ட | (முன்பு உலகங்களை அளப்பதற்காக) வளர்ந்த | மெள்ள துயின்றானை | மெள்ள சயனித்துக் கொண்டவனு மான பெருமானை |
| திரு மால் | ச்ரிய: பதியானவனும் | உய்த்து | சரணமாக அநுஸந்தித்து |
| கனைத்து உலவு வெள்ளத்து | கோஷித்துக் கொண்டு எங்கும் பரந்த பிரளய வெள்ளத்திலே | உள்ளத்தே வை | தியானிக்கக் கடவாய் ; |
| ஓர் பிள்ளை ஆய் | ஒப்பற்ற சிறு குழந்தையாய் | உலகில் | இவ்வுலகத்தில் |
| அனைத்து உலகும் | உலகங்களை யெல்லாம் | நினைத்து | (அப்பெருமானை) அநுஸந்தித்து |
| உள் ஒடுக்கி | திருவயிற்றினுள்ளே அடக்கி | ஆர் தெளிவார் | தெளிவுபெறுவார் ஆரேனு முண்டோ ? (ஒருவரு மில்லையே.) |

* * *—"ஸதைகரூபரூபாய" என்கிறபடியே எம்பெருமான் எப்போதும் ஒருபடிப்பட்டவனென்றிருந்தாலும் கருமமடியாக அவனது வடிவுக்கு ஸங்கோச விகாஸங்களில்லை என்றதத்தனையொழிய, அநுக்ரஹமடியாக வுண்டாகும் ஸங்கோச விகாஸங்களுக்குத் தடைசெய்வாரில்லை. இந்திரனுடைய கண்ணீரைத் துடைப்பதற்காகப் பெரியவடிவாய் வளர்ந்து உலகளந்தான் ; உலகத்தாரெல்லாருடையவும் கண்ணீரைத் துடைப்பதற்காக மிகச்சிறிய குழவியுருவாய்க் கொண்டு உலகுண்டான். ஆகவிப்படி ஆச்ரிதர்களுக்காகச் சிறுத்தும் பெருத்தும் வடிவுகொள்ளுகிற எம்பெருமானுடை சீலத்தைநினைத்து 'இவனே நமக்கு ரக்ஷகன்' என்று தெளிவு பெற்றிருப்பார் இவ்வுலகில் யாருமில்லையே !; நெஞ்சே ! அக்குறை தீர நீயாகிலும் அநுஸந்திப்பாயோ வென்கிறார்.

நீண்ட திருமால்=அப்ரமேயமான பெருமைபொருந்திய திருமால் என்னவுவாம். ... ... .... ... ... (கூங)

உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி *
வைத்தவனை நாடி வலைப்படுத்தேன் *—மெத்தெனவே
நின்றா னிருந்தான் கிடந்தானென் னெஞ்சத்து *
பொன்றாமை மாயன் புகுந்து. (கூச)

| | |
|---|---|
| உய்த்து உணர்வு என்னும் | விவேக வுணர்ச்சியாகிற |
| ஒளி கொள் விளக்கு | உஜ்வலமான தீபத்தை |
| ஏற்றி | ஏற்றி |
| அவனை நாடி வைத்து | அவ்வெம் பெருமானைத் தேடிப்பிடித்து |
| வலைப் படுத்தேன் | ஸ்வாதீனப்படுத்திக் கொண்டேன்; |
| மாயன் | அப்பெருமான் |
| பொன்றாமை | குறைவின்றி |
| என் நெஞ்சத்து | என்னுடைய ஹ்ருதயத்திலே |
| புகுந்து | வந்துசேர்ந்து |
| மெத்தென | மெதுவாக |
| நின்றான் | (முதலில்) நின்றான்; |
| இருந்தான் | (பிறகு) வீற்றிருந்தான்; |
| கிடந்தான் | (அதன் பிறகு) பள்ளிகொண்டருளினான். |

* * *—கீழ்ப்பாட்டில் "உள்ளத்தேவை நெஞ்சே! உய்த்து" என்றபடியே பலிக்கப் பெற்றமை பேசுகிறாரிதில். இருளிலே கிடக்கும்பொருளை விளக்கினொளியைத் துணைகொண்டு கண்டுபிடிப்பது போல, இருள் தருமாஞாலத்தில் ஒருவராலும் கண்டுபிடிக்கமுடியாத எம்பெருமானாகிற பரம்பொருளை ஞானமாகிற சிறந்த விளக்கின் ஸஹாயத்தினால் தேடிக் கண்டுபிடித்து நெஞ்சாகிற வலைக்குள்ளே இருத்திவிட்டேன்; அப்பெருமான் அவ்விடம்விட்டுப் பெயர்ந்து போக மாட்டாமையாலே நெஞ்சுதன்னிலேயே சற்று நிற்கிறான், சற்று வீற்றிருக்கிறான், சற்று சயனிக்கிறான்; ஆக நிற்றலிருத்தல் கிடத்தல்களெல்லாம் அவனுக்கு என்னெஞ்சினுள்ளே யாயிற்று என்கிறார்.

உலகத்திற்காணும் விளக்குக்கு எண்ணெய் திரி முதலியவற்றின் சேர்க்கையினால் அழுக்கேறுதலுண்டு; ஞானமாகிற விளக்கு அங்ஙனன்றியே நிர்மலமாயிருக்குமென்பதைக்காட்டும் 'ஒளிகொள்' என்ற அடைமொழி.

ஊரகமும் பாடகமும் வெஃகாவும் பட்டபாடு படுகிறது என்னெஞ்சு என்கிறார்போலும் பின்னடிகளில்.

பொன்றாமை—நான் நசித்துப் போகாதபடியாக என்றுமாம்.; ஹ்ருதயத்தினுள்ளே நிற்றலிருத்தல் கிடத்தல்களுக்கு விச்சேதமில்லாதபடியாக என்றுமாம். ... ... ... ... (௯௪)

புகுந்திலங்கு மந்திப் பொழுதத்து - * அரியா
யிகழ்ந்த விரணியன தாகம் *—சுகிர்ந்தெங்கும்
சிந்தப் பிளந்த திருமால் திருவடியே *
வந்தித்தென் னெஞ்சமே வாழ்த்து. (௯௫)

| | | | |
|---|---|---|---|
| அந்தி புகுந்து | ஸாயங்காலமானது வந்துசேர்ந்து | சுகிர்ந்து | பலகூறாக வகிர்ந்து |
| இலங்கும் பொழுதத்து | விளங்கும் ஸமயத்திலே | எங்கும் சிந்த | (ரத்தம்) எங்கும் சிந்தும்படியாக |
| அரி ஆய் | நரஸிம்ஹ மூர்த்தியாய்த் திருவவதரித்து, | பிளந்த | பிளந்தொழித்த |
| | | திரு மால் | எம்பெருமானுடைய |
| இகழ்ந்த இரணியனது ஆகம் | சிந்தித்துக் கொண்டிருந்த ஹிரண்யாஸுரனது சரீரத்தை | திரு அடியே | திருவடிகளையே |
| | | என் நெஞ்சமே | எனது மனமே! |
| | | வந்தித்து வாழ்த்து | தலையாரவணங்கி வாயாரவாழ்த்து. |

* * *—பரமபக்தனான ப்ரஹ்லாதாழ்வானுக்குப் பகைவனாய் நின்று அவனையும் தன்னையும் இகழ்ந்த இரணியனது மார்பை உதிரமொழுகப் பிளந்த திருமாலின் திருவடியையே வாழ்த்துமாறு நெஞ்சுக்கு உரைக்கிறார்.

இரணியன் தான் சாவாமலிருக்குமாறு வரம்வேண்டிக் கொள்ளும்போது, 'இன்ன இன்ன இடங்களில், இன்ன இன்ன காலங்களில் இன்ன இன்ன கருவிகளால் இன்ன இன்ன பிராணிகளால் இறக்கக்கடவேனல்லேன்' என்று தனித்தனி குறிப்பிட்டு வரம் வேண்டிக் கொண்டானாதலால் அந்தவரத்தில் அடங்காத ஸமயத்தில் அவனைக்கொல்லக்கருதிய திருமால் அந்திப்பொழுதிலே கொன்றானென்க. அந்த ஸமயத்தைச் சிறப்பித்துச் சொல்லவேண்டுவது ஆவச்யகமாதலால் "புகுந்திலங்கு மந்திப்பொழுதத்து" என்றார்.

அரியாய்=' அரி ' என்பதைத் தற்சம வடசொல்லாகக்கொண்டால் இரணியனுக்கு அடைமொழியாக அந்வயிக்கும்; (வடமொழியில் அரி என்னுஞ்சொல் விரோதியென்னும் பொருளது.) பகவத் பாகவத விரோதியாய்க் கொண்டு தூஷித்து வந்த இரணியன் என்றதாகிறது. இனி, சிங்கமென்னும் பொருளதான ஹரி என்ற வடசொல் அரியெனத் திரிந்ததாகக் கொண்டு 'நரசிங்க மூர்த்தியாகி' என்று எம்பெருமானிடத்து அந்வயித்தலும் பொருந்தும்.

சிந்த=ரத்தவெள்ளம சிந்தும்படியாக: (அன்றியே) உடல் சிந்நபிந்நமாம்படியாக என்றுமாம். .... ... ... (சுரு)

வாழ்த்திய வாயராய் வானோர் மணிமகுடம் *
தாழ்த்தி வணங்கத் தழும்பாமே *—கேழ்த்த
அடித்தாமரை மலர்மேல் மங்கை மணாளன் *
அடித் தாமரையா மலர். (சுசு)

| | | | |
|---|---|---|---|
| கேழ்த்த அடி | பெருத்த தாளையுடைய | வாழ்த்திய வாயர் ஆய் | வாயால் வாழ்த்துகின்ற வாராய்க்கொண்டு |
| தாமரை மலர் மேல் | தாமரைப்பூவிற் பிறந்த | மணி மகுடம் | மணிகளழுத்தின மகுடத்தை |
| மங்கை | பெரிய பிராட்டிக்கு | தாழ்த்தி | தாழவிட்டு |
| மணாளன் | வல்லபனான எம் பெருமானுடைய | வணங்க | வணங்குவதனால் |
| அடி ஆம் தாமரை அலர் | திருவடிகளாகிற தாமரைப் பூக்களை | தழும்பு ஆமே | (அத்திருவடிகள்) தழும்பேறிக் கிடக்கின்றனவே. |
| வானோர் | தேவர் | | |

* * *—" வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி " என்கிறபடியே புஷ்பஹாஸஸுகுமாரமான திருக்கைகள் படைத்த பிராட்டிமார் பிடித்தாலும் கூசிப்பிடிக்க வேண்டும்படி அவ்வளவு ஸுகுமாரமான திருமால் திருவடிகள்-ஸர்வகாலமும் நித்யஸூரிகள் தமது மணிமகுடங்களைச் சாய்த்து வணங்கப் பெறுதலால் தழும்பாமே என்று வயிறு பிடிக்கிறார்.

பொய்கையாழ்வார் "தழும்பிருந்த தாள் சகடஞ்சாடி" என்று—கிருஷ்ணுவதாரத்தில் சகடத்தைச் சீறி உதைத்ததனால் திருவடி தழும்பேறப் பெற்றதாக அருளிச்செய்தார்; நித்யஸூரிகள் நித்தியம் வணங்குவதால் தழும்பேறி விடுவதாக இவ்வாழ்வாரருளிச்செய்கிறுர். கிரீடங்கள் பட்டுப்பட்டுத் திருவடிகள் காய்ப்பு காய்த்தல் தகும்.

ஸ்ரீகுணரத்நகோசத்தில் ஸ்ரீரங்க நாச்சியாருடைய திருவடிகளின் ஸௌகுமார்யத்தை வருணிக்கப்புகுந்த பட்டர்—"வாஸாஸங்காத் கமலரஜஸ: பீட்யமாநாவலோகை: தாஸீநிர்யா! ஸாஹஸமியள லீலாரவிந்தக்ரஹ:। பூயோ தேவ வநமாலயா ஸஹிதஸ்யாஹ வக்ஷ:ஸ்தலாந்தோலநம், கஷ்டம் ஸ்ரீரதிகோமலா தநுரியம் ஹாஹாம்விபக்ஷிதா." [பெரியபிராட்டியாரே! நீர் வஸிக்குமிடமான தாமரைப்பூவின் துகள் திருவடியை நோவு படுத்துகின்றது; தோழிமார் வைத்தகண் வாங்காமே பார்த்துக் கொண்டிருத்தலால் திருமேனி வாடுகின்றது; அதற்குமேல் லீலார்த்தமாக ஒரு தாமரைப்பூவை நீர் திருக்கையில் ஏந்திநிற்பது தானும் பெரியஸாஹஸத் தொழிலாயிராநின்றது; அதற்குமேல் வனமாலையோடுகூட நீர் எம்பெருமானது திருமார்பில் ஊசலாடுவது 'கஷ்டம் கஷ்டம்!' என்னத்தக்கது.] என்று அந்த ஸௌகுமார்யத்தை அற்புதமாக அருளிச்செய்தமை காண்க. அப்படியிருக்கும்போது "வானோர்மணிமகுடம் தாழ்த்தி வணங்கத்தழும்பாமே" என்றவிது அதிசயோக்தியாகாதென்க. ஸ்வபாவோக்தியே.

தழும்பாமே=இப்படி ஓயாமல் வானோர் வணங்கிக் கொண்டிருந்தால் திருவடிகள் தழும்பேறி விடாதோ என்கிறுரென்றுமாம்.

தழும்பு—காய்ப்பு. .... .... ... (௬௬)

அலரெடுத்த வுந்தியா னுங்கெழி லாய *
மலரெடுத்த மாமேனி மாயன் *—அலரெடுத்த
வண்ணத்தான் மாமலரான் வார்சடையானென்று * இவர்கட்
கெண்ணத்தானுமோ விமை.

(௬௭)

| | | | |
|---|---|---|---|
| அலர் எடுத்த உந்தியான் | தாமரைப்பூ ஓங்கி யிருக்கப்பெற்ற திருநாபியை யுடையவனும் | மா மலரான் | தாமரைப்பூவிற் பிறந்த பிரமனென்ன |
| எழிலாய மலர் எடுத்த | அழகிய காயாம் பூப்போன்ற | வார் சடையான் | நீண்ட ஜடையை யுடையனை சிவனென்ன |
| மா மேனி | கரிய திருமேனியை உடையனுமான | என்ற இவர்கட்கு | ஆகிய இத் தேவர்கட்கு |
| மாயன் | எம்பெருமான்,– | இமை | சற்றேனும் |
| அலர் எடுத்த வண்ணத் தான் | காஞ்சிமலர்போன்ற நிறத்தை யுடையனை இந்திரனென்ன | எண்ணத் தான் ஆமோ | நெஞ்சால் நினைக்க வுங் கூடியவனோ. |

* * *—"ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ர:" என்று வேதத்தில் சிறப்பித்துக் கூறப்படுகின்ற பிரமன் சிவனிந்திரன் முதலானோர்க்கும் சிந்தைக்கும் கோசரமல்ல னெம்பெருமான் என்கிறார்.

முதலடியில் அலர் என்றது தாமரைப்பூவைச் சொல்லுகிறது; எம்பெருமானது திருநாபியில் தாமரைப்பூவுள்ளது ப்ரஸித்தமே. இனி இரண்டாமடியில் மலர் என்றது காயாம்பூவைச் சொல்லுகிறது; எம்பெருமானது திருமேனிநிறம் காயாம்பூ வண்ணமென்பதும் ப்ரஸித்தமே.

இனி "அலரேடுத்த வண்ணத்தான்" என்று இந்திரனுக்கு வாசகமானவிதனில் அலர் என்றது காஞ்சிமலரைச் சொல்லுகின்றதென்றுணர்க. திருவிளையாடற்புராணம்–திருவாலவாய்க் காண்டம்–தருமிக்குப் பொற்கிழியளித்தபடலத்தில் (பன்னிரண்டாவது செய்யுள்)—"செங்கதிர் மேனியான் போலவிழ்ந்தன செழும்பலாசம், மங்குலூர்ச் செல்வன்போல மலர்ந்தன காஞ்சி, திங்கட் புங்கவன் போலப் பூத்த பூஞ்சினை மரவம், செங்கையங்கதிராழியான்போலலர்ந்தன விரிந்தகாயா." என்றதில் இரண்டாமடியில் இந்திரனது நிறம் காஞ்சிமலர் நிறமென்று காட்டப்பட்டிருத்தல் காண்க. (மங்குலூர்ச் செல்வன்—மேகவாஹனனான இந்திரன்.) காஞ்சிமலரென்பது கறுத்தபயறு நிறங்கொண்டிருக்குமென்று கூறுவர். ... (கஎ)

இமஞ்சூழ் மலையு மிருவிசும்பும் காற்றும் *
அமஞ்சூழ்ந் தறவிளங்கித் தோன்றும் *—நமஞ்சூழ்
நரகத்து நம்மை நணுகாமல் காப்பான் *
துரகத்தை வாய்பிளந்தான் தோட்டு. (கூஎ)

| | | | |
|---|---|---|---|
| இமம் சூழ் மலையும் | பனியாலே சூழப் பட்டிருக்கிற இமயமலையையும் | துரகத்தை | குதிரைவடிவு கொண்டு வந்த கேசியென்னு மசுரனை |
| இரு விசும்பும் | பெரிய ஆகாயத்தையும் | தொட்டு | திருக்கையால் பற்றி |
| காற்றும் | வாயுவையும் | வாய் பிளந்தான் | (அவனது) வாயைக் கிழித்துப்போட்ட பெருமான் |
| அமம் சூழ்ந்து | (பருமனாலும் உயர்த்தியாலும் வேகத்தாலும்) திரஸ்கரித்து | நம்மை | நம்மை |
| அற விளங்கி தோன்றும் | மிகவும் விளங்கிக் கண்ணெதிரே வந்து தோன்றின | நமன் சூழ் நரகத்து நணுகாமல் காப்பான் | யமனைத் தலைவனாகக் கொண்ட நரகத்திலே புகவொட்டாமல் ரக்ஷித்தருள்வன். |

* * *—க்ருஷ்ணாவதாரத்தில் தன்னை விழுங்கிக் கொல்லுமாறு கம்ஸனாலேவப்பட்டு மிகப் பெரிய குதிரைவடிவங் கொண்டு வந்த கேசியென்னு மஸுரனை வாய்பிளந்தொழித்த கண்ணபிரானே நரகத்தில் நின்றும் நம்மைக் காத்தருள்வனென்கிறார். முன்னடிகளிரண்டும் அவ்வசுரக் குதிரைக்கு அடைமொழி. பருமனில் மலையை வென்றிருந்ததாம்; உயர்த்தியில் ஆகாயத்தை அதிக்ரமித்திருந்ததாம்; வேகத்தில் (அல்லது, வலிமையில்) வாயுவை வென்றிருந்ததாம். 'மலை' என்று பொதுவாகச் சொன்னால் போராதோ, 'இமஞ் சூழ்மலை' என்று விசேஷித்துச் சொல்லுவானேன்? என்னில்; ஸப்தகுலபர்வதங்களில் இமயமலை முதலிற் கணக்கிடப்பட்டிருப்பதால் இதனை உபலக்ஷணமாகக் கொண்டு குலாசலங்களேழையுங் கொள்ளவேணு மென்பதற்காக வென்க.

அமஞ்சூழ்ந்து = அமமாவது நோய்; மலையும் விசும்பும் காற்றும் நோவுபடும்படியாக, எனவே இவற்றைத் திரஸ்கரித்து மேலாக விளங்குகின்ற குதிரை என்றதாம். துரகம்—வடசொல்; வேகமாகச் செல்வது என்று காரணக் குறி. ... ... (கூஅ)

தோட்டபடை யெட்டும் தோலாத வென்றியான் *
அட்ட புயகரத்தா னந்நான்று *—குட்டத்துக்
கோள்முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான் *
தாள்முதலே நங்கட்குச் சார்வு. (௬௯)

| | | | |
|---|---|---|---|
| தொட்ட | ஏந்தின | குட்டத்து | நீர்ப் பொய்கையிலே |
| படை எட்டும் | எட்டு திவ்யாயுதங்களாலும் | கோள் முதலை துஞ்ச | மிடுக்குடைய முதலை முடியும்படியாக |
| தோலாத | தோல்வி யடையாத | குறித்து எறிந்த சக்கரத்தான் | இலக்குத் தப்பாமல் பிரயோகிக்கப் பட்ட திரு வாழியை யுடைய பெருமானது |
| வென்றியான் | ஜய சீலனும் | | |
| அட்டபுய கரத்தான் | கச்சித் திருவட்டபுய கரத் திருப்பதியி லுள்ளவனும் | தாள் முதலே | பாதமூலமே |
| அந்நான்று | முன்பொரு காலத்தில் | நங்கட்கு | எங்களுக்கு |
| | | சார்வு | பரமப்ராப்யம். |

* * *—இப்பாட்டும் மேற்பாட்டும் சாத்துப் பாசுரங்கள் திருக்கச்சிமாநகரில் திருக்கோயில் கொண்டிருக்கும் அஷ்டபுஜத் தெம்பெருமான் திருவடிகளே சரணம் என்கிறார். தோட்டபடை யெட்டும் தோலாத வென்றியான்=திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் திருவட்டபுயகரத் தெம்பெருமானை மங்களாசாஸநஞ்செய்யும் திருப்பதிகத்தில்—(2-8-3) "செம்பொ னிலங்கு வலங்கை வாளி திண்சிலை தண்டொடு சங்க மொள்வாள், உம்பரிருசுட ராழியோடு கேடக மொண்மலர் பற்றியெற்றே,.....அட்ட புயகரத்தே னென்றாரே" என்ற பாசுரம் இங்கு அநுஸந்திக்கத் தகும். 1. வாளி, 2. சிலை, 3. தண்டு, 4. சங்கம், 5. வாள், 6. ஆழி, 7. கேடகம், 8. மலர், ஆக திவ்யாயுதங்க ளெட்டையும் திருவுள்ளம் பற்றித் தோட்டபடை யெட்டும் என்கிறாரிங்கு. இப்படைகளைக்கொண்டு எங்கும் வெற்றியே பெற்றுவருவானென்கிறது. இவற்றைத் தரிக்குமிடத்து ஒரு ஆயாஸமின்றியே பூவேந்தினாற்போலே ஏந்தியிருப்பது தோன்ற, 'தோட்ட' எனப்பட்டது.

அட்டபுயகரத்தான்=அட்ட புயகரத்திலுள்ளவன் என்று பொருள். 'அஷ்டபுஜன்' என்பது எம்பெருமானுடைய திருநாமம். எட்டுத்திருக்கைகளையுடையவன் என்று பொருள். க்ருஹம்

என்னும் வடசொல் கரமெனத்திரியும்; ஆகவே, அஷ்டபுஜனுடைய க்ருஹம்—அட்டபுயகரம். (திவ்யதேசத்தைச் சொன்னபடி.) அவ்விடத்திலுள்ளவன் என்றதாயிற்று. 'அட்ட புயவகரம்' என்பது அட்டபுயகரம் என மருவிற்றென்றலும் பொருந்தும். அகரமாவது அக்ரஹாரம். திவ்யதேசத்தை முன்னிட்டே எம்பெருமானைப் பேசவேண்டுமென்னும் நியதி ஆழ்வார்கட்கு உள்ளதாதலால் 'அஷ்டபுஜன்' என்னாமல் 'அட்டபுயகரத்தான்' என்ன வேண்டிற்றென்ப.

குட்டத்துக் கோள்முதலை துஞ்சச் சக்கரமேறிந்த வரலாறு:—இந்திரத்யும்நன் என்னுமோர் ரரசன் மஹாவிஷ்ணு பக்தனாயிருந்தான்; அவன் வழக்கப்படி ஒருநாள் விஷ்ணுபூஜை செய்துகொண்டிருந்தபோது அகஸ்திய மஹாமுனிவன் அவனிடம் எழுந்தருளினான்; அப்பொழுது அவ்வரசன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப் பூஜிப்பதில் செலுத்தியிருந்ததனால் அம்முனிவனது வருகையை அறியாதவனாய் அவனுக்கு உபசாரமொன்றுஞ் செய்யாதிருந்தான்; அம்முனிவன் இப்படி அரசன் நம்மை அலக்ஷியஞ்செய்தானென்று மாறாகக்கருதிக் கோபித்து 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக்கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒரு காட்டில் யானையாகத் தோன்றினன்; ஆயினும் முன்செய்த விஷ்ணுபக்தியின் மஹிமையினால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந் தாமரைமலர்களைக்கொண்டு திருமாலை அருச்சித்துப் பூஜித்து வருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத் தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூப்பறிக்கப் போய் இறங்கிற்று; (இஃது இப்படியிருக்க:) முன்பொருகால் தேவல னென்னும் முனிவன் ஒரு நீர்நிலையில் நின்று தவஞ்செய்துகொண்டிருந்தபோது 'ஹூஹூ' என்னும் கந்தர்வனொருவன் அம்முனிவனது காலைப் பற்றியிழுக்க, அதனால் கோபங்கொண்ட அவனது சாபத்தால் முதலையாய்க் கிடந்து தன் சாபமோக்ஷத்திற்காக கஜேந்திரனுடைய வரவை எதிர்பார்த்தவண்ணமாயிருக்கின்றான். தெய்வவசமாக இந்த கஜேந்திராழ்வான் அப்பொய்கையிற் சென்று பூப்பறிக்க இறங்கினவுடனே அம்முதலை இதன் காலைக் கவ்விக்கொள்ள, அதனை விடுவித்துக் கொள்ள முடி

யாமல் கஜேந்திரன் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அப்பொய்கைக் கரையிலே அரைகுலையத் தலைகுலைய விரைந்தெழுந்தருளித் தனது திருவாழியைப் பிரயோகித்து முதலையைத் துணித்து இறுதியில் அதற்கு முக்தியை அருளினன் என்பதாம்.

அப்பெருமான் பஞ்சேந்திரியங்களாகிற பலமுதலைகளின் வாயிலே அகப்பட்டுத் துடிக்கின்ற நம்மைக் காத்தருள வேண்டித் திருவட்டபுயகரத்திலே வந்து ஸந்நிதிபண்ணி நின்றான்; அவன் திருவடிகளே தஞ்சம்—என்றாராயிற்று. .... ... (௯௯)

சார்வு நமக்கேன்றும் சக்கரத்தான் * தண்டுழாய்த்
தார்வாழ் வரைமார்பன் தான்முயங்கும் *—காரார்ந்த
வானமரு மின்னிமைக்கும் வண்டாமரை நெடுங்கண் *
தேனமரும் பூமேல் திரு. (௧௦௦)

| | | | |
|---|---|---|---|
| சக்கரத்தான் | திருவாழியைக் கையிலே உடையவனும் | மின் | மின்னல்போல |
| தண் துழாய் தார் வாழ் | குளிர்ந்த திருத் துழாய் மாலை விளங்கப் பெற்ற | இமைக்கும் | விளங்குகின்றவளாய் |
| வரை மார்பன் தான் | மலைபோன்ற திருமார்பை யுடையனுமான எம்பெருமானால் | வண் தாமரை | அழகிய தாமரைப் பூப்போன்று |
| முயங்கும் | ஸம்ச்லேஷிக்கப் படுகின்றவளாய் | நெடு | நீண்ட |
| கார் ஆர்ந்த வான் | மேகங்கள் செறிந்த ஆகாசத்திலே | கண் | திருக்கண்களை யுடையளாய் |
| அமரும் | நிலைத்து நிற்கக் கூடியதான | தேன் அமரும் பூ மேல் | தேன் நிறைந்த தாமரைப் பூவில் வஸிப்பவளான |
| | | திரு | பெரிய பிராட்டியார் |
| | | நமக்கு என்றும் சார்வு | நமக்கு எப்போதும் சரணம். |

* * *—கீழ்ப்பாட்டில் 'எம்பெருமான் திருவடிகளே சரணம்' என்றார்; இப்பாட்டில் 'பிராட்டி திருவடிகளே சரணம்' என்கிறார். எம்பெருமான் திருவடிகளை நேரே பற்றுவதற்கில்லையே; 1. "நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த [illegible]

1. முமுக்ஷுப்படி ரஹஸ்யம்.—2.

வுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக" என்கிறபடியே ஸர்வாபராதங்களையும் பொறுப்பிக்க வல்ல பெரிய பிராட்டியார் புருஷகாரமாகவே எம்பெருமானைப் பற்றவேண்டியிருத்தலால் அப்புருஷகாரவரணத்தை இப்பாட்டால் செய்து இப்பிரபந்தத்தையும் தலைக்கட்டுகிறார்.

"தேனமரும் பூமேல் திரு—நமக்கு என்றும் சார்வு" என்று அந்வயிப்பது. நடுவிலுள்ளவை பிராட்டிக்கு விசேஷணங்கள். "சக்கரத்தான் தண்டுழாய்த் தார்வாழ் வரைமார்பன் தான் முயங்கும்" என்பது ஒரு விசேஷணம்; "காரார்ந்த வானமரும் மின்னிமைக்கும்" என்பது இரண்டாம் விசேஷணம்; "வண்தாமரை நெடுங்கண்" என்பது மூன்றாம் விசேஷணம்.

இவளுடைய போக்யதையைக் கண்டு ஒரு நொடிப்பொழுதும் விடமாட்டாமல் எம்பெருமான் இவளை நித்ய ஸம்ச்லேஷம் செய்திருக்கிறானென்பது முதல் விசேஷணத்தின் கருத்து. எம்பெருமானுடைய வைலக்ஷண்யம் சொல்ல வேண்டில் 1. "அகலகில்லேனிறையுமென்று அலர்மேல்மங்கையுறை மார்பா!" என்று பிராட்டி மேல்விழுந்து அநுபவிப்பதாகச் சொல்லுவர்கள்; பிராட்டிக்கு வைலக்ஷண்யம் சொல்லவேண்டில் இவளை அவன்தான் மேல் விழுந்து அநுபவிப்பதாகச் சொல்லுவர்கள்: இரண்டு படியும் தகுமிறே.

நிலைநின்று விளங்கமாட்டாத மின்னல் போன்றிராதே நிலைநின்று விளங்குவதொரு விலக்ஷணமான மின்னல்போலே பிரகாசிப்பவளென்கிறது இரண்டாம் விசேஷணம். மின்னல் மேகத்திலே ஜ்வலிக்கும்; இவளும் காளமேகத் திருவுருவிலே.

வண்தாமரை நெடுங்கண்=ஸ்த்ரீகளின் கண்ணழகை வர்ணிக்குமிடத்து "குவளையங் கண்ணி" என்றும் "கருங்கண்ணி" என்றும் "அஸிதேக்ஷணை" என்றும் வர்ணிப்பதே பொருத்தமுடைத் தென்றும் தாமரைமலர் போன்றதாக வருணித்தல் சிறவாதென்றும், அவ்வுவமை புருஷோத்தமனது திருக்கண்ணுக்கே பொருந்து மென்றும் சிலர் சொல்லுவர்; அது பொருந்ாது: 'பத்மாக்ஷீ' 'பங்கஜாக்ஷீ' என்ற விசேஷணங்களும் மஹாகவிநிபந்

1. திருவாய்மொழி 6-10-10.

தங்களில் பெரும்பாலுங் காணுநின்றோம்; அன்றியும், ஸ்ரீஸூக்தத்தில் "பத்மாலயே பத்மிநி பத்மஹஸ்தே பத்மப்ரியே பத்மதளாயதாக்ஷி—பத்மாலயே பத்மினி பத்மஹஸ்தே பத்மப்ரியே பத்மதளாயதாக்ஷி" என்று ஓதப்பட்டிருத்தலால் அதையடியொற்றின வண்டாமரை நெடுங்கண் என்ற இவ்விசேஷணம் மிகப் பொருத்தமானதே யென்க. கண்களின் நீட்சிக்குத் தாமரையிதழ்களும் கருமைக்குக் குவளைமலரும் உவமையென்றுணர்க.

ஆக, இப்படிப்பட்ட பெரிய பிராட்டியாரே நமக்குத் தஞ்சம் என்று தலைக்கட்டிற்றாயிற்று ... ... ... *

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
மூன்றாந்திருவந்தாதி உரை
முற்றுப்பெற்றது.

1. திரு நின்றே மனம் மருந்து மடிவண்ணம்
அழகன் கழல்தொழு நாமங் கண்ணும்
தேசுந்திறனு நன்கோது.

2. நன்கறிவென்னும் படிவட்ட மாற்பால்
பணிந்துயர் வந்துதை சென்றநாள் வாய்மொழி,
அருளாதொழியும் முன்னுலகம் பேசுவார்.

3. பேசுவார் வடிவார் விருப்பி வருங்கால்
தொழுதால் சிறந்தவென் ஆரே அடைந்து
பேய்ச்சிபால் சேர்ந்ததிருமா லிளையவன்.

4. இவை பாற்கடலும் பாலக னன்றிவ்வுலகம்
காண்காண் கையகனை லவற்கடிமை தானுவமன்
இறையா யுளன்விண் மன்னுமணிமுடி.

5. மன்னு கோவலனும் சினமா வுலகமும்
புரிந்துமத மலைமுகடு நின்றபெருமானே.
நீயன்றே செற்றதுவும் சூழ்ந்ததுழா யவனே.

6. அவனை யெய்தான் முயன்று தாளாற்சகடம்
பெரியவரை நிறம்வெளிது பொலிந்திருண் டெளிந்து,
வாழும்வகை பெற்றம்பிணைமருதம் பண்டெல்லாம்.

7. பண்டு விண்ணகரம் தாழ்சடை யிசைந்த
அங்கற்கிடர் காய்ந்திருளை ஆங்குமலர் பார்த்த
வெற்பென்றுபாடும் புகுமதக் களிறு.

8. களிறு குன்றொன்றின் இடம்வலம் நலமே
சார்ந்தகடு பொருப்பிடை ஆய்ந்தவரு அரணும்
ஓர்த்தமன நின்றெதிர் நெஞ்சால் நினைப்பரி.

9. நெஞ்சாலுணரில் இனியவ னுளனுய
கவியினு ரெழில்கொண்டு கலந்துமணி யதுநன்று
முடிந்தபொழுதிற் சிலம்பும் மண்ணுண்டும்.

10. மண்ணுண்டும் மகனொருவர் நினைத்துலகி லுய்த்துணர்வு
புகுந்திலங்கு வாழ்த்தியவாய் அலரெடுத் திமஞ்சூழ்
தொட்டபடையெட்டும் சார்வு திருக்கண்டேன்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

திருமழிசைப்பிரான் திருவாய்மலர்ந்தருளிய

# நான்முகன் திருவந்தாதி.

பெருமாள்கோயில்

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

அருளிய

"திவ்யார்த்த தீபிகை" யென்னும்

உரையுடன்,

சென்னை M. R. கோவிந்தஸாமி நாயுடுவால்,

மாடல் அச்சுக்கூடத்தில்,

அச்சிடுவிக்கப்பட்டது.

சுக்கில௵

1929.

## ஸ்ரீமத். உ. வே. (காஞ்சீபுரம்) பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமிகள் அருளிச்செய்த க்ரந்தங்கள்.

---

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி விரிவுரை | | | |
| திருப்பாவையின் விரிவுரை | ... | 3 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 4 |
| நாச்சியார் திருமொழி விரிவுரை | ... | 1 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 8 |
| பெருமாள் திருமொழி விரிவுரை | ... | 1 | 12 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 4 |
| திருச்சந்த விருத்தத்தின் ஷை | ... | 1 | 8 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு—இவற்றின் விரிவுரை | ... | 1 | 10 |
| | ... | 1 | 0 |
| ஷை காலிகோ பைண்ட் | | | |
| பெரிய திருமொழி விரிவுரை 1,2 பத்துக்கள் | ... | 1 | 4 |
| ஷை 3, 4, 5 பத்துக்கள் | ... | 3 | 0 |
| முதல் திருவந்தாதி விரிவுரை | ... | 3 | 8 |
| இரண்டாந்திருவந்தாதி விரிவுரை | ... | 1 | 8 |
| மூன்றாந்திருவந்தாதி விரிவுரை | ... | 1 | 4 |
| திருவெழுகூற்றிருக்கையும், திருமடல்களும் விரிவுரை | ... | 1 | 4 |
| திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஷை | ... | 2 | 4 |
| இராமாநுச நூற்றந்தாதி ஷை | ... | 2 | 0 |
| கூரத்தாழ்வான் வைபவம் | ... | 0 | 12 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் (மூலத்துடன் கூடியது.) | ... | 0 | 4 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 1 | 0 |
| முகுந்தமாலையின் தெளிவுரை | ... | 1 | 4 |
| ஆளவந்தார் ஸ்தோத்ரத்தின் தெளிவுரை | ... | 0 | 6 |
| ஷை காலிகோ பைண்ட் | ... | 0 | 12 |
| ஸுதர்சநசதகம் மிகத்தெளிவானதமிழுரை | ... | 1 | 0 |
| சேஷாவதாரச் சிறப்பு | ... | 1 | 0 |
| நமஸ்காரதத்துவம் | ... | 0 | 3 |
| ஸ்தோத்ரவ்யாக்யான சோதநம் | ... | 0 | 2 |
| ப்ரணவாதிகாரதத்துவம் | ... | 0 | 3 |
| வாத்ஸல்யார்த்த விவரணம் | ... | 0 | 4 |
| விதவாவபந வித்வம்ஸநம் | ... | 0 | 2 |
| உபந்யாஸரத்நமாலா (க்ரந்த லிபி) ஸம்ஸ்க்ருத பாஷை | ... | 0 | 4 |
| பாதுகாஸஹஸ்ராவதார தத்துவம் ஷை ஷை | ... | 0 | 6 |
| வேதாத்யயநஸர்வஸ்வம் ஷை ஷை | ... | 0 | 4 |
| | ... | 0 | 12 |

### தெலுங்குலிபிப் பிரசுரங்கள்.

| | | | |
|---|---|---|---|
| வரதராஜஸ்தவம் ஸ்ரீஸ்தவம் மணிப்ரவாள வியாக்கியானம் | | | |
| அதிமாநுஷஸ்தவம் ஷை | ... | 1 | 8 |
| திருப்பல்லாண்டு விரிவுரை | ... | 0 | 12 |
| ஆசார்ய ஹ்ருதய மூலம் | ... | 0 | 4 |
| ரஹஸ்ய மூலம் | ... | 0 | 3 |
| | ... | 0 | 6 |

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பொதுத் தனியன்கள்.

---

(நம்பெருமாள் அருளிச்செய்தது.)

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑌣𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

[ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்.
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.]

(ஆழ்வான் அருளிச்செய்தவை.)

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 + 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥
𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤 + 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் + வந்தே குருபரம்பராம்.
யோ நித்யமச்யுத + ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.]

(ஆளவந்தார் அருளிச்செய்தது.)

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌃 + 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

[மாதா பிதா யுவதய: + ப்ரணமாமி மூர்த்நா.]

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 + 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

[பூதம் ஸரச்ச + ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.]

ஸ்ரீ



$ திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.

# நான்முகன் திருவந்தாதி.

இது மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களுள் நான்காமவரான திருமழிசைப்பிரான் திருவாய்மலர்ந்தருளியதும் நாலாயிரப் பிரபந்தத்தில் மூன்ருவது ஆயிரமாக ஸ்ரீமந்நாதமுநிகளால் வகுக்கப்பட்ட இயற்பாவில் நான்காவது பிரபந்தமுமாகும். இப்பிரபந்தம் "நான்முகனை" என்று தொடங்கப் பெற்றதனல் முதற்குறிப்பென்னு மிலக்கணவகையால் நான்முகன் திருவந்தாதியென்று இதற்குத் திருநாமமிட்டு வழங்கலாயினர் முன்னோர்: 'அமலனுதிபிரான்' 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்பனபோல. கீழ்க்கழிந்த முதலாழ்வார்களின் திருவந்தாதிகள் மூன்றுக்கும் பின்னர் இத்திருவந்தாதி திருவவதரித்தமைபற்றி இதனை 'நாலாந் திருவந்தாதி' என்றும் 'நான்காந் திருவந்தாதி' என்றும் வழங்கலாமென்பர் சிலர்; நான்முகன் திருவந்தாதியென வழங்குதலே ஸம்ப்ரதாயமென்றுணர்க.

$ இவ்வாழ்வாரது சரித்திர வரலாறுகள் முதலாயிரத்தைச் சேர்ந்த திருச்சந்த விருத்தத்தின் உரைத் தொடக்கத்தில் காணத்தக்கன.

பொய்கை பூதம் பேயாழ்வார்களென்னும் முதலாழ்வார்கள் மூவரும் எம்பெருமானது நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷத்தினாற் பெற்ற பத்திப்பெருங்காதலினால் அவன் படிகளை முற்றுங்கண்டு அநுபவித்து அவ்வநுபவ பரீவாஹரூபமான நடை விளங்கு தமிழ் மாலைகளாலே ஸ்ரீமந் நாராயணனே பரதெய்வமென்று நிஷ்கர்ஷித்தருளினர் மூன்று திருவந்தாதிகளினும். அவர்கட்கு அடுத்த ஆழ்வாராகிய இத்திருமழிசைப்பிரானும் எம்பெருமானுடைய அநுக்ரஹவிசேஷத்தாலே மயர்வற மதிநலம்பெற்று அவனுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும் ஸ்வரூபத்தைப்பற்றின திருக்கல்யாண குணங்களையும் திவ்யமங்கள விக்ரஹத்தையும் அதனை இடைவிடாது அநுபவிக்கும் பாக்கியம் வாய்ந்த பிராட்டிமார்களையும், அவர்களுமவனுமான சேர்த்தியிலே கிஞ்சித்கரிக்கும் ஸூரிகளையும் கைங்கரியத்திற்கு ஏகாந்தமான பரமபதத்தையும் லீலாவிபூதி யோகத்தையும் உள்ளபடி ஸாக்ஷாத்கரித்து அநுபவித்துக் கொண்டு மார்க்கண்டேயாதிகளைப்போலே நெடுங்காலம் இந்த ஸம்ஸார மண்டலத்திலே காலஞ்சென்றது மறியாதே எழுந்தருளியிருந்து நாட்டில் சேதநர் பலரும் ரஜஸ்தமோ குணங்கட்கு வசப்பட்டும் வசநாபாஸங்களைக் கொண்டும் தேவதாந்தரங்களை வழிபடு தெய்வமாகக்கொண்டு வைதிக மார்க்கத்தினின்று நழுவிக் குத்ருஷ்டி மார்க்கத்தைப்பேணி மேன்மேலும் ஸம்ஸாரத்தையே வளரச்செய்துகொண்டு அநர்த்தப்படுகிறபடியைக் கண்டு, பிறர்படு மநர்த்தம் பொறுக்கமாட்டாத பரம க்ருபையினால் தேவதாந்தர பரத்துவத்தை நிராகரித்து ஸ்ரீமந்நாராயண பாரம்யத்தை ஸ்தாபித்து அனைவரும் பகவத்ப்ரவணராம்படி திருத்தியருளுகிறார், இப்பிரபந்தத்தால்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# நான்முகன் திருவந்தாதி தனியன் உரை.

[சீராமப்பிள்ளை யருளிச்செய்த தனியன்.]

(இருவிகற்ப நேரிசை வெண்பா.)

நாராயணன் படைத்தான் நான்முகனை, நான்முகனுக்
கேரார் சிவன்பிறந்தா னென்னுஞ்சொல்—சீரார்
மொழிசெப்பி வாழலாம் நெஞ்சமே !, மொய்பூ
மழிசைப் பரனடியே வாழ்த்து.

## பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சமே | மனமே !, | செப்பி | அநுஸந்தித்து |
| நாராயணன் நான்முகனை படைத்தான் | " நாராயணன் பிரமனை ஸ்ருஷ்டித்தான், | வாழலாம் | நாம் உஜ்ஜீவிக்கலாட |
| நான்முகனுக்கு | அந்தப் பிரமனுக்கு | மொய் பூ மழிசை | செறிந்த பூக்கள் நிரம்பிய திரு மழிசையில் திரு வவதரித்தருளின |
| ஏர் ஆர் சிவன் பிறந்தான் | சீர்மைமிக்க சிவன் (புத்திரனுகப்) பிறந்தான் " | பரன் | பக்திஸார முனிவனுடைய |
| என்னும் சொல் | என்று தெரிவிக் கின்ற பாசுரத்தை முதலிலே உடைத்தான | அடியே | திருவடிகளையே |
| சீர் ஆர் மொழி | (நான்முகன் திரு வந்தாதி யென் கிற) திவ்ய ப்ரபந்தத்தை | வாழ்த்து | வாழ்த்திக் கொண்டிரு. |

* * *—நாம் உஜ்ஜீவிக்க வேண்டுமாகில் நான்முகன் திருவந்தாதியை அநுஸந்தித்தே ஆக வேண்டும்; அதாவது—அதனைக் கண்ட பாடம் செய்தல் வேண்டும்; அது செய்யவேண்டில் அப்பிரபந்தத்தைத் திருவாய்மலர்ந்தருளிய திருமழிசைப்பிரானது திருவருள் இன்றியமையாததாதலால் அவ்வருள் பெறுதற்காக அவ்வாழ்வாருடைய திருவடித் தாமரைகளைப் போற்றவேண்டும் என்கிறது இதில்.

தனியன் உரை முற்றிற்று.



ஸ்ரீ:
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

திருமழிசைப்பிரான் திருவாய்மலர்ந்தருளிய

# நான்முகன் திருவந்தாதி.

[பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர்
இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

நான்முகனை நாராயணன் படைத்தான் * நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான் *-யான்முகமாய்
அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் ஆழ்பொருளை *
சிந்தாமல் கொண்மினீர் தேர்ந்து. (க)

பதவுரை.

| | |
|---|---|
| நாராயணன் | பரமபுருஷனானவன் |
| நான்முகனை | பிரமனை |
| படைத்தான் | ஸ்ருஷ்டித்தான்; |
| நான்முகனும் | அந்தப் பிரமனும் |
| தான் | தானே |
| முகம் ஆய் | முக்கியனாயிருந்து |
| சங்கரனை | சிவனை |
| படைத்தான் | ஸ்ருஷ்டித்தான்; |
| ஆழ்பொருளை | (ஆகவே, முழுமுதற் கடவுள் ஸ்ரீமந் நாராயணனே யென்கிற) ஆழ்ந்த அர்த்தத்தை |
| யான் | அடியேன் |
| முகம் ஆய் | முக்கியமாக |
| அந்தாதி மேல் இட்டு | இத்திருவந்தாதி மூலமாக |
| அறிவித்தேன் | உங்கட்கு அறிவிக்கத்தொடங்குகின்றேன்; |
| நீர் | நீங்கள் |
| தேர்ந்து | ஆராய்ந்து |
| சிந்தாமல் கொள்மின் | (இவ்வர்த்தத்தைக்) குறையற நெஞ்சில் தேக்கிக் கொள்ளுங்கள். |

* *—இவ்வாழ்வாருடைய காலத்தில் தேவதாந்தர பரத்துவம் கொள்ளும் மதாந்தரஸ்தர்கள் மலிந்திருந்தகனால் அவர்களைத் திருத்தி வழிப்படுத்த வேண்டுவது அவசியமாயமைந்தது;

ஆகவே, தொடங்கும்போதே ஸ்ரீமந்நாராயண பரத்வத்தை அழுத்தமாகப் பேசுகின்றார்; இப்பிரபந்தம் தலைக்கட்டுமிடத்தும் “இனியறிந்தேன் ஈசற்கும் நான்முகற்குந் தெய்வம், இனியறிந்தேனெம்பெருமானுன்னை” என்று தலைக்கட்டுவராதலாலும், இடையிலும் பலபல பாசுரங்களினால் தேவதாந்தரங்களின் அபூர்த்தியையும் பரமபுருஷனுடைய பூர்த்தியையுமே பேசுவராதலாலும் இப்பிரபந்தம் பெரும்பாலும் பரதத்வஸ்தாபநத்தில் நோக்குடைத்தாயிருக்கும்.

நாராயணன் நான்முகனைப் படைத்தான் = காரியப் பொருள்கள் யாவும் பெயருமுருவமும் பகுத்தறிய வொண்ணாதபடி தன் பக்கலிலே லயமடைந்து தானொருவனுமே காரணபூதனாய்க்கொண்டு உளனாய்நின்ற நாராயணன் “வஹுஸ்யாம்” என்கிற தன் ஸங்கல்பத்தாலே ஸமஷ்டிபதார்த்தங்களை ஸ்ருஷ்டித்து, நான்முகக் கடவுளைக்கொண்டு வ்யஷ்டிபதார்த்தங்களை ஸ்ருஷ்டிக்கவேண்டி, 1. “உய்யவுலகு படைக்கவேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை” என்கிறபடியே தனது திருநாபிக் கமலத்தில் நான்முகனைப் படைத்தருளினன் என்கை.

பிரமன் ஸ்ருஷ்டிகள் செய்தது வேதங்களைக்கொண்டேயாதலாலும், அந்த வேதங்கள் நால்வகைப்பட்டிருத்தலாலும், அந்நால்வகை வேதங்களையும் உச்சரிப்பதற்காகவே பிரமன் நான்கு முகங்களை யுடையவனாகப் படைக்கப்பட்டனனாதலாலும், இங்குப் “பிரமனை” என்னாது ‘நான்முகனை’ என்றார்.

நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான் = ஸ்ரீமந்நாராயணனால் பிறப்பிக்கப்பட்ட அந்த நான்முகன் தானே தலைவனாய் நின்று ஸம்ஹாரக் கடவுளாகிய சங்கரனைப் படைத்தான். புத்திரன் விநயமற்று வழிகெட நடந்தால் அவனைத் தந்தை விலங்கிட்டு வைப்பது வழக்கம்; அதுபோல, எம்பெருமானை ஆராதித்து உய்வு பெறுதற்கென்றே படைக்கப்பட்ட இவ்வுலகம் வழிகெடநடந்து அநர்த்தத்தை விளைத்துக்கொள்ளுமாகில் விலங்கிட்டு வைப்பதுபோன்ற கரணகளேபரவிநாசம் செய்து தீரவேண்டுவதொன்றாதலால் அதற்காகச் சங்கரனைப் படைத்தனனென்க.

---

1. பெரியாழ்வார் திருமொழி 4-10-5.

சங்கரன் என்றசொல் ('ஶம் கரோதீதி ஶங்கர:' என்னும் ஸம்ஸ்க்ருத வ்யுத்பத்தியால்) நன்மை செய்பவன் எனப் பொருள்படும்; மேன்மேலும் கேடுகளை விளைத்துக்கொள்ள வொண்ணாதபடி கரணகளேபரங்களை ஒடித்துவைப்பதாகிற ஸம்ஹாரம் நன்மையேயாதலால் இதுதோன்ற இங்கு 'உருத்திரனை' என்னாது 'சங்கரனை' என்றார்.

ஆகவிப்படி ஸ்ரீமந்நாராயணனொருவனே உத்பாதகன் [உண்டாக்குபவன்] என்றும், ப்ரஹ்மருத்ராதிகள் உத்பாத்யர்களே [உண்டாக்கப்படுபவர்கள்] என்றும் உண்மைப் பொருளுணர்ந்தால் ஸர்வசேஷியான ஸ்ரீமந்நாராயணனைத் தவிர்த்துப் பிறிதொன்றையும் பரதெய்வமாகக் கொண்டாட வழியில்லை; ஆயினும் இவ்வுலகத்தவர் இவ்வுண்மைப் பொருளுணரப் பெறாமையாலே நசித்துப் போகிறார்கள்; இதனை நாம் கல்வெட்டும் செப்புவெட்டும் போலே பிரபந்தப்படுத்திப் பகர்வோமாயின் பலரும் தெளியலாகுமென்று திருவுள்ளம்பற்றி, 'இவ்வாழ்பொருளைத் திருவந்தாதிப் பிரபந்த முகத்தால் உங்கட்கு அறிவிக்கின்றேன்; ஸம்ஸாரத்தின் பொல்லாங்கையும் நான் சொல்லுகிற அர்த்தத்தின் அருமை பெருமைகளையும் ஆராய்ந்து, இவை நெஞ்சில்நின்றும் நழுவி மங்கிப் போகாதபடியாக உள்ளத்தே தேக்கிக்கொள்ளுங்கள்' என்று துடைதட்டி யுணர்த்துகிறார் பின்னடிகளில்.

இவ்வாழ்வார் ஆழ்பொருளை அறிவிக்கத் தொடங்கும்போதே "அறிவித்தேனாழ்பொருளை" என்று இறந்தகாலத்தாற் கூறினது—தம்மைக்கொண்டு அறிவிக்க விரும்பிய எம்பெருமான் ஸத்யஸங்கல்பனாகையாலும், எம்பெருமானுடைய பரத்துவத்தைப்பற்றிப் பாசுரங்கள் பேசித் தலைக்கட்டியே தீரும்படியான தம் உறுதியினாலும் இப்பிரபந்தம் தலைக்கட்டியாய்விட்டதாக நினைத்தென்க. இதனைத் தமிழர், தெளிவினால் எதிர்காலம் இறந்த காலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி என்பர்.

இப்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான அவதாரிகையிலே—"ப்ரஹ்மாதிகள் ஸம்ஸாரத்தை ப்ரவர்த்திப்பிக்க ப்ரதாநரானாற்போலே தந்நிவ்ருத்திக்கு ப்ரதாநனானேன் நானென்கிறார்" என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்தியின் சீர்மை வாசா

மகோசரம்: இதன் கருத்தாவது—நாராயணன் நான்முகனைப் படைத்துவைத்தான்; அந்த நான்முகனும் மற்றுள்ள ஸ்ருஷ்டிகளைப் பண்ணிப் போருன்; ஆக அவ்விருவரும் இப்படி ஸம்ஸாரத்தை வளரச்செய்து வைத்தார்களேயன்றி அடியறுக்கப் பார்த்தாரல்லர்; நான் அங்ஙனன்றியே உங்களுடைய ஸம்ஸாரம் வேரறும்படியாக ஆழ்பொருள்களை யறிவிக்க முற்படுகின்றேன் காண்மின் என்று ஆழ்வாரருளிச் செய்வதாக. ... ... (க)

தேருங்கால் தேவன் ஒருவனே யென்றுரைப்பர் *
ஆரு மறியா ரவன்பெருமை *—ஓரும்
பொருள்முடிவு மித்தனையே எத்தவஞ் செய்தார்க்கும் *
அருள்முடிவ தாழியான் பால்.

(உ)

| | |
|---|---|
| தேருங்கால் | 'ஆராயுமிடத்து, |
| தேவன் ஒருவனே என்று | பரதெய்வமாக வுள்ளவன் ஸ்ரீமந் நாராயணனொருவனே' என்று |
| உரைப்பர் | (வியாஸர் முதலிய மஹர்ஷிகள்) சொல்லுவர்; |
| அவன் பெருமை | அந்த ஸ்ரீமந் நாராயணனுடைய பெருமையை |
| ஆரும் அறியார் | ஒருவரும் அறியமாட்டார்; |
| ஓரும் பொருள் முடிவும் இத்தனையே | (வேதவேதாங்கங்களில்) ஆராயப்படும் பொருளின் நிர்ணயமும் இவ்வளவேயாம்; |
| எத்தவம் செய்தார்க்கும் | எப்படிப்பட்ட ஸாதநாநுஷ்டாநங்களைப் பண்ணினவர்கட்கும் |
| முடிவது | முடிவில் பலனை யளிப்பது |
| ஆழியான் பால் அருள் | எம்பெருமானிடத்து உண்டாகும் கிருபையேயாம். |

* * *—கீழ்ப்பாட்டில், ஸ்ரீமந்நாராயணனையும் நான்முகனையும் சங்கரனையும் பிரஸ்தாவித்தார்; மற்றும் பல தெய்வங்களும் உலகில் வழங்கப்பட்டு வருகின்றன: இங்ஙனே பலபல தெய்வங்களிருந்தாலும், முழுமுதற்கடவுள் ஸ்ரீமந்நாராயணனொருவனே யாவன்; மற்ற தெய்வங்களெல்லாம் "ஸம்ஹாந்யா அந்யா தேவதா:" என்ற சுருதியின்படி அப்பரம புருஷனுக்கு அங்க பூதங்களேயன்றி வேறில்லை—என்னுமர்த்தத்தை வெளியிடுகின்றாரிதில்.

"தஸ்ய ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபிஸ் ஸர்வதோமுகை:

ஸெவ꞉ । தக்ஷெகொ ஹொயொ ஹரிந-ாராயண꞉ஹூத꞉—தத்வம் ஜிஜ்ஞாஸமாநாநாம் ஹேதுபிஸ் ஸர்வதோமுகை꞉—தத்வமேகோ மஹாயோகி ஹரிர் நாராயணஸ் ஸ்ம்ருத꞉" என்ற பிரமாணத்தைத் திருவுள்ளம்பற்றித் "தேருங்கால் தேவனொருவனே யென்றுரைப்பர்" என்கிறார். "ஹிரண்யகர்ப்ப꞉ ஸமவர்த்ததாக்ரே பூதஸ்ய ஜாத꞉ பதிரேக ஆஸீத்" என்ற வேதவாக்கியத்தைக் கொண்டு 'பிரமனே முழுமுதற்கடவுள்' என்று சிலரும், "நஸந்நசாஸஞ்சிவ ஏவ கேவல꞉" என்ற வேத வாக்கியத்தைக் கொண்டு சிவனே பரதேவதையென்று சிலரும்—ஆகவிப்படி பலர் பல தெய்வங்களைப் பேணினாலும் அவையெல்லாம் பூர்வபக்ஷ கோடியிலே நின்று ஸ்ரீமந்நாராயண னொருவனே ஸித்தாந்த கோடியிலே நிற்பன் என்றவாறு.

அவன் பெருமை ஆருமறியார்=பரத்வம், ஸௌலப்யம், ஸௌசீல்யம், வாத்ஸல்யம், ஸ்வாமித்வம் முதலிய கல்யாண குணங்களினால் அப்பெருமானுக்குள்ள பெருமையை அளவிட்டு அறிய வல்லார் ஆருமில்லை. ஸர்வஜ்ஞனான அந்த எம்பெருமான் தானும் அறியகில்லான் என்றபடி. 1. "தாம் தம் பெருமையறியார்" என்ற திருமங்கையாழ்வார் பாசுரம் உணர்க.

இப்படிப்பட்ட எம்பெருமானை யடைவதற்கு, கருமம் ஞானம் பக்தி முதலிய உபாயங்கள் சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்டிருந்தாலும் அப்பெருமானுடைய திருவருளின்றி எந்த ஸாதநாநுஷ்டானமும் கார்யகர மல்லாமையாலே அவனது நிர்ஹேதுக க்ருபையைக் கொண்டே அவன் பெறத்தகுந்தவன் என்கிற ஸகல சாஸ்த்ர ஸாரப்பொருளைப் பின்னடிகளில் வெளியிடுகிறார். பகவானைப் பெறுகைக்கு உபாயமாக எப்படிப்பட்ட தபஸ்ஸை அநுஷ்டித்தாலும் அது ஸாக்ஷாத்தாகப் பலன் பெறுவிக்க மாட்டாது; அப்பகவானுடைய திருவருளே பலனளிக்கவல்லது என்றவாறு. எந்த சாஸ்த்ரத்தை அவிழ்த்துப் பார்த்தாலும் ஸாரார்த்தம் இதுவே விளங்குமென்கிறார் ஓரும் பொருள்முடிவு மித்தனையே என்பதனால். கூரத்தாழ்வா னருளிய வரதராஜஸ்தவத்தில்—

1. பெரியதிருமொழி 5-2-1.

"ஸ்வெகைஹ-ரவெணீ வெஷூஹுரிவைதீ ஸ்வெவுநாக ஹஜஹி வெ கூா° கூயி ஹக்ஷிதெரயவா। கஸீஶ! தெஷாவெலி தாவகீ உயா தயாகூவக்ரூவெஷவுத கெ லவு° உதழ." என்ற ச்லோகத்திலுைம் இவ்வர்த்தம் வெளியிடப்பட்டதென்க.

ஆக இப்பாட்டால்—ஸ்ரீமந்நாராயணனே பெருமையிற்சிறந்த பரதேவதை; அவனுடைய நிர்ஹேதுக க்ருபையினாலேயே அவன் ப்ராப்யன் என்கிற இரண்டு அர்த்தவிசேஷங்கள் வெளியிடப் பட்டன வாயின. .... .... ... (உ)

பாலிற் கிடந்ததுவும் பண்டரங்கம் மேயதுவும் *
ஆலில் துயின்றதுவு மாரறிவார்? *—ஞாலத்
தொருபொருளை வானவர்தம் மெய்ப்பொருளை * அப்பி
லருபொருளை யானறிந்த வாறு.

(எம்பெருமான்)

| | |
|---|---|
| பாலில் | திருப்பாற்கடலில் |
| கிடந்ததுவும் | சயனித்தருளு மழகையும் |
| அரங்கம் | திருவரங்கம் பெரிய கோயிலில் |
| மேயதுவும் | பொருந்தி வாழ்வதையும் |
| பண்டு | முன் பொருகால் |
| ஆலில் | ஆலந்தளிரில் |
| துயின்றதுவும் | பள்ளிகொண்ட விதத்தையும் |
| ஆர் அறிவார் | யார் அறியவல்லார்? |
| ஞாலத்து ஒரு பொருளை | இப்பூமியில் வந்தவதரித்த விலக்ஷண புருஷனையும் |
| வானவர்தம் மெய் பொருளை | நித்யஸூரிகளுக்குப் பிரத்யக்ஷமாக அநுபவிக்கத் தருந்த வஸ்துவாயும் |
| அப்பில் அரு பொருளை | (ஸகலத்துக்கும் காரணமாக முதலில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட) ஜலதத்வத்தினுள் கண்வளரும் அரும்பொருளாயுமிருக்கின்ற எம்பெருமானை |
| யான் அறிந்த ஆறு | அடியேன் அறிந்த விதம் என்னே!. |

* * *—கீழ்ப்பாட்டில் "ஆருமறியாரவன் பெருமை" என்றதை விவரிக்கிறாரிதில். அப்பெருமான் திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட விதத்தையும் திருவரங்கத்தில் வந்து சேர்ந்த விதத்தை

யும் ஆலந்தளிரில் பள்ளிகொண்ட விதத்தையும் ஆர் அறிவார்? என்கிற விதற்குக் கருத்து யாதெனில்; * தன் தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பல பரப்பித் திருப்பாற்கடலில் சயனித்தருளுமழகிலே நான் ஈடுபட்டிருக்கும் வண்ணமாக ஈடுபட்டிருப்பார் ஆருமில்லை; "பாலாழி நீகிடக்கும் பண்பை யாம் கேட்டேயும் காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றாற்போலே அக்கிடையில் வியாமோஹித் திருப்பவன் நானொருவனே; திருவரங்கம் பெரிய கோயிலில் உபய காவேரீ மத்யத்தில் "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்னும்படியே பரம போக்யமாகவும் அத்யந்த ஸுலபமாகவும் ஸந்நிதிபண்ணி ஸேவை ஸாதித்தருளுந் திறத்தில் ஈடுபட்டு "இஃது என்ன போக்யதை!, இஃது என்ன ஸௌலப்யம்" என்று அக்குணங்களை வாய்வெருவுகின்றவன் நானொருவனே; உலகங்களைப் பிரளயவெள்ளம் கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து நோக்கி ஒரு சிற்றாலந்தளிரின் மேல் திருக்கண்வளர்ந்தருளின அகடிதகடநா ஸாமர்த்தியத்தைப் பாராட்டிப் பேசுவார் ஆரேனுமுண்டோ? அந்த சக்தி விசேஷத்தை மெச்சுகிறவன் நானொருவனே—என்பதாம்.

ஞாலத்து ஒருபொருளை = கார்யரூபமான ஸகலப்ரபஞ்சங்களுக்கும் "ஏகமேவாத்விதீயம்ப்ரஹ்ம" என்கிறபடியே துணையற்ற காரணவஸ்துவாயிருப்பவன் என்று முரைக்கலாம்.

வானவர்தம் மெய்ப்பொருளை—தனது திருமேனியை நித்யஸூரிகளுக்குப் பூர்ணாநுபவம் பண்ணக் கொடுத்தருள்பவனென்றவாறு. அப்பிலருபொருளை = வடமொழியில் 'அப்' என்பது ஜலவாசகம். 'அம்பு' என்னும் வடசொல் தமிழில் 'அப்பு' என்றாயிற்றென்றலுமுண்டு. 1. "அப ஏவஸஸர்ஜாதௌ" என்றும் 2. "நன்மைப்புனல்பண்ணி" என்றும் சொல்லுகிறபடியே முதன்முதலில் ஜலதத்துவத்தை ஸ்ருஷ்டித்து அதிலேகண்வளர்ந்து ஒப்பற்ற காரணப்பொருளாயிருப்பவன் என்கை. ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை அவனது நிர்ஹேதுக கிருபையினால் நான் அறிந்த விதம் ஆச்சரியம்! என்று தலைக்கட்டினவாறு. அன்றியே, யானறிந்தவாறு—யானறிந்த வண்ணமாக, ஆர் அறிவார்—, என்று கீழோடே கூட்டி ஏகவாக்கியமாக யோஜிக்கவுமாம். .... ... (௩)

---

1. மநுஸ்மிருதி 1—8. 2. திருவாய்மொழி 7—5—4.

ஆறு சடைக்கரந்தான் அண்டர்கோன் தன்னோடும் *
கூறுடைய னென்பதுவும் கொள்கைத்தே *—வேறொருவ
ரில்லாமை நின்றானை எம்மானை * எப்பொருட்கும்
சொல்லானைச் சொன்னேன் தொகுத்து.

| | |
|---|---|
| ஆறு | கங்காநதியை |
| சடை | தனது ஜடா மண்டலத்திலே |
| கரந்தான் | மறையச்செய்து தாங்கிக்கொண்டிருக்கின்ற ருத்ரன் |
| அண்டர் கோன் தன்னோடும் | தேவாதிதேவனான ஸர்வேச்வரனோடு |
| கூறு உடையன் என்பதுவும் | ஸாம்யமுடையவன் என்று (பாமரர்) சொல்லுஞ் சொல் |
| கொள்கைத்தே | அங்கீகரிக்கத் தகுந்ததோ? (அல்ல;) |
| வேறு ஒருவர் இல்லாமை நின்றானை | வேறொரு தெய்வமும் தனக்கு ஒப்பாக இல்லாமல் வீறுபெற்றிருப்பவனும் |
| எப்பொருட்கும் சொல்லானை | எந்தப்பொருளைச் சொல்லுகிற சப்தமும் தனக்கு வாசகமாம்படி (ஸர்வ சப்தவாச்யனாய்) உள்ளவனுமான |
| எம்மானை | எம்பெருமானை |
| தொகுத்து சொன்னேன் | சுருங்கப் பேசினேனித்தனை. |

* * *—'ருத்ரனும் ஸ்ரீமந்நாராயணனைப் போலவே பரதேவதை' என்று சிலர் மயங்கிக்கிடக்கிறார்களே, இப்படியும் ஒரு ப்ரமம் இருக்குமோ? தேவாதி தேவனான எம்பெருமான் எங்கே? அவனுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை சிரஸாவஹித்துத் தூய்மை பெற்ற சிவன் எங்கே? இவ்விருவரையும் ஸமமாகச் சில அவிவேகிகள் சொன்னால் இதனை அறிவுடையார் அங்கீகரிக்கக் கூடுமோவென்கிறார் முன்னடிகளில்.

கங்கை சிவனுடைய சடையில் மறைந்திருப்பதுபற்றி அவனுக்கு ஆறுசடைக் கரந்தான் என்று பெயரிடப்பட்டது. கரத்தல்—மறைத்தல். சிவனுக்குப் பல பெயர்களிருக்க இங்கு இந்தப் பெயரையிட்டுச் சொன்னது—கருத்துடன் கூடியது; எந்த ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை ருத்ரன் சிரஸாவஹித்துப் புனிதனாயினனோ, அந்த ருத்ரனை ஸமனாகச் சொல்வது பொருந்தாதென்

பதைக் காட்டினபடி. "கஸ்ய வாஹேதோ: கேந ஸம்பவ: ஸம்ப்ரோயுஜ்யதே ந?" என்ற ஸ்தோத்ரரத்ந ஸ்ரீஸூக்தியும் நோக்கத் தக்கது.

அண்டர்கோன்='அண்டர்' என்று தேவர்க்கும் இடையர்க்கும் பெயர்; தேவாதிதேவன் என்றுவது கோபால க்ருஷ்ணன் என்றுவது பொருள் கொள்ளலாம். கூறு உடையன்=ஈச்வரத்வத்தில் பங்கு உடையவன் என்றபடி. கொள்கைத்தே?—கொள்ளுந் தன்மையுடையதோ? அங்கீகரிக்கத் தகாதது என்கை.

இப்படி அத்விதீய ஸர்வேச்வரனை அப்பரமபுருஷனை வாய் கொண்டு பேசுவது ஒருவர்க்கும் இயலாதாயினும் 'அவனொருவனே பரதெய்வம்' என்கிற இவ்வர்த்தத்தை நான் சுருங்கச் சொன்னேனென்கிறார் பின்னடிகளில். 1. "அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா। மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய= அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா—மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய." [அர்ஜுநா! எனக்கு மேற்பட்டதத்துவம் எதுவுமில்லை] என்ற பகவத்வசநத்தையுட் கொண்டு 'வேறொருவரில்லாமை நின்றானை' என்றார். எப்பொருட்கும் சொல்லானை=வேதாந்திகள் 'அபர்யவஸாநவ்ருத்தி' என்று சொல்லுவதொன்றுண்டு; அதாவது—உலகத்தில் பிரயோகிக்கப்படும் ஸகல சப்தங்களும் ஸர்வாந்தர்யாமித்வேந ஸர்வசரீரியாயிருக்கின்ற பரமாத்மாவரையில் வாசகங்களாகும் என்பது; அந்த சக்தியாலே எப்பொருளுக்கு வாசகமான சொல்லும் எம்பெருமானைத் தொட்டுத் தீருமாதலால் 'எப்பொருட்கும் சொல்லானை' என்கிறார். ... ... ... (௪)

தொகுத்த வரத்தனைத் தோலாதான் மார்வம் *
வகிர்த்த வளையுகிர்த்தோள் மாலே! *—உகத்தில்
ஒருநான்று நீயுயர்த்தி உள்வாங்கி நீயே *
அருநான்கு மானா யறி. (௫)

1. பகவத்கீதா 7—7.

| | |
|---|---|
| தொகுத்த வரத்தன் ஆய் | (தவஞ்செய்து) ஸம்பாதிக்கப் பட்ட வரங்களை யுடையனாய் |
| தோலாதான் | ஒருவரிடத்திலும் தோல்வியடை யாதவனாயிருந்த இரணியனுடைய |
| மார்வம் | மார்பை |
| வகிர்த்த | இருபிளவாகப் பிளந்தொழித்த |
| வளை உகிர் | வளைந்த நகங்களைக் கொண்ட |
| தோள் | திருக்கைகளை யுடைய |
| மாலே | ஸர்வேச்வரனே!, |
| நீ | நீ, |
| உகத்தில் | பிரளயகாலத்தில் |
| உள் வாங்கி | (உலகங்களை யெல்லாம்) உபஸம்ஹரித்து உள்ளேயிட்டு வைத்து |
| ஒரு நான்று | (மீண்டும் ஸ்ருஷ்டி காலமாகிற) ஒரு ஸமயத்தில் |
| உயர்த்தி | (அவ்வுலகங்களை யெல்லாம்) வெளியிட்டு வளரச்செய்து |
| நீயே | இப்படிப்பட்ட நீயே |
| நான்கும் | (தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவர ரூபங்களான) நால்வகைப் பொருள்களிலும் |
| அரு ஆனாய் | அந்தராத்மாவானாய் |
| அறி | இதனை அறிவாயாக. |

* * *—கீழ்ப்பாட்டில் "வேறொருவரில்லாமை நின்றானை" என்றும் "எப்பொருட்கும் சொல்லானை" என்றும் சொன்னதை விவரிக்கிறது இப்பாட்டு. அனைத்துலகும் அனைத்துயிரும் அமைத்தளித்துத் துடைப்பது நீ நினைத்த விளையாட்டு; கருதரிய வுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையும் ஒரு தனி நாயகம் நீ; ஆகவே உனக்குச்சொல்லும் ஏற்றமெல்லாம் பொருந்தும் பிரானே! என்றாராயிற்று.

தொகுத்தவரத்தனாய்த் தோலாதான்—தேவர் மனிதர் முதலிய எவ்வுயிர்களாலும் பகலிலும் இரவிலும் வானத்திலும் பூமியிலும் வீட்டின் அகத்திலும் புறத்திலும் அஸ்த்ர சாஸ்த்ரங்களொன்றினாலும் ஈரமுள்ளதனாலும் ஈரமில்லாததினாலும் தனக்கு மரணமுண்டாகாதபடி இரணியன் பல வரங்கள் பெற்று ஆங்காங்கு வெற்றியே பெற்றுவந்தானென்க. ப்ரஹ்மஸ்ருஷ்டிக்கு உட்பட்ட எந்த பிராணியினாலும் சாகாதபடி அவன் பெற்ற வரம் பழுதுபடாமைக்காக நரங்கலந்த சிங்கமாய் ப்ரஹ்மஸ்ருஷ்டியினுட்படா

மல் தன்னைத்தானே தோற்றுவித்துக்கொண்டு தோன்றினனென்பதும்,—அஸ்த்ர சஸ்த்ரங்களொன்றினாலும் சாகாதபடியும் ஈரமுள்ளதனாலும் ஈரமில்லாததினாலும் இறவாதபடியும் பெற்றவரம் வீண்போகாமே நகங்களினால் கீண்டு கொன்றனனென்பதும், பகலிலும் இரவிலும் சாகாதபடி பெற்ற வரம் பொய்படாதபடி அப்பகலிரவுகளின் ஸந்தியாகிய மாலைப்பொழுதிலே கொன்றனனென்பதும், பூமியிலும் வானத்திலும் சாகாதபடி பெற்ற வரம் மெய்யாம்படி தன் மடிமீது வைத்துக் கொன்றன னென்பதும், வீட்டின் அகத்திலும் புறத்திலும் இறவாதிருக்கும்படி பெற்றவரத்திற்கு விரோதமின்றி வாசற்படிமீது வைத்துக்கொண்டு கொன்றன னென்பதும் இவைபோல்வன பல விசேஷங்கள் இங்கு அருமையாக நோக்கத்தக்க விஷயங்களாம். "சுராசுரர் முனிவர் நரர் கையில் பாரில் சுடர்வானில் பகலிரவில் உள்புறம்பில், பெருபடையில் தான் சாகா விரண்யன்றன்னைப் பிரகலாதன் தர்க்கித்துண்டென்ற தூணில், நரஹரியாய்ப் பொழுதுபுகுநேரந்தன்னில் நாடியுதித்துயர் வாசற்படி மீதேறி, இரணியனைத் தொடைமிசைவைத் துகிரினாலே இருபிளவாக்கினை யரியே எம்பிரானே!" என்றார் பின்னோரும்.

உகத்தில்—யுகாந்த காலத்தில் என்றபடி. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு நீயே கடவனாயிருக்கின்றாய் என்பது பின்னடிகளிற் சொல்லப்படுகின்றது. 'உயர்த்தி' என்பதனால் ஸ்ருஷ்டி கர்த்ருத்வமும், 'உள்வாங்கி' என்பதனால் ஸம்ஹார கர்த்ருத்வமும், 'நான்கும் அரு ஆனாய்' என்பதனால் ஸ்திதிகர்த்ருத்வமும் கூறப்பட்டனவாயின. 'அரூபி' என்னும் வடசொல் 'அரு' என்று கிடக்கிறது. 1. இராமடமூட்டுவோரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்" என்கிறபடியே, தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவர ரூபங்களான நால்வகைப் பொருள்களிலும் பதிந்திருந்து அவற்றின் ஸத்தைக்கு நிர்வாஹகனாயிருக்கின்றாய் என்றவாறு. .... ... (ரு)

அறியார் சமண ரயர்த்தார் பவுத்தர் *
சிறியார் சிவப்பட்டார் செப்பில் *—வெறியாய
மாயவனை மாலவனை மாதவனை யேத்தாதார் *
ஈனவரே யாதலா லின்று. (சு)

1. முமுக்ஷுப்படி-திருமந்த்ரப்ரகரணம்.

| | |
|---|---|
| சமணர் | ஜைநர்கள் |
| அறியார் | உண்மையை அறிய மாட்டார்கள்; |
| பவுத்தர் | பௌத்தர்கள் |
| அயர்த்தார் | பிரமித்தார்கள்; |
| சிவப்பட்டார் | சைவமதஸ்தர்கள் |
| சிறியார் | மிகவும் நீசராகி யொழிந்தனர்; |
| செப்பில் | (இவர்களுடைய தன்மைகளைச்) சொல்லப் புகுந்தால், |
| வெறி ஆய | பரிமளமே வடி வெடுத்ததுபோன் றுள்ளவனும் |
| மாயவனை | ஆச்சரியமான குண சேஷ்டிதங்களை யுடையவனும் |
| மால் அவனை | (அடியார் திறத்தில் வியாமோஹ முள்ளவனும் |
| மாதவனை | திருமகள் கொழு நனுமான எம்பெருமானை |
| ஏத்தாதார் | (இவர்கள்) துதிக்க மாட்டாதவர்களா யிராநின்றார்கள் |
| ஆதலால் | ஆகையினாலே |
| இன்று | இப்போது |
| ஈனவரே | (இவர்கள்) நீசர்களே யாவர். |

* * *—இப்படிப்பட்ட பரம்பொருளை எல்லாரும் பணிந்து உய்வுபெறலாமாயிருக்க, பலபல பாவிகள் விவேகமற்று விமுகரா யொழிகின்றனரேயென்று திருவுள்ளம் நொந்து பேசும் பாசுரம் இது. "தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடை யோன் சொல்கற்ற சோம்பரும்" என்கிறபடியே உள்ள மதாந்த ரஸ்தர்கள் பாழே போனார்களே! என்று வயிறெரிகிறார்.

சமணர் அறியார்—"ஸ்யாதஸ்தி, ஸ்யாந்நாஸ்தி" இத்யாதியான ஸப்தபங்கியை அங்கீகரித்துக்கொண்டு ஸமஸ்த ஜகத்தும் ஸத்து மாய் அஸத்துமாய் ஏகமுமாய் அநேகமுமாய்க்கொண்டு அநே காந்தமாயிருக்குமென்று ஒன்றோடொன்று பொருந்தாமல் தோற் றினதைச் சொல்லுகிற ஜைநர் அவிவேகிகளா யொழிந்தனர்.

பவுத்தர் அயர்த்தார்—ஜ்ஞாதா, ஜ்ஞேயம் என்கிற பதார்த் தங்களெல்லாம் க்ஷணிகமென்றும் ஸ்திரனாயிருப்பானொரு ஆத்மா இல்லையென்றும், க்ஷணிகஜ்ஞாநஸந்ததியே ஆத்மாவென்றும் பேய்க்கத்துக் கத்துகிற பௌத்தர்கள் பிரமாணகதியை மறந் தொழிந்தனர்.

சிவப்பட்டார் சிறியார்—படைக்கப்படும் பொருள்களில் ஒருவ

ளுய் அநீச்வரனை ருத்ரனைப் பரதெய்வமாக உபயாதிக்கிற சைவ மத நிஷ்டர்கள் நீசராகி யொழிந்தனர்.

இப்படி தனித்தனியே பிரித்துச் சொல்லுவானேன்? இவர்க ளெல்லாரும் திருமாலை ஏத்தமாட்டாத பாவிகளாதலால் அனைவருமே நீசர் என்று கொள்ளவேணு மென்கிறார் பின்னடிகளில். 1. "ஆன்விடையேழன்றடர்த்தாற்கு ஆளானாரல்லாதார், மானிடவரல்லரென்று என் மனத்தே வைத்தேனே" என்பதே மானுனிகளின் ஸித்தாந்த மாதலால் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் விமுகராயொழிந்தவர்களெல்லாரும் மண்ணின்பாரமே என்றாராயிற்று.

வெறியாய=வெறியாவது பரிமளம்; எம்பெருமானை உபநிஷத்தில் "ஸர்வகந்த:—ஸர்வகந்தః" என்று சொல்லியிருப்பதனால் பரிமளமே வடிவெடுத்தவ னென்கிறது. .... .... (சு)

இன்ருக நாளையேயாக * இனிச்சிறிது
நின்ருக நின்னருளென் பாலதே—* நன்ருக
நானுன்னை யன்றியிலேன் கண்டாய் * நாரணனே!
நீயென்னை யன்றி யிலை. (எ)

| | | | |
|---|---|---|---|
| நாரணனே | நாராயணனே!, | நன்று ஆக | நிச்சயமாக |
| இன்று ஆக | இன்றைக்காகவுமாம்; | நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் | நான் உன்னை யொழியப் புகலில்லாதவன் காண்; |
| நாளையே ஆக | நாளைக்காகவுமாம்; | நீ | நீயும் |
| இனி சிறிது நின்று ஆக | இன்னம் சிறிது காலம் கழித்தாகவுமாம் (என்றைக்கானாலும்) | என்னை அன்றி இலை | என்னையொழிய வேறொரு ரக்ஷ்யனை உடையையல்லைகாண். |
| நின் அருள் | உன்னுடையகிருபை | | |
| என் பாலதே | என்னையே விஷயமாக வுடையதாகும்; | | |

* * *—'ஆழ்வீர்! மதாந்தரஸ்தர்களை யெல்லாம் ஈனவரே யென்று இழித்துச் சொன்னீர்; உமக்குண்டான ஏற்றம் யாது?' என்று எம்பெருமான் கேட்க; என்னுடைய ஏற்றம் உனக்குத் தெரியாதோ பிரானே!; 'உன்னையொழிய எனக்குச் செல்லாது,

1. பெரியதிருமொழி 11-7-9.

என்னையொழிய உனக்குச் செல்லாது' என்னும்படியான உறவை யுணர்ந்து ஸர்வகாலமும் உன்னுடைய திருவருளுக்குப் பரிபூர்ண பாத்ரமாயிருக்கப்பெற்ற வென்னுடைய ஏற்றம் அறியாயோ? என்கிறார் போலும்.

பெருமானே! உன்னுடைய திருவருள் என்மேல் ஏறிப் பாய வேண்டியதேயன்றி வேறொருவரையும் விஷயமாக வுடையதன்று; உன்னுடைய அருளுக்கு நானே இலக்கு; என்னுடைய வேண்டுகோளுக்கு உன்னருளே இலக்கு. இன்றைக்கோ நாளைக்கோ, அன்றி இன்னமும் சிலகாலம் கடந்தபின்போ என்றைக்காலும் உன்னருள் என்மேல் ஏறிப்பாய்ந்தே தீரக்கடவது என்கிற அத்யவஸாயம் எனக்குத் திடமாகவுள்ளது.

இங்ஙனே நான் சொல்லுவதற்கு யாதுகாரணமென்கிறாயோ? சொல்லுகேன் கேளாய், நான் உன்னையன்றியிலேன் நீ யென்னையன்றி யிலை—'நம்முடைய அருளை யாரிடத்து உபயோகிக்கலாம்!' என்று நீ தயநீயரைத் தேடியிராநின்றாய்; 'நமக்கு எம்பெருமான் அருள் புரிவனோ?' என்று நான் உன் தயையைத் தேடியிராநின்றேன்; உன்னையொழிய எனக்குப் புகலில்லை, என்னையொழிய உனக்குப் புகலில்லை. ஆகவே, நின்னருள் என்பாலதே. "தஒஹம் ஸஒ௲த நநாயவாநு ௨ஒ௲த ஸு௦ உய நீயவாநூ வியிநிஜீ-உத ௭ெதஉஙுய௦ ஊமவநு வாஃய ௨ாஃ ஜீஹவ:." என்ற ஸ்தோத்ர ரத்ந ச்லோகம் இவ்விடத்திற்குச் சார்பாக அநுஸந்திக்க வுரியது. "நிகரின்றி நின்றஎன்னீசதைக்கு நின்னருளின்கணன்றிப் புகலொன்றுமில்லை அருட்குமஃதே புகல்" என்ற அமுதனார் பாசுரமும் காண்க.

பின்னடிகட்கு வேறொரு வகையாகவும் பொருள் கொள்ளலாம்; நாராயணனே! உன்னை நிரூபிக்கவேண்டில் என்னையிட்டு நிரூபிக்கவேண்டும்; என்னை நிரூபிக்கவேண்டில் உன்னையிட்டு நிரூபிக்கவேண்டும்; (அதாவது) 'நாராயணன்' என்றால் நாரங்களுக்கு அயநம் என்றபடி; நாரபதார்த்தங்களில் தாம் சேர்ந்தவராகையாலே தம்மையிட்டு நாராயணனை நிரூபிக்க வேண்டியதாகிறது. தம்மை நிரூபிக்கவேண்டுமானால் பகவச் சேஷத்வத்தையிட்டே அடியானென்று நிரூபிக்கவேண்டியிருப்பதால் நாராயணனையிட்டுத்

தம்மை நிரூபிக்க வேண்டியதாகிறது. சேஷசேஷிகளுடைய நிரூபணம் பரஸ்பர ஸாபேக்ஷமாகவே யிருக்குமன்றோ. ஆகவே, சேஷியான உன்னையொழிய எனக்கு ஸத்தையில்லை; சேஷபூதனான என்னையொழிய உனக்கு ஸத்தையில்லை என்றதாயிற்று என்று கொள்ளலாம் .... .... .... ... (எ)

இலைதுணை மற்றென் னெஞ்சே ஈசனைவென்ற *
சிலைகொண்ட செங்கண்மால் சேரா—* குலைகொண்ட
ஈரைந் தலையா னிலங்கையை யீடழித்த *
கூரம்ப னல்லால் குறை. (அ)

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சே | எனது மனமே!, | குலை கொண்ட ஈரைந் தலையான் | கொத்துப்போலே நெருங்கிக் கிடந்த பத்துத்தலைகளை யுடையவனான இராவணனுடைய |
| ஈசனை வென்ற | ருத்ரனை ஜயித்த | இலங்கையை | லங்காபுரியை |
| சிலை கொண்ட | வில்லை (பரசுராமனிடத்தில் நின்றும்) வாங்கிக் கொண்ட | ஈடு அழித்த | சீர்கெடுத்த |
| செம் கண் மால் | புண்டரீகாக்ஷனாகிய தன்னை | கூர் அம்பன் அல்லால் | கூர்மைதங்கிய அம்புகளை யுடையனான இராமபிரானைத் தவிர்த்து |
| சேரா | பணிந்து உய்வு பெற மாட்டா தொழிந்த | குறை | விரும்பத்தகுந்த |
| | | மற்று துணை | வேறொருதுணைவன் |
| | | இலை | நமக்கு இல்லை. |

* * *—விரோதி நிரஸநமே இயற்கையாகவுள்ள எம்பெருமானைத் தவிர்த்து வேறொருவரும் துணையாகவல்லாரில்லையென்று தம் திருவுள்ளத்துக்கு உபதேசிக்கிறாரிதில்.

ஈசனைவென்ற சிலைகொண்ட செங்கண்மால்=ஒரு ஸமயத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு ருத்ரனை ஒரு சிலையால் வென்றான்; அந்த வில் பரசுராமனிடத்தில் வந்து சேர்ந்திருந்தது; அதனை ஸ்ரீராமாவதாரத்தில் மிதிலையில்நின்று மீண்டெழுந்தருளும் போது அப்பரசுராமனிடத்திற் கொண்டான்: (இவ்வரலாற்றை விரித்துரைப்போம்.) முன்னொருகாலத்தில் தேவசில்பியான விச்வகர்மாவினால் நிருமிக்கப்பட்ட சிறந்த இரண்டு விற்களுள் ஒன்றைச் சிவபிரா

னும் மற்றொன்றைத் திருமாலும் எடுத்துக்கொண்டார்கள். பின்பு ஒரு காலத்தில் அவ்விற்களுள் சிறந்தது இன்னதென்பதை அறிய விரும்பிய தேவர்களின் வேண்டுகோளால் பிரமன் அரனுக்கும் அரிக்கும் போரை மூட்டிவிட, அங்ஙனமே அவர்கள் அவ்விற்களைக்கொண்டு போர்புரிகையில் சிவபிரானது வில் சிறிது முறிபட்டது; அவ்வாறு இற்றவில்லைச் சிவபிரான் ஜநககுலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட, அது வம்ச பரம்பரையாய் ஜநகமஹாராஜனளவும் வந்தது; இது நிற்க: இறாத வலிய வில்லை விஷ்ணு ரிசீகமுனிவனிடம் கொடுத்துச்செல்ல, அது அவன் குமாரனான ஜமதக்நியினிடத்தும் அவன் குமாரனான பரசுராமனிடத்தும் பரம்பரையாய் வந்தது. முற்கூறிய சிவதநுஸ்ஸை ஸீதைக்குக் கந்யாசுல்கமாக ஜநகன் வைத்திருந்தான்; இராமபிரான் அந்தவில்லை முறித்துத் தன் பேராற்றலை விளங்கச்செய்து பிராட்டியை மணந்துகொண்டு மிதிலாபுரியினின்றும் புறப்பட்டு அயோத்திக்கு வரும்போது வழியிடையே செருக்கிவந்த பரசுராமனது கையிலிருந்த விஷ்ணுதநுஸ்ஸைவாங்கி எளிதில்வளைத்து நாணேற்றிக் கணைதொடுத்து 'இவ்வம்புக்கு இலக்குஎன்?' என்று வினவ, பரசுராமன் அதற்கு இலக்காகத் தனது தபோபலம் முழுவதையுங் கொடுக்க, அவன் க்ஷத்ரிய வம்சத்தைக் கருவறுத்தவனாயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம் பூண்டவனுமாயிருத்தல் பற்றி அவனைக் கொல்லாமல் அவனது தவத்தைக்கவர்ந்த மாத்திரத்தோடு ஸ்ரீராமன் விட்டருளினன் என்ற வரலாறுகள் இதிஹாஸப்ரஸித்தம். ஆகவே, இப்பாட்டில் "ஈசனைவென்ற சிலை" என்றது பரசுராமன் கையிலிருந்த விஷ்ணுதநுஸ்ஸை. அதனைக் கொண்ட செங்கண்மால்—ஸ்ரீராமபிரான். அப்படிப்பட்ட தன்னையடிபணிந்து வாழமாட்டாத இராவணனைக் குடும்பத்தோடு கொன்றொழித்த எம்பெருமானைத் தவிர்த்து நமக்குத் துணையாகவல்லார் ஆருமில்லை என்றாராயிற்று.

'ஈசனைவென்ற' என்ற அடைமொழியைச் சிலைக்கு ஆக்காமல் செங்கண்மாலுக்கு ஆக்கி, பாணாஸுரயுத்தம் முதலியவற்றில் ருத்ரனை ஜயித்த செங்கண்மால் என்னவுமாம்.

இப்பாட்டில் "கூரம்பனல்லால்" என்றவிடத்துப் பெரிய

வாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—"எம்பெருமானார் ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் அசேதநமான க்ரியா கலாபத்தினுடைய கூர்மையை விச்வஸித்திருப்பார்கள்; இவர்கள் சக்ரவர்த்தித்திருமகன் அம்பின் கூர்மையைத் தஞ்சமாக நினைத்திருப்பார்கள்" என்று அச்சுப்பிரதிகளிற் காணப்படும் வாக்கியம் பிழை. ஓலை ஸ்ரீ கோசங்களை ஆராய்ந்ததில் "எம்பெருமானார் ஸ்ரீபாதத்தை ஆச்ரயித்தவர்கள் அசேதநமான க்ரியா கலாபத்தினுடைய கூர்மையை விச்வஸித்திரார்கள்; சக்ரவர்த்திக் திருமகன் அம்பின் கூர்மையையேயாயிற்றுத் தஞ்சமாக நினைத்திருப்பது." என்று காண்கிறது. இதுவே பொருத்தமுடைத்து. ஸ்ரீ வைஷ்ணவர்கள் பேற்றுக்கு எம்பெருமான் கைபார்த்திருக்கு மத்தனையொழிய மூக்கைப்பிடித்தல் முதலிய ஸாதநாநுஷ்டாநங்களினால் பேறுபெற நினையார்களென்கை. ... ... ... ... ... ... (அ)

குறைகொண்டு நான்முகன் குண்டிகைநீர்ப் பெய்து *
மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி—* கறைகொண்ட
கண்டத்தான் சென்னிமே லேறக் கழுவினான் *
அண்டத்தான் சேவடியை யாங்கு (௯)

| | | | |
|---|---|---|---|
| நான்முகன் | பிரமதேவன் | ஆங்கு | (எம்பெருமான் உலகளந்தருளின) அக்காலத்தில் |
| குறை கொண்டு | நைச்யாநுஸந்தானம் செய்துகொண்டு | அண்டத்தான் சே அடியை | அந்த ஸர்வேச்வரனுடைய திருவடிகளை |
| குண்டிகை நீர் | கமண்டல தீர்த்தத்தை | கறை கொண்ட கண்டத்தான் சென்னி மேல் ஏற | விஷகண்டனை ருத்ரனுடைய தலையில் (ஸ்ரீபாத தீர்த்தம்) விழும்படியாக |
| பெய்து | வார்த்து | கழுவினான் | விளக்கினான். |
| மறை கொண்ட | வேதங்களிலுள்ள | | |
| மந்திரத்தால் | புருஷஸூக்தம் முதலிய மந்த்ரங்களினால் | | |
| வாழ்த்தி | மங்களாசாஸநம் பண்ணி | | |

* * *—கீழ்ப்பாட்டில் "இலங்கையையீடழித்த கூரம்பனல்லால்—இலைதுணைமற்று" என்றார். அப்படி சொல்லலாமோ? பிர

மன் சிவன் முதலானவர்களையும் துணையாகப்பற்றுகிறவர்கள் இவ்வுலகில் பலருண்டே! என்ன; அவர்களும் தங்கள் வெறுமையை முன்னிட்டு ஸ்ரீமந் நாராயணனையே ஆச்ரயித்து அபிமதம் பெற்றார்கள் காண்மின் என்று சொல்லவேண்டி, உலகளந்தகாலத்துத் திருவடிவிளக்கின இதிஹாஸத்தை யெடுத்துரைக்கிறார் இப்பாட்டில்.

உலகளந்த பெருமானுடைய திருவடியைப் பிரமன் தனது கைக்கமண்டல தீர்த்தத்தினால் விளக்கினான்; அது கங்கையாகப் பெருக அதனை சிரஸாவஹித்துப் பரிசுத்தியடைந்தது காரணமாகச் சிவனென்று பேர்பெற்றானொருவன்; இனி, துணையாகுந்தெய்வம் இன்னதென்பதை நீங்களே அறிந்துகொள்மின் என்றவாறு.

குறைகோண்டு—"நீசனேன் நிறையொன்றுமிலேன்" என்னுமாபோலே தன்னுடைய குறையை—நைச்யத்தை அநுஸந்தித்துக்கொண்டு என்றபடி. குண்டிகை—வடசொல் விகாரம். அமரர்க்கு அமுதமளிக்கக் கடல்கடைந்த காலத்து அக்கடலினின்று தோன்றின காலகூடவிஷத்தைச் சிவபிரான் உட்கொண்டு கழுத்தளவிலே அடக்கிக் கொண்டதுபற்றிக் கறைகோண்ட கண்டத்தான் என்று பெயர் பெற்றனன். .... ... ... (கூ)

ஆங்கார வார மதுகேட்டு * அழலுமிழும்
பூங்கா ரரவணையான் போன்மேனி—* யாங்காண
வல்லமே யல்லமே? மாமலரான் வார்சடையான் *
வல்லரே யல்லரே வாழ்த்து. (கo)

ஆங்கு — பரமபதத்திலே

ஆரவாரம் அது கேட்டு — (நித்ய முக்தர்களுடைய) ஸாமகான கோஷத்தைக் கேட்டு

(அஸுரர்கள் இங்கும் வந்து ஆரவாரம் செய்வதாக ப்ரமித்து)

அழல் உமிழும் — விஷாக்நியைக் கக்குகின்ற

பூ கார் அரவு அணையான் — அழகிய சீற்றத்தையுடைய திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய எம்பெருமானது

பொன் மேனி — அழகிய திருமேனியை

யாம் — (அநந்யபக்தரான) நாம்

| | | | |
|---|---|---|---|
| காண | ஸேவிப்பதற்கு | வார் சடையான் | நீண்ட ஜடையை யுடையருத்ரனும் |
| வல்லம் அல்லமே | ஸாமர்த்திய முடையோ மல்லோமோ ? | வாழ்த்து | (எம்பெருமானை) வாழ்த்துவதில் |
| (நாம் ஸமர்த்தரேயாவோம் ;) | | வல்லர் அல்லரே | அஸமர்த்தர்களே. |
| மா மலரான் | சிறந்த பூவிற் பிறந்த பிரமனும் | | |

* * *—இப்பாட்டை இரண்டுவகையாக நிர்வஹிப்பதுண்டு:- ஆங்கு என்றது 'பரமபதத்திலே' என்றபடி. அவ்விடத்தில் ஆரவாரமாவது—"ஏதத் ஸாமகாயந்நாஸ்தே. ஹாவு ஹாவு ஹாவு. அஹமந்நமஹமந்நமஹமந்நம்." என்று உபநிஷத்திற் கூறியுள்ளபடியே நித்யமுக்தர்கள் பெருமிடறுசெய்து ஸாமகாநம் பண்ணுவர்களே அந்த ஆரவாரம். அது திருவனந்தாழ்வானுடைய செவியிற் பட்டவாறே 'இது ஸாமகோஷம்' என்பதை மறந்து அஸுரராக்ஷஸர்கள் தீங்கிழைக்க இவ்விபூதியிலும்வந்து கூச்சலிடுகின்றார்கள் போலும் என்று ப்ரேமமடியாகக் கலங்கி, அவர்கள் எம்பெருமானருகில் கிட்டமுடியாதபடி விஷாக்நியை வாந்தி செய்துகொண்டேயிருக்கிறானும். 1. "ஸம்ஸாரஸூந்ய ஸுகஸம்ஸ்ருதி ஸாமகாநே வைகுண்டதாம்நி ..." என்று பட்டர் அருளிச்செய்தபடியே பரிவின் மிகுதியினால் அச்சத்திற்கு நிலமல்லாத ஸ்தானத்திலும் அஞ்சிக் காப்பிடுகின்ற திருவனந்தாழ்வான்மீது சயனித்தருளாநின்ற திவ்யமங்கள விக்ரஹத்தை நாம் ஸேவிக்க முடியாதோ? "தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி நாந்ய: பந்தா அயநாய வித்யதே" என்கிறபடியே அவனுடைய நிர்ஹேதுக விஷயீகாரம்பெற்ற நமக்கு அப்பரமனுடைய திருமேனி ஸேவை எளிதேயாம்; பின்னை யார்க்கு அரிதென்னில்; இறுமாப்புக் கொண்டிருக்கின்ற தேவதாந்தரங்கட்கே அஃது அரிது.

அன்றியே, கீழ்ப்பாட்டில் உலகளந்த வ்ருத்தாந்தம் அர்த்தாத் ப்ரஸ்துதமாகையாலே ஆங்கு என்றது 'அவ்வவதார ஸமயத்திலே' என்றபடியாய், ஆரவாரமது கேட்டு—"திசை வாழியெழ"

1. ஸ்ரீ குணரத்நகோசம்.

என்கிறபடியே திசைகள்தோறு முண்டான மங்களாசாஸந கோலாஹலத்தைக் கேட்டுத் திருவனந்தாழ்வான்தானும் தன்னுலான ரக்ஷையிடவேண்டி அழலை உமிழ்ந்தபடியைச் சொல்லிற்றாகவும் நிர்வஹிப்பதுண்டு. ஆகவே முதலடியில் மாத்திரம் இரண்டு வகையான யோஜநாபேதம். .... .... .... (கo)

வாழ்த்துகவாய் காண்ககண் கேட்கசெவி * மகுடம்
தாழ்த்தி வணங்குமின்கள் தண்மலரால் *—சூழ்த்த
துழாய்மன்னு நீண்முடியேன் தொல்லைமால் தன்னை *
வழாவண்கை கூப்பி மதித்து. (கக)

| | |
|---|---|
| சூழ்த்த | நிரையச் சாத்திக் கொள்ளப்பட்ட |
| துழாய் | திருத்துழாய்மாலை |
| மன்னு | பொருந்தியிருக்கப் பெற்ற |
| நீள் முடி | நீண்ட திருவபிஷேகத்தை யுடையனும் |
| என் தொல்லை மால் தன்னை | என்னிடத்தில் நெடுநாளாக வியாமோஹ முடையவனுமான ஸர்வேச்வரனை |
| வழா | ஒரு நொடிப் பொழுதும் விடாமல் |
| வண் கை கூப்பி மதித்து | அழகிய கைகளைக் கூப்பி த்யானம் பண்ணி |
| மகுடம் தாழ்த்தி | தலையை வணக்கி |
| தண் மலரால் | குளிர்ந்த புஷ்பங்களைக்கொண்டு |
| வணங்குமின்கள் | ஆச்ரயியுங்கள்; |
| வாய் | (உங்களுடைய) வாய் |
| வாழ்த்துக | (அவனைத்) துதிக்கட்டும்; |
| கண் | கண்கள் |
| காண்க | (அவனையே) ஸேவிக்கட்டும்; |
| செவி | காதுகள் |
| கேட்க | (அவனது சரிதங்களையே) கேட்கட்டும். |

* * *—செவி வாய் கண் முதலிய உறுப்புகள்யாவும் பகவத் விஷயத்தில் உபயோகப்படுவதற்கென்றே படைக்கப்பட்டனவாதலால் அவற்றை அவ்விஷயத்திலேயே உபயோகப்படுத்துங்கோள் என்று பரோபதேசம் பண்ணும் பாசுரம் இது. உங்களுடைய வாயை அவனுக்குப் பல்லாண்டு பாடுவதில் ஊன்றவையுங்கள்; கண்களை அவனுடைய திவ்யமங்கள விக்ரஹஸேவையில் ஊன்றவையுங்

கள்; செவிகளை அவனுடைய புண்ய கீர்த்திகளைக் கேட்பதில் ஊன்ற வையுங்கள்: தலையை அவனது திருவடிகளில் வணக்குங்கள்; கைகளை அஞ்ஜலி செய்வதிலும் புஷ்பம் முதலிய உபகரணங்களைக் கொண்டு ஸமர்ப்பிப்பதிலும் உபயோகப்படுத்துங்கள்: அவன் எப்படிப்பட்டவனென்றால், 'எல்லாரையும் ரக்ஷிக்கக்கடவேன்' என்று முடி கவித்துத் தனிமாலை யிட்டிருக்குமவன்; என்போல்வாரிடத்தில் நெடுங்காலமாகவே வியாமோஹம்வைத்து ஆட்படுத்திக் கொள்ள அவஸரம் பார்த்திருக்குமவன். இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயத்திலே உங்களுடைய ஸகல கரணங்களையும் உபயோகப்படுத்தி உய்வுபெறுங்கோள்—என்றாராயிற்று.

மகுடம்—தலைக்கும் கிரீடத்திற்கும் பெயர். ... (கக)

மதித்தாய்போய் நான்கின் மதியார்போய் வீழ *
மதித்தாய் மதிகோள் விடுத்தாய்! *—மதித்தாய்
மடுக்கிடந்த மாமுதலை கோள்விடுப்பான் * ஆழி
விடற்கிரண்டும் போயிரண்டின் வீடு. (கஉ)

| | | | |
|---|---|---|---|
| மதியார் | உன்னைச் சிந்தியாதவர்கள் | விடுப்பான் | நீக்குவதற்காக |
| நான்கில் | நால்வகைப்பட்ட யோனிகளில் | ஆழி | திருவாழியை |
| போய் போய் வீழ | சென்று சென்று பலகாலும் விழும்படியாக | விடற்கு | (அந்த முதலையின் மேல்) பிரயோகிப்பதற்கு |
| மதித்தாய் | ஸங்கல்பித்தாய்; | மதித்தாய் | நினைத்தருளினாய்; |
| மதி | சந்திரனுடைய | இரண்டும் | முதலையும் கஜேந்திராழ்வானுமாகிற இரண்டும் |
| கோள் | துன்பத்தை | போய் | ஒன்றையொன்று விட்டுப்போய் |
| விடுத்தாய் | போக்கியருளினாய்; | இரண்டின் | அவ்விரண்டு ஜந்துக்களுக்கும் |
| மடு | ஒரு மடுவிலே | வீடு | சாபமோக்ஷமும் மோக்ஷஸாம்ராஜ்யமும் உண்டாம்படி |
| கிடந்த | (சாபத்தினால்) வந்து சேர்ந்திருந்த | | |
| மா முதலை | பெரிய முதலையினாலுண்டான | | |
| கோள் | (கஜேந்திராழ்வானது) துயரத்தை | மதித்தாய் | ஸங்கல்பித்தாய். |

* * *—ஆழ்வார்களுடைய போதுபோக்குப் பலவகைப்பட்டிருக்குமே; ஸம்ஸாரிகளை நோக்கிச் சில பாசுரங்கள் கூறுவர்; தம் திருவுள்ளத்தையே நோக்கிச் சில பாசுரங்கள் கூறுவர்; எம்பெருமானை நோக்கிச் சில பாசுரங்கள் கூறுவர்; இப்புடையிலே, எம்பெருமான்றன்னை நோக்கிக் கூறும் பாசுரம் இது.

மதித்தாய்போய் நான்கின் மதியார் போய் வீழ=இதற்கு இரண்டு வகையான யோஜனைகள் உண்டு; மதியார்—உன்னைச் சிந்தித்து அடிபணியாதவர்கள், நான்கில் போய்வீழ—(வீடு பெறுமல்) சதுர்வித யோநிகளிலும் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து நசிக்கும்படியாக, மதித்தாய்—, என்பது ஒரு யோஜனை. அன்றியே; நான்கின்—நான்கு வேதங்களைக்கொண்டு, மதியார்—உன்னைச் சிந்திக்க மாட்டாதவர்கள், போய்வீழ—(ஆஸுர யோநிகளில்) விழுந்து ஒழியும்படியாக, மதித்தாய்—,என்பது மற்றொருயோஜனை.

மதிகோள் விடுத்தாய்—சந்திரனுக்கு நேர்ந்திருந்த க்ஷய ரோகத்தைப் போக்கினாய்.

இரண்டும்போய் இரண்டின்வீடு மதித்தாய்—முதலையும் சாபங்கொண்டிருந்தது; கஜேந்திரனும் சாபங்கொண்டிருந்தான்; எங்ஙனேயென்னில்; மஹாவிஷ்ணுபக்தனான இந்த்ரத்யும்நனென்னும் அரசன் வழக்கப்படி ஒருநாள் ஏகாக்ரசித்தனாய் விஷ்ணுபூஜை செய்துகொண்டிருந்தபோது அகஸ்த்ய மஹாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவ்வரசன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப் பூஜிப்பதில் செலுத்தியிருந்ததனால் அம்முனிவனது வருகையை அறியாதவனாய் அவனுக்கு உபசாரமொன்றும்செய்யாதிருக்க, அம்முனிவன் இப்படி நம்மை அரசன் அலக்ஷியஞ் செய்தானென்று மாறாகக்கருதிக் கோபித்து 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக் கடவை' என்று சபித்தான். (அங்ஙனமே அவன் ஒரு காட்டில் யானையாகத் தோன்றினனாயினும் முன்செய்த விஷ்ணுபக்தியின் மஹிமையினால் அப்பொழுதும் விடாமல் நாடோறும் ஆயிரந் தாமரை மலர்களைக்கொண்டு திருமாலை அர்ச்சித்துப் பூஜித்துவருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத் தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூப்

பறிப்பதற்குப்போய் இறங்கி முதலையின்வாயில் அகப்பட்டுக் கொண்டது.)

முன்பொருகால், தேவலன் என்னும் முனிவன் ஒரு நீர்நிலையில்நின்று தவஞ்செய்துகொண்டிருந்தபோது ஹூஹூ என்னும் கந்தர்வன் அம்முனிவனது காலைப்பற்றி யிழுத்தான், அதனால் கோபங்கொண்ட அம்முனிவன் 'நீ ஜலஜந்துபோல் மறைந்து வந்து அபசாரப்பட்டதனால் முதலையாகக் கடவை' என்று சபித்தான். முதலைக்கு சாபமோக்ஷம் உண்டாயிற்று; கஜேந்திரனுக்கு சாபமோக்ஷமும் ஸாக்ஷாத்மோக்ஷமும் உண்டாயின. .... (கஅ)

வீடாக்கும் பெற்றி யறியாது * மெய்வருத்திக்
கூடாக்கி நின்றுண்டு கொண்டுழல்வீர்! *—வீடாக்கும்
மெய்ப்பொருள்தான் வேத முதற்பொருள்தான் * விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாரா யணன். (கசு)

| | | | |
|---|---|---|---|
| வீடு ஆக்கும் பெற்றி அறியாது | மோக்ஷத்தைப் பெறுவிக்கும் வழியைத் தெரிந்து கொள்ளாமல் | உழல்வீர் | திரிகின்றவர்களே !, |
| மெய் | சரீரத்தை | வீடு ஆக்கும் | மோக்ஷத்தைத் தரக்கூடிய |
| வருத்தி | (உபவாஸாதிகளாலே) க்லேசப்படுத்தி | மெய் பொருள்தான் | மெய்யானஉபாயமாயிருப்பவனும் |
| கூடு ஆக்கி | எலும்பேமிகுந்த கூடாக அஸாரமாக்கி | வேதம் முதல் பொருள்தான் | வேதங்களினால் முழுமுதற்கடவுளாகப் பிரதிபாதிக்கப் படுபவனும் |
| நின்று | இப்படி நெடுங்காலம் தவம்புரிந்தும் | விண்ணவர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| உண்டு கொண்டு | (தேஹம் தரிக்க வேண்டுமளவு ஸ்வல்பமாக) புஜித்தும் | நல் பொருள்தான் | போக்யமான வஸ்துவாயிருப்பவனும் |
| | | நாராயணன் | ஸ்ரீமந் நாராயணனேயாவன். |

* * *—வேதாந்தங்களில் "யஜ்ஞேந தாநேந தபஸா அநாஸகேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி" (ப்ருஹதாரண்யகம்.) என்று சொல்லப்பட்டுள்ளது; (அதாவது—பிராமணர்கள் யாகஞ்செய்தும் தானஞ் செய்தும் தவம் புரிந்தும் பட்டினி கிடந்தும்

பேறுபெறப் பார்க்கிறார்கள்—என்று ஓதப்பட்டுள்ளது.] சரீரத்தை வருத்தப்படுத்திச் செய்யவேண்டியவையாயும், அப்படி செய்தாலும் 'அது தப்பிற்று, இது தப்பிற்று' என்று சொல்லிப் பெரும்பாலும் பலனை இழக்க வேண்டியவையாயுமுள்ள அக்கருமங்களில் கைவைத்து அநர்த்தப்பட்டுப் போவதிற்காட்டிலும்; ஸ்ரீமந்நாராயணனையே ஸாக்ஷாத்தாக எளிதில் வழிபட்டு வாழ்ந்துபோகலாமே என்னுங் கருத்துடன் அருளிச்செய்யும் பாசுரம் இது.

அருந்தவம் புரிந்து கஷ்டப்படுகின்றவர்களை விளிக்கிறார் முன்னடிகளால். அந்தோ! மோக்ஷமடையவேண்டியவழி எளிதாயிருக்கச் செய்தேயும் அந்த மார்க்கத்தைத் தெரிந்துகொள்ளாமல் அபாயங்கள்மிக்க கொடுவழியில் செல்லுகின்றீர்களே! என்கிற இரக்கந்தோன்ற "வீடாக்கும் பெற்றி அறியாது" என்கிறார். பெற்றி—உபாயம். கூடு ஆக்கி—பறவைகளின் கூடு கொம்புகளாலும் சுள்ளிகளாலுமே அடர்ந்திருப்பதுபோல, உடம்பை எலும்பு தவிர வேறொன்றுமில்லையாம்படி உலர்த்தி என்றவாறு. உண்டு—1. "காயோடு நீடு கனியுண்டு வீடு கடுங்கால் நுகர்ந்து" என்றும், 2. "வீழ்கனியுமூழிலையும் என்னுமிவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தி" என்றும் சொல்லுகிறபடியே தேஹம் தரித்திருக்குமளவு மிதபோஜநம் பண்ணுகிறபடியைச் சொல்லுகிறது.

பின்னடிகளில் எம்பெருமானுடைய தன்மையையெடுத்துரைத்தது—காயக்லேசரூபமான கருமங்களை விட்டொழித்து 'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே' என்றிருங்கள் என்றவாறு. "காயிலைதின்றுங் கானிலுறைந்துங் கதி தேடித், தீயிடை நின்றும் பூவலம் வந்துந் திரிவீர்காள், தாயிலுமன்பன் பூமகள் நண்பன் தடநாகப், பாயன்முகுந்தன் கோயிலரங்கம் பணிவீரே." என்ற திருவரங்கக் கலம்பகச் செய்யுள் காண்க. ... ... (கங)

நாராயண னென்னை யாளி * நரகத்துச்
சேராமல் காக்கும் திருமால் தன் *—பேரான
பேசப்பெறாத பிணச்சமயர் பேசக் கேட்டு *
ஆசைப்பட் டாழ்வார் பலர். (கச)

---

1. பெரிய திருமொழி 3-2-2. 2 பெரிய திருமடல்.

| | | | |
|---|---|---|---|
| நாராயணன் | நாராயணனென்னுந் திருநாம முடையவனும் | பிணம் | ஜீவச்சவ மென்னலாம்படி யுள்ள |
| என்னை ஆளி | (விசேஷித்து) அடியேனை ஆட் கொள்பவனும் | சமயர் | பாஹ்யகுத்ருஷ்டி மதஸ்தர்கள் |
| நரகத்து சேராமல் காக்கும் | (அடியார்களை) நரகம்போக வொட்டாமல் காத்தருள்பவனு மான | பேச | (அபார்த்தங்களைப்) பிதற்ற |
| | | கேட்டு | அவற்றைக் கேட்டு |
| | | பலர் | பலபேர்கள் |
| திருமால் தன் | திருமாலினது | ஆசைப்பட்டு | தாங்களும் அப்படியே பாஹ்ய குத்ருஷ்டிகளா யொழிய விரும்பி |
| பேர் ஆன | திருநாமங்களா யுள்ளவற்றை | | |
| பேச பெறாத | ஸங்கீர்த்தநம் பண்ணும் பாக்கியமற்றவர் களான | ஆழ்வார் | அதோகதியை யடைந்தொழிவர். |

* * *—இவ்வுலகில் தேவதாந்தர பக்தர்களும் உபாயாந்தர நிஷ்டர்களுமே மலிந்து கிடக்கிறார்களே! என்று வயிறெரிந்து பேசுகிறார். ஸகல லோகஸம்ரக்ஷகனாய் நரகநாசனான ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம்பண்ணி வாழலாமாயிருக்க, அப்படி வாழ்வதற்குப் பாக்கியமற்றவர்களாய் ‘ஜீவச்சவங்கள்’ என்று இகழ்வதற்குத் தகுந்தவர்களாயுள்ள மதாந்தரஸ்தர்கள் தேவதாந்தரங்களுக்குச் சிறப்பாகவும் உபாயாந்தரங்களுக்குப் புகழ்ச்சியாகவும் எதையாவது வாய்வந்தபடி பிதற்றிக்கொண்டிருக்கின்றனர்; பல பாவிகள் அப்பிதற்றல்களைக்கேட்டு ‘நாமும் இவர்களைப்போலவே தேவதாந்தர பக்தர்களாயும் உபாயாந்தர நிஷ்டர்களாயும் இருக்கலாமே’ என்று அவர்களுடைய நிலைமையிலே ஆசைகொண்டு இவ்வழியாலே அதோகதியை அடைந்தொழிகின்றதே இவ்வுலகம்!; நல்ல பேச்சுப் பேசினால் செவிமடுத்துக் கேட்கப்பார் ஆருமில்லையே; ஆத்மநாசத்தை விளைக்கவல்ல பேச்சுக்களே பொலிவுபெறுகின்றனவே! என்று பரிதபித்துப் பேசினாராயிற்று. ... ... ... ... (கஏ)

பலதேவ ரேத்தப் படிகடந்தான் பாதம் *
மலரேற விட்டிறைஞ்சி வாழ்த்த—வலராகில் *
மாற்கண்டன் கண்ட வகையே வருங்கண்டீர் *
நீற்கண்டன் கண்ட நிலே. (கரு)

| | | | |
|---|---|---|---|
| பல தேவர் | பல தேவர்கள் | வாழ்த்த வலர் ஆகில் | மங்களாசாஸநம் பண்ண வல்லவர்களானல், |
| ஏத்த | துதிக்கும்படியாக | நீற்கண்டன் கண்ட நிலே | நீலகண்டனுகிய ருத்ரனிடத்தில் காணத்தக்க நிலைமை |
| படி | பூமியை | மாற்கண்டன் கண்ட வகையே | மார்க்கண்டேயன் ப்ரத்யக்ஷமாகக் கண்டவிதமாகவே |
| கடந்தான் | அளந்தவனை ஸர்வேச்வரனுடைய | வரும் கண்டீர் | விளைக்குங்கிடீர். |
| பாதம் | திருவடிகளிலே | | |
| மலர் | புஷ்பங்களை | | |
| ஏற இட்டு | ஸமர்ப்பித்து | | |
| இறைஞ்சி | வணங்கி | | |

* * *—ம்ருகண்டு மஹர்ஷியின் புத்திரனை மார்க்கண்டேயன் குமாரப்பருவத்தில் வீதியில் விளையாடா நிற்கையில் அவ்விளையாட்டைக் கண்டுகொண்டு மாதா பிதாக்களும் மகிழ்ந்திருக்கும்போது ‘இப்பிள்ளைக்கு மரணகாலம் குறுகிவிட்டது’ என்று அசரீரி வாக்கியம் ஒன்று திடீரென்று செவியில் விழப் பெற்ற அத்தாய்தந்தையர் மிகவும் பரிதாபங்கொண்டு நிற்க, அதைக்கண்ட மார்க்கண்டேயன் ‘நீங்கள் சிறிதும் வருந்த வேண்டா; ம்ருத்யுவை நானே பரிஹரித்துக் கொள்ளக்கடவேன்’ என்று சொல்லி அன்று முதலாகப் பரமசிவனை யடிபணிந்து அவனையே முழுமுதற்கடவுளாகப் பிரதிபத்திபண்ணி உபாஸித்து வருகையில், சிவபிரான் “இவனை நம்மை ரக்ஷகனாக நினைத்து நம்மைத் தொழுதுகொண்டு நம் கை பார்த்திருக்கின்றான்; ஸ்ரீமந்நாராயணனே ஸர்வரக்ஷகன் என்கிற பரமார்த்தம் இவனுக்குத் தெரியவில்லை போலும்; அதனை இவனுக்கு நாம் தெரிவிப்பது நன்று; தெரிவியா தொழிந்தோமாகில் அநியாயமாய் இவன் மோசம் போய்விடுவான்; ம்ருத்யுவைத் தப்பவேணுமென்று நம்மை வழிபடுகின்ற இவனுக்கு நாமே ஒரு புகலிடம் காட்டிக்

கொடுத்தோமாக வேணும்" என்றெண்ணி 'மார்க்கண்டேயா! என்னை நீ ரக்ஷகனாக நினைத்துத் தொழுகின்றாய், நானும் நீயும் ஸ்ரீமந்நாராயணனுடைய ரக்ஷ்யவர்க்கத்தில் சேர்ந்தவர்களேயன்றி உனக்கு நான் ரக்ஷகனாகப் ப்ராப்தனல்லேன்; ஸர்வரக்ஷகன் அந்த ஸ்ரீமந்நாராயணனொருவனே; ஆனபின்பு அவனையே அடிபணிந்து நீ அபிமதம் பெறக்கடவாய்' என்று சொல்லி அவனை எம்பெருமான் திருவடிகளிலே கொண்டு நிறுத்தி 'இவனை அநுக்ரஹித்தருளவேணும்' என்று பிரார்த்தித்து, பகவத்க்ருபையாலே நீண்ட ஆயுளைப்பெறுவித்தான் பரமசிவன்—என்பது மார்க்கண்டேயனுடைய வரலாற்றின் சுருக்கம். 1. "புக்கடிமையினால் தன்னைக் கண்ட மார்க்கண்டேயனவனை, நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே" என்றும் 2. "மார்க்கண்டேயனும் கரியே" என்றும், 3. "கண்டுந்தெளிந்துங் கற்றார் கண்ணற்காளன்றி யாவரோ, வண்டுண் மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்கு வாழ்நாள், இண்டைச்சடைமுடி யீசனுடன்கொண்டு உசாச்செல்லக், கொண்டங்குத் தன்னொடுங் கொண்டுடன் சென்றதுணர்ந்துமே" என்றும் திருவாய்மொழியில் நம்மாழ்வாரும், 4. "மன்னு நான் மறை மாமுனி பெற்றமைந்தனை மதியாத வெங்கூற்றந் தன்னை யஞ்சி, நின்சரணெனச் சரணாய்த் தகவில் காலனையுக முனிந்தொழியாப், பின்னையென்றும் நின்திருவடி பிரியாவண்ணமெண்ணிய பேரருள்" என்று பெரிய திருமொழியில் திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்தவை காண்க.

சில புராணங்களில் மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது பரமசிவனே மார்க்கண்டேயனுக்கு அபயமளித்ததாகக் காணப்படினும் மஹாபாரதத்தில் ஆரண்யபர்வத்தில் நூற்றுத் தொண்ணூற்றிரண்டாமத்யாயத்தில் மார்க்கண்டேயன் தானே தருமபுத்திரரை நோக்கிச் சொல்லுமளவில் ஸ்ரீமந்நாராயணனுடைய வார்த்தைகளை அநுவதிக்குமிடத்து "பிதாமஹஸ்ய வசனாத் ... ஶரணாகத:" என்றுள்ள ச்லோகத்தினால் இவன் ஸ்ரீமந்நாராயணனைச் சரணம் புகுந்தவனென்பது நன்கு விளங்கும்.

---

1. திருவாய்மொழி 4—10—8. 2. திருவாய்மொழி 5—2—7.
3. திருவாய்மொழி 7—5—7. 4. பெரியதிருமொழி 5—8—6.

ஸ்ரீபாகவதத்திலும் பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் எட்டாமத்யாயத்தில்—நாராயணம் ஹ்ருஷீகேசம் ஜிஹ்வ ப்ரத்யம் ஸாக்ஷாஜ்ஜயம்" (கக) என்றது காண்க.

மார்க்கண்டேயனுடைய வரலாறு இப்படிப்பட்டதென்று தெரிந்தபின் இனி இப்பாசுரத்தின் கருத்தை ஆராய்மின்;—'உலகளந்த பெருமானுடைய திருவடிகளில் புஷ்பங்களைப் பணிமாறிப் பல்லாண்டுபாட வல்லாரானால் நீற்கண்டன் கண்டநிலை மார்க்கண்டன் கண்ட வகையே வருங்கண்டீர்' என்றால் இதற்குக் கருத்து யாதெனில்; கேண்மின்: மார்க்கண்டேயன் பரமசிவனிடத்தில் (ஸ்ரீவைகுண்ட ப்ராப்தியாகிற) மோக்ஷத்தை விரும்பிப் பணிந்தானல்லன்; வாழ்நாளையே விரும்பிப்பணிந்தான்; அந்தப் பலனையும் அளிக்க யோக்யதையற்றவனாய் அந்த ருத்ரன் ஸ்ரீமந்நாராயணன் பக்கலில் அவனை ஆச்ரயிப்பித்து அப்பெருமான் மூலமாக ரக்ஷணம் செய்வித்தான்; ஆகவே, 'தேவதாந்தரங்கள் பரம்பரயா ஒருகால் ரக்ஷகங்களாகுமேயன்றி ஸாக்ஷாத்தாக ரக்ஷகங்களாக மாட்டா; ஸ்ரீமந்நாராயணனொருவனே ஸாக்ஷாத் ரக்ஷகனாவான்' என்று மார்க்கண்டேயன் கைகண்டறிந்த பரமார்த்தம் தேறினதாகும் என்கை. நேராக எம்பெருமானையே நீங்கள் ஆராதிக்கும் பக்ஷத்தில் மார்க்கண்டேயன் ச்ரமப்பட்டுத் தெரிந்துகொண்ட விஷயம் உங்களுக்கு மூன்றுற முன்னம் எளிதில் தெரிந்துவிட்டதாகத் தேறும் என்றவாறு. நீற்கண்டனாகிய சிவனிடத்துக் காணக்கூடிய நிலைமை [அதாவது—இவன் ஒன்றுக்கும் உதவாதவன் என்று தெரிந்துகொள்ளக்கூடிய ஸ்திதி], அதை மார்க்கண்டேயன் பண்டு தெரிந்துகொண்டான்; நீங்களும் அதை இப்போது தெரிந்து கொண்டீர்களென்னலாம்—ஸாக்ஷாத்தாக நீங்கள் எம்பெருமானையே ஆராதிப்பீர்களாகில், என விரிக்க.

இப்பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் "மார்க்கண்டேயன் மஹாதேவனை மோக்ஷார்த்தமாகச் சென்று ஆச்ரயிக்க, மோக்ஷப்ரதன் ஈச்வரனேயென்று காட்டுமிதுவே உள்ளதென்று ருத்ரன் காட்டக்கண்டு இதுவே இவனுக்குள்ளதென்று மார்க்கண்டேயன் கண்டவகையே ஸித்திக்கும்: அவ்யவஹிதமாக ஸர்வேச்வரன் திருவடிகளை ஆச்ரயிக்க வல்லவராகில்

மார்க்கண்டேயன் கண்டவகையே ஸித்திக்கும்," என்றிருக்கும் ஸ்ரீஸூக்திகளில் உள்ள மோக்ஷ சப்தம் பரமபதாநுபவரூபமான மோக்ஷத்தைக் குறிப்பதன்று; "ஜராமரண மோக்ஷாய" என்று ஒரு தேசவிசேஷத்தைக் குறிக்கொண்டு கீதையிற் சொன்ன கட்டளையிலே, இந்த தேசத்திலேயே ம்ருத்யு இல்லாமையாகிற மோக்ஷத்தைச் சொல்லுகிறதென்று கொள்க. மார்க்கண்டேயன் தான் சிரஞ்ஜீவியா யிருக்கவேணுமென்று உபாஸித்தவனாக இதிஹாஸபுராணங்களிற் கூறப்படுகிறானேயன்றி, பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷத்தை விரும்பினனாகக் கூறப்பட்டிலன். பெரிய திருமொழியில் (5—8—6.) "மன்னு நான்மறை மாமுனி பெற்ற மைந்தனை.........பின்னையென்றும் நின்திருவடி பிரியாவண்ண மெண்ணிய பேரருள்" என்றவிடத்து வியாக்கியானத்திலும் இது ஸ்பஷ்டம். அந்த வியாக்கியானமருளிய பெரியவாச்சான் பிள்ளை தாமே இவ்விடத்தில் "மார்க்கண்டேயன் மஹாதேவனை மோக்ஷார்த்தமாகச் சென்று ஆச்ரயிக்க" என்றது ருத்ரனைப் பற்றின பரிஹாஸோக்தியாக வடுக்கும். "இவன் ஒரு மஹா தேவனும்; இவனிடத்தில் ஒரு பெரிய மோக்ஷத்தை விரும்பி ஒருவன் வந்து பணிந்தானும்; அப்பப்ப! இந்த மோக்ஷம் நம்மாலாகாது என்று வேற்றுவாசல் காட்டினனும்" என்று பரிஹஸித்துச் சொன்னவாறு.

நீற்கண்டன்—'நீலம்' என்ற வடசொல் 'நீல்' என்று சிதைந்து நீற்கண்டனென்றாயிற்று. "நீலார் கண்டத்தம்மான்" என்ற திருவாய்மொழி காண்க. அன்றியே, "நீர்க்கண்டன்" என இடையின ரகரப்பாடங்கொள்ளில், விஷஜலத்தைக் கழுத்திலே கொண்டவனென்றதாகும். மார்க்கண்டன்—'மார்க்கண்டேயன்' என்ற வடசொற் சிதைவு.

இப்பாட்டின் பின்னடிகட்கு மற்றும் பலவகையாகக் கருத்துக்கூற இடமுண்டு. வல்லார்வாய்க் கேட்டுணர்க. (கரு)

நிலைமன்னு மென்னெஞ்ச மந்நான்று * தேவர்
தலைமன்னர் தாமே மாற்றாக *—பலமன்னர்
போர்மாள வெங்கதிரோன் மாயப்பொழில் மறைய *
தேராழியால் மறைத்தாரால். (கசா)

| | | | |
|---|---|---|---|
| அந்நான்று | பாரதயுத்தம் நடந்த அக்காலத்து | மாய | (அகாலத்தில்) அஸ்தமிக்கும்படியாகவும் |
| தேவர் தலை மன்னர் தாமே | தேவாதிதேவனான தானே | பொழில் மறைய | பூமண்டலம் முழுதும் இருள் மூடும்படியாகவும் |
| மாற்று ஆக | எதிரியாயிருந்து கொண்டு | தேர் ஆழியால் | சக்ராயுதத்தினால் |
| பல மன்னர் | பல அரசர்கள் | மறைத்தாரால் | (ஸூர்யனை) மறைத்த பெருமானாலே |
| போர் | யுத்தக்களத்தில் | | |
| மாள | மடிந்து போம்படியாகவும் | என் நெஞ்சம் | எனது (சஞ்சலமான) மனமானது |
| வெம் கதிரோன் | ஸூர்யன் | நிலை மன்னும் | சலிப்பற்று நிலை நிற்கப் பெற்றது. |

* * *—அலைபாய்ந்து கொண்டிருந்த என் மனமானது எம்பெருமான் ஆச்ரிதர்க்காக உழைக்குந் தன்மைகளைக் கேட்டறிந்தவாறே 'இப்படிப்பட்ட எம்பெருமானுக்கு அடிமைப் பட்டவர்களாக நாம் அமைந்துவிட்டோமான பின்பு இனி நமக்கு யாது கவலை?' என்று தேறி நிலைபெற்று விட்டதென்கிறார். "அந்நான்று....தேராழியால் மறைத்தாரால் என்னெஞ்சம் நிலைமன்னும்" என்று அந்வயம்.

"தேவர் தலைமன்னர்" என்றது எம்பெருமானை; "ராஜாதி ராஜஸ்ஸர்வேஷாம்" என்றும் "அயர்வறுமமரர்களதிபதி" என்றும் சொல்லுகிறபடியே.

தாமே மாற்றாக=துர்யோதநாதிகளை எம்பெருமான் பாண்டவர்களின் சத்துருக்களென்று நினைத்திலன்; தன்னுடைய சத்துருக்களென்றே நினைத்தான்; இது எங்ஙனே தெரிகின்றதென்னில்; தூது எழுந்தருளினபோது விதுரர் திருமாளிகையிலே அமுது செய்துபோக, அஃதறிந்த துர்யோதனன் "பீஷ்மத்ரோணாவதிக்ரம்ய மாஞ்சைவ மதுஸூதந। கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷலபோஜநம்?" [பீஷ்மாசார்யரையும் த்ரோணாசார்யரையும் என்னையும் விட்டுப் பள்ளிச்சோற்றை ஏன் உண்டாய்?]

என்று கண்ணபிரானைக் கேட்க, அதற்கு உத்தரமருளிச் செய்வது காண்மின்:—“ த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத் । பாண்டவாந் த்விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்டவா:” [சத்ருவின் சோற்றையும் உண்ணலாகாது, சத்ருவுக்குச் சோறும் இடலாகாது; எனது உயிர்நிலையாகிய பாண்டவர்களை நீ த்வேஷிப்பதனால் எனக்கு சத்துருவே; ஆனதுபற்றியே உன்னிடம் நான் உண்ணவாவில்லை] என்றான். ஆகவே, ஆச்ரிதர்களுடைய பகைவர்களைத் தன்னுடைய பகைவர்களாகவே கொள்ளும் எம்பெருமானுடைய அபிஸந்தியை அறிந்து இங்கு “தாமேமாற்றாக” என்றருளிச் செய்தாரென்க. * “மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன் சிலைவளையத் திண்டேர்மேல் முன்னின்றதுபற்றிப் “பலமன்னர் போர் மாள” என்றருளிச் செய்யப்பட்டது

வெங்கதிரோன்மாயப் பொழில்மறையத் தேராழியால் மறைத்த வரலாறு வருமாறு:—அர்ஜுநன் பதின்மூன்றாநாட் போரில் தன் மகனான அபிமந்யுவைக் கொன்ற ஜயத்ரதனை மறுநாள் ஸூர்யன் அஸ்தமிப்பதற்கு முன்னே கொல்வதாகப் பல பிரதிஜ்ஞைகள் செய்ய, அது நிறைவேறக் கூடாதென்று அந்த ஜயத்ரதனை எதிரிகளால் உட்புக முடியாதபடியாக வ்யூஹத்திலே நிறுத்திக் காப்பாற்றிக் கொண்டிருந்த ராஜாக்கள் முன்னே, ஸ்ரீக்ருஷ்ணன் பகல் நாழிகை முப்பதும் சென்றதாகத் தோற்றும்படி, நினைவறிந்து காரியஞ்செய்யும் தனது சக்கராயுதத்தைக் கொண்டு ஸூர்யனை மறைக்க, ‘ஆதித்யன் அஸ்தமித்தான், இனிநமக்குப் பிராணபயமில்லை; அர்ஜுநன் பிரதிஜ்ஞை செய்திருக்கிறபடியே அக்நி ப்ரவேசம் செய்யப்போவதைக் கண்டு களிப்போம்’ என்றெண்ணி ஜயத்ரதன் வெளிப்பட்டு நின்றவளவிலே கண்ணபிரான் ஸுதர்சநாழ்வானை மீட்டுக்கொள்ள, ஸூர்யன் இன்னும் அஸ்தமிக்கவில்லையென்று உணர்ந்துகொண்ட அர்ஜுநன் உடனே தனது அம்பைக் கொண்டு அந்த ஜயத்ரதனைத் தலையறுத்துவிட்டனன் என்பதாம்.

கோடிஸூர்ய ப்ரகாசமான திருவாழியைக் கொண்டு ஸூர்யனை மறைத்தல் எங்ஙனம் கூடுமெனின்; ஸூர்யனுடைய ஒளி கண்ணாலே காணலாம்படி அளவுபட்டிருத்தலால் இருட்டைப்

போக்கும்; அப்படியல்லாமல் திருச்சக்கரத்தினொளி நேராகக் கண் கொண்டு பார்க்கமுடியாதபடி அளவுபடாத மிக்க பேரொளியைக் கொண்டிருத்தலால் பளபளத்துக் கண்களை இருளப் பண்ணு மெனச் சமாதானங் கூறுவர் பெரியோர்; மற்றுஞ் சில வகையான ஸமாதானங்களும் கூறுவாருளர். .... .... (கசு)

ஆல நிழற்கி ழறநெறியை * நால்வர்க்கு
மேலையுகத் துரைத்தான் மெய்த்தவத்தோன் *—ஞால
மளந்தானை யாழிக் கிடந்தானை * ஆல்மேல்
வளர்ந்தானைத் தான்வணங்கு மாறு. (கஎ)

| | | | |
|---|---|---|---|
| மெய் தவத்தோன் | மெய்யான தவநெறியை யுடையவனான ருத்ரன், | தான் வணங்கும் ஆறு | தான் வழிபடும் மார்க்கமாகிய |
| | | அறம் நெறியை | நல்வழியை |
| ஞாலம் அளந்தானை | உலகளந்தவனும் | மேலை யுகத்து | முன்யுகத்திலே |
| ஆழி கிடந்தானை | க்ஷீராப்திசாயியும் | ஆல நிழல் கிழ் | ஓராலமரத்தின் கிழலிலே |
| ஆல் மேல் வளர்ந்தானை | ஆலிலை மேல் வளர்ந்தவனுமான பெருமானை | நால்வர்க்கு | நான்கு மஹர்ஷிகளுக்கு |
| | | உரைத்தான் | உபதேசித்தான். |

* * *—எம்பெருமானுடைய பரத்துவம் இன்று நான் சொல்லவேணுமோ? ஸர்வஜ்ஞனான சிவபிரான் தானே ஸ்வசிஷ்யர்களுக்கு உபதேசித்த விஷயமன்றோ விது என்கிறார். சிவன் ஒரு காலத்திலே அகஸ்தியர் புலஸ்தியர் தக்ஷர் மார்க்கண்டேயர் என்கிற நான்கு முனிவர்களைச் சிஷ்யர்களாக அமைத்துக்கொண்டு ஒரு ஆலமரத்தின் அடியிலே ஸ்ரீமந்நாராயண தத்வோபதேசம் செய்தானென்று நூல்கள் கூறும். "ஆலமர நீழல் அறம்நால்வர்க் கன்றுரைத்த ஆலமமர் கண்டத்தரன்" என்ற பொய்கையாழ்வார் பாசுரமுங் காண்க.

தாமஸப்ரக்ருதியாய் அஹங்காரிகளில் தலைவனான ருத்ரன் எம்பெருமானுடைய உண்மைநிலையைத் தான் எங்ஙனே அறிந்தான்? அறிந்தாலும் பிறர்க்கு அதை உபதேசிக்கும்படியான

ஏற்றதய பரிபாகத்தை எங்ஙனே பெற்றான்? என்று கேள்வி கேட்பார்க்கு ஸமாதானமாகும்படி "மெய்த்தவத்தோன்" என்ற பெயரால் ருத்ரனைக் குறிப்பிடுகின்றார். எம்பெருமானைப் பற்றின தத்துவவுணர்ச்சி தனக்கு ஸித்திக்கவேணுமென்று மெய்யே தவம் புரிந்து அத்தவப்பயனாக பகவத் தத்வஜ்ஞாநம் பெற்றவன் என்றபடி. அவன் நால்வர்க்கு உரைத்த அர்த்தம் யாதெனில், [தான் வணங்குமாறு.] 'நானும் தலைசாய்க்கப் பெற்ற திருவடித் தாமரைகளையுடையவன் காண்மின் ஸ்ரீமந்நாராயணன்; அவன் உலகங்களையெல்லாம் தன் திருவடிக்கீழ் அகப்படுத்திக் கொண்டவன்; திருப்பாற்கடலிலே உறங்குவான்போல் யோகுசெய்து கொண்டிருந்து ஆர்த்தரக்ஷணம் செய்தருள்பவன்; பிரளய வெள்ளத்திலே நானுமுட்பட ஸகல பதார்த்தங்களும் அழிந்துபோவதா யிருக்கையில் எல்லாவற்றையும் வாரிவிழுங்கி ஆலந்தளிரிலே திருக்கண்வளர்ந்த அற்புத சக்திவாய்ந்தவன்' என்று உபதேசிப்பனும் என்பது பின்னடிகளில் தேறுங்கருத்து. ... .... ... (கஎ)

மாறாய தானவனை வள்ளுகிரால் * மார்விரண்டு
கூறாகக் கீறிய கோளரியை *—வேறாக
ஏத்தி யிருப்பாரை வெல்லுமே * மற்றவரைச்
சாத்தி யிருப்பார் தவம். (கஅ)

| | |
|---|---|
| மாறு ஆய | எதிரிட்டு நின்ற |
| தானவனை | ஹிரண்யாஸுரனுடைய |
| மார்வு | மார்வை |
| வள் உகிரால் | கூர்மையான நகங்களினால் |
| இரண்டு கூறு ஆக கீறிய | இருபிளவாகப் பிளந்த |
| கோள் அரியை | பெருமிடுக்கனான நரசிங்க மூர்த்தியை |

| | |
|---|---|
| வேறு ஆக | விலக்ஷணமாக |
| ஏத்தி இருப்பாரை | துதித்து பகவத் விஷயத்தில் ஆழ்ந்திருக்குமவர்களை, |
| மற்று அவரை சாத்தி இருப்பார் தவம் வெல்லுமே | அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை ஆச்ரயித்திருக்கும் சரமாதிகாரிகளின் நிஷ்டை வென்று விடும். |

* * *—எம்பெருமானிடத்தில் நிஷ்டை யுடையரா யிருப்பதிற்காட்டிலும் பாகவதர்கள் பக்கலில் நிஷ்டை யுடையரா யிருப்

கொண்டு" என்கிற வாக்கியம் ஏட்டுப்பிரதிகளில் காண்பரிது; சேரவும் மாட்டாது. "பகவானையே பஜிக்குமதிலும் ததீயரைப் பற்றுகை சீரியதென்கிறார்" என்னுமளவே உள்ளது. 'ததீயரைப் புருஷகாரமாகப் பற்றுதல் சிறந்தது' என்கிற அர்த்தமன்று இப்பாட்டுக்கு விஷயம்; 'ததீயரை உத்தேச்யராகப் பற்றுதல் சிறந்தது' என்னுமர்த்தமே இப்பாட்டுக்குச் சீவன். ... (கஅ)

தவம்செய்து நான்முகனால் பெற்ற வரத்தை *
அவம்செய்த வாழியா யன்றே *—உவந்தெம்மைக்
காப்பாய்நீ காப்பதனை யாவாய்நீ * வைகுந்த
மீப்பாயு மெவ்வுயிர்க்கும் நீ. (கக)

| | | | |
|---|---|---|---|
| தவம் செய்து | தபஸ்ஸை அநுஷ்டித்து | உவந்து | திருவுள்ளமுகந்து |
| நான்முகனால் | பிரமனிடத்து | காப்பாய் நீ அன்றே | காத்தருள்பவன் நீயேயன்றோ; |
| பெற்ற | (ஹிரண்யன் முதலானவர்கள்) பெற்றுக் கொண்ட | காப்பதனை ஆவாய் நீ அன்றே | காக்க வேணு மென்கிற ஸங்கல்ப முடையவனும் நீயன்றோ; |
| வரத்தை | வரங்களை | எவ் உயிர்க்கும் | (உன்னை ஆச்ரயித்த) ஸகலாத்மாக் களுக்கும் |
| அவம் செய்த | பழுதாக்கின | | |
| ஆழியாய் | திருவாழிக் கையனான பெருமானே! | வைகுந்தம் | பரமபதத்தை |
| | | ஈப்பாயும் | அளிப்பவனும் |
| எம்மை | அடியோங்களை | நீ அன்றே | நீயன்றோ. |

* * *—இரணியன் முதலிய ஆஸுரப்ரக்ருதிகள் பிரமன் முதலிய தேவர்களைக் குறித்து ஸ்வல்பம் ஸ்தோத்ரம் பண்ணிவிட்டால் தலைகால் தெரியாமல் உவந்து எல்லையில்லாதபடி வரங்களை அளித்துவிட்டுப் பிறகு தங்களுக்கே நேரும் அநர்த்தங்களைப் பரிஹரித்துக் கொள்ளமாட்டாமல் கண்ணீர் விழவிட்டுக் கையைப் பிசைந்துகொண்டு நிற்பர்கள் அந்த ப்ரஹ்மாதி தேவர்கள். அன்னவர்களது ஆபத்தை அகற்றியருள்வான் எம்பெருமான்—என்பதை முன்னடிகளில் அருளிச்செய்து, இப்படிப்பட்ட நீயே

எனக்கு எல்லா மங்களங்களையும் தலைக்கட்டித் தந்தருளவேணு மென்கிறார் பின்னடிகளில்.

"தவஞ்செய்து நான்முகனால் பெற்றவரத்தை" என்றவிடத்து 'பின்னோர் பெற்றவரம்' என்பது சொல்லப் படவில்லையாயினும், இரணியன் முதலானோர் பெற்றவரம் எனக்கொள்க. அவர்கள் பெற்றவரத்தைத் தவச் செய்கையாவது—நல்ல உபாயங்களினால் அவ்வவரங்களைக் கொண்டொழித்தல் வரங்கொடுத்த தாங்களே குடியிருப்பை விடுத்து வருந்தினவளவிலே வரம்பெற்றவர்களையுங் கொன்று வரமளித்தவர்களையும் காத்தருள்பவனிறே ஸ்ரீமந்நாராயணன். இதற்கு ஸாமக்ரி திருவாழியாழ்வானென்க. (கக)

நீயே யுலகெல்லாம் நின்னருளே நிற்பனவும் *
நீயே தவத்தேவ தேவனும் *—நீயே
எரிசுடரும் மால்வரையு மெண்டிசையும் * அண்டத்
திரிசுடரு மாய விவை. (உ0)

| | | | |
|---|---|---|---|
| உலகு எல்லாம் நீயே | உலகங்கட்கெல்லாம் நிர்வாஹகன் நீயே ; | எரி சுடரும் | ஜ்வலிக்கின்ற அக்நியும் |
| நிற்பனவும் | உலகங்கள் ஸத்தைபெற்று நிற்பதும் | மால் வரையும் | பெரியகுலபர்வதங் களும் |
| நின் அருளே | உனது கிருபையி னாலேயாம் ; | எண் திசையும் | எட்டுத்திசைகளிலு முள்ள ஸகல பதார்த்தங்களும் |
| தவம் தேவர் தேவனும் நீயே | தவத்தினால் தேவர்களான பிரமன் முதலி யோர்க்குத் தலைவனுந்நீயே ; | அண்டத்து | ஆகாசத்திலுள்ள |
| | | இரு சுடரும் | சந்த்ர ஸூர்யர்களும் |
| | | ஆய இவை | ஆகிய இவையெல்லாம் |
| | | நீயே | நீயேகாண். |

* * *—ஸகலமும் எம்பெருமானாகவே யிருக்கும்படியை யருளிச் செய்கிறாரிதில் 'உலகெல்லாம் நீயே' என்றது—உலகமெல்லாம் உன்னுடைய ஆஜ்ஞையில் அடங்கியுள்ளது என்றபடி. நிற்பனவும் நின்னருளே—அவ்வப்பொருள்கள் அழியாதே ஸத்தை பெற்றிருப்பதும் நித்யமாயிருப்பதும் உன்னருளாலே. தவத் தேவ தேவனும் நீயே—எவ்வளவோ தவங்கள் செய்து ப்ராஜாபதி யென்

ஆம் பசுபதியென்றும் பேர்பெற்றிருக்கும் தேவர்க்கும் தேவன் நீ; "யாம் கடவுளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங் கடவுள் நீ" என்றவாறு. ... ... ... ... (உ०)

இவையா பிலவாய் திறந் தெரிகான்ற *
இவையா வெரிவட்டக் கண்கள் * — இவையா
வெரிபொங்கிக் காட்டு மிமையோர் பெருமான் *
அரிபொங்கிக் காட்டு மழகு. (உக)

| | | | |
|---|---|---|---|
| திறந்து | விரிந்து | பொங்கி | கிளர்ந்து |
| எரி கான்ற | நெருப்பை உமிழ்ந்த | காட்டும் | தோன்றின திருமேனியை யுடையனாய் |
| பிலம் வாய் | பாழி போன்ற பெரியவாய் | இமையோர் பெருமான் | நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான ஸர்வேச்வரன் |
| இவையா | இதுவோ!; | அரி | நரஸிம்ஹமூர்த்தியாய் |
| எரி வட்டம் | கொள்ளிவட்டம் போலே உருண்டு சிவந்து ஜ்வலிக்கிற | பொங்கி | கிளர்ந்து |
| கண்கள் | திருக்கண்கள் | காட்டும் | காட்டின |
| இவையா | இவையோ!; | அழகு | அழகு |
| எரி | அக்நிபோலே | இவையா | என்ன விலக்ஷணம்!. |

* * * — நரஸிம்ஹாவதாரம் என்றைக்கோ நடந்ததாயினும் பாவநாப்ரகர்ஷத்தாலே அது ப்ரத்யக்ஷம்போல் தோற்றுமே ஆழ்வார்க்கு; அப்படியே தோற்ற, ஆச்ரிதர்களுக்கு விரோதம் செய்பவர்மேல் எம்பெருமானுக்கு உண்டாகும் சீற்றம் என்ன அற்புதமானது! என்று அநுஸந்தித்து, 'எம்பெருமானுடைய தெளிவைக் காட்டிலும் சீற்றமே பக்தர்கட்குச் சரணம்' என்னுமர்த்தம் விளங்கும்படியாகப் பேசுகிற பாசுரம் இது.

திறந்து எரிகான்ற பிலவாய் இவையா! — தூணில் நின்றும் தோன்றினவாறே இரணியன்மேலுண்டான அளவுகடந்த சீற்றத்தினால் திருவாயானது விரிந்து அழலை உமிழ்ந்ததே, அதனைப்பேசுகிறார்; நெருப்பைக் கக்கின திருவாய் இதுதானோ என்கிறார். 'கான்ற' என்ற பெயரெச்சத்தில், கால் — வினைப்பகுதி. கானுதல் — வீசுதல்.

எரிவட்டக்கண்கள் இவையா—1. "தூயாய் சுடர் மாமதி போல் உயிர்க்கெல்லாம், தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணா!" என்னும்படி திருக்கண்கள் குளிர்ந்திருப்பது அன்பர்களைக்காணும் போது; அன்பர்க்குத் துன்பம் செய்யுமவர்களைக் காணும்போது கொள்ளிவட்டம்போலே உருண்டு சிவந்து ஜ்வலிக்குமே; அப்படி ஜ்வலித்த திருக்கண்களோ இவை!; இத்திருக்கண்களில் இன்றைக்கும் சீற்றம் மாறவில்லையே யென்கிறார்போலும்.

ஆக முன்னடிகளால், திருவாயும் திருக்கண்களுமாகிற அவயவங்களுக்கு உண்டான விக்ருதியைப் பேசினார். இனி பின்னடிகளால், அவயவியான நரஸிம்ஹமூர்த்தியின் கிளர்ச்சியைப் பேசுகிறார். எரிபோங்கிக் காட்டு மிமையோர்பெருமான்=' எரிபொங்கிக்காட்டும்' என்பதைப் பெருமானுக்கு விசேஷணமாக்கிப் பதவுரை வரையப்பட்டது: அன்றியே, இமையோர்க்கு விசேஷணமாக்கியும் உரைக்கலாம். ஹோமகாலத்திலே வைதிகர் கொடுத்த ஹவிஸ்ஸை அக்நியானது ஸ்வீகரித்துக்கொண்டு பெரிய கிளர்த்தியோடே போய் ஸமர்ப்பிக்கும்படி யிருக்கிற இந்திரன் முதலிய தேவர்களுக்கு நிர்வாஹகன் என்று பொருளாகும். (எரி—அக்நி தேவதையானது, போங்கி—கிளர்ந்து, காட்டும்—ஹவிஸ்ஸைக் கொண்டு கொடுக்கப் பெறுகின்ற, இமையோர் என்கை.)

நரஸிம்ஹமூர்த்தி இவ்வளவு பயங்கரமான வடிவு பெற்றிருந்தாலும் இது சத்துருக்களுக்குப் பயங்கரமேயன்றி அன்பர்கட்குப் பரம போக்யமேயாதலால் "அரிபொங்கிக் காட்டும் அழகு" என்று அழகிலே முடிக்கப்பட்டதென்க. ... .... (உக)

அழகியான் தானே யரியுருவன் தானே *
பழகியான் தாளே பணிமின் *—குழவியாய்த்
தானே ழுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே *
மீனா யுயிரளிக்கும் வித்து. (உஉ)

| | | | |
|---|---|---|---|
| தான் ஏழ் உலகுக்கும் வித்து | தானே ஏழுலகங்களுக்கும் உபாதான காரணமாய் | தன்மைக்கும் | (ரூபம் ரஸம் கந்தம் முதலிய) குணங்களுக்கும் |

1. பெரியதிருமொழி 7—1—9.

| | |
|---|---|
| தன்மையன் | ஆச்ரயபூதனாய் |
| குழவி ஆய் | (ப்ரளயகாலத்தில்) சிறுகுழந்தையாய்க் கொண்டும் |
| மீன் ஆய் | (பின்பொருகால்) மத்ஸ்யரூபியாய்க் கொண்டும் |
| உயிர் அளிக்கும் | ஆத்மாக்களை ரக்ஷிக்கின்றவனான |
| தானே | எம்பெருமான் தானே |
| அரி உருவன் | நரஸிம்ஹவுருக் கொண்டவன் ; |
| தானே அழகியான் | அழகுக்கு எல்லை நிலமாயிருப்பவனும் அவன்றானே ; |
| பழகியான் | புராணபுருஷனாகிய அப்பெருமானுடைய |
| தாளே | திருவடிகளையே |
| பணிமின் | ஆச்ரயியுங்கோள். |

* * *—தானே காரணமாய்க்கொண்டு அடியிலே உலகங்களைப் படைத்து, படைக்கப்பட்ட உலகங்களைப் பாதுகாக்க அவாந்தர ப்ரளயத்தில் ஆலிலைத்துயின்ற அருங்குழந்தையாயும் மந்வந்தர ப்ரளயத்தில் மத்ஸ்யரூபியாயும் தோன்றி ரக்ஷித்து, ப்ரஹ்லாதனை ரக்ஷிக்கைக்காகத் தூணிலே நரஸிம்ஹமாய்த் தோன்றி இரணியனைக் கிழித்துப்போட்டு, இப்படி எல்லா அவஸ்தைகளிலும் ஸகலாத்மாக்களையும் அநாதிகாலமாக ரக்ஷித்துக்கொண்டு வருகிற ஸர்வேச்வரனுடைய திருவடிகளை நீங்கள் ஆச்ரயியுங்கள் என்று பரோபதேசம் பண்ணுகிறார்.

கீழ்ப்பாட்டில் நரஸிம்ஹாவதாரத்தை அநுபவித்தாராதலால் அத்திருக்கோலத்தின் அழகையே மீண்டும் வாய்வெருவுகின்றார் ‘அழகியான் தானே அரியுருவன் தானே’ என்று.

நம்முடைய புத்திக்கு எட்டாத அநாதிகாலந் தொடங்கிப் பலவகைகளால் ரக்ஷணம் செய்துகொண்டு வருதல் பற்றி எம்பெருமானுக்குப் ‘பழகியான்’ என்று திருநாமமிட்டனர்.

**தன்மைக்கும் தன்மையன்**=ஒரு த்ரவ்யத்தைப் பற்றியிருக்கும் குணத்திற்குத் ‘தன்மை’ என்று பெயர்; அக்குணத்திற்கு ஆச்ரயமான குணிக்குத் தன்மையன் என்று பெயர். புஷ்பம் என்கிற த்ரவ்யத்திற்கு மணம் குணமாயிருக்கின்றது; அந்த மணத்திற்குப் புஷ்பம் ஆச்ரயமாகையாலே புஷ்பம் குணியெனப்படும். இப்படியே எங்கும் கண்டுகொள்க. இங்கு “தன்மைக்கும் தன்மையன்” என்றது—நிலம் நீர் தீ கால் முதலிய பூதங்களின் குணங்

களாகிய மணம் சுவை முதலியவற்றுக்கெல்லாம் தானே ஆச்ரயமாயிருப்பவனென்கை. 1. "நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்" என்கிறபடியே பஞ்சபூதாதிகளும் தானேயாயிருப்பவன் என்றவாறு. இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் "தன் பக்கலிலே வைக்கும்" என்று ஒரு வாக்கியம் காண்கிறது: அதனால் "தன் வைக்குந்தன்மையனே" என்றும் பாடமிருந்ததாகத் தெரிகின்றது ஏழுலகுக்கும் தான் வித்தாய், (அவ்வுலகங்களை) தன்—தன்னுள்ளே, வைக்குந்தன்மையனாய்—(பிரளயத்திலழியாதபடி) அடக்கிவைக்கும் குணமுடையவனாய் என்றபடி. .... ... ... (உ௨)

வித்துமிட வேண்டுங் கொலோ விடையடர்த்த *
பத்தி யுழவன் பழம்புனத்து *—மொய்த்தெழுந்த
கார்மேக மன்ன கருமால் திருமேனி *
நீர்வானம் காட்டும் நிகழ்ந்து. (உ௩)

விடை அடர்த்த — (நப்பின்னைப் பிராட்டிக்காக) ரிஷபங்களை வலியடக்கினவனும்

பத்தி உழவன் — (தன்விஷயத்தில் சேதநர்கட்கு) பக்தியுண்டாவதற்குத் தானே முயற்சி செய்பவனுமான எம்பெருமானுடைய

பழம் புனத்து — (ஸம்ஸாரமென்கிற) அநாதியான க்ஷேத்ரத்திலே

வித்தும் இட வேண்டும் கொலோ — (ஸ்வப்ரயத்நமாகிற) விதையை நாம் விதைக்க வேண்டுமோ? [வேண்டா;]

(நம் முயற்சியின்றியே தானே பகவத்விஷயத்தில் ருசி விளைந்தால் திருநாட்டுக்குச் செல்லுமளவும் நாம் எப்படி தரித்திருப்பதென்றால்;)

மொய்த்து எழுந்த — திரண்டு கிளர்ந்த

கார் மேகம் அன்ன — காளமேகம்போன்ற

கரு மால் — கரிய திருமாலினது

திரு மேனி — திருமேனியை

நீர் வானம் — நீர்கொண்டெழுந்த மேகமானது

நிகழ்ந்து — எதிரேநின்று

காட்டும் — காண்பிக்கும்:

[போலிகண்டு நாம் தரித்திருக்கலாமென்றபடி.]

1. திருவாய்மொழி 6—9—1.

* * *—நாம் அறிந்த நிலைமையிலும் அறியாத நிலைமையிலும் எம்பெருமான் தானே நம்முடைய உஜ்ஜீவநத்திற்கு க்ருஷிபண்ணுமவனாயிருக்க, நாமும் ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேணுமோ, வேண்டா என்கிறார்.

ஸ்ரீவைகுண்டத்திலே எம்பெருமான் நித்யர்களோடும் முக்தர்களோடுங் கூடிப் பரிபூர்ணாநுபவம் பெறாநிற்கச் செய்தேயும் அதனால் அப்பெருமான் சிறிதும் மகிழாது, பல பிள்ளைகளைப் பெற்ற ஒரு தகப்பனார், தனது ஒருமகன் மாத்திரம் தேசாந்தரத்திலிருக்க மற்ற எல்லாப் புத்திரர்களோடுங் கூடி வாழாநின்றாலும் அதனால் மகிழ்ச்சியடையாமல் தேசாந்தரத்திலுள்ள புத்திரனது பிரிவையே நினைத்துப் பரிதபிக்குமாபோலே எம்பெருமானும் ஸம்ஸாரிகளான அஸ்மதாதிகளின் பிரிவையே நினைத்துப் பரிதாபமுற்று நம்மோடே கலந்து பரிமாறுவதற்காகக் கரணகளேபரங்களை நமக்குத் தந்தருளி அவற்றைக்கொண்டு நாம் காரியஞ் செய்யும்படியான சக்திவிசேஷங்களையும் நமக்குக் கொடுத்து, மிகவும் அஹங்காரிகளான நம்மெதிரில் தான் ப்ரத்யக்ஷமாகவந்து நின்றால் நாம் பொறாமைகொண்டு ஆணையிட்டாகிலும் தன்னைத் துரத்திவிடுவோமென்றெண்ணி ஒருவர் கண்ணுக்குந் தோற்றாதபடி, உறங்குகிற குழந்தையைத் தாயானவள் முதுகிலே அணைத்துக்கொண்டு கிடக்குமாபோலே எம்பெருமான்றானும் தானறிந்த ஸம்பந்தமே காரணமாக நம்மை விடமாட்டாமல் அந்தர்யாமியாயிருந்து தொடர்ந்துகொண்டு நம்மை ஒருகாலும் கைவிடாமல் ஸத்தையை நோக்கிக்கொண்டு நமக்குத் துணையாய்ப் போருமளவில், நாம் கெட்ட காரியங்களிலே கை வைத்தோமாகில் நம்மைத் திருப்ப மாட்டாமல் அநுமதிபண்ணி உதாஸீநரைப்போலேயிருந்து திருப்புகைக்கு இடம் பார்த்துக்கொண்டேயிருந்து, நாம் செய்கிற தீமைகளிலே ஏதேனுமொரு தீமையாவது § நன்மையென்று பேரிடக்கூடியதாயிருக்குமோவென்று பார்த்துவந்து,

§ விஷயப்ரவணனாய் வேசிகளைப் பின்தொடர்ந்து அடிக்கடி கோவில்களிலே நுழைந்து புறப்படுகை, வயலில் பட்டிமேய்ந்த பசுவை அடிப்பதாகத் துரத்திக்கொண்டு போம்போது அது ஒரு கோவிலை ப்ரதக்ஷிணம் பண்ணிக்கொண்டு ஓடுகிறவளவிலே அதைவிடமாட்டாத ஆக்ரஹத்தாலே தானும் அக்கோவிலை வலஞ்செய்கை; (சிசுபாலாதிகளைப்போலே) நிந்தை செய்வதற்காகத் திருநாமங்களைச் சொல்லுகை முதலியன.

அப்படிப்பட்ட நிலைகளைக் கண்டுபிடித்து 'என் ஊரைச் சொன்னாய், என் பேரைச் சொன்னாய், என்னடியாரை ரக்ஷித்தாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கு ஒதுங்க நிழலைக் கொடுத்தாய்' என்றிப்படி சில ஸுக்ருதங்களை ஏறிட்டு மடிமாங்காயிட்டு யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம் என்கிற ஸுக்ருத விசேஷங்களைத் தானே கல்பித்தும் அப்படி கல்பித்தவற்றை ஒன்றை அனேகமாக்கியும் நடத்திக்கொண்டு போருவன்—என்பது சாஸ்த்ரமுகத்தால் நாம் கண்டறிந்த விஷயம்.

யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம் எனப்படுகிற ஸுக்ருதங்கள் எவையென்னில்;—அவ்வூர் இவ்வூர் என்று நாம் பல ஊர்களையும் வம்புக்காகச் சொல்லுமளவிலே 'குருவிமலை, பரங்கிமலை, திருவேங்கடமலை' என்று வாயில் வந்துவிட்டால் இவ்வளவே பற்றாசாக 'என் ஊரைச் சொன்னான்' என்று எம்பெருமான் எழுதிக்கொள்வன்; அவன் இவன் என்று பல பேர்களையும் சொல்லிக்கொண்டு வருமடைவிலே சில பகவந்நாமங்களும் கலந்து வந்துவிட்டால் 'என் பேரைச் சொன்னான்' என்று கணக்கிடுவன்; சில பாகவதர்கள் காட்டிலே வழிபோகாநிற்கையில் அவர்களை ஹிம்ஸித்துக் கொள்ளையடிக்கவேணுமென்று சில கள்ளர் முயன்றிருக்குமளவிலே, ஏதோ தன் காரியமாக வழிபோகிற ஒரு சேவகன் அவர்கள்பின்னே தென்பட, அவனை அந்த பாகவதர்களின் ரக்ஷணத்திற்காக வந்தவனாக நினைத்து அக்கள்ளர் அஞ்சி அப்பால்போய்விட அதுவே பற்றாசாக அந்த சேவகனை 'என்னடியாரை நோக்கினவன் இவன்' என்று எழுதிக்கொள்வன்; ஒருவன் வேனிற் காலத்திலே தன் வயல் தீய்ந்து போகாநிற்கையில் நீருள்ளவிடத்தில் நின்றும் வயலிலே பாய நெடுந்தூரத்திலே ஏற்றமிட்டு இறையாநிற்க, பாலை நிலத்தில் நடந்து விடாய்த்து இளைத்துவருகிற சில பாகவதர்கள் அவனறியாமல் அந்த நீரிலே இளைப்பாறிப் போனால் அதுகாரணமாக 'என்னடியாருடைய விடாயைத் தீர்த்தானிவன்' என்று கணக்கிடுவன். ஒருவன் தனக்குச் சூதுசதுரங்கமாடுவதற்கும் காற்று வேண்டினபோது வந்து உலாவுகைக்கும் புறந்திண்ணை கட்டிவைக்க, மழையிலோ வெய்யிலிலோ வருந்தின சில பாகவதர்கள் அத்திண்ணையிலேவந்து ஒதுங்கியிருந்துபோக,

அதுகொண்டு 'என்னடியார்க்கு ஓதுங்க நிழலைக் கொடுத்தான்' என்று கணக்கிடுவன்; இப்படியாக நாமறியாமல் எம்பெருமானே ஏறிடும் ஸுக்ருதங்களே யாத்ருச்சிகம், ப்ராஸங்கிகம், ஆநுஷங்கிகம் எனப்படும்.

இப்படி அஜ்ஞாத ஸுக்ருதங்களையாகிலும் ஹேதுவாகக் கொண்டு எம்பெருமான் கடாக்ஷிப்பனாகில் அந்த கடாக்ஷம் ஸஹேதுகமாகாதோவென்னில், ஆகாது; இந்த யாத்ருச்சிகம் முதலிய ஸுக்ருதங்களுமுட்பட நமக்குண்டாம்படி ஆதியிலே கரணகளேபரங்களைக் கொடுத்து ஸ்ருஷ்டித்தவன் எம்பெருமானுகையாலே, கடாக்ஷஹேதுவாகச் சொன்ன அஜ்ஞாதஸுக்ருதங்களும் அவனுடைய க்ருஷிபலமேயாம்.

[ஸ்ருஷ்டிப்பது சேதநருடைய கருமங்களுக்குத் தகுதியாகவன்றோவென்னில், ஸ்ருஷ்டிப்பது கருமத்தைக் கடாக்ஷித்தேயாகிலும் அவரவர்களுடைய கருமபரிபாகத்துக்குத் தகுந்தபடி வெவ்வேறு காலங்களிலே ஸ்ருஷ்டிக்கவேண்டியிருக்க, ஏககாலத்திலே ஸ்ருஷ்டித்தது அநுக்ரஹ காரியமென்பர்.]

அசித்தோடு வாசியற்றுக் கிடக்கிற நிலைமையிலே உஜ்ஜீவநத்துக்குக் கருவியான கரணகளேபரங்களைப் பேரருளாலே அவன் தந்தபடியை அநுஸந்தித்தால், நம் உஜ்ஜீவனத்தில் அவன் செய்தபடி பார்த்துக்கொண்டிருப்பது தவிர நாம் ஒரு முயற்சியும் பண்ணவேண்டாதபடியாயிருக்கும். புதிசாகத் தரிசுதிருத்தினதல்லாமல் பழையதாக உழுவது நடுவது விளைவதாய்க்கொண்டு போருகிற ஒரு க்ஷேத்ரத்திலே உழவனானவன் அதுக்கென்று ஒரு க்ருஷியும் பண்ணுதிருந்தாலும் உதிர்ந்ததானியமே முளைத்து விளைந்து தலைக்கட்டுமாபோலே, அஜ்ஞாத ஸுக்ருதங்கள் நம்மிடத்திலே தன்னடையே விளையும்படியாகவன்றே பத்தியுழவனென்று சொல்லப்படுகிற ஈச்வரன் அநாதிஸம்ஸாரத்தை ஸ்ருஷ்டித்துத் திருத்தி நடத்திப் போருவது.

இப்படிப்பட்ட பத்தியுழவன் பழம்புனத்தில் நாமும் வித்து இடவேண்டுமோ?-நாமும் உபாயாநுஷ்டானம் பண்ணவேணுமோ? எம்பெருமானுடைய ப்ரவ்ருத்திக்கு விரோதியான நம்முடைய ப்ர

விருத்தியை நாம் நிறுத்திக்கொள்வதன்றோ நமக்கு நன்மை என்ற வாறு.

விடையடர்த்த வரலாறு :—கும்பனென்னும் இடையர் தலைவனது மகளும், நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யார்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழெருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்து கொண்டான் என்பதாம்.

ஆழ்வார் எம்பெருமானுக்குப் பத்தியுழவன் என்று திருநாமமிட்ட அழகை என்சொல்வோம்!. தன் விஷயத்தில் நமக்கு பக்தியுண்டாவதற்குத் தானே க்ருஷி பண்ணுகிறான் எம்பெருமான். அந்த க்ருஷியாவது ஸ்ருஷ்டியவதாராதிகள் என்க.

இனி முன்னடிகட்கும் பின்னடிகட்கும் ஸங்கதி [சேர்த்தி] யாதென்னில்,—பத்தியுழவன் பழம்புனத்தில் நாம் வித்து இட வேண்டாவாகில் அப்படியே ஆகுக ; எம்பெருமானே க்ருஷி பண்ணட்டும் ; அந்த க்ருஷி பலித்து நாம் பரமபதஞ்சென்று நித்யாநுபவம் பண்ணுவதென்பது விரைவில் நடைபெறக் கூடியதன்றே ; சிறிது காலவிளம்பமாகுமே ; அதுவரையில் நமக்குப் போது போக்கு யாதென்ன, 1. "பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற, காவி மலரென்றுங் காண்டோறும்—பாவியேன் மெல்லாவி மெய் மிகவே பூரிக்கும், அவ்வவையெல்லாம் பிரானுருவேயென்று" என்றும் 2. "மேகங்களோ வுரையீர், திருமால் திருமேனியொக்கும் யோகங்கள் உங்களுக்கெவ்வாறு பெற்றீர் ?" என்றும், 3. "ஒக்குமம்மானுருவமென்று உள்ளங்குழைந்து நாணாளும், தொக்க மேகப் பல்குழாங்கள் காணுந்தோறும்" என்றும் சொல்லுகிறபடியே போலிகண்டு போதுபோக்க ஸாமக்ரி உண்டு என்கிறார்.

"ருசி பிறந்தபின்பு ப்ராப்தியளவும் நாம் தரிக்கைக்கு அவன் திருமேனிக்குப் போலியுண்டென்கை" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியும் நோக்கத்தக்கது.

---

1. பெரிய திருவந்தாதி. 2. திருவிருத்தம். 3. திருவாய்மொழி 8—5.

இப்பாட்டின் முதலடியின் மூன்று சீர்களாகிய "வித்துமிட வேண்டுங்கொல்லோ" என்றவளவு திருக்குறளில் எடுத்தாளப்பட்டுள்ளது; விருந்தோம்பல் என்னும் அதிகாரத்தில் "வித்துமிட வேண்டுங்கொல்லோ விருந்தோம்பி, மிச்சின் மிசைவான் புலம்" (5) என்றகுறள் காண்க. .... ... ... (உ௩)

நிகழ்ந்தாய் பால்பொன் பசுப்புக் கார்வண்ணம் நான்கும் *
இகழ்ந்தா யிருவரையும் வீய * —புகழ்ந்தாய்
சினப்போர்ச் சுவேதனைச் சேனாபதியாய் *
மனப்போர் முடிக்கும் வகை. (உ௪)

| | | | |
|---|---|---|---|
| பால் பொன் பசுப்பு கார் நான்கு வண்ணமும் | (வெண்மை சிவப்பு பசுமை கறுப்பு ஆகிற நான்கு வர்ணங்களையு முடையனாய்க் கொண்டு | மனம் | (த்ரௌபதியின் கூந்தலை முடிப்பிக்க வேணுமென்று) மநோரதங் கொண்டிருந்த படியே |
| நிகழ்ந்தாய் | (நான்கு யுகங்களிலும்) அவதரித்தாய்; | போர் | பாரதயுத்தம் |
| இருவரையும் | மதுகைடபர்களாகிற இரண்டு அசுரர்கள் | முடிக்கும் வகை | தலைக்கட்டும்படி |
| வீய | தொலையும்படி | சினம் போர் சுவேதனை | சீறிக்கொண்டு யுத்தத்தில் இழியும் ஆண்புலியான அர்ஜுனனை |
| இகழ்ந்தாய் | வெறுத்தாய்; | | |
| சேனாபதி ஆய் | அர்ஜுனனுடைய ஸேனைக்கு ரக்ஷகனாய்க் கொண்டு | புகழ்ந்தாய் | கொண்டாடினாய். |

* * *—க்ருதம் முதலிய யுகங்களிலே சேதநர் தமது ஸத்வம் முதலிய குணங்கட்குத் தகுதியாக வெண்மை முதலிய வர்ணங்களை விரும்புகையாலே அவ்வக் காலங்களிலே அந்தந்த நிறங்களைப் பரிக்ரஹித்து முகங்காட்டுகிறபடியை முதலடியிற் பேசுகிறார். கிருதயுகத்திலுள்ளவர்கள் ஸத்வகுணம் நிறைந்தவர்களாய் சுத்தமான நிறத்தை உகக்குமவர்களாகையாலே அவர்கட்

காக எம்பெருமான் பால்போன்ற நிறத்தைக் கொள்வன்; த்ரேதா யுகத்திலே சிவந்த திருநிறத்தைக் கொள்வன்; த்வாபரயுகத்தில் பசுமை நிறத்தைக் கொள்வன்; கலியுகத்தில் எந்த நிறத்தைக் கொண்டாலும் ஈடுபடுவாரில்லாமையாலே இயற்கையான நீல நிறத்தைக் கொள்வன் என்க. இவ்வாழ்வார் திருச்சந்த விருத்தத்திலும் "பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம், போலுநீர்மை பொற்புடைத்தடத்துவண்டு விண்டுலாம், நீலநீர்மையென்றிவை நிறைந்த காலநான்குமாம்" என்றருளிச் செய்த பாசுரம் காண்க.

இருவரையும் வீய இகழ்ந்தாய்—மதுகைடபரென்னும் இரண்டு அஸுரர்களையும் ஒழித்தாய் என்கை. அன்றியே; 1. "கொல்லா மாக்கோல் கொலைசெய்து பாரதப்போர், எல்லாச்சேனையு மிரு நிலத்து அவித்த வெந்தாய்" என்கிறபடியே கௌரவர் பாண்டவர் ஆகிற இருவகுப்பிலுமுள்ள சேனைகளையும் தொலைத்தமையைச் சொல்லுகிறதாகவுங் கொள்வர். பாண்டவ பக்ஷத்திலும் ஸேனைகளைத் தொலைத்ததுண்டோவென்று கேட்பர் சிலர்; 1. "கொல்லாமாக்கோல்" என்ற பாசுரத்தின் வியாக்கியானத்திலே— "பாரதஸமரத்திலே துர்வர்க்கமடையத் திரண்டதிறே உபய ஸேனையிலும்; இங்கே நாலைந்துபேரும் அங்கே ஒன்றிரண்டு பேருமொழிய முடித்துப் போகட்டாயிற்று." என்றருளிச் செய்யப்பட்டுள்ளது காண்க. பஞ்ச பாண்டவர்களையும் அச்வத்தாம, க்ருபாசார்ய, க்ருதவர்மாக்களையும் தவிர்த்து மற்றெல்லாவற்றையும் தொலைத்து மண்ணின்பாரம் நீக்கினனென்க.

"உற்றாரையெல்லா முடன்கொன் றரசாளப் பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்" என்று சொல்லிப் போரொழிந்த அர்ஜுநனுக்குக் கீதையை உபதேசித்து அவனைப் போர்புரிய உடன்படுத்தினனாதலால் புகழ்ந்தாய் சினப்போர்ச்சுவேதனை எனப்பட்டது. சுவேதன்—ச்வேதவாஹநன் என்றபடி. வெள்ளைக் குதிரைபூண்டதேரை வாஹனமாகவுடையவன் என்கை. வெள்ளைப் புரவிக்குரக்கு வெல்கொடித் தேர்மிசை முன்பு நின்று" என்ற பெரியாழ்வார் திருமொழி காண்க. .... .... (உச)

1. திருவாய்மொழி 3—2—3.

வகையால் மதியாது மண்கொண்டாய் * மற்றும்
வகையால் வருவதொன் றுண்டே *—வகையால்
வயிரம் குழைத்துண்ணும் மாவலி தானென்னும்
வயிர வழக்கொழித்தாய் மற்று. (உரு)

| | |
|---|---|
| மதியாது | உன் மேன்மையைச் சிறிதும் நினையாமல் |
| வகையால் | நல்ல உபாயங்களாலே |
| மண் கொண்டாய் | (மாவலியிடத்தில் இரந்து) பூமியை ஸ்வாதீனப் படுத்திக் கொண்டாய்; |
| மற்றும் | அதற்குமேலும், |
| வயிரம் | வயிரமாகிற ரத்னத்தை |
| வகையால் | ஔஷதாதி உபாயங்களாலே |
| குழைத்து | இளகச்செய்து |
| உண்ணும் | உண்பவனும் |
| | (அதனால்) |

| | |
|---|---|
| தான் என்னும் | தனக்குமேற்பட்ட பலிஷ்டர் ஆருமில்லையென்று அஹங்காரங் கொண்டிருப்பவனுமான |
| மாவலி | மஹாபலியினுடைய |
| வயிரம் வழக்கு | சத்ருத்வமுறையை |
| ஒழித்தாய் | போக்கினாய்; |
| வகையால் | இப்படிப்பட்ட உனது காரியங்களினால் |
| வருவது ஒன்று உண்டே | உனக்கு விளைப்பதொருபலன் உண்டோ? (எல்லாம் ஆச்ரிதர்க்காகச் செய்கிறாயித்தனை.) |

* * *—எம்பெருமான் செய்தருளுங் காரியங்களெல்லாம் அடியார்களுடைய பிரயோஜனத்திற்காகவேயன்றி ஸ்வப்ரயோஜனத்திற்காக ஒரு காரியமும் செய்வதில்லை யென்பதை வெளியிடும் பாசுரம் இது.

மதியாது வகையால் மண்கொண்டாய்=‘உபயவிபூதிநாதனாயிருக்கிற நாம் யாசகனாகப் போகலாமோ’ என்று தன் மேன்மையைச் சிறிதும் பாராமல் ‘ஆச்ரிதனான இந்திரனுக்குக் காரியம் தலைக்கட்டுமளவே வேண்டியது’ என்று அதனையே பார்த்து யாசகனாய்ச் செல்லுகையாகிற உபாயத்தினால் பூமியையெல்லாம் ஸ்வாதீநப்படுத்திக் கொண்டாய்.

இரண்டாமடியை முடிவில் அந்வயித்துக் கொள்க.

பொருட்டுப் பலகாலம் இவ்வுலகில் உயிர்த்திருந்து பெருந்தவம் புரிதற்கு உபயோகமாக நீண்ட ஆயுளையேனும் அடியேற்கு அளித்தருள்' என்று பிரார்த்தித்தார். அதுகேட்டுக் கைலாஸபதி 'அது கருமாநுஸாரமாக நடப்பதேயன்றி வளர்த்தத்தக்கதன்று; வேறு வேண்டுவதை விளம்புவாய்' என்னலும், திருமழிசைப்பிரான் குறுமுறுவலோடு இகழ்ச்சியாய் 'இவ்வூசியின் பின்னே நூல் வரும்படி வரம் தந்தருளீர்' என்று விநோதமாகச்சொல்ல, அப்பரிஹாஸவார்த்தை செவிப்பட்டவுடனே கடுஞ்சினங்கொண்ட நெற்றிக்கண்ணான் 'இச்செருக்குடையானை இப்பொழுதே அநங்கனைப்போலாக்கிவிடுகிறேன்' என்று தனது நெற்றியிலுள்ள நெருப்புக் கண்ணைத்திறந்துவிட்டார்; அதில் நின்றும் புகையும் பொறியுமாகக் கிளர்ந்தெழுந்த காலாக்நியைக்கண்டு திருமழிசைப்பிரான் சிறிதும் கலங்காமல் 'இந்திரன்போல உடம்பு முழுதும் கண்காட்டினாலும் அஞ்சுவேனல்லேன்' என்று சொல்லித் தமது வலத்திருவடியின் பெருவிரலிலுள்ளதொரு கண்ணைத்திறந்துவிட, அதில் நின்றும் ஒரு பெருந்தீ எழுந்து ஊழித்தீயினும் பன்மடங்கு மேலிட்டு அவ்வனலை அடக்கத்தொடங்கிற்று. அவ்வளவில் அரன் அக்கடுநெருப்பை அவிக்கும்படி தனது சடையிலுள்ள பல மேகங்களை ஏவிவிட, அவையும் அங்ஙனமே கல்பாந்த காலத்திற்போலச் சோனைமழை பொழிந்து பெருவெள்ளங்கோக்கவும் ஆழ்வார் சிறிதும் சலியாமல் பகவத்பக்தியிலே ஊன்றியிருந்தார்; அதுகண்டு முக்கண்மூர்த்தி மிக வியந்து இவர்க்கு 'பக்திஸாரர்' என்று திருநாமஞ்சாத்தி இவரது வைபவத்தைக் கொண்டாடித் தன்னிடத்திற்குத் திரும்பிப்போயினன் என்ற வரலாறு இவ்விடத்தில் ஸ்மரிக்கத்தக்கது. இவ்வளவையும் திருவுள்ளம்பற்றியே ஆழ்வார் இங்கு "கற்றைச்சடையான் கரிக்கண்டாய்" என்கிறார் என்று கொள்ளலாம். கரி—ஸாக்ஷி; நேரில் கண்ணால் பார்த்தவன் என்கை.

இவ்வாழ்வார் "சாக்கியங்கற்றோம் சமண்கற்றோம் சங்கரனாராக்கிய ஆகமநூலாராய்ந்தோம்" என்றபடியே பல மதங்களினுள்ளும் புகுந்து அந்தந்த மதஸ்தராகவே இருந்தவராதலால், இப்படி பலமதங்களிலும் புகுந்து அவையெல்லாம் அஸார

மென்று விட்டொழிந்து ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு வந்து சேர்ந்ததுபோல, இந்த ஸத்ஸம்ப்ரதாயத்தையும் விட்டு வேறொரு தீயமதத்தில் போய்ச் சேரும்படியான தௌர்ப்பாக்கியம் இவ்விருள் தருமாஞாலத்தின் காரியமாக நமக்கு நேர்ந்துவிடுமோ என்னவோ! என்று அஞ்சி, இந்த நிஷ்டையே நிலைத்திருக்குமாறு கடாக்ஷித்தருளவேணுமென்று பின்னடிகளால் எம்பெருமான் றன்னையே பிரார்த்தித்தாராயிற்று. .... ... (உ௬)

மாருன் புகுந்த மடநெஞ்சம் * மற்றதுவும்
பேருகக் கொள்வனோ பேதைகாள் *—நீருடி
தான்காண மாட்டாத தாரகல சேவடியை *
யான்காண வல்லேற் கிது. (உ௭)

| | | | |
|---|---|---|---|
| பேதைகாள் | மூடர்களே!, | காண மாட்டாத | ஸேவிக்க முடியாததும் |
| மால் | எம்பெருமான் | | |
| தான் புகுந்த | தானேமேல்விழுந்து வந்து புகுந்திருக்கப்பெற்ற | தார் | புஷ்பங்களினால் அர்ச்சிக்கப் பட்டதும் |
| மட நெஞ்சம் | (எனது) விதேய மான நெஞ்சிலே | அகலம் | போக்யதையில் அளவிறந்ததுமான |
| மற்றதுவும் | வேறொன்றை | சே அடியை | திருவடியை |
| பேறு ஆக | புருஷார்த்தமாக | | |
| கொள்வனோ | நான் கொள்வனோ? [கொள்ள மாட்டேன்;] | யான் காண வல்லேற்கு | ஸேவிக்கும்படியான பாக்கியம் பெற்ற எனக்கு |
| நீருடி தான் | நீறு பூசின உடம்பையுடையனான ருத்ரனும் | இது | இப்படிப்பட்ட அத்யவஸாயமுண்டாயிற்று. |

* * *—தம்முடைய அத்யவஸாயத்தையும் அதன் அடியையும் அருளிச்செய்கிறார். உலகத்தில் ஒவ்வொருவர் ஒவ்வொன்றைப் புருஷார்த்தமாகப் பேணுவர்; ஐச்வர்யத்தை நச்சுவர் சிலர்; ஸ்வர்க்கலோக போகங்களை அபேக்ஷிப்பர் சிலர்; கைவல்யத்தைக் காதலிப்பர் சிலர். இப்படி ஒவ்வொருவர்க்கு ஒவ்வொன்று பேருக இருக்கும்; எனக்கோவென்னில்; இவையொன்றும் விருப்பமல்ல.

எம்பெருமான்றானே ‘இவ்வாழ்வாருடைய நெஞ்சகம் நமக்கு இருப்பிடமாகக்கிடைக்குமா!’ என்று காதலித்துத் தன்பேறாக வந்து சேரப்பெற்ற எனது நெஞ்சில் அப்பெருமானுடைய நித்ய வாஸமொன்று தவிர மற்றெதுவும் புருஷார்த்தமாகக் கருதப்பட மாட்டாது, என்று தமது அத்யவஸாயத்தை முன்னடிகளிற் கூறினர். இப்படிப்பட்ட அத்யவஸாயம் தமக்கு உண்டான படியைப் பேசுகிறார் பின்னடிகளில்: நீறாடிதான் இத்யாதியால். 1. “பெண்ணுலாஞ்சடையினானும் பிரமனும் முன்னைக்காண்பான், எண்ணிலாவூழியூழி தவஞ்செய்தார் வெள்கிநிற்ப” என்கிறபடியே சடையன்தானும் நெடுங்காலம் தவம்புரிந்தும் எந்தத் திருவடிகளை ஸேவிக்கப்பெற்றிலனோ அந்தத் திருவடிகள் எனக்கு ஸ்வயமாகவே வந்து ஸேவைஸாதிக்கப்பெற்றதனால் ‘இத்திருவடி தவிர வேறொன்றும் நமக்குப் ப்ராப்யமல்ல’ என்கிற இந்த அத்யவஸாயம் உண்டாயிற்று என்றவாறு.

“காணவல்ல எனக்கு” எனப்பிரயோகிக்கவேண்டுமிடத்து “யான்காண வல்லேற்கு” எனப் பிரயோகிக்கப்பட்டது. (உஉ)

இதுவிலங்கை யீடழியக் கட்டிய சேது *
இதுவிலங்கு வாலியை வீழ்த்தது *—இதுவிலங்கை
தானொடுங்க வில்நுடங்கத் தண்டா ரிராவணனை *
ஊனொடுங்க வெய்தா னுகப்பு. (உ௩)

| | |
|---|---|
| இலங்கை | லங்காபுரியானது |
| ஈடு அழிய | சீர்குலையும் படியாக |
| கட்டிய | (வானரசேனையைத் துணைகொண்டு) கட்டின |
| சேது | திருவணை |
| இது | இதுகாண்மின்; |
| விலங்கு | திர்யக்யோனியிற் பிறந்தவனான |
| வாலியை | வாலியை |
| வீழ்த்தது | முடித்தது |
| இது | இப்போது நடந்த செயல்காண்மின்; |
| இலங்கை தான் | லங்காபுரியானது |
| ஒடுங்க | அழியும்படியாகவும் |
| வில் நுடங்க | சார்ங்கவில் வளையும் படியாகவும், |
| தண் தார் இராவணனை ஊன் ஒடுங்க | (அலங்காரமாகக்) குளிர்ந்த பூமாலை யணிந்து கொண்டிருந்த இராவணனுடைய உடல் ஒழியும்படியாகவும் |

1. திருமாலை. 44.

| | | | |
|---|---|---|---|
| எய்தான் | அம்புகளைச் செலுத்தினை இராமபிரானுடைய | உகப்பு | லீலையான வியாபாரம் |
| | | இது | இது காண்மின். |

* * *—இராமபிரானுடைய சில வீரச்செயல்களைப்பேசியநுபவிக்கிறார்.

இலங்கை ஈடழியக்கட்டிய சேது இது=விபீஷணாழ்வான் இராமபிரான் பக்கல் வந்து சேர்ந்து உய்ந்தபின் பெருமானைப் பார்த்து 'ஸ்வாமிந்! இந்த நம்முடைய ஸேனைகள் கடலைக்கடந்து அப்பாற் செல்லவேண்டுமாதலால் அதற்காகக் கடலரசனை நீர் சரணம்புகவேணும்' என்ன, இராமபிரான் 'கடலைக்கடக்க உபாயம் சொல்லவேண்டும்' என்று கடலரசனாகிய வருணனைப் பிரார்த்தித்துத் தர்ப்பசயனத்தில் படுத்து மூன்றுநாளளவும் ப்ராயோபவேசமாகக்கிடக்க, ஸமுத்ரராஜன் அப்பெருமானது மஹிமையைக்கருதாமல் உபேக்ஷையாயிருந்துவிடவே ஸ்ரீராமன் அதுகண்டு கோபங்கொண்டு 'அணைவரும் நடந்தே செல்லும்படி கடலை வற்றச்செய்வேன்' என்று ஆக்நேயாஸ்த்ரத்தைத் தொடுக்கத்தொடங்கிய வளவிலே வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து இராமபிரானைச் சரணமடைந்து கடல்வடிவமான தன்மேல் அணைகட்டுதற்கு உடன்பட்டு, நளன் கையினால் நீரில்போட்ட கற்களும் மிதக்குமென்று அவனுக்கு அவன் தகப்பனார் வரமளித்திருக்கிறாராகையால் அவனைக்கொண்டு ஸேதுகட்டவேணுமென்று சொல்லிவிட்டு மறைந்துவிட்டான்; இராகவனும் அப்படியே மற்ற வானரங்கள் சுற்றுமுள்ள மலைகளைப்பிடுங்கிக்கொண்டு வந்து நளன் கையில் கொடுக்கச்செய்து நளன் கையினால் அம்மலைகளை நீரில் போகடுவித்து ஸேதுகட்டுவித்தான்—என்பது திருவணைகட்டின வரலாறு. இது என்றைக்கோ நிகழ்ந்ததாயினும் மயர்வற மதிநலமருளப்பெற்ற இவ்வாழ்வாரது அகக்கண்ணுக்கு ஸ்பஷ்டமாகத் தோற்றி விளங்குதலால் "கட்டிய சேது இது" என்று கண்முன்னே கண்டதுபோலப் பேசுகிறார்.

இது விலங்கு வாலியை வீழ்த்தது—ஸுக்ரீவன் இராமபிரானோடு ஸ்நேஹஞ்செய்துகொண்டு அவனது நியமனத்தினால் கிஷ்கிந்தைக்குச்சென்று வீரநாதஞ்செய்ய, அதைக்கேட்டு வாலி பொறுக்கமாட்டாதவனாய் வெளிக்கிளம்பிவந்து ஸுக்ரீவனோடு யுத்தஞ்செய்யத்தொடங்க, அப்போது இராமன் அவ்விருவரில்

இன்னான் ஸுக்ரீவன் இன்னான் வாலியென்று வாசி கண்டறியாமையால் அம்பு எய்யாதொழியவே, ஸுக்ரீவன் வாலியிடத்துப் பராஜயப்பட்டு வேதனை பொறுக்கமாட்டாமல் ரிச்யமூகபர்வதத்துக்கே மீண்டு ஓடிவந்து சேர, இராமன் அம்பு எய்யாத காரணங் கூறி 'இப்போது உனக்கு ஓர் அடையாளமிடுகிறேன்; மறுபடியும் வாலியை யுத்தத்துக்கு அழை' என்று சொல்லி அவன் கழுத்தில் ஒரு பூமாலையைச்சுற்றிக் கிஷ்கிந்தைக்குப் போகவிட, ஸுக்ரீவன் சென்று முன்போலவே வீரநாதஞ்செய்ய, அதைக்கேட்டு வாலி போருக்குப்புறப்பட, அப்போது அவன் மனைவியாகிய தாரை 'ஓ பிராணநாதா! சற்று முன்பு அடிபட்டு ஓடினவன் திரும்பி இப்போதே சண்டைக்கு அழைக்கின்றமையால் இது வெறுமனன்று; ஏதோ ஒரு பெருத்த ஸஹாயத்தை அண்டைகொண்டு வந்திருக்கவேணும்; நீ இப்போது திடீரென்று போர்க்குப் புறப்படுவது தகுதியன்று' என்று சொல்லித் தடுத்தவளவிலும் அவள் வார்த்தையைச் செவியிலும் கொள்ளாமல் சடக்கெனப் புறப்பட்டுவந்து ஸுக்ரீவனுடன் பிணங்கினான்; அந்த வாலி ஸுக்ரீவரிருவரும் ஒருவர்க்கொருவர் கீழேதள்ளுவது மேலே பாய்வது கட்டிக்கொண்டு நெருக்குவது கடிப்பது குத்துவது அடிப்பதாய் வலிதான யுத்தஞ்செய்யுங்காலத்தில் இராகவன் ஒருமரத்தடியில் மறைந்திருந்து வாலியைப் பாணத்தினாலடித்தார்; அந்த பாணத்தினால் வாலி மார்பு பிளந்து கீழே விழுந்துவிட்டான்; இதைத் தாரை கேள்விப்பட்டு அங்கதனென்னும் புத்திரனுடன் கூட ஓடிவந்து வாலியைத் தழுவிக்கொண்டு பலவாறு புலம்பி, பிறகு எதிரில்நின்ற இராமனைப்பார்த்து அவருடைய மஹாபுருஷலக்ஷணங்களைக்கண்டு இவர் ஸாக்ஷாத் பரமாத்மாவென்று நிச்சயித்துத் துதித்தனள். இராமனும் வாலியோடு வாதாடிப் பல ஸமாதானங்கள் சொல்லக்கேட்டு நன்மதிபெற்றுக் கைகூப்பி இராகவனைத்தொழுது 'ஸுக்ரீவனைப்போல் அங்கதனையும் நோக்கிக்கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்துவிட்டு ப்ராணனையும் விட்டான்—என்ற வரலாறு அறிக. ஆச்ரிதனான ஸுக்ரீவனிடத்தில் பக்ஷபாதத்தால் எம்பெருமான் செய்தருளின காரியம் இப்போதுதான் நடந்ததுபோல் ஆழ்வார்க்குத் தோற்றிற்றென்க.

"வீழ்த்ததுவும்" என்று சிலர்க்குப் பாடமாம்; அப்பாடத்தில் வெண்டளைபிறழும்.

திருவணைகட்டினதும் வாலியைவதைத்ததும் இராவணனைக் கொன்றதும் எம்பிரான் அவலீலையாகச்செய்த செயல்கள் என்றதாயிற்று இப்பாட்டால். ... .... (உஅ)

உகப்புருவன் தானே யொளியுருவன் தானே *
மகப்புருவன் தானே மதிக்கில் *—மிகப்புருவம்
ஒன்றுக்கொன் றோசனையான் வீழ * ஒருகணையால்
அன்றிக்கொண் டெய்தா னவன். (உகூ)

| | |
|---|---|
| மிக | மிகவும் |
| புருவம் ஒன்றுக் கொன்று ஓசனையான் | ஒரு புருவத்துக்கு ஒரு புருவம் காத வழி நீளமிருக்கப் பெற்ற கும்பகரணன் |
| வீழ | ஒழியும்படியாக |
| அன்றிக் கொண்டு | சீறிக்கொண்டு |
| ஒரு கணையால் | ஒரு பாணத்தினால் |
| எய்தானவன் | அடித்து முடித்தவனான இராமபிரானை |
| மதிக்கில் | சிந்தித்தால் |
| உகப்பு உருவன் தானே | மநோஹரமான திருமேனியை யுடையவன் அவனே; |
| ஒளி உருவன் தானே | தேஜோமயமான திருமேனியை யுடையவனும் அவனே, |
| மகப்பு உருவன் தானே | மிகவும் ஆச்சரியமான வடிவை யுடையவனும் அவனே. |

* * *—எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தின் வைலக்ஷண்யத்தைப்பேசி அநுபவிக்கிறார். உகப்புருவன்தானே—கண்டவர்களெல்லாரும் உகக்கும்படியான திருவுருவத்தையுடையவன் என்கை. "தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமலமன்ன தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கை கண்டாரு மஃதே" (கம்பராமாயணம்.) என்றது காண்க. அன்றியே, நம்மைப்போல் கருமங்காரணமாக சரீரங்களைப் பரிக்ரஹிக்கையன்றியே "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:" என்கிறபடியே தானே திருவுள்ளமுகந்து பரிக்ரஹித்துக்கொள்ளப்பட்ட வடிவையுடையவன் என்றுமாம்.

ஒளியுருவன் தானே—1. "குழுமித்தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்கிற

படியே தேஜஸ்புஞ்ஜமே வடிவெடுத்த தென்னலாம்படியான உருவையுடையவன்.

மகப்புருவன்—'மஹாத்புதம்' [மஹாத்புதம்] என்ற வட சொல் 'மகப்பு' எனச்சிதைந்தது; மிகவும் அற்புதமான உருவத்தை யுடையவன் என்றபடி. இப்படிப்பட்டவன் யாவனென்னில், இராமபிரானென்கிறது பின்னடிகளால். கும்பகர்ணனுடைய புருவங்களின் இடைவெளி ஒரு காதவழி யுள்ளதுபற்றி 'புருவமொன்றுக்கொன்றோசனையான்' என்று அவனுக்குப் பெயரிடப்பட்டது. 'யோஜந' என்னும் வடசொல் ஓசனை எனத் திரிந்தது. ... ... .... ... .... ... (உக)

அவனென்னை யாளி யரங்கத்து * அரங்கில்
அவனென்னை யெய்தாமல் காப்பான் *—அவனென்ன
துள்ளத்து நின்று னிருந்தான் கிடக்குமே *
வெள்ளத் தரவணையின் மேல். (௬0)

| | |
|---|---|
| என்னை ஆளி | என்னை ஆட்கொண்டருள்பவனான |
| அரங்கத்து அவன் | ஸ்ரீரங்கநாதன் |
| என்னை | என்னை |
| அரங்கில் | ஸம்ஸாரமாகிற நாடகசாலையில் |
| எய்தாமல் | பிரவேசிக்க வொட்டாமல் |
| காப்பான் | காத்தருள்வன்; |
| அவன் | அப்பெருமான் |
| என்னது | என்னுடைய |
| உள்ளத்து | நெஞ்சிலே |
| நின்றான் இருந்தான் | நிற்பதும் இருப்பதும் செய்கிறான்; |
| | (ஆனபின்பு இனி) |
| அவன் | அப்பெருமான் |
| வெள்ளத்து | திருப்பாற்கடலில் |
| அரவு அணையின் மேல் | சேஷ சயனத்திலே |
| கிடக்குமே | பொருந்துவனோ? |
| | [பொருந்தமாட்டான்.] |

* * *—இப்படிப்பட்ட எம்பெருமான் திருப்பாற்கடல் முதலிய ஸ்தாநங்களை விட்டிட்டு என்னெஞ்சிலேயே நிற்பதுமிருப்பதுமாக நின்றான் என்கிறார். திருவரங்கம் பெரியகோயிலில் * குடதிசை முடியைவைத்துக் குணதிசை பாதம்நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசையிலங்கை நோக்கித் துயில்கொள்ளுமழகைக்காட்டி என்னை ஆட்படுத்திக்கொண்ட பெருமான் இனி

நான் ஸம்ஸாரமாகிய நாடகசாலையிற் புகாவண்ணம் என்னைக் காத்தருள்வன்; அவ்வளவேயன்றி என்னுடைய ஹ்ருதயத்தையே தனக்குப் பரமப்ராப்யமான ஸ்தலமாகத் திருவுள்ளம்பற்றி, நிற்பதும் வீற்றிருப்பதுமெல்லாம் இங்கேயாயிராநின்றான்; இனி அவனுக்குத் திருப்பாற்கடலில் திருவரவணையில்தானும் படுக்கை பொருந்துமோ? பொருந்ாது—என்றாராயிற்று.

அரங்கில்—'ரங்கம்' என்னும் வடசொல் கூத்தாடுமிடம் என்னும் பொருளது; அதுவே தமிழில் 'அரங்கு' எனத் திரிந்தது. நாடகசாலையில் ஒவ்வொருவனே பலபல வேஷங்களைப் பூண்டுகொண்டு வருதல்போல இந்த ஸம்ஸாரத்தில் ஒவ்வொரு ஆத்மாவும் பலபல தேஹங்களைப் பரிக்ரஹித்துக்கொண்டு அனேக யோனிகளில் பிறப்பதுபற்றி ஸம்ஸாரத்தை நாடகசாலையாகச் சொல்வது நன்கு பொருந்தும். 1. பிறவிமா மாயக்கூத்து" என்றார் நம்மாழ்வாரும். .... ... .... .... (௬௦)

மேல் நான்முக னரனையிட்ட விடுசாபம் *
தான் நாரணனொழித்தான் தாரகையுள் *—வானோர்
பெருமானை யேத்தாத பேய்காள் * பிறக்கும்
கருமாயம் பேசில் கதை. (௬௧)

| | |
|---|---|
| மேல் | முன்பொருகால் |
| நான்முகன் | பிரமன் |
| அரனை | ருத்ரனைக்குறித்து |
| இட்ட | கொடுத்த |
| விடுசாபம் | சாபத்தை |
| தாரகையுள் | இந்நிலவுலகத்தில் (உள்ளாரெல்லாரு மறிய) |
| நாரணன்தான் | எம்பெருமானே |
| ஒழித்தான் | போக்கியருளினன்; (அப்படிப்பட்ட) |
| வானோர் பெருமானை | நித்யஸூரி நாதனை ஸ்ரீமந் நாராயணனை |
| ஏத்தாத | வாய்கொண்டு வாழ்த்தமாட்டாத |
| பேய்காள் | அறிவுகேடர்களே!, |
| பிறக்கும் கரு | பிறப்பதற்கு அடியான கர்ப்ப ஸ்தானத்தில் (நீங்கள் அநுபவிக்கக்கூடிய) |
| மாயம் | ஆச்சரியமான துக்கங்களை |
| பேசில் | சொல்லப்புகுந்தால் |
| கதை | ஒரு மஹாபாரதம் போலே பரந்திருக்கும். |

1. திருவாய்மொழி 8—4—11.

* * *—எம்பெருமானுடைய பெருமை நாடு நகரமும் நன்கறிந்ததாயிருந்தும் அவனை ஏத்தமாட்டாத பாவிகள் எவ்வளவோ கஷ்டங்களை அநுபவிக்க வுரியவர்கள் என்கிறார்.

ஒரு காலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது சிரமொன்றைக்கிள்ளி யெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொள்ளுதலும், அவன் 'இதற்கு என் செய்வது?' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் "இப்பாவந் தொலையப் பிச்சை யெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறையுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்" என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பல தலங்களிலுஞ்சென்று பிச்சையேற்றுக் கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நிறையாது நீங்காதாக பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தை யடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமான் 'அக்ஷயம்' என்று பிக்ஷையிட, உடனே அது நிறைந்து கையைவிட்டு அகன்றது—என்பதே நான்முகனரனையிட்ட விடு சாபம் நாரணனொழித்த வரலாறு. குரு பாதகத்தைப் போக்கிச் சிவனையும் உய்யக்கொள்ளவல்ல பரதேவதை ஸ்ரீமந்நாராயணன் என்பதை அறிகின்றிலவே இப்பேய்கள் என்று வருந்துகிறார்.

பிறக்குங் கருமாயம் பேசில் கதை=எம்பெருமானுடைய பெருமையறிந்து அவனை ஏத்தினீர்களாகில் உஜ்ஜீவித்துப் போவீர்கள்; இல்லையேல், மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து கர்ப்பப்பைகளில் நீங்கள் படநேரும் துன்பங்கள் மஹாபாரதம்போலே பெரிய கதைப்புத்தகமாக எழுதிவைக்கத் தக்கதாகும் என்றவாறு.

முதலடியில், விடுசாபம் என்றது முழுச்சொல்; 'விடு' என்பதற்குத் தனியே பொருளில்லை; அதை ஒரு உபஸர்க்கம்போலக் கொள்க. சாபம்—அநுபவித்தே தீரவேண்டிய பாவம். தாரகையுள்=வடமொழியில் "ப்ராஜ்யாதி: ப்ராணி:" என்று பூமிக்குப் பெயர்களிருப்பதுபோல் 'ப்ராகா' என்றும் ஒரு பெயர் இருக்கத்தகும். 'தாரணியுள்' என்றும் பாடமுண்டென்ப. 'ப்ராணி' என்பதன் நீட்டல். .... ... .... .... (டுக)

கதைப்பொருள்தான் கண்ணன் திருவயிற்றி னுள்ள *
உதைப்பளவு போதுபோக் கின்றி *—வதைப்பொருள்தான்
வாய்ந்த குணத்துப் படாத தடைமினோ *
ஆய்ந்த குணத்தா னடி. (௬௨)

| | | | |
|---|---|---|---|
| கதை பொருள்தான் | (உலகத்தில்) வியவஹரிக்கப்படுகின்ற பொருள்கள் யாவும் | வாய்ந்த குணத்து | திருக்கல்யாண குணங்களில் |
| உதைப்பு அளவு போது போக்கு இன்றி | ஒரு நிமிஷகாலமும் ஓயாமல் [எப்போதும்] | படாதது | ஈடுபடாத வஸ்து |
| கண்ணன் | எம்பெருமானுடைய | வதை பொருள்தான் | அபதார்த்தமேயாகும்; |
| திரு வயிற்றின் உள்ள | ஸங்கல்பத்தில் ஸத்தை பெற்றிருக்கின்றன; | | (ஆகையாலே) |
| | (அப்படிப்பட்ட எம்பெருமானுடைய) | ஆய்ந்த குணத்தான் | சிறந்த திருக்குணங்களை யுடையவனை அப்பெருமானுடைய |
| | | அடி | திருவடிகளை |
| | | அடைமின் | ஆச்ரயியுங்கோள். |

* * *—தன்னுடைய ஸங்கல்ப மாத்ரத்தினால் ஸகல பதார்த்தங்களுக்கும் ஸத்தையை விளைக்கின்ற எம்பெருமானுடைய குணங்களில் ஈடுபட மாட்டாதவர்கள் அஸத்துக்களாவர்; அங்ஙனகாமே நீங்கள் அக் குணநிதியின் திருவடிகளைச் சார்ந்து வாழ்மின் என்று சிலரைநோக்கி உபதேசிக்கும் பாசுரம் இது.

கதைப்பொருள்தான் கண்ணன் திருவயிற்றினுள்ள=' கதா' என்னும் வடசொல்லுக்கு 'வாயாற் சொல்லுதல்' என்று பொருள். நம்மால் வ்யவஹரிக்கப்படுகின்ற பதார்த்தங்களெல்லாம் எம்பெருமானுடைய ஸங்கல்பாதீநங்கள் என்கை.

உள்ள—உள்ளன என்றபடி.

முதலடிக்கு வேறு வகையாகவும் பொருள் கொள்வர்.

உதைப்பளவு போதுபோக்கின்றி=கண்ணிமைப்பதும் கை நொடிப்பதும் உதைப்பு; ஒரு சிடிகை போடுகிற மாத்திரமான காலம் என்கை. அவ்வளவு காலமும் இடைவிடாமல்—ஸர்வ காலத்திலும் என்றவாறு. அன்றியே, மேலே ' அடைமினோ '

என்ற வினைமுற்றேடே இவ்விரண்டாமடியைக் கூட்டியுரைக்கவு மாம்; ஒரு நிமிஷ காலமும் தாமதியாமல் விரைந்தடி சேர்மினே என்றபடி.

வாய்ந்த குணத்துப் படாதது வதைப்பொருள்தான் = நாம் அநு பவிப்பதற்குப் பாங்கான பகவத் குணங்களிலே ஈடுபடாதவர்கள் "அஸந்நேவ ஸ பவதி அஸத்ப்ரஹ்மேதி வேதசேத்" என்கிற உப நிஷத்தின்படியே அபதார்த்தங்களாவர்கள் என்கை. "குணத்துப் படாதவர்" என்னுமல் 'படாதது' என்றது பகவத் குணங்களில் ஈடுபடாதவர்களிடத்தில் தமக்குள்ள வெறுப்பினால். அவிவேகி களை நோக்கிக் 'குட்டிச்சுவரே!' என்பதுபோல. வதை—வசை தகரசகரப்போலி.

நீங்களும் அஸத்தாக ஆய்விடாமல் ஆய்ந்த குணத்தா னடியை அடைமின் என்று தலைக்கட்டினாராயிற்று. .... (௫௨

அடிச்சகடம் சாடி யரவாட்டி * யானை
பிடித்தொசித்துப் பேய்முலை நஞ்சுண்டு *—வடிப்பவள
வாய்ப்பின்னை தோளிக்கா வல்லேற் றெருத்திறுத்து *
கோப்பின்னு மானான் குறிப்பு. (௫௫

| | | | |
|---|---|---|---|
| | (எம்பெருமான்) | ஒசித்து | கொம்பை முறித் தொழித்தும் |
| குறிப்பு | (அடியாரைக் காத் தருள வேணு மென்கிற) திரு வுள்ளத்தினால் | பேய் | பூதனையென்னும் பேய்ச்சியி னுடைய |
| அடி | திருவடியாலே | முலை | முலையில் தடவியிருந்த |
| சகடம் | சகடாஸுரனை | | |
| சாடி | ஒழித்தும் | நஞ்சு | விஷத்தை |
| அரவு | காளியநாகத்தை | | |
| ஆட்டி | வாலைப்பிடித்து ஆட்டிக் கொழுப் படக்கியும் | உண்டு | அமுது செய்து அவளுயிரை மாய்த்தும் |
| யானை | குவலயாபீட மென்னும் யானையை | வடி பவளம் வாய் தோளி | அழகிய பவளம் போன்றவாயை யும் தோளையு முடையளான |
| பிடித்து | பற்றிக்கொண்டு | | |

<table>
<tr><td>பின்னைக்கா</td><td>நப்பின்னைப் பிராட்டிக்காக</td><td>இறுத்து</td><td>முறித்தொழித்தும்</td></tr>
<tr><td>வல் ஏறு</td><td>கொடிய ரிஷபங்களினுடைய</td><td rowspan="2">பின்னும் கோ ஆனான்</td><td rowspan="2">தன்னுடைய சேஷித்வத்தை நிலைநிறுத்திக் கொண்டான்.</td></tr>
<tr><td>எருத்து</td><td>முசுப்பை</td></tr>
</table>

* * *—எம்பெருமானுக்கு ஏற்கனவே ஈச்வரத்வம் இருந்தாலும் அவதரித்துப் பண்ணின சில ஆனைத் தொழில்களால் அந்த ஈச்வரத்வம் நன்னர் நிலைநிறுத்திக் கொள்ளப்பட்டதென்று சில சேஷ்டிதங்களைப் பேசியநுபவிக்கிறார்.

அடிச்சகடம்சாடி-நந்தகோபர் திருமாளிகையில் ஸ்ரீ க்ருஷ்ண சிசுவை ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே தொட்டிலிலிட்டுக் கண் வளர்த்தி யசோதை யமுனை நீராடப் போயிருந்த காலத்து, கம்ஸனாலேவப்பட்ட அஸுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்துத் தன்மேல் விழுந்து தன்னைக் கொல்ல முயன்றதையறிந்த பகவானான குழந்தை பாலுக்கு அழுகிற பாவனையில் தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி யுதைத்து அச்சகடத்தைச் சிந்நபிந்நமாக்கினனென்க.

அரவாட்டி—ஒருநாள் கிருஷ்ணன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத் தொடங்க, மற்றுள்ள இடைப்பிள்ளைகள் அழைத்து 'க்ருஷ்ணா! அவ்வழி நோக்க வேண்டா; அவ்வழியிற் சென்றால் யமுநாநதியில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்நியினாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படி செய்த காளியனென்னுங் கொடிய ஐந்தலை நாகம் குடும்பத்தோடு வாஸஞ்செய்துகொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கி விடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன, அதைக்கேட்ட கண்ணபிரான் உடனே அக்காளிய நாகத்தைத் தண்டிக்க வேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின்மேலேறி அம்மடுவிற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேலேறித் துவைத்து நர்த்தனஞ் செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கலிய பிக்ஷையிட்டருள வேண்டுமென்று தன்னை வணங்கிப் பிரார்த்தித்த நாககன்னிகை

களின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற் சென்று வாழும்படி விட்டருளினன் என்க. அரவு ஆட்டி எனப் பதம் பிரித்தது போல 'அர வாட்டி' எனவும் பிரிக்கலாம்; "குறியதன் கீழ் ஆக்குறுகலும் அதனோடு, உகரமேற்றலும் இயல்புமாம் தூக்கின்" என்ற நன்னூற் சூத்திரமுணர்க.) அர—காளியநாகத்தை, வாட்டி—வலியடக்கி, என்கை.

யானைபிடித்தோசித்து = வில்விழவுக்கென்று கம்ஸனாலழைக்கப்பட்டு மதுரைக்கு எழுந்தருளின கண்ணபிரான் கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில் அவ்வரண்மனை வாயில்வழியில் தன்னைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடமென்னும் மதயானை சீறிவர, கண்ணபிரான் அதனையெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து அவ்யானையையும் யானைப்பாகனையும் உயிர் தொலைத்திட்டனனென்க.

பேய்முலை நஞ்சுண்டு = பூதனை யென்னும் ராக்ஷஸி கம்ஸனேவுதலால் நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்குவந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த கிருஷ்ண சிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையை உண்ணக் கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப் பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவள் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனனென்க.

வல்லேற்றெருத்திறுத்து—நப்பின்னைப் பிராட்டியை மணம் புணர்வதற்காக அவள் தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யார்க்கும் அடங்காத அஸுராவேசம்பெற்ற ஏழுஎருதுகளையும் கண்ணபிரான் ஏழு திருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்து கொண்டனனென்க.

ஆக இப்படிப்பட்ட விரோதி நிரஸநத் தொழில்கள்செய்து தன்னுடைய ஈச்வரத்வத்தை ஸ்திரப்படுத்திக்கொண்டானெம் பெருமான் என்றாராயிற்று. ... .... .... (௩௩)

குறிப்பெனக்குக் கோட்டியூர் மேயானை யேத்த *
குறிப்பெனக்கு நன்மை பயக்க *—வெறுப்பனோ
வேங்கடத்து மேயானை மெய்வினைநோ யெய்தாமல் *
தான்கடத்தும் தன்மையான் தாள். (௩௪)

| | | | |
|---|---|---|---|
| கோட்டியூர் மேயானை | திருக்கோட்டியூரில் நித்யவாஸம் பண்ணுமவனும் | எனக்கு குறிப்பு | எனக்குக் குதூஹலம்; |
| வேங்கடத்து மேயானை | திருமலையில் நித்ய வாஸம்பண்ணு மவனுமான பெருமானை | மெய் வினை | சரீர ஸம்பந்தத் துக்கு அடியான கருமங்களும் |
| ஏத்த | துதிப்பதற்கு | நோய் | வியாதிகளும் |
| எனக்கு குறிப்பு | எனக்கு ஆசை; | எய்தாமல் | வந்து சேராதபடி |
| நன்மை பயக்க | (எம்பெருமானை இடைவிடாது அநுபவிப்பதனு லுண்டாகும்) பெருமையை உண்டாக்கிக் கொள்வதற்கு | தான் கடத்தும் தன்மையான் | தானே அவற்றைப் போக்கியருளும் ஸ்வபாவத்தை யுடையனான அப் பெருமானுடைய |
| | | தாள் | திருவடிகளை |
| | | வெறுப்பனோ | மறந்திருப்பனோ. |

* * *—திருக்கோட்டியூர் திருவேங்கடம் முதலான பல திருப்பதிகளிலே எனக்காக வந்து ஸந்நிதிபண்ணி ஸுலபனுயிருக்குமெம்பெருமான் திருவடிகளை மறந்திருக்க என்றால் முடியுமோ வென்கிறார். திருக்கோட்டியூரிலும் திருமலையிலும் சென்று எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடவேண்டுமென்றும் அவனை இடைவிடாது அநுபவித்து ஆத்மாவுக்கு நன்மையை விளைத்துக் கொள்ளவேணுமென்றும் ஆசை கொண்டிருக்கின்றேன். எவ்விதமான கருமங்களும் துக்கங்களும் எனக்கு வந்து கிட்டாதபடி செய்து என்னைக் காத்தருள்கின்ற அப்பெருமானுடைய திருவடிகளை நான் எப்படி உபேக்ஷித்திருக்கமுடியும்—என்றாராயிற்று.

மூன்றாமடியில் “ வெவ்வினைநோய் ” என்றும் பாடமாம்.

தாளா லுலக மளந்தவசவே கோல் *
வாளா கிடந்தருளும் வாய்திறவான் *—நீளோதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக் கேணியான் *
ஐந்தலைவாய் நாகத் தணை. (௩௫)

நீள் ஓதம் — பெரிய அலைகள்
வந்து அலைக்கும் — கரையிலேவந்து வீசப்பெற்ற
மா மயிலை — மயிலாபுரிக்கு அடுத்த
மா வல்லிக் கேணியான் — திருவல்லிக்கேணியில் நித்யவாஸம் பண்ணுகிற ஸர்வேச்வரன்
ஐ தலை வாய் நாகத்து அணை — ஐந்து தலைகளையும் ஐந்து வாய்களையுமுடையனான திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே
வாளா — வெறுமனே
கிடந்தருளும் — சயனித்திரா நின்றான்;
வாய் திறவான் — வாய்திறந்து ஒன்று மருளிச்செய்வதில்லை;
(இப்படியிருப்பதற்குக் காரணம்)
தாளால் — திருவடியாலே
உலகம் அளந்த அசவே கொல் — உலகங்களை அளந்ததனாலுண்டான ஆயாஸமோ ?.

* * *—திருவல்லிக்கேணியில் ஸ்ரீபார்த்தஸாரதிப் பெருமாளாக நின்ற திருக்கோலமாய் ஸேவைஸாதிப்பது தவிர, நாகத்தணைக் கிடந்த பெருமானாக ஸேவைஸாதிக்கிற திருக்கோலமும் உண்டாகையாலே அந்த திவ்யமங்களவிக்ரஹத்தி லீடுபட்டுப் பேசுகிற பாசுரம் இது.

அர்ச்சாவதாரங்களில் எம்பெருமான்கள் நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் ஒருபடிப்பட்டே யிருக்குமேயன்றி ஒருநாளும் மாறமாட்டாதென்பதும் ஒருநாளும் சோதிவாய் திறந்து பேசியருள்வதில்லை யென்பதும் ஆழ்வார்கட்குத் தெரிந்திருக்கச் செய்தேயும் கரைபுரண்ட ப்ரேமத்தின் கனத்தினால் அர்ச்சாவதார ஸமாதியையும் குலைத்துப் பரிமாறப் பார்ப்பர்கள்; நம்மாழ்வார் திருவாய்மொழியில் “கொடியார்மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும், மடியாதின்னே நீதுயில் மேவி மகிழ்ந்ததுதான், அடியாரல்லல் தவிர்த்தவசவோ? அன்றேல் இப்படிதான் நீண்டுதாவிய அசவோ பணியாயே” (8–3–5) என்றும், “கிடந்தநாள் கிடந்தாய் எத்தனை காலங்கிடத்தி உன் திருவுடம்பசையத், தொடர்ந்து குற்றேவல் செய்து தொல்லடிமைவழிவருந் தொண்டரோர்க்கருளித், தடங்கொள்தாமரைக் கண்விழித்து நீயெழுந்துன் தாமரைமங்கையும் நீயும், இடங்கொள் மூவுலகுந் தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக் கிடந்தானே!” (9–2–3.) என்றும் அழகாகப்பேசினார். இவ்

வாழ்வார்தாமும் திருச்சந்தவிருத்தத்தில் "நடந்தகால்கள் நொந்தவோ?....காவிரிக்கரைக் குடந்தையுள், கிடந்தவாறெழுந்திருந்து பேசுவாழி கேசனே!" என்றார். அப்படியே இப்பாசுரத்திலும்—சோதிவாய்திறந்து ஒருவார்த்தையும் அருளிச்செய்ய மாட்டாமல் நெடுங்காலமாகவே அரவணையின்மேல் ஏகரீதியாக எம்பெருமான் பள்ளி கொண்டிருக்கிறானே!, காடும் மேடும் கல்லும் கரடுமான பூமியை முன்பொருகால் அடியிட்டு அளந்தருளினதாலுண்டான ச்ரமம் இன்னும் ஆறவில்லைபோலும்; என்கிறார். பேசாதே வாளா கிடந்தருள்வதும் நீர்க்கரையைப் பற்றிக் கண்வளர்ந்தருள்வதும் ஆயாஸத்தின் மிகுதியினால் என்றிருக்கிறார் போலும்.

'அயர்வு' என்பது 'அசவு' என மருவிற்றென்ப. 'அசைவு' என்பாருமுளர்.

திருவல்லிகேணி யென்பது, தொண்டைமான் சக்ரவர்த்தியின் பிரார்த்தனையின்படியே திருவேங்கடமுடையான் கண்ணனாகத் தனது குடும்பத்தோடு ஸேவைஸாதித்த தலம். இத்தலத்துப் புஷ்கரிணி அல்லிப்பூக்கள் நிறையப் பெற்றதனால் கைரவிணி யென்று வடமொழியிலும் திருவல்லிக்கேணி யென்று தென்மொழியிலும் பெயர்பெறும். இந்தப் புண்ணிய தீர்த்தத்தின் பெயரே இத்தலத்திற்குப் பெயராயிற்றென்றுணர்க. இது மயிலையை அடுத்திருக்கிறபடியால் "மாமயிலை மாவல்லிக்கேணி" எனப்பட்டது. ... .... ... ... (௩௫)

நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள் *
நாகத்தணை யரங்கம் பேரன்பில் *—நாகத்
தணைப்பாற் கடல்கிடக்கு மாதி நெடுமால் *
அணைப்பார் கருத்த னுவான். (௩௬)

| | | | |
|---|---|---|---|
| நாகத்து அணை | திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே | நாகத்து அணை | திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேல் |
| குடந்தை | திருக்குடந்தையிலும் | அரங்கம் | திருவரங்கத்திலும் |
| வெஃகா | திருவெஃகாவிலும் | பேர் | திருப்பேர் நகரிலும் |
| திரு எவ்வுள் | திருவெவ்வுளூரிலும் (அப்படியே) | அன்பில் | அன்பில் என்னுந் திருப்பதியிலும் |

(அப்படியே)
நாகத்து அணை { சேஷசயனத்தின் மீது
பால் கடல் திருப்பாற் கடலிலும்
ஆதி நெடு மால் { ஜகத்காரணபூதனை ஸர்வேச்வரன்
கிடக்கும் { பள்ளி கொண்டிருக் கின்றான் ;
(எதுக்காக வென்னில்)
அணைப்பார் கருத்தன் ஆவான் { அன்பருடைய நெஞ் சில் புகுந்தவனாக ஆவதற்காக.

* * *—கீழ்ப்பாட்டில் "ஐந்தலைவாய் நாகத்தணை—கிடந்தருளும்" என்று சேஷசயநம் ப்ரஸ்துதமாகையாலே இங்ஙனே திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொண்டு ஸேவைஸாதிக்கப் பெற்ற திருப்பதிகளுள் சிலவற்றைப் பேசியநுபவிக்கிறார். அன்பருடைய அந்தரங்கத்திலே புகுவதற்கு ஸமயம் எதிர்பார்த்துக் கொண்டு திவ்யதேசங்களிலே தங்கியிருக்கிறானென்பதும் இதில் அநுஸந்திக்கப்படுகிறது.

திருக்குடந்தை, திருவெஃகா, திருவெவ்வுளூர், தென்திருவரங்கம், திருப்பேர்நகர், அன்பில், திருப்பாற்கடல் ஆகிய ஏழு தலங்களில் நாகத்தணையிலே கிடந்தருள்வது அன்பருடைய ஹ்ருதயத்திலே புகுருகைக்கு அவஸர ப்ரதீக்ஷையாலே யென்கை.

வெஃகா—கச்சித்திருப்பதியில் ஸ்ரீயதோக்தகாரிஸந்நிதி. திருஎவ்வுள்=எம்பெருமான் சாலிஹோத்ர மாமுனிவனுக்குப் பிரத்யக்ஷமாகி 'வஸிப்பதற்கு உரிய உள் எவ்வுள் ?' என வினவியதனால் இத்தலத்திற்குத் திருவெவ்வுளூர் என்று திருநாமமாயிற்றென்பர். "கிம்க்ருஹம்" என்பது ஸம்ஸ்க்ருதவ்யவஹாரம். பேர்—அப்பக்குடத்தான் ஸந்நிதி. அடிதோறும் 'நாகத்தணை' என்றது போக்யதாதிசயம் தோற்ற.

அணைப்பார் கருத்தனாவான்="தேஷாம் ஸததயுக்தாநாம்" என்று கீதையிற் சொல்லுகிறபடியே எப்போதும் எம்பெருமானோடு அணைந்தேயிருக்கவேணுமென்று ஆசையுடையார் 'அணைப்பார்' எனப்படுவர் ; அவர்களுடைய, கருத்தன்—கருத்திலே [திருவுள்ளத்திலே] பொருந்தினவனாக, ஆவான்—ஆவதற்காக என்றபடி.

எம்பெருமானுக்கு, பரமபதம் திருப்பாற்கடல் கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான உகந்தருளின இடங்களில்

இருப்பதிற்காட்டிலும் மெய்யடியாருடைய ஹ்ருதயகமலத்திலே வாழ்வதே பரமோத்தேச்யமென்றும், ஸமயம்பார்த்து அன்பருடைய நெஞ்சிலேவந்து சேர்வதற்காகவே மற்ற விடங்களில் எம்பெருமான் தங்குகிறான் என்றும், ஆகவே, திவ்யதேசங்களில் வாஸம் உபாயமாய் பக்தருடைய ஹ்ருதயத்தில்வாஸமே புருஷார்த்தமாயிருக்குமென்றும், இது ஸித்தித்துவிட்டால் எம்பெருமானுக்கு திவ்யதேசவாஸத்தில் ஆதரம் மட்டமாய்விடு மென்றும் ஸ்ரீவசநபூஷணத்தில் பிள்ளையுலகாசிரியர் பரமரஸமாக அருளிச்செய்ததெல்லாம் இப்பாசுரத்தையும் மூலமாகக் கொண்டதாகும். "கல்லுங்கனைகடலும் வைகுந்தவானாடும், புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம்!—வெல்ல, நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம்" என்று நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் அருளிச்செய்த பாசுரமும் இங்கு ஸ்மரிக்கத் தகும். ... .... .... ... (௩௬)

வானுலவு தீவளி மாகடல் மாபொருப்பு *
தானுலவு வெங்கதிரும் தண்மதியும் *—மேனிலவு
கொண்டல் பெயரும் திசையெட்டுஞ் சூழ்ச்சியும் *
அண்டந் திருமா லகைப்பு. (௩௭)

| | | | |
|---|---|---|---|
| வான் | ஆகாசமும் | கொண்டல் | மேகங்களும் |
| தீ | அக்நியும் | பெயரும் | சேதநவர்க்கமும் |
| உலவு வளி | உலாவுகின்ற வாயுவும் | திசை எட்டும் | எட்டுத்திசைகளும் |
| மா கடல் | பெரிய கடலும் | சூழ்ச்சியும் | ஆவரணங்களும் |
| மா பொருப்பு | பெரிய குலபர்வதங்களும் | அண்டம் | ஆகிய இவையெல்லாவற்றோடுங் கூடின அண்டமும் |
| உலவு | திரிகின்ற | | |
| வெம் கதிர்தானும் | உஷ்ணகிரணனை ஸூர்யனும் | திருமால் | ஸர்வேச்வரனுடைய |
| தண் மதியும் | குளிர்ந்த சந்திரனும் | அகைப்பு | ஸங்கல்பத்தினாலாயது. |
| மேல் நிலவு | மேலே நிலாவுகின்ற | | |

* * *—பஞ்சபூதங்களும், சந்த்ரஸூர்யர்களும், மேகமண்டலங்களும், ஜீவராசியும், எண்டிசைகளும், ஆவரணங்களும் அண்டமுமெல்லாம் எம்பெருமானுடைய விபூதிகள் என்றாராயிற்று.

முதலடியில், வான் என்று ஆகாசமும், தீ என்று தேஜஸ்ஸும், வளி என்று வாயுவும், கடல் என்றதனாலே ஜலதத்துவமும், பொருப்பு என்றதனாலே பூமிதத்துவமும் ஆகப் பஞ்சபூதங்கள் பகரப்பட்டன.

மூன்றாமடியில் "கொண்டல்பெயரும்" என்றதை ஒரு சொற்செறிவாகக்கொண்டு 'மேகமென்று பெயர் பெற்றவையும்' என்று முரைப்பர்.

அகைப்பாவது—எழுச்சி; திருவுள்ளத்தில் எழுச்சி [முயற்சி] யாகிய ஸங்கல்பத்தைச் சொன்னவாறு. ... ... (௫௭)

அகைப்பில் மனிசரை யாறு சமயம்
புகைத்தான் * பொருகடல் நீர்வண்ணன் *—உகைக்குமேல்
எத்தேவர் வாலாட்டு மெவ்வாறு செய்கையும் *
அப்போ தொழியு மழைப்பு. (௫௮)

| | | | |
|---|---|---|---|
| அகைப்பு இல் மனிசரை | உஜ்ஜீவிக்கமாட்டாத மனிசர்களை | உகைக்கும் எல் | உதாஸீநனா யிருந்துவிடும் பக்ஷத்தில் |
| ஆறு சமயம் | (நீசங்களான) ஆறு மதங்களில் | அப்போது | அப்போதே |
| புகைத்தான் | புகும்படி செய்தவனும் | எத் தேவர் வாலாட்டும் | எந்த தேவர்களுடையவும் அஹங்காரமும் |
| பொரு கடல் நீர் வண்ணன் | அலையெறிகின்ற கடல் நீர்போன்ற திருநிறத்தை யுடையவனுமான ஸர்வேச்வரன் | எவ்வாறு செய்கையும் | எவ்விதமான (யஜ்ஞம் முதலிய) காரியங்களும் |
| | | அழைப்பு | (தேவதைகளின்) ஆஹ்வாநமும் |
| | | ஒழியும் | ஒழிந்து போய்விடும். |

* * *—திருவாய்மொழியில் (1—1—5.) "அவரவர் தமதம தறிவறி வகை வகை, அவரவரிறையவ ரெனவடியடைவர்கள், அவரவரிறையவர் குறைவிலரிறையவர், அவரவர் விதிவழியடைய நின்றனரே" என்ற பாசுரத்தின் பொருளைத் தெரிந்துகொண்ட பின் இப்பாட்டின் பொருள் நன்கு நெஞ்சிற்பதியும். அப்பாசுரத்தின் கருத்தாவது—பலவகைப்பயன்களை விரும்புகின்ற உலகத்தவர்கள் தங்கள் தங்கள் ருசிக்குத்தக்கபடி பிரமன் சிவன் இந்திரன்

என்றுள்ள பலபல தெய்வங்களை ஆச்ரயிக்கின்றனர்; அத்தெய்வங்கள் இவர்கள் விரும்பிய பலன்களைக்கொடுக்கக் குறையில்லை; ஏனென்றால், ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணன் அத்தெய்வங்களுக்கு அந்தர்யாமியாயிருப்பதனாலே அந்த மாஹாத்மியத்தினால் அத்தெய்வங்கள் பலன்கொடுக்கும் சக்தியுடையனவாக ஆய்விடுகின்றன என்கை. ஆகவே எம்பெருமானுடைய ஆவேசத்தினால்தான் ஸாமாந்ய தெய்வங்களெல்லாம் தங்களைப்பற்றின அபேக்ஷகர்களுக்கு அந்தந்த ப்ரயோஜனங்களை யளிக்கின்றன வென்றதாயிற்று.

ஒரு அர்த்தத்தை அந்வயமுகத்தால் சொல்லுவதென்றும் வ்யதிரேகமுகத்தால் சொல்லுவதென்றும் இரண்டு படிகளுண்டு. 'அரசன் கொடுத்தால் நாம் உண்ணலாம்' என்றாற்போலே சொல்லுவது அந்வய முகத்தால் சொல்லுவதாம்; 'அரசன் கொடாவிடில் நாம் உண்ணமுடியாது' என்றாற்போலே சொல்லுவது வ்யதிரேக முகத்தாற் சொல்லுவதாம். கீழெடுத்துக்காட்டிய திருவாய்மொழிப் பாசுரத்திற் சொன்ன கட்டளை அந்வயமுகமாகும். இப்பாட்டிற் சொல்லுகிற கட்டளை வ்யதிரேகமுகமாகும். எம்பெருமானுடைய ஆவேசத்தினால்தான் தேவதாந்தரங்கள் பலனளிக்கின்றன என்று திருவாய்மொழிப் பாசுரத்திற்சொல்லிற்று; எம்பெருமான் ஆவேசியாவிடில் ஒரு தெய்வமும் ஒரு பலனையும் அளிக்கவல்லதாகமாட்டாது என்கிறது இப்பாட்டில்.

இப்பாட்டிற்கு ப்ரதாநப்ரமேயம்பின்னடிகளே; முன்னடிகள் விசேஷணமாத்ரம். எம்பெருமான் எப்படிப்பட்டவனென்றால், அகைப்பில் மனிசரை ஆறுசமயம் புகைத்தான் = ஆறுசமயங்களாவன—சாக்யர் உலூக்யர் அக்ஷபாதர் க்ஷபணர் கபிலர் பதஞ்ஜலி என்னும் அறுவரால் பிரவர்த்திப்பிக்கப்பட்ட மதங்கள். இவை அவைதிகங்களெனப்படும். உஜ்ஜீவிக்கமாட்டாத மனிசர்களை இந்த பாஹ்ய குத்ருஷ்டி மதங்களில் புகுவித்தானும் எம்பெருமான். இவ்விடத்தில் "போற்றிமற்றோர் தெய்வம்பேணப் புறத்திட்டும்மையின்னே, தேற்றிவைத்தது எல்லீரும் வீடு பெற்றாலுலகில்லை யென்றே" (4—10—6.) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின் பொருள் அநுஸந்திக்கத்தகும்.

உகைக்குமேல்—உகைத்தலாவது உபேக்ஷித்தல்; தேவதாந்தரங்களிடத்தில் தான் ஆவேசியாத பக்ஷத்தில் என்றபடி.

எத்தேவர் வாலாட்டும்=பிரமன் உலகங்களைப் படைத்தானென்றும், சிவன் திரிபுரமெரித்தானென்றும், இந்திரன் வ்ருத்ராஸுரவதம் பண்ணினானென்றும் இப்படி பல தெய்வங்களைக் குறித்துப் பேசுவதெல்லாம் தெரியுமே; எம்பெருமான் அநுப்ரவேசித்திராவிடில் ஒரு தெய்வமாவது ஒரு காரியமாவது செய்திருக்கமுடியுமோ? என்றவாறு. 'வாலாட்டும்' என்றது உலக வழக்கச்சொல்லின் அநுகாரம் அஹங்காரப்படுகிறவனை 'வாலாட்டுகிறான்' என்பது வழக்கம்.

எவ்வாறு செய்கையும்=அந்தணர்கள் யஜ்ஞயாகங்களை அநுஷ்டித்து "இந்த்₃ராய ஸ்வாஹா, ஸோமாய ஸ்வாஹா" என்றிப்படி சொல்லி ஹவிஸ்ஸை யளிப்பதெல்லாம் அந்தர்யாமித்வேந எம்பெருமானை உத்தேசித்தேயன்றோ; அந்த இந்திரன் முதலிய தெய்வங்களில் எம்பெருமான் உள்ளுறைகின்றிலனாயின் அத்தெய்வங்களை நோக்கி 'ஸ்வாஹா, ஸ்வாஹா' என்று சொல்லிச்செய்வது ஒன்றுமில்லையாகும் என்கை.

அழைப்பு—1. "இந்த்₃ராக₃ச்ச₂ ஹரிவ ஆக₃ச்ச₂ மேதா₄திதே₂" என்றும் 'ப்₃ராஹ்மணமாவாஹயாமி, வாருணமாவாஹயாமி' என்றும் சொல்லுகிறபடியே தேவதாந்தரங்களை யழைப்பதும் ஓய்ந்துவிடுமென்கை. .... .... ... (௩௮)

அழைப்பன் திருவேங்கடத் தானைக் காண *
இழைப்பன் திருக்கூடல் கூட *—மழைப்பே
ரருவி மணிவரன்றி வந்திழிய * யானை
வெருவி யரவோடுங்கும் வெற்பு. (௩௯)

| | | | |
|---|---|---|---|
| திருவேங்கடத்தானை | திருவேங்கடமுடையானை | மழை | மழைபோல் சொரிகின்ற |
| காண | கண்ணால் ஸேவிக்க | பேர் அருவி | பெரிய அருவிகளானவை |
| அழைப்பன் | வாய்விட்டுக் கூப்பிடா நின்றேன்; | மணி | (அங்குமிங்குங் கிடக்கிற) ரத்னங்களை |

1. தைத்திரீய ஆரண்யகம்—முதல்ப்ரச்நம்.

| | | | |
|---|---|---|---|
| வான்றி வந்து இழிய | திரட்டிக்கொண்டு வந்து இழிய | ஒடுங்கும் | (அந்த ரத்னங்களை மின்னலாக மயங்கி) புற்றிலே சென்று மறையவும் பெற்ற |
| (அந்த ரத்னங்களின் ஒளியைக்கண்டு அக்நிஜ்வாலைகளாக ப்ரமித்து) | | வெற்பு | திருமலையை |
| யானை | யானைகளானவை | | |
| வெருவி | பயப்பட்டு நிற்கவும் | கூட | சென்று கூடவேணுமென்று |
| அரவு | மலைப் பாம்புகளானவை | திருக்கூடல் இழைப்பன் | கூடலிழைக்கின்றேன். |

* * *—உலகத்தவர்கள் எக்கேடு கெடினும் கெடுக; என்னுடைய போதுபோக்கு நல்லதாகவே யிருக்கப்பெற்றேன் என்கிறார். திருவேங்கடமுடையானை ஸேவிக்கப்பெறவேணுமென்றும் திருமலையிலே நித்யவாஸம் பண்ணப்பெறவேணுமென்றும் இதுவே எனக்கு ஆவலாயிருக்கின்றதென்கிறார்.

இழைப்பன் திருக்கூடல்=கூடலிழைத்தலாவது—வட்டமாகக்கோடுகீறி அதற்குள்ளே சுழிசுழியாகச் சுற்றும் சுழித்து இரண்டிரண்டு சுழியாகக்கூட்டிப் பார்க்கும்போது இரட்டைக்கணக்காக முடிவுபெற்றால் கூடுகை, ஒற்றைக்கணக்காக முடிவுபெற்றால் கூடாமை என்று ஒரு ஸங்கேதம் ஏற்படுத்திக்கொண்டு குறி பார்க்கையாம். சகுனம்பார்க்கும் வகைகளில் இஃது ஒருவகை; இது, கூடல், கூடலிழைத்தல், கூடல்வளைத்தல், கூடற்குறி இத்யாதி நாமங்களால் வழங்கப்பெறுமென்ப. நாச்சியார் திருமொழியில் நான்காந் திருமொழியில் [தெள்ளியார் பலர்] ஆண்டாளனுட்டித்ததாமிது. பகவத்ஸம்ச்லேஷத்திலே ஆவலுள்ளபடியைக்கூறும் முறைகளிலே இதுவொருமுறை என்னுமிவ்வளவே உணரத்தக்கது.

கூடலிழைத்தல் பெண்டிர்க்கே உரியதென்றும், இங்கு "இழைப்பன் திருக்கூடல்" என்று ஆழ்வாரருளிச்செய்தது நாயகீ ஸமாதியில் என்றும் அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்வர்.

பின்னடிகட்கு இரண்டுவகையாகக் கருத்துரைக்கலாம்;—மலையருவிகளில் மணிகள் பளபளவென்று ஜ்வலித்துக்கொண்டு உடன் விழுகின்றனவாம்; அவற்றை யானைகள் கண்டு 'இவை கொள்ளிவட்டம்' என்று ப்ரமித்து அஞ்சிச்சிதறுகின்றனவாம்;

பாம்புகளோவென்னில், அந்த ரத்னங்களை மின்னலாக ப்ரமித்து அஞ்சிப் புற்றிலேசென்று ஒடுங்குகின்றனவாம்; ஆக இப்படி அஸ்தாநே பயசங்கை பண்ணுதற்கு இடமான திருமலையைக்கூடக் கூடவிழைப்பன் என்கை. அன்றியே, அருவிகளில் விழுந்த ரத்னங்களைக்கண்ட யானைகள் ‘இவை கொள்ளிவட்டம்’ என்று ப்ரமித்து ஓடப்புக்கவாறே மலைப்பாம்பின் வாயிலே விழும்படி யாயின என்னவுமாம்.

சில மலைப்பாம்புகள் யானையைப்பார்த்து அஞ்சி நடுங்கி ஓடிப் போய்விடுமென்றும், பல மலைப்பாம்புகள் யானையை அணுகி விழுங்கிவிடுமென்றும் தமிழ்நூல்களால் தெரிகின்றது. ‘திரையன் பாட்டு’ என்ற ஓர் பழையநூலில்—“கடுங்கண்யானை நெடுங்கை சேர்த்தி, திடங்கொண்டுறைதல் . திண்ணமென்றஞ்சிப், படங் கொள் பாம்பும் விடரகம்புகூஉம், தடங்கொள் உச்சித்தாழ்வரை யடுக்கத்து” என்றதனால் மலைப்பாம்பு யானையைக்கண்டு அஞ்சி யொளிக்குமென்பது தெரிகின்றது.

“ஞால்வாய்க்களிறு பாந்தட்பட்டெனத், துஞ்சாத்துயரத் தஞ்சுபிடிப்பூசல், நெடுவரை விடரகத்தியம்பும், கடுமான் புல்லிய காடிறந்தோரே” என்று சங்கநூல்களுள் ஒன்றான நற்றிணையி லும், “பரியகளிற்றை அரவுவிழுங்கி மழுங்க விருள்கூர்ந்த, கரிய மிடற்றர் செய்யமேனிக் கயிலைமலையாரே” என்று $ தேவாரத்தி லும், “இடிகொள் வேழத்தை எயிற்றொடு மெடுத்துடன் விழுங் கும், கடியமாசுணங் கற்றறிந்தவரென வடங்கிச், சடைகொள் சென்னியர் தாழ்விலர் தாமிதித்தேறப், படிகடாமெனத்தாழ்வரை கிடப்பன பாராய்” என்று ‡ கம்பராமாயணத்திலும் உள்ளபாட்டுக் களால் மலைப்பாம்பு யானையை விழுங்குமென்பது தெரிகின்றது. அஞ்சியொளித்தல் சிறுபான்மையும், விழுங்குதல் பெரும்பான் மையுமா யிருக்குமென்ப. யானை வெருவவும், அரவு ஒடுங்கவும் பெற்ற மலை, என்பது முதல் யோஜனையில் பதவுரை. யானையானது வெருவி அரவின்வாயிலே ஒடுங்கப்பெற்ற மலை என்பது இரண்டா வது யோஜனையில் பதவுரை.

---

$ தேவாரம் திருக்கயிலாயம் முதல் திருமுறை 2, ஆம் பாட்டு.

‡ சித்திரகூடப்படலம் 34 ஆம் பாட்டு.

மூன்றாமடியில், "வரண்டி" "வரன்றி" என்பன பாட பேதங்கள். ... .... .... ... (௯௧)

வெற்பென்று வேங்கடம் பாடினேன் * வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன் *—கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டிகேள்வனார் *
கால்வலையில் பட்டிருந்தேன் காண். (௯௨)

வெற்பு என்று — பலமலைகளையும் சொல்லிவருகிற அடைவிலே
வேங்கடம் பாடினேன் — திருமலையையும் சொன்னவனானேன்;
(இந்த உக்தி மாத்திரத்திலே)
வீடு ஆக்கி நிற்கின்றேன் — 'மோக்ஷம் நமக்கு ஸித்தம்' என்னும்படியாக அமைந்தேன்;
நின்று நினைக்கின்றேன் — 'நாம் சொன்ன ஒரு சிறிய சொல்லுக்குப் பெரிய பேறு கிடைத்த பாக்கியம் என்னோ!' என்று நினைத்து ஸ்தப்தனாயிருக்கின்றேன்;

கற்கின்ற — ஓதப்படுகிற
நூல் — வேதங்களாகிற சாஸ்த்ரங்களில்
வலையில் பட்டிருந்த — வலையினுள் அகப்பட்டிருப்பதுபோல் நிலைபேராமல் நிற்கின்ற
நூலாட்டி கேள்வனார் — லக்ஷ்மீநாதனான எம்பெருமானுடைய
கால் வலையில் பட்டிருந்தேன் — திருவடிகளாகிற வலையிலகப்பட்டுத் தரித்து நிற்கின்றேன்.
(காண்—முன்னிலையசை.)

* * *—வெற்பென்று வேங்கடம் பாடினேன்='மலை' என்று வருகிற பெயர்களையெல்லாம் அடுக்காகச் சொல்லுவோமென்று விநோதமாக முயற்சிசெய்து 'பசுமலை, குருவிமலை, பறங்கிமலை' என்று பலவற்றையும் சொல்லிவருகிற அடைவிலே என்னையுமறியாமல் 'திருவேங்கடமலை' என்று என்வாயில் வந்துவிட்டது; இவ்வளவையே கொண்டு எம்பெருமான் என்னைத் திருவேங்கடம் பாடினவனாகக் கணக்குசெய்து கொண்டானென்பது இதன் கருத்து.

வீடாக்கி நிற்கின்றேன்=யாத்ருச்சிகமான இந்த உக்திமாத்திரத்தில் "மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கையதுவே" என்

னும்படியாகப் பரமபதமும் ஸித்தமென்னப் பேறுபெற்றவனுயி னேன் என்கை.

நின்று நினைக்கின்றேன்=நாம் புத்திபூர்வகமாக ஒரு நல்ல சொல்லும் சொல்லாதிருக்கவும் எம்பெருமான்றானே மடிமாங்கா யிட்டுத் திருவுள்ளம் பற்றுகிறவிது என்ன ஆச்சரியம்! என்று இதனையே அநுஸந்தித்து ஈடுபடா நின்றேனென்கை.

கற்கின்ற நூல்வலையிற்பட்டிருந்த நூலாட்டி கேள்வனார் கால் வலையிற் பட்டிருந்தேன்=எம்பெருமான் ஸகலசாஸ்த்ரங்களாலும் ப்ரதிபாதிக்கப்படுபவனாதலால் அவனுக்கு 'நூலாளன்' என்று பெயர்; இப்பெயர்க்குப் பெண்பால் 'நூலாட்டி' என்பதாம்; 1. "தேவி! ஶ்ருதிம் ஸமவதீம் ஸ்ம்ருதிஶாஸ்த்ராணி ஸூக்தாநி ச உபநிஷத்ஸமூஹம் ஸமாஹு: த்வாமேவ ஸர்வாணி ... ..." [பெரிய பிராட்டியாரே!, வேதங்களும் வேதாங்கங்களும் எல்லாங்கூடி உமது திருக்கல்யாண குணங்களையே ப்ரதிபாதிப்பனவாகப் பெரியோர் கூறுவர்] என்று பட்டர் அருளிச்செய்தபடியே எல்லா நூல்களை யும் தனக்குப் ப்ரதிபாதகமாகவுடையவள் என்ற காரணத்தினாலும் 'நூலாட்டி' என்று பெயர் பெறுவள் பிராட்டி; அவளுடைய கேள்வனார்—எம்பெருமான்; அவன் எப்படிப்பட்டவனென்றால் கற்கின்ற நூல்வலையிற் பட்டிருந்தவன்; (அதாவது) பரம்பரையாக அஸ்மதாதிகளால் ஓதப்பட்டுவருகின்ற சாஸ்த்ரங்களாகிற வலை யிலே பாஹ்யகுத்ருஷ்டிகளால் அசைக்க வொண்ணாதபடி அகப் பட்ட எம்பெருமானுடைய திருவடிகளாகிய வலையிலே நான் சிக் கிக் கொண்டிருக்கின்றேன் என்கை.

மூன்றாமடியில், சாஸ்த்ரங்களை எம்பெருமானுக்கு வலையாக வும், ஈற்றடியில் அவ்வெம்பெருமான் திருவடிகளைத் தமக்கு வலை யாகவும் அருளிச்செய்தார்; எம்பெருமானை சாஸ்த்ரங்களில் நின் றும் எப்படி பிரிக்கமுடியாதோ அப்படியே என்னை அப்பெருமான் திருவடிகளில் நின்றும் பிரிக்கமுடியாது என்றவாறு. எம்பெரு மான் ஒருவலையிலே அகப்பட்டான், நானொருவலையிலே அகப்பட் டேன் என்று சமத்காரமாகச் சொல்லுகிறபடி.

1. ஸ்ரீகுணரத்நகோசம்.

நான் அஸ்ஹ்ருதயமாகச் சொன்ன சொல்லையும் அவன் ஸஹ்ருதயமாகக் கொண்டு மடிமாங்காயிட்டு என்னை விஷயீகரித்தருளின கிருபையாலே நான் அவனுடைய திருவடிகட்கே அற்றுத் தீர்ந்தேனென்றாராயிற்று. ... ... ... (௬௰)

காண லுறுகின்றேன் கல்லருவி முத்துதிர *
ஓண விழவி லொலியதிர *—பேணி
வருவேங்கடவா என்னுள்ளம் புகுந்தாய் *
திருவேங்கட மதனைச் சென்று. (௬௧)

கல் அருவி — ஒலிக்கின்ற அருவிகளின் மூலமாக
முத்து உதிர — முத்துக்கள் உதிரப் பெற்றதாய்,
ஓணம் விழவில் — திருவோணத் திருநாளில்
ஒலி அதிர — (திருப்பல்லாண்டு பாடுகை வேத பாராயணம் செய்கை ஆடுகை பாடுகை முதலானவற்றாலுண்டான) த்வநி அதிரப் பெற்றதாய்
பேணி வரு — (பக்தர்கள்) விரும்பி வந்து சேரப் பெற்றதான
வேங்கடவா — திருவேங்கட மலையை இருப்பிடமாகவுடையவனே!
என் உள்ளம் புகுந்தாய் — நீ என்னெஞ்சிலே புகுந்துவிட்டாய்;
(நீ திருமலையைவிட்டு என்னுள்ளத்திலே வந்துவிட்டாலும்)
திரு வேங்கடம் அதனை சென்று காணல் உறுகின்றேன் — நான் அத்திருமலையிற் சென்று ஸேவிக்க விருப்பங்கொண்டிருக்கிறேன்.

* * *—எம்பெருமானே!, நீ திருவேங்கடமலையைவிட்டு என்னுள்ளத்தே குடி கொண்டாயாயினும், நீ இங்குவந்து சேர்வதற்கு ஸாதகமாயிருந்த அந்தத் திருமலைதன்னையும் சென்று ஸேவிக்க வேணுமென்று நான் காதல் கொண்டிருக்கின்றேனென்கிறார்.

"கல்லருவி முத்துதிர" என்பதும் "ஓணவிழவிலொலியதிர" என்பதும் "வேங்கடவா" என்ற விளியின் ஏகதேசமான வேங்கடத்தில் விசேஷணமாக அந்வயிக்கக்கடவன. 'உதிர' 'அதிர' என்பவை வினையெச்சங்களாயினும் பெயரிலே அந்வயிக்குமென்க. எப்

போதும் பேரொலி செய்துகொண்டு வீழ்கின்ற அருவிகளிலே முத்துக்கள் உதிரப்பெற்றதும் (திருவேங்கடமுடையானுடைய திருவவதார நக்ஷத்திரமான) திருவோணத் திருவிழவில் மங்களாசாஸந த்வநிகள் மிகப்பெற்றதுமான திருவேங்கடம் என்கை. "பேணி வரு" என்பதும் திருவேங்கடத்திற்கு விசேஷணம்; பல திசைகளில் நின்றும் பலர் விரும்பிவந்து பணியப்பெற்ற தென்கை. இப்படிப்பட்ட திருமலையிலெழுந்தருளி யிருக்கும் பிரானே! நீ அத்திருமலையை விட்டு என்னுள்ளம் புகுந்தாய்; இனி நீ திருமலையில் இல்லையாயினும் 'நீ உகந்து வாழ்ந்தவிடம்' என்கிற காரணத்தினால் அத்திருமலைதன்னைச் சென்று காணவே நான் விரும்புகின்றேனென்றவாறு.

நானோ திருமலையில் வந்து உன்னைக் காணவிரும்பியிருக்கின்றேன்; நீயோ அங்கு நின்றும் என்னுள்ளத்தே வந்து உறைகின்றாய்; இனி நான் என்செய்வேன்! என்கிறாராகவுமாம்.

ஓணம்—'ச்ரோணா' என்ற வடசொல்லின் விகாரம். (சுக)

சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை *
நின்று வினைகெடுக்கும் நீர்மையால் *—என்றும்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத்தானும் *
அடிக்கமல மிட்டேத்து மங்கு. (சுஉ)

(அன்பர்காள்!)

| | |
|---|---|
| சேண் உயர் வேங்கடத்தை | மிகவும் ஓங்கின (சிகரத்தையுடைய) திருமலையை |
| சென்று வணங்குமின் | சென்று வணங்குங்கோள்; |
| (அத்திருமலையானது) | |
| நீர்மையால் | தன் ஸ்வபாவத்தினால் |
| நின்று வினை கெடுக்கும் | பாவங்களைப் போக்குவதில் நிலை நின்றிருக்கும்; |
| அங்கு | அத்திருமலையில், |
| கடி கமலம் நான்முகனும் | பரிமளம் மிக்க தாமரையிற் பிறந்தவனான பிரமனும் |
| கண் மூன்றத் தானும் | முக்கண்ணனான சிவபிரானும் |
| என்றும் | எக்காலத்தும் |
| அடி | (எம்பெருமானது) திருவடிகளிலே |
| கமலம் | தாமரைப் புஷ்பங்களை |
| இட்டு | ஸமர்ப்பித்து |
| ஏத்தும் | துதித்துக்கொண்டிருப்பார்கள். |

* * *—அன்பர்கட்கு உபதேசிக்கிறார்; சென்னியோங்கு தண் திருவேங்கடத்தைச் சென்று வணங்குங்கள்; அந்தத் திருமலைதானே உங்கள் பாவங்களை யெல்லாம் பாற்றிவிடும்; பிரமன் சிவன் முதலான தேவர்களும் தங்கள் தங்கள் அதிகாரம் பெறுவதற்காக அத்திருமலையிலே சென்று அப்பன் திருவடிகளிலே புஷ்பங்களை யிட்டிறைஞ்சித் துதிபாடிற்பர். ஆகையாலே நீங்களும் அங்கே சென்று வணங்குங்கோள் என்றாராயிற்று.

**சேண் உயர்**=‘சேண்’ என்றாலும் உயர்த்தியே பொருள்; மீமிசைச் சொல். மிகவும் உயர்ந்த என்றபடி. **நீர்மையால்**—பாவங்களைப் போக்குவதே திருமலைக்கு ஸ்வபாவம் என்க. ‘வேங்கடம்’ என்னும் வடசொல்லின் நிருக்தி காண்க: தன்னையடைந்தவர்களது பாவமனைத்தையும் ஒழிப்பதனால் வேங்கடமெனப் பெயர் பெற்றதென்ப. **வேம்**—பாவம்; **கடம்**—எரித்தல் எனப்பொருள் காண்க. “வெங்கொடும் பவங்களெல்லாம் வெந்திடச் செய்வதால் நல், மங்கலம் பொருந்துஞ்சீர் வேங்கடமலையான தென்று” என்ற புராணச் செய்யுளுங் காண்க. .... .... .... .... (௪௨)

**மங்குல்தோய் சென்னி வடவேங்கடத்தானை ***
**கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான் *—திங்கள்**
**சடையேற வைத்தானும் தாமரை மேலானும் ***
**குடையேறத் தாம்குவித்துக் கொண்டு.** (௪௩)

| | | | |
|---|---|---|---|
| மங்குல் தோய் சென்னி | மேகமண்டலத் தளவுஞ் சென்று கிட்டியிருக்கிற சிகரத்தை யுடைத்தான | தாமரை மேலானும் | தாமரைப் பூவிற் பிறந்த பிரமனும் |
| | | தாம் | ஆகிய இவர்கள் |
| வட வேங் கடத்தானை | வட திருவேங்கட மலையில் எழுந் தருளியிருக்கும் பெருமானுக்கு | குடை ஏற குவித்துக் கொண்டு | திருமுத்துக்குடை முதலான உபகரணங்களைச் சேகரித்துக் கொண்டு |
| காப்பு அணிவான் | திருவந்திக் காப் பிடுவதற்காக | கங்குல் | ஸந்த்யா காலந்தோறும் |
| திங்கள் சடை ஏற வைத்தானும் | சந்திரனைச் சடை யிலே ஏற வைத் துக் கொண்டுள்ள சிவனும் | புகுந்தார்கள் | திருமலைக்குச் செல்லுவர்கள். |

* * *—இிழ்ப்பாட்டில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ப்ரஹ்மருத்ரர்கள் திருமலையில் ஏதோவொருகால் வந்து ஆச்ரயித்துப் போமவர்களல்லர்; அந்திதோறும் புகுந்து திருவந்திக்காப்பிடுவ ரென்கிறார். **கங்குல்** என்ற சொல் இரவுக்கு வாசகமாயினும் இரவின் முகமான அந்திப்பொழுதைச் சொல்லக்கடவதிங்கு.

**திங்கள் சடையேற வைத்தானும்**=தக்ஷமுனிவனது சாபத்தால் க்ஷயமடைபவனுய்க் கலைகுறைந்து வந்து சரணமடைந்த சந்திரனை முடியின்மீது கொண்டு வாமளித்துப் பாதுகாத்ததனுல் சிவன் 'தளிர் மதிச் சடையன்' என்றும் 'சந்த்ரமௌளி' என்றும் பெயர் பெற்றனனென்க.

ஈற்றடியில், திருவாராதனத்திற்கு உபகரணமான குடையொன்றைச் சொன்னது—மற்றும் சாமரம் முதலிய உபகரணங்கட்கும் உபலக்ஷணமென்க.

இரண்டாமடியில் '**புகுந்தார்கள்**' என்று இறந்தகாலமாகச் சொல்லப்பட் டிருந்தாலும், 'நித்யமாகப் புகுந்துகொண் டிருக்கின்றனர்' என்று நிகழ்காலப் பொருள் கொள்ளக் குறையில்லை; "விரைவினு மிகவினுந் தெளிவினு மியல்பினும், பிறழவும் பெறூஉமுக் காலமுமேற்புழி" என்ற நன்னூற் சூத்திரமுணர்க.

**அணிவான்**—வான்விகுதி பெற்ற வினையெச்சம். .... (சங)

கொண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய் *
தண்ட வரக்கன்தலை தாளால்—பண்டெண்ணி *
போம்குமரன் நிற்கும் பொழில்வேங்கட மலைக்கே *
போம்குமர ருள்ளீர் புரிந்து. (சச)

| | | | |
|---|---|---|---|
| குமரர் உள்ளீர் | இளமொளி யிளமை கெடாமலிருப் பவர்களே!, | தண்டம் அரக்கன் | தண்டிக்கத் தகுந்தவனுன இராவணனுடைய |
| பண்டு | முன்பொருகால். | தலை தாளால் | பத்துத் தலைகளையும் திருவடியாலே |
| குடங்கால் மேல் | மடியிலே | | |
| கொண்டு வைத்த குழவி ஆய் | எடுத்து வைக்கும் சிறு குழந்தை யாய்க் கொண்டு | எண்ணி | கீறி எண்ணிக் காட்டிவிட்டு |

| | | | |
|---|---|---|---|
| போம் | அந்தர்த்தான மடைந்தவனை | பொழில் வேங்கட மலைக்கே | சோலைகள் சூழ்ந்த திருமலைக்கே |
| குமரன் | நித்யயுவாவான எம்பெருமான் | புரிந்து போம் | ஆசைகொண்டு செல்லுங்கோள். |
| நிற்கும் | நிற்குமிடமான | | |

* * *—இப்பாட்டில் அநுஸந்திக்கப்பட்டிருக்கிற பழங் கதை முதல்திருவந்தாதியில் 'ஆமேயமரர்க்கறிய' என்ற நாற்பத் தைந்தாம் பாட்டிலும், மூன்றாந்திருவந்தாதியில் "ஆர்ந்தவரு மறையோன்" என்ற எழுபத்தேழாம் பாட்டிலும் பொய்கையாழ்வா ராலும் பேயாழ்வாராலும் அநுஸந்திக்கப்படுகின்றது. முன்பு இராவணன் தனது பத்துத்தலைகளை மறைத்துக்கொண்டு நான்முக னிடஞ்சென்று வரம் வேண்டிக் கொள்ளுமளவில் எம்பெருமான் ஒரு சிறு குழந்தைவடிவாய் அப்பிரமனுடைய மடியிலே உறங்கு வான் போலே கிடந்து 'இவன் பத்துத்தலைகளையுடைய இராவணன் காண்; ஸ்வஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டு உன்னை வஞ்சித்து வரம் வேண்டிக்கொள்ள வந்திருக்கிறான்; இவனுக்கு நீ வரமளித் தால் பெருந்தீங்காக முடியும்' என்று தெரிவிப்பவன் போன்று தன் திருவடியால் அவ்விராவணனுடைய பத்துத் தலைகளையும் எண் ணிக் காட்டினன்—என்பதாக இவ்வரலாறு விளங்குகின்றது; இக் கதை இதிஹாஸ புராணங்களில் உள்ளவிடம் தெரியவில்லை: பெரி யாழ்வார்திருமொழியில் "சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ள வும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண் டாய்" (2—7—8.) என்றும், "எல்லியம் போதினி திருத்தலிருந் தோரிடவகையில், மல்லிகைமாமாலை கொண்டங்கார்த்தது மோரடை யாளம்" (3—10—2.) என்றும் அருளிச்செய்த கதைகள் வ்யாஸ வால்மீகி முதலிய முனிவர்களால் ஸாக்ஷாத்கரிக்கப்படாமல் ஆழ்வா ரால் மாத்திரம் நிர்ஹேதுக கடாக்ஷமடியாக ஸாக்ஷாத்கரிக்கப் பட்டவை யென்று நம் பூருவாசாரியர்கள் $ நிர்வஹித் திருப்பது போலவே இக்கதையும் ஆழ்வார்களால் மாத்திரம் ஸாக்ஷாத்கரிக்கப் பட்ட தென்று பெரியோர் கூறுவர். இனி இதற்கு இதிஹாஸ

---

$ பெரியாழ்வார் திருமொழி 5—4—6 பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் காண்க.

புராணங்களில் ஆகர முண்டேடல் கண்டு கொள்க; விரிவும் வல்லார் வாய்க் கேட்டுணர்க.

இப்படிப்பட்ட எம்பெருமான் நின்றருளும் திருவேங்கட மலைக்கே விரும்பிச் சென்று சேருங்கள் என்றாராயிற்று. வயது முதிர்ந்த பின்பு * தண்டுகாலா வூன்றி யூன்றித் தள்ளிநடக்கும் முதுமையில் திருமலையை நெஞ்சால் நினைக்கவும் முடியாததலால் கிளரொளியிளமை கெடுவதன் முன்னம் திருமலைக்குப் போகவேணு மென்கிறார் 'குமரருள்ளீர்!' என்ற விளியால். .... (சச)

புரிந்து மலரிட்டுப் புண்டரீகப் பாதம் *
பரிந்து படுகாடுநிற்ப *—தெரிந்தெங்கும்
தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடமே *
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு. (சரு)

| | |
|---|---|
| புண்டரீகம் பாதம் | திருவடித் தாமரைகளில் |
| புரிந்து | அன்புபூண்டு |
| மலர் இட்டு | புஷ்பங்களைப் பணிமாறி |
| பரிந்து | மங்களாசாஸநம் பண்ணி |
| படு காடு நிற்ப | வெட்டி வீழ்த்த மரங்கள் போலே கால்பேராமல் நிற்கும்படியாக |
| எங்கும் | ஸகல ப்ரதேசங்களிலும் |
| தெரிந்து | விளங்கி |
| தான் ஓங்கி நிற்கின்றான் | குணங்களால் பெருமை பெற்று எழுந்தருளியிருக்குமெம்பெருமானுடையதாய் |
| தண் அருவி வேங்கடமே | குளிர்ந்த அருவிகளையுடைத்தான திருமலையே |
| வானோர்க்கும் | நித்யஸூரிகளுக்கும் |
| மண்ணோர்க்கும் | நிலத்தேவரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் |
| வைப்பு | நிதியாயிருக்கும். |

* * *—திருமலை இந்நிலத்திலுள்ள ஸம்ஸாரிகளுக்கு மாத்திரம் ப்ராப்யமன்று; வானுலகத்துள்ள நித்யஸூரிகளுக்கும் ப்ராப்ய மென்கிறார்.

ஆதரத்துடன் திருவடித்தாமரைகளில் புஷ்பங்களைப் பணிமாறி 'பல்லாண்டு பல்லாண்டு' என்றும் 'ஜிதம் தே புண்டரீகாக்ஷ!' என்றும் மங்களாசாஸநம் பண்ணி, கால்பெயர்ந்து வெளியில் போக மாட்டாமல் அவ்விடத்திலேயே அன்பர் குடிகொண் டிருக்கும்படி யாகக் கடாக்ஷித்தருள்கின்ற ஸ்ரீநிவாஸன் நித்யவாஸம் பண்ணுமிட

மாய், குளிர்ந்த அருவிகள் பாய்ந்து போக்யமான திருவேங்கடங் மலை நித்யஸூரிகளோடு ஸம்ஸாரிகளோடு வாசியற அனைவர்க்கும் புகலிடமா யிருக்கின்றது என்றதாயிற்று.

பரிந்து=பரிவாவது பயசங்கை பண்ணுதற்கு இடமல்லாத விடத்தில் பயசங்கைபண்ணி அன்பு பாராட்டுதல்: காப்பிடுதலைச் சொன்னபடி.

படுகாடுநிற்ப=படுகாடுபோல் நிற்கும்படியாக என்றபடி: உவம வுருபு தொக்கிக்கிடக்கிறது; வெட்டித்தள்ளப்பட்ட மரங்களைப் படு காடு என்கிறது. அதுபோல் நிற்கும்படியாக வென்றது—அம்மரங் கள் ஆடாது அசையாது அவ்விடத்திலேயே கிடப்பதுபோல் கிடக் கும்படியாக என்றவாறு. வைப்பு-நிதி; பூமிக்குள் புதைத்துவைக்கப் படுவது என்று காரணக்குறி. நிதிபோல் விரும்பத் தகுமென்கை.

வைப்பன் மணிவிளக்கா மாமதியை * மாலுக்கென்
றெப்பொழுதும் கைநீட்டும் யானையை *—எப்பாடும்
வேடுவளைக்கக் குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே *
நாடுவளைத் தாடுதுமேல் நன்று. (சுகூ)

| | |
|---|---|
| மா மதியை | ‘சிறந்த (இந்த) சந்திரனை |
| மாலுக்கு | திருவேங்கட முடையானுக்கு |
| மணி விளக்கு ஆ | மங்களதீபமாக |
| வைப்பன் என்று | (திருமுன்பே) வைக்கக்கடவேன்’ என்றெண்ணி |
| (அந்த சந்திரனைப் பிடிப்பதற்காக) | |
| எப்பொழுதும் | எப்போதும் |
| கை நீட்டும் | உயரத்தூக்கின கை தூக்கினபடியே யிருக்கிற |
| யானையை | ஒரு யானையை (ப்பிடிப்பதற்காக) |
| எப்பாடும் | நாற்புறமும் |
| வேடு வளைக்க | வேடர் சூழ்ந்து கொள்ள |
| குறவர் | (அங்குள்ள) குறவர்கள் |
| வில் எடுக்கும் | (அவ்யானையின் மேல்பிரயோகிக்க) வில்லை எடுத்துக் கொண்டு போகுமிடமான |
| வேங்கடமே | திருமலையையே |
| நாடு | நாட்டிலுள்ளா ரனைவரும் |
| வளைத்து | பிரதக்ஷிணம் பண்ணி |
| ஆடுதும் எல் | (மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாக) நர்த்தனம்பண் ணப் பெற்றால் |
| நன்று | நல்லது. |

* * *—திருமலையில் நிகழும் ஒரு நிகழ்ச்சியை வருணிக்கின்றா ரிதில். ஆகாயத்திலே அழகிய விளக்குப்போல் தோன்றும் சந்திரனைக் கண்ட ஒரு யானையானது 'இதனை நமது துதிக்கையினால் பிடித்தெடுத்து ஸ்ரீநிவாஸன் ஸந்நிதியில் நந்தாவிளக்காக வைத்திட்டால் நன்றாயிருக்கும்' என்று கருதி அச்சந்திரனைப் பிடிப்பதற்காக நீட்டின கை நீட்டினபடியே யிருக்கையில் அவ்யானையின் நோக்கமெல்லாம் சந்திரனைப் பிடிப்பதாகிற அக்காரியமொன்றிலேயே ஊன்றியிருந்ததனால் அந்த அநுபபரத்வத்தையே பற்றாசாகக் கொண்டு வேடர்கள் மெல்ல அருகில்வந்து வளைத்துக்கொள்ள, குறவர் அம்புதொடுக்கின்றனராம்; ஆகஇப்படிப்பட்ட நிகழ்ச்சிக்கு இடமான திருமலையை நாமெல்லாரும் வலம் வந்து மகிழ்ந்து கூத்தாடுவோமாயின் இதுவே நமக்கு ஸ்வரூபம் என்றாராயிற்று.

திருமலை சந்திரமண்டலத்தை எட்டியிருக்கின்றதென்று அதன் ஓக்கம் வெளியிடப்பட்டதாயிதனால். மலைகளில் சந்திரனை மிக்க ஸமீபத்திலிருப்பதாகக் காணும் மலைப்பிராணிகள் அவனைக் கைக்கொள்ளவிரும்பிப் பல முயற்சிகள் செய்வது இயல்பு; 1. "நஞ்சுமிழ் நாகமெழுந்தணவி நளிர்மாமதியைச், செஞ்சுடர் நாவளைக்குந் திருமாலிருஞ்சோலையதே" என்றதுங்காண்க.

**மாமதியை மாலுக்கு மணிவிளக்கா வைப்பன் என்று கை நீட்டும் யானையை** என்கிறாரே ஆழ்வார்; யானை சந்திரனைப்பிடிக்க முயற்சிசெய்வது வெளிக்குத் தெரியுமேயன்றி இன்ன காரியத்திற்காக அதனைப்பிடிக்க முயல்கிறது என்பது தெரியமாட்டாதே; திருமலையப்பனுக்கு நந்தாவிளக்காக வைப்பதற்குப் பிடிக்கமுயல்கின்றதென்று ஆழ்வார் எங்ஙனே அறிந்தார்? என்று சிலர் கேட்கக்கூடும்; திருமலையில் பிறக்கப்பெற்ற பெருமையினால் அவ்யானைக்கு இப்படிப்பட்ட நற்கருத்தே இருக்கத்தகும் என்று திருவுள்ளம் பற்றினரென்க. அன்றியும், 2. "வாயுந்திரையுகளும்" என்கிற திருவாய்மொழியிற்படியே பிறர் செய்யும் காரியங்களையெல்லாம் தாம் செய்யுங் காரியங்கள்போல் பகவத்விஷய ப்ராவண்யத்தால் செய்வனவாகவே கொள்வதும் மெய்யன்பர்களின் வழக்கமாகும்.

1. பெரியாழ்வார் திருமொழி 4—3—2.
2. திருவாய்மொழி இரண்டாம்பத்தின் முதற்பதிகம்.

ஆழ்வார் சந்திரனைப்பார்க்கும்போது 'இவன் திருவேங்கடமுடையானுக்கு நந்தாவிளக்காக அமையத்தகும்' என்று தோற்றவே, இத்தோற்றமே அவ்விடத்து யானைக்கும் இருந்ததாகக் கொண்டு கூறுதல் பொருந்தியதே.

ஈற்றடியில் "ஆடுதுமேல்" "ஆடுதிரேல்" என்பன பாடபேதங்கள். .... .... .... .... (சசு)

நன்மணி வண்ணனூர் ஆளியும் கோளரியும் *
பொன்மணியும் முத்தமும் பூமரமும் *—பன்மணிநீ
ரோடுபொருதுருளும் கானமும் வானரமும் *
வேடுமுடை வேங்கடம். (சஎ)

| | |
|---|---|
| ஆளியும் | யாளிகளும் |
| கோள் அரியும் | வலிமை தங்கிய சிங்கங்களும் |
| பொன் | பொன்களும் |
| மணியும் | மாணிக்கங்களும் |
| முத்தமும் | முத்துக்களும் |
| பூ மரமும் | பூத்தமரங்களும் |
| பல் மணி நீரோடு பொருது உருளும் கானமும் | பலவகைப்பட்ட ரத்னங்கள் அருவிகளோடே கலந்து உருண்டு விழப்பெற்ற காடுகளும் |
| வானரமும் | குரங்குகளும் |
| வேடும் | வேடச்சாதியுமாகிற இவற்றை |
| உடை | உடையதான |
| வேங்கடம் | திருமலையானது |
| நல் மணி வண்ணன் ஊர் | நல்ல நீலரத்னம் போன்ற வடிவை யுடையனான அப்பனுடைய வாஸஸ்தானமாம். |

* * *—திருமலையி லெழுந்தருளியிருக்கின்ற திருவேங்கடமுடையான் தமக்கு எப்படி உத்தேச்யனோ அப்படியே அவ்விடத்துள்ள ஸகல பதார்த்தங்களும் உத்தேச்யம் என்பது வெளிப்பட இப்பாசுர மருளிச்செய்கிறாரென்க.

யாளிகள், சிங்கங்கள், நவரத்னங்கள், புஷ்பவ்ருக்ஷங்கள், நவமணிகளைக் கொழித்துக்கொண்டு வந்து வீழ்கின்ற அருவிகள் பாயப்பெற்ற காடுகள், குரங்குகள், வேடர்கள் ஆகிய இவையெல்லாவற்றையு முடைத்தான திருமலை மணிவண்ணனுடைய திருப்பதி என்கை. .... .... .... .... (சஎ)

வேங்கடமே விண்ணோர்தொழுவதுவும் * மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய்தீர்ப்பதுவும் *—வேங்கடமே
தானவரை வீழத் தன்னாழிப்படை தொட்டு *
வானவரைக் காப்பான் மலை. (சசு)

| | | | |
|---|---|---|---|
| விண்ணோர் | நித்யஸூரிகளால் | வேங்கடமே | திருமலையே; |
| மெய்ம்மையால் | உண்மையான பக்தியுடனே | தானவர் வீழ | அசுரர்கள் மாளும்படி |
| தொழுவதுவும் | ஆச்ரயிக்கப் படுவதும் | தன் ஆழி படைதொட்டு | தனது சக்ராயுதத்தைப் பிடித்து |
| வேங்கடமே | திருமலையே; | வானவரை | தேவர்களை |
| வினை | பாவங்களையும் | காப்பான் | காத்தருளும் பெருமானுடைய |
| மெய் நோய் | உடம்பைப் பற்றின நோய்களையும் | மலை | திருமலை |
| தீர்ப்பதுவும் | போக்கடிக்கவல்லதும் | வேங்கடமே | திருவேங்கடமேயாம். |

* * *—"**ஸதா பஶ்யந்தி ஸூரய:**" என்கிறபடியே நித்யஸூரிகள் பரமபதத்திலே எம்பெருமானை இடைவிடாது அநுபவிக்கப்பெற்றாலும் அங்கே பரத்வத்திற்கு உரிய மேன்மைக்குணங்களை அநுபவிக்கலாயிருக்குமேயன்றி ஸௌலப்யஸௌசீல்யங்களுக்குருப்பாங்கான எளிமைக்குணங்களை இந்நிலத்திலே வந்து அநுபவிக்கவேண்டியிருப்பதால் அந்த சீலாதிகுணங்களை யநுபவிப்பதற்காகத் திருமலையில் வந்து தொழும்படியைக் கூறுவது முதலடி.

'**வேங்கடம்**' என்ற திருநாமத்தின் அவயவார்த்தத்தைத் திருவுள்ளம்பற்றி இரண்டாமடி அருளிச்செய்யப்பட்டது. வேங்கட பதத்திற்கு ஸம்ஸ்க்ருதநிருக்தியில் பொருள் விவரிக்குமிடத்து, **வேம்**—பாவம், **கடம்**--எரித்தல்; பாவங்களை எரிப்பதனால் வேங்கடமென்று பெயர் பெற்றது என்று நிருக்தியுள்ளது: "**வெஜித்ருஶேஷவாவானி கடதூஹ உச்யதே**" என்றது காண்க. "வெங்கொடும்பவங்களெல்லாம் வெந்திடச்செய்வதால் நல், மங்கலம் பொருந்துஞ்சீர் வேங்கடமலை யானதென்று" என்னும் புராணச் செய்யுளுமுணர்க. திருமலையின் மேற்கிலுள்ள நந்தபுரமென்னும் ஊரில் புரந்தரனென்னும் ப்ராஹ்மணோத்தமனது குமாரனாகிய மாதவ

னென்பவன் தன் மனைவியாகிய சந்த்ரரேகையென்பவளோடு பூஞ்சோலையிற் சென்று விளையாடிக்கொண்டிருக்கையில் யாமிநி யென்பாளொரு சண்டாள கன்னிகையின் கட்டழகைக்கண்டு காமுற்று அவளைக்கூடி மனையாளைத்துறந்து அப்புலைமங்கையுடனே சென்று புலால்நுகர்ந்தும் கட்குடித்தும் கைப்பொருள் முழுவதை யும் இழந்து பின்பு வழிபறித்தல் உயிர்க்கொலை முதலிய கொடுந் தொழில்புரிந்து பொருள்சேர்த்து அவளுக்குக் கொடுத்துவந்து முடிவில் தரித்ரனாகிப் பலநோய்களையுமடைந்து அவளால் அகற்றப் பட்டவனாய்ப் பல பாவமுந்தொடரப் பித்தன்போல அலைந்து திரிந்து இத்திருமலையை அடைந்தமாத்திரத்தில் தனது தீவினை யெல்லாம் சாம்பலாகப்பெற்று முன்னைய ப்ரஹ்மதேஜஸ்ஸைப் பொருந்தி நல்லறிவுகொண்டு திருமாலைச்சேவித்து வழிபட்டுப் பரமபதமடைந்ததனால் இதற்கு 'வேங்கடாசலம்' என்னும் பெயர் நிகழ்ந்ததென்று வடமொழியில் ப்ரஹ்மாண்ட புராணத்திலும் பவிஷ்யோத்தர புராணத்திலும் கூறப்படுதல் காண்க. இங்ஙனே பல இதிஹாஸங்களுண்டு. திருமலை நோய்தீர்க்கும் விஷயம் இப்போதும் பிரத்யக்ஷமாக அனைவருங் காணத்தக்கதாம்.

தேவஜாதிக்கு அஸுரஜாதியால் நேருந் துன்பங்களைத் திரு வாழியால் தொலைத்துக் காத்தருளுமெம்பெருமான் அப்படியே நம்போன்ற ஆச்ரிதர்களினுடையவும் துன்பங்களைத் தொலைத்தருள எழுந்தருளியிருக்குமிடம் திருமலை என்பன பின்னடிகள்.

தானவர்—வடசொல். ஐ—சாரியை. .... (சஅ)

மலையாமைமேல்வைத்து வாசுகியைச்சுற்றி *
தலையாமை தானொரு கைபற்றி *—அலையாமல்
பீறக்கடைந்த பெருமான் திருநாமம் *
கூறுவதே யாவர்க்கும் கூற்று. (சகூ)

| | | | |
|---|---|---|---|
| மலை | மந்தரபர்வதத்தை | ஆமைதான் | கூர்மரூபியாகத் திருவவதரித்த தானே |
| ஆமை மேல் வைத்து | கூர்மரூபியான தன்மேல்வைத்து | | |
| வாசுகியை | வாஸுகிநாகத்தை | தலை ஒரு கை பற்றி | (மலையினுச்சியை) ஒருகையாலே பிடித்தமுக்கி |
| சுற்றி | (கடை கயிறாகச்) சுற்றி | | |

| | | | |
|---|---|---|---|
| அலையாமல் | நீர் வெளியில் புரளாமல் | திருநாமம் | திருநாமங்களை |
| பீற | (அமுதம்) புறப்படும் படியாக | கூறுவதே | வாய்விட்டுச் சொல்லுவதே |
| கடைந்த | (கடலைக்) கடைந்தருளின | யாவர்க்கும் | அனைவர்க்கும் |
| பெருமான் | எம்பெருமானுடைய | கூற்று | வாய்ப்பேச்சாகக் கடவது. |

* * *—கீழ்ப்பாட்டில் "வானவரைக் காப்பான்மலை" என்றார்; அப்படி வானவரைக் காத்தருள்வதற்காகச் செய்தருளின செயல்களில் ஒன்றை அருளிச்செய்கிறாரிதில்.

துர்வாஸமாமுனிவர் தேவேந்திரனுக்கு அன்புடன் அளித்திட்ட பூமாலையை அவன் அலக்ஷியஞ் செய்ததுகண்டு 'இப்படி செல்வச்செருக்குற்ற உன்னுடைய செல்வமெல்லாம் கடலில் ஒளிந்து போகக்கடவன' என்று சபிக்கவே, அப்படியே போய்விட, அசுரர் வந்து பொருது அமரரை வென்றுவிட்டனர். பிறகு தேவர்களெல்லாரும் திரண்டுவந்து எம்பெருமானைச் சரணமடைய, திருமால் திருவருள்கூர்ந்து கடல்கடைந்து அமுதமளித்து வாழ்வித்தனன் என்பது பிரஸித்தம். அப்போது மந்தரமலையை மத்தாகநாட்டி வாஸுகியென்னும் நாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிக்கடைந்தனன். மத்தாகிய மந்தரமலை கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்கள் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமை வடிவமெடுத்து அம்மலையின்கீழே சென்று அதனைத் தனது முதுகின்மீதுகொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமற் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தனன் என்பதும் அறியத்தக்கது.

"**தலையாமை தானொருகைபற்றி**" என்ற இரண்டாமடியை 'ஆமை *(யான) தான் ஒருகை தலைபற்றி' என்று அந்வயித்துரைப்ப. முதலில் கடல் கடையும்போது வாஸுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப் பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய இருதிறத்தாரும் அதனை வலியப்பிடித்திழுத்துக்கடைய வல்லமையில்லாதவராய்நிற்க, அது நோக்கி அத்திருமால் தான் ஒரு திருமேனியைத்தரித்துத் தேவர்கள் பக்கத்திலும் வேறொரு திருமேனியைத்தரித்து அசுரர்பக்கத்திலும் நின்று

கடைந்தருளினமை கூறப்படுகின்றதென்க. மேலே சொல்லியபடி மலையினுச்சியை ஒரு கையா லமுக்கினபடியைக் கூறுகின்றதென்றலுமாம்.

ஆகவிப்படி பரோபகாரமே போதுபோக்கான பெருமானுடைய திருநாமங்களை வாயாரக் கூறுவதே வாய்படைத்த பயனென்றாராயிற்று. .... .... .... (௪௯)

கூற்றமும்சாரா கொடுவினையும் சாரா * தீ
மாற்றமும் சாராவகையறிந்தேன் *—ஆற்றங்
கரைகிடக்கும் கண்ணன் கடல்கிடக்கும் * மாயன்
உரைகிடக்கு முள்ளத்தெனக்கு. (௫௦)

| | | | |
|---|---|---|---|
| கடல் | திருப்பாற் கடலிலே | எனக்கு | என்னுடைய |
| கிடக்கும் | (பிரமன் முதலியோர்க்கு ஆச்ரயணீயனாய்க் கொண்டு) திருக்கண்வளர்ந்தருள்கிற | உள்ளத்து | நெஞ்சிலே |
| | | கிடக்கும் | பதிந்திருக்கின்றது ; |
| | | | (ஆனபின்பு) |
| மாயன் | ஆச்சரியபூதனாய் | கூற்றமும் சாரா | மிருத்யுபயம் அணுகாமலும் |
| ஆறு கரை | திருக்காவேரிக் கரையான கபிஸ்தலத்திலே | கொடு வினையும்சாரா | கொடிய பாவங்கள் அணுகாமலும் |
| கிடக்கும் | திருக்கண் வளர்ந்தருள்கிற | தீ மாற்றமும் சாரா வகை | கெட்ட விஷயங்களொன்றும் அணுகாமலுமிருக்கத் தக்க உபாயத்தை |
| கண்ணன் | எம்பெருமானுடைய | | |
| உரை | ஸ்ரீஸூக்தியாகிய சரமச்லோகம் | அறிந்தேன் | அறிந்தவனானேன். |

* * *—"ஆற்றங்கரை கிடக்குங்கண்ணன்" என்று திருக்காவேரியின் கரையிலுள்ள **கபிஸ்தல** மென்னுந் திருப்பதியிற் பள்ளிகொண்ட திருக்கோலமான எம்பெருமானை மங்களாசாஸநஞ் செய்வதாகப் பூர்வாசாரியர்கள் அருளிச்செய்வர். அத்திருப்பதிக்குப் பாடலான பாசுரம் நாலாயிரத் திவ்யப்ரபந்தங்களுள் இஃதொன்றேயாம். இப்பாசுரத்தில் **கபிஸ்தல** மென்கிற திருநாமம் ஸ்பஷ்டமாக இல்லையாயினும் ஆழ்வார் திருவுள்ளக்கருத்தைக் கண்டறிந்து கூறும் பேராற்றலுடைய ஸ்ரீமந்நாதமுனிகள் ஆள

வந்தார் எம்பெருமானார் பட்டர் முதலான ஆசாரியர்கள் இது திருக்கவித்தலத்தை நோக்கின பாசுரமேயாகுமென்று நிர்வஹித்து வந்தார்களென்பது பெரியவாச்சான் பிள்ளைக்கு முற்பட்டவரான பிள்ளைப் பெருமாளையங்காராலும் தமது நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியினால் தெரிவிக்கப்பட்டுள்ளது. "காணியு மில்லமுங் கைப்பொருளுமீன்றோரும், பேணிய வாழ்க்கையும் பேருறவும்— சேணிற், புவித்தலத்திலின்பமும் போங்கரவமேறிக், கவித்தலத்திற் கண்டுயில்வோன் கால்" என்கிற செய்யுள் அவ்வந்தாதியிலுள்ளது. * பதின்மருரைத்த பதிபொரு நூற்றெட்டுந் துதிசெய்யப்பிறந்த அவ்வந்தாதியில் கபிஸ்தல விஷயமான இப்பாசுரம் சேர்ந்துள்ளதனால் "ஆற்றங்கரைகிடக்குங் கண்ணன்" என்கிற இத்திருமழிசைப்பிரான் பாடல்கொண்டே அது கூறினர் என்பது விளங்கிற்றும்.

பிரமன் முதலிய தேவர்களுக்கு ஆச்ரயணீயனுய்க்கொண்டு திருப்பாற்கடலில் திருக்கண் வளர்ந்தருள்பவனே திருக்கவித்தலத்தில் ஸந்நிதிபண்ணியிரா நின்றான்; இப்பெருமானே பண்டொருகால் பாரதப்போரில் தேர்த்தட்டில் நின்று அர்ஜுநனை வியாஜமாகக்கொண்டு அனைவர்க்கும் உஜ்ஜீவநமாக "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ। அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:" என்கிற சரமச்லோகத்தை யருளிச்செய்தனன்; அந்த திவ்யஸூக்தி எனது நெஞ்சிற் பதிந்திருப்பதனால் இனி நான் ஒருவகையான கெடுதலையும் அடைய வழியில்லை என்றாராயிற்று.

கண்ணபிரான் சரமச்லோகத்தில் நியமித்தபடியே ஸர்வ தர்ம பரித்யாக பூர்வகமாய்ச் சரணாகதி பண்ணினவர் பக்கலில் 'ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்கிற தன்னுடைய பிரதிஜ்ஞை தவறமாட்டாதவனாகையாலும், அப்படியே நான் நிவ்ருத்தி தர்ம நிஷ்டனாயிருப்பதாலும் இனி ஒருபாபமும் என்னை யணுகப்ராப்தியில்லை யென்றவாறு. .... .... .... (௫௦)

எனக்காவா ராரோருவரே * எம்பெருமான்
தனக்காவான் தானேமற்றல்லால் *—புனக்காயா
வண்ணனே யுன்னைப் பிறரறியார் * என்மதிக்கு
விண்ணெல்லா முண்டோ விலை. (௫௧)

| | | | |
|---|---|---|---|
| புனம் | தன்னிலத்திலே வளர்கிற | தானே தனக்கு ஆவான் அல்லால் | தனக்குத் தானே ஒப்பா யிருப்பவனே யன்றி |
| காயா | காயாம்பூவினுடைய | | |
| வண்ணனே | நிறம்போன்ற நிறமுடைய பெருமானே !, | மற்று | எனக்கு ஒப்பாக வல்லையோ ? |
| எனக்கு | (உன்னுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்திற்குப்பாத்ர பூதனை) எனக்கு | உன்னை பிறர் அறியார் | நான் தவிர வேறொருவரும் உன்னை யறிய மாட்டார்கள் ; |
| ஆவார் ஆர் ஒருவரே | ஒப்பாகுபவர் எவரொருவ ரிருக்கின்றனர் ? | என் மதிக்கு | (உன்னை நன்ருக அறிந்திருக்கிற) என்னுடைய புத்திக்கு |
| [எவருமில்லை ;] | | விண் எல்லாம் விலை உண்டோ | மேலுலக மெல்லாம் கூடினுலும் ஒப்பாகப் போருமோ ?. |
| எம் பெருமான் | ஸர்வேச்வரனுகிய நீயும் | | |

* * *—தேவரீர் சரமச்லோகத்தி லருளிச்செய்தபடி புறம் புண்டான உபாயங்களை ருசிவாஸனைகளோடே விட்டொழிந்து தேவரீரையே உபாயமாகப்பற்றி நிர்ப்பரனும் நிர்ப்பயனுமிருக்கிற எனக்கு உபயவிபூதியிலும் ஒப்பாவார் ஆருமில்லை யென்கிருர்.

**எனக்கு**=யானையின்மேல் லேறவேண்டியவன் அவ்யானையின் காலைப்பற்றியே ஏறவேண்டுவதுபோல உன்னை அடையவேண்டியவன் உன்னையே உபாயமாகப்பற்றித்தான் அடைய வல்லான் என்கிற அநந்யோபாயத்வ அத்யவஸாயமுடையேனை எனக்கு என்கை. **ஆவார் ஆரோருவரே ?**=உலகத்திலுள்ளா ரெல்லாரும் ஸ்வப்ரயத்நங்கொண்டே காரியங்கொள்ளப் பார்ப்பவர்களாதலால் என்னுடைய அத்யவஸாயம் ஆர்க்குமில்லை ; ஆகவே எனக்கு ஒப்பாவார் ஆருமில்லை. **எம்பெருமான் தனக்காவான் தானேமற்றல்லால்**=எம்பெருமானும் 'நானே ஸர்வரக்ஷகன்' என்றிருப்பதனுல் அவனைப்போன்ற ரக்ஷகன் வேறொருவனு மில்லாமையால் ரக்ஷகத்வத்தில் தனக்குத்தானே ஒப்பாகுமவனேயன்றி, சேஷத்வ பாரதந்திரிய காஷ்டையில் நிற்குமெனக்கு ஒப்பாவானல்லன். சேஷியாயிருக்குந் தன்மையிற்காட்டிலும் சேஷபூதனு யிருக்குந்

தன்மை சிறந்ததாதலால் அப்படிப்பட்ட அடிமைச்சுவடு எனக்கே அஸாதாரணமாயிருப்பதால் எம்பெருமானிலும் நான் மேற்பட்டவன் என்றவாறு. இப்படி எம்பெருமானது அடிமையிலீடுபட்டு அதன் மூலமான செருக்கைக் கொள்ளுதல் $ அடிக்கழஞ்சு பெறுதலால்தான் "எனக்கினியார் நிகர் நீணிலத்தே" எனறும் "எனக்காரும் நிகரில்லையே" என்றும் மற்றைறயோரு மருளிச்செய்வது. இவ்வஹங்காரம் ஹேயமன்று ; உபாதேயமாம். ஸாத்விகாஹங்காரமெனப்படும்.

புனக்காயா வண்ணனே உன்னைப்பிறரறியார்—உபயவிபூதியிலும் தமக்கு ஒப்பாவா ராருமில்லையென்று முன்னடிகளிற் சொன்னதை உபபாதிப்பன பின்னடிகள். தனக்குரிய நிலத்தில் தோன்றிய காயாம்பூவின் நிறம்போன்றழகிய நிறங்கொண்ட பெருமானே! நான் தவிர உன்னை உள்ளபடியறிவாரார்? எல்லாரும் உன்னைக்கொண்டு வேறு புருஷார்த்தங்களை ஸாதித்துக்கொள்ளப் பார்ப்பவர்களேயன்றி உன்னையே ஸகல புருஷார்த்தமுமாகக்கொள்வாராருமில்லையே ; உனது வடிவழகிலீடுபடுவாரு மில்லையே ; உலகத்தாருடைய புத்தியைப் போன்றதோ என்னுடைய புத்தி? மேலுலகத்திலுள்ளார்க்கும் அரிதான புத்தியன்றோ என்னுடையது. இப்படி விலக்ஷணமான புத்தியைப்பெற்ற நான் ஒப்பற்றவன் என்னத்தட்டுண்டோ? என்கை.

இந்நிலத்திலுள்ளவர்கள் உன்னையே பரமபிரயோஜநமாகக் கொள்ளாமல் அற்பபலன்களை நச்சி அவற்றுக்கு உபாயமாக உன்னைப்பற்றுமவர்களாகையாலே இவர்கள் உன்னுடைய உபேயத்வாகாரத்தை அறிந்திலர் ; அங்குள்ள நித்யஸூரிகளோவென்னில் பலன் கைபுகுந்தவர்களாகையாலே உன்னுடைய உபேயத்வாகாரத்தை அறிந்தவர்களேயன்றி உபாயத்வாகாரத்தைச் சிறிதுமறிந்தவர்களல்லர்; நானோவென்னில், உன்னையே பரமபுருஷார்த்தமாகக் கொண்டவனாகையாலும் உன்னைப்பெறுதற்கு உபாயமும் நீயேயென்றிருப்பவனாகையாலும் உன்னுடைய உபாயோபேயத்வாகாரங்களிரண்டையும் நன்கறிந்தவனாகிறேன் ; ஆகையாலே எனக்கு உபயவிபூதியிலும் நிகரில்லை—என்றது நன்கு பொருந்தும்.

$ அடிக்கழஞ்சு பெறுதல்—மிகச்சிறந்ததாயிருத்தல்.

விலைக்காட்படுவர் விசாதியேற் றுண்பர் *
தலைக்காட்பலிதிரிவர் தக்கோர் *—முலைக்கால்
விடமுண்டவேந்தனையே வேறு வேத்தாதார்
கடமுண்டார் கல்லாதவர். (௫௨)

- தக்கோர் — அறிவு முதலியவற்றால் பெருமை பொருந்தியவராகத் தங்களை அபிமானித்திருக்கும் நீசர்கள்
- விலைக்கு ஆள்படுவர் — ஜீவனத்திற்காகப் பிறர்க்கு அடிமைப்பட்டிருப்பார்கள்;
- விசாதி ஏற்று உண்பர் — (மிருத்யுதானங்கள் வாங்கும் முகத்தால் பிறருடைய) வியாதிகளைத் தாம் வாங்கி அநுபவிப்பர்கள்;
- தலைக்கு ஆள் பலி திரிவர் — ஒருவன் தலைக்காகத் தம் தலையை அறுப்பதாகச் சொல்லி நரபலியாகத் திரிவர்கள்;
- முலைக்கால் விடம் உண்ட வேந்தனையே — (பூதனையின்) முலையிடத் துண்டான விஷத்தை உட்கொண்ட பெருமானையே
- வேறு ஆ எத்தாதார் — விலக்ஷணமாகத் துதிக்கமாட்டாதவர்களாய்
- கல்லாதவர் — அறிவுகெட்டவர்களாய்க்கொண்டு
- கடம் உண்டார் — பாபங்களை யநுபவிப்பவர்களாயிரா நின்றார்கள்.

* * *—இவ்வுலகத்திலுள்ளார் படியை விரித்துரைக்கின்றது இதில். 'பரமநீசர்கள்' என்னவேண்டிய ஸ்தானத்தில் **தக்கோர்** என்றது இழிவு சிறப்பு; 'க்ஷேபோக்தி' என்பர் வடநூலார். **தக்கோர்**—தங்களை மஹாவ்யாபகர்களாக நினைத்திருக்கின்ற ஸம்ஸாரிகள் என்றவாறு. இவர்கள் எப்படிப்பட்டவர்களா யிருக்கின்றனரென்னில்; **விலைக்கு ஆட்படுவர்**=திருமந்திரத்தில் தேர்ந்த பொருளுக்கு எதிர்த்தடையாக வயிற்றுப்பிழைப்புக்காகப் பிறர்க்கு அடிமைப்பட்டிருப்பர். காசுக்கும் கூறைக்கும் கற்றை நெல்லுக்குமாகத் தங்களை விற்றிருப்பர். **விசாதி ஏற்று உண்பர்**='வ்யாதி' என்னும் வடசொல் 'விசாதி' என்று திரிந்து கிடக்கிறது. இயற்கையாகவே தங்களுக்குப் பலநோய்கள் இருக்கச்செய்தேயும் பிறருடைய நோய்களையுங் கொண்டு அநுபவிப்பர்கள். அதாவது—

நோயாளிகள் தங்களுடைய நோய் தீர்வதற்காகச் சில தானங்கள் [எருமைக்கடா தானம்] செய்வார்கள்; நாலுநாளைக்கு வயிறு தள்ளுமே என்ற விருப்பத்தினால் அந்தத் தானங்களைப்பெற்று அவ்வழியால் அவர்களுடைய வியாதிகளை ஏற்று அநுபவிப்பர்க ளென்கை. **தலைக்கு ஆள்பலிதிரிவர்**=ஒருத்தன் பிழைத்தால் அவனுக்காகத் தன் தலையையறுத்துக்கொடுப்பதாக க்ஷுத்ர தெய் வங்களுக்குப் பிரார்த்தனை செய்துகொண்டு அப்படியே தலையை அரிந்துகொடுத்தொழிவார் பலர். ஸ்ரீவசநபூஷணம் முதற்பிர காணத்தில் "அப்ராப்த விஷயங்களிலே ஸக்தனானவன் அது லபிக்கவேணு மென்றிராநின்றால் ப்ராப்தவிஷய ப்ரவணனுக்குச் சொல்லவேண்டாவிறே" என்ற ஸூத்ரத்தின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிக ளருளிச்செய்துள்ள ஒரு சிறு கதை இங்கு ஸ்மரிக்கத்தகும்; அதாவது—ஒரு தாஸியினிடத்தில் ஒருவன் மிக்க அன்புடையவனாயிருக்கையில் அவளுக்குக் கடுமையான நோய் விஞ்சினவளவிலே 'இவள் நோய்தீர்ந்து எழுந்தால் நான் என் தலையை அரிந்து தருகிறேன்' என்று ஒரு தேவதைக்குப் பிரார்த் தனை பண்ணிக்கொண்டு பின்பு அப்படியே தன் தலையை அறுத்துக் கொடுத்தா னென்பதாம்.

ஆகவிப்படி விலைக்கு ஆட்படுவாராயும் விசாதியேற்று உண்பா ராயும் தலைக்கு ஆள்பலி திரிவாராயு மொழிகின்றவர்கள் யாவரென் னில், எம்பெருமானைத் துதிக்கமாட்டாத பாவிகள் என்கிறார் மூன்றாமடியில். **முலைக்கால் விடமுண்ட** வரலாறு:—ஸ்ரீகிருஷ்ண னைப்பெற்ற தாயான தேவகியினது உடன் பிறந்தவனாய் அக்கண்ண பிரானுக்கு மாமனாகிய கம்ஸன் தன்னைக்கொல்லப்பிறந்த தேவகீ புத்திரன் ஒளித்து வளர்கின்றானென்பதை யறிந்து அக்குழந் தையை நாடிபுணர்ந்து கொல்லும்பொருட்டுப் பல அசுரர்களையேவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண் ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்குவந்து அங்குத்தூங்கிக் கொண்டிருந்த கிருஷ்ணசிசுவை யெடுத்துத் தனது விஷந்தடவின முலையை உண்ணக்கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப்பாலுண்ணு கிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவள் பேரிரைச்ச

விட்டுக்கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கி விழுந்து இறக்கும்படி செய்தனன் என்பதாம். இப்படிப்பட்ட விரோதி நிரஸநசீலனை எம்பெருமானை விலக்ஷணமாக ஸ்துதிசெய்ய மாட்டாத அறிவு கேடர்கள் பாபபலன்களை அநுபவிப்பதற்கென்றே ஜன்மமெடுத்தவர்களென்றவாறு.

மூலக்கால்—மூலவழியாக. வேறு—மற்றபேர் துதிப்பதிற் காட்டிலும் சிறந்தவிதமாக என்றபடி. "வேறாக" என்ற பாடம் மறுக்கத்தக்கது; தளை கெடுதலால். .... .... (நூ௨)

கல்லாதவ ரிலங்கை கட்டழித்த * காகுத்த
னல்லாலொரு தெய்வம் யானிலேன் *—பொல்லாத
தேவரைத் தேவரல்லாரை * திருவில்லாத்
தேவரைத் தேறேல்மின் தேவு. (நூ௩)

| | |
|---|---|
| கல்லாதவர் இலங்கை | அறிவுகெட்ட ராக்ஷஸருடையதான இலங்காபுரியை |
| கட்டு அழித்த | அரணழித்த |
| காகுத்தன் அல்லால் | இராமபிரானை யல்லது |
| ஒரு தெய்வம் | வேறொரு தெய்வத்தை |
| யான் இலேன் | நான் தெய்வமாகக் கொள்வே னல்லேன்; |
| பொல்லாத தேவரை | கண்கொண்டு காணக்கூடாத தேவதைகளையும் |
| தேவர் அல்லாரை | (உண்மையில்) தெய்வத் தன்மை யற்றவர்களாயும் |
| திரு இல்லா தேவரை | பிராட்டியின் ஸம்பந்த மில்லாமலே தேவரென்று பேர் சுமப்பவர்களாயுமுள்ள சிலரை |
| தேவு | தெய்வங்களாக |
| தேறேல்மின் | நீங்கள் நினைக்க வேண்டா. |

* * *—முன்னடிகளால் தம்முடைய அத்யவஸாயத்தை அருளிச்செய்து, பின்னடிகளால் தேவதாந்தர பக்தியை விலக்கிக் கொள்ளுமாறு பிறர்க்கு உபதேசிக்கிறார். கீழ்க்கழிந்த காலங்களில் நான் பலபல தெய்வங்களை வழிபட்டவனாயினும் முடிவாகத் தேவதாந்தரங்களெல்லாவற்றையும் பற்றறவொழித்து, ஸ்ரீராமபிரானையே பரமதெய்வமாகக் கொண்டவனாயினேன்.

இலங்கையிலிருந்த அரக்கர்களனைவரும் தங்களுடைய கெட்ட நடத்தைகளினாலேயே தமது அறிவின்மையை வெளிப்படுத்திக் கொண்டவர்களாதலால் "**கல்லாதவரிலங்கை**" என்றார். கற்றுணர்ந்த மஹாநுபாவன் ஒருவன் [விபீஷணாழ்வான்] இருந்தானே யென்னில்; அவனை யடித்துத்துரத்தினார்களிறே. **காகுத்தன்**—'**காகுத்ஸ்த:**' என்ற வடசொல் விகாரம்.

**பொல்லாத தேவரை**=ச்மசானமே இருப்பிடமாயிருத்தல், எலும்புகளை மாலையாகக்கட்டிப்பணிதல், விரூபாக்ஷனாயிருத்தல் முதலியவற்றால் அமங்களங்களுக்குக் கொள்கலமா யிருப்பவர்களைத் தெய்வமாகக் கொள்ளத்தகுமோ?.

**தேவரல்லாரை**=உள்ள அமங்களங்களையெல்லாம் ஸஹித்துக் கொண்டு ஆச்ரயித்தாலும் ஸ்வதந்த்ரமாகக் காரியஞ்செய்யவல்லமை யற்றிருப்பதனால் தெய்வமென்று சொல்லத்தகாதவர்களை ஆச்ரயிக்கத்தகுமோ?.

**திருவில்லாத்தேவரை**—"**ஶ்ரியா தேவோ தைவஸார்வபௌமதே**" என்று வேதஞ்சொல்லுகிறபடியே பிராட்டியின் ஸம்பந்தமுள்ளவனுக்கேயன்றோ தேவத்வமுண்டு; லக்ஷ்மீபதியல்லாதாரைத் தேவனாகப் பணிதல் தகுமோ?

"காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும்வரந்தர மிடுக்கிலாததேவரை, ஆணமென்றடைந்து வாழு மாதர்காளெம்மாதிபால், பேணி நும்பிறப்பெனும் பிணக்கறுக்ககிற்றிரே" என்று இவ்வாழ்வார் தாமே யருளிச்செய்த திருச்சந்தவிருத்தத்திற் பாசுரமும் இங்கு நினைக்கத்தகும். .... (நிங)

**தேவராய் நிற்குமத்தேவம் * அத்தேவரில்**
**மூவராய் நிற்கும் முதுபுணர்ப்பும் *—யாவராய்**
**நிற்கின்றதெல்லாம் நெடுமாலென் றோராதார்**
**கற்கின்ற தெல்லாம் கடை.** (நிச)

| | | | |
|---|---|---|---|
| தேவர் ஆய் நிற்கும் அத் தேவும் | (அக்நி இந்திரன் முதலிய) தேவதைகளாய்க் கொண்டு நிற்கிற தெய்வமும், | அத் தேவரில் | அந்த தேவர்களுக்குள்ளே |
| | | மூவர் ஆய் நிற்கும் | த்ரிமூர்த்தியாய் நிற்பதாகிற |

முது புணர்ப்பும் { அநாதியான நிலைமையும்

யாவர் ஆய் நிற்கின்றது எல்லாம் { மற்றும் மனிதர் முதலியனவாய்க் கொண்டு நிற்கிற ஸகல பதார்த்தங்களும் (ஆகிய எல்லாம்)

நெடு மால் என்று ஓராதார் { ஸர்வேச்வர ப்ரகாரமே என்று ஆராய்ந்துணர மாட்டாதவர்கள்

கற்கின்றது எல்லாம் கடை { பேசும் பேச்செல்லாம் உபயோகமற்றது.

* * *—ஸகல தெய்வங்களும் ஸகல பதார்த்தங்களும் ஸ்ரீமந் நாராயணனுக்கு சேஷபூதம் என்றறியமாட்டாதவர்கள் எவ்வளவு விரிவாகக் கற்றாலும் அத்தனையும் பயனற்றவை யென்கிறார். தேவராய்நிற்குமத்தேவும் நெடுமால், அத்தேவரில் மூவராய்நிற்கும் முது புணர்ப்பும் நெடுமால், யாவராய்நிற்கின்ற தெல்லாம் நெடுமால் என்று அறியவல்லாருடைய கல்வியே பயன்பெற்றதாம் என்ற வாறு.

தேவராய் நிற்குமத்தேவும்=வேதத்தில் கருமகாண்டங்களில் அந்தந்த யாகங்களுக்கு ஆராத்யதேவதையாக அக்நி இந்திரன் வருணன் என்றிப்படி சொல்லப்பட்டுள்ள தேவதைகள் யாவும் "ஸர்வா தேவதா:" என்கிற சுருதியின்படி எம்பெருமானுக்குச் சரீரபூதங்களாதலால் அத்தேவதைகட்கு அந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனே அந்தந்த தேவதா நாமங்களினால் கூறப்பட்டுளன் என்று உணரவேண்டுவது கல்விக்குப் பயன்.

அத்தேவரில் மூவராய் நிற்கும் முதுபுணர்ப்பம்—1. "ஐயை விரிஞ்சசிவயோர் விஹிதாவதார: வ்யாப்தோஸி தத்தநுதயா" என்கிறபடியே த்ரிமூர்த்தியவதார மெடுத்ததும் திருமாலே. இப்படி பிரித்துப்பிரித்துச் சொல்லுவதேன்? யாவராய் நிற்கின்ற தெல்லாம் நெடுமால்: "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்."—"ஸர்வத்ர ஸந்ததேதாத! ஜநஸ்ய ஜநகஸ்ய" என்று சொன்ன ப்ரஹ்லாதாழ்வானுடைய நிலைமை வாய்ந்தவர்களே கற்றுணர்ந்தவராவர் என்கை. .... .... .... .... (நுச)

கடைநின்றமரர் கழல்தொழுது * நாளும்
இடைநின்ற வின்பத்தராவர் *—புடைநின்ற
நீரோதமேனி நெடுமாலே * நின்னடியை
யாரோதவல்லா ரவர். (நுரு)

1. வரதராஜ பஞ்சாசத். (தேசிகன்.)

(இவ்வுலகத்தவர்கள்)

அமரர் கடை நின்று — தேவதாந்தரங்களின் வாசல்களைப் பற்றிநின்று

நாளும் — நெடுங்காலம்வரையில்

கழல் தொழுது — (அவர்களுடைய) காலில் விழுந்து

(பரம புருஷார்த்தம் பெறமாட்டாமல்)

இடை நின்ற இன்பத்தர் ஆவர் — நடுவேகிடக்கிற (சுவர்க்கம் முதலிய) சுகத்தைப் பெற்றொழிவர்கள்;

புடை நின்ற நீர் ஓதம் மேனி நெடு மாலே — (இவ்வுலகத்தைச்) சூழ்ந்து கிடக்கிற கடல்போன்ற திருமேனியையுடைய ஸர்வேச்வரனே!

நின் அடியை — உனது திருவடிகளை

ஓத வல்லாரவர் ஆர் — அநுஸந்திக்க வல்லார் ஆரேனுமுண்டோ? [யாருமில்லையே!.]

* * *—எம்பெருமானே!, பெரும்பாலும் இவ்வுலகத்தவர்கள் தேவதாந்தர பஜனஞ்செய்து சுவையற்ற அற்பபலன்களைப் பெற்று அநர்த்தப்படுகின்றனரே யன்றி உன்னையுணர்ந்து ஆச்ரயித்து உஜ்ஜீவிப்பவர் யாருமில்லையே! என்று வருந்திப் பேசுகிறார்.

**கடைநின்றமரர் கழல்தொழுது**=அமரர்கடைநின்று கழல்தொழுது என்க. கடையாவது மனைவாசல்; தேவதாந்தரங்களின் மனைவாசலிலே நின்று என்றது—அவர்களை ஆராதித்தமை கூறியவாறு. அன்றியே, தொகுத்தல் விகாரமாகக்கொண்டு "கடைநின்ற+அமரர்" என்று பிரித்து 'தாழ்ந்த தெய்வங்களின் காலிலே விழுந்து' என்பதாகவும் பொருள் கொள்ளலாம்.

**இடைநின்ற வின்பத்தராவர்**=எம்பெருமானைப் பணிந்தவர்க்குக் கிடைக்கக்கூடிய பரமபதாநுபவமொன்றே சிறந்ததாகையாலும், அதற்குக் கீழ்ப்பட்ட ஸ்வர்க்காநுபவம் முதலிய பலன்களெல்லாம் இடைக்கட்டாதலாலும், தேவதாந்தர பஜனம் பண்ணுவார்க்கு அப்படிப்பட்ட க்ஷுத்ரபலன்களே கிடைக்குமாதலாலும் "இடைநின்ற இன்பத்தராவர்" எனப்பட்டது. இன்பமென்றதும் ப்ரமித்தவர்களின் கருத்தாலேயாம்.

"ஸம்ஸார ஸுகமுமின்றிக்கே நிரதிசயமான மோக்ஷஸுகமு

*மின்றிக்கே ஸ்வர்க்கஸுகத்தையுடையராவர்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி.*

*இப்பாட்டில் எழுவாய் வருவித்துக்கொள்க.* .... (௫௫)

அவரிவ ரென்றில்லை யனங்கவேள் தாதைக்கு *
எவரு மெதிரில்லை கண்டீர் *—உவரிக்
கடல்நஞ்சமுண்டான் கடனென்று * வாணற்
குடனின்று தோற்றா னொருங்கு. (௫௬)

| | | | |
|---|---|---|---|
| அவர் இவர் என்று இல்லை | பெரியார் சிறியார் என்று ஒரு வாசியில்லை; | வாணற்கு | பாணாஸுரனுக்கு |
| அனங்கவேள் தாதைக்கு | காமனுக்குத் தந்தையான கண்ணபிரானுக்கு | கடன் என்று | 'உன்னை ரக்ஷிக்க நான் கடமைப்பட்டவன்' என்று சொல்லி |
| எவரும் | ஒருவரும் | உடன் நின்று | அவனோடு கூடவேயிருந்து |
| எதிர் இல்லை கண்டீர் | எதிர் நிற்கவல்லாரில்லைகாண்மின்; | ஒருங்கு தோற்றான் | குடும்பத்தோடே தோற்று ஓடிப்போனான். |
| உவரிக்கடல் நஞ்சம் உண்டான் | கடலில் தோன்றின விஷத்தை உட்கொண்டவனான சிவன் | | |

* * *—*அற்பபலன்களைத் தருமவர்களான ருத்ரன் முதலியோர் தங்களைப்பற்றினவர்களுக்கு ஒரு ஆபத்து வந்தால் அப்போது முதுகுகாட்டி ஓடுமவர்களேயன்றி நிலைநின்று ரக்ஷிக்கவல்ல திறமுடையரல்லர் என்று மூதலித்துக்காட்டுகிறார்.*

**அவர் இவர் என்றில்லை**—**அவர்** *என்று சிறந்தவர்களையும்,* **இவர்** *என்று தாழ்ந்தவர்களையுங் குறிக்கிறது. தாழ்ந்தவர்களான நம்போலியர் எம்பெருமானுக்கு எப்படி எதிராக முடியாதோ, அப்படியே, உயர்ந்தவர்களென்று கருதப்படுகின்ற ருத்ராதிகளும் எம்பெருமானுக்கு எதிராகமுடியாதென் றுணர்த்தியவாறு.*

**அனங்கவேள் தாதைக்கு**—*கண்ணபிரான் மன்மதனுடைய அம்சமாகிய ப்ரத்யும்நனுக்கு ஜநகனாதல் அறிக. மன்மதன் ஒருகால் பரமசிவனது தவநிலையைக் குலைக்கமுயன்றபோது அவனு*

டைய நெற்றிக்கண்ணால் கொளுத்தப்பட்டு உடலிழந்ததனால அனங்கனென்று பெயர்பெற்றான். வடசொல்.

**கடல்நஞ்சமுண்டான் வாணற்குடனின்று தோற்ற** வரலாறு:- பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுரனுடைய பெண்ணாகிய உஷையென்பவள், ஒருநாள் ஒரு புருஷனோடு தான்கூடியிருந்ததாகக் கனாக்கண்டு, முன் பார்வதி அருளியிருந்தபடி அவனிடத்தில் மிகுந்த ஆசைபற்றியவளாய்த் தன் உயிர்த்தோழியான சித்திரலேகைக்கு அச்செய்தியைத் தெரிவித்து அவள் மூலமாய் அந்தப்புருஷன் கிருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனுடைய புத்திரனுமாகிய அநிருத்தனென்று அறிந்துகொண்டு 'அவனைப்பெறுதற்கு உபாயஞ்செய்யவேண்டும்' என்று அத்தோழியையே வேண்ட, அவள் தன் யோகவித்தை மகிமையினால் துவாரகைக்குச்சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டு வந்து அந்தஃபுரத்திலேவிட, உஷை அவனோடு போகங்களை அநுபவித்துவர, இச்செய்தியைக் காவலாளராலறிந்த அந்தப்பாணன் தன் ஸேனையுடன் அநிருத்தனையெதிர்த்து மாயையினாலே பொருது நாகாஸ்த்ரத்தினால் கட்டிப்போட்டிருக்க, துவாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்களெல்லாருங் கலங்கியிருந்தபோது, நடந்த வரலாறு நாரதமுனிவனால் சொல்லப்பெற்ற ஸ்ரீகிருஷ்ணபகவான், பெரிய திருவடியை நினைத்தருளி, உடனே வந்து நின்ற அக்கருடாழ்வானது தோள்மேலேறிக்கொண்டு பலராமன் முதலானாரோடு கூடப் பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே அப்பட்டணத்தின் ஸமீபத்தில் $ காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது பிரமதகணங்கள் எதிர்த்துவர அவர்களையெல்லாம் அழித்து, பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்றுகால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக்

---

$ ஒருகாலத்தில் பரமசிவன் கூத்தாடுகையில் பாணாஸுரன் அந்த நடனத்தைக்கண்டு அதற்குத் தகுதியாகத் தன் இரண்டு கைகளால் மத்தளம் தட்ட, சிவன் மகிழ்ந்து அவனுக்கு ஆயிரம் கைகளையும் நெருப்புமதிலையும் அளவிறந்த வலிமையையும் மிக்க செல்வத்தையும், தான் ஸபரிவாரனாய்க் கொண்டு அவன் மாளிகை வாசலில் காவல் செய்திருத்தல் முதலிய வரங்களையும் தந்தருளி அப்படியே சிவன் தனது குடும்பத்தோடு அவன் மாளிகை வாசலிற் காத்துக்கொண்டிருந்தனன் என்பது இங்கு அறியத்தக்கது.

காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தையுண்டாக்கி அதன் சக்தியினாலே அதனைத் துரத்திவிட்ட பின்பு, சிவபிரானது அநுசரர்களாய்ப் பாணாஸுரனது கோட்டையைச்சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் நாசஞ்செய்து பாணாஸுரனோடு போர் செய்யத்தொடங்க, அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவன் ஒன்றுஞ் செய்யமாட்டாமல் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படிசெய்து ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் உங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர், அனேகமாயிரஞ் சூரியர்க்குச்சமமான தனது சக்ராயுதத்தை யெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரைதாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாக விருக்கையில் பரமசிவன் அருகில் வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத்தொழுது அநிருத்தனுக்கு உஷையைச் சிறப்பாக மணம்புரிவிக்க, அதன்பின் கண்ணபிரான் துவாரகைக்கு மீண்டெழுந்தருளினன். இவ்வரலாற்றினால், அனங்கவேள்தாதைக்கு எவருமெதிரில்லை யென்னுமிடம் நன்கு விளக்கப்பட்டதாம்.

பாணாஸுரயுத்தத்தில் சிவன் தனது பாரிவாரங்களோடு தோற்றனனாதலால் " ஒருங்கு தோற்றான் " என்றார்.

"திருப்பாற்கடலை உவரிக்கடலென்றது—ஸமுத்ரஸாம்யத்தைப் பற்ற" என்பது பூருவர்களின் வியாக்கியான வாக்கியம். பாற்கடல் கடையும்போது அதில் நின்றும் விஷம் உண்டாக, அதனை எம்பெருமானுடைய நியமனத்தினால் பரமசிவன் உட்கொண்டனனென்க. .... .... .... .... (நிசு)

ஒருங்கிருந்த நல்வினையும் தீவினையு மாவான் *
பெருங்குருந்தஞ் சாய்த்தவனே பேசில் *—மருங்கிருந்த
வானவர்தாம் தானவர்தாம் தாரகைதான் * என்னெஞ்சம்
ஆனவர்தா மல்லாததென். (நிஎ)

பேசில் — உண்மைபேசப் புகுந்தால்

பெரு குருந்தம் சாய்த்தவனை — பெரிய குருந்த மரத்தை வேர் பறியத்தள்ளி முறித்த கண்ணபிரானை

ஒருங்கு இருந்த நல் வினையும் தீ வினையும் ஆவான் — உடனிற்கும் புண்ய பாபங்களுக்கு நிர்வாஹகன்;

மருங்கு இருந்த — ஸமீபத்திலுள்ள [அந்தரங்கரான]

வானவர்தாம் — தேவர்களும்,

தானவர்தாம் — அசுரர்களும்

தாரணிதான் — இப்பூமியும்

(ஆகிய இவையெல்லாம்)

என் நெஞ்சம் ஆனவர்தாம் — என் நெஞ்சினுள் உறைகின்ற ஸர்வேச்வரனேயாம்;

அல்லாதது என் — அந்த ஸர்வேச்வரனல்லாத வஸ்து என்ன இருக்கிறது?.

* * *—புண்ணியம் பாவம் முதலான ஸகல பதார்த்தங்களும் எம்பெருமானிட்ட வழக்காயிருக்கும்; அவனிட்ட வழக்காகாத வஸ்து ஒன்றுமேயில்லை யென்கிறார். நல்வினையும் தீவினையும் அவனேயாவான் என்கிற விதன் கருத்து யாதெனில்; "ஏஷ ஏவ ஸாது கர்ம காரயதி யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதி; ஏஷ ஏவாஸாது கர்ம காரயதி யமதோ நிநீஷதி" என்கிற சுருதியின்படியே தன்னுடைய அநுக்ரஹத்துக்கு இலக்காக வேண்டினவரைக்கொண்டு நல்வினைகளைச் செய்வித்தும், தன்னுடைய நிக்ரஹத்துக்கு இலக்காக வேண்டினவரைக்கொண்டு தீவினைகளைச் செய்வித்தும் போருகிறவன் என்கை.

நல்வினைகளின்பயனாகத் தேவயோனியிற் பிறப்பதும், தீவினைகளின் பயனாக அஸுரயோனியிற் பிறப்பதும் இவ்விருவினைகளினுடையவும் பயனாக இப்பூமியிற் பிறப்பது மெல்லாம் பகவத்ஸங்கல்பாதீன மென்கிறது பின்னடிகளால்.

குருந்தம் சாய்த்த வரலாறு:—கண்ணபிரான் யமுனையில் நீராடும் ஆயர் மங்கைகளின் துகிலையெடுத்துக்கொண்டு அதன் கரையிலுள்ள குருந்தமரத்தின்மேலேறுகிறவழக்கத்தைக் கண்டிருந்தவனும் கம்ஸனை லேவப்பட்டவனுமான ஓரஸுரன் கண்ணனை நலிவதற்காக அக்குருந்தமரத்தை ஆவேசித்துக்கிடந்தான்; அதையறிந்த கண்ணபிரான் அந்த மரத்தை முறித்தொழித்தனன் என்பதாம்.

தாரகை—'தாரகா' என்ற வடசொல்லின் திரிபு. நக்ஷத்ர வாசகமாக வடமொழியில் 'தாரகா' என்கிற நாமம் இல்லையாயினும் 'தாரா, தாரிகா, தாரணி:' என்றிருப்பனபோல் இருந்திருக்கத் தக்கதே. கீழ் முப்பத்தோராம்பாட்டிலும் "தாரகையுள்" என்று வந்ததும் காண்க.

எம்பெருமானுக்குப் பல திருநாமங்கள் இருப்பதுபோல 'என்னெஞ்சமானவர்' என்பதும் ஒரு திருநாமம்போலும் ஆழ்வார் திருவுள்ளத்தால். என்னெஞ்சத்திலே ஸத்தை பெற்றிருப்பவர் என்றபடி. அன்றியே அஃறிணையான நெஞ்சையே கௌரவந் தோற்ற 'நெஞ்சினார்' என்பது போல இங்கு 'நெஞ்சமானவர்' என்று சொல்லியிருப்பதாகக்கொண்டு தம் திருவுள்ளத்தையே குறிப்பதாகவும் உரைக்கலாம்; அப்போது, வானவர் தானவர் தாரகை என்னெஞ்சு (ஆகிய எல்லாம்) பெருங்குருந்தம் சாய்த்தவனே என்றவாறும். .... .... .... (நிஎ)

என்னெஞ்ச மேயா னிருள்நீக்கி யெம்பிரான் *
மன்னஞ்ச முன்னொருநாள் மண்ணளந்தான் *—என்னெஞ்ச
மேயானை யில்லா விடையேற்றான் * வெவ்வினைதீர்த்
தாயானுக் காக்கினே னன்பு. (நிஅ)

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சம் மேயான் | என்னுடைய நெஞ்சிலே நித்யவாஸம் செய்பவனும் | என் நெஞ்சம் மேயானை | (அந்த திருக்கோலத்துடனே) என்னெஞ்சை விடாமலிருப்பவனுமான எம்பெருமானை |
| இருள் நீக்கி எம்பிரான் | (நெஞ்சிலுள்ள) அஜ்ஞான விருளைப் போக்குமவனை உபகாரகனும் | இல்லா | நெஞ்சில் உடையனாகாத |
| முன் ஒருநாள் | முன்பொரு காலத்தில் | விடை ஏற்றான் | ரிஷபவாஹநனான ருத்ரனுடைய |
| மன் அஞ்ச | மஹாபலிசக்ரவர்த்தி பயப்படும் படியாக | வெம் வினை | மஹாபாதகத்தை |
| மண் அளந்தான் | பூமியை அளந்து கொண்டவனும் | தீர்த்து | தொலைத்து |
| | | ஆயானுக்கு | (அதனால்) ஸத்தை பெற்றவனான பெருமானுக்கு |
| | | அன்பு ஆக்கினேன் | என் அன்பைச் செலுத்தினேன். |

* * *—தம்நெஞ்சில் இருளையறுத்துக்கொண்டு அங்கே நிரந்தரவாஸம் பண்ணுகிற ஆபத்ரக்ஷகனை எம்பெருமான் பக்கலிலே தமக்கு அன்பு விளைந்தமையை அருளிச்செய்கிறார். இப்பாட்டில் "என்னெஞ்சமேயான்" என்பது இரண்டிடத்தில் வந்துள்ளது; பொருள் ஒன்றேயாயினும் கருத்தில் வாசியுண்டு; முதலடியில் **என்னெஞ்சமேயான்** என்றது பொதுவான வ்யாப்தியைச் சொன்னபடி. இரண்டாமடியில் "மண்ணளந்தானென்னெஞ்ச மேயான்" என்றது உலகளந்த திருக்கோலம் தம் நெஞ்சிலே பொலியும்படி காட்சிதந்தருளுகின்றமையைச் சொன்னவாறு. "இருள் நீக்கி" என்றது வினையெச்சமன்று, பெயர்ச்சொல்; இருளை நீக்குகின்றவன் என்கை. வினையெச்சமாகக்கொண்டால், இருளை நீங்கச் செய்து அதனால் **எம்பிரான்**—எனக்கு உபகாரகனானவன் என்க.

இப்படிப்பட்ட எம்பெருமானை நெஞ்சிற்கொள்ளமாட்டாத [துர்மாநியான] ரிஷபவாஹநனாகிய ருத்ரனுடைய வெவ்வினையுண்டு ப்ரஹ்மஹத்யாரூபமான பாபம், அதனைத்தீர்த்து, தன் காரியம் ஆனதுபோல் உவந்தவனான எம்பெருமானுக்கு என்னுடைய அன்பைச்செலுத்தினேன் என்றாராயிற்று. .... .... (ருஅ)

அன்பாவா யாரமுத மாவாய் * அடியேனுக்
கின்பாவா யெல்லாமும் நீயாவாய் *—பொன்பாவை
கேள்வா கிளரொளி யென்கேசவனே * கேடின்றி
ஆள்வாய்க் கடியேனு னாள். (ருகூ)

அன்பு ஆவாய் — (என் பக்கல்) ப்ரீதியே வடிவெடுத்தவன் போலிருப்பவனே!

ஆர் அமுதம் ஆவாய் — பரமபோக்யனாயிருப்பவனே!

அடியேனுக்கு இன்பு ஆவாய் — (உன்னுடைய அநுபவமாகிற) ஸுகத்தை அடியேனுக்கு உண்டாக்கினவனே!,

எல்லாமும் நீ ஆவாய் — மற்றுமுள்ள ஸுகங்களுமெல்லாம் எனக்கு நீயேயாயிருப்பவனே!

பொன் பாவை கேள்வா — திருமகள் நாதனே!

கிளர் ஒளி — (அத்திருமகளின் சேர்த்தியினால்) கொழுந்து விட்டு வளர்கின்ற காந்தியையுடைய

| | | | |
|---|---|---|---|
| என் கேசவனே | எம்பெருமானே! | நான் அடியேன் | நான் அடிமைப் பட்டவனா யிருக் கின்றேன்; |
| கேடு இன்றி | ஒருகுறையுமில்லாமல் | | |
| ஆள்வாய்க்கு | ரக்ஷிக்கவல்லவனுக்கு | ஆள் | (அடியேனைக்) காத்தருள். |

* * *—திருமாலே! உன்னைத் தவிர்த்து மற்ற தெய்வங்களுக்கு ஆட்பட்டால் அவர்கள் ரக்ஷிக்கமாட்டாததோடு கெடுதல்களையும் விளைத்திடுவர்கள்; நீயோ அப்படியல்லாமல் ஒரு கெடுதலுமின்றி ஆளவல்லை; ஆகவே நான் உனக்கு அடிமைப்பட்டவனானேன், காத்தருளாய் என்கிறார்.

அன்பு ஆவாய்='அன்பு' என்பது வேறொன்றாய், அதை நீ உடையவனாயிருக்கின்றாய் என்று சொல்லவேண்டாமல், நீயே அன்புதானாக வடிவெடுத்திருக்கின்றாய் என்கை. என்பக்கல் அளவற்ற அன்புவைத்திருக்கின்றாயென்றவாறு. ஆரமுதமாவாய் இன்பாவாய்=தாய்தந்தையராலுண்டாகு மாநந்தம், மக்களாலுண்டாகுமாநந்தம், மனைவியராலுண்டாகு மானந்தம் முதலிய எல்லா ஆனந்தங்களையும் உன்னநுபவத்தால் நானடைகின்றேனென்கை. இப்படியெல்லாம் நீ ஆநந்தகரனாயிருப்பதற்குக் காரணம் லக்ஷ்மீபதித்வமே யென்கைக்காகப் பொன்பாவை கேள்வா! என விளித்தார். பிராட்டியைச்சொல்லும் வேதம் 'ஹிரண்யவர்ணாம்' என்றும் 'ஹிரண்மயீம்' என்றும் சொன்னதற்கேற்பப் பொன்பாவையென்றார். பிராட்டியைக் கைப்பிடித்ததனால் ஒரு விலக்ஷணமான தேஜஸ்ஸு விளைகின்றதென்பது தோன்ற "பொன்பாவை கேள்வா ளேரோளி" என்றார். "ஸ்ரீயம் ஹி தேஜோயஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்ற மாரீசவசநமும் காண்க.

ஆள் என்பதை முன்னிலை வினைமுற்றாகக் கொள்ளாமல், அடியேன்நான்—அடியேனாகிய நான், ஆள்—ஆட்பட்டேன் என்பதாகவுங் கொண்டுரைக்கலாம். .... .... .... (௯௬)

ஆள்பார்த் துழிதருவாய் கண்டுகோளேன்றும் * நின்
தாள்பார்த் துழிதருவேன் தன்மையை *—கேட்பார்க்
கரும்பொருளாய் நின்ற வரங்கனே * உன்னை
விரும்புவதே விள்ளேன் மனம். (௯௭)

| | |
|---|---|
| கேட்பார்க்கு | ஸ்வயத்நத்தாலே கேட்டறிய விரும்புமவர்களுக்கு |
| அரு பொருள் ஆய் நின்ற அரங்கனே | அறியவொண்ணாத பரம்பொருளான அரங்கநாதனே ! |
| ஆள் பார்த்து உழிதருவாய் | நமக்கு ஆட்படுமவன் யாரேனும்கிடைக்கக்கூடுமோ என்று தேடித் திரிகிறவனே ! |
| நின் தாள் பார்த்து உழிதருவேன் | உனது திருவடிகளின் ஸேவைக்காக அலைந்து திரிகின்ற என்னுடைய |
| தன்மையை | இந்த ஸ்வபாவத்தை |
| என்றும் கண்டுகொள் | என்றைக்கும் நிலைத்திருக்கும்படியாகக்கடாக்ஷித்தருளவேணும்; |
| உன்னை விரும்புவதே | நான் உன்னையே ஆசைப்பட்டிருக்குந் தன்மையை |
| மனம் | நெஞ்சில் |
| விள்ளேன் | தவிராதவனாயிருக்கின்றேன். |

* * *—எம்பெருமானை நோக்கி "ஆள்பார்த்து உழிதருவாய்!" என்று விளிக்கிற விளியின் அழகை என் சொல்லுவோம். "ஸோऽந்வேஷ்டவ்ய: ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய:" என்று வேதாந்தங்கள் எம்பெருமானை நாம் தேடிப்பிடிக்கவேணுமென்று ஓதுகின்றன; அப்படியிருந்தும் எம்பெருமான் நம்மைத் தேடிப்பிடிப்பதற்கு அலைந்து திரிகின்றானென்கிறார் காண்மின். எம்பெருமான் ஸர்வஸ்வாமியென்பதும் சேதநாசேதநங்களடங்கலும் அவனுடைய ஸொத்து என்பதும் தேர்ந்தவிஷயம். ஸொத்து தவறிப்போனால் அதனைத் தேடிப்பெறுதற்கு முயற்சி செய்பவன் ஸ்வாமியேயாதலால், ஸர்வஸ்வாமியான தன்னுடைய திருவடிகளில் நின்றும் தவறிப்போன தன் உடைமையாகிய நம்மைத்தேடிப் பிடித்துக்கொள்ள முயல்வான் தானேயாகையால் இந்த விளி மிகப்பொருந்தும். ஸ்ரீவசநபூஷணத்தில் "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்குகப்பானுமவனே" என்றருளிச்செய்ததும் இதுபோன்ற அருளிச்செயல்களை அடியொற்றியேயாம். எம்பெருமானார் தாமும் ஸ்ரீபாஷ்யத்தைத் தலைக்கட்டியருளுமிடத்து "ந ச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா க்ருதார்த்தோ பவிஷ்யதி" என்ற வாக்யத்தில் "ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றதனால் இப்பரமார்த்தத்தைத் தெளியவைத்தருளினார்.

| | |
|---|---|
| மனம் கேதம் | மனவருத்தங்கள் |
| சாரா | வந்துசேராவாம் |
| ஒன்றி நின்று | பொருந்தி நின்று |
| ஏழ் உலகை | ஸப்தலோகங்களிலும் |
| ஆணை ஓட்டினான் | (தன்னுடைய) செங்கோலைச் செலுத்தினவனான) எம்பெருமான் |
| இன்று | இப்போது |
| சென்று | (நிர்ஹேதுகமாக என்னிடம்,) வந்து |
| ஒன்றி நின்ற திரு | (என்னிடத்தில்,) பொருந்தி நிற்பதாகிற செல்வமானது |
| எனக்கே நான் | என்னொருவனுக்கொழிய வேறொருவற்கு மில்லை. |

* * *—எம்பெருமான் நிர்ஹேதுகமாக வந்து விஷயீகரிக்கப் பெறும்படியான பாக்கியம் தமக்கேயுள்ளதென்கிறார். 'மது' என்னு மசுரனைக் கொன்றொழித்த பெருமானே தஞ்சம் என்றிருந்தால் மனத்தில் எவ்விதமான துன்பமும் வந்து சேரமாட்டாது என்றார் முன்னடிகளில். 'அப்படி நீர் மதுசூதனனையே தஞ்சமாகக் கொண்டிருக்கிறீரோ?' என்று சிலர் கேட்க; அப்பெருமானை நான் தஞ்சமாகக்கொள்ளவேண்டும்படி அவன் எனக்கு ஒரு காரியம் வைக்கவில்லை; அவன்றானே என்னெஞ்சில் வந்து குடிகொண்டான்; இப்படிப்பட்ட பாக்கியம் எனக்கே அஸாதாரணமாக அமைந்தது என்றார் பின்னடிகளில்.

மனக்கேதம்=‘ஜநஃ வெஷஃ’ என்ற வடசொல் தொடரின் விகாரமாகக்கொண்டால் ‘மனம் கேதம்’ என்று பிரியும்: மனவருத்தம் என்றபடி; அன்றியே, ‘மனக்கு ஏதம்’ என்றும் பிரிக்கலாம். ‘மனக்கு’ என்றதில் அத்துச்சாரியை வரவில்லையென்க. “மனக்கின்பம்படமேவும்” என்று திருவாய்மொழியிலும் பிரயோகிக்கப் பட்டது: 1. “மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்” என்றனர் பிறரும். ஏதம்—குற்றம்.

மூன்றாமடியின் முதற்பதம் ‘நின்று’ என்பதாகவே பலரும் ஓதுவர்கள்; பல அச்சுப்பிரதிகளிற் பாடமுமிதுவே: இஃது இடையில் மாறுபட்ட பாடமாகும். “இன்றொன்றி நின்றுலகை” என்றே பூர்வவ்யாக்யான பாடம். “ஸமஸ்த லோகத்தையும் விடாதே நின்று தன் ஆஜ்ஞை செல்லும்படி நடத்தினவன் தானே

1. நன்னூல்—55.

வந்து அபிநிவிஷ்டனுன ஸம்பத்து எனக்கேயுள்ளது ; அது தானும் இன்று." என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின். மோனையின்பமும் பொருட்பொருத்தமும் இப்பாடத்திற்கே இணங்கும். பாசுரத்தை யெழுதும்போது அடிகளில் நிறுத்தாமல் மேலடியோடு ஸந்திசெய்தே யெழுதுகிற வழக்கப்படி பழைய ஏட்டுப்பிரதிகளில் "எனக்கேதா னின்றென்றிநின்றுலகை" என்றெழுதி யிருந்ததன்பயனுக "நின்றுன்றி நின்றுலகை" என்றபாடம் நிகழ்ந்தது போலும்.

"ஏழுலகை ஒன்றிநின்று ஆணையோட்டினுன் சென்று ஒன்றிநின்றதிரு இன்று எனக்கேதான்" என்று அந்வயிப்பது. எவ்வுலகத்தும் தன்னுடைய செங்கோலே செல்லும்படியாகத் தனியரசு புரிகின்ற திருமால் தானே யெழுந்தருளிப்பொருந்தி நெஞ்சிலே வாழும்படியான செல்வம் இன்று எனக்கே வாய்த்தது என்றவாறு.

திருநின்ற பக்கம் திறவிதென் றோரார் *
கருநின்ற கல்லார்க்குரைப்பர் *—திருவிருந்த
மார்வன் சிரீதரன்றன் வண்டுலவு தண்டுழாய் *
தார்தன்னைச் சூடித் தரித்து. (கூஉ)

| | | | |
|---|---|---|---|
| திரு இருந்த மார்வன் | பெரிய பிராட்டியார் எழுந்தருளி யிருக்கப்பெற்ற திருமார்வை யுடையனுய் (அதனுலே) | தரித்து | அதனுல் ஸத்தை பெற்று, |
| சிரீதரன் தன் | 'ஸ்ரீதரன்' என்று திருநாமம் பெற்றவனுன எம்பெருமானுடைய | திரு நின்ற பக்கம் திறவிது என்று ஓரார் | 'பிராட்டி பொருந்தியிருக்கப்பெற்ற வலப்பக்கத்தையுடைய வஸ்துவே பரதத்துவம்' என்று துணிந்தறியமாட்டாதவர்கள் |
| வண்டு உலவு தண் துழாய் தார் தன்னை | வண்டுகளுலாவப் பெற்ற குளிர்ந்த திருத்துழாய் மாலையை | கரு நின்ற | (தங்களைப்[illegible]ருள் சர்ப்ப[illegible]கூறின் ணி[illegible] [illegible]ாபணியாம். |
| சூடி | தலைக்கு அலங்காரமாக அணிந்து | கல்லார்க்கு உரை[illegible] | [illegible]ாத் தனிப்புத்த [illegible]னும் வடசொல் தொடர் |

| | |
|---|---|
| தாரகணம் | நக்ஷத்ரகணங்களி னுடைய |
| போர் | (சுபாசுப நிமித்தமான) ஸஞ்சாரத்தை |
| விரித்து உரைத்த | (ஜ்யோதிச்சாஸ்த்ர முகத்தாலே) விஸ்தாரமாக வெளியிட்டவனும் |
| வெம் நாகத்து உன்னை | (பிரதிகூலர்க்குத்) தீக்ஷ்ணனுமான திருவனந்தாழ்வானுக்கு அந்தராத்மாவாகிய உன்னை |
| தெரித்து | அநுஸந்தித்தும் |
| எழுதி | எழுதியும் |
| வாசித்தும் | (உன் திருநாமங்களைப்) படித்தும் |
| கேட்டும் | (அந்நாமங்களை) சிலரால் பன்னிடவும் |
| வணங்கி | நமஸ்காரம்பண்ணியும் |
| வழிபட்டும் | உபசாரங்களைச் செய்தும் |
| பூசித்தும் | பூஜித்தும் |
| போது போக்கினேன் | காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கின்றேன்; |
| | (இப்படி செய்தது எதுக்காக வென்னின்;) |
| தரித்திருந்தேன் ஆகவே | ஸத்தை பெறுவதற்காக. |

* * *—தம்முடைய போதுபோக்கைப் பேசுகிறார். எம்பெருமானை அநுஸந்திக்கை, அவனது திருப்புகழ்களைப் புஸ்தகமாக எழுதுகை, அவற்றை வாசிக்கை, செவித்தினவுகெடச் சொல்லுவார் பக்கல் கேட்கை, வணங்குகை, தம்மாலியன்ற உபசாரங்களைப் பண்ணுகை, அர்ச்சிக்கை முதலிய தொழில்களால் தம்முடைய போதுபோவதாக அருளிச்செய்தாராயிற்று. இப்படி செய்வன வெல்லாம் ஸாதநாநுஷ்டாந ரூபமாக அல்ல; ஆத்மா ஸத்தை பெறுதற்காக ஸ்வயம் புருஷார்த்தமாய்ச் செய்வன என்பதை வெளியிடுகிறார் "தரித்திருந்தேனாகவே" என்பதனால்.

["தாராகணப்போர் விரித்துரைத்த வெந்நாகத்துன்னை" ...த
இக்காலத்துப் புதிய ஆராய்ச்சிக்காரர் சிலர் வெளியிட்டுள்ள ...கொள்
'ஆழ்வார்கள் காலநிலை' என்னுமோர் புத்தகத்தில் இப்பா... பொருள்
ஆராய்ச்சிசெய்யப் புகுந்து, ...கித்துக்கூறின்
மாந்தர்பணியாம்.

"இதன் முதலிரண்டடிகட்கு-'நக்ஷத்ர...ங்களைத் தனிப்புத்த
திஸ்—சாஸ்திரத்தைச்சொன்ன திருவனந்...க.
வாயிருக்கிற உன்னை' என்பது பூர்வவி...
'தாராகணப்போர் விரித்துரைத்த...' என்னும் வடசொல் தொடர்

சேடனுக்கு உரியதாகும். ஆனால் அவனை இவ்வாறு விசேடிப்பதற்குரிய நேரான பொருத்தமொன்றுங் காணப்படவில்லை. ஆதிசேடன் செய்த சோதிடநூல் இன்னதென்பதுந் தெரிந்திலது. அதனால், 'வெந்நாகத்துன்னை' என்றுள்ள பாடம் 'விரித்துரைத்த வென்னாகத்துன்னை' என்றிருந்த பழம் பாடத்தினின்றும் மாறியதோ என்று கருத இடந்தருகின்றது. '(சோதிட நூலை) விரித்துரைத்த (என் + ஆகத்து =) எனது நெஞ்சிடமாகவுள்ள, உன்னை'—என்பது இப்பாடப்படி பொருளாகும்............இங்ஙனம் 'தாராகணப்போர் விரித்துரைத்த' என்பது ஆழ்வார்க்குரிய விசேடணமாயின், தம்மாற் செய்யப் பெற்ற சோதிடநூலொன்றைப்பற்றி அவர் குறிப்பிட்டனராவர். அத்தகைய நூல் யாது என்பது ஆராய்ந்து அறிதற்குரியது."

என்று எழுதியுள்ளார். இதனாற் சொல்லிற்றாகிறதென்னென்னில், பகவத்க்ருபையாலும் ஸதாசார்ய கடாக்ஷத்தாலும் ஆழ்வார்களருளிச்செயல்களின் உண்மைப்பொருள்களை நன்குணர்ந்து அருளிச்செய்தவரும், இற்றைக்குச் சற்றேறக்குறையத் தொள்ளாயிரம் ஆண்டுகட்கு முன்பு ஸர்வஜ்ஞராய்ப் புகழ்பெற்று விளங்கினவருமான பெரியவாச்சான் பிள்ளை பிழையான பாடமொன்றைக் கொண்டனரென்றும், அப்பாடப்படி உரைக்கும் பொருள் பொருத்தமற்றதென்றும் சொல்லிற்றாகிறது. "வெம் நாகத்து" என்பது பெரியவாச்சான் பிள்ளை உரைசெய்தருளின பாடம். "என் ஆகத்து" என்பது இப்புதியபுலவர் கற்பிக்கும் பாடம். பழையபாடத்திற் பொருத்தமின்மை கூறப்புகுமவர் தாங்கூறும் [illegible]டத்தில் ஒரு பொருத்தம்காட்டித் தீரவேண்டும். ஆதிசேஷன் று [illegible] த சோதிட நூல் இன்னதென்று தெரியவில்லையென்னுமிவர் எல்ட [illegible] ிசைப்பிரான் செய்த சோதிடநூல் இன்னதென்று தெரிந்து ஆ [illegible] லா [illegible] ாதல்வேண்டும். "பார்க்கவம் பிருகு சூத்திர முதலிய ஓதுவர்கள் [illegible] கிரந்தங்கள் உள்ளன; இவைபோன்றதொன்றே இடையில் மா[illegible]தே [illegible]ான ஆழ்வார் அருளிச்செய்ததாக வேண்டும்" என்றே பூர்வ[illegible] கூறுகின்றார். இத்தகைய அநுமானம் ஆதி விடாதே நின்று தன்[illegible]டும் [illegible]க் காரணமறிகின்றிலோம். வேதாங்கங் [illegible]ளன் [illegible]த்திற்கு ஆதிசேஷன் ப்ரவர்த்தகன்

1. நன்னூல்—55.

என்னுமிடத்தை "ஸஹாஸௌ ஜ்யௌதிஷீ வித்யா யதுபஜ்ஞா தராதலே, தமநந்தமநந்தஸ்ய தல்பம் ஸங்கல்பயே ஹ்ருதி — பபாஸே ஜ்யௌதிஷீ வித்யா யதுபஜ்ஞா தராதலே, தமநந்தமநந்தஸ்ய தல்பம் ஸங்கல்பயே ஹ்ருதி" இத்யாதிகளான பல பிரமாணங்களினால், நன்கறிந்தே பூருவர்கள் மிகப்பொருத்தமாக வியாக்கியானஞ் செய்தருளினர். இவ்விஷயமாகச் சில வாண்டுகட்கு முன்னர் நாம் பலவிடங்களிலும் பல பெரியோர்களை விசாரித்து வருகையில், மலைநாட்டில் திருவனந்தசயனத்தில் மலையாளிச் சோதிட நிபுணரொருவர் எடுத்துரைத்த ச்லோகம் மேற்குறித்தது. புராதநமான சோதிடநூலொன்றின் வியாக்கியானத்தில் மங்களச்லோகமாக அமைந்ததாமிது. இன்னமும் ஊன்றி ஆராயப்புகில் இத்தகைய ஆதாரங்கள் ஆகரத்துடன் பல கிடைக்கக்குறையில்லை. இதுநிற்க. திருமழிசைப்பிரான் பல மதங்களிலும் புகுந்து அந்தந்த மதங்கட்குச் சார்பாகப் பலநூல்களுமியற்றினரென்னும் ப்ரஸித்தியிருந்தாலும் சோதிடநூல் இயற்றியருளினராக எங்குங்கூறப்படவில்லை. அங்ஙனே ஏதேனுமொருநூல் தாம் செய்தருளியிருந்தாலும் அதனை இங்கு அநுவதித்தருளிச்செய்தற்கு ப்ரஸக்தியொன்றுமில்லை. இவ்வண்ணமருளிச்செய்யும் வழக்கம் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களிலொன்றிலுமில்லை. ஆகவே 'என் ஆகத்து' என்று பாடத்தை மாறுபடுத்தல் பயனற்றது. ஸர்வஜ்ஞர்களான பூர்வாசார்யர்களின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளில் அல்பஜ்ஞரான நாம் குறைகூறுதற்குச் சிறிது மதிகாரமுடையோமல்லோம். பூருவர்கள் ப்ரமித்தார்களெனினும் அந்த ப்ரமமே நமக்[illegible]மாகத்தக்கது. ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி ஸ்ரீ[illegible]வாளமாமுனிகள் வரையிலுள்ள ஸதாசார்யர்களின் ஸ்ரீஸூ[illegible]திகள் வேதவாக்கினுஞ் சிறந்து பிரமாணமாவனவென்று [illegible]ணிதாகக் கொள்வாரது திருவடிகளே சரணம். பூருவர்கள[illegible]ளிச்செய்த பொருள்கட்கு முரண்படாமல் விசேஷார்த்தங்[illegible] விவேகித்துக்கூறின் குறையொன்றுமில்லை. இதுவே க[illegible]றக்கற்ற மாந்தர்பணியாம். இன்னமுமிங்கு விரித்துரைக்கவே[illegible]டும் விஷயங்களைத் தனிப்புத்தகத்தில் விரித்துரைத்தோம், க[illegible]ண்டு கொள்க.

தாராகணப்[illegible] 'தாராகணம்' என்னும் வடசொல் தொடர்

நக்ஷத்ரஸமூஹமெனப் பொருள்படும். அவற்றின் ஸஞ்சாரத்தை ஜ்யோதிச் சாஸ்த்ரமுகத்தால் விரித்துரைத்தவரான திருவனந்தாழ்வானுக்கு அந்தராத்மாவாயிருக்கிற வன்னே. வேதம், பஞ்சராத்ரம், இதிஹாஸ புராணம் முதலிய வேதோபப்ரும்ஹணங்கள் முதலானவற்றை, தன் முகமாகவும் பிரமன் முகமாகவும் சில முனிவர்க்குத் தான் அந்தராத்மாவாயிருந்து அவர்கள் முகமாகவும் வெளியிட்டதுபோல ஆதிசேஷனுக்கு அந்தராத்மாவாயிருந்து ஜ்யோதிஸ் சாஸ்த்ரத்தை வெளியிட்டருளினன் என்னும் உண்மையை வெளியிடுதலே இவ்விசேஷணத்திற்குப் பிரயோஜன மென்க.

நாகம்—வடசொல் திரிபு; ஸர்ப்பம். 'வெம்' என்ற அடைமொழி இயற்கை பற்றியது. .... .... .... (சுங)

போதான விட்டிறைஞ்சி யேத்துமினோ * பொன்மகரக்
காதானை யாதிப்பெருமானை *—நாதானை
நல்லானை நாரணனை நம்மேழ் பிறப்பறுக்குஞ்
சொல்லானை * சொல்லுவதே சூது. (சுச)

பொன் மகரம் காதானை — அழகிய மகர குண்டலங்களைத் திருக்காதுகளில் அணிந்துள்ளவனும்
ஆதி — ஜகத்காரண பூதனும்
பெரு[illegible] — பெருமை பொருந்தியவனும்
[illegible]தானை — (அனைவர்க்கும்) [illegible] நாதனா[illegible] [illegible]ருப்பவனும்
நல்லானை — (ஆ[illegible]ர் பக்கல்) வா[illegible] [illegible]ய மு[illegible] [illegible]னும்
நாரணனை — நாராயணனென்[illegible] ப்ரஸித்தி பெற்றவனும்
நம் ஏழ் பிறப்பு அறுக்கும் சொல்லானை — நம்முடைய ஜன்ம பரம்பரைகளை அறுக்கவல்ல திருநாமங்களையுடையவனுமான ஸர்வேச்வரனைக் குறித்து
போது ஆன இட்டு இறைஞ்சி ஏத்துமின் — புஷ்பமென்று பேர் பெற்றவற்றை ஸமர்ப்பித்து வணங்கித் துதி செய்யுங்கள்;
சொல்லுவதே — (அவனுடைய திருநாமங்களை வாயாரச்) சொல்லித் துதிப்பதே
[illegible] சூது — நல்ல வாய்ப்பு.

* * *—தம்முடைய காலக்ஷேபக்ரமத்தை யருளிச்செய்தார் கீழ்ப்பாட்டில். பிறர்க்குக் காலக்ஷேப க்ரம[illegible] [illegible]தசிக்கிறு ரிப்பாட்

டில். எம்பெருமான் திருவடிகளில் புஷ்பங்களைப் பணிமாறுவதும் அவனது திருநாமங்களைச் சொல்லி யேத்தி யிறைஞ்சுவதுமே உங்கட்குப் போதுபோக்காகக் கடவதென்கிறார்.

'போதுகளை யிட்டிறைஞ்சி' என்னாமல் 'போதானை விட்டிறைஞ்சி' என்றதன் கருத்து யாதெனில்; எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கவேணுமென்கிற சுத்தபாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயினுங் குற்றமில்லை; 'செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி' என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவே யிருக்கவேணுமென்கிற நியதியில்லை; ஏதேனுமொரு பூவாயிருக்கலாம் என்பதாம். பெரியவாச்சான் பிள்ளையும் இவ்விடத்து வியாக்கியானத்தில்—"இன்ன புஷ்பமென்று நியதியில்லை; பூவானதை யெல்லாவற்றையுங்கொண்டு திருவடிகளிலே ஸமர்ப்பித்து வணங்கி ஸ்தோத்ரம் பண்ணுங்கோள்" என்றருளிச்செய்தது காண்க. இதனால், இன்ன பூ என்று நிர்ப்பந்த மில்லாமையால் பூவென்று பேர்பெற்றிருக்கு மதனையே வேண்டுமென்றதாயிற்று. திருவாய்மொழியில் [1—6—1.] "பரிவதிலீசனைப் பாடி விரிவது மேவலுறுவீர், பிரிவகையின்றி நன்னீர்தூய்ப் புரிவதும் புகைபூவே" என்ற பாசுரத்தை ஸ்ரீபட்டர் உபந்யஸிக்கும்போது "புரிவதும் புகைபூவே" என்ற சப்த ஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி 'இவ்விடத்தில் அகில்புகையென்றாவது, கருமுகைப்பூ என்றாவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனுமொரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகையிட்டுப் புகைக்கலாம்; கண்ட காலிப்பூவும் சூட்டலாம்' என்று உபந்யஸித்தருளினராம்; அதை நஞ்சீயர் கேட்டு "ந கண்டகாரிகா புஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச்செய்யலாமோ? என்று கேட்டார்; அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி:—'சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுக்கவில்லை; அடியார்கள் அப்பூவைப்பறித்தால் கையில் முள்தைக்குமே! என்று பக்தர்கள் பக்கல் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததேயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை; என்றாம். திரு

வாய்மொழிக்குப் பதினெண்ணாயிரமுரைத்த பரகாலஸ்வாமி இந்த ஸம்வாதத்தைக்கண்டு ரஸியாமல் திரஸ்கரித்துரைத்தது கிடக்க. "ஈத்ருஶஸக்த்யர்த்தாநாம் நஶாஸ்த்ரம் நைவச க்ரம:" [பக்தி எல்லை கடந்தால் நூல்வரம்பில்லை] என்றதையும் அருளிச்செயல் தொடையழகையும் நோக்கி ரஸப்பொருளுரைத்தவற்றில் குதர்க்க வாதஞ்செய்கை விவேகிகட்குப் பணியன்று. **பொன்மகரக் காதானை**=மகரமென்றது மரக்குழைக்கு ஆகுபெயர். சுறுமீன் வடிவமாகச் செய்யப்படுவதோர் காதணி மகரகுண்டலமெனப்படும்.

**நாதானை**....'நாதனை' என்பதன் நீட்டல். * செய்யுள் வேண்டுழி வந்த விகாரம்.

**நம்மேழ்பிறப்பறுக்குஞ் சொல்லானை**=ஒன்றின்பின் ஒன்றாக இடையறாது நிகழ்ந்து செல்கின்ற நமது ஜன்மங்களைப் போக்க வல்ல திருநாமங்களையுடையவன் எம்பெருமான். '**ஏழ்பிறப்பு**' என்பதற்குப் பலவகையாகப் பொருள்கூறுவதுண்டு: கர்ப்பவாஸஞ் செய்யும் கஷ்டம், கர்ப்பத்தினின்று வெளிப்படுங் கஷ்டம், பல பிணிகளை யநுபவிக்குங் கஷ்டம், கிழத்தன மநுபவிக்குங்கஷ்டம், மரணவேதனைகள் படுங்கஷ்டம், மரணமடையுங் கஷ்டம், நரகயாதனைகளை யநுபவிக்குங் கஷ்டம் ஆகிய ஏழுவகைக்கஷ்டங்களுக்குக் காரணமாகிய பிறப்பு என்பர் சிலர்; 1. "பெருங்களிற்று வட்டம், பெருமணல் வட்டம், எரியின் வட்டம் புகையின் வட்டம், இருளின் வட்டம் பெருங்கீழ் வட்டம், அரிபடை வட்டமென்றெழுவகை நரகம்" என்னப்பட்ட ஏழு நரகங்களிலும் புகுவதற்கு ஏதுவான பிறப்பு என்பர் சிலர். 'ஏழு' என்றது உபலக்ஷணமாய்ப் பலவகைப் பிறப்புகளென்றபடி என்பர் சிலர். மற்றும் பல வகைகளுங் காண்க. "எழுவகைத்தோற்றத் தின்னுப்பிறப்பின்" "எழுபிறப்பி லடியவரை யெழுதாப் பெரியபெருமானை" (திருவரங்கக்கலம்பகம்) என்றவையுங் காண்க. **சூது**-உற்றது. .... .... (சுச)

**சூதாவ தென்னெஞ்சத் தெண்ணினேன் * சொன்மாலை**
**மாதாய மாலவனை மாதவனை *—யாதானும்**
**வல்லவா சிந்தித் திருப்பேற்கு * வைகுந்தத்**
**தில்லையோ சொல்லீ ரிடம்.** (சுரு)

1. சேந்தன் திவாகரம்—12 ஆவது தொகுதி.

| | |
|---|---|
| மாது ஆய — அழகுதான் ஒரு வடிவுகொண்டாற் போலேயிருப்பவனும் | வைகுந்தத்து இடம் இல்லையோ — ஸ்ரீ வைகுண்டத்தில் இடம் இல்லையோ? |
| மாலவனை — (ஆச்ரிதர் பக்கல்) வ்யாமோஹமுடையவனுமான | சொல்லீர் — சொல்லுங்கள் : |
| மாதவனை — திருமாலைக் குறித்து | சூது ஆவது — இதுவே நமக்கு நல்லவாய்ப்பு என்று |
| சொல் மாலை — இச்சொல் தொடைகளை (ச் சொல்லி) | என் நெஞ்சத்து எண்ணினேன் — என் மனத்தில் உறுதி கொண்டேன். |
| யாதானும் வல்லவா சிந்தித்து இருப்பேற்கு — ஏதோ சக்தியுள்ளவளவு அநுஸந்தித்திருக்கிற எனக்கு | |

* * *—எம்பெருமான் விஷயமாக இப்படிப்பட்ட சொல்மாலைகளைச்சொல்லிச் சிந்தித்திருப்பதுதான் நமக்கு உற்றது என்று நான் அத்யவஸாயங்கொண்டேன்; இதுவே போதுபோக்காக நானிருந்தால் எனக்குப் பரமபதம் கிடைக்கமாட்டாதோ? கர்ம ஜ்ஞாநபக்திகளென்னு முபாயாந்தரங்களை அனுட்டிப்பதும் கண்ணைப்புதைப்பதும் மூக்கைப் புதைப்பதுமாயிருந்து உடலை வருத்தி அருந்தொழில் புரிந்தால்தான் பரமபதம் கிடைக்குமென்று பாவிகாள்! நீங்கள் நினைத்திருக்கிறீர்களோ? என்றவாறு.

இப்பாசுரத்தின் பின்னடிகளைப் பெரும்பாலு முட்கொண்டே 1. "சிற்றவேண்டா சிந்திப்பேயமையுங் கண்டீர்களந்தோ!............ குற்றமில் சீர்கற்று வைகல் வாழ்தல் கண்டீர் குணமே." என்று நம்மாழ்வா ரருளிச்செய்தனரென்னலாம். மாதவனைச் சொல்மாலைகள் கொண்டு யாதானும் வல்லவா சிந்தித்திருக்கிற தமக்கே வைகுந்தமுண்டு, மற்றையோர்க்கு இல்லை என்று தாம் விவக்ஷித்த பொருளை விளுமுறையில் வைத்துரைத்தனரென்க.

மாதாய='மாது' என்று அழகுக்குப்பெயர்; "தோள் கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமலமன்ன தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கை கண்டாருமஃதே" என்னும்படியாக

1. திருவாய்மொழி 9—1—7.

அழகு தானே வடிவெடுத்தவனென்கை. இனி, 'மாதா' என்னும் வடசொல் மாது எனக் கிடப்பதாகக்கொண்டு தாய்போன்றளிப்பவனென்னவுமாம். 'மாலவனை' என்றும் 'மாயவனை' என்றும் பாடபேதம். .... .... .... .... (கூரு)

இடமாவ தென்னெஞ்ச மின்றெல்லாம் * பண்டு
படநாகணை நெடியமாற்கு *—திடமாக
வையேன் மதிசூடி தன்னோடு அயனைநான் *
வையேனாட் செய்யேன் வலம். (கூகா)

| | | | |
|---|---|---|---|
| பண்டு | என்னைத் திருத்திப் பணி கொள்வதற்கு முன்பு, | திடம் ஆக | பரம்பொருளாக |
| படம் நாக அணை நெடிய மாற்கு | படங்களையுடைய சேஷசயனத்தில் பள்ளிகொண்டருள்பவனாயிருந்த ஸர்வேச்வரனுக்கு | வையேன் | மனத்திற்கொள்ள மாட்டேன்; |
| இன்று | இப்போது முதலாக | வையேன் நான் | (தத்துவமின்னதென்று கண்டறியத்தக்க) ஸூக்ஷ்ம புத்தியுடையேனான நான் |
| எல்லாம் | மேலுள்ள காலமெல்லாம் | ஆள் செய்யேன் | (அந்த தேவதாந்தரங்களுக்குத்) தொண்டு செய்யவும் மாட்டேன்; |
| இடம் ஆவது | வாஸஸ்தானமாவது | | |
| என் நெஞ்சம் | எனது நெஞ்சாகும்; | | (இப்படி நான் சொல்லுவதற்குக் காரணமென்னவெனில்;) |
| மதி சூடி தன்னோடு | பிறைச்சந்திரனைத் தலையிலே சூடியிருக்கிற ருத்ரனையும் | வலம் | (திருமாலின் பரிக்ரஹமாயிருக்கப்பெற்ற) மிடுக்கேயாம். |
| அயனை | பிரமனையும் | | |

* * *—கீழ்ப்பாட்டில் "யாதானும் வல்லவா சிந்தித்திருப்பேற்கு வைகுந்தத்தில்லையோ சொல்லீரிடம்" என்றவாறே, எம்பெருமான், 'நம்முடைய இருப்பிடத்தை இவர் ஆசைப்படுகையாவதென்; இவருடைய நெஞ்சமன்றோ நமக்கு உத்தேச்யம்' என்று கொண்டு இவர்தம் திருவுள்ளத்தே வந்து புகுந்தருளினான்; அதனை யருளிச்செய்கிறார். "சென்றாற் குடையா மிருந்தாற் சிங்கா

சனமாம்" என்கிறபடியே ஸகலவித கைங்கரியங்களுக்கும் உரியவனை திருவனந்தாழ்வான்மேல் திருமால் சாய்ந்தருளினது இற்றைக்கு முன்பே; இன்று முதலாக மேலுள்ள காலமெல்லாம் எனது நெஞ்சையே தனக்கு இடமாக அமைத்துக்கொண்டானாயிற்று: இப்படி அவன்றானே வந்து விரும்பப்பெற்ற பாக்யம் வாய்ந்த அடியேன் ஒளிர்மதிச் சடையனையாவது நான்முகக்கடவுளையாவது நெஞ்சிற் கொள்ளவும் வணங்கிவழிபடவும் இனி ப்ராப்தி ஏது? எம்பெருமானை அண்டைகொண்டமிடுக்கு எனக்குள்ளதன்றோ? என்கிறார்.

நாக + அணை, நாகவணை என்றாகத்தக்கது, 'நாகணை' என மருவிற்று. **மதிசூடி** = தக்ஷமுனிவனது சாபத்தால் க்ஷயமடைபவனாய்க் கலைகுறைந்து வந்து சரணடைந்த சந்திரனை முடியின்மீது கொண்டு வரமளித்துப் பாதுகாத்தமையால் சிவன் மதிசூடியாயினன். இப்பாட்டில் '**வையேன்**' என்பது இரண்டிடத்து வந்துள்ளது; ஒன்று எதிர்மறை வினைமுற்று; மற்றொன்று உடன்பாட்டு வினையாலணையும் பெயர். **வை**—கூர்மை; கூர்மை தங்கிய மதியுடையேன் என்றவாறு. தேவதாந்தரப் பற்றையொழித்து ஸ்ரீமந் நாராயணனையே பரதெய்வமாகக் கடைப்பிடித்த தமது மதியைத் தாம் சிறப்பித்துக் கூறுதல் ஏற்குமென்க.

**ஆட்செய்யேன் வலம்** = ஆட்செய்யேன், வலஞ்செய்யேன் என்று யோஜித்து, (அவர்களைப்) பிரதக்ஷிணம் செய்யமாட்டேனென்றுரைக்கவுமாம். .... .... .... (கசு)

வலமாக மாட்டாமை தானாக * வைகல்
குலமாக குற்றந்தா னாக—* நலமாக
நாரணனை நாபதியை ஞானப் பெருமானை *
சீரணனை யேத்துந் திறம். (கஎ)

| | | | |
|---|---|---|---|
| நாரணனை | ஸ்ரீமந் நாராயணனாய் | சீர் அணனை | நற்குணங்கள் பொருந்தியிருக்கப் பெற்றவனான ஸர்வேச்வரனை |
| நாபதியை | (என்னுடைய) நாவுக்கு ப்ரவர்த்தகனாய் | | |
| ஞானம் பெருமானை | அறிவிற் பெரியவனாய் | | |

| | | | |
|---|---|---|---|
| வைகல் நலம் ஆக ஏத்தும் திறம் | எப்போதும் நன்ருகத் துதி செய்கையாகிற இந்த ஸ்வபாவமானது | மாட்டாமை தான் ஆக | நன்மைதரமாட்டாதாகிலுமாகுக ; |
| | | குலம் ஆக | நற்குலத்தைத் தருவதாகிலுமாகுக ; |
| | | குற்றம் தான் ஆக | கெடுதலையுண்டாக்குவதாகிலுமாகுக; |
| வலம் ஆக | நன்மைதருவதாகிலுமாகுக ; | | [ஏத்துவதை நான் தவிரமாட்டேன்.] |

* * *—ஸ்ரீமந்நாராயணனைத் துதிசெய்வதே தொழிலாக நானிருப்பது எனக்கு நன்மையைத்தரவல்லது என்றும் நற்குலத்தை விளக்கவல்லது என்றும் நான் நினைத்திருக்கிறேன்; இந்த என்னினைவின்படியே ஆகிலுமாகுக; இதற்கு விபரீதமாகக் கெடுதலை விளைக்கவல்லதாணுலுமாகுக: இதில் எனக்கொரு விவக்ஷையில்லை: எம்பெருமானை ஏத்துகையே எனக்கு உத்தேசியம் என்கிருர்.

வலமாக—எம்பெருமானைத் துதிப்பதானது என்னுடைய கொள்கையின்படி வலத்தைக் கொடுப்பதாகவுமாம்; மாட்டாமை தாளுக—எம்பெருமானது வைபவமறியாத உங்களுடைய கருத்தின்படி தத்விபரீதமாகவுமாம். எப்படியாளுலெனக்கென்ன? நானொரு பலனை விரும்பினவனல்லேன்; ஸ்வயம் புருஷார்த்தமாக எம்பெருமானைத் துதிப்பேன் நான் என்றவாறு. "வலமாக—குலமாக" என்றவற்றுக்குச் சார்பாக "குலந்தருஞ் செல்வந்தந்திடும் ........வலந்தரும்மற்றும் தந்திடும்........நாராயணுவென்னும் நாமம்" என்ற திருமங்கையார் பாசுரம் அநுஸந்திக்கத்தகும். .... (கூஎ)

திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம் *
மறந்தும் புறந்தொழா மாந்தர் *—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்க ளென்ருன் * நமனுந்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு. (கூஅ)

| | | | |
|---|---|---|---|
| நமனும் | யமனும் | (என்ன சொன்னுனென்ருல்) | |
| தன் தூதுவரை | தனது சேவகர்களை | | ' (ஓ சேவகர்களே!) (இப்போது நான் உங்களுக்கு இடும் ஆணையைத்) தவறவேண்டா ; |
| கூவி | அழைத்து | திறம்பேல்மின் கண்டீர் | |
| செவிக்கு | (அவர்களுடைய) காதில் | | |

| | | | |
|---|---|---|---|
| திருவடி தன் | ஸர்வேச்வரனுடைய | இறைஞ்சி | வணங்கி |
| நாமம் | திருநாமத்தை | | |
| மறந்தும் | மறந்தொழிந்தாலும் | சாதுவர் ஆய் போதுமின்கள் என்றான் | (கொடுமை தவிர்ந்து) ஸாதுக்களாய் வர்த்திக்கக்கடவீர்கள்' என்று சொன்னான். |
| புறம் தொழா மாந்தர் | தேவதாந்தர பஜநம் பண்ணாத மனிசர்களை (க் கண்டால்) | | |

* * *—ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் [3—7—14] "ஸ்வபுருஷ மபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யமః கில தஸ்ய கர்ணமூலே। பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹ மந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம் = ஸ்வபுருஷ மபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யமః கில தஸ்ய கர்ணமூலே—பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹ மந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்" என்கிற ச்லோகத்தைத் தழுவி இப்பாசுர மருளிச்செய்யப்பட்டது. அந்த ச்லோகத்தின் கருத்தும் இந்தப் பாசுரத்தின் கருத்தும் ஒன்றேயென்க.

யமனுடைய தூதர்கள் பாசங்களைக் கையிற்கொண்டு தங்கள் கடமையைச்செலுத்தப் புறப்படும்போது யமன் அத்தூதர்களை யழைத்து, ரஹஸ்யங்கள் சொல்லுமாபோலே காதோடே ஒரு வார்த்தை சொன்னான்; அஃதென்னென்னில்; 'ஓ தூதர்களே! நீங்கள் பாகவதர்களிடத்தில் சிறிதும் அதிகாரஞ் செலுத்த வேண்டா; அவர்களருகில் நீங்கள் செல்லவேகூடாது; ஒருகால் அவர்கள் நேர்பட்டால் வணங்கி வலஞ்செய்து பரமஸாத்விகர்களாய் விலகுங்கோள்' என்றானாம். இதனால் பாகவதர்கட்கு யமபய ப்ரஸக்தியே யில்லையென்றதாம். "அவன்தம ரெவ்வினையராகிலும் எங்கோனவன்தமரே யென்றொழிவதல்லால்—நமன்தமராலாராயப் பட்டறியார்கண்டீர் அரவணைமேற் பேராயற் காட்பட்டார்பேர்" என்றார் பொய்கையாழ்வார்; "கெடுமிடராயவெல்லாம் கேசவா வென்ன நாளுங்கொடுவினை செய்யுங் கூற்றின்தமர்களுங் குறுககில்லார்" என்றார் நம்மாழ்வார். "மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின்னாமங்கற்ற, ஆவலிப்புடைமைகண்டாய்—நாவலிட்டுழிதர்கின்றோம் நமன்றமர் தலைகள்மீதே" என்றார் தொண்டரடிப்பொடியாழ்வார். "எத்தியுன் சேவடி யெண்ணியிருப்பாரைப், பார்த்திருந்தங்கு நமன்றமர் பற்றாமல், சோத்தம் நாமஞ்சுதுமென்று தொடாமை நீ, காத்திபோய்க் கண்ணபுரத்துறை யம்மானே!"

என்றார் திருமங்கையாழ்வார். யமன் தன் தூதர்க்குச் சொல்லத் தொடங்கும்போதே 'திறம்பேல்மின் கண்டீர்' என்கையாலே, ஒருகால் அத்தூதர் ஞாபகப்பிசகினால் பாகவதர்களிடத்தில் தம் அதிகாரத்தைச்செலுத்தினால் தனக்கு மஹத்தான அநர்த்தம் விளைந்திடுமென்கிற அச்சமுள்ளமை வெளிப்படும். **கண்டீர்**—முன்னிலையசை. **திருவடிதன்னாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்**= 'அடி' என்றும், 'அடிகள்' என்றும் 'திருவடி' என்றும் ஸ்வாமிக்கு வாசகம். ஸர்வஸ்வாமியான எம்பெருமானுடைய திருநாமத்தை........என்றபடி. "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்னுமிந்த ஸ்ரீஸூக்தியின் போக்யதை ஆழ்ந்து அநுபவிக்கத்தக்கது. எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருந்தாலு மிருக்கலாம், இல்லாமற் போனாலும் போகலாம்; தேவதாந்தரங்களிடத்தில் பற்றில்லாமையே முக்கியம்; ஒருத்தி தன் கணவனிடத்தில் அன்புகொள்ளா திருக்கினு மிருக்கலாம்; நாளடைவில் ஆநுகூல்ய மேற்படக்கூடும்; வேறு புருஷனிடத்தில் அன்புகொண்டால் அவத்யமாகுமே; அதுபோலவென்க. முமுக்ஷுப்படியில் உகாரார்த்தம் விவரிக்குமிடத்து "அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதாநம்; தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கிடுமாபோலே ஈச்வரசேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை. பகவத் சேஷத்வத்திலும் அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதாநம்; 'மறந்தும் புறந்தொழா மாந்தர்' என்கையாலே." என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்திகள் இங்குக் குறிக்கொள்ளத்தக்கன.

"மாந்தரை" என்று சிலர் ஓதுவர்களேனும் அது பாடமன்று; வெண்டளையும் பிறழும். **சாதுவர்**—வடசொல் விகாரம்; **ஸாயவஃ**. "**என்றான்........கூவிச்சேவிக்கு**" என்றும் "**வஉதி யஃஃ கிஉ தஸு கண—ஃஉ—மெ**" என்றும் காதோடே ரஹஸ்யமாகக் கட்டளையிடுவானேன்? நாடுநகரமும் நன்கறியப் பேரிரைச்சலிட்டு இங்ஙனே கட்டளையிடலாகதோ? என்னில்; ஆகாது; 'ராஜமஹிஷியிடத்தில் காமங்கொள்ளாதே' என்று ஒருவன் ஒருவனுக்குக் கட்டளையிட வேணுமானால் இது யுக்தமான வார்த்தையேயாகிலும் இவ்வார்த்தையைப் $ பிறர் செவிப்படச் சொல்லலாகாதன்றே; அதுபோல.

---

$ "ராஜதாரவ்யாவணு நிஷேதமும் பிறரறியிற் பொல்லாதிறே" என்பது பூருவர்களின் ஸ்ரீஸூக்தி.

அந்த வார்த்தையைத்தான் பலராறிய என் சொல்லலாகாதென்னில்; கேண்மின்; 'ராஜமஹிஷியினிடத்தில் காமங்கொள்ளாதே' என்னும்போது ("ப்ரஸக்தஸ்யைவ ஹி ப்ரதிஷேத:—நஹ்யப்ரஸக்தம் ப்ரதிஷித்யதே" என்கிற நியாயத்தாலே) எதிராளி ராஜமஹிஷியினிடத்தில் காமங்கொண்டது வெளிப்படையாகுமே; அது அரசனுக்கு எட்டினால் தலைபோமே. .... .... .... (௯அ)

சேவிக்கின்ப மாவதுவும் செங்கண்மால் நாமம் *
புவிக்கும் புவியதுவே கண்டீர்*—கவிக்கு
நிறைபொருளாய் நின்றானை நேர்பட்டேன் * பார்க்கில்
மறைபொருளு மத்தனையே தான். (௯௯)

| | |
|---|---|
| செவிக்கு இன்பம் ஆவதுவும் | கர்ணாமிருதமாயிருப்பதும் |
| செம் கண் மால் நாமம் | புண்டரீகாக்ஷனான எம்பெருமானுடைய திருநாமமே; |
| புவிக்கு | பூமியிலுள்ளாரெல்லார்க்கும் |
| புவியும் அதுவே | (நிழல்பெற ஒதுங்குவதற்கு) இடமாவதும் அத்திருநாமமே; |
| கவிக்கு நிறை பொருள் ஆய் நின்றானை | பாசுரத்திற்கு நிறைந்த பொருளாயிருக்குமெம்பெருமானை |
| நேர்பட்டேன் | தைவாதீனமாக அடையப் பெற்றேன்; |
| பார்க்கில் | ஆராய்ந்து பார்த்தால் |
| மறை பொருளும் அத்தனையே தான் | வேதங்களில் தேர்ந்த பொருளும் அவ்வளவே. |

* * *—எம்பெருமானுடைய திருநாமம் யமவச்யதையைத் தவிர்க்குமென்றது கீழ்ப்பாட்டில்; அதனால் திருநாமத்தின் பாவநத்வம் [தூய்மை] சொல்லப்பட்டதாயிற்று; அப்படி பாவநமாயிருப்பதோடு மிகவும் போக்யமுமா யிருக்குமென்கிறது இப்பாட்டில். 1. "தோளாத மாமணியைத் தொண்டர்க்கினியானைக், கேளாச்செவிகள் செவியல்ல கேட்டாமே" என்றும், 2. "ச்ரோத்ர ச்ராவ்யா: ச்ருணு ச்ருதம்" என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானுடைய திருக்குண சேஷ்டிதங்களையும் அவற்றுக்கு வாசகமான திருநாமங்களையும் கேட்பதே காதுக்கு இன்பம் என்பது முதலடி.

1. பெரியதிருமொழி 11—7—2. 2. முகுந்தமாலை.

புவிக்கும் புவி அதுவே கண்டீர்=இப்பூலோகத்திலுள்ளாரனைவரும் ஸம்ஸாரதாபந்தீர நிழலுக்கொதுங்கி வாழவேண்டுமிடம் அந்த பகவந்நாமமே என்கை. 'ஹ-பி:' என்னும் வடசொல்லோ 'ஹ-பிதி:' என்னும் வடசொல்லோ புவியெனத்திரிந்தது. அது இலக்கணையால், பூமியிலுள்ளாரைக் குறித்தது புவிக்கும் என்றவிடத்து. அதற்குமேலுள்ள புவியென்னுஞ்சொல் ஸ்தாநமென்னும் பொருளது.

"செவிக்கின்பமாவதுவுஞ் செங்கண்மால் நாமம்" என்று நீர் திருநாமத்தின் போக்யதையில் ஈடுபடும்படியாக எங்ஙனே பெற்றீர்? என்று கேட்பார்க்குப் பின்னடிகளால் விடையளிக்கிறார் போலும். கவிக்கு நிறைபொருளாய் நின்றானை நேர்பட்டேன்=எம்பெருமானை நான் யாத்ருச்சிகமாகக் கிட்டப்பெற்றேன் என்கை. நானாக ஒரு க்ருஷிபண்ணி பகவத்விஷயத்தில் ஈடுபட்டேனல்லேன்; விதிவசமாக நேர்ந்தது என்றவாறு. பார்க்கில் மறைபொருளுமத்தனையேதான்=எனக்கு யாத்ருச்சிகமாக நேர்பட்டதென்பது இருக்கட்டும்; உண்மையில் வேதாந்த ரஹஸ்யப்பொருளை ஆராயுமிடத்து முன்னடிகளிற் சொன்ன அர்த்தமே ஸகல வேதஸாரப்பொருளாயிருக்கும் என்றபடி.

கவிக்கு நிறைபொருளாய் நின்றானை=எம்பெருமானுக்கு உரிய விசேஷணங்களெல்லாவற்றினும் இவ்விசேஷணம் மிகச் சிறந்ததாகும்: எம்பெருமானைத் தவிர்த்து மற்றையோரைக் கவி பாட நினைத்தால் சொற்களையும் பொருள்களையும் திருடித்திருடிக் கவிபாடவேண்டும்; அங்ஙனன்றிக்கே எம்பெருமான் கவிக்கு நிறைந்த பொருளாயிருப்பன்; * ஏற்கும் பெரும்புகழ் வானவரீசனாகையாலே. "ஊந்ருத்ராதஜூணொக்ஷிஹஸ்ரவதிந, தஜூக்ஷ வளவெஸ: வரெஷாஂ ஷூத்ருக்ஷாஜ" என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸூக்தி இங்கு ஸ்மரிக்கத்தகும்.

ஈற்றடியில் "மறைப்பொருளும்" எனப் பகரவொற்று வரவேண்டுமிடத்து வாராதது முன்னடிக்குச்சேர. .... (௬௯)

தானொருவனாகித் தரணி யிடந்தெடுத்து *
ஏனொருவனா யெயிற்றில் தாங்கியதும் *—யானொருவன்
இன்று வறிகின்றே னல்லேன் * இருநிலத்தைச்
சென்றுங் கடிப்படுத்த சேய். (௭௦)

| | |
|---|---|
| தான் ஒருவன் ஆகி | (விஷ்ணுவாகிய) தான் ஒப்பற்ற ஸர்வேச்வரனா யிருந்து |
| சென்று | (மஹாபலியி னிடத்தில் யாசகனாய்ச்) சென்று |
| ஆங்கு | அந்த மாவலியின் யாக பூமியிலே |
| இரு நிலத்தை | விசாலமான இந்நிலத்தை |
| அடிப்படுத்த | திருவடியினளவாக ஆக்கிக் கொண்ட [அளந்து கொண்ட] |
| சேய் | சிறுபிள்ளையானவன் |

| | |
|---|---|
| ஏன் ஒருவன் ஆய் | விலக்ஷண வராஹ ரூபியாய் |
| (பிரளயப் பெருங்கடலினுள் முழுகி) | |
| தரணி | பூமியை |
| இடந்து எடுத்து | (அண்டபித்தியில் நின்றும்) ஒட்டு விடுவித்தெடுத்து |
| எயிற்றில் | (தனது) கோரைப் பல்லின்மீது |
| தாங்கியது | தரித்தமையை |
| யான் ஒருவன் | நானொருவன் மாத்திரம் |
| இன்று | இன்றாக |
| அறி கின்றேன் அல்லேன் | அறிகிறேனில்லை. [நெடுநாளாகவே அனைவருமறிவர்.] |

* * *—எம்பெருமான் வாமநமூர்த்தியாகி மாவலிபக்கலிற் சென்று மூவடியிரந்துபெற்று மூவுலகளந்ததும், பிரளயப் பெரு வெள்ளத்தில் மூழ்கி அண்டபித்தியில் ஒட்டிக்கிடந்த பூமியை மஹாவராஹமூர்த்தியாகி உத்தரித்ததும் ஆகிய இப்படிப்பட்ட பெருமைகள் ஸர்வலோக ப்ரஸித்தமென்கிறார்.

"தானொருவனாகி" என்பதை மேல் மூன்றுமடியோடு கூட்டியுரைக்க. 'தானொருவனாகி இருநிலத்தைச் சென்றாங்கடிப்படுத்த சேய் ஏனொருவனாய்த் தரணி இடந்தெடுத்து எயிற்றில் தாங்கியதும் யானொருவன் இன்றாவறிகின்றேனல்லேன்' என இயையும்.

'யானொருவ னறிகின்றேனல்லேன்' என்கையாலே உலகமெல்லாமறியும் என்பதும், 'இன்றா வறிகின்றேனல்லேன்' என்கையாலே இது புராதநம் என்பதும் வெளியாம். .... (எ௦)

சேய னணியன் சிறியன் மிகப்பெரியன் *
ஆயன் துவரைக்கோனாய்நின்ற—மாயன் * அன்
றோதிய வாக்கதனைக் கல்லார் * உலகத்தில்
ஏதிலராம் மெய்ஞ்ஞான மில். (எக)

| | |
|---|---|
| சிறியன் | (ஸ்ரீகிருஷ்ணனென்கிற) சிறு பிள்ளையாய்க் கொண்டு |
| அணியன் | ஸுலபனாயும் |
| மிக பெரியன் | (அந்நிலையிலேயே) மிகவும் பெரியவனாய்க்கொண்டு |
| சேயன் | எட்டாதவனாயும் |
| (இவ்விரண்டு படிகளுக்கும் உதாரணமாக) | |
| ஆயன் ஆய் நின்ற | இடைப்பிள்ளையாய்ப் பிறந்த சிறுமையையுடையனாயும் |
| துவரை கோன் ஆய் நின்ற | த்வாரகாபுரிக்குத் தலைவனாய் நின்ற பெருமேன்மையையுடையவனாயுமிருந்த |
| மாயன் | எம்பெருமான் |
| அன்று | (பாரதயுத்தம்நடந்த) அக்காலத்தில் |
| ஓதிய | (திருத்தேர்த்தட்டில் அர்ஜுநனைக் குறித்து) அருளிச்செய்த |
| வாக்கு அதனை | (சரமச்லோகமாகிய) அந்தத் திருவாக்கை |
| உலகத்தில் | இவ்வுலகத்தில் |
| கல்லார் | அதிகரிக்கப் பெறாதவர்கள் |
| மெய் ஞானம் இல் | தத்துவவுணர்ச்சியற்ற |
| ஏதிலர் ஆம் | பகவத் விரோதிகளாவர். |

* * *—கண்ணபிரான் அர்ஜுநனை வியாஜமாகக்கொண்டு அருளிச்செய்த பகவத்கீதையில் ஸாரமான சரமச்லோகம் இங்கு '**துவரைக்கோனாய் நின்றமாயன் அன்றோதிய வாக்கு**' என்பதனால் குறிக்கப்படுகிறது. அதன் பொருளை யறியப்பெறாதவர்கள் தத்துவஞானம் பெறார்கள்; தத்துவஞானம் பெற்றவர்களே எம்பெருமான்றனக்கு அன்பராகவும் மற்றையோர் விரோதிகளாகவுங்கொள்ளப்படுதலால் சரமச்லோகப் பொருளுணராதவர்கள் எம்பெருமானுக்குப் பகைவராவர் என்கிறது.

பாரதயுத்தத்து முதனாட்போரில் "உற்றாரையெல்லாம் உடன்கொன்று அரசாளப், பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம்" என்றெண்ணி, ஸ்வதர்மத்தில் அதர்மபுத்தியால் போர்புரியேனென்று காண்டீவம் கைநெகிழத் தேர்த்தட்டின்மீதே திகைத்து நின்ற அர்ஜுநனுக்கு ஸ்ரீகிருஷ்ணன் தத்வோபதேசஞ் செய்து அவனது கலக்கத்தைப்போக்க உபதேசித்ததாதலால் கீதை சிறந்தது. அதில் முதலிலே அர்ஜுநனுக்கு தேஹாத்மவிவேகத்தைப்

போதித்து அதன் மூலமாகக் கர்மயோகம் புருஷோத்தமவித்யை அவதார ரஹஸ்யஜ்ஞானம் முதலியவற்றை உபதேசிக்க, அர்ஜுனன் அந்த எம்பெருமான் உபதேசித்த உபாய விசேஷங்களைக்கேட்டு அவை செயற்கரியனவென்றும் ஸ்வரூப விரோதிகளென்றும் நினைத்துக் கலக்கமடைய, அவனுடைய கலக்கந்தீருமாறு எல்லா வுபாயங்களினும் மேம்பட்ட பிரபத்தியுபாயத்தை யுபதேசித்து "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:" [நீ என்னையே சரணமாகப்பற்றினால் நான் உன்னை எல்லாப்பாபங் களினின்றும் விடுவிப்பேன், கலங்கவேண்டா] என்று அவனது கலக்கத்தைப் போக்கினது சரமச்லோகத்திலென்க. 1. "அறி வினுற் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய, நெறியெல்லா மெடுத் துரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி" என்கிறபடியே ஸர்வஜ்ஞ னை ஸர்வேச்வரன் தனது திருவாக்கினின்று உலகத்தார் நற்கதி பெறவேணுமென்ற கருத்தோடு உபநிஷத்துக்களின் ஸாரமாக வெளியிட்டதாதலின் தத்துவஞானத்திற்கு இதுவே சிறந்த ஸாதனமாகும். இதனையறியாதவர்கள் '**மெய்ஞ்ஞானமில் ஏதிலராம்**' என்னத் தட்டில்லை.

இப்பாட்டில், **சேயன்** என்பது **மிகப்பெரியன்** என்பதோடு அந்வயிக்கும்; **அணியன்** என்பது **சிறியன்** என்பதோடு அந்வயிக் கும். எம்பெருமான் எளியனுயு மிருப்பன் அரியனுயு மிருப்பன்; என்றவாறு.

'ஏதலர்' என்றாலும் 'ஏதிலர்' என்றாலும் பகைவர்; ஏது இலர்—யாதொரு ஸம்பந்தமு மில்லாதவர் என்கை. ஆகவே பகை வரைக் குறிக்கும். பகவத்கீதையில் [16—19.] "தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந்। க்ஷிபாம்யஜஸ்ரம் அஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு." என்ற ச்லோகத்தில் '**த்விஷத:**' என்று அப்பெருமான்றானே சொன்னதைத் திருவுள் ளம்பற்றி இங்கு '**ஏதிலராம்**' என்றனரென்னலாம். .... (எக)

இல்லற மில்லேல் துறவற மில்லென்னும் *
சொல்லற மல்லனவும் சொல்லல்ல *—நல்லற
மாவனவும் நால்வேத மாத்தவமும் * நாரணனே
யாவ தீதன்றேன்பா ரார். (எஉ)

1. திருவாய்மொழி 4—8—6.

(முக்திமார்க்கம் தெரியாமல் ஸம்ஸாரத்தில் உழல்கின்ற ஆத்மாக்களுக்கு)

இல்லறம் என்னும் சொல்லும் — { க்ருஹஸ்த தர்மமாக சாஸ்த்ரஸித்தமான கர்மயோகம் தஞ்சமென்று சொல்லுகிற பிரமாணங்களும் }

சொல் அல்ல — பிரமாணமல்ல;

இல்லேல் — அங்ஙனன்றிக்கே,

துறவறம் என்னும் சொல்லும் — { ஜ்ஞாநயோகம் தஞ்சமென்று சொல்லுகிற பிரமாணங்களும் }

சொல் அல்ல — பிரமாணமல்ல;

இல்லேல் — அங்ஙனுமன்றிக்கே,

அல்லன அறம் என்னும் சொல்லும் — { (பக்தியோகம் தேசவாஸம் திருநாம ஸங்கீர்த்தனம் முதலான) மற்ற உபாயங்கள் தஞ்சமென்று சொல்லுகிற பிரமாணங்களும் }

சொல் அல்ல — பிரமாணமல்ல;

நல் அறம் ஆவனவும் — { நல்ல தருமங்களாகிய திருநாம ஸங்கீர்த்தநாதிகளும் }

நால் வேதம் மா தவமும் — { நான்கு வேதங்களிலும் பிரதிபாதிக்கப்பட்ட பெரிய கருமங்களுமெல்லாம் }

நாரணனே ஆவது — { ஸ்ரீமந்நாராயணனுடைய அநுக்ரஹத்தாலே பயனளிப்பனவாகின்றன; }

ஈது — இவ்வுண்மையை

அன்று என்பார் ஆர் — { மறுப்பாருண்டோ? [இவ்வுண்மை அனைவராலும் அங்கீகரிக்கத் தக்கது.] }

* * *—இப்பாட்டின் அந்வயக்ரமம் சிறிது வருத்தப்படுத்தும்; நன்கு ஊன்றி அந்வயித்துப் பொருளுணர்க. இப்பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்திற்கு அரும்பதவுரையிட்டாரொருவர் "இப்பாட்டுக்குத் தெரியாது; பதந்தோறும் தெரிந்தால் கண்டுகொள்வது" என்று கையொழிந்தார்; அவர்தாம் மதியின்பரிச்ரமம் ஸஹியாதவர் போலும். நிற்க.

'இல்லறம் என்னும் சொல்லும் சொல் அல்ல; இல்லேல் துறவறம் என்னும் சொல்லும் சொல் அல்ல; இல்லேல் அல்லன அறம் என்னும் சொல்லும் சொல் அல்ல' என்று இங்ஙனே மூன்று

வாக்யார்த்தமாக முன்னடிகளை அந்வயித்துக்கொள்க. 'அல்லன வும்' என்ற விடத்துள்ள உம்மை இரண்டாமடியின் முதலிலுள்ள 'சொல்' என்ற சொல்லோடு கூட்டிக்கொள்ளப்பட்டது. கர்ம யோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் ஒன்றும் தஞ்சமல்ல என்பன முன்னடிகள். எந்த யோகமும் எம்பெருமானடியாகவே பயன்தரு வனவாதலால் ஸாக்ஷாத்தாக அவனையே உபாயமாகக்கொள்ளுதல் சிறக்கும் என்பன பின்னடிகள்.

இல்லறம் என்னும் சொல்லும் சொல் அல்ல=க்ருஹஸ்தனா யிருந்துகொண்டு அநுஷ்டிக்கவுரிய தருமங்களாகிய யஜ்ஞதாநதபః ப்ரப்ருதிகளான கர்மயோகம் இங்கு இல்லற மெனப்படுகிறது. "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" இத்யாதி சரமச்லோகாதிகாரிக்குக் கர்மயோக விதாயகங்களான சாஸ்த்ரங்கள் தஞ்சமல்ல என்கை.

இல்லேல் துறவறம் என்னுஞ் சொல்லும் சொல்லல்ல= 'துறவறம்' என்று ஸந்ந்யாஸத்தைச் சொல்வது ப்ரஸித்தம்; கீதையில் ஸந்ந்யாஸ சப்தத்தால் ஜ்ஞாநயோகத்தை வ்யவஹரிப்பது காண்க. [ஐந்தாவது அத்யாயத்தில் ஒன்று, இரண்டு, ஆறு முதலிய ச்லோகங்களிற் காணலாம்.] கர்மத்தைவிட்டே பற்ற வேண்டியதான ஞானயோகம் ஸந்ந்யாஸமென்றும் துறவறமென் றும் பெயர் பெறத்தகும். "ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநாம்" என்றதுணர்க. சரமச்லோகாதிகாரிக்கு இந்த ஜ்ஞாநயோக விதாயக சாஸ்த்ரங்களும் தஞ்சமல்ல என்கை.

அல்லன அறம் என்னும் சொல்லும் சொல் அல்ல=கீழ்ச் சொன்ன கர்மயோக ஜ்ஞாநயோகங்களையொழிந்த பக்தியோகமும், அவதாரரஹஸ்யஜ்ஞாநம் புருஷோத்தம வித்யை தேசவாஸம் திரு நாமஸங்கீர்த்தநம் திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை முத லான (உபாயபுத்தியோடு செய்யும) வையும் இங்கு 'அல்லன அறம்' என்றதனால் கொள்ளத்தக்கன. ஆக இவை யொன்றும் தஞ்சமல்ல என்கையாலே எம்பெருமானையே உபாயமாக வரிப்பதாகிற ப்ரபத்தி யோகமே தஞ்சமென்னுமிடம் பெறப்பட்டதாகும். "ந தர்மநி ஷ்டோஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே। அகிஞ்சநோ நந்யகதிஃ சரண்ய! த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே." என்ற ஆளவந்தார் ஸ்தோத்ரஸூக்தி இதற்குச்சார்பாக இங்கு அநுஸந்

தேயம். பின்னடிகட்குச்சார்பாக "ஸ்வைகைகாஶ்யேண யே ஸஶ்ரிதை: ஸ்வேதராஸந்த்ஜஹதி யே கர்ம கயி ஹக்த்யாதயவா। காமம! தேஷாமபி தாவகீ தயா தயாகஸ்ஸ்வைத்வைதம் ஸ்வலம் உத்ய" என்கிற (வரதராஜஸ்தவம்-93) ஆழ்வான் ஸ்ரீஸூக்தி அநுஸந்தேயம். எந்த யோகத்தைப்பற்றினாலும் முடிவில் அந்தந்த யோகங்களினால் திருவுள்ளமுவக்கும் எம்பெருமானே பலன்பெறுவிக்கவல்லவனாதலால் அவனது திருவருளையே தஞ்சமாகக் கொள்ளுதல் ஏற்குமென்றவாறு.

ஈது அன்று என்பாரார்?—இவ்வர்த்தம் ஸகல சாஸ்த்ரங்களிலும் பொதிந்து கிடக்கையாலே இது ஸர்வஸம்மதமாகவற்று என்கை. .... .... .... .... (எஉ)

ஆரே யறிவா ரனைத்துலகு முண்டுமிழ்ந்த *
பேராழியான்தன் பெருமையை *—கார்சேறிந்த
கண்டத்தா னெண்கண்ணன் காணன் * அவன்வைத்த
பண்டைத்தானத்தின் பதி.

(எங.)

அனைத்து உலகும் — எல்லாவுலகங்களையும்
உண்டு உமிழ்ந்த — (பிரளயத்தில்) உண்பதும் (பிறகு) உமிழ்வதும் செய்தவனும்
பேர் ஆழியான் தன் — பெருமைதங்கிய திருவாழியாழ்வானைத் திருக்கையிலுடையவனுமான எம்பெருமானுடைய
பெருமையை — மஹிமையை
அறிவார் ஆரே — அறியக்கூடியவர் யார்? [ஒருவருமில்லை.]
அவன் வைத்த — அப்பெருமான் (முன்பே) ஸாதித்து வைத்த
பண்டைத் தானத்தின் பதி — பரமபதமார்க்கமென்னத் தகுந்த சரமச்லோகத்தை
கார் செறிந்த கண்டத்தான் — நீலகண்டனான சிவனும்
எண் கண்ணன் — நான்முகனும்
காணன் — அறியமாட்டார்கள்.
[அவர்களே அறியமாட்டாதபோது மற்றபேர்கள் அறியமாட்டார்களென்பது சொல்லவேணுமோ?.]

* * *—எம்பெருமானுடைய பெருமையைப் பரமசிவன் பிரமன் முதலான பெருந்தகையாளர்களே அறியாதபோது மற்றையோர் அறிகைக்கு என்ன ப்ரஸக்தியென்கிறார். அனைத்துலகு

முண்டுமிழ்ந்த பேராழியானுடைய பெருமையாவது யாதெனில்? ‘அவன் உபாயமாகுமிடத்து வேறொரு உபாயத்தையும் எதிர்பாராமல் தானே பூர்ணோபாயமா யிருந்துகொண்டு காரியம் தலைக்கட்டவல்லவனாகும் பெருமை’ என்று பட்டர் அருளிச்செய்வராம். அனைத்துலகையும் உண்டபோதும் உமிழ்ந்தபோதும் இதர நிரபேக்ஷனாயிருந்தனனாகையாலே அன்னவனுடைய பெருமையென்றது நிரபேக்ஷோபாயத்வமே யாகுமென்க. ஸாமாந்யர் நாமுஞ் சில உபாயாநுஷ்டாநம் செய்தாலன்றிக் காரியமாகாதுஎன்றிருப்பர்களேயன்றி, நம் காரியத்தைத் தன்காரியமாக நினைத்துச் செய்பவன் அவனே என்று உறுதி கொள்வார் ஆருமில்லை யென்றவாறு.

இவ்வர்த்தத்தையே பின்னடிகளில் விசேஷவ்யக்திகளில் ஏறிட்டுக் காட்டுகிறார். சிவன் விஷத்தையு முட்கொள்ளும்படியான பெருமை வாய்ந்தவனென்றாலும் பேராழியான்றன் பெருமையை யறிவானோ? நான்முகன் எட்டுக்கண்கள் படைத்தவனாயினும் பேராழியான்றன் பெருமையை யறிவானோ?

**அவன் வைத்த பண்டைத்தானத்தின் பதி காணான்**=பதி யென்றசொல் வடமொழியில் (‘வத்தா:’ என்று ரூபம் பெறுகிற) வழிநு சப்தத்தின் விகாரமாகும். மார்க்கம் என்று பொருள். ‘அவன் வைத்த’ என்ற அடைமொழி பதியில் அந்வயிக்கும். பண்டைத்தானமாவது நித்யவிபூதி. கண்ணபிரான் உபதேசித்தருளின சரமச்லோகத்தின்படி ஸர்வதர்ம பரித்யாக பூர்வகமாக அவனையே உபாயமாகப் பற்றினவர்கட்கே பரமபதம் ஸுலபமாதலால் அந்த சரமச்லோகத்தைப் பரமபதத்திற்கு மார்க்கமாகத் திருவுள்ளம் பற்றுகிறார். சிவனும் பிரமனும் சரமச்லோகத்தையறியார்கள் என்றதற்குக் கருத்துயாதெனில்; புறம்புண்டானவற்றை விட்டு அவனையே தஞ்சமாகப் பற்றுகைக் குடலான ஸ்வரூபவுண்மையை உணரார்கள் என்பதாம். .... (எங)

**பதிபகைஞற் காற்றாது பாய்திரைநீர்ப் பாழி ***
**மதித்தடைந்த வாளரவந் தன்னை *—மதித்தவன்றன்**
**வல்லாகத் தேற்றிய மாமேனி மாயவனை ***
**அல்லாதொன் றேத்தாதென் னா.** (எச)

| | |
|---|---|
| பதி பகைஞற்கு ஆற்ருது | ஸஹஜ சத்ருவான பெரிய திருவடிக்கு அஞ்சி, |
| பாய் திரை நீர் பாழி | பரம்பின அலைகளோடே கூடின நீரையுடைத்தான கடல்போலே குளிர்ந்த திருப்படுக்கையை |
| மதித்து | புகலிடமாக நம்பி |
| அடைந்த | வந்துபற்றின |
| வாள் அரவம் தன்னை | ஒளிபொருந்திய ஸர்ப்பமாகிய ஸுமுகனை |
| மதித்து | ஆதரித்து |
| அவன் தன் | அந்த (சத்ருவான) கருடனுடைய |
| வல் ஆகத்து ஏற்றிய | வலிமைதங்கிய சரீரத்திலே ஏறவிட்டவனும் |
| மா மேனி மாயவனை அல்லாது | சிறந்த திவ்ய மங்கள விக்ரஹத்தை யுடையவனுமான ஸர்வேச்வரனை யன்றி |
| ஒன்று | வேறொன்றை |
| என் நா | எனது நாவானது |
| ஏத்தாது | தோத்திரம் செய்யாது. |

* * *—ஆச்ரிதரக்ஷணம் பண்ணுவதில் வல்லவனை எம்பெருமானைத் தவிர்த்து மற்றையோர்க்கு அடிமைப்படலாகா தென்கிருர். அஞ்சிவந்து அடிபணிந்த ஸுமுகனுக்கு அபய மளித்த வரலாற்றை இப்பாட்டிலருளிச் செய்கிருர். தேவேந்திரனுக்குப் பரம ஆப்தனும் ஸாரதியுமான மாதலியென்பவன் தனது புத்திரியான குணகேசி யென்னுங் கன்னிகைக்குத் தகுந்த வரனைத் தேட நாரத மஹர்ஷியோடு புறப்பட்டுப் பலவுலகங்களினுஞ் சென்று கடைசியாகப் பாதாளலோகத்தில் போகவதி யென்னுஞ் சிறந்த நகரத்தையடைந்து **ஸுமுக** னென்னும் நாககுமாரனைக் கண்டு அவனது அழகு குணம் முதலியவற்றிலீடுபட்டு அவனுக்குத் தன்மகளை மணம் புரிவிக்க வுத்தேசித்து அவனது பிதாமஹனை ஆர்யகனைக் கண்டு தன் உத்தேசத்தைத் தெரிவிக்க, ஆர்யகன் ஆநந்தத்தையும் ஸங்கடத்தையும் ஏககாலத்தில் கொண்டவனுகி 'இவனது தந்தையைக் கருடன் பக்ஷித்து இவனையும் ஒருமாதத்திற்குள் பக்ஷிப்பே னென்று சொல்லியிருக்கிருனதலால் இவனுக்குஇப்போதுவிவாஹம் நடத்துவது உசிதமன்று' என்று தெரிவித்தான். அதற்கு மாதலி 'இவன் என்னோடு வந்து தேவேந்திரனைக் காணட்டும்; இவனுக்கு ஆயுளைத் தந்து கருடனுல் கேடுவராமல் தடுக்க முயல்வேன்' என்று சொல்லி அச்சுமுகனை உடனழைத்துக்கொண்டு சென்று உபேந்திர

மூர்த்தியோடிருந்த தேவேந்திரனைக் கண்டு காரியமூலமாகச் செய்தியைத் தெரிவிக்க, அதுகேட்ட உபேந்திரனான ஸ்ரீமஹா விஷ்ணு 'இவனுக்கு அம்ருதத்தைத் தரலாம்; அதனால் இஷ்ட ஸித்தி உண்டாகும்' என்று சொல்ல, இந்திரன் கருடனுடைய பராக்ரமத்தை நினைந்து சிறிது அச்சத்துடனே அம்ருதமூண்பியாமல் அந்த ஸுமுகனுக்கு நீண்ட ஆயுளை மாத்திரம் வரமாக அளிக்க, உடனே மாதலி அச்ஸுமுகனுக்குத் தன் மகளை மணஞ்செய்வித்தான்: இச்செய்தியைக் கேள்வியுற்ற கருடன் இந்திரனோடு மாறுபட்டுத்தன் இரையைத் தடுத்ததற்காக நிஷ்டூரமாகப் பேசுகையில், ஸுமுகன் தான் நீண்ட ஆயுளை வரம் பெற்றிருந்தாலும், கருடனுடைய கறுவுதலைக் கண்டஞ்சிப் பாம்புவடிவமாய்த் திருமாலினருகிற் சேர்ந்து அப் பெருமானது கட்டிலின் காலைக் கட்டிக்கொண்டு சரண்புக, பின்பு கருடன் திருமாலை நோக்கி 'ஸகலதேவர்களினுள்ளும் மஹா பலசாலியான வுன்னைச் சிறிதும் சிரமமின்றி இறகு முனையால் சுமக்கின்ற என்னைவிட வலிமையுடையார் யார்? இதனைச் சற்று ஆலோசியும்' என்று கருவங்கொண்டு பேச, கடூரமான அந்த வார்த்தையைக் கேட்ட எம்பெருமான் கருடனை நோக்கி 'மிகவும் துர்ப்பலனான நீ தன்னை மஹாபலசாலியாக எண்ணி என்முன்னே ஆத்மஸ்துதி செய்துகொண்டது போதும்; மூன்று லோகமும் எனது உடம்பை வஹிக்க முடியாதே; யானே எனது சக்தியால் என்னையும் வஹித்துக் கொண்டு உன்னையுமல்லவோ வஹிக்கிறேன்; எனது இந்த வலக்கையொன்றை மாத்திரமாவது நீ தாங்குவையா?' என்று சொல்லித் தமது வலக்கையைக் கருடனது தோளில் வைத்த மாத்திரத்தில் அவன் அந்தத் திருக்கையின் அதிபாரத்தைத் தாங்கமாட்டாமல் வருந்தி வலியழிந்து மூர்ச்சித்து விழுந்து பின்பு அரிதில் தெளிந்து எம்பெருமானை வணங்கித் துதித்து அபராத க்ஷாமணஞ்செய்து கொள்ள, திருமால் திருவுள்ளமிரங்கி அவனுக்கு ஸமாதானஞ் சொல்லித் தனது திருவடியின் பெருவிரலால் ஸுமுகனென்ற நாகத்தை யெடுத்துக் கருடன் தோளிலிட்டு 'இவனை நீ உனது அடைக்கலமாகக்கொண்டு பாதுகாக்கக் கடவை' என்று குறிப்பிக்க, அது முதலாக ஸுமுகனோடு கருடன் ஸ்நேஹங் கொண்டு அவனைத் தோளில் தரிக்க, அவனும் அச்சமின்றி 'கருடா!

ஸுமுகமா?" என்று க்ஷேமம் விசாரிப்பவனாயினன் என்ற உபாக்கியானம் இங்கு அறியத்தக்கது. முதல் திருவந்தாதியில் "அடுத்த கடும் பகைஞற்கு" என்ற பாட்டிலும், பெரியதிருமொழியில் (5—8—4) "நஞ்சு சோர்வதோர் வெஞ்சினவரவம்" என்றபாட்டிலும் இந்த இதிஹாஸம் அருளிச்செய்யப்பட்டமையுங் காண்க.

"எனது அடியாரின் எதிரிகளை ஒருகாலும் க்ஷமிக்கமாட்டேன்" என்றும், "என்னைச் சரணம் புக்கவரை எவ்விதத்திலும் கைவிடேன்" என்றும் எம்பெருமான் கொண்டுள்ள ஸங்கல்பமிரண்டும் மாறுபடாமல் நிறைவேறுமாறு, அப்பெருமான் தன்னைச் சரணமடைந்த ஸுமுகனைத் தான் நேரில் ரக்ஷியாமல் அவனுக்குப் பகையான கருடன்கையிலேயே காட்டிக் கொடுத்து அவனைக் கொண்டே பாதுகாத்தருளிய அருமைத் திறத்தைப் பாராட்டி "அவன்றன் வல்லாகத் தேற்றிய மாமேனி மாயவனுக்கு" என்றார். முன்பு தமக்குள் பகைமையிருந்தாலும் எம்பெருமானைச் சரணமடைந்தாற் பின்பு அப்பகைமை தவிர்ந்து நண்பராவரென்ற உண்மை இங்குப் புலனாம்.

பாய்திரை நீர்ப்பாழி = இந்த உபாக்கியானம் ஸ்ரீமஹாபாரதத்தில் உத்யோகபர்வத்தில் நூறாவது அத்யாயந் தொடங்கி ஐந்து அத்யாயங்களில் பரக்கக் கூறப்பட்டுள்ளது. ஸுமுகன் எம்பெருமானைச் சரணமடைந்தது இந்திரனருகில் என்பதாக அங்குக் கூறப்பட்டுள்ளதனால் 'பாய்திரை நீர்ப்பாழி' என்றவிதற்கு 'கடல் போலே குளிர்ந்த திருப்படுக்கை' எனப் பொருளுரைக்கப்பட்டது. இனி, பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில்—"ஓரோயுகத்திலே ஓரோவிடங்களிலே எல்லாம் பிறக்கக் கூடுகையாலே திருப்பாற்கடல் தன்னிலேயாகவுமாம்" என்று இரண்டாவது நிர்வாஹமாக அருளிச் செய்துள்ளபடி திருபாற்கடலையே பொருளாகக் கொள்ளவுமாம். கல்பபேதத்தாலே இது கூடுமென்க. .... (எச)

நாக்கொண்டு மானிடம் பாடேன் * நலமாகத்
தீக்கொண்ட செஞ்சடையான் சென்று * என்றும்-பூக்கொண்டு
வல்லவா றேத்த மகிழாத * வைகுந்தச்
செல்வனார் சேவடிமேல் பாட்டு. (எரு)

| | |
|---|---|
| தீக்கொண்ட செம் சடையான் | நெருப்புப்போலே சிவந்த சடையை யுடையனான ருத்ரன் |
| லம் ஆக | தகுதியாக |
| ன்றும் | எந்நாளும் |
| கொண்டு | புஷ்பங்களைக் கையிற்கொண்டு |
| ின் சென்று | அநுஸரித்து |
| ல்ல ஆறு | தன் சக்தியுள்ள வளவும் |
| த்த | துதிக்க |

| | |
|---|---|
| மகிழாத | (இதைத்தனக்கொரு பெருமையாக நினைத்து) மேனாணிப்புக் கொள்ளாத |
| வைகுந்தம் செல்வனார் | ஸ்ரீவைகுண்ட நாதனுடைய |
| சே அடி மேல் பாட்டு | திருவடிகளுக்கு உரிய பாசுரங்களை (ச் சொல்ல வல்ல) |
| நாக் கொண்டு | நாவினால் |
| மானிடம் | மனிதர்களை |
| பாடேன் | பாடமாட்டேன். |

* * *—எம்பெருமானொருவனையே துதிப்பதற்கென்று படைக்கப்பட்ட நாவைக் கொண்டு அற்பமனிதர்களைக் கவிபாடமாட்டேனென்று தமது உறுதியை வெளியிடுகின்றார். சடைமுடியனான சிவன் தனது அஹங்காரத்தை விட்டொழிந்து புஷ்பம் முதலியவற்றைக் கொண்டு ஆராதித்து அநுவர்த்தித்தாலும் நித்யஸூரி ஸேவ்யனான தனக்கு இது ஒரு பெருமையன்றாகையாலே இதனால் சிறிதும் மகிழ்ச்சி கொள்ளாத ஸ்ரீவைகுண்ட நாதனுடைய திருவடிகள் மேல் கவிபாடுதற்கே ஏற்ற நாவைக் கொண்டு மானிசரைப் பாடுதல் தகாது என்றதாயிற்று.

இவ்வாழ்வார் காலத்தில் வாழ்ந்த அரசன் இவரது சிஷ்யரான கணிகண்ணன் வாக்கினால் தான் ஒருபாடல் பெறக்கருதிப் பெருமுயற்சி செய்தும் பெற்றிலனென்பது இவ்வாழ்வார்வைபவத்தில் விரியும். சிஷ்யருடைய உறுதியே அங்ஙனிருக்கும்போது ஆசாரியரான இவரது உறுதியைப் பற்றிச் சொல்லவேணுமோ ?. (எரு)

பாட்டும் முறையும் படுகதையும் பல்பொருளும் *
ஈட்டிய தீயு மிருவிசும்பும் *—கேட்ட
மனுவும் சுருதி மறைநான்கும் * மாயன்
தனமாயையில் பட்ட தற்பு. (எகூ)

| | | | |
|---|---|---|---|
| பாட்டும் முறையும் | இயலும் இசையும் | | |
| படு கதையும் | பழைய சரித்ரங்களைக் கூறுகின்ற இதிஹாஸங்களும் | சுருதி | அநாதியாக உச்சாரண அநூச்சாரண க்ரமத்தாலே ஓதப்பட்டு வருகிற |
| பல் பொருளும் | பல அர்த்தங்களை யறிவிக்கிற புராணங்களும் | | |
| ஈட்டிய தீயும் | (பஞ்சீகரணத்தாலே பலகுணங்களும் தன்னிலே அமையும்படி) சேர்க்கப்பட்ட அக்நியும் | மறை நான்கும் | நான்கு வேதங்களும் (ஆகிய இவையெல்லாம்) |
| | | மாயன் தன | ஆச்சர்ய சக்தி யுக்தனான எம்பெருமானுடைய |
| இரு விசும்பும் | பரந்த ஆகாசமும் (முதலான பஞ்ச பூதங்களும்) | மாயையில் பட்ட | ஸங்கல்பத்தினாலுண்டான |
| கேட்ட மனுவும் | வேதத்திலும் ஓதப்பட்ட மநு மஹர்ஷியின் தர்ம சாஸ்த்ரமும் | தற்பு | தத்துவங்களாம். |

* * *—நிற்பாட்டில் "வைகுந்தச்செல்வனார் சேவடிமேல் பாட்டு—தாக்கொண்டு மானிடம்பாடேன்" என்றார்; எம்பெருமானொருவனையே கவிபாடும்படியான உறுதி தமக்கு உண்டானபடியெங்ஙனேயென்ன; உலகத்திலுள்ள வாச்யங்கள் வாசகங்கள் எல்லாம் அப்பெருமானுடைய திவ்யஸங்கல்பத்தாலே உண்டாயினவென்று இப்பாட்டால் அருளிச்செய்யும் முகத்தால் தமது உறுதிக்கு அடிகூறினாராயிற்று.

**கேட்டமனுவும்**=தைத்திரீய யஜுஸ்ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டத்தில் இரண்டாவது ப்ரச்நத்தில்—"**யத்வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்**" [மநுமஹர்ஷி சொல்லிற்றெல்லாம் மருந்தாயிருக்கும்.] என்றுள்ள வாக்கியம் இங்கு உட்கொள்ளப்பட்டதாகும். **சுருதி**= "**[illegible]**" என்று காடக ச்ருதியில் ஓதப்படுகிற வாக்கியம் இங்கு விவக்ஷிதம்.

**மாயையிற்பட்ட தற்பு**="**மாயா வயுநம் ஜ்ஞாநம்**" என்கிற ஆர்ஷநிகண்டுப்படி 'மாயா' என்னும் வடசொல் ஸங்கல்பரூபமான

ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது. "ஸாஹவாத்ஸ்ர்த்தாயயா" என்ப தையுங் காண்க. தகவு என்னும் [illegible] 'தற்பு' என [illegible] பட்டது. உண்மைப்பொருள் என்பது. .... .... (எசு)

தற்பென்னைத் தானறியா னேலும் * தடங்கடலைக்
கற்கொண்டு தூர்த்த கடல்வண்ணன் *—எற்கொண்ட
வெவ்வினையும் நீங்க விலங்கா மனம்வைத்தான் *
எவ்வினையும் மாயுமால் கண்டு. (எள)

| | |
|---|---|
| தட கடலை | பரந்த தெற்கு சமுத்ரத்தை |
| கல் கொண்டு | மலைகளினால் |
| தூர்த்த | அணைசெய்து அடைத்தவனும் |
| கடல் வண்ணன் தான் | கடல்போன்ற கரு நிற முடையனு மான எம்பெருமான் |
| என்னை | (தோஷமே வடி வெடுத்தவனை) என்னை |
| தற்பு | உள்ளபடியே |
| அறியான் எனும் | அறிந்திலனாயினும், |
| என் கொண்ட | என்னைக் கொள்ளை கொண்டிருக்கிற |
| வெம் வினையும் | கொடிய பாவங்கள் யாவும் |

| | |
|---|---|
| நீங்க | என்னை விட்டு நீங்கும்படியாக |
| கண்டு | அழகிய திருக்கண்க ளாலே நன்றாகக் கடாக்ஷித்து |
| மனம் | தனது திருவுள்ளத்தை |
| விலங்கா | வேறு எங்கும் விலகிப் போகாதபடி |
| வைத்தான் | (என்மீதே ஒரு மடைப்படுத்தி) வைத்தருளினன்; |
| | (ஆகையாலே) |
| எ வினையும் | பாபமென்று பேர்பெற்றவை யடங்கலும் |
| மாயும் | உருவழிந்துபோம். |

* * *—என்னுடைய குற்றமிகுதியை நோக்கி எம்பெருமான் என்னை இகழாமல், என்னுடைய ஸமஸ்த கருமங்களும் உருமாய்ந்து போம்படியாகத் தன் திருவுள்ளத்தை என்பக்கலிலே வைத்தரு ளினனென்கிறார்.

**கடல்வண்ணன் தான் என்னைத் தற்பு அறியானேலும்**= ஆழ்வாராகிய தம்மை எம்பெருமான் உள்ளபடி யறிந்திலனென்கிற இதன் கருத்து யாதெனில்; 'இவர் குற்றங்களுக்குக் கொள்கலமா

யிருப்பவர்; இவரிடத்தில் ஒருவகைக்குணமும் கிடையாது' என்று அறிந்துகொள்ள வேண்டியிருக்க அப்படியறிந்து கொண்டிலன் என்கிறார் நைச்யாநுஸந்தாநதசையினால்.

(எம்பெருமானை நாம் உள்ளபடி அறிகையாவது—'ஒருவகைக் குற்றங்குறையுமற்ற குணநிதி' என்று அறிவதாம். அப்பெருமான் நம்மை உள்ளபடியறிகையாவது 'ஒருவகைக்குணமுமற்ற தோஷநிதி' என்று அறிவதாம். அவனை நாம் உள்ளபடியறியப்பெற்றால் அவனிடத்தில் நமக்கு அன்பு கரைபுரளும்; நம்மை அவன் உள்ளபடியறிந்துகொண்டால் நம்மிடத்தில் அவனுக்கு இகழ்ச்சியுண்டாகும்.) இங்கு ஆழ்வார்தம்மிடத்தில் எம்பெருமானுக்கு இகழ்ச்சி பிறவாமல் விருப்பமே பெருகிச் செல்கின்றமைக்குக் காரணம் இவருடைய ஞானபக்தி முதலிய குணங்களைக்கண்டே; அப்படியிருந்தும் ஆழ்வார் நைச்யாநுஸந்தான முறைப்பினால் 'என் குற்றங்குறைகளை எம்பெருமான் தெரிந்துகொள்ளாமையினால் மேல்விழுகிறான்' என்கிறார்.

தடங்கடலைக் கற்கொண்டு தூர்த்தது ஸ்ரீராமாவதாரத்தில்.

என் + கொண்ட, எற்கொண்ட.

மூன்றாமடியின் முதலில் 'எவ்வினையும்' என்றுமெடுக்கலாம்; 'வெவ்வினையும்' என்றெடுப்பது மோனையின்பத்துக்கு ஒக்கும்.

கண்டு வணங்கினார்க் கென்னாங்கொல் * காமனுடல்
கொண்ட தவத்தாற் குமையுணர்த்த *—வண்டலம்பும்
தாரலங்கல் நீண்முடியான் றன்பெயரே கேட்டிருந்து * அங்
காரலங்க லானமையா லாய்ந்து. (௭௭)

| | |
|---|---|
| காமன் | மன்மதனுடைய |
| உடல் | சரீரத்தை |
| கொண்ட | நீறாக்கின |
| தவத்தாற்கு | தபஸ்வியான பரமசிவனுக்கு |
| உமை | (மனைவியான) பார்வதி யானவள் |
| உணர்த்த | தெரிவிக்க, |
| வண்டு அலம்பும் தார் அலங்கல் நீள் முடியான் தன் பெயர் கேட்டிருந்தே | வண்டுகள் ஒலிக்கப் பெற்ற பூமாலையை நீண்ட திருவபிஷேகத்திலுடையனான எம்பெருமானுடைய திருநாமங்களைக் கேட்ட மாத்திரத்திலேயே |

| | | | |
|---|---|---|---|
| அங்கு | அப்போதே | கண்டு வணங்கினார்க்கு | சேவித்தவர்களுக்கு |
| ஆர் அலங்கல் ஆனமை | மிகவும் அசைந்து போனமையை | என் ஆம் கொல் | எப்படிப்பட்டவிகாரமுண்டாகுமோ (என்பது சொல்ல முடியாது) |
| ஆய்ந்தால் | ஆராய்ந்து பார்க்கில், | | |

* * *—எம்பெருமானுடைய திருநாமத்தைமாத்திரம் கேட்கப்பெற்ற பரமசிவன் விகாரமடைந்தானாகில் பின்னால் எம்பெருமானை ஸாக்ஷாத்காரமாக ஸேவிக்கப்பெறுமவர்கள் படும்பாடு சொல்லக்கூடியதோ? என்கிறார்.

திருவாய்மொழியில், (6—7—3.) * உண்ணுஞ்சோறு பருகு நீரில் மூன்றாம்பாட்டில் "கோவைவாய்த்துப்ப மறைந்தன் நெறி என்செய்யுங்கொலோ" என்றவிடத்து ஈடுமுப்பத்தாறாயிரப்படி திவ்யஸூக்திகள் உற்று நோக்கத்தக்கன; (அவற்றை இங்கு அநுவதிப்போம். "[என்செய்யுங்கோலோ.] சொல்லமாட்டாள், தவிரமாட்டாள், அழாதொழியமாட்டாள், என்னைப் படுத்துகிறாள்!. நம்மையும் பிறரையும்விட்டு அவன் திருநாமங்களை யநுபவிக்கிற போதையழகு காணப்பெற்றோம்; அவன்றன்னையே கண்டு அநுபவிக்கிறபோதையழகு காணப்பெற்றிலோமே!. அநுபவத்தாலே வேளையிற்போலன்றிறே கண்டால் பிறக்கும் விகாரங்கள்: 'காமனுடல்கொண்ட தவத்தாற்கு உமையுணர்த்த வண்டலம்புந் தாரலங்கல் நீண்முடியான்றன் பெயரே கேட்டிருந்து அங்காரலங்கலானமையால்—கண்டு வணங்கினார்க்கு என்னாங்கொல்' என்றிறே யிருப்பது."

பரமசிவனுக்குப் பார்வதி பகவந்நாமத்தை யுணர்த்தினவிதம் அவ்விடத்து அடையவளைந்தா னரும்பதவுரையிற் காணப்படுகின்றது;—ஒருகால் ருத்ரன் த்யாநபரனாயிருக்கக்கண்ட பார்வதியானவள் 'எல்லாரும் உம்மை உபாஸநைபண்ணாநிற்க நீர் யாரை உபாஸிக்கின்றீர்? உமக்கும் உபாஸ்ய விஷயம் ஒன்றுண்டோ?' [கஂ கஉ8வ-ஃயஸெ ஜெவ! கிஂ ஜெஜவஉயிகஂ தவ। ஜவஜெஹா௨ நஉக்ஷாஜொ: தஂ வஉஷ உஜெஹஷா."] என்று கேட்டாளாம்; இப்படி இவள் கேட்டதற்குப் பரமசிவன் "ஸ்ரீமந்நாராயணனை உபாஸிக்கிறேன்" என்று மறுமொழி கூறவேண்டி அத்திருநா

மத்தை ஸ்மரித்தமாத்திரத்திலேயே 'காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்' என்றும் 'உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்தே னுடம்பெலாங் கண்ணநீர்சோர' என்றுஞ் சொல்லலாம்படி விகார மடைந்தானும்.

**உமை உணர்த்த**—'நீர் யாரை உபாஸிக்கிறீர்?' என்கிற கேள்வியாஜத்தாலே பகவந்நாமங்களைச் சிவபிரானுக்குப் பார்வதி உணர்த்தினளென்க. இந்த ப்ரஸங்கத்தால் பகவந்நாமங்களை ஸ்மரிக்கப்பெற்ற சிவபிரான் செங்கண்மால் நாமங்களைச் செவிக்கின்பமாகக்கேட்கவிரும்பி அப்பார்வதியையே பாடச்சொல்ல, அப்படியே அவள்பாட, தென்றலும் சிறுதுளியும் பட்டாற்போலே இனிதாகக் கேட்டுக்கொண்டிருந்து உள்குழைந்தானென்ப.

**உமை**—'உமா' என்னும் வடசொல் ஐயீறாயிற்று. **ஆர் அலங்கல் ஆனமை**—'அலங்கல்' என்று மாலைக்கும் அசைவுக்கும் பெயர். முடித்துவாடின பூமாலைபோலே துவண்டு விழுந்தான் சிவன் என்க. 'ஆனமையால்' என்றவிடத்துள்ள 'ஆல்' என்பதை 'ஆய்ந்து' என்றதோடு கூட்டி 'ஆய்ந்தால்' என்றாக்கியுரைக்கப்பட்டது. உள்ளபடியே உரைக்கவுமாம். .... .... .... (எஅ)

**ஆய்ந்துகொண் டாதிப்பெருமானை * அன்பினால்**
**வாய்ந்த மனத்திருத்த வல்லார்கள் *—ஏய்ந்ததம்**
**மெய்குந்தமாக விரும்புவரே * தாமும்தம்**
**வைகுந்தம் காண்பார் விரைந்து.** (எகூ)

| | | | |
|---|---|---|---|
| ஆதி | ஜகத்காரணபூதனை | விரைந்து | சீக்கிரமாக |
| பெருமானை | ஸர்வேச்வரனை | காண்பார் | காண விருப்பமுடையராய் |
| அன்பினால் | ப்ரேமத்துடன் | ஏய்ந்த | ஆத்மாவோடு செறிந்த |
| ஆய்ந்து கொண்டு | அநுஸந்தித்துக் கொண்டு | தம் மெய் | தங்களுடைய உடம்பை |
| வாய்ந்த மனத்து | (தமது) பாங்கான நெஞ்சிலே | குந்தம் ஆக | வியாதியாக |
| இருத்த வல்லார்கள் தாமும் | நிலை நிறுத்திக் கொள்ள சக்தரானவர்கள் | விரும்புவர் | எண்ணுவர். |
| தம் வைகுந்தம் | தங்களுக்கென்று ஏற்பட்டுள்ள பரமபதத்தை | | |

* * *—பகவத்விஷயத்தில் ருசியுடையவர்கள் எம்பெருமானை யநுபவிப்பதற்கு ஏகாந்தமான பரமபதத்தை யடையவேணுமென்னும் விரைவினால் தத்விரோதியான தங்கள் சரீரத்தை வியாதியாகக் கருதுவர்களென்கிறார். ஆதிப்பெருமானை அன்பினால் ஆய்ந்து கொண்டு தங்களுடைய வாய்ந்தமனத்திலே அவனை இருத்தவேணுமென்னும் விருப்பமுடையவர்கள், தங்களுக்கென்றே ஏற்பட்டிருக்கிற ஸ்ரீவைகுண்டத்தை 'பெற்றபோது பெறுகிறோம்' என்று ஆறியிருக்கையன்றியே 'கூவிக்கொள்ளுங் காலமின்னங்குறுகாதோ' என்று விரைந்தவராய்க்கொண்டு, 'அதற்கு இடையூறாயிருக்கின்ற இவ்வுடல் என்றைக்குத் தொலையப்போகிறது!' என்று வியாதியைக் கழிக்க விரும்பிக்கிடப்பாரைப்போலே கிடப்பர்கள் என்றாராயிற்று.

"வடுகபாஷையில் குந்தமென்று வியாதிக்குப்பெயர்" என்பது பூருவர்களின் வியாக்கியான வாக்கியம். .... .... (எக)

விரைந்தடைமின் மேலொருநாள் வெள்ளம் பரக்க *
கரந்துலகம் காத்தளித்த கண்ணன் *—பரந்துலகம்
பாடின ஆடினகேட்டு * படுநரகம்
வீடின வாசற் கதவு. (௭०)

| | |
|---|---|
| உலகம் | சிறந்த பாகவதர்கள் |
| பரந்து | எங்குந் திரிந்து |
| பாடின | பாடின பாடல்களையும் |
| ஆடின | ஆடின ஆட்டங்களையும் |
| கேட்டு | கேட்டதனால் |
| படு நரகம் வாசல் | க்ரூரமான நரகங்களின் வாசல்களிலிருந்த |
| கதவு | கதவுகள் |
| வீடின | விட்டொழிந்தன ; |

[நரக வாசல்கள் பாழாய்ப் போயின.]

(ஆனபின்பு,)

| | |
|---|---|
| மேல் ஒருநாள் | முன்னொரு காலத்தில் |
| வெள்ளம் பரக்க | பிரளய வெள்ளம் பரவினபோது |
| உலகம் | உலகங்களையெல்லாம் |
| கரந்து | (திருவயிற்றில்) மறைத்துவைத்து |
| காத்து அளித்த | துன்பங்களைப் போக்கி ரக்ஷித்த |
| கண்ணன் | கண்ணபிரானை |
| விரைந்து அடைமின் | சீக்கிரமாகச் சென்று பணியுங்கோள். |

* * *—முன்பு பிரளயம் வருகிறதென்று உலகங்களையெல்லாம் திருவயிற்றிலே வைத்து, பிரளயப்பெருவெள்ளம் தேடிவந்தா

னும் அத்தனைபோதும் தெரியாதபடி மறைத்துக் காத்து ரக்ஷித்தருளின கண்ணபிரானை விரைந்து அடையுங்கோள் என்கிறார் முன்னடிகளால். இப்படி பகவத் பஜநம் பண்ணினால் நரகவாசற்கதவுகள் வேர்பறியுண்டு நரகமே ஒழிந்துபோம் என்று எதிர்கால நிகழ்ச்சி கூறவேண்டுமிடத்து, தேற்றத்தினால் இறந்தகால நிகழ்ச்சியாகவே பின்னடிகளிற் கூறுகின்றார்.

ஒருவனை 'இங்கேவா' என்றழைக்க, அதற்கு அவன் இருந்தவிடத்திலிருந்து கொண்டே 'வந்துவிட்டேன்' என விடையளித்தால் 'உடனே (காலதாமதமின்றி) வந்துவிடுவேன்' எனப் பொருள்படுதல்போல, இங்கும் 'படுநரகவாசற்கதவு வீழ்ந்தன' என்று இறந்தகாலமாகச் சொல்லப்பட்டுள்ளது எதிர்காலமாகப் பொருள்படலாம். அன்றியே, இதுவரையில் பல பாகவத ச்ரேஷ்டர்கள் பகவத்பஜநம்பண்ணி மகிழ்ச்சிக்குப் போக்குவீடாக ஆட்டமும் பாட்டமும் செய்ததனால் நரகவாசல் புல்லெழுந்து போயிற்று என்னும்படியாக அவர்கள் நற்கதி பெற்றார்களாதலால் அப்படி நீங்களும் நற்கதி பெறுமாறு கண்ணனை விரைந்தடையுங்கள் என்பதாகவும் உரைக்கலாம்.

'உலகமென்பது உயர்ந்தோர்மாட்டே' என்ற தொல்காப்பியத்தை யடியொற்றி இங்கு 'உலகம்' என்பதற்கு 'சிறந்த பாகவதர்கள்' என்று பொருள் கொள்ளப்பட்டது.

'பாடின' என்பதும் 'ஆடின' என்பதும் இரண்டனுருபு தொக்க வினையாலணையும் பெயர்கள். "அறிவிலாமனிசரெல்லா மரங்கமென்றழைப்பராகில், பொறியில் வாழ்நரகமெல்லாம் புல்லெழுந்தொழியு மன்றே" என்ற திருமாலைப் பாசுரம் பின்னடிகட்குச் சார்பாக அநுஸந்திக்கத்தகும். .... .... (அ0)

கதவு மனமேன்றும் காணலா மேன்றும் *
குதையும் வினையாவி தீர்ந்தேன் *—விதையாக
நற்றமிழை வித்தி யென்னுள்ளத்தை நீவிளைத்தாய் *
கற்றமொழி யாகிக் கலந்து. (அக)

| | | | |
|---|---|---|---|
| | (ஞானம் சக்திமுதலியவற்றால் குறைவற்றவனான) நீ | மனம் | 'மனமானது |
| கற்ற மொழி ஆகி | நான் கற்ற சொற்களுக்குப் பொருளாக இருந்து கொண்டு | கதவு என்றும் | எம்பெருமானையடைவதற்குப் பிரதிபந்தகம்' என்று (சில ஸமயங்களில்) நினைத்தும் |
| கலந்து | என்னோடு ஒரு நீராகக் கலந்து | | |
| நல் தமிழை | சிறந்த தமிழ்ப் பாஷையினுலாகிய இப் பிரபந்தத்தை | (மனம்) காணல் ஆம் என்றும் | '(மனமானது) எம் பெருமானைக் காண்பதற்கு உறுப்பாகும்' என்று (சில சமயங்களில்) நினைத்தும் |
| விதை ஆக வித்தி | (பக்தியாகிற பயிர்க்கு) விதையாக விதைத்து | | |
| என் உள்ளத்தை | எனது ஹ்ருதயத்தை | குதையும் வினை ஆவி தீர்ந்தேன் | (ஆகவிப்படி ஒரு நிலை நில்லாமல் மாறி மாறி) பிரமிப்பதையே தொழிலாக வுடைத்தான நெஞ்சைத் தவிர்ந்தேன். |
| விளைத்தாய் | விளையும்படி க்ருஷி பண்ணினாய்; | | |
| | (அதனால்) | | |

* * *—சாஸ்த்ரங்களில் "𑌮𑌨 𑌏𑌵 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌬𑌨𑍍𑌧𑌮𑍋𑌕𑍍𑌷𑌯𑍋𑌃=மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:" என்று சொல்லப்பட்டுள்ளது. அதாவது—ஸம்ஸாரபந்தங்களைப் பூண்கட்டிக் கொண்டு எம்பெருமானை மறந்தொழிவதற்கும் மனமே காரணம்; விண்பாசங்களை விட்டொழிந்து அஎம்பெருமானைக் கண்டு களிக்கப் பெறுதற்கும் மனமே கா
செய்யும்
என்கை. இவ்விரண்டு வகையான ஸங்கதியும் ஸம்ஸாரிகளைச் ரணம்
பவத்தில் மாறிமாறி வந்துகொண்டே யிருக்கும்; யுமவனுடைய்ரின் அநு
கனத்தால் விஷய ப்ராவண்யம் மேலிடுகிறகாலங்களுக்க ஊழ்வினையின்
ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணம் என்று அறுதியி பாகரில் மனமானது
வத் பாகவத கடாக்ஷலேசத்தால் பகவத்விஷயத் கொ ப்பெறும்; பக
டாகுங் காலங்களில் மனமானது மோக்ஷத்திற்குச் நள் தில் பற்று உண்
அறுதியிடப் பெறும் ஆகவே, இவ்விபூதியிலுள்ள ணிசு காரணம் என்று
விஷயாந்தரப் பற்றும் நிலைத்திராது, பகவத் விஷ வி நம்போல்வார்க்கு
திராது; இரண்டும் மாறிமாறி வந்துகொண்டே ஷயப் பற்றும் நிலைத்
யிருக்குமாதலால்

ஒரு ஸமயத்தில் 'மனம் பந்தகீஹேது' என்கிற உணர்ச்சியும் பின்னு மோர்ஸமயத்தில் 'மனம் மோக்ஷஹேது' என்கிற உணர்ச்சியுமா யிருக்கும். நம்மைப் போலன்றிக்கே ஆழ்வார் எப்போதும் எம் பெருமானையே அநுபவிக்கும்படியான உயர்வு பெற்றவராதலால் 'மனம் பந்தஹேதுவோ மோக்ஷஹேதுவோ' என்கிற குழப்பம் இவர்க்கு நேர ப்ரஸக்தியில்லை; 'மனம் மோக்ஷஹேதுதான்' என் கிற நிச்சய வுணர்ச்சியே இவர்க்குள்ளது; இதைத்தான் இப்பாட் டில் அருளிச் செய்கிறார்.

**கதவுமனமேன்றும் காணலாமேன்றும் குறையும் வினையாவி தீர்ந்தேன்**=ஒரு வாசலுக்குக் கதவு இட்டிருக்கால் உள்ளே புகுவ தற்கு அது தடையாயிருக்குமாதலாலே கதவு என்கிற சொல் பிரதி பந்தகத்தைச் சொல்லுகிறது இங்கு; மனம் (பகவத்ப்ராப்திக்குப்) பிரதிபந்தகமோ அல்லது (பகவானைக்) காண்கைக்கு உறுப்போ என்று அலைபாய்வது தவிர்ந்தேன் என்றபடி. தவிர்ந்தமைக்குக் காரணங் கூறுவன பின்னடிகள்.

நெஞ்சினால் நினைக்கவும் முடியாத தேசத்தில் நிலையுடையனை நீ என்னுடைய வாக்கில் வந்து சொற்களுக்குப் பொருளாயிருந்து கொண்டு என்னுடைய நெஞ்சாகிற நிலத்திலே தமிழாகிற விதையை விதைத்துப் பக்தியாகிற பயிர் செழித்து விளையும்படி செய்தாயாகையாலே நிலை நின்ற நெஞ்சுடையேனாயினேன் என்று ராயிற்று. .... .... .... .... (அக)

பிட வத

கலந்தானேன் னுள்ளத்துக் காமவேள் தாதை *
நலங்கொண்ட னுடைமீதோப்ப துண்டோ *—அலர்ந்தலர்கள்
இட்டேத்து மீசனும் நான்முகனு மேன்றிவர்கள் *
விட்டேத்த மாட்டாத வேந்து. (அஉ)

காம வேள் தாதை { மன்மதனுக்குத் தந்தையான வுனும்
அலர்ந்த அலர்கள் இட்டு ஏத்தும் ஈசனும் { மலர்ந்த பூக்களை ஸமர்ப்பித்துத் துதி செய்கின்ற சிவபிரானென்ன
நான்முகனும் பிரமனென்ன
என்ற இவர்கள் { என்கிற (சிறந்த) தேவர்களும்
விட்டு ஏத்த மாட்டாத { கண்டெய்த்துதித்து முடிக்க முடியா தவனுமான

| | | | |
|---|---|---|---|
| வேந்து | தேவாதிதேவன் | ஈது ஒப்பது நலம் தானும் உண்டோ | இந்த நன்மையோ டொத்த நன்மை வேறுண்டோ? [இல்லை.] |
| என்உள்ளத்து | எனது நெஞ்சிலே | | |
| கலந்தான் | சேர்ந்து கொண்டான், | | |

* * *—நான்பெற்ற நன்மை வேறுயாரும் பெறமுடியாது; இதுவரையில் நான்பெற்ற நன்மைகளுள் இப்போது பெற்ற நன்மைக்கு ஈடானதும் வேறொன்றில்லை; அரன் அயன் என்னும்படியான மேம்பட்ட தெய்வங்களாலும் துதித்துத் தலைக்கட்டப் போகாத பெரும்புகழ்படைத்த பெருமான் என் உள்ளத்தோடு ஒருநீராகக் கலந்து கொண்டானே! இஃது என்ன நன்மை! என வியக்கிறார்.

காமவேள் தாதை = மன்மதனுடைய அம்சமாகிய பிரத்யும்நனுக்குக் கண்ணபிரான் தந்தையாதல் அறிக. 'காமன்' என்பது வடசொல்; 'வேள்' என்பது தமிழ்ச் சொல்; இரண்டையும் சேரப் பிரயோகித்த விடத்து ஒருசொல்லை விசேஷணமாகவும் மற்றொன்றை விசேஷ்யமாகவுங் கொள்ளலாம்; ஆசையை விளைக்குமவனை மன்மதன் என்க. தாதை—தாதः. அலர்ந்த + அலர்கள், அலர்ந்தலர்கள்; தொகுத்தல். 'என்றிவர்கள்' என்றவிடத்து மிதுவே.

வேந்தராய் விண்ணவராய் விண்ணாகித் தண்ணளியாய் *
மாந்தராய் மாதாய் மற்றெல்லாமாய் *—சார்ந்தவர்க்குத்
தன்னற்றான் நேமியான் மால்வண்ணன் தான்கொடுக்கும் *
பின்னால் தான்செய்யும் பிதிர். (௫௩)

| | | | |
|---|---|---|---|
| நேமியான் | திருவாழியாழ்வானை யுடையவனும் | விண்ணவர் ஆய் | தேவர்கள் செய்யும் நன்மைகளைச் செய்யுமவனாய் |
| மால் வண்ணன் | வியாமோஹமே வடிவெடுத்தவனுமான எம்பெருமான் | விண் ஆகி | ஸ்வர்க்க போகத்தைக் கொடுக்குமவனாய் |
| சார்ந்தவர்க்கு | தன்னையடைந்தவர்கள் விஷயத்தில் | தண்ணளி ஆய் | அருள் செய்பவனாய் |
| வேந்தர் ஆய் | அரசர்கள் செய்யும் நன்மைகளைச் செய்யுமவனாய் | மாந்தர் ஆய் | மனிசர்களான உறவினர் செய்யும் நன்மைகளைச் செய்பவனாய் |

| | |
|---|---|
| மாது ஆய் { தாய் செய்யும் நன்மைகளைச் செய்பவனாய் | [த்ருப்தி பெறுதவனாய்] |
| மற்று எல்லாம் ஆய் { மற்றுமுள்ள எல்லாவகை நன்மைகளையும் செய்பவனாய் | பின்னால் இவ்வளவுக்குமேலும் |
| (எவ்வளவு நன்மைகள் செய்தாலும்) | தன் கொடுக்கும் { தன்னை (முற்றூட்டாகக்) கொடுத்தருள்வன்; |
| ஆற்றான் { ஆறுதல் இல்லாதவனாய்க்கொண்டு | தான் செய்யும் பிதிர் { (இவை) எம்பெருமான் செய்யும் அதிசயங்களாம். |

* * *—ஆச்ரிதர் விஷயத்தில் எம்பெருமான் செய்தருளும் உபகார பரம்பரைகளையும் எத்தனை உபகாரங்கள் செய்தாலும் அவன்றான் த்ருப்தியடைவது மில்லையென்கிற திருவுள்ளத்தினகலத்தையும் அருளிச் செய்கிறார்.

வேந்தராய்—சிறியவனைப் பெரியவன் நலியாதபடி நோக்குகின்ற அரசர்களாயிருந்துகொண்டு ரக்ஷிப்பவன் எம்பெருமானே என்றவாறு. "நாவிஷ்ணுஃ ப்ருதிவீபதிஃ" [விஷ்ணுவின் அம்சமன்றி அரசனாகயிருக்கமுடியாது] என்றது காண்க. 1. "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே யென்னும்" என்ற திருவாய்மொழியின் கருத்து முணர்க.

விண்ணவராய் = நாம் இம்மண்ணுலகில் வாழும்வரையில் நமக்கு இன்றியமையாத உணவுப் பொருள்கட்கு வேண்டிய மழை முதலியவற்றை யளிக்கும் வருணன் முதலிய தேவர்களாயிருந்து கொண்டு காத்தருள்பவனும் எம்பெருமானே என்றவாறு.

விண் ஆகி = இந்நிலத்திலிருந்துகொண்டு அநுஷ்டித்த புண்ணியங்களுக்குப் பலனான ஸ்வர்க்காநுபவங்களை யளிப்பவனும் தானே என்றவாறு. தண்ணளியாவது கிருபை. எல்லாவுபகாரங்களுக்கும் பொதுவானது. பின்னடிகளின் அந்வயக்ரமம் வேறு வகையாகவும் அமையும்; கருத்து பதவுரையில் விரிந்ததே. .... .... (அங)

பிதிருமனமிலேன் பிஞ்ஞகன் றன்னோடு *
எதிர்வனவ னெனக்கு நேரான் *—அதிரும்
கழற்கால மன்னனையே கண்ணனையே * நாளும்
தொழக்காதல் பூண்டேன் தொழில். (அச)

1. திருவாய்மொழி 4—4—8.

| | |
|---|---|
| அதிரும் கழல் கால | ஒலிக்கின்ற வீரக்கழலைத் திருவடிகளிலே அணிந்துள்ள |
| மன்னனை | ராஜாதிராஜனை |
| கண்ணனையே | கண்ணபிரானையே |
| நாளும் | எந்நாளும் |
| தொழ | தொழும்படியாக |
| காதல் | ஆசைப்படுவதையே |
| தொழில் | நித்ய கருமமாக |
| பூண்டேன் | ஏற்றுக்கொண் டிருக்கிற நான் |
| பிதிரும் மனம் இலேன் | (விஷயாந்தரங்களிற் புகுந்து) விகாரப்படும் நெஞ்சுடையே னல்லேன்; |
| பிஞ்ஞகன் தன்னோடு எதிர்வன் | (ஞானத்தில்) பரமசிவனோடு ஒத்திருப்பேன் |
| | (என்னலாமாயினும்) |
| அவன் எனக்கு நேரான் | அந்த ருத்ரன் (நித்ய தாஸனான) என்னோடு ஒவ்வான். |

* * *—கண்ணபிரான் திருவடிகளை யாச்ரயித்து அநுபவிப்பதையே நித்யாநுஷ்டாநமாகக் கொண்டிருக்கிற எனக்கு, ஜ்ஞாநாதிகனாக ப்ரஸித்தனாயிருக்கிற ருத்ரனும் ஒப்பாக மாட்டானென்கிறார். தமக்கு ருத்ரன் ஒப்பாவதற்கு ப்ரஸக்தியிருந்தாலன்றோ 'அவன் எனக்கு நேரான்' என்னலாம்; அப்ரஸக்த ப்ரதிஷேதம் பண்ணவொண்ணாதே என்று சிலர் சங்கிப்பர்கள்; சாஸ்த்ரங்களில் "ஜ்ஞாநம் மஹேச்வராதிச்சேத்" [சிவனிடத்திலிருந்து அறிவைப் பெற்றுக் கொள்க] என்று விதித்திருக்கையாலே உலகுக்கெல்லாம் உணர்வையளிக்கவல்லனும்படி மஹாஜ்ஞாநியாக ருத்ரன் ப்ரஸித்தி பெற்றிருப்பதனால் அங்ஙனே மஹாஜ்ஞாதாவான ஆழ்வாரோடு அவனுக்கு ஒப்புச் சொல்ல ப்ரஸக்தியுண்டு; ப்ரஸக்தமான அது கழிக்கப்படுகிறது இரண்டாமடிமுதலாக. ருத்ரன் ஸத்வகுணம் தலையெடுத்தபோது 'எம்பெருமானே ரக்ஷகன்' என்றிருப்பதும், ரஜஸ்தமோகுணங்கள் தலையெடுத்தபோது 'நானே ஈச்வரன்' என்று மார்பு நெறித்திருப்பதுமா யிருக்கையாலே, ஸர்வகாலத்திலும் பகவத் ப்ராவண்யமே யாத்ரையாயிருக்கு மிவர்க்கு ஒப்பாக மாட்டானென்க. .... .... .... .... (அச)

தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னாம மேத்த *
பொழுதெனக்கு மற்றதுவே போதும் *—கழிசினத்த
வல்லாளன் வானரக்கோன் வாலி மதனழித்த *
வில்லாளன் நெஞ்சத் துளன். (அரு)

| | |
|---|---|
| கழி சினத்த | மிக்ககோபத்தை யுடையவனும் |
| வல்லாளன் | மிக்க வலிமை யுடையவனும் |
| வானரர் கோன் | குரங்குகட்கு அரசனுமாகிய |
| வாலி | வாலியினுடைய |
| மதன் | மதத்தை [கொழுப்பை] |
| அழித்த | தொலைத்த |
| வில் ஆளன் | சார்ங்கவில்லை ஆள்பவனான இராமபிரான் |
| நெஞ்சத்து | எனது நெஞ்சிடத்து |
| உளன் | எழுந்தருளியிருக்கின்றான்; |
| (ஆகையாலே) | |

| | |
|---|---|
| எனக்கு | (அந்த இராமபிரானுடைய திருக்குணங்களில் அகப்பட்ட) எனக்கு |
| தொழில் | நித்யகருமம் |
| தொல்லை மால் தன் நாமம் ஏத்த | புராணனான அந்த ஸர்வேச்வரனுடைய திருநாமங்களை வாயாரப் புகழ்வதாம்; |
| எனக்கு | (உலகத்தாரில் வேறுபட்டவனான) எனக்கு |
| மற்றதுவே | கீழ்ச்சொன்ன ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனத்திலேயே |
| பொழுது போதும் | போதுபோகும். |

* * *—சூது சதுரங்கமாடியே போதைப் போக்கும் சில லௌகிகர்கள் 'ஆழ்வாரே! எங்களோடே ஒருகை ஆடவருவீரோ?' என்றழைக்க, அவர்கட்கு மறுமொழிகூறும் பாசுரமிது என்று விநோதமாகப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்வது காண்மின்;—"எதிரிகள் சதுரங்கம் பொரப் போருவீரோ என்றழைக்க இவர் சொல்லும்படி." என்று.

எம்பெருமானுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ணுவதே எனக்கு நித்யகர்மாநுஷ்டாநம்; என்போதெல்லாம் அதிலே போகின்றது; அதற்கே போது போராதிருக்க வேறொன்றுக்குப் போதுகிடைக்குமோ? வேறொன்றிலே நெஞ்சைச் செலுத்தவுமொட்டாதபடி எம்பெருமான் என்னெஞ்சினுள் உறைகின்றான் காண்மின் என்றாராயிற்று.

வானரர்+கோன், வானரக்கோன். மதன்—மதம், மகரனகரப் போலி. வெள்ளிமலை பறித்த பெருவீரனை இராவணனையும் வாலிலே கொண்டு திரிந்தவனான வாலிக்கு 'கழிசினத்த, வல்லா

ளன்' என்ற அடைமொழிகள் பொருந்தும். (வாலிமதனழித்த வரலாறு, கீழ் இருபத்தெட்டாம் பாட்டினுரையிற் காண்க.)

இராமபிரான் வாலியைக் கொன்றவிதனில் ஸாமாந்யர் சில ஆக்ஷேபங்கள் கூறுவதுண்டு; அவையும் அவற்றுக்கு ஸமாதானங் களும் வருமாறு:—'இராவணவதத்திற்கு உதவிதேடுகிற இராமன் இராவணனை எளிதில் வெல்லவல்ல வாலியைக் கொன்றுவிட்டு, பயங் கொள்ளியான ஸுக்ரீவனை உதவிசெய்து கொண்டது என்ன புத்தி சாலித்தனம்!' என்பர் சிலர்; கேண்மின்:-வாலிமுன்னமே இராவண னுடன் அக்நிஸாக்ஷிகமாக ஸ்நேஹங் கொண்டிருந்தமைபற்றி அவ னைத்தான் உதவிகொண்டால் இராவணன் முதலிய துஷ்டர்களைத் தொலைக்க வகையில்லாமையால் இராமன் ஸுக்ரீவனை நண்பனாகக் கொண்டு அவன் வேண்டுகோளின்படி வாலியைவதைத்திட்டனன். இனிச் செய்யவேண்டிய ராவணஸம்ஹாரமாகிற தேவகாரியத்திற்கு இவ்வாலிவதம் அங்கமெனக் கருதத்தக்கது; எவ்வகைப் பெருந் தீங்கு செய்திருந்தாலும் சரணமடைந்தால் அவர்களைப் பாதுகாப்ப தென்ற சிறந்ததருமத்தை மேற்கொண்டு நடப்பவனான இராம பிரான், அத்தருமத்தை முழுதும் விட்டவனும் ஸுக்ரீவன் சரண மடைந்தபின்னரும் அவனை மிக வருந்திக் கொல்லத்தொடங்கி அந் தத் தருமத்திற்கு எதிரானவனுமான வாலியைக் கொன்றது பொருந்தும். அன்றியும், பிறர்மனைவியைக் காதலித்துக் கவர்தலும், தம்பியிடம் பகைபாராட்டுதலும், வலியழிந்து முதுகுகாட்டி ஓடு கின்றவனைத் துரத்தித்துரத்திக் கொல்லத் தொடங்குதலும் முத லிய தீச்செயல்கள் வாலியினிடம் இருந்ததனாலும் பரமதார்மிக னான இராமன் வாலியை அழிக்கலானான். இராமபிரான்றான் ஏகபத்நீ விரதமுடையனாய், தம்பியரைத் தன்னுயிர்போலக் கொள்பவனாய், வலியிழந்த பகைவனை 'இன்றுபோய் நாளைவா' என்று அன்போடு சொல்லிவிடுத்தருளும் மஹாவீரனாவான்.

இஃதெல்லாமிருக்கட்டும்; மறைந்து நின்று அம்பு எய்தது கூடுமோ? எனின்; இது அரசர் கொடியவிலங்குகளைப் பதுங்கி நின்று அழிக்கும் வேட்டைமுறையா மென்பர். "யதா ஶூரம் ஶூர யாவந்த்ரமயாவமெந ஹ்ணோ ஜவந்ந நதா ஶத்ருவஷாஹிஷ

வ்ராஜ। தஜ்ஞாக்ஷேபே தவ ராவவம்ஸஜஸ்ய தியக்ஷாரெ வஹி விவக்ஷதயொவஹாரஃ:" என்று அதிமாநுஷஸ்தவத்தில் ஆழ்வானருளிச்செய்ததுங்காண்க. வேறுவகையான ஸமாதானங் களுமுள்ளன ;—முதலில் சரணமடைந்த ஸுக்ரீவனுக்கு அபய மளித்து வாலியைக் கொல்வதாக வாக்குதத்தஞ் செய்துவிட்ட பெருமாள் பின்னர் வாலியினெதிரில் நின்று போர்செய்தால் இப் பெருமானது திறத்தைக் கண்டு அஞ்சி வாலியும் இவனைச் சரண மடைந்திடுவனாயின் தஞ்சமடைந்தவனைக் கொலை செய்யக்கூடாமை பற்றி அவனைக் கொல்லாதுவிட நேர்ந்தால் முன்னையவாக்கு [ஸுக் ரீவனுக்கு அளித்தவாக்கு]த் தவறிவிடுமேயென்ற நோக்கம் முக்கிய காரணமாம். அன்றியும், எதிர்ந்தார் வலிமையிற் பாதி தன்னிடம் வந்து கூடும்படி வாலி சிவபிரானிடத்துப் பெற்றிருக்கின்ற வரம் பழுதுபடாமலிருக்குமாறு மறைந்து நின்று அம்பெய்தனன் என் றது மொன்று. அவரவர்கள் தேவதாந்தரங்களிடத்துப் பெற்ற வரங்கள் பழுதுபடாதபடியன்றோ எம்பெருமான் காரியஞ்செய்வது. இங்ஙனம் பல காரணங்களுள. இங்கு விரிப்பிற் பெருகும். ஸ்ரீராமா யணம் அதன் வியாக்கியானங்கள் வல்லார்வாய்க் கேட்டுணர்க. கடவுளரது நியாயம் நுட்பமானதும் அறிதற்கு அரியதுமாதலால் அது மனிதர்து நியாயத்தோடு ஒப்பு நோக்கி ஆராய்தற்கு உரியதன் றென்பது உணரத் தக்கது. நிற்க. .... .... (அ௫)

உளன்கண்டாய் நன்னெஞ்சே யுத்தம னென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய் *
தன்னுளேப்பான் தானு யுளன்காண் தமியேற்கு *
என்னுளேப்பார்க் கீச னிமை. (அ௬)

- நல் நெஞ்சே — எனக்குப் பாங்கான மனமே!,
- உத்தமன் — புருஷோத்தமனான எம்பெருமான்
- உளன் கண்டாய் — (நம்மை ரக்ஷிப்பதனாலே) ஸத்தை பெற்றிருப்பவன் காண்;
- என்றும் உளன் கண்டாய் — எக்காலத்திலும் (நம்மை ரக்ஷிப்பதிலே தீக்ஷை கொண்டு) இருக்கிறான் காண்;
- உள்ளுவார் உள்ளத்து — ஆஸ்திகர்களுடைய மனத்திலே
- உளன் கண்டாய் — நித்யவாஸம் பண்ணுமவன் காண்;

| | |
|---|---|
| தன்ஒப்பான் | (தனக்குப் பிறரொருவரும் ஒப்பில்லாமையாலே) தனக்குத்தானே ஒத்திருப்பவனான அந்த எம்பெருமான் |
| தமியேற்கு | ஒரு கைம்முதலு மற்றவனான எனக்கும் |
| என் ஒப்பார்க்கு | என்னைப்போலே உபாய சூந்யரா யிருப்பவர்கட்கும் |
| தான் ஈசன் ஆய் உளன் காண் | தானே நிர்வாஹகனா யிருக்கிறான் காண்; |
| இமை | இதனை அறி. |

* * *—ஆழ்வார் தம்முடைய ஆஸ்திகத்வத்தின் உறைப்பை நன்கு வெளியிடும் பாசுரம் இது.

**தன் ஒப்பான்**='ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே' என்ற சுருதியின்படி ஒத்தாரும் மிக்காருமில னாதலால் தனக்குத்தானே ஒப்பாமவன். இங்ஙனங் கூறுதலை **அநந்வயாலங்காரமென்பர். தமியேற்கு**=தமியன் என்றால் தனிப்பட்டவன் என்று பொருள். அகிஞ்சநனான எனக்கு என்கை. 'நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்' என்கிறபடியே ஒரு கைம்முதலுமில்லாதவர்க்கு எல்லாக் கைம்முதலும் எம்பெருமான்தானேயா யிருப்பனென்க. **என்னொப்பார்க்கு**—மற்றுள்ள ஆழ்வார்களையுங் கூட்டிக்கொள்ளுகிறபடி.

இமயப் பெருமலைபோ லிந்திரனார்க்கிட்ட *
சமய விருந்துண்டார் காப்பார் *—சமயங்கள்
கண்டா னவைகாப்பான் கார்க்கண்டன் நான்முகனோடு *
உண்டா னுலகோ டுயிர். (அஎ)

| | |
|---|---|
| இமயம் பெருமலைபோல் | பெரிய இமயமலை போன்றிருக்கும்படி |
| இந்திரனார்க்கு இட்ட | இந்திரனுக்காகச் சமைத்து வைத்த |
| சமயம் விருந்து | வழக்கமான ஆராதனையை |
| உண்டு | உட்கொண்டபோது (நேர்ந்த கல்மழையாலாகிய ஆபத்தில் நின்றும்) |
| ஆர் காப்பார் | காப்பாற்றினதுயார்? |
| சமயங்கள் | வைதிக மதங்களை |
| கண்டான் | பிரவர்த்திப்பித்தவன் |
| ஆர் | யார்? |
| அவை காப்பான் | அவற்றை (நிலை குலையாதபடி) ரக்ஷிப்பவன் |
| ஆர் | யார்? |

| | | | |
|---|---|---|---|
| கார்க்கண்டன் நான்முகனோடு காப்பான் ஆர் | சிவனையும் பிரமனையும் (பெரிய ஆபத்துக்களில் நின்றும்) ரக்ஷிப்பவன் யார்? | உலகோடு உயிர் உண்டான் ஆர் | உலகங்களையும் (உலகங்களிலுள்ள ஜீவராசிகளையும் (பிரளயத்தில்) உண்டு ரக்ஷித்தவன் யார்? |

[எல்லாம் எம்பெருமானே யன்றோ.]

* * *—ஸர்வரக்ஷகன் எம்பெருமானே யென்பதை மூதலிக்கிறார். பண்டு திருவாய்ப்பாடியில் கண்ணபிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களைக் கண்டு ஆயர்களனைவரும் 'இவனே நம் குலக்கொழுந்து, இவன் கட்டளைப்படியே நாம் நடக்கவேண்டும்' என்று நிச்சயித்திருந்தனர்; இங்ஙனமிருக்கையில் சரத்காலம் வந்தது; அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவதுபோல் வழக்கப்படி இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவற்றைச் சேகரிப்பதைக் கண்டு கிருஷ்ணன் 'ஓ பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்குப் பூஜை செய்வதன்றோ தகுதி; இக்கோவர்த்தனகிரியே பசுக்களுக்குப் புல்லுந் தண்ணீருங் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்னபயனுண்டு? ஒன்றுமில்லை: ஆகையால் நீங்கள் இப்பூசனையனைத்தையும் இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் இதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான்தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றைமுற்றும் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் மிக்ககோபத்தோடு புஷ்கலாவர்த்தம் முதலிய பல மேகங்களை ஏவி, கண்ணன் விரும்பிமேய்க்கிற கன்றுகட்கும் பசுக்கட்கும் இடையர்க்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணபிரான் கோவர்த்தனமலையை யெடுத்துக் குடையாகப் பிடித்து மழையைத் தடுத்து எல்லாவுயிர்களைங் காத்தருளினன் என்ற வரலாறு முன்னடிகட்கு அறியத்தக்கது.

இடையர் இந்திரனுக்கு இட்ட பூஜை "அட்டுக்குவி சோற்றுப் **பருப்பதமும்** தயிர்வாவியும் நெய்யளறும்" என்னும்படியாகப் பெரியமலைபோன்றிருந்ததனால் '**இமயப் பெருமலைபோல்**' என்றார்.

சமயவிருந்து—'ஸமயம்' என்னும் வடசொல்லுக்குள்ள பல பொருள்களில் 'ஸங்கேதம்' என்கிற பொருள் இங்கு விவக்ஷிதம்: வழக்கத்தைச் சொன்னபடி. இரண்டாமடியிலுள்ள 'ஆர்' என்னும் வினச்சுட்டு மேல் ஒவ்வொரு வினையிலும் அந்வயிக்கவுரியது. வைதிகமதங்களை ஏற்படுத்தினவன் யார்? பாஹ்யகுத்ருஷ்டி மதங்களாலே அவற்றுக்குக் குலைதல் வாராதபடி அவற்றைப் பரிபாலனம் செய்தருள்பவன் யார்? சிவனுக்கு நேர்ந்திருந்த பிரமஹத்தியாகிற ஆபத்தை நீக்கிக் காத்தவன் யார்? வேதங்களை அசுரர்க்குப் பறிகொடுத்துக் கண்கெட்டு நின்று தவித்த பிரமன்துயரைத் தீர்த்தது யார்? உலகங்களைப் பிரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைத்து நோக்கினவன் யார்?. எல்லாவகை ரக்ஷணங்களுஞ் செய்தவன் எம்பெருமானே யென்று தெளிவித்தபடி. ஆளவந்தார் இப்பாசுரத்தையே திருவுள்ளம்பற்றி ஸ்தோத்ரரத்நத்தில் "கஃ ஶ்ரீஃ ஶ்ரியஃ, வேதாபஹார, கஸ்யோதரே" என்ற மூன்று ச்லோகங்களருளிச் செய்தன ரென்னலாம்.

'கார்க்கண்டன் நான்முகனோடு உலகோடு உயிர் உண்டான் ஆர்' என்னுமளவும் ஒருவாக்கியமாக யோஜித்து உரைக்கவுமாம். "அன்றெல்லாருமறியாரோ எம்பெருமானுண்டுமிழ்ந்த எச்சில் தேவர்" (பெரிய திருமொழி 11-6-2.) என்கை. .... (அஎ)

உயிர்கொண் டுடலொழிய வோடும்போ தோடி *
அயர்வென்ற தீர்ப்பான் பேர்பாடி *—செயல்தீரச்
சிந்தித்து வாழ்வாரே வாழ்வார் * சிறுசமயப்
பந்தனையார் வாழ்வேல் பழுது. (அஅ)

| | | | |
|---|---|---|---|
| உடல் ஒழிய | சரீரத்தைப் போட்டுவிட்டு | அயர்வு என்ற | கஷ்டமென்று சொல்லப் படுகிற எல்லாவற்றையும் |
| உயிர் கொண்டு | ஆத்மாவைப் பிடித்துக்கொண்டு | தீர்ப்பான் | தீர்க்குமவனான எம்பெருமானுடைய |
| ஓடும்போது | (யமபடர்கள்) ஓடும்போது | பேர் | திருநாமங்களை |
| ஓடி | (எம்பெருமானாகிய தானே) ஓடிச் சென்று | பாடி | வாய்விட்டுப் பாடி |

| | | | |
|---|---|---|---|
| செயல் தீர | பேற்றுக்காக நாம் செய்ய வேண்டிய செயல் [ப்ரவ்ருத்தி] ஒன்றுமில்லையென்று | சிறு சமயம் பந்தனையார் | அற்பங்களாய் பல நியமங்களோடு கூடினவையாய் ஸம்ஸாரபந்தத்திற்கே காரணமாகவுள்ளவையான உபாயங்களைப் பற்றினவர்களுடைய |
| சிந்தித்து | ஸ்வரூபத்தை யுணர்ந்து | வாழ்வு ஏல் | வாழ்ச்சியோ வென்றால் |
| வாழ்வாரே | வாழநினைப்பவர்களே | பழுது | உபயோகமற்றது. |
| வாழ்வார் | வாழ்ச்சி பெறுவர்; | | |

* * *—ப்ரவ்ருத்திதர்மநிஷ்டரென்றும் நிவ்ருத்திதர்ம நிஷ்டரென்றும் இருவகை யதிகாரிகளுண்டு; ஆயாஸப்பட்டுச் செய்யும் ஸ்வப்ரவ்ருத்திகளாலன்றிப் பலன்பெற முடியாதென்றெண்ணி விரிவாக உபாயங்களை அநுஷ்டிக்குமவர்கள் ப்ரவ்ருத்தி தர்மநிஷ்டரெனப் படுவர்; (ஸ்வரூபோசிதங்களான) திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை முதலான ப்ரவ்ருத்திதர்மங்களையும் உபாயபுத்தியின்றியே ஸ்வயம் புருஷார்த்தபுத்தியுடன் அநுஷ்டித்து, எம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபையன்றிப் பேற்றுக்கு உபாயமாவது வேறொன்றுமில்லை; நம்முடைய உபாயப்ரவ்ருத்திகளெல்லாம் எம்பெருமான் தானே செய்யும் ரக்ஷணத்துக்கு விலக்கடியாகும் என்று துணிந்து 1. "காம்பறத் தலை சிரைத்து உன்கடைத்தலையிருந்து வாழுஞ்சோம்பர்" என்கிறபடியே அகிஞ்சநராயிருக்குமவர்கள் நிவ்ருத்தி தர்மநிஷ்டரெனப் படுவர். [ஐஹவதவூத்தி விரொயிஷூவூவூத்திநிவூத்திநிஷ்ர் என்றபடி.] இவ்விருவகை யதிகாரிகளுள், செயல் தீரச்சிந்தித்து வாழ்பவரான நிவ்ருத்தி தர்மநிஷ்டர்களே உண்மையாக வாழ்வரென்றும், அநர்த்தகரங்களான காற்கட்டுகளைப் பூண்டுகொள்ளும் ப்ரவ்ருத்தி தர்மநிஷ்டர்கள் இப்படி வாழ்வது அரிது என்றும் இப்பாட்டா லருளிச்செய்யப்படுகிறது.

[உயிர்கொண்டு இத்யாதி.] யமபடர்கள் வந்து ஆத்மாக்களைச் சரீரங்களில் நின்றும் இழுத்துக்கொண்டு காலபாசத்தாற்கட்டி நலியக் கொண்டுபோனால் தானே நேரில் ஓடிச் சென்று அயர்வுகளைத்

1. திருமாலை.

தீர்ப்பவனான எம்பெருமானுடைய திருநாமங்களை மகிழ்ந்துபாடி, தம்முடைய பாரதந்திரிய ஸ்வரூபத்தை உற்றுநோக்கி உபாய ப்ரவ்ருத்திகளை யொழித்திருப்பவர்களுடைய வாழ்வே வாழ்வு; மற்றையோருடைய வாழ்வு தாழ்வுதான் என்றாராயிற்று.

அயர்வென்ற = இரண்டனுருபுதொக்க வினையாலணையும் பெயர். "தீர்ப்பான் பெயர்பாடி" என்றபுதியபாடத்தில் வெண்டளை பிறழும்; 'பேர்பாடி' என்ற பிராசீநபாடமே கொள்க.

பந்தனையார் = 'வஙூநா' என்றவடசொல் பந்தனை யெனத் திரிந்தது; அதனையுடையார் பந்தனையார். காற்கட்டுகளை யுடையார் என்றவாறு. சிறு, சமயம் என்ற விசேஷணங்கள் பந்தனையில் அந்வயிக்கும். .... .... .... .... .... (அஅ)

பழுதாகா தொன்றறிந்தேன் பாற்கடலான்பாதம் *
வழுவா வகைநினைந்து வைகல்—தொழுவாரை *
கண்டிறைஞ்சி வாழ்வார் கலந்த வினைகெடுத்து *
விண்டிறந்து வீற்றிருப்பார் மிக்கு. (அகூ)

| | | | |
|---|---|---|---|
| பழுது ஆகாது ஒன்று | பழுதுபடாத [சிறந்த] ஒருபாயத்தை | கண்டு இறைஞ்சி | கண்டு வணங்கி |
| அறிந்தேன் | தெரிந்து கொண்டேன்; | வாழ்வார் | வாழ்பவர்கள் [பாகவத பக்தர்கள்], |
| (அது என்னவென்றால், கேண்மின்:) | | கலந்த வினை கெடுத்து | ஆத்மாவோடுசேர்ந்த தீவினைகளைத் தொலைத்து |
| பால் கடலான் பாதம் | க்ஷீராப்தி நாதனுடைய திருவடிகளை | விண் திறந்து | பரமபதவாசலைத் திறந்து |
| வாழுவா வகை நினைந்து | தப்பாதபடி அநுஸந்தித்து | மிக்கு | சிறப்புடனே |
| வைகல் தொழுவாரை | எப்போதும் வணங்குமவர்களை | வீற்றிருப்பார் | எழுந்தருளியிருக்கப் பெறுவர். |

* * *—எம்பெருமானை நேரே ஆச்ரயிப்பதிற்காட்டிலும் பாகவதர்களைப் பணிதல் பாங்கு என்கிற பரமரஹஸ்யார்த்தத்தை வெளியிடும்பாசுரம்இது. இவ்வர்த்தத்தைக் கீழ் "மாறுபதானவனை"

என்ற பதினெட்டாம்பாட்டிலும் காட்டியருளினர். அடுத்த மேற் பாட்டிலுங்காட்டுவர். "ஸித்திர்ப⁴வதி வா நேதி ஸம்ஶயோऽச்யுதஸேவிநாம்। நஸம்ஶயோऽஸ்தி தத்³ப⁴க்தபரிசர்யாரதாத்மநாம்॥=ஸித்திர்ப் பவதி வா நேதி ஸம்சயோச்யுதஸேவிநாம், ந ஸம்சயோஸ்தி தத்பக்தபரிசர்யாரதாத்மநாம்" [எம்பெருமானைப் பற்றினவர்களுக்குப் பேற்றில் ஸந்தேஹமுண்டு; பாகவதர்களைப் பற்றினவர்கள் ஸந்தேஹப்படாமல் மார்வில் கைவைத்து உறங்கலாம்] என்கிறபடியே, கருமங்களுக்கிணங்க ஸம்ஸாரியாக்கவும் அருளுக்கிணங்க ஸம்ஸாரநிவ்ருத்தியைப் பண்ணித் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவும் வல்ல ஸ்வதந்த்ரனை ஈச்வரனைப் பற்றுகையானது ஸம்ஸாரபந்தத்திற்கும் மோக்ஷப்ராப்திக்கும் பொதுவாயிருக்கும்; அங்ஙனன்றியே பாகவதரைப் பற்றுகை ஸம்ஸாரபந்தத்திற்கு ஒருகாலும் ஹேதுவாகாதே மோக்ஷப்ராப்திக்கே உறுப்பாயிருக்குமென்று தேர்ந்தவராகையாலே பாட்டுத் தொடங்கும் போதே 'பழுதாகா தோன்றறிந்தேன்' என்று கம்பீரமாக அருளிச் செய்கிறார்.

ஸ்ரீவசநபூஷணத்தின் முடிவில்—"பழுதாகா தொன்றறிந்தே னென்கிறபாட்டைப் பூர்வோபாயத்துக்கு ப்ரமாணமாக அநுஸந்திப்பது. நல்லவென்தோழி, மாறாயதானவனை என்கிற பாட்டுக்களை........இதுக்கு ப்ரமாணமாக அநுஸந்திப்பது" என்றருளிச் செய்துள்ள இரண்டு ஸூத்ரங்களை நோக்குமிடத்து, கீழ்ப் பதினெட்டாம் பாசுரத்திற்கும் இப்பாசுரத்திற்கும் விஷயபேதம் விளங்கும். அந்த நுட்பமான விஷயங்களை ரஹஸ்ய ப்ரஸ்தாநங்களிலே ஆராய்ந்து கொள்வது நன்று.

பாற்கடலான் பாதத்தைக் கண்டிறைஞ்சுகை யன்றியே பாற் கடலான் பாதந்தொழுவாரைக் கண்டிறைஞ்சுமவர் நல்வாழ்ச்சி பெறுவர் என்றதாயிற்று. .... .... .... (அக)

வீற்றிருந்து விண்ணாள வேண்டுவார் * வேங்கடத்தான்
பால்திருந்த வைத்தாரே பன்மலர்கள் *—மேல்திருந்த
வாழ்வார் வருமதிபார்த் தன்பினராய் * மற்றவர்க்கே
தாழ்வா யிருப்பார் தமர்.

(கூ0)

| | | | |
|---|---|---|---|
| விண் | பரமபதத்தில் | வரும் மதி பார்த்து | (எம்பெருமானுடைய திருவுள்ளத்தில்) ஓடுகின்ற கருத்தை யறிந்து |
| வீற்றிருந்து | பெருமை பொலிய இருந்து | அன்பினர் ஆய் | பக்தியை யுடையவர்களாய் |
| ஆள வேண்டுவார் | ஆட்சிசெய்ய விரும்பி அப்படியே பேறு பெற்றவர்கள் | மற்றவற்கே | அந்த எம்பெருமானுக்கே |
| வேங்கடத்தான் பால் | திருவேங்கட முடையான் பக்கலில் | தாழ்வு ஆய் இருப்பார் | அடிமைப்பட்டிருப்பவர்களுக்கு |
| பல் மலர்கள் | பலவகைப்பட்ட மலர்களை | தமர் | அடிமைப் பட்டவர்கள் |
| திருந்த | நன்றாக | மேல் திருந்த வாழ்வார் | முன்னடிகளிற் சொல்லப்பட்டவர்களிற் காட்டிலும் விலக்ஷணராக வாழ்பவராம். |
| வைத்தாரே | ஸமர்ப்பித்தவர்களே யாவர்; | | |

[பகவானை ஆராதித்தவர்களே விண் ஆள்வர் என்கை:]

* * *—பாகவதராலே அங்கீகரிக்கப் பெறுமவர்கள் எல்லாரினும் மேற்பட்டவர்களென்கிறார். எம்பெருமான் திருவடிகளில் மலர்களைத் தூவி அடிமை செய்தவர்களே விண்ணுளபவர்; ஆயினும், எம்பெருமானுக்கு அடிமையாயிருக்கின்ற பாகவதர்களால் 'இவர்கள் நம்முடையவர்கள்' என்று அங்கீகரிக்கப்படுமவர்கள் முன்னடிகளிற் சொல்லப்பட்ட அதிகாரிகளிற் காட்டிலும் சிறந்து வாழ்வர் என்றாராயிற்று.

இரண்டாமடியின் முதலினும் முடிவினும் 'திருந்த' என்னாதே 'திருந்து' என்றே ஓதிவருமவர்களின் பாடம் மறுக்கத்தக்கது. வரும் மதிபார்த்து அன்பினராய்=எம்பெருமானுடைய திருவுள்ளக் கருத்தைப் பின் சென்று அன்பு கொண்டிருப்பவர்களென்கை. (௯௦)

தமராவார் யாவர்க்கும் தாமரை மேலாற்கும் *
அமரர்க்கும் ஆடரவார்த்தாற்கும்—*அமரர்கள்
தாள்தாமரை மலர்களிட்டிறைஞ்சி * மால்வண்ணன்
தாள் தாமரை யடைவோ மென்று. (௯௧)

| | | | |
|---|---|---|---|
| மால் வண்ணன் | கரியமேனியனான எம்பெருமானுடைய | தாமரை மேலாற்கும் | திருநாபிக் கமலத்திற் பிறந்த பிரமனுக்கும் |
| தாள் தாமரை | திருவடித் தாமரைகளில் | ஆடு அரவு ஆர்த்தாற்கும் | ஆடுகின்ற ஸர்ப்பங்களை (ஆபரணமாக உடம்பிலே) கட்டிக் கொண்டிருக்கும் சிவனுக்கும் |
| மலர்கள் இட்டு | புஷ்பங்களை ஸமர்ப்பித்து | | |
| இறைஞ்சி | வணங்கி | | |
| தாள் தாமரை அடைவோம் என்று | அத்திருவடித் தாமரைகளை யடைவோமென்று | அமரர்க்கும் | நித்யஸூரிகளுக்கும் |
| | | யாவர்க்கும் | மற்றுமெல்லார்க்கும் |
| தமர் ஆவார் | பக்தராயிருக்குமவர்கள் | அமரர்கள் | மேற்பட்டவராவர். |

* * *—எம்பெருமான் திருவடிகளே உபாயோபேயங்களென்று உறுதிகொண்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் உபயவிபூதியிலுள்ளார்க்கும் நிர்வாஹகராம் படியான பெருமையை யுடையவர்களென்கிறார்.

'ஆடரவத்தாற்கும்' என்றும் ஓதுவர். சிவபெருமான் அரவம் பூண்ட வரலாறு:—ஒருகாலத்தில் சிவபிரான் தன்னைமதியாத தாருகவனத்து முனிவர்களுடைய கருவத்தைப் பங்கஞ்செய்யவும் அவர்களின் மனைவிமார்களது கற்புநிலையைப் பரிசோதிக்கவுங் கருதித் தான் ஒரு காமுகபுருஷவடிவங் கொண்டு அவரில்லந்தோறுஞ் சென்று பிக்ஷாடனஞ் செய்து தன்னை நோக்கிக் காதல் கொண்ட அம்முநிபத்நிகளின் கற்புநிலையைக் கெடச் செய்ய, அதுகண்டு பொறுமற் கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாக மொன்று செய்து அவ்வோமத் தீயினின்று எழுந்த நாகங்கள் பூதங்கள் மான் புலி முயலகன் வெண்டலை முதலியவற்றைச் சிவனைக் கொன்று வரும்படியேவ, சிவபெருமான் தன்மேற் பொங்கிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும் பூதங்களைத் தனது கணங்களாகவுங் கொண்டு, மானைக் கையிலேந்திப் புலியைத்தோலையுரித்து உடுத்து முயலகனை முதுகிற்காலால் ஊன்றி வெண்டலையைக் கையாற்பற்றிச் சிரமேலணிந்து இங்ஙனமே அவற்றையெல்லாம் பயனிலவாகச் செய்துவிட்டன னென்பதாம். .... .... .... .... (கக)

என்று மறந்தறியேன் என்னெஞ்சத்தே வைத்து *
நின்று மிருந்தும் நெடுமாலை *—என்றும்
திருவிருந்த மார்பன் சீரிதரனுக் காளாய் *
கருவிருந்த நாள்முதலாக் காப்பு. (கூஉ)

| | | | |
|---|---|---|---|
| கரு இருந்த நாள் முதலா | (நான்) கர்ப்பத்தி லிருந்த நாள் தொடங்கி | நெடு மாலை | (அந்த) ஸர்வேச்வரனை |
| காப்பு | (எம்பெருமானாலே) ரக்ஷைபெற்றவ னாகையாலே | என் நெஞ்சத்து | என்னுடைய ஹ்ருதயத்திலே |
| திரு என்றும் இருந்த மார்வன் சிரீதரனுக்கு | பிராட்டி நித்ய வாஸம் பண்ணப் பெற்றதிருமார் வை யுடைய அந் தத்திருமாலுக்கு | வைத்து | ஸ்தாபித்து |
| ஆள் ஆய் | ஆட்பட்டவனாய் | நின்றும் இருந்தும் என்றும் | நிற்றல் இருத்தல் முதலிய எல்லா நிலைமைகளிலும் |
| | | மறந் தறியேன் | மறவாமல் (அவ னையே) சிந்திப் பவனா யிருக் கின்றேன். |

* * *—நான் கர்ப்பவாஸம் பண்ணும்போதே தொடங்கி எம்பெருமான் என்னை ரக்ஷித்துக் கொண்டு வருகையாலே ஒருகாலும் நான் அவனை மறந்தறியேனென்கிறார்.

இவ்வாழ்வார் கீழ்க்கழிந்த காலங்களில் பல சமயங்களிலும் புகுந்து பல தெய்வங்களையும் வழிப்பட்டவரா யிருந்துவைத்து, திருமாலை ஒருநாளும் மறந்தறியேனென்று சொல்வது பொருந்துமோ? என்று சங்கிப்பர் சிலர்; உண்மை கேண்மின்; எம்பெருமானுக்கு ஆட்பட்டிருக்குந் தன்மையானது ஸகல ஆத்மாக்களுக்கும் இயற்கையாகவே யுள்ளது; ஊழ்வினையின் பயனாக அவ்வடிமையை இடையில் இழந்திருந்து ஒரு காலவிசேஷத்தில் ஏற்றுக் கொண்டாலும் 1. "அல்வழக் கொன்றுமில்லா அணிகோட்டியர்கோ னபிமானதுங்கன் செல்வனைப்போலத் திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்" என்றாற்போலே அடிமை அநாதியாகவே உள்ளதாக அநுஸந்திக்கக் குறையில்லை. மாணிக்கத்தின் ஒளி அழுக்கினால் மழுங்கியிருந்து ஒரு நாளளவில் அழுக்கு நீங்கி விளங்கினாலும் அவ்வொளி இயற்கையென்னத் தட்டில்லையே.

1. திருப்பல்லாண்டு—11.

இடையில் அடிமையை இழந்திருந்ததற்கு வயிறெரிந்து "பழுதே பல பகலும் போயின வென்றஞ்சியழுதேன்" என்றும் "பாவியேனுணராதெத்தனைபகலும் பழுதுபோ யொழிந்தன நாள்கள்" என்றும் பேசுவர்கள். இவ்வாழ்வார்தாமே திருச்சந்தவிருத்தத்தில் "அன்றுநான் பிறந்திலேன்" என்றார்.

**நின்றுமிருந்தும்** என்றது எல்லாநிலைகளிலு மென்றபடி. "நிற்கும்போது மிருக்கும்போதும் நடக்கும் போதும் படுக்கும் போதும் நாராயணா! என்றால் உங்கள்தலையில் இடிவிழுமோ?" என்றானும் ப்ரஹ்லாதன். .... .... .... (கூஉ)

**காப்பு மறந்தறியேன் கண்ணனே யென்றிருப்பன் ***
**ஆப்பங் கொழியவும் பல்லுயிர்க்கும் *—ஆக்கை**
**கொடுத்தளித்த கோனே குணப்பரனே * உன்னை**
**விடத்துணியார் மெய்தெளிந்தார் தாம்.**

(கூங)

| | | | |
|---|---|---|---|
| அங்கு | அந்தப்பிரளய காலத்தில் | மறந் தறியேன் | ஒருநாளும் மறக்கமாட்டேன்; |
| பல் உயிர்க்கும் | எல்லா ஆத்மாக்களுக்கும் | கண்ணனே என்று இருப்பன் | எல்லாம் கண்ணனே என்று உறுதி கொண்டிருப் பேன்; |
| ஆப்பு ஒழியவும் | சரீரங்கள் அழிந்து போயிருந்தாலும் (மறுபடியும்) | குணம் | திருக்குணங்களினால் |
| ஆக்கை கொடுத்து | சரீரங்களைக் கொடுத்து | பரனே | சிறந்த பெருமானே! |
| அளித்த | அருள்செய்த | மெய் தெளிந்தார் தாம் | உள்ளபடி (ஸ்வரூபத்தைத்) தெளிவாக அறிந்தவர்கள் |
| கோனே | ஸ்வாமிந்!, | உன்னை விட துணியார் | உன்னை விட மாட்டார்கள். |
| காப்பு | (நீ செய்தருளும்) ரக்ஷையை | | |

* * *—**காப்புமறந்தறியேன்** என்றதற்கு இருவகையாகப் பொருள் கொள்ள இடமுண்டு. எம்பெருமான் என்னைக் காத்தருளினதை மறக்கமாட்டேன் என்றும், நான் எம்பெருமானுக்குக் காப்பிடுவதை [மங்களாசாஸநம் பண்ணுவதை] மறக்கமாட்டேன் என்றும்.

**ஆப்பங்கொழியவும் பல்லுயிர்க்குமாக்கை கொடுத்தளித்த**

**கோனே**=பிரளயதசையில் இறகொடிந்த பறவைபோலே கரணகளேபரங்களையிழந்து தடுமாறுகின்ற ஆத்மாக்களுக்கு மறுபடியும் கரணகளேபரங்களைக் கொடுத்தமை சொல்லுகிறது. "ஜடீபவிலய ஷிதாந் ப்ராணிந: ஸம்ஹாரத: கரணகளேபரைர் கடயிதும் தயமாநமநா:" என்ற ஸ்ரீரங்கராஜஸ்தவமுங் காண்க.

இவ்வாழ்வார் வாழ்ந்தகாலத்தில் **குணபரன்** என்னுமோரரசன் இருந்ததாகவும், எம்பெருமானுக்கே ஏற்றிருக்கத்தக்கதான அந்த நாமத்தை அவ்வரசன் தரித்திருப்பது பொருந்தாதென்று அதில் வெறுப்புக்கொண்டு, 'அஃது அனந்தகல்யாணகுண பரிபூர்ணனை எம்பெருமானுக்கே உரியதாம்' என்ற திருவுள்ளத்தை வெளியிட வேண்டி இப்பாசுரத்தில் '**கோனே குணபரனே**' என்று எம்பெருமானை இவர் அழைத்திருப்பதாகவும் இக்காலத்துச் சில ஆராய்ச்சிக்காரர் கூறுகின்றனர். இக்கூற்றின் பொருத்தமின்மையைத் தனிப் புத்தகத்தில் விரித்துரைப்போம். நிற்க.

**மெய்தெளிந்தார்தாம் உன்னை விடத்துணியார்**=உன்னோடுண்டான உறவையும் உனது அரிய பெரிய திருக்குணங்களையும் உள்ளபடி உணருமவர்கள் உன்னை விடமாட்டார்களென்றவிதனால் தாம் எம்பெருமானை விடமாட்டாமையைத் தெரிவித்தாராவர். .... (கூங.)

மெய்தெளிந்தா ரென்செய்யார் வேறானார் நீறாக *
கைதெளிந்து காட்டிக் களப்படுத்து *—பைதெளிந்த
பாம்பினணையா யருளா யடியேற்கு *
வேம்புங் கறியாகுமேன்று. (கூச)

| | | | |
|---|---|---|---|
| வேறு ஆனார் | வேறுபட்டவர்களான [பகைவர்களான] துரியோதநாதிகள் | கை காட்டி | (பாணடவர்களுக்கு) வேண்டிய உதவிகளைச் செய்து |
| நீறு ஆக | சாம்பலாய் ஒழிந்து போம்படியாக | களம் படுத்து | (அந்த எதிரிகளைப்) போர்க்களத்தில் கொன்றொழித்து |
| தெளிந்து | (ஆச்ரித விரோதிகளைக் கொல்லுதல் தருமமே என்று) தேறி | (இவ்வகையாலே மண்ணின்பாரம் நீக்கி) | |

| | | | |
|---|---|---|---|
| தெளிந்த பை பாம்பு இன் அணையாய் | விளங்குகின்ற படங்களை யுடைய ஆதிசேஷனாகிற இனிமையான படுக்கையைச் சென்று சேர்ந்த பிரானே! | வேம்பும் கறி ஆகும் | வேப்பிலையும் கறியாகச் சமைத்துக் கொள்ளக் கூடியதே; |
| அடியேற்கு | அடியேனுக்கு | மெய் தெளிந்தார் | உள்ளதை உள்ளபடி யறியுமவர்கள் |
| அருளாய் | அருள்புரிய வேணும்; | என் செய்யார் | எதுதான் செய்ய முடியாதவர்கள் [எது நினைத்தாலும் செய்யக் கூடியவர்களே]. |
| என்று | வேணுமென்று விரும்பினால் | | |

* * *—அடியேன் சீலமில்லாச்சிறியேனாயினும் அடியேன் பக்கல் அருள்செய்யவேணும்; குற்றமேவடிவாகவுள்ளவர்களை இகழ்ந்தொழிய வேண்டுமேயன்றிக் கைக்கொள்வது தகாது என்று திருவுள்ளம்பற்றலாகாது; வேப்பிலை கைக்குமென்றாலும் இதைக் கறியாகச் சமைத்து உட்கொள்ள வேணுமென்னும் விருப்புடையார்க்கு அது கறியாகின்றதன்றோ; அப்படியே குற்றவாளரைக் கைக்கொள்வதே சீரியது என்று தெளிந்தவர்கள் என்போல்வாரை ஏன் அங்கீகரிக்கமாட்டார்கள்? அங்கீகரித்துத்தீருவர்கள். ஸ்வாமிந்! அடியேனுடைய குற்றங்களை நற்றமாகவே கொண்டோ அல்லது அவற்றில் திருக்கண் செலுத்தாமலோ அடியேனை விஷயீகரித்தருளவேணும் என்றாராயிற்று.

வேறானார்=அடியவர்களான பாண்டவர்களோடு வேறுபட்ட துரியோதனாதியரைச் சொல்லுகிறது. ஆச்ரிதவிரோதிகளென்ற காரணத்தினால் எம்பெருமான்றனக்கே விரோதிகளென்க. (கூச)

**என்றேனடிமை யிழிந்தேன் பிறப்பிடும்பை ***
**ஆன்றே னமரர்க் கமராமை *—ஆன்றேன்**
**கடனாடும் மண்ணாடுங் கைவிட்டு * மேலை**
**யிடநாடு காண வினி.**

(கூரு)

| | |
|---|---|
| அடிமை | அடிமையை |
| என்றேன் | ஏற்றுக் கொண்டேன் ; |
| பிறப்பு இடும்பை | ஸம்ஸாரதுக்கங் களில் நின்றும் |
| இழிந்தேன் | நீங்கினேன் ; |
| அமரர்க்கு | பிரமன் முதலிய தேவர்களுக்கும் |
| அமராமை | என் அருகு நாட வொண்ணுதபடி |
| ஆன்றேன் | (ஞானம் பக்தி முதலிய வற்ருல்) நிரம்பினேன் ; |
| கடன் நாடும் | ஸ்வர்க்கம் முதலிய லோகங்களையும் |
| மண் நாடும் | இப்பூலோகத்தையும் |
| கை விட்டு | உபேக்ஷித்து |
| மேலை | எல்லாவற்றுக்கும் மேற்பட்டுள்ள தாய் |
| இடம் | (அடியார்கள் குழாங்களுக்குத் தகுதியாக) இட முடைத்தான |
| நாடு | திருநாட்டை |
| காண | கண்டு அநுபவிக் கலாம்படி |
| இனி | இப்போது |
| ஆன்றேன் | (பரமபக்தி) நிரம்பப் பெற்றேன். |

* * *—இப்பாட்டும் மேற்பாட்டும் சாத்துப்பாசுரங்கள். **என்றேனடிமை**=அடிமையென்ருல் மருந்துபோலே முகம்சுளிக் கும்படியிராதே "**அஹம் ஸர்வம் கரிஷ்யாமி**" என்ற இளையபெரு மாளைப்போலே உத்ஸாஹங் கொண்டு பாரிப்பவனுயினேன் என்கை. இப்படியாகவே, அடிமைக்கு விரோதியாயிருந்த தாபத்ரயத்தில் நின்றும் விட்டுநீங்கப்பெற்றேனென்கிருர் **இழிந்தேன்பிறப்பிடும்பை** என்பதனுல். "மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கையதுவே" என்ருற்போலே பரமபதம் ஸித்தம் என்கிற உறுதியினுல் இங்ஙனே யருளிச்செய்கிருர். அன்றியே, "வைகுந்தமாகும் தம் மூரெல் லாம்" என்ருற்போலே தாமிருக்குமிடத்தையே பரமபதமாக அத்ய வஸித்து அருளிச்செய்கிருராகவுமாம்.

**அமரர்க்கு அமராமை ஆன்றேன்**=பிரமன் முதலிய தேவர் களும் என்னைக் கண்டால் கூசி அகலவேண்டும்படி பெரும்பதம் பெற்றேனென்கை.

[**கடனுடேமித்தியாதி.**] கடன்பட்டதானது எப்படி அவசியம் தீர்த்தேயாகவேண்டுமோ அப்படி பண்ணின புண்ணியங்களுக்கு அவசியம் பலன் அநுபவித்தே தீரவேண்டுமிடமான ஸ்வர்க்க

லோகம் 'கடன்நாடு' எனப்படுகிறது. புண்யபலன்களை யநுபவிக்குமிடமான சுவர்க்கத்தையும் புண்ணியம் திரட்டுமிடமான பூலோகத்தையும் வெறுத்து அனைத்துக்கும் மேற்பட்ட இடமாகிய திருநாட்டைச் சேர்வதற்குப் பாங்காகப் பரமபக்தி நிரம்பப்பெற்றேனென்றாராயிற்று. .... .... .... (கூ௫)

இனியறிந்தே னீசற்கும் நான்முகற்குந்தெய்வம் *
இனியறிந்தே னெம்பெருமா னுன்னை *—இனியறிந்தேன்
காரணன்நீ கற்றவைநீ கற்பவைநீ * நற்கிரிசை
நாரணன்நீ நன்கறிந்தேன் நான். (கூசு)

| | | | |
|---|---|---|---|
| எம்பெருமான் | எம்பெருமானே!, | கற்பவை நீ | இனிமேலறியப் படும் பொருள்களும் நீ; (என்கிற இதனையும்) |
| உன்னை | உன்னை | இனி அறிந்தேன்—; | |
| ஈசற்கும் | ருத்ரனுக்கும் | நல் கிரிசை | நிர்ஹேதுகாக்ஷணமாகிற நல்ல வ்யாபாரத்தையுடையனான |
| நான்முகற்கும் | பிரமனுக்கும் | நாரணன் நீ | நாராயணன் நீ; |
| தெய்வம் | தெய்வமாக | நான் நன்கு அறிந்தேன் | நான் நன்றாகத் தெரிந்து கொண்டேன். |
| இனி அறிந்தேன் இனி அறிந்தேன் | இப்போது திடமாகத் தெரிந்து கொண்டேன்; | | |
| காரணன் நீ | ஸகலஜகத்துக்கும் காரணபூதன் நீ; | | |
| கற்றவை நீ | இதற்கு முன்பு அறியப்பட்ட பொருள்களெல்லாம் நீ; | | |

* * *—மஹோபநிஷத்தில் ஓதினகட்டளையிலே, பிரமன் சிவன் முதலான ஸகலப்ரபஞ்சங்கட்கும் காரணனை நாராயணனே பரதெய்வமென்று இப்பிரபந்தத்தின் முதற்பாட்டில் பிரதிஜ்ஞை பண்ணி, ச்ருதிஸ்ம்ருதி இதிஹாஸம் முதலியவற்றாலும் தக்க நியாயங்களாலும் ச்ரிய:பதித்வம் முதலிய சின்னங்களாலும் அதை நெடுக உபபாதித்துக் கொண்டுவந்து, அடியில்பண்ணின பிரதிஜ்ஞைக்குத் தகுதியாக ஸ்ரீமந்நாராயண பரத்வத்தை நாட்டித்தலைக்

கட்டுகிறார். ஆகவே, தேவதாந்தரங்களினிடத்து உண்டாகக்கூடிய பரத்வப்ரமத்தைத் தவிர்த்து ஸ்ரீமந்நாராயண னிடத்திலேயே பரத்வத்தை ஸ்தாபிப்பதே இப்பிரபந்தத்தின் முழுநோக்கு என்று அறியப்பட்டதாகும். .... .... .... (கூசா)

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த
திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்
நான்முகன் திருவந்தாதி உரை
முற்றுப்பெற்றது.



